# தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்

## தொகுதி மூன்று

கப்பேரர் முதல் குறவர் வரை

**Castes and Tribes of South India Vol. - III**

**(Kobbēra to Korava)**




ஆங்கில மூலம்:

எட்கர் தர்ஸ்டன்

தமிழாக்கம்:

முனைவர் க. இரத்னம்



தமிழ்ப் பல்கலைக் கழகம்

தஞ்சாவூர்

ISBN: 81-7090-101-4

தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு: 72 – 3

திருவள்ளுவர் ஆண்டு 2018 மார்கழி — திசம்பர் 1987

நூல் : தென்னிந்தியக்
குலங்களும் குடிகளும்
தொகுதி - III

ஆசிரியர் : ஆங்கில மூலம்: எட்கர் தர்ஸ்டன்
தமிழாக்கம்: க. இரத்னம்

பதிப்பு : முதற்பதிப்பு

விலை : உரூ. 105/-

அச்சு : அச்சுப் பதிவம்:
சிவகாமி அச்சகம்,
அண்ணாமலைநகர்.
அச்சு:
தமிழ்ப் பல்கலைக் கழக
மறுதோன்றி அச்சகம்,
தஞ்சாவூர்.

15-5

# தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்

## தொகுதி - மூன்று

**கப்பேரர் - Kabbera**

கப்பேரர் கன்னடம் பேசும் மீன் பிடிப்பவர்களும் பயிர்த் தொழிலாளரும் ஆவர். இவர்களைப் பற்றிப் பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பில் திரு டபிள்யூ. பிரான்சிஸ் எழுதியுள்ளதாவது:- "கப்பேரர் கௌரி மக்கள் (பார்வதி), கங்கை மக்களு என இரு பிரிவினராக உள்ளனர். இவ்விரு பிரிவினரும் தங்களுக்குள் மண உறவு கொள்வதோ ஒன்றாக உண்பதோ இல்லை. இரு பிரிவினுள்ளும் புறமணக்கட்டுப்பாடு உடைய குலங்கள் (பெதகுகள்) உள்ளன எனினும் அவை வெவ்வேறானவை. மைசூர் பகுதிக்குரிய கௌரிமக்கள் பெல்லாரியில் ஒரு சிலராகவே உள்ளனர்: இந்துக்களிடையேயான உயர்வு தாழ்வுப் படிநிலையில் கங்கைமக்களை விட உயர்ந்தவர்களான இவர்கள், தங்கள் சடங்குகளை நடத்தத் தங்கள் சாதியைச் சேர்ந்தவர்களுக்குப் பதிலாகப் பிராமணர்களை அமர்த்துகின்றனர். இறந்தவர்களைப் புதைப்பதற்குப் பதில்ாக எரிக்கும் இவர்கள் அவர்கள் நினைவாக ஆண்டுதோறும் சடங்குகளைச் செய்கின்றனர். கைம்பெண்கள் மறுமணத்தை இவர்கள் அனுமதிப்பதில்லை. கங்கை மக்கள் படகு விடுதல், மீன் பிடித்தல் முதலான நீரோடு தொடர்புடைய தொழிலில் தொடக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்களாதல் வேண்டும். துங்கபத்திரா நதிக்கரையினைச் சார்ந்துள்ள சிற்றூர்களில் இவர்கள் மிகுந்த எண்ணிக்கையில் காணப்படுகின்றனர்." காவேரி, பவானி, துங்கபத்திரா முதலான தென்னிந்திய ஆறுகளில் பரிசல்கள் இன்னமும் வழக்கில் உள்ளன. தான் கோல்கொண்ட செல்லும் வழியில் கண்டதாகத் தவெர்னியர்,

"ஆறுகளைக் கடக்கப் பயன்படுத்தப்படும் படகுகள் பெரிய கூடைகளைப் போல வெளிப்பக்கம் எருதுகளின் தோலினால் பொதியப்பட்டனவாக உள்ளன. அவற்றின் உள்ளே அடியில் சில செத்தைக் கட்டுக்களை இட்டு அவற்றின் மேல் விரிப்புகளைப் பரப்பி நனைந்துவிடாமல் இருக்கும்படியாக மூட்டை முடிச்சுக் களையும் பொருள்களையும் வைப்பர்"* என எழுதியுள்ளார். மேற்றிராணியார் வைட்ஹெட் பயணத்தின்போது பரிசிலைப் பயன்படுத்திய தம் அனுபவங்களைப் பின்வருமாறு கூறியுள் ளார்:- "துங்கபத்திராவில் ஹம்பியில் நாங்கள் ஒரு பரிசலில் ஏறினோம். அது பிரிட்டனின் பழங்காலத்துப் பரிசலைப் பற்றிய என்னுடைய கணிப்பை முழுதும் ஒத்ததாயிருந்தது. வட்ட வடிவமாகப் பெரிய பிரம்பினால் பின்னப்பட்ட எட்டு அல்லது ஒன்பதடிக் குறுக்களவுடைய கூடையான புறத்தே தோலினால் பொதியப்பட்டிருந்த அது நீண்ட கழிகளால் செலுத்தப்பட்டது. பொதுவாக நீரில் சுற்றிச் சுழன்றபடி இருக்கும் அதனைப் படகுக்காரனிடம் நாம் வற்புறுத்தி வேண்டினால் அப்பொழுது செலுத்தியதைப் போல நேரே செலுத்துவான். பரிசலின் அடியில் கொஞ்சம் வைக்கோல் போட்டிருப்பர். எனினும் நாங்கள் அதனுள் நாற்காலியில் அமரத் தனிச் சலுகை வழங்கினர். பரிசலில் நாற்காலி ஆட்டங்காணும் ஆகையால், கீழே வைக்கோல் மீது அமர்வதே பாதுகாப்பானது. திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் ஒருமுறை நான் ஆற்றின் அக்கரையில் உள்ள சிற்றூருக்கு ஒருவருக்குத் தீட்சை அளிக்கப் பரிசலில் சென்ற நினைவு உள்ளது. அந்த நிகழ்ச்சியின் தகுதிக்கு ஏற்பப் பரிசலின் நடுவில் நான் ஒரு நாற்காலியில் அமர்ந்து கொள்ள வேண்டுமென முடிவு செய்தனர். நானும் சபலமுற்றவனாக அதற்கு ஒப்புக் கொண்டேன். எங்களை வரவேற்க எதிர்க்கரையில் ஊரார் அனைவரும் திரண்டிருந்தனர். நான்கு காவலர்கள் எங்களைச் சிறப்பிக்க அழைத்து வரப்பட்டிருந்தனர். தஞ்சாவூரிலிருந்து வந்த பாண்டு வாத்தியம் வேறு பின்னால் காத்து நின்றது. நாங்கள் கரையை நெருங்கியதும் ஊரார் வணககம் செலுத்தினர். காவலர்கள்

---

* சென்னை மாவட்டத் திருச்சபை இதழ், சூன், 1906. (Bishop Whitehead-Madras Diocesan Magazine, June, 1906.)

சிறப்பு வணக்கம் செய்தனர். 'இதோ வீரர் வருகிறார்' என்பது போன்ற மெட்டோடு ஒத்ததொரு மெட்டினைப் பாண்டு வாத்தியம் முழங்கியது. பரிசில் கரையில் சென்று நேரே மோதியவுடன் எனது நாற்காலி தடுமாறிக் கவிழ, நான் வைக்கோலில் மல்லாக்காகத் தூக்கியெறியப்பட்டேன். நாங்கள் ஆற்றோடு இரண்டு மைல் சென்றோம். ஆற்றின் வேகம் மிகுதியாக இருந்த தோடு இடையிடையே காட்டாறுகளும் வந்து ஆற்றோடு சேர்ந் தன. இருட்டுக்குப் பின்னர் இரு பக்கமும் பாறைகள் தலை நீட்டியபடியிருக்கும் ஆற்றில் வலுவற்ற பரிசலில் சுற்றிச் சுற்றி வருவது இனிய அனுபவமாக இருக்கவில்லை. எனினும் பரிசல் தள்ளுபவர்கள் ஆற்றின் போக்கினை முற்றும் அறிந்தவர்க ளாகப் பரிசில் வலிப்பதில் கைதேர்ந்தவர்களாக இருந்தனர்.'' 1847-இல் வைகை வெள்ளப் பெருக்காய் இருந்தபோது அமெரிக் கத் திருச்சபையைச் சேர்ந்த ஜான் எட்டி சண்ட்லர் மதுரைக்கு வருகை புரிந்தது பற்றிப் பின்வருமாறு விவரிக்கப்பட்டுள்ளது.:-*

''நகரத்தைச் சேர்ந்த உடன்பிறந்தோரிடமிருந்து கூலிகள் ஆற்றில் நீந்தி ரொட்டியையும் குறிப்புகளையும் எங்களுக்குக் கொண்டுவந்தனர். மூன்று நாள்கள் காத்திருந்தபின் புதிய சமயப் பணியாளர்கள் மதுரையிலுள்ள சமயப் பணித் திருமடத்தினைச் சென்று சேர்ந்தனர். ரெண்டல், செரி ஆகிய இருவரும் ஆற்றினைக் கடந்து இப்பால் வர, பின்னர் அனைவரும் பரிசலில் மீண்டும் ஆற்றைக் கடந்து நகரினை அடைந்தனர். பரிசல் எட்டு அல்லது பத்தடி குறுக்களவு உள்ளதாகப் பயணம் செய்பவர்கள் பிடித்துக்கொள்ள அதன்மேல் குறுக்கே ஒரு மூங்கில் வைத்துக் கட்டப்பட்டிருந்தது. அதன் வெளிப்பக்கம் தோலால் பொதியப்பட்டிருந்தது. அதனைச் சுற்றி நாற்புறமும் கட்டப் பட்டிருந்த கயிறுகளைச் சுமார் பத்துப் பன்னிரண்டு கூலிகள் நடந்தும் நீந்தியும் இழுத்துச் சென்றனர்.'' நீலகிரியில் உள்ள பைகாராவில், பைகாரா ஆற்றில் மீன் பிடிப்பவர்களுக்காகப் பயணிகள் தங்கும் விடுதியில் சில ஆண்டுகளாக ஒரு பரிசல் ஏற்பாடு செய்து வைத்துள்ளனர்.

---

* ஜான் எஸ். சண்ட்லர், மதுரைச் சமயப் பணியாளர், பாஸ்டன். (John S. Chandler, a Madura Missionary, Boston.)

திரு பிரான்சிஸ் தொடர்ந்து எழுதுவதாவது:- "கப்பேரர் இன்று பல்வேறு தொழில்களில் ஈடுபட்டிருப்பதன் காரணமாக அவர்களிடையே தொழில் சார்ந்த பல உட்பிரிவுகள் தோன்றியுள் ளன. அப்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் கங்கை மக்களு என்றோ கப்பேரர் என்றோ அழைக்கப்படாமல் தொழில் சார்ந்த பட்டப் பெயராலேயே அழைக்கப்படுகின்றனர். சான்றாகப் பாரிகெர் பிரிவினர் ஊர்ச் சாவடியினைத் துப்புரவு செய்வதோடு தங்கும் அலுவலர்களுக்கு வேண்டிய உதவிகளைப் புரிகின்றனர். மற்றப் பணிகளையும் செய்வார்கள். சலகாரர் குப்பையில் தங்கம் சலிப் பவர்கள். மத்தேருவர் மத்தி (*Morinda citrifolia*–நுணாவகை) மரவேரிலிருந்து சாயம் தயாரித்துப் போடுபவர்கள். பெஸ்தர் ஏன் தனிச் சாதியாராகக் கருதப்படுகின்றனர் என்பதனைப்பற்றி அறிந்து தெளிய எனக்கு நேரம் இல்லை. முதலில் பல்லக்குச் சுமப்பவர்களாக இருந்த இவர்கள் கங்கை மக்களு சாதியின் ஓர் உட்பிரிவினரே. பல்லக்கு வழக்கிழந்துவிட வேறு பல பணிகளில் ஈடுபட்டுள்ளனர். குருபர்களின் மண உறுதிச் சடங்கினைப் போலவே இவர்கள் மண நிகழ்ச்சியும் மணமகள் இல்லத்தில் வெற்றிலை மாற்றிக் கொள்வதின் வழி உறுதி செய்யப் படுகின்றது. மாதிகர்களிடையே உள்ள வழக்கத்தைப் போல மணச் சடங்குகள் முடிந்த மூன்று மாதங்களுக்குப் பிறகே மணம் உறுதி செய்யப்படுகின்றது. இச் சாதியார் குருபர்களைப் போல இறந்தவர்களின் ஆவியினைத் திரும்ப அழைக்கும் சடங்கினை மேற்கொள்கின்றனர்." திருமணம் உறுதிப்படுத்தப்படுவது குருபர்களிடையேயும் மாதிகரிடையேயும் போல மூன்று மாதங்க ளுக்குத் தள்ளி வைக்கப்படுகின்றது. திருமணம் நிகழ்ந்த முதல் ஆண்டில் குடும்பத்தில் மூவர் இருப்பது நலம் பயக்காது எனக் கருதப்படுவதே இவ்வாறு மணத்தை உறுதிப்படுத்துவதைத் தள்ளிப் போடுவதற்கான காரணமாகும். இவ்வாறு தள்ளிப் போடுவதால் குழந்தை பிறப்பது மணமான இரண்டாம் ஆண் டில் நிகழ வாய்ப்பு ஏற்படுகிறது. எனவே முதலாண்டின்போது கணவன், மனைவியாகிய இரு உறுப்பினர்களே குடும்பத்தில் இருப்பர். திரு பிரான்சிஸ் குறிப்பிட்டுள்ள இறந்தவரின் ஆவியை அழைக்கும் சடங்கில், சாவுச் சடங்கின் பதினொன்றாம் நாள் பானையில் தண்ணீரை வைத்து வழிபட்டு மறுநாள்

தனித்தவொரு இடத்திற்குக் கொண்டு சென்று அந்த நீரைக் கொட்டுவர்.

•• பெல்லாரி மாவட்டத்தைச் சேர்ந்த கப்பேரர் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு கோதண்டராம் நாயுடுவுக்குக் கடப்பாடுடையேன். இச்சாதியினை அம்பிகா என்றும் வழங்குகின்றனர். சாதித் தொடர்பான வழக்குகளையும் நடைமுறை மீறல்களையும் கட்டெமணியவாரு என்ற சாதித் தலைவன் தலைமையிலான பஞ்சாயத்து ஆராய்ந்து தீர்ப்பு வழங்கும். குற்றம் புரிந்தவன் செலுத்த வேண்டிய தண்டத் தொகை அதிகமாக இருக்குமாயின் அதில் பாதி சாதித் தலைவனைச் சேரும். மறுபாதி சாதியைச் சேர்ந்தவர்களுக்கு உரியது. அதனை அவர்கள் மது அருந்தச் செலவழிப்பர். பெரிய குற்றம் புரிந்தவர்கள் தலை மொட்டையடிக்கப்பட்ட பின் சாதித் தலைவன் தரும் தீர்த்தத்தைக் குடிக்க வேண்டும். குழந்தை மணம், வயது வந்தபின் மணம் ஆகிய இரண்டும் வழக்கில் உள்ளன. மணம் முடிப்பதற்கு முன் உடல் உறவு அனுமதிக்கப்பட்டாலும் அவ்வாறு தொடர்பு கொள்ளும் மணமக்கள் சாதித் தலைவனுக்குத் தண்டத்தொகை செலுத்தவேண்டும். மணத்தின்போது ஒரு பிராமணனே மணமகள் கழுத்தில் தாலி அணிவிக்கின்றான். திருமணச் சடங்கின்போது மணமான மங்கையர் விளக்கோடு கூடிய வண்ணம் தீட்டப்பட்ட பானைகளை எடுத்துச் செல்வதோடு அவர்களே மணமக்களைக் குளிக்கச் செய்வர். கைம்பெண்கள், உடிக்கி எனப்படும் இரவில் நிகழ்த்தப்படும் சடங்கில் கைம்பெண்களாலேயே மறுமணம் செய்விக்கப்படுவதோடு கைம்பெண்களில் ஒருத்தியே மணமகளுக்குத் தாலி அணிவிக்கின்றாள். மணமான ஆணோ பெண்ணோ அப்போது அருகிருக்க அனுமதிக்கப்படுவதில்லை எனக் கூறப்படுகிறது. வைணவர்களான கப்பேரர் பல கிராமத் தேவதைகளை வழிபடுகின்றனர். இறந்தவர்கள் புதைக்கப்படுகின்றனர். தசரா விழாவின்போது, விபத்து முதலானவற்றில் இறந்தவர்கள் தவிர மற்றவர்களுக்கு ஆடைகளும் உணவும் வைத்துப் படைத்து வழிபாடு செய்கின்றனர். திருமணம் ஆகாத சிறுமியர் சிலர் ஹுலுகம்மா தேவிக்குப் பசவிகளாக (பரத்தையராக நேர்ந்து விடப்படுபவர்கள்) விடப்படுகின்றனர்.

பெல்லாரி மாவட்டத்தில் நடைபெறும் கப்பேரர்கள் பங்கு பெறும் உழவுத் தொழில் தொடர்பான சடங்குகள் பற்றிக் கூறப்படுவதாவது:- "ஆவணி (செப்டம்பர்) மாதத்தில் வரும் முதல் முழுமதி நாளன்று பயிர்த்தொழில் செய்பவர்கள் ஜோக்குமாரா என்ற விருந்தினை மழைத் தெய்வத்தினைத் திருப்திப்படுத்த நடத்துகின்றனர். கௌரி மக்களு பிரிவினைச் சேர்ந்த கப்பேரர் சாதியின் உட்பிரிவினரான பரிக்கர் பெண்கள் தாங்கள் வாழும் ஊருள்ளோ பேருருள்ளோ தலையில் வேப்பிலை, பலவகை மலர்கள், விபூதி ஆகியன அடங்கிய கூடையினைச் சுமந்தவர்களாகச் சென்று பயிர்த்தொழிலில் ஈடுபட்டிருக்கும் காபு சாதியாரிடம் பிச்சை வாங்கி வருவர். அவர்கள் தரும் பிச்சைக்கு (தானியம், சோறு) ஈடாக அவர்களுக்குக் கொஞ்சம் வேப்பிலை, மலர்கள், விபூதி ஆகியனவற்றைத் தருவர். பயிர்த்தொழிலாளரான காபுக்கள் அவற்றைத் தங்கள் வயலுக்குக் கொண்டு சென்று சோளக்கஞ்சி தயாரித்து அதில் அவற்றினைக் கலந்து அக்கலவையினை வயலில் சுற்றிலும் தெளிப்பர். பிறகு காபு நேரே ஊரிலுள்ள குயவனாரின் சூளைக்குச் சென்று அதிலிருந்து சாம்பலை வாரி வந்து அதனால் ஒரு மனித உருவம் செய்வான். அந்த உருவமே ஜோக்கமாரா என அழைக்கப்படும் மழைத் தெய்வம். அது வயலில் வசதியான ஓர் இடத்தில் வைக்கப்படும். தக்க சமயத்தில் மழையை வருவிக்கும் ஆற்றல் அதற்கு உண்டு என நம்பப்படுகிறது. சிலபோது அதனைப் பெரிய அளவுள்ள உருவமாகவும் சிலபோது சிறிய உருவமாகவும் அமைப்பர்."*

**கப்பிலி - Kabbili**

கப்பிலி அல்லது கப்பிலிகா பெஸ்தா சாதியின் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. இது கப்பேரர் சாதிப் பெயரின் திரிபாகலாம்.

---

* சென்னை மெயில் நாளிதழ், நவம்பர் 1905. (Madras Mail, November, 1905.)

**கடச்சில் - Kadacchil (knife- grinder or cutler)**

கொல்லன் சாதியின் ஓர் உட்பிரிவு. சாணை பிடிப்பவருக் கான பெயர்.

**கடையன் – Kadaiyan**

கடையன் என்ற சொல் கீழானவன், கடைசியில் உள்ளவன் என்ற பொருளைத் தருவது. இது பள்ளர்கள் சாதியின் ஓர் உட் பிரிவு. இவர்கள் இராமேசுவரத்திலும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் கிளிஞ்சல் சேகரித்துக் கிளிஞ்சல் சுண்ணாம்புக் காளவாய் போடுபவர்கள் எனக் கூறப்பட்டுள்ளது. இன்று இந்தப்பிரிவினரிடையே இருந்தே முத்துக் குளிப்பவர் களின் ஒரு பகுதியினர் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்*. திருநெல் வேலி, மதுரை மாவட்டக் கடற்கரைப் பகுதிகளில் பரவர்களைப் போலவே இவர்கள் கிறித்தவ சமயத்தவர்களாக உள்ளனர். அருட்தொண்டர் பிராசின்சு சேவியர் அவர்கள் சமயப் பணி யால் இவர்கள் கிறித்தவ சமயம் தழுவியவர்களாவர்.

**கடபேரி - Kadapēri**

கன்னடியன் சாதியின் ஓர் உட்பிரிவு.

**கடவல – Kadavala (pots)**

பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். பானைகள் எனப் பொருள்படுவது.

**காடி - Kādi (blade of grass)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். புல்லின் இலையைக் குறிக்கும்.

**காடர் – Kādir**

காடர் அல்லது காடன்கள் என அழைக்கப்படும் இவர்கள் ஆனைமலைப் பகுதிகளில் வாழ்பவர்கள். இம்மலை திருவாங்கூர்

---

* மன்னார் வளைகுடாவில் முத்துக் குளிப்புப் பற்றிய ஜெ. ஹார்னெலின் அறிக்கை, 1905. (J. Hornnell, Report on the Indian Pearl Fisheries of the Gulf of Mannar, 1905.)

வரை நீண்டு செல்லும் மேற்குத்தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாகும். புகைவண்டியில் கோயமுத்தூருக்கு ஓர் இரவு முழுவதும் பயணம் செய்த பின், சாலை வழியே சண்டித்தனம் செய்யும் குதிரை பூட்டிய வண்டியில் நாற்பது மைல் பயணம் செய்தபின்னர் நான் அடர்ந்த நாகதாளிக்கள்ளிக் காட்டினி டையே சேதுமடை மலையடிவாரத்தை வந்தடைந்தேன். அங்கு எனக்கு வனப் பாதுகாவலர் திரு எச். எ. காஸ் அவர்களின் அன்பான வரவேற்பு உபசாரம் கிடைக்கப் பெற்றேன். அவரிடம் ஸ்டுவர்ட் மலையிலான தங்கு மாளிகையில் இருந்த காலத்தில் காடுகளைப் பற்றியும் காடுவாழ் பழங்குடிகள் பற்றியும் அறிந்து கொண்ட பல செய்திகளுக்கு அவருக்குக் கடப்பாடுடையேன். ஸ்டுவர்ட் மலையில் உள்ள தங்கும் விடுதி, கடல் மட்டத்திற்கு மேல் 2,350 அடி உயரத்தில் அடர்ந்த மூங்கில் காட்டின் இடையே அமைந்துள்ளது. அத்தங்கும் விடுதி சென்னை மாநில ஆளுநராக ஐந்தாண்டுக் காலம் பதவி வகித்த சர் மவுண்ட்ஸ்டுவர்ட் கிராண் டஃப் அவர்களின் நினைவாக வேடிக்கையாக அவருடைய பெயரால் அழைக்கப் படுவதாயிற்று.

சேதுமடையிலேயே நான் முதன்முதல் ஒரு காடனைச் சந்தித்தேன். நான் நம்பிக்கையோடு எதிர்பார்த்ததைப் போல அவன் ஆதிகால மனிதனைப் போல இலைகளாலான ஆடை யினை அணிந்திருக்கவில்லை. அதற்கு மாறாக வண்ணத் துணி யாலான தலைப் பாகையையும், ஆங்கிலேயப் போர்ப்படை வீரன் ஒருவனின் கழித்து ஒதுக்கப்பட்ட சிவப்பு நிறக் கோட்டையும் அணிந்திருந்தான். நான் தங்கும் விடுதியில் பயன் படுத்தும் குளியல் தொட்டியினைத் தூக்கிச் செல்ல வந்திருந்த அவனுக்கு, அது கொட்டும் பருவ மழையிலிருந்து காத்துக் கொள்ள நல்ல குடையாக உதவியது. அண்மையில் பெய்த பருவ மழையால் பெருக்கெடுத்து ஓடிய காட்டாறுகளைக் கடந்து செல்ல உதவிய அவனுடைய உதவியால் நான் மிக மகிழ்ந்தேன்.

காடுகளைக் காவல் புரியும் அரசுப் பணியாளர்களான காட ருள் பலர் தங்கள் மூக்கினைத் தவிர மற்ற எல்லா வகையிலான

தோற்றத்திலும் தங்கள் இனத்தவர்களிலும் மாறுபட்டவர் களாக 'நார்போக்' சட்டை, கால்சட்டை, கால்பட்டை முதலான பெருத்தான்களிட்ட கச்சிதமான ஆடைகளைப் புனைந்து தோற்றம் தந்தனர்.

காட்டில் உள்ள கிடங்கில் அமைந்திருந்த வசதியான பங்களா வில் நான் வந்து சேர்ந்தபோது ஓர் இந்தியப் பணியாளன் தன் மேல் அலுவலர் யானை ஒன்று வலிப்பில் விழுந்ததால் (tumble in a fit) அவர் வெளியே செல்ல நேர்ந்துவிட்டதாகக் கூறினான். இதனைக் கேட்ட என் நினைவுகள் இலண்டனில் உள்ள விலங்குக் காட்சித் தோட்டத்தில் மருத்துவக் கல்வி பயின்ற காலத்தில் மாணவனாக இருந்தபோது வலிப்பில் இறந்துபோன ஒரு யானையின் சாவின் காரணம் பற்றிப் பின் நான் ஆய்வில் ஈடுபட்டிருந்த காலத்திற்குத் தாவின. வளர்ந்த இளம் பெண்யானை ஒன்று, மனிதர்களால் யானைகளைப் பிடிப்பதற்கென்றே தோண்டி வைக்கப்பட்டிந்ததொரு குழி யில் விழுந்து விட்டதேயன்றி, அது வலிப்பு நோயினால் விழுந்து விடவில்லை என்ற உண்மை அன்று அவர் திரும்பிய பின்னரே வெளிப்பட்டது. தமிழர்கள் 'எஃப்' என்ற எழுத்தை உச்சரிப் பதில் மொழியியல் அடிப்படையில் படும் தொல்லை தொடர் பானதொரு நிகழ்ச்சியும் என் நினைவுக்கு வருகின்றது. உல கெங்கும் சுற்றி வேட்டையில் ஈடுபடும் ஒரு வேட்டைக்காரரின், ஸ்டுவர்ட் மலையோடு தொடர்புடைய ஒரு நிகழ்ச்சியும் இங்கு இன்னமும் நினைவில் கொண்டு பேசப்பட்டு வருகிறது. அவர் தனக்குக் காட்டெருமை முதலான பெரிய விலங்குகளின் வேட்டைக்கு உதவிய வனப் பாதுகாப்பு அலுவலருக்குத் தம் பாராட்டுதல்களைத் தெரிவித்துள்ளார். காட்டில் உள்ள கிடங் கிற்கு அவர் வந்து சேர்ந்தவுடன் அவரிடம், வன அலுவலர் "ellipence" ஐப் பார்க்கச் சென்றிருப்பதாகக் கூறப்பட்டது. இந்தியப் பட்லரின் கலப்படமான பட்லர் ஆங்கிலத்தைப் புரிந்து கொள்ளாத அவர், அவன் சுமைக்கூலி பற்றிக் கூறுவ தாகக் கருதித் தமது பொருள்களைச் சுமந்து வந்த சுமை தூக்கிகளுக்கு உரிய "eightpence"சைக் கொடுத்து அவர்களை அனுப்பிவிடும்படி தம் பணியாளுக்கு ஆணையிட்டார். இந்தியர் வழக்கில் ஊறிப்போனவனான ஓர் ஆங்கிலோ இந்தியனுக்கு



காடர்



காடர் குடிசைகள்

'ellipence' என்பது யானையைக் குறிக்கும் என்பது புரியும். ஆனைமலையில் வேட்டையில் ஈடுபட்டிருந்த ஒரு வேட்டைக் காரரைப் பற்றிய பின்வரும் கதையினைச் சர் எம். இ. கிராண்ட் டஃப் கூறியுள்ளார்.* அந்த வேட்டைக்காரர் தங்கி யிருந்த இடத்தில் ஒரு வனத்துறை யானை இருந்தது. அது நள்ளிரவில் அவர் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த குடிசை யின் கூரைக்கு வேயப்பட்டிருந்த புல்லைத் தின்னத் தொடங்கி யது. இதனால் பீதியடைந்த அவரது பணியாளன் பரபரப்பாக அவரை "Elephant Sahib, must, must (mad)" என யானை மஸ்தில் இருப்பதைக் கூறி எழுப்பினான். தூக்கக் கலக்கத்தில் அவர், "Oh! bother the elephant. Tell him he must n't" எனக் கூறிவிட்டுப் புரண்டு படுத்துக்கொண்டார்.

காடர்களின் தனித்த இயல்புகளைப் பற்றிப் பின்வருமாறு தொகுத்துக் கூறலாம். குள்ள உருவமும், கறுத்த தோலும், அகன்ற மூக்கும் கொண்ட இவர்களுள் ஆணும் பெண்ணும் பற்களைச் செதுக்கிக் கூராக்கிக் கொள்ளும் பழக்கம் உடை யவர்கள். பெண்கள் தங்கள் தலையில் கூந்தலில் பின்பக்கம் ஒரு சீப்பினைச் சொருகிக்கொண்டிருப்பார்கள். நான் நேரில் கண்டு பேசிய காடர்கள் தமிழின் திருந்தாச் சேரி வழக்கில் சப்பொலக் (Suffolkes) பகுதிமக்களைப் போல முதலில் மெல்லிய குரலில் பேசத் தொ்டங்கிப் பின் பேசத் தொடங்கியதை விட மிக உரக்க ஒலிக்கும் குரலில் பேச்சினை முடித்தனர். இவர்களுள் சிலர் திருந்தாத தமிழும், மலையாளமும் கலந்த ஒரு கலப்பு மொழியினைப் பேசுகின்றனர் எனவும் எனக்குத் தெரிவிக் கப்பட்டது. திரு வின்செண்ட் காடர்கள் ஆளி என்ற பின்னி ணைப்பினை ஒரு பொருளையோ, ஆளையோ குறிக்கச் சொற் களோடு இணைத்துக் கரமன் ஆளி (கறுத்தவன்), முடி ஆளி (மயிர் மிகுந்தவன்), குட்டி ஆளி (கத்தி வைத்திருப்பவன்), பூ ஆளி (பூ வைத்திருப்பவன்) என்பது போல வழங்கும் வழக்கம் உடையவர்கள் எனக் கூறினார். வெள்ளை அம்மா, வெள்ளைப்

---

* நாட்குறிப்பிலிருந்தான செய்திகள், 1881-86. (Sir M. E. Grant Duff-Notes from a Diary, 1881-86.)

பூ, அழகு, புலி, பால், கன்னி, அன்பு, மார்புகள் என்பன இவர்களிடையே வழக்கில் உள்ள செல்லப் பெயர்களுள் சிலவாம். காடர் மற்றவர்களைப் போல நையாண்டி செய்வதில் திறமையானவர்கள். இவர்கள் முதுவர், மலசர் முதலிய பிற மலைவாழ் பழங்குடி இனத்தவர்களைப் போலவே பேசிக் காட்டும் திறமை உடையவர்கள்.

நாகரிகத் தொடர்பு இன்றியே மகிழ்ச்சியான வாழ்க்கை நடத்த முடியும் என்பதற்குக் காடர் தக்க எடுத்துக் காட்டாக உள்ளனர். கல்வியின் தொடர்பு காரணமான நாகரிக அலைகளி னால் சூழப்பட்டுச் சீர்மை குன்றிவிடாத தங்கள் எளிய பழக்க வழக்கங்களை இவர்கள் இன்னமும் பேணிக்காத்து வருகின்றனர். கொஞ்சமும் கல்வியறிவு பெறாத அறியாமையினால் எவ்விதக் கவலைகளுக்கும் ஆட்படாதவர்களாகச் சாவு விளையாட் டிலோ, மண்ணைப் பிசைந்து உருண்டைகளாக்கி விளையாடிய படியோ என்னைக் கண்டவுடன் குடிசை நோக்கி ஓடும் சுருண்ட முடியுடைய பிறந்த மேனியரான அக்குழந்தைகளின் மனம் விட்டுச் சிரிக்கும் சிரிப்பு, சோர்ந்த உள்ளத்திற்குப் புத்துணர்ச்சி ஊட்டுவதாகும். திறந்த வெளியில் இயற்கையோடு போராடிய படி நாகரிகமற்றவனாக வாழும் காடன் ஒருவனுடைய வாழ்க் கை அரசு ஊழியத்தால் கிடைக்கும் சிறிய தொகைக்காக அரை வயிறு மட்டுமே உண்டு கடினமான தேர்வுகளை எதிர்நோக் கியபடி உழலும் ஏழைகளின் வாழ்க்கையினைவிடப் பலவகை களில் போற்றுதற்குரியதாக உள்ளது என நான் கருதுகிறேன்.

இயற்கையே வாழ்க்கைத் தேவைகள் அனைத்தையும் நிறைவு செய்கின்ற, மக்கள் நெருக்கமில்லாத காடுகளில், வாழ்க்கைத் தேவைகள் மிகச் சிலவே. தோட்டக்காரன்களுக்கு மண்வெட்டி யாகவும் மண்வாரியாகவும் களைகொட்டியாகவும் பயன்படும் மண்வெட்டி ஒன்றினால் மட்டுமே பணி செய்ய அறிந்துள்ள அவன், பயிர்த்தொழில் பற்றியும் ஒரு சிறிதே அறிந்துள்ளான். புல்லரிவாள் ஒன்றினைக் கொண்டே அவன் அனைத்தையும் சாதித்துக் கொள்கின்றான். திரு ஓ. எச். பென்ஸ்லெ இதுபற்றிக்

குறிப்பிடுவது வருமாறு:- "நாகரிக வளர்ச்சியில்லாத மக்கள் தங்களுக்கு வேண்டிய அனைத்தையும் தாங்களே ஆக்கிக் கொள்ளும் ஆற்றல் உடையவர்களாக உள்ளனர் என்பதற்கு எல்லா ஆற்றல்களும் கைவரப் பெற்ற மலைவாழ் மக்களே சான்றாக உள்ளனர். ஒரு சாதாரணப் புல்லரிவாளைக் கொண்டே அவன் பல அதிசயங்களை நிகழ்த்திவிடுவான். எடாங் (etah) கைக் கொண்டு நல்ல வசதியான பல வகையில் இன்ப வாழ்க்கைக்கு உகந்த வீட்டினை அவன் கட்டிமுடிப்பான். பிரம்புகளையும் மரக்கிளைகளையும் கொண்டு அவன் காட்டாற்றுக்குப் பாலம் அமைத்துவிடுவான். மூங்கிலைக் கொண்டு அவன் தெப்பம் அமைப்பதோடு எடாங் (etah) கைக் கொண்டு செதுக்குக் கத்தி செய்து விடுகின்றான். மூங்கிலிலிருந்து சீப்பும், மரநாரிலிருந்து தூண்டில் கயிறும், உலர்ந்த மரத்தைக் கடைந்து நெருப்பும் செய்துகொள்ள அவன் அறிந்துள்ளான். பட்டினியைத் தவிர வேறு வழியில்லை என்று நாம் நினைக்கும் ஓர் இடத்திலிருந்து அவன் உண்ண ஏற்றதைக் கொண்டு தருவான். எந்தக் கிளையினை வெட்டினால் குடிக்க நீர் கிடைக்கும் என்பது அவனுக்குத் தெரியும். விலங்குகளையும், பறவைகளையும் வீழ்த்த அவன் வலைகள் விரிப்பான். அவை விரிவான இயக்கங்களை உடைய எந்திரப் பொறிகளைவிட நன்கு செயல்படக் கூடியனவாக இருக்கும். இரவு வரும்போது காட்டில் அகப்பட்டுக் கொள்ளும் ஐரோப்பியன் ஒருவன், மரத்தைக் கடைந்து நெருப்பு உண்டாக்கவோ, மரங்களில் ஏறிப் பழங்களைப் பறிக்கவோ அறியாதவனாக இருப்பதோடு, உண்பதற்கு ஏற்ற கிழங்குகள், பழங்கள் ஆகியவற்றைப் பற்றிய அறிவற்றவனாகக் காட்டு விலங்குகளைப் பற்றிய அச்சத்தாலும், போதிய வசதிகள் இல்லையே என்ற எண்ணத்தாலும், அலுவலக இரவு விருந்தினிடையே தனக்கு வேண்டிய அனைத்தும் தாராளமாகப் படைக்கப்பட்டிருந்தாலும் அவற்றினிடையே ஒரு காடன் எப்படிக் கவலை கொண்டவனாக இருப்பானோ அவனைப் போலவே கவலையில் மூழ்கியவனாக இருப்பான்."*

---

* திருவனந்தபுரத்தில் ஆற்றிய சொற்பொழிவின் கையெழுத்துச் சுவடி.
(O.H. Bensley-Lecture delivered at Thiruvandrum, MS.)

காடுகளில் உள்ள மரக்கிடங்குகளில் வரிசையாக அமைக்கப் பெற்ற குடிசைகளில் காடர் குடியிருக்கின்றனர். புல்லரி வாளால் மூங்கில்களை நெடுகப் பிளந்து அமைக்கப்பட்ட அக்குடிசைகள் தேக்கிலைகளாலும் மூங்கில்களாலும் வேயப்பட்டு முற்றம், உள்ளறை என இரு பிரிவுகளைக் கொண்டனவாயிருக்கும். சிறு குழுக்களாக வாழும் காடர்கள் ஓரிடத்தில் தங்கி வாழும் இயல்பினரல்லர். காட்டில் இடம்விட்டு இடம் மாறிப் பெயர்ந்து தங்கும் இவர்கள் மீண்டும் எதிர்பாராது முதலில் தங்கியிருந்த இடத்திற்கே வந்து சேர்வர். அவ்வாறு இவர்கள் போய் வருவது எத்தகைய ஆர்ப்பாட்டமும் இல்லாத அன்றாட நிகழ்ச்சியினைப் போன்றதொரு நடைமுறையாகவே அமையும். காடுகளில் அலைந்து திரியுமபோது, இலைகளால் வேயப்பெற்ற எளியதொரு குடிசையை அமைத்துக்கொண்டு அதன் அருகே யானை, புலி, கரடி, சிறுத்தை ஆகியன நெருங்கா திருக்க நெருப்பினை இரவு முழுதும் தொடர்ந்து தணிய எரியும்படி விட்டிருப்பர். நாய்களை வளர்ப்பதில் விருப்பமுடைய இவர்கள் அவற்றை இரவில் காட்டு விலங்குகளிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ள வளர்ப்பதாக அறிகின்றேன். காட்டில் தங்கும் இடத்தில் சக்கிமுக்கிக்கல்லினிடையே இலவம் பஞ்சின்மீது கரிப் பொடியைத் தூவி வைத்துத் தட்டி நெருப்பு உண்டாக்குகின்றனர். குறும்பர்களைப் போலக் காடர்கள் யானைகளிடத்துப் பொதுவாக அச்சம் கொண்டவர்களல்லர் எனினும், கன்றோடு கூடிய யானையையும், தனித்துத் திரியும் யானையையும் நெருங்குவது வம்பில் முடியும் என உணர்ந்தவர்களாக விலகியே செல்வர். காட்டு விலங்குகளிடையேயே வாழ்க்கை நடத்துவதாலும் விபத்துக்களிலிருந்து ஓரளவு தங்களைக் காத்துக் கொள்ளும் திறமை வாய்க்க பெற்றிருப்பதாலும் யானைகள் திரியும் காட்டில் புதிதாக வந்த ஐரோப்பியன் ஒருவன் மூங்கில் உராயும் ஒவ்வொரு சிறு சத்தத்தையும் தாக்க வரும் கொம்பன் யானையின் வருகையாக எண்ணி அஞ்சுவது போலக் காடர் அஞ்சுவதில்லை. கிப்ளிங் எழுதிய ‘காட்டு வாழ்க்கை’ பற்றிய நூலில், எதிர்பாராது காட்டின் நடுவே தன் மனைவியோடு இரவில் தங்க நேர்ந்த ஒரு காட்டுவாசி அன்றிரவினை ஒரு பாறை மீது தூங்கிக் கழிக்கலாம் என

முடிவு செய்த வரலாற்றினை இங்கு எடுத்துக் கூறுவது பொருத்த மாக இருக்கும் என நம்புகின்றேன். அவர்கள் தூங்கும்போது ஒரு புலி அவனுடைய மனைவியைத் தூக்கிச் சென்றது. அவளிட்ட கூக்குரலைக் கேட்ட அவன் தூக்கத்திலிருந்து எழுந்து தன் மனைவியை மீட்கலாம் என்ற நம்பிக்கையோடு அப்புலி யினைத் தொடர்ந்து சென்றான். கடித்து உதறிய செத்த உடலை வைத்துத் தின்றுகொண்டிருந்த புலியினைக் கண்ட அவன் அதனை நெருங்கித் தன் ஈட்டியால் அதனைக் கொன்றான். எனினும் வெண்கலப் பதக்கம் பெறுவதற்கு ஈடானதொரு அரிய வீரச்செயலைத் தான் புரிந்துள்ளதை அவன் உணர்ந்தானில்லை.

சமவெளியில் கூலிகள் சுமைகளைத் தலையில் சுமந்து செல் வதுபோலக் காடர்கள் சுமைகளைத் தலைமீது வைத்துச் சுமக் காமல் அவற்றைக் கயிற்றால் கட்டி முதுகுப் பக்கமாகத் தோளில் தூக்கிச் செல்வர். இடம்விட்டு இடம் குடிபெயர்ந்து செல்லும் பெண்கள் சமையல் பாத்திரங்களோடு கூடக் குழந்தைகளையும் இதுபோலவே முதுகில் பின்பக்கமாகச் சுமந்து செல்வர். அழுக்குத் துணியொன்றில் வைத்துப் போர்த் தப்பட்டு முதுகில் தொங்கவிடப்பட்டுள்ள குழந்தையின் சுமை யினைத் தாங்கிய துணியின் இரு பக்கங்களையும் தோளின் வழியாக மார்பிடத்திற்குக் கொண்டுவந்து அதனைக் கைகளில் பிடித்தபடி செல்லும் பழக்கமானது இடுப்பில் குறுக்கே தொட்டில் போலத் தொங்கும் தூளியில் குழந்தைகளைத் தூக்கிச் செல்லும் பொதுவான பழக்கத்திற்கு மாறுபட்டிருந்த தால் என் கவனத்தைக் கவர்ந்து ஈர்த்தது.

"மலைத் தோட்டம் பயிரிடுவோர், மலைப் பக்கமாக வந்து சேர்ந்த புதிதில் காடர் ஆடையேதும் அணியாதவராக ஒரு சில அணிகளோடு,இளைத்து மெலிந்த தோற்றம் உடையவர்களா கவே இருந்ததைக் கண்டனர். ஐரோப்பியர் வருகையால் இந்த நிலை மாறியது. அவர்களை வேலையில் ஈடுபடச் செய்ய அவர் களுக்குப் பணமும், துணிகளும், தானியங்களும் முன்கூட்டியே வழங்கப்பட்டது. சில ஆண்டுகள் அவர்கள் கடினமாக உழைத் தனர். எனினும் இம் முயற்சி தோல்வியாகவே முடிந்தது. இப் பொழுது மலைத் தோட்டங்களில் பத்துப் பன்னிரண்டு காடர்

கூட வேலை பார்க்கவில்லையென் நான் கருதுகின்றேன். சாதிக் கட்டுப்பாட்டு உணர்ச்சி காரணமாக அவர்கள் எருவினைத் தொட மாட்டார்கள். செடிகளை வெட்டி விடவும் இவர்களால் கற்றுக்கொள்ள முடியவில்லை. மண்வெட்டியில் குழி வெட்டத் தொடங்கியவுடன் கால் விரல்களை வெட்டிக் கொள்வார்கள்'' எனத் திரு வின்சென்ட் என்னிடம் கூறினார். தோடரைப் போலக் காடர் மலைப்பகுதி நிலம் தங்களுடையது என உரிமை கொண்டாடுவதில்லை. அவர்களுக்கென மலைப்பகுதியில் நிலமேதும் இல்லை. எனினும் அரசு காடுபடு சிறுதரத்தன வான பொருள்கள் அனைத்தையும் சேகரித்து, அதனை ஒப்பந்தக் குத்தகைதாரர் வாயிலாக அரசுக்கு விற்க மலைவாழ் பழங்குடிகளுக்கு முழு உரிமை வழங்கியுள்ளது. இத்தகைய குத்தகைதாரரின் ஒப்பந்தப்புள்ளி முன்பே ஏற்றுக்கொள்ளப்பட்டதாக இருக்கும். இவ்வாறு இவர்கள் சேகரிக்கும் பொருள்களுக்குரிய நடப்பில் உள்ள விலையினைக் காசாக ஒப்பந்தக் குத்தகைதாரர் இவர்களுக்குத் தருவார். அந்தத் தொகையினைக் காடர் ஒரு குறிப்பிட்ட விலையில் இவர்களுக்குப் பொருள்களை வழங்க அரசு அமர்த்தியுள்ள ஒப்பந்தக் குத்தகைதாரரிடம் தந்து வேண்டிய பொருள்களைப் பெறுவர். இதனால் அந்த வணிகர் பெறும் இலாபம் ஒரு வரம்புக்கு உட்பட்டதாக அமையுமேயன்றி அடாத விலையாக இராது. ஆனைமலையில் காடுகளில் கிடைக்கும் முக்கியமான சிறுதரத்தனவான காடுபடு பொருள்கள் மெழுகு, தேன், ஏலம், கடுக்காய், இஞ்சி, கெட்டிப் பிசின், மஞ்சள், மான் கொம்பு, யானைத் தந்தம், பிரம்பு என்பனவாம். இவற்றுள் ஏலம், மெழுகு, தேன், பிரம்பு ஆகியன மிகச் சிறப்பானவை, தேனும், மெழுகும் ஆண்டு முழுதும் சேகரிக்கப்படுகின்றன. ஏலம் செப்டம்பர் முதல் நவம்பர் வரையான பருவத்தில் திரட்டப்படுகின்றது. ஆனைமலையை உள்ளிட்ட கோயமுத்தூர் தெற்குக் கோட்டத்தில் 1897-98-ஆம் ஆண்டில் கிடைத்த சிறு தரப் பொருள்களின் மொத்த மதிப்பு ரூ.7,886 ஆகும். அந்த ஆண்டு ஏலம் மிகுதியும் விளைந்த காரணத்தால் இத்தொகை மிக உயர்ந்ததாக உள்ளது. சராசரியாக இந்த வருமானம் ஆண்டுதோறும் ரூ 4,000 முதல் ரூ. 5,000 வரையாகவே இருக்கும். இதில் கிட்டதட்ட 50 சதவீதத்தினைக்

காடர் பெறுவர். வனத்துறையினரிடம் இவர்கள் நாளும் நான்கணாவை நாட்கூலியாக முன்பணமாகப்பெற்றுக்கொண்டு வேலை பார்க்கின்றனர். தற்பொழுது ஆனைமலையில் புதிதாக நிலம் வாங்கியுள்ள மலைத்தோட்ட உரிமையாளர்களும் வனத்துறையினரும் காடர்களை அமர்த்திக் கொள்ள ஆர்வங் காட்டுவதால் சிறுபூசல் அவர்களிடையே நிலவுகின்றது.

காடருள் சிலர் விலங்கு சென்ற சுவடு கண்டு அதன் பின் செல்ல வல்லவர்களாகவும், மிகச் சிலர் சிறந்த வேட்டைக் காரர்களாகவும் உள்ளனர். தன் குழந்தைக்குச் 'சின்னக் சிக் கார்' எனச் செல்லப் பெயரிட்டுள்ள விலங்கியல் ஆர்வம் உடைய என் நண்பரொருவர் இந்தியாவிலிருந்து வரும் நான் அவருடைய தவறான உச்சரிப்போடு கூடிய அச் சொல்லினைப் புரிந்து கொள்ளாதது குறித்து மிக வியப்புற்றார். வைப்பூரி மூப்பன் என்ற காடன் ஒருவனை ஐரோப்பியர் இன்றும் தங்கள் நினைவில் கொண்டவர்களாக உள்ளனர். துப்பாக்கி வெடித்ததால் ஒரு கையினை இழந்த அவன் கொம்பன் யானை களைச் சுட்டு வீழ்த்தி அந்தக் காலத்தில் நல்ல வருமானமும் வாழ்வும் பெற்று வந்தான். பெருங்குடிகாரனான அவன் பலரை மணந்து கொண்டவனாக யானைத் தந்த விற்பனையால் வள மான வாழ்க்கை உடையவனாக இருந்தான். இன்று ஒரு காடன் யானைத் தந்தங்களைக் காண நேர்ந்தால் அதனைப் புதைய லாகப் பாவித்து அரசிடம் ஒப்படைக்கவேண்டும். 25 மனு எடையுள்ள தந்தங்களுக்கு அரசு அவ்வாறு ஒப்படைப்பவனுக்கு 15 ரூபாய் முதல் 25 ரூபாய் வரை அன்பளிப்பாக வழங்கும். ஒரு பவுண்டு எடையுள்ள நல்ல தந்தம் 5 ரூபாய்க்கு விலை போவதால் அரசுக்கு இந்த உடன்பாட்டினால் நல்ல லாபம் கிடைக்கின்றது. ஒருவன் தான் எடுக்கும் தந்தத்தை அரசிடம் ஒப்படைக்காது வைத்துக் கொண்டால் பின்னர் அது கண்டு பிடிக்கப்படுமானால் அதனை வைத்திருப்பவன் சட்டப்படி திருட்டுச்செய்தவனாகக் கருதப்பட்டுத் தண்டிக்கப்படுகின்றான். சென்னை வனத்துறைச் சட்டத்தைப் பொறுத்தவரை கால்நடை என்ற சொல் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத யானை, மறி, பன்றி, ஆடு, ஒட்டகம், எருமை, குதிரை, கழுதை ஆகிய விலங்கு

களின் கதம்பக் கலவையையே குறிக்கும். இவ்வகைப் பாகுபாடு சென்னை மாநிலத்தைச் சேர்ந்த, புழுப்பூச்சிகளைத் தின்னும் பறவைகளின் பட்டியலில் பழந்தின்னி வௌவாலைச் சேர்த்த தோடும், ஒரு மாவட்டத்தைச் சேர்ந்த காட்டு விலங்குகள் பற்றியதான அறிக்கையில் முதலிடத்தில் நெடுநாள்களாகப் பெருந் தொல்லைக்கு ஆளாகி வரும் பன்றித் தலையமைப்புடைய நாட்டுப்புற மட்டக் குதிரையை இடம்பெறச் செய்ததோடும் ஒத்ததாகும்.

"காடர் நிலா வெளிச்சமில்லாத இருண்ட இரவுகளிலேயே தேன் கூடுகளை அகற்றுவர். நிலவு வீசும் இரவிலோ, பகலிலோ அப்பணியில் ஈடுபடமாட்டார்கள். மலை முகடுகளில்உள்ள தேன் கூட்டினை எடுக்கப் பாறையில் அடிக்கப்பட்ட முளையையோ மரத்தில் பிணைக்கப்பட்ட மூங்கில் அல்லது பிரம்பு வளையங்களாலான சங்கிலியையோ பயன்படுத்துவர். இதில் கீழே இறங்குபவன் யாரும் தான் பிடித்திறங்கும் வளையத்தை அறுத்துவிடாமல் இருக்கத் தன் மனைவியையோ, மகனையோ காவல் வைத்தே இறங்குவான். இறங்கிய வழியாகவே மீண்டும் மேலே ஏறிச் செல்ல வேண்டும் என்ற ஒரு மூட நம்பிக்கை இவர்களிடையே உள்ளது. மேலே ஏறும் தொல்லையிலிருந்து விடுபட்டவர்களாகச் சுலபமாக இடைவெளிகுறைவாயுள்ள தரையில் இறங்கி விடக் கூடுமாயினும் அவ்வாறு இறங்கிச் செல்லமாட்டார்கள். மரங்களில் உயர இருக்கும் தேன் கூட்டினை எடுக்க உயர உள்ள கிளையை எட்டும் அளவிற்கு ஓரிரு நீண்ட மூங்கில்களை மரத்தோடு இணைத்துக் கட்டி அதில் மேலேறிச் செல்வர். அதன் பின் மரக்கிளையைப் பற்றித் தவழ்ந்தபடி தேன்கூடு இருக்கும் இடத்தை அடைவர். தேன் கூடுகளை முட்டைப் புழுவோடு மெழுகு உட்பட அப்படியே இவர்கள் தின்று விழுங்குவர்" எனத் தேனெடுப்பது பற்றியும் காடர்களைப் பற்றியும் நன்கு அறிந்த ஒருவரிடமிருந்து நான் கேட்டறிந்தேன். திருவாங்கூரில் தான் மேற்கொண்ட வேட்டையினைப் பற்றி விவரிக்கும்* திரு ஜெ.டி.

---

* பத்தொன்பதாம் நூற்றாண்டு, 1898.
(J.D. Rees — Nineteenth century, 1898.)



காடர் மரம் ஏறும் முறை

ரீஸ் தனது வேட்டை அனுபவம் பற்றிய குறிப்பில் தெற்கே உள்ள மலைகளில் காடர் தேனெடுப்பதைப் பற்றிக் கூறுவதாவது:- "இவர்கள் தலை சுற்றி மயக்கம் ஏற்படுத்தும் உயரமான செங்குத்தான பாறைகளின் மேலிருந்து கையில் தேனீக்களை ஓட்டுவதற்காகத் தீப்பந்தங்களுடன் இரவில் கீழே இறங்குவர். மேலேயிருந்து உறுதியானதொரு கொடி தொங்கவிடப்படும். அதனை அவனுடைய உடன்பிறந்த சகோதரன் பிடித்துக் கொள்ளுதல் கூடாது என்பது இவர்களிடையே உள்ள வழக்கம். நூறடி உயரமுள்ள ஏணியில் இவர்கள் மரக்கிளையில் ஏறுவதைப் பார்ப்பதே இவர்கள் செங்குத்தான பாறைகளில் இறங்குவதைப் பார்ப்பதைவிட மனத்தை மகிழ்விப்பதாகும். தேனெடுப்பவன் கையில் உள்ள கோடரியால் மரத்தின் பட்டையில் ஓர் ஆப்பினை அடிப்பான். பின் அதன்மீது நின்றபடி அதற்கு மேலே உயரத்தில் மற்றொரு ஆப்பினை அடிப்பான். அந்த இரண்டிலுமாகச் சேர்த்து நீண்ட பிரம்பினைக் கட்டியபின் இருட்டில் நெஞ்சில் திடத்துடன் மிக உயர்ந்த மரங்களில் ஏறி எத்தகைய விபத்துக்கும் உள்ளாகாமல் தேனினை எடுத்து வருவான்.'' ஒரு காடன் மலைப் பாறையில் தேனினை எடுக்கக் கீழே இறங்கும்போது சில சமயங்களில் மேலே ஏணியைப் பிடித்துக் கொண்டிருப்பவனுடைய மனைவியையும் தன்னோடு தனக்குப் பாதுகாவலாக இருக்கும் பொருட்டு அழைத்துச் செல்வான் என்று என்னிடம் கூறினர். இது உண்மையான தகவலா என நான் உறுதியாகக் கூற இயலாது.

அரசுத்துறை சேர்ந்த தாவரவியலாளரான திரு எம். எ. லாசன் அவர்களோடு காடுகளில் சுற்றித் திரிந்தபோது சாதாரணமாக மனிதரால் அடைய முடியாத உயர்ந்தோங்கிய மரங்களில் நுனிக் கொம்புகளில் இருக்கும் பழங்களையும் பூக்களையும் சேகரிக்க மரத்தில் வாழும் குரங்குகளைப் பழக்குவது இயலாததாக உள்ளது என அவர் வருந்துவதைக் கேட்டுள்ளேன். பழக்கப்பட்ட மனிதக் குரங்கினைவிடக் காடர்கள் திறமை மிக்கவர்களாக உள்ளனர். மரங்களில் முளைகளை அடித்தோ, புரையினைத் தோண்டியோ மிக உயர்ந்த மரங்

களில் கூடக் காடர்கள் ஏறிவிடுகின்றனர். அவர்கள் மரங்களில் ஏறும் இயக்கத்தின் சீர்மையைப் பார்க்கும்போது "டார்வினின் செடிகளில் ஏறும் பழக்கம்" பற்றியதாகப் 'பஞ்ச்' இதழில் வெளியாகியிருந்த புகழ்பெற்ற சித்திரமே நினைவுக்கு வரும். சற்று உயரம் குறைந்த மரங்களில் ஏறி அடிமரத்தில் வெட்டரிவாளால் வலப்பக்கமாகவும் இடப்பக்கமாகவும் மாறிமாறி முப்பது அங்குல இடைவெளிவிட்டு வெட்டுக் காயங்களை இட்டு இவர்கள் மரத்தில் ஏறுவர். மழைக் காலத்தில் வெட்டுக் காயங்கள் ஈரமாக இருப்பதால் கால் வழுக்கி விடக் கூடும். ஆகையால் அப் பருவத்தில் இது போன்ற மரமேறும் முறையினைக் காடர்கள் மேற்கொள்வதில்லை.

போர்னியோவினைச் சேர்ந்த டையக் இனத்தவர் மரம் ஏறுவதுபற்றி வாலஸ் தந்துள்ள விவரங்கள், ஆனைமலையில் வாழ்பவர்களான காடர்களைப் பற்றி எழுதியுள்ளதை ஒப்ப முழுதும் இயைபுடையதாக இருத்தல் முக்கியமான மனித இனவியல் பரப்புப் பற்றிய குறிப்பிடத்தக்கதொரு உண்மையினை உணர்த்துவதாகும். "இவர்கள் மரத்தில் தரையிலிருந்து மூன்றடி உயரத்தில் உறுதியாக ஒரு முளையினை அடித்து நெடிதுயர்ந்த தொரு மூங்கிலைக் கொண்டுவந்து மரத்தோடு சேர்த்து உயரமாக நிறுத்தி முன்பு அடித்த முளையோடு கூட முளைக்கு மேலே உள்ள வெட்டுப் பள்ளத்தோடு சேர்த்து இறுக்கிக் கட்டுவர். ஒரு டையக் இப்பொழுது முதலில் அடித்த முளைகள் மீது நின்று தன் தலை மட்டத்தில் மற்றுமொரு முளையினை அடிப்பான். அதனோடு அவன் முன்பு போலவே மூங்கிலை இணைத்துக் கட்டுவான். பின்னர் ஒற்றைக் காலில் நின்றபடி தன் தலைக்கு மேலே உள்ள மூங்கிலைப் பிடித்தபடி மற்றுமொரு முளையினை அடிப்பான். இவ்வாறாக அவன் இருபதடி உயரம் மேலே சென்றபின் கட்டப்பட்டுள்ள மூங்கில் பருமனற்றதாக ஆகி விடுவதால் அவன் தன் கூட்டாளி தரும் மற்றொரு மூங்கிலைப் பெற்று அதனை முதல் மூங்கிலோடும் வைத்து இரண்டு மூன்று முளைகளோடு இணைத்துக் கட்டுவான்.

---

* மலேசியத் தீவுக் கூட்டங்கள்.
(Malay Archipelago by Wallace.)

அதன் மேல் முனையினை அடைந்தபின் இதே போல மற்றுமொரு மூங்கிலினை அதனோடு இணைத்து மேலே ஏறி மரத்தின் கீழ்க் கிளையினை எட்டிப் பிடித்து அதனைப் பற்றிய படி தவழ்ந்து செல்வான். இவ்வாறு அமைக்கப்படும் ஏணியால் எத்தகைய ஆபத்தும் நிகழ்வதில்லை. ஒரு முளை இளகிக் கழன்று விட்டாலும் ஏறுபவன் சுமையினை அதற்கு மேலும் கீழும் உள்ள மற்ற முளைகள் தாங்கிக் கொள்கின்றன. ஒன்றின் மேல் ஒன்றாகப் பிணைக்கப்படும் மூங்கில் முளைகளை முன்பு நான் பலமுறை பார்த்திருந்த போதிலும் இப்பொழுதே அவற்றின் பயன்பாட்டினைப் புரிந்து கொண்டேன்'' என வாலஸ் எழுதியுள்ளார்.

மலைவளம் மிகுந்த மலைமுடிகளில் காடுபடு பொருள் களைத் தேடித் திரியும் காடர்கள் அத்தகைய காலநிலையில் அங்கு மிகுதியாகப் பரவியுள்ள அட்டைகளாலும் 'ப்ளூ பாட்டில்' பூச்சியாலும் தொல்லைக்கு ஆளாகின்றனர். ஒரு காட்டெருமையால் தாக்கப்பட்டுக் கொம்பால் குத்திக் காயப் படுத்தப்பட்ட ஒரு காடனை அவனுடைய நண்பன் பாதுகாப் பான இடத்தில் தூக்கிப் போட்டுவிட்டு உதவிக்கு ஆள்களை அழைக்கக் குடியிருப்புப் பக்கமாக ஓடி வந்தான். அவன் ஒரு மணி நேரம் கழித்துத் திரும்பிச் செல்வதற்குள்ளாகப் பூச்சிகள் ஆயிரக் கணக்கில் அவனுடைய புண்களில் முட்டைப் புழுக் களை வைத்துவிட்டன. அவனைக் குடியிருப்புக்குத் தூக்கி வந்தபோது அவை அவன் உடலில் குழிகள் தோண்டி உட்புகத் தொடங்கி விட்டனவாகையால் மிகுந்த முயற்சியோடு அவை அகற்றப்பட்டன என்ற செய்தி பதியப்பட்டுள்ளது. இன்னொரு சமயம் மேற்கூறிய நிகழ்ச்சியை நேரில் பார்த்த ஒருவன் காட்டில் தனியே சென்று தான் தங்கிய இடத்திற்கு இரண்டு மைல் தூரத்தில் ஒரு புலியைச் சுட்டு வீழ்த்தியபின் அதனைத் தூக்கி வரக் கூலிகளை அழைத்துப் போவதற்குள்ளாகக் கதையில் வரும் குழந்தையைப் போல் சோம்பிக் கிடக்காத பூச்சிகள் இட்ட முட்டைப் புழுக்கள் புலியின் தோலினைத் துளைத்து அதனை முழுமையாகப் பாழ்படுத்திவிட்டன. நீலகிரியில் வாழும் கோத்தர்களைப் போலவே காடர்களும் அழுகிய பூச்சிகள்

மொய்க்கும் இறந்த காட்டு விலங்குகளின் ஊனினைத் தின்கின்றனர் என்பதனை உறுதிபடக் கூறுவேன். குச்சியால் தோண்டி எடுக்கப்படும் காட்டுக் கிழங்குகள், மூங்கில், நெல், மீறி, கோழி, மலைப் பாம்பு, மான், முள்ளம்பன்றி, வீட்டெலி, காட்டெலி, காட்டுப் பன்றி, குரங்கு முதலிய பலவற்றையும் உண்ணும் காடர்கள் அதற்கேற்ப உறுதியான நல்ல கட்டமைந்த உடல் வாய்க்கப் பெற்றவர்களாக உள்ளனர். ஆனை மலையில் கீழ்ச் சரிவுகளில் மிகுதியாகக் காணப்படும் காட்டுத் துவை (*Cycas*) யின் விதைகளின் உண்ண ஏற்ற பகுதி இவர்களின் உணவுக்குப் பெரிதும் துணையாய் அமைகின்றது. பச்சையாக இருக்கும் இந்தப் பழம் நச்சுத் தன்மையுடையது எனக் கூறப்படுகிறது. வட்டத் துண்டுகளாக இதனை நறுக்கி ஓடும் நீரில் நன்றாக ஊற வைத்துப் பின் உலர்த்தி, இடித்து மாவாக்கி அதனைப் பணியாரமாகச் சுட்டாலோ, உலர்ந்த துண்டுகளை அனலில் இட்டு வாட்டினாலோ இது முழுமையான உணவாகின்றது. "மார்ச், ஏப்ரல், மே மாதங்களில் காடர்கள் கவலையற்ற இனிய வாழ்வினை உடையவர்களாக உள்ளனர். இவர்களால் கூந்தல் பனை என அழைக்கப்படும் சவ்வரிசிப் பனையொன்றினைத் தேடிக் கண்டுபிடித்துத் தரையோடு அதனை வெட்டிச் சாய்ப்பர். பின்னர் அது ஒன்றரை அடி நீளமுள்ள துண்டகளாக்கப்படும். அந்தத் துண்டுகளைப் பின்னர் நீள வாக்கில் பிளந்து மரச் சம்மட்டியால் நெடுநேரம் அவை நாராகவும் தூளாகவும் ஆகும்வரை புடைப்பர். அந்தத் தூளினை நன்றாக நனைத்துத் துணியில் முடிந்து கட்டித் தடிகொண்டு அதனைப் புடைப்பர். புடைக்கும்போது இடையிடையே துணி முடிப்பினை நீரில் நனைத்து நன்றாகத் திருகுவர். இறுதியில் அனைத்தையும் தண்ணீரில் இட்டுத் தண்ணீரில் மூழ்கிய பின் தண்ணீரை மட்டும் வடித்து விடுவர். அடியில் தங்கியுள்ள தூளினைத் தொடர்ந்து கிளறி விட்டபடி நன்றாகக் கொதிக்க வைப்பர். அது இரப்பர் போன்ற பதத்தில் செம்பழுப்பு நிறம் பெற்றவுடன ஆற விட்டுத் துண்டுகளாக்கிப் பங்கிட்டுத் தருவர், இந்த உணவு சுவையுடையதாயினும் செரிக்க இயலாததாகும்" எனத் திரு வின்செண்ட் கூறுகிறார். விலங்குகளின் ஊனினை அவற்றின் தோலினை உரிக்காமலேயே நெருப்பில் வாட்டித் தின்பதையே காடர்கள் விரும்புகின்றனர்.

காடர் இனத்தைச் சேர்ந்த ஓர் இளைஞனுடைய எண்ணம் திருமணத்தை நாடுமானால் அவன் தான் விரும்பும் ஒருத்தி இருக்கும் சிற்றூருக்குச் சென்று அங்கு ஓர் ஆண்டு பணியாற்றி அவளுக்குப் பரிசுத் தொகையை அளிப்பான். மண நாளன்று காடரினத்தைச் சேர்ந்தவர்களுக்கு மணமகனின் பெற்றோர் சோறும், ஆடு கோழி ஆகியவற்றின் கறியும் கலந்த விருந்திடு வர். மணமக்கள் மணமகளின் வீட்டுக்கு வெளியே மலர்களால் அலங்கரிக்கப்பட்ட பந்தலின் கீழ் நிற்பர். அப்போது ஆண் களும் பெண்களும் தனித்தனியே முழவுக்கும் குழலுக்கும் ஏற்ப ஆடுவர். மணமகனின் தாயோ, உடன்பிறந்தவளோ மணமகள் கழுத்தில் தங்கம் அல்லது வெள்ளியாலான தாலியினை அணி விப்பர். மணமகளின் தந்தை மணமகன் தலையில் அப்போது தலைப்பாகை ஒன்றினைக் கட்டி விடுவான்.மணமக்கள் தங்கள் வலக் கையின் சிறுவிரல்களை இணைத்தவர்களாகப் பந்தலைச் சுற்றி வருவர். அதன்பின் காடர்களால் பின்னப்பட்ட ஒரு பிரம்புப் பாயில் அமர்ந்து அவர்கள் வெற்றிலை மாற்றிக் கொள்வர். கூடா ஒழுக்கம், மனைவி கணவனுக்குக் கீழ்ப்படி யாமை, கணவன் மனைவியிடையே ஒத்துப் போகும் பண் பின்மை ஆகிய காரணங்களுக்காக மணமுறிவு செய்து கொள்ளலாம். பெரியவர்கள் முன்னிலையில் உரிய சான்று களுடன் முறையீடு செய்வதே போதுமானது. அவர்கள் உரிய சான்றுகளை வைத்து மணமுறிவு உரிமை வழங்குவர். மலை வாழ் மக்களின் ஊர்ச்சபையார் வழக்குகளில் தீர்ப்பு வழங்கும் முறைக்கு திரு பென்ஸ்லெ நாற்பது கூடை மணலினைக் குற்றம் புரிந்தவனைக் குற்றம் இழைக்கப் பட்டவனுடைய வீட்டுக்குச் சுமக்கும்படியாக வழங்கிய தீர்ப்பினை எடுத்துக்காட்டுவர். ஊர்ச் சபையின் ஆணை எப்படிப் புறக்கணிக்க முடியாததாக உள்ளது எனபதனையும் அவர் சுட்டிக் காட்டியுள்ளார். சபையின் தீர்ப்புக்குக் கீழ்ப்படியாதவர்கள் சாதி விலக்குப் பெறுவர்.அவ்வாறு விலக்கப் பெறுபவர்கள் காட்டுக்குள் சென்று தனியே தங்கள் வாழ்க்கைத் தேவைகளைத் தேடிப் பெற்றுக் கொள்ளும் கட்டாயத்திற்கு உள்ளாவர்.

எனது பங்களாவின் வாசலில் தரையில் சம்மணமிட்டு அமர்ந்தபடி காடன் ஒருவன் கேள்வி நேரத்தின்போது தனக்கு

மனைவியாக வரும் ஒருத்தி நன்கு சமைக்கத் தெரிந்தவளாக இருக்க வேண்டும் என என்னிடம் கூறினான். நாக்கிற்குச் சுவையாகச் சமைத்துப் போடுபவளே கணவனுடைய மனத்தைக் கவரமுடியும் என்ற முதுமொழியை இது மெய்ப்பிக்கின்றது. நாகரிக வளர்ச்சி பெற்ற மேற்கத்திய சமூகத்தில் டேவிட் காப்பர்பீல்டின் முதல் மனைவியைப் போலக் குடும்பப் பாங்கு தெரியாத ஒருத்தியை மணந்து கொள்வதால் அல்லல்படும் அவர்கள் சமையல் திறத்தின் அடிப்படையில் திருமணங்கள் நிலைத்திருப்பதும், முறிவு பெறுவதுமான காடர் சமுதாயத்தின் மீது உண்மையில் பொறாமை கொள்வர். பெனிடிக்டின், ''உலகில் மக்கள் தொகை பெருக வேண்டும்'' என்ற கருத்தை உடன்படுபவர்களைப் போலக் காடர்கள் பல மனைவியரை மணக்கின்றனர். அத்தோடு தங்கள் இனத்தவர்களும் எண்ணிக்கையில் குறையாதவர்களாக இருக்க வேண்டும் என்பதிலும் இவர்கள் ஆர்வம் உடையவர்களாக உள்ளனர். பல மனைவியரை இவர்கள் மணந்து கொள்வது பிள்ளைகளைப் பெற்றெடுக்க வேண்டும் என்ற ஆர்வத்தாலேயே ஆகும். ஒரு வனக் காவலாளியின் மாமனார் என்னிடம் தனக்கு நான்கு மனைவியர் இருப்பதாகக் கூறினான், முதல் இரண்டு மனைவியருக்கும் மகப்பேறு இல்லை எனவும், மூன்றாவது மனைவி ஒரே ஒரு குழந்தையை மட்டுமே பெற்றெடுத்துள்ளாள் எனவும், அவர்களுடைய இனப் பெருக்கத்திற்கு அது அவனுடைய முழுப் பங்கினைச் செலுத்தியது ஆகாது எனக் கருதியவனாக நான்காவது மனைவியை மணந்து கொண்டதாகவும் அவன் கூறினான். அவள் மற்ற மூவர்களைக் காட்டிலும் வளம் உடையவளாக மூன்று பெண்களையும், ஒரு பையனையும் பெற்றெடுத்து உள்ளதால், இப்போது அவன் போதுமென்ற மனம் பெற்றவனாக உள்ளான். பல மனைவியரிடையேயான உறவு பற்றிய நடைமுறைகளில் முதல் மனைவியே மற்றவர்களைவிட அனைத்திலும் முன்னுரிமை பெறும் உரிமை உடையவள். ஒவ்வொரு மனைவிக்கும் தனித்தனியே சமையல் பாத்திரங்கள் வைத்துக் கொள்ளும் உரிமையும் உண்டு.

வீட்டுக்கு விலக்காகும்போதும், மகப்பேற்றின்போதும் பெண்கள் தங்குவதற்கான தனிக் குடிசைகள் உள்ளன. ஒரு

பெண் பூப்பெய்தும்போது அவள் குடும்பத்தைச் சேர்ந்த நண்பர்கள் ஒன்றாகக் கூடி நல்ல விருந்து உண்பர் எனத் திரு வின்சென்ட் எனக்குத் தெரிவித்தார். அவளுடைய எல்லாத் தோழிகளும், உறவினர்களும் அவளுக்குத் தங்களால் இயன்ற சிறு பரிசுகளை வழங்குவர். குடும்பத்துக்குரிய அணிகலனகளை அணிவித்து அவளை அலங்கரிப்பர். முதன் முதல் வீட்டுக்கு விலக்கு ஆகும் ஒருத்தி தீட்டுக் காலத்தின்போது தங்கி இருக்க முட்டுச் சாலை எனப்படும் சிறப்புக் குடில் அமைக்கப்படும். தொடர்ந்து வரும் மாதங்களில் அவள் வழக்கமாக வீட்டுக்கு விலக்காகின்ற பெண்கள் தங்கும் குடிசையிலேயே தங்குவாள். பூப்படைந்தவுடன் பெண்களின் பெயர்கள் மாற்றப்பட்டு விடும். குழந்தை பெற்றெடுத்த ஒருத்தி மூன்று மாதங்களுக்குத் தீட்டுக் குரியவளாகக் கருதப்படுவாள். குழந்தைக்கு ஒரு மாதம் ஆகும்போது விரிவான சடங்குகள் ஏதுமின்றி பெயரிடுவர். அப்போது அவளுடைய தோழியர் மட்டும் கூடியிருப்பர். ஒருத்தி கருவுற்றுள்ளாள் என உறுதியானவுடன், அவளுடைய கணவன் அவளோடு உடல் உறவு கொள்வதை நிறுத்திக் கொண்டு விருப்பம்போல் வேறு மகளிரை நாடிச் செல்வான், கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப் படுவதில்லையெனினும் அவர்கள் ஒருவனுக்கு வைப்பாக இருந்து வரலாம். குழந்தைக்கு இரண்டு அல்லது மூன்று வயதாகும்வரை பெண்கள் பால் கொடுப்பதாகக் கூறப்படுகிறது. ஓராண்டு முடிந்த குழந்தைக்குப் பால் கொடுத்து முடித்தவுடன் அதன் தாய் அதன் உதடுகளிடையே எரியும் சிகரெட்டைச் சொருகுவதைப் பார்த்தவர்கள் உளர். இதுபோல இவர்கள் குழந்தைகளை அமைதிப்படுத்தும் பழக்கமுடையவர்களெனினும் இது ஆங்கிலோ இந்தியக் குழந்தைகளின் ஆயாக்கள் காலநிலையின் பாதிப்பாலோ, பல் முளைப்பதாலோ, வேறு காரணங்களாலோ ஆர்ப்பாட்டம் செய்து அழும் குழந்தைகளை அமைதிப்படுத்த வேண்டி அவற்றிற்கு வாயிலிட்டு மெல்ல அபினிக் கட்டி தருவதான பழக்கத்திலும் குறைந்த தீமையே பயப்பதாகும். காடர் ஆண்கள் கள்ளத்தனமாக அவர்களுக்கு விற்கப்படும் அபினியைப் பெருமளவில் தின்கின்றனர். பெண்களோ, குழந்தைகளோடு இதனை உட்கொள்ள அவர்கள் அனுமதிப்பதில்லை. பெண்கள் அபினி தின்றால் மலடிகளாகி விடுவர் என்ற

நம்பிக்கை இவர்களிடையே நிலவுகின்றது. பெண்கள் புகை யிலையை வாயிலிட்டு அதக்குவர். ஆண்கள் கடைவீதியில் விற்கும் நன்கு பதப்படுத்தப்படாத புகையிலையைப் புகைப்பர். அவர்களை வசப்படுத்திச் செய்தி சேகரிக்க நான் அவர்களுக்கு வழங்கிய ஸ்பென்சர் நிறுவனத்தின் டார்பிடோ சுருட்டுக்களை அவர்கள் விரும்பிப் புகைத்தனர்.

காடர்கள் சமயநெறி,செப்பமுறாத கல்லுருவிலும் கண்ணுக் குப் புலப்படாத நுண்ணுருவிலும் உள்ள பல தெய்வ வழிபாட்டு நெறியாகும். திரு பென்ஸ்லெ கருதுவது போல அது கடவுளர் பெயர்களையும், பூதங்களின் பெயர்களையும் உரக்கச் சொல்லி அழைத்து அதனால் திருப்தியுறும் வழிபாட்டு நெறி யாகும். எனக்கு அவர்களுடைய கடவுளர்களாகக் கணக்கிட்டு விளக்கிச் சொல்லப்பட்ட தெய்வங்களின் விவரங்கள் வருமாறு:-

1. பைகுட்லாத: ஸ்டுவர்ட் மலைக்கு இரண்டு மைல் தெற்கில் ஒரு பாராங்கற்பலகையின் மீது துருத்திக் கொண்டிருக்கும் பாறை மீது நிறுத்தப்பட்டிருக்கும் இரு கல்லுருவங்கள்.

2. அதுவிசரியம்மா: தரை மட்டத்தில் பத்துப் பதினைந்து சதுர அடிப் பரப்புடைய கற்களால் அடைக்கப்பட்டுள்ள இடம். இக் கோயிலின் சுவர்கள் முதலில் பத்தடி உயரம் இருந்ததாகவும், தற்போது அதனைச் சுற்றிலும் மலை வளர்ந்து மூடிக் கொண்டுள்ளதாகவும் நம்பிக்கை கொண்டுள்ளனர். கல்லால் அடைக்கப்பட்ட இடத்தினுள்ளே ஒரு தெய்வ உருவம் உள்ளது. இக் கோயில் ஸ்டுவர்ட் மலைக்கு வடபால் பத்தாவது மைலில் உள்ளது.

3. வனதவாதி: இத் தெய்வம் உருவமற்றதாகையால் இதற்குக் கோயில் இல்லை. இதனை எங்கு வேண்டுமானாலும் வழிபடலாம்.

4. அய்யப்பசாமி: ஒரு தேக்கு மரத்தின் அடியில் கல்லுருவாய் வீற்றிருக்கும் தெய்வம். பலவகை நோய்களி

லிருந்தும், உடல் துன்பங்களிலிருந்தும் காக்கும் தெய்வ மாகும். இதனை வழிபடும்போது இத் தெய்வக் கல்லின் மீது திருநீறு பூசுவர். ஸ்டுவர்ட் மலையிலிருந்து சேதுமடை செல்லும் மலைப் பாதையில் இரண்டாவது மைலில் உள்ளது.

5. மாசன்யாத்தா: ஆனைமலையில் வெட்ட வெளியில் ஊருக்கருகே ஒரு சுவரில் புதிக்கப்பட்டுள்ள தெய்வம். காடர்களிடையே வழக்குகள் நிகழும்போது தங்கள் குற்றமின்மையை மெய்ப்பிக்க இதன்முன் அவர்கள் தங்களைத் தாங்களே கொடுமைகளுக்கு ஆட்படுத்திக் கொள்வர். இவள் பெயரைச்சொல்லி நெருப்பில் மிளகாயினைப் போட்டால் குற்றம் இழைத்தவன் வாந்தி பேதியால் இறப்பான்.

''காடர்கள் காளியினை வழிபடுகின்றனர். காளிக்குப் படையலிடும்போது முதலில் கன்னிப் பெண்கள் குளித்து வந்து, தேனோடு அரிசியையும் காய்கறிகளையும் இட்டுச் சமைப்பர். இந்த இனிப்புப் பணியாரம் சுட மூன்று கன்னியர் இதற்காக என்றே நெல் குத்துவர். இவ்வாறு இடப்படும் படையல் புனித மானதாகக் கருதப்பட்டுக் கூடியுள்ள ஆண், பெண், குழந்தைகள் ஆகிய அனைவருக்கும் வழங்கப்படும்'' எனத் திரு எல். கே. அனந்த கிருட்டிண அய்யர் தெரிவித்துள்ளார்.

காடர்கள் நோய்வாய்ப்பட்டால் அவர்கள் முகத்துக்கு நேரே கரங்குவித்து தெய்வங்களை வணங்கி அவற்றிற்குப் பழம், தேங்காய், வெற்றிலை ஆகியன படைத்துக் கர்ப்பூர ஆரத்தி காட்டுவர். இவர்களுக்குக் கால்நடைகளிடத்தில் ஒருவகை அச்சம் உண்டென்றும், கால்நடைகள் இடும் சாணம் முதலான வற்றையும் அவை தரும் பிற பொருள்களையும் இவர்கள் தொடுவதில்லை எனவும் திரு வின்செண்ட் எனனிடம் கூறினார். காட்டெருமைகளின் உடலில் தங்கள் தெய்வம் சிலபோது குடி கொண்டிருப்பதாக இவர்கள் நம்புகின்றனர். அதனால் வேட்டைக்காரர் காட்டெருமைகளைச் சுட்டு வீழ்த்தினால் இவர்கள் அதற்குப் பூசை போடுவதாகத் தெரிகின்றது. காட்டு யானை

களை மதித்துப் போற்றும் இவர்கள் பழக்கப்பட்ட யானைகள் தெய்வீகத் தன்மையை இழந்து விட்டதாகக் கருதுகின்றனர் எனத் திரு அனந்த கிருட்டிண அய்யர் குறித்துள்ளார்.

இந்துக்கள் புத்தாண்டு பிறக்கும் திருவிழாவினைக் கொண்டாடும் சமயம் காடர்கள் கீழே சமவெளிக்குப் பயணம் மேற்கொள்வர். அப்போது வழியில் உள்ள தெய்வங்களை வணங்குவர். பில்லிசூன்யத்தில் நம்பிக்கை கொண்டுள்ள இவர்கள் அவற்றின் மந்திர சக்தியாலேயே நோய்கள் வருவதாக நம்புகின்றனர். பேய் ஓட்டுவதில் வல்லவர்களான இவர்கள் மந்திரவாதம் அல்லது மாயவித்தைகளையும் தொழிலாகக் கொண்டுள்ளனர். "தற்பொழுது எட்வார்டு அரசராக உள்ள மேன்மை தங்கிய வேல்ஸ் இளவரசர் ஆனைமலையில் வேட்டைக்காகப் பயணம் மேற்கொண்டபோது, அவருக்கு விலங்குகளின் தடம் கண்டு கூற அமர்த்தப்பட்ட தடம் கண்டு கூறுவதில் புகழ் பெற்ற காடர் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் (அதன்பின்) ஒவ்வொருவராகப் புரிந்துகொள்ள முடியாத ஏதோ ஒரு காரணத்தால் அடுத்தடுத்து இறந்துவிட்டனர். அவ்வாறு இறந்துவிட்ட அனைவரும் தாங்கள் ஏதோ ஒரு மாய சக்தியால் பீடிக்கப்பட்டிருப்பதாகவும், விரைவில் தாங்கள் இறந்துவிடப் போவதாகவும் முன்னுணர்வு உடையவர்களாக அதனைக் கூறியும் உள்ளனர். அவர்கள் நஞ்சு வைக்கப்பட்டு அதனால் இறந்தவர்களாதல் வேண்டும். ஆனால் அவர்களுக்கு எவ்வாறு நஞ்சு ஊட்டப்பட்டது என்பது இன்னமும் விளங்காத புதிராகவே உள்ளது. அந்தக் குடும்பம் ஓர் ஐரோப்பியனின் ஆதரவின் கீழ் இருந்து வந்ததாகும். அவர்களுக்கு எதிராக வெளிப்படையாக யாரேனும் தீங்கிழைக்க முற்பட்டால் அவர் அதனைக் கண்டுபிடித்திருப்பார்" என மலபார் மாவட்டக் கையேட்டில் திரு லோகன் குறித்துள்ளார்.

இறந்துபோன காடர்கள் உடல் புதைக்கப்படுகின்றது. நடமாட்டம் அற்ற நடுக்காட்டில் சாவு நிகழுமாயின் புதைகுழி தோண்ட வசதியில்லாதபோது பாறை இடுக்குகளில் பிணத்தைக் கிடத்திக் கற்களால் மூடுவர். புதைகுழி ஐந்து அல்லது ஆறடி ஆழம் உள்ளதாக வெட்டப்படும். பிணங்களைப் புதைப்பதற்

கான தனித்த இடுகாடுகள் இல்லை. சாவு நிகழ்ந்த இடத்திற்கு அருகில் காட்டினிடையே ஒரிடத்தைப் புதைக்கத் தேர்ந்தெடுப்பர். இறந்துபோனவரின் குடிசைக்கு வெளியே கொட்டு முழக்கு விதியின் அவலத்தைக் கையறுநிலைப் பாடலாக இசைக்கும். அங்கிருந்து பிணத்தை எடுத்துச்செல்லும்போது சீழ்க்கை ஒலி எழுப்புவர். பிணத்தின் அடியில் இறந்துபோனவர் பயன் படுத்திய துணிமணிகள் பரப்பப்படும். மேலே புதியதொரு துணி யினைப் போர்த்துவர். பிணத்தை மூடும்படியாக ஒரு பாயினை மேலே விரித்துக் கட்டி மூங்கில் பாடையில் வைத்துப் பிணத் தைத் தூக்கிச் செல்வர். பிணம் குடிசையைவிட்டு வெளியே வரும் போது அதன்மீது அரிசி தூவப்படும்.சாவுச் சடங்கு மிகச் சுருக்க மானதே. புதைகுழியில் ஒரு பாயின் மீது பிணத்தைத் தலைப் பக்கம் கிழக்கு நோக்கி இருக்கும்படியாகச் சாய்ந்த நிலையில் கிடத்துவர். சுற்றிலும் மூங்கில் பிளாச்சுக்களும், இலைகளும் மூடப்படும்போது பிணத்தின் மீது மண் படாத வகையில் வைக் கப்படும். பிணம் புதைக்கப்பட்ட புதைகுழியில் மேலே அந்த இடத்தைக் குறிக்கும் வகையில் கல்லோ நினைவுச் சின்னமோ அமைக்கும் பழக்கம் இல்லை. காடர்கள் இறந்தவர்கள் மேலே வானத்தில் உள்ள சொர்க்கத்தை அடைவதாக நம்புகின்றனர். ஆனால் அது எப்படிப்பட்ட இடம் என்ற சிந்தனை ஏதும் அவர்களுக்கு இல்லை. காடாகள் இறந்தவர்களைத் தின்று விடுகின்றனர் என்ற ஓர் எண்ணம் ஐரோப்பியரிடையே நிலவு கின்றது. இறந்த ஒரு காடனின் பிணத்தையோ புதைகுழி யையோ, இடுகாட்டையோ யாரும் காண நேராமையே இது போன்ற தப்பெண்ணம் பரவக் காரணம் எனலாம். இமந்த வர்களைத் தாங்கள் எப்படி அடக்கம் செய்கின்றார்கள் எனக் காடர்கள் கூறத் தயங்குவதால் இத்தகையதொரு கருத்தினை வேடிக்கையாக முதலில் கூறி வந்தவர்கள் பின்னர் அதனை ஒரளவு நம்பவும் தொடங்கினர். வசதி படைத்த காடர் குடும்பத்தவர்கள் எட்டாம் நாள் இறுதிச் சாவுச் சடங்குகளை நிகழ்த்துவதாகவும் வசதியற்ற ஏழைகள் அதற்குத் தேவையான பணத்தைத் தேட வேண்டியிருப்பதால் ஒராண்டுக்கு மேலாகவும் அதற்காகக் காத்திருப்பதாகவும் திரு வின்செண்ட் என்னிடம் கூறினார். சடங்கு நிகழ்த்தும் நாளன்று அதிகாலையில் கோழி கூவும் சமயம் பொலி சோறு எனப்படும் (பலிச்சோறு) அரிசி

யினை இறந்து போனவர் வாழ்ந்த குடிசையின் நடுவே இலையில் குவியலாகப் படைப்பர். பின்னர் துலக்கு சோறு எனப்படும் சமைத்த சோறு குடிசையின் நான்கு மூலைகளிலும் தெய்வத்தைத் திருப்திப்படுத்தவும் இறந்துபோனவரின் ஆன்மாவிற்கு உணவாகப் பயன்படவும் வைக்கப்படும். அந்தக் குடிசைக்குச் சற்று அப்பால் இறந்து போய்ப் புதைக்கப்பட்டுவிட்ட காடர்களுக்காகவெனக் காணல் சோறு எனப்படும் சோறு சமைக்கப்படும். அங்கு இறந்துபோனவரின் உறவினர்களும் நண்பர்களும் அவருடைய பல நல்ல குணங்களைப் படைத்துக் கூறி அழுது புலம்பத் தொடங்குவர். ஒரு மணி நேரம் சென்ற பின் அவர்கள் இறந்து போனவரின் குடிசையை அடைவர். அவர்களுள் வயதில் முதியவன் தெய்வங்களை எழுந்தருள வேண்டி வழிபாடு நிகழ்த்துவதோடு, குவிக்கப்பட்டுள்ள சோற்றுக்கும் வழிபாடு செய்வான். நான்கு மூலைகளிலும் உள்ளவற்றில் ஒவ்வொரு கை சோற்றினை எடுத்து ஆகாயத்தின் தெய்வங்களுக்காக வீசி வணங்குவான். கூடியுள்ளவர்களும் வணங்கிய பின் சமைக்கப்பட்ட சோறு, கறி, காய்கறி ஆகிய அனைத்து வகைகளையும் விடுபட்டுப் போகாது கேட்டு வாங்கி வயிறார உண்பர்.

ஆடி, ஆவணி மாதத்தில் குறிப்பிட்ட ஒரு திங்கட்கிழமையில் காடர்கள் நோம்பு எனப்படும் திருவிழாக் கொண்டாடுகின்றனர். அப்போது அவர்கள் எண்ணெய் தேய்த்துக் குளித்து விருந்துண்பர். தங்கள் முன்னோர்கள் காலத்திலிருந்து இந்த நோன்பு வழக்கமாக கொண்டாடப்படுகிறது எனக் கூறும் அவர்கள், அதற்கான அடிப்படைக் காரணத்தையோ, அதன் தோற்ற வரலாற்றினையோ அறியார். வனத்துறையினர் ஓணம் திருவிழாவின்போது காடர்களுக்கு அரிசி, துணிமணி, சட்டை, தலைப்பாகை, குல்லாய், கடுக்கன, புகையிலை, அபினி, உப்பு, எண்ணெய், தேங்காய் முதலான பொருள்களைப் பரிசாக அளிப்பர் எனத் திரு அனந்த கிருட்டிண அய்யர் குறித்துள்ளார்.

"காடர்கள் தங்களைப் பற்றி மற்றவர்கள் மதிப்பிடுவதைக் காட்டிலும் தாங்கள் அமைதியான நல்வாழ்வு வாழ்வதாகவே எண்ணி அதற்கேற்பதான பெருமித எண்ணங் கொண்டவர்



தலையில் சிப்புடன் காடர் சிறுமி



கூராக்கப்பட்ட பற்களோடு கூடிய காடர் சிறுவன்

களாக வாழ்ந்து வருகின்றனர். இரக்க குணமுடைய வனத்துறை அலுவலர் ஒருவர் காடர்களின் கீழ்மைப்படாத மன இயல்பை யும், நேர்மையான நடத்தையையும் பற்றி மிக உயர்வாகச் கூறி வந்தார். எதிர்பாராது ஒருமுறை அவர் கா்டர் இருவர் தன் பையினைத் துழாவிக் கத்திரிக்கோல், சீப்பு, முகம்பார்க்கும் கண்ணாடி ஆகியனவற்றைத் தூக்கி சென்றதைக் கண்டு அதிர்ச்சியுற்றார்'' எனக் கோயமுத்தூர் மாவட்டக் கையேட் டில் திரு பென்ஸ்லெ கூறியுள்ளார். திரு (தற்போது சர். எப். ஏ) நிக்கல்சன், ''காடர்கள் உயரங் குறைந்தவர்களாகவும், உட் குழிந்த மார்பு கொண்டவர்களாகவும் இருப்பதோடு பெரும் பாலான மலைவாழ் மக்களைப் போலக் கால்களைக் கோணி வைத்தே நடக்கின்றனர். இதனால் இவர்களுடைய தொடையின் ஆடுசதை நன்கு தடித்து வளர்ந்துள்ளதெனினும் கணுக்கால் சதை வளர்ச்சி அற்றதாக உள்ளது. இதன் காரணமாக இவர் கள் சமவெளியில் நெடுந்தொலைவு நடப்பதை விரும்புவதில்லை. சமவெளியில் பாரஞ் சுமந்து வர இவர்கள் மறுப்பதற்கு இந்த உடற்கூறு ஒரு காரணமாவதோடுகூடக் கர்னல் டக்ளஸ் ஹாமில்டன் கூறியுள்ளதைப் போல அடிப்படையாக அவர்கள் மனத்தில் குடிகொண்டுள்ள பிற காரணங்களும் இருக்கக் கூடும். காட்டை விட்டு வெளியே வரின் எளிதில் மருட்சிக்கு ஆளாகும் மனப்பாங்குடைய இனத்தவர்களாக இருப்பதே இவர்கள் சமவெளியில் வெளிப்பட்டு வாராமைக்குரிய அடிப் படைக் காரணமாகலாம். சமவெளியின் காற்று தங்கள் உட லுக்கு ஒத்துக் கொள்வதில்லையென்றும் இவர்கள் கூறுவர்'' எனக் கோவை மாவட்டக் கையேட்டில் எழுதியுள்ளார். ஸ்டு வர்ட் மலையிலிருந்து பதினைந்து மைல் தொலைவில் உள்ள ஆனைமலைக் கிராமம் வரை கூட இவர்கள் சென்றதில்லை என்பதே இவர்கள் சமவெளியில் அரிதாகப் பயணம் மேற் கொள்கின்றனர் என்பதனை மெய்ப்பிக்கும். கோயமுத்தூரி லிருந்து பாலக்காடு செல்லும் புகை வண்டியில் காடர் இனத்த வள் ஒருத்தியை நான் காண நேர்ந்தது. புதிய வகை அணி மணிகளால் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்த அவள் இறக்குமதி செய்யப்பட்ட இரவிக்கைத் துணியின் மோகத்திற் கும் ஆட்பட்டவளாகக் காணப்பட்டாள்.

காடர்களின் மார்புச் சுற்றளவும், உடல் வாகும் என்னை மிகவும் வியப்பில் ஆழ்த்தின. அவர்களுடைய உடல் திண்மை காரணமாக அந்த வட்டாரத்தினர் காடனும் காட்டுயானையும் ஒரே இயல்புடைய விலங்குகள் எனக் கூறுவதாகத் திரு கொன்னர் எழுதியுள்ளார்.*

காடர்களுடைய பழக்கங்களுள் குறிப்பிடத்தக்க புதுமை வாய்ந்தது அவர்கள் தங்கள், மேல், கீழ் வெட்டுப் பற்கள் அனைத்தையுமோ ஒரு சிலவற்றை மட்டுமோ செதுக்கிக் கூராக்கிக் கொள்ளும் பழக்கமாகும். அப்பற்களை இரம்ப முனை அமைப்புடையதாக வெட்டிக் கொள்ளும் பழக்கம் இவர்களிடம் இல்லை. காடர் சிறுவர் சிறுமியருக்கு, ஓர் உளி அல்லது புல்லரிவாளும் அரமும் கொண்டு பற்களை இதுபோலக் கூராக்கும் செயல்முறை வருமாறு:- இவ்வாறு பல் செதுக்கப்படும் சிறுமியின் தலையினை வேறொரு பெண்ணின் மடிமீது இருக்கும்படியாகப் படுக்கச் செய்து மற்றொருத்தி கூரான புல்லரிவாளினை எடுத்து முன்பற்கள் கூரான வடிவம் பெறும்வரை அதனால் பற்களைச் செதுக்குவாள். இதற்கு ஆட்படும் சிறுமி அப்போது வலிவால் துடித்தவளாகக் கூவியழுவாள். இச் செயல் முடிந்தபின் அதிர்ச்சியுள்ளவளாகத் தோற்றம்தரும் அச் சிறுமியின் முகம் சில மணி நேரத்தில் வீங்கத் தொடங்கி விடும். வீக்கமும் வலியும் ஓரிரு நாள்களுக்கு நீடிக்கும். அத்தோடு தலைவலியும் இருக்கும். பல்லினைச் செதுக்குவதால் அழகற்ற ஆணும் பெண்ணும் அழகுடையவர்களாக ஆகின்றனர் எனக் காடர்கள் கூறுகின்றனர். இவ்வாறு செதுக்கப்படாத பற்களையுடைய ஒருவன் பசுவினைப் போல உணவினைத் தின்கின்றான் எனபர். காடர்களும் திருவாங்கூரைச் சேர்ந்த மலைவேடர்களும் மேற்கொள்ளும் இப்பழக்கத்தை இவர்கள் அண்மையில் தாங்களாகவே எதிர்பாராது பயனுடையது என்று கண்டு மேற்கொண்டார்களா அல்லது நெடுங் காலத்திற்கு முன்பிருந்தே இவர்களுடைய மூதாதையர்கள்

---

* சென்னை இலக்கிய அறிவியல் இதழ், I, 1833. (Mr. Conner - Madras Journ. Lit. Science, 1. 1833.)

மேற்கொண்டு வந்துள்ள ஒன்றா எனத் துணிந்து கூற இயலவில்லை. தென்னிந்தியாவில் தொலைதூரத்திற்கு அப் பாற் பட்டவர்களாக வாழும் இவ்விரு இனத்தவர்களிடையே வழக்கத்தில் இருந்துவரும் இதனைப் பற்றி முடிந்த முடிவாக ஏதும் கூற இயலாது. எனினும் இவர்கள் தங்கள் மூதாதையர் களிடமிருந்து நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே வழிவழியாகப் பின்பற்றும் வழக்காகலாம் இது என்றே நான் கருது கின்றேன்.

மிகப் பெரிய காதுமடல் துளைகளையும், கறுத்த தலை முடியிடையே ஐந்து கவர் பற்களையுடைய சீப்பினையும் உடைய இனிமையாகப் பழகும் முதியவள் ஒருத்தி காட்டு ஓடையின் கரையில் உயர்ந்து வளர்ந்த மூங்கில் காடுகளுக்கிடையே உள்ள காடர்கள் குடியிருப்புக்கு நான் சென்றபோது காடரினப் பெண்களின் சார்பில் சற்றுப் பெருமையோடு ஆண்கள் வனத் துறையில் அரசுப் பணியாளர்களாக இருக்கப் பெண்கள் தங்கள் முயற்சியாலேயே அமைத்துக் கொண்ட குடியிருப்புக்களை எனக்குக் காட்டினாள். பெண்கள் ஓடைகளிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதோடு, விறகு சேகரித்தல், உண்ணத் தக்க கிழங்குகளை அகழ்ந்து எடுத்தல் போன்ற பெண்களுக்குரிய இல்லக் கடமைகளையும் ஆற்றுகின்றனர். ஆண்களும் பெண் களும் மூங்கில் கூடை முடைதல், கழுத்தணி முதலியன தயாரித தல் ஆகியவற்றில் கைதேர்ந்தவர்கள். சாலையில் ஒரு நாள் காலையில் நான் எதிர்ப்பட்ட காடன் ஒருவன் தன் குடியிருப்பினைச் சேர்ந்த பெண்கள் என்னை வந்து பார்ப்பதற் காகத் தங்களை அலங்காரம் செய்து கொண்டிருப்பதை ஒரு முககியமான செய்தியாகக் கருதி என்னிடம் கூறினான். இதனை அவர்கள் பிரிட்டனில் உள்ள நாகரிகம்மிக்க அரசவை யில் முதனமுதல் சென்று ஒருவன் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்கின்றதனைப் போனற ஒரு முக்கியமான நிகழ்ச் சியாகக் கருதினார்கள் போலும். இறுதியில அவர்கள் தங்கள் கணவர்களின் துணையின்றித் தனித்தே வந்தனர். என்னுடைய செயல்களை அவர்கள் தங்களுக்கும் தங்கள் குழந்தைகளுக்கும் நல்ல வேடிக்கை காட்டுவதற்காக ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சியாகக் கருதியவர்களாதல் வேண்டும். அவர்கள் தாராள

மாகத் தேங்காய் எண்ணெய் தடவி தலைமுடியை நன்றாகப் பிரித்துக் கட்டி மலர்களும் சூடிக் கொண்டிருந்தனர். நெற்றியில் மட்டமான வண்ணத்தால் அலங்காரக் கோடுகளிட்டுக் கொண்டிருந்ததோடு, மணமான பெண்கள் சிலர் அன்றாடம் வழக்கமாக அணியும் பழைய அழுக்குக் கந்தலாடைக்குப் பதிலாக இறக்குமதி செய்யப்பட்ட பூப்போட்ட புதுச் சேலை புனைந்திருந்தனர். முன்பே தன் அளவுகளை எடுத்துக் கொண்ட நல்ல தோற்றம் கொண்ட இளம்பெண் ஒருத்தி அளவெடுக்கும் போது எப்படி நின்றுகொள்ள வேண்டும் என்பதனைப் புதி தாக வந்த பெண்களுக்குச் சொல்லிக் கொடுக்கும் பணியில் ஈடுபட்டாள். தன் பணியினை விரைவில் நன்றாகப் புரிந்து கொண்ட அவள் அரசின் உதவியாளராகத் தனக்குத் தற் காலிகப் பணி உயர்வு கிடைத்ததில் வெளிப்படையாகவே பெருமையால் பூரித்தவளாகக் காணப்பட்டாள்.

முனைவர் கே. டி. பெரியுஸ் (**Dr. K. T. Preuss**) குளோபஸ் இதழில் *1899*-ஆம் ஆண்டில் வெளியிட்டுள்ள '**Die Zauberbilder Schriften der Negrito in Malaka**' என்ற தலைப்பிலான கட்டு ரையில் மலாக்காவில் உள்ள குள்ள நீகிரோ இனத்தவர்கள் அணிந்து கொள்ளும் மூங்கிலாலான சீபபுக்களில் உள்ள உருவ வரைவுகள் பற்றிக் கூறியுள்ளார். அவர் அவைகளைக் காடரினப் பெண்கள் அணியும் சீப்புக்களில் உள்ள உருவ வரைவுகளோடு ஒப்பிட்டுக் கூறியுள்ளது என் கருத்தை அக் கட்டுரையினிடத்து ஈர்த்தது. முனைவர் பெரியுஸ் அச் சீப்புக்களில் உள்ள உருவ வரைவுகள் நான் வேறோரிடத்தில் குறிப்பிட்டுள்ளது போல வெறும் வடிவ அமைப்புடைய உருவங்கள் அல்ல எனவும் அவை தொடர்ச்சியான மறைபொருளுடைய வடிவங்கள் எனவும் கூறியுள்ளார். சென்னை அருங்காட்சியகத்தில் தொகுத்து வைக்கப்பட்டுள்ள காடர் சீப்புக்கள் அவை வழக்கமான வெறும் வடிவ உருவங்களே என்பதனைத் தெளிவாக உணர்த்து கின்றன. செமங் இன மகளிர் அணியும் மூங்கில் சீப்புக்கள் நல்ல அதிர்ஷ்டம் தருவதற்காகவும் அவர்களிடையே பரவியுள்ள அல்லது அவாகள் மிகவும் அஞ்சும் நோய்களிலிருந்து அவர் களைக் காப்பதற்காகவும் அணியப்படுவதாகக் கூறப்படு

கிறது.* திரு வின்செண்ட் அவர்கள் தனக்குத் தெரிந்தவரை காடர் சீப்புக்களில் மறைபொருளான ஆற்றல் ஏதும் இல்லையெனவும், அவற்றின் மேல் உள்ள வரைவுகள் ஆழ்ந்த உட்பொருள் தொடர்பற்ற வெறும் வரைவுகளே எனவும் என்னிடம் கூறினார். காடர் குலத்து ஆடவன் ஒரு சீப்பினைச் செய்து தனக்கு மனைவியாக வர இருப்பவளுக்கு மணத்திற்கு முன்போ மணத்தின் முடிவிலோ பரிசாக அளிக்க வேண்டும். அழகான சீப்பினைச் செய்து பரிசளித்த பெருமை கிடைக்க வேண்டும் என்ற ஆர்வத்தால் இளைஞர்கள் ஒருவரோடு ஒருவர் போட்டி மனப்பான்மையுடன் செயற்படுவர். சிலபோது அவர்கள் சீப்பின்மீது விசித்திரமான உருவங்களை அமைப்பர். இதற்குச் சான்றாகத் திரு வின்செண்ட் ஒரு சீப்பின் மீது கடிகாரத்தின் முகப்புத் தோற்றம் செதுக்கப்பட்டிருந்ததைப் பார்த்ததைச் சொல்லலாம்.

நெற்றியின் மீது வளைந்து தொங்கும் குறுமயிரோடும், மார்பினை மூடிய துணியோடும், பின்னப்பட்ட கோரைப்புல் அல்லது கண்ணாடிப் பாசி மணிகளாலான கழுத்துச் சங்கிலியோடும் காட்சி தரும் காடர் இளைஞர்களைச் சிறுமியரிலிருந்து வேறுபடுத்தி அறிவது சற்று கடினமானதே. நானே பலமுறை இருபாலரிடையேயும் வேறுபாடு கண்டு உணர இயலாதவனாகத் தவறு புரிந்துள்ளேன். குழந்தைகள் தங்கள் கழுத்தில் ஆமையின் உலர்ந்த கால்வடிவினை ஒத்ததான தாயத்தினை அணிந்திருப்பர். மலையில் ஓடும் ஓடைகளில் வாழ்வதாகக் கருதப்படும் புராண காலத்து நீர் யானையின் தாக்குதலிலிருந்து குழந்தைகளைக் காக்க இலிங்க உருவினை ஒத்த முதலையின் பல்லினையோ மரத்தால் செதுக்கப்பட்ட புலி நகத்தினை ஒத்த அணியினையோ அணிவிப்பர். ஒரு குழந்தை காட்டுக் குண்டாமணி (*Coix Lachryma-Jobi*) விதைகளாலான கழுத்தணியினை அணிந்து கொண்டிருப்பதை நான் கண்டேன்.

---

* டபிள்யூ.டபிள்யூ.ஸ்கியாட், சி.ஓ.பிலக்டன்–மலேசியத் தீபகற்பம் சார்ந்த புறச்சமய இனத்தவர். (W.W.Skeat and C.O.Blagden-Pagan Races of Malay Peninsula, 1906.)

ஆண்கள் தங்கள் காது மடல்களில் பித்தளையாலான அணிகளை அணிவதோடு மூக்கினைக் குத்தி அத்துளையில் மரக்குச்சியிஷனயும் அணிகின்றனர். பெண்களின் காது மடல்களில் பெரிய துளைகளிட்டுஅவற்றில் பனையோலையாலான சுருள்களையோ கனமான மரத்தால் செதுக்கப்பட்ட வட்டுக்களையோ அணிவர். காதணிகள், பித்தளை அல்லது உருக்காலான வளையல்கள், மோதிரங்கள், பாசிமணி மாலைகள் ஆகியவற்றையும் பெண்கள் அணிவர்.

"காடர், கொச்சி அரசரிடம் ஆழமான பற்றும் பாசமும் வைத்துள்ளனர். அரசர் காட்டுப் பக்கமாகப் பயணம் மேற்கொள்ளும்போது அவருடன் செல்லும் இவர்கள் அவரைக் கட்டில் அல்லது பல்லக்கில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் சுமந்து செல்வதோடு அவருடைய சாமான்களையும் சுமந்து செல்வர். சொல்லப் போனால் அவருக்காக இவர்கள் எல்லாப் பணிகளையும் செய்ய முன்வருவார்கள் எனலாம். மாமன்னரும் அதே போல இவர்களிடத்து மிகுநத பரிவுடையவராக இவர்களுக்கு உணவு, ஆடை அணிகள், சீப்பு, கண்ணாடி போன்ற பொருள்களை வழங்குவார்'' எனத் திரு அனந்த கிருட்டிண அய்யர் குறித்துள்ளார்.

காடர்கள் மாட்டுக்கறி தின்னும் மலசர்களோடு உடன் உண்பதில்லை. மாட்டுத் தோலால் செய்த காலணிகளையும் மனத்தாங்கலோடுதான் சுமந்து வர உடன்படுவர்.

இவர்களின் சராசரி உயரம் 157.7 செ.மீ., தலையின் நீள அகலங்களுக்கிடையேயான விகிதம் 72,9; மூக்கின் நீள அகல விகிதம் 89.0.

### கடலை - Kadle

கடலை, கல்ல எனக் கடலை பருப்பைக் குறிக்கும் இது குருபர், குர்ணிகள் ஆகிய சாதிகளுக்கு உரிய கோத்திரம் அல்லது குலப் பெயர்களாகப் பதியப்பட்டுள்ளது.

**காடு-Kādu**

காடு என்ற பொருளிலான இது நாட்டுக்கு எதிர்ச் சொல்லாக இங்கே வழங்குகின்றது. கோல்லர், இருளர் ,குறவர், குறும்பர், தாட்டியர் ஆகிய சாதிகளின் உட்பிரிவாக இச்சாதிப் பெயர்களோடு முன் இணைப்பாக வழங்கும் சொல்லாக இது பதியப்பட்டுள்ளது. காடு குர்ணிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலப் பெயராகவும் இது உள்ளது. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் காடு கொங்கணி என்பது தெய்வக் கொங்கணி அல்லது தூய கொங்கணிக்கு எதிரானதாகத் தவறான ஒழுக்கநெறி வழிப் பிறந்த கொங்கணிகளைக் குறிக்கும் சொல்லாகவும் பதியப்பட்டுள்ளது. காட்டு மராத் தியர் என்பது குருவிக்காரருக்குரிய மற்றுமொரு பெயராகும். மலபாரைச் சேர்ந்த வயநாட்டில் காட்டுக் குறும்பர்கள் காட்டு நாய்க்கன்கள் என அழைக்கப்படுகின்றனர்.

**காது குத்துகிறவர் – Kādukuttukiravar**

பல சாதியாருக்கும் காதுகுத்தும் சடங்கின்போது துளை யிடும் பணியினைச் செய்கின்ற குறவர்களைக் குறிப்பதற்கான மற்றுமொரு பெயராகும் இது.

**காட்டுப்பட்டன் – Kadupattan**

மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் காடு பட்டர்கள் காடு கிராமத்தைச் சேர்ந்த பட்டர்கள் எனவும், புத்த சமயத்தை மேற்கொள்வதை ஆதரித்த காரணத்தால் இவர்கள் தங்கள் தகுதியில் தாழ்ச்சியுற்றனர் எனவும் வழக்கு வரலாறு கூறுவ தாகக் குறிக்கப்பட்டுள்ளது. திரு எச். எ. ஸ்டுவர்ட் அவர்கள் 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "இச் சாதியைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலோர் இன்று பல்லக்கு சுமப்பவர்களாகவும் உப்பு, எண்ணெய் முதலியவற்றைத் தூக்கிச் செல்பவர்களாகவும் உள்ளனர். இவர்களுள் கல்வி அறிவு பெற் றவர்கள் ஆசிரியத் தொழிலை மேற்கொண்டிருப்பதால் எழுத் தச்சன் என வழங்கப்படுகின்றனர். ஒரே குடும்பத்தில் காட்டுப் பட்டன், எழுத்தச்சன் ஆகிய பட்டங்களைத் தரித்த உறுப்பி

னர்கள் இருக்கக் காணலாம். கொச்சி மாநிலத்தில் காட்டுப் பட்டர்கள் உப்புக் காய்ச்சும் தொழிலாளராக உள்ளனர். ஆங்கிலேயர் ஆட்சிக்கு உட்பட்ட மலபார் மாவட்டத்தில் சில தலைமுறைகளாக இவர்கள் உப்புக் காய்ச்சும் தொழிலில் ஈடுபடுவதில்லை எனத் தெரிகிறது. தென் மலபாரில் நெடுங் காலத்திற்கு முன்பே உப்புக் காய்ச்சும் தொழில் நிறுத்தப்பட்டு விட்டது இதற்குக் காரணமாகலாம். அதனால் இவர்கள் வேறு தொழில்களை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. உப்பினைச் சுமந்து திரிவது அத்தொழில்களுள் ஒன்று. காட்டுப்பட்டர்கள் தங்கள் பழக்க வழக்கங்களில் நாயர்களையே பெரிதும் ஒத்த வர்களாக உள்ளனர். எனினும் இவர்கள் மக்கள் தாய உரிமை முறையை மேற்கொள்கின்றனர்'' எனக் கூறியுள்ளார். மலபார் மாவட்டக் கையேட்டில் திரு லோகன் காட்டுப்பட்டன்கள் பற்றிக் கூறியுள்ளதாவது:- ''நாயர்களிலிருந்து வேறுபாடு கண் டறிய முடியாததான ஒரு சாதியினர் இவர்கள். நாயர்களினும் மாறுபட்டதான மக்கள் வழித் தாய உரிமையை மேற்கொள்ளும் பழக்கம் உடைய இவர்கள் சாதியில், தந்தையின் சொத்தினை அடையும் உரிமை மகனுக்கு உரியதாக உள்ளதேயன்றி மகளுக்கு உரியதாக இல்லை. பெண்கள் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்படுகின்றனர். ஒரு பெண்ணுக்கு வருங்காலத்தில் கணவனாக இருக்கப்போகின்றவனே அவளுக்குரிய மணமகனாக இருப்பான். (தாலிகட்டுக் கல்யாணத்தில் மாறுபட்டது இவர்கள் மணமுறை) அம் மணமகன் இணங்கர்கள் வாயிலாகப் பெண் ணுக்குத் தரப்பட வேண்டிய பரிசப் பணம் முதலியவற்றைப் பேசி முடிப்பான். மணமகள் கழுத்தில் மணமகன் உடன்பிறந் தவளோ, அவன் உறவுக்காரர்களின் ஒருத்தியோ தாலியினை அணிவிப்பர். இச் சாதியாரின் சாவுச் சடங்கில் படைப்பதற் கான பலிச் சோறு சமைப்பது உட்பட அதனை முன்னின்று நடத்தி வைப்பவர்கள் நாவிதர்களே. ஆண் சந்ததியில்லாத கைம்பெண் கணவன் இறந்த பன்னிரண்டாம் நாள் அவளுடைய பிறந்த வீட்டுக்கு அழைத்துச் செல்லப்படுவாள். அவளுக்குப் பெண் குழந்தைகள் இருப்பினும் இப்பழக்கம் மேற்கொள்ளப் படுகின்றது. இதற்கும் மாறாக அவள் ஆண் குழந்தைகளைப் பெற்றிருப்பாளாகில் கணவன் வீட்டோடு தங்கி வாழும் உரிமை

பெறுவதோடு கூட அவன் சொத்துக்களுக்கும் தன் மக்களோடு கூட்டாக உரிமையுடையவளும் ஆகின்றாள்."

**ககர் - Kahar**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் ககர்கள் வங்காளத்தைச் சேர்ந்த படகோட்டிகள் எனவும் மீனவர் எனவும் பதியப்பட்டுள்ளனர். மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் ககர் என்ற பெயர் இந்துஸ்தானியில் கொல்லரைக் குறிக்கும் எனவும் அவ்வாறு பதியப்பட்டுள்ளவர் பம்பாய் மாநிலத்திலிருந்து வந்து குடியேறியவர்களாவர் எனவும் குறிக்கப்பட்டுள்ளது.

**கைகாட்டி - Kaikātti**

கைகளால் சைகை காட்டுபவர் எனப் பொருள்படும் இது கணக்கன் சாதியின் ஓர் உட்பிரிவு ஆகும். இப் பிரிவினர் இப் பெயர் பெறக் காரணம் மருமகள் மாமியாரிடம் பேசக் கூடாது எனவும் சைகைகளாலேயே தொடர்பு கொள்ள வேண்டும் எனவும் கட்டுப்பாடு இருப்பதுதான் என்று வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது.

**கைகோளர் - Kaikōlar**

கைகோளர் தென் மாவட்டங்களில் பெரும்பான்மையராகக் காணப்படும் தமிழ் பேசும் நெசவாளர்கள். இவர்கள் தெலுங்கு பேசப்படும் பகுதிகளிலும் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையில் வாழ்கின்றனர். அங்கு இவர்கள் தெலுங்கினையே தங்கள் மொழியாக ஏற்றுக்கொண்டுவிட்டனர். மதுரையை ஆண்ட நாயக்க மன்னர்கள் கைகோளர்களின் தொழில் திறமையில் திருப்தியுறாதவர்களாக வடக்கே இருந்து நெசவாளர்களை (பட்டு நூல்காரரை) வரவழைத்தனர் எனவும், அவ்வாறு வரவழைக்கப்பட்டவர்களின் சந்ததியினர் தமிழ்நாட்டு நெசவாளர்களைக் காட்டிலும் எண்ணிக்கையில் மிகுந்தவர்களாக ஆகிவிட்டனர் எனவும் ஒரு வழக்கு வரலாறு நிலவி வருகின்றது. புராண வீரர்களுள் ஒருவரான வீரபாகு என்பவரின் வட

மொழிப் பெயரின் தமிழ் ஆக்கமே கைகோளன். அந்த வீரபா குவின் மரபில் வந்தவர்களாகக் கைகோளரும், பறையர்களில் ஒரு பிரிவினரும் கூறிக் கொள்கின்றனர். கைகோளர் செங்குந்தர் (சிவப்புக் குத்துவாளுடையவர்) என வழங்குவது தொடர்பாகப் பின்வரும் வழக்கு வரலாறு கூறப்படுகிறது:- "பூவுலகில் வாழ்ந்த மக்கள் சில அசுரர்களின் தொல்லையிலிருந்து தங்களைக் காத்தருளும்படி சிவபெருமானிடம் முறையிட்டனர். அந்த அசுரர்கள் மீது சினங்கொண்ட சிவன் தன் கண்களி லிருந்து ஆறு தீப்பொறிகளை வெளிப்படுத்தினார். அவரு டைய மனைவியான பார்வதி இதனைக் கண்டு அஞ்சித் தன் அந்தப்புரத்தினை அடைந்தாள். அவ்வாறு அஞ்சி ஓடும்போது அவள் காற்சிலம்புகளிலிருந்து ஒன்பது மணிகள் சிதறித் தெறித்தன. சிவன் அந்த மணிகள் ஒவ்வொன் றையும் ஒவ்வொரு பெண்ணாக மாற்றினார். அவர்கள் அனை வரும் நன்கு வளர்ந்த மீசையும் கையில் குத்துவாளையும் தாங் கியவர்களாகப் பிறந்த ஒவ்வொரு குழந்தையைப் பெற்றெடுத்த னர். சுப்ரமணியர் தலைமையில் இந்த ஒன்பது வீரர்களும் படை நடத்திச் சென்று அசுரர் கூட்டங்களை அழித்தனர். இந்த வீரர் களுள் ஒருவரான வீரபாகுவின் வழிவந்தவர்களே கைகோளர்கள் எனக் கூறப்படுகிறது. அசுரர்களை மாய்த்த இந்த வீரர்களைப் பார்த்துச் சிவன் அவர்களை இசைவாணர்களாகும்படியும் உயிர் களுக்கு எத்தகைய தீங்கும் இழைக்காததான தொழிலை மேற் கொள்ளும்படியும் அறிவுறுத்தினார். நெசவு அத்தகையதொரு தொழிலாகையால் இவர்கள் அதனை மேற்கொண்டனர்." இவ் வரலாற்றின் மற்றொரு வழக்கு வருமாறு:- சிவன் பார்வதியிடம் தான் கண்களை மூடிக் கொண்டால் உலகம் இருளால் விழுங் கப்பட்டுவிடும் எனக் கூறினார். இதனைக் கேட்ட பார்வதி அது உண்மையா எனக் கண்டறியும் ஆசையால் தன் கரங்களால் தன் கணவனின் கண்களை மூடினாள். அதனால் உலகைக் கவிந்த இருளால் அச்சமுற்ற பார்வதி தன் அந்தப்புரம் நோக்கி ஓடினாள. அவ்வாறு ஓடும்போது வழியில் அவள் சிலம்புகளி லிருந்து ஒன்பது மணிகள் சிதறின. அவை ஒன்பது அழகிய கன்னியராக உருக்கொள்ள அவர்களின் அழகில் மயங்கிய சிவன் அவர்களை அணைத்தார். அவர்கள் கருவுற்றிருப்பதை அறிந்த

பார்வதி அவர்கள் தங்கள் கருவில் வளரும் குழந்தைகளைப் பெற்றெடுக்கமுடியாது எனச் சபித்தாள். பத்மாசுரன் உலகில் மக்களை அல்லற்படுத்த, உலகோர் சிவனிடம் வந்து உதவுமாறு வேண்டினர். சிவன் சுப்ரமணியரிடம் அந்த அசுரனைக் கொன்று வருமாறு பணித்தார். பார்வதி சுப்ரமணியரைத் தனியே அனுப்ப வேண்டாம் எனக் கேட்டுக் கொண்டார். சிவன் பார்வதியை அவள் ஒன்பது மகளிருக்கு இட்ட சாபத்தைத் தவிர்க்கும்படி வேண்ட அவளும் அவ்வாறே சாபம் தவிர்த்தாள். ஒன்பது மகளிரும் ஒன்பது வீரரைப் பெற்றெடுத்தனர். அவர்கள் கையில் சிவந்த வாளினைத் தாங்கியபடி சுப்ரமணியரோடு சென்று அந்த அசுரனைத் தேடிக் கொன்றனர். கைகோள் என்ற சொல் சுப்ரமணியர் கையில் தாங்கியிருக்கும் இரத்ன வேல் அல்லது குத்துவாளைக் குறிக்கும் என்பர். சுப்ரமணியரின் சூரசம்கார விழா நாளன்று கைகோளர் அந்த ஒன்பது வீரர் களைக் குறிப்பிடும் வகையில் வீரருக்கு உரிய ஆடை புனைந்து ஊர்வலத்தோடு செல்வர்.

கைகோளன் என்ற பெயர் கை என்ற சொல்லும் ஓடக் கோல் என்ற சொல்லும் இணைந்து வந்தது என்பர். கைகோளர் தன் தறியில் பல பகுதிகளும் பல தேவர்களையும், முனிவர் களையும் குறிப்பதாகக் கருதுகின்றனர். நெய்யும் நூலானது முதன்முதல் விட்டுணுவின் நாபிக் கமலத்திலிருந்து வெளிப்படும் தாமரையின் தண்டிலிருந்து கிடைத்தது எனக் கூறுவர். பல தேவர்கள் பாவு நூலாக அமைந்துள்ளனர். நாரதர் ஊடிழை யாக உள்ளார். வேதமுனியே மிதிகட்டை. பிரமன் தன்னையே படமரமாக ஆக்கிக் கொண்டான். ஆதிசேடேன் முக்கியக் கயிறாக உள்ளான்.

சிலவிடங்களில் கைகோளரின் உட்பிரிவினராகப் பின்வரும் சாதிகள் உள்ளன:- சோழியன், ராட்டு சிறுதாலி, பெருந்தாலி, சீர்பாதம், சேவகவிருத்தி, சிறுதாலி, பெருந்தாலிப் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் முறையே சிறிய பெரிய தாலிகளை அணி கின்றனர்.

கைகோளர்களில் பெரும்பாலோர் சைவர்களே, சிலர் இலிங் கம் தரிக்கின்றனர். சிலர் வைணவர்களாகவும் உள்ளனர்.

பரம்பரையாகச் சாதித் தலைவனாக இருப்பவன் பெரிய தனக்காரன் அல்லது பட்டக்காரன் என அழைக்கப்படுகிறான். அவன் செங்கிலி அல்லது கிராமணி, ஊராள் எனப்படும் இரு உதவியாளர்களை அமர்த்திக் கொள்ளும் உரிமையுடையவன். குடியிருப்பு அளவில் பெரியதாக இருக்குமானால் பட்டக்காரன் ஒன்பது உதவியாளர்கள் வரை அமர்த்திக் கொள்ளலாம்.

“கைகோளர் காஞ்சிவரத்தில் வாழும் சாதித் தலைவனான மகாநாட்டானின் தலைமையை ஒப்புக் கொள்கின்றனர். அவன் இவர்கள் வாழும் ஊர்களுக்குப் பயணம் வரும்போது அன்பளிப்புக்களைப் பெற்றுக் கொள்வதோடு சாதிக்குள்ளான பூசல்களையும் தீர்த்து வைப்பான். அவன் கூறும் தீர்ப்புக்களை முணுமுணுக்காமல் ஏற்றுக் கொள்ளாமல் முரண்டுபிடிக்கும் நெசவாளர்கள் ஓர் அரிய சடங்கினுக்கான செலவுகளை ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கும். அச் சடங்கில் மூங்கில் கம்பம் நடப்படும். மகாநாட்டான் அதன் உச்சியில் ஏறி நின்று தன் தீர்ப்பினைக் கூறுவான். அதனை ஏற்றுக்கொண்டே ஆக வேண்டியது கட்டாயமாகும். ஏற்க மறுப்பவர்கள் சாதி விலக்கம் செய்யப்படுவர்” என வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் திரு எச். எ. ஸ்டுவர்ட் கூறுகின்றார். காஞ்சிவரத்தில் நான் சேகரித்த தகவல்களின்படி நட்டுக்கட்டாத நாயன்மார் எனப் படும் இரவலர்கள கைகோளரைச் சார்ந்தவர்களாக உள்ளனர் எனத் தெரிய வருகின்றது. இப்பெயர் நடாத நாயன்மார் எனப் பொருள்படும். இதன் அடிப்படை யாதெனில் இவர்கள் மேலே ஏறி நிகழ்ச்சிகள் நடத்தும் மூங்கில் கம்பத்தை குழி தோண்டிப் பூமியில் நடாமல் ஒரு கோயில் கோபுரத்தோடு சேர்த்துக் கட்டுவர். ஊர் ஊராகச் சென்றபடி இருக்கும் இவர்கள் எங்கேனும் சாதியாரிடையே பூசல் தொடர்பான வழக்குகள் இருக்குமானால் சாதிச் சபையினைக் கூட்டுவர். அதில் இவர்கள் காஞ்சிவரத்தில் இருக்கும் கைகோளர் தலைவர்கள் மகாநாட்டானின் பிரதிநிதிகளாக இடம்பெறுவர். விவகாரம் மிகவும் சிக்கலுடையதாக இருந்தால் நட்டுக்கட்டாத நாயன்மார் ஊரில் உள்ள எல்லாக் கைகோளர் வீடுகளுக்கும் சென்று தறியில் இருக்கும் துணியில் காவிக் கல்லால் சாதித் தலைவர்

ஆணைப்படி செய்யப்படுகிறது என்ற கருத்துப்பட, 'ஆண்டவர் ஆணை' எனக் கூறி ஓர் அடையாளம் இட்டு வருவான். இதன் பின் அந்த விவகாரத்தைத் தீர்ப்பதற்காக எனக் குறிப்பிட்ட நாளில் கூடி அந்த விவகாரத்தைத் தீர்த்த பின்னரே கைகோளர் நெசவினைத் தொடர்ந்து செய்யலாம். நட்டுக்கட்டாத நாயன் மார் குறைந்தது எழுபத்திரண்டு அடியுள்ள எழுபத்திரண்டு கணுக்கள் கொண்ட மூங்கிலினைக் கோபுரம் ஒன்றில் பிணைத்து வித்தை காட்டுவர். அந்த மூங்கில் உள்ள எழுபத்திரண்டு கணுக்கள் கைகோளர் சாதி எழுபத்திரண்டு நாடுகளாக உட்பிரிவுகளைக் கொண்டது என்பதனைக் குறிக்கும். காமாட்சி அம்மனை வணங்கியபின் நட்டுக்கட்டாத நாயன்மார் அந்தக் கம்பத்தில் ஏறிப் பலவகை வித்தைகளைப் புரிவர். இறுதியாக வித்தைகாட்டுபவர்களில் முக்கியமானவர் ஒரு தட்டில் மூங்கில் மீது குழந்தையை இருக்கச் செய்து அதனைச் சாயாது தாங்கு வர். இறுதியில் மூங்கிலைச் சாய்த்துவிட்டுக் கீழே விழும் குழந் தையைத் தாங்குவர். இந்த வித்தையின் அடிப்படையாகப் பின்வரும் வரலாறு கூறப்படுகிறது. அசுரனான சூரன், மக்க ளையும் தேவர்களையும் ஒருங்கே வருத்தினான். சுப்ரமணியரும் வீரபாகுவும் அவனுக்கு அவ்வாறு தொல்லை தருவதை நிறுத்தும் படி அறிவுரை கூறினர். அதனை அவன் ஏற்றுக் கொள்ளாத தால் அவர்களிடையே போர் மூண்டது. அசுரனான சூரன் தன்னுடைய மகன் வச்சரபாகுவை எதிரிகளோடு போரிடுமாறு அனுப்பினான். விரபாகு போரில் அவனைக் கொன்று தன் உடம்பின் பல பகுதிகளையும் பின்வருமாறு வெற்றிக் கம்ப மாகக் காட்டினார். முதுகுத் தண்டினைக் கொடிக் கம்பமாக வும், அதனைச் சுற்றி மற்ற எலும்புகளை அமைத்துக் குடல் நாளங்களால் அவற்றை இறுகப் பிணைத்து வைத்தார். தொடர்புபடுத்தும் இழைமங்கள் அக்கம்பத்தைத் தாங்கும் கயிறுகளாக அமைக்கப்பட்டன. மண்டையோடு வெற்றியை ஒலிக்கும் மணியாக ஆக்கப்பட்டதோடு உடலின் தோல் கொடியாக ஏற்றப்பட்டது. வீரபாகுவின் திரிசூலம் அந்தக் கம்பத்தின் உச்சியில் பொருத்தப்பட்டபின், அதன்மீது ஏறி நின்று வீரபாகு தன் வெற்றியை உலகுக்கு அறிவித்தார். நட்டுக்கட்டாத நாயன்மார் வீரபாகுவின் மரபில் வந்தவர்கள்

எனத் தங்களைக் கூறிக் கொள்கின்றனர். இவர்கள் தலைமையிடம் காஞ்சிவரத்தில் உள்ளது. கைகோளர்களைவிடச் சற்றுத் தாழ்ந்தவர்களாகக் கருதப்படும் இவர்களோடு கைகோளர் மண உறவு வைத்துக் கொள்வதில்லை. கைகோளர் இவர்களுக்குத் தறி ஒன்றுக்கு ஆண்டுக்குக் குறைந்தது நான்கு அணா பிச்சையாகத் தரவேண்டும். அண்மையில் புதிதாகத் தோன்றியுள்ளதாகக் கூறப்படும் பொன்னம்பலத்தார் என்ற பிரிவு இரவலர்கள், கைகோளர் சாதியோடு இணைந்த உண்மையான இரவலர்கள் எனக் கூறிக் கொண்டு ஊர் ஊராக அவர்களிடம் சென்று இரந்து வருகின்றனர். கைகோளர் சிலர், தங்கள் சாதியைச் சேர்ந்த இரவலருக்கு உரிய பெயர் ஒண்டிப் புலி எனக் கூறுகின்றனர். ஒண்டிப் புலி என்ற பெயர் பள்ளிகள் சாதியோடு இணைந்த நோக்கன்களுக்கு உரியதாகும்.

முன்பு குறிப்பிட்டதைப்போல கைகோளர் சாதி மேல் நாட்டைச் சேர்ந்த நாற்பத்தி நான்கும், கீழ்நாட்டைச் சேர்ந்த இருபத்தி எட்டுமாக எழுபத்திரண்டு நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றுள் எழுபத்தியொரு நாடுகளைச் சேர்ந்த பிரிவினர் தங்களுக்குள் மண உறவு கொள்கின்றனர். புகழ் வாய்ந்த தமிழ்ப் புலவரான ஒட்டக்கூத்தர் கைகோளர் சாதியைச் சேர்ந்தவர் எனக் கூறப்படுகிறது. இவர் தமது சாதியைத் தவிர மற்ற எல்லாச் சாதிகளையும் புகழ்ந்து பாடியுள்ளார். இதனால் சினமுற்ற கைகோளர் தங்கள் சாதியினையும் புகழ்ந்து பாடுமாறு வற்புறுத்தினர். ஆயிரத்தெட்டுத் தலைகளைப் பலியாக அச்சாதியார் தனக்குத் தந்தால், தான் அவ்வாறு பாடுவதாக ஒப்புக் கொண்டார். எழுபத்தியொரு நாட்டைச் சேர்ந்தவர்கள் தங்கள் தலைப் பிள்ளைகளைப் பலிக்காக அனுப்பினர். திருமருதல் என்ற ஒரு நாடு மட்டும் அவ்வாறு அனுப்ப மறுத்துவிட்டது. இதனால் அவர்கள் சாதியிலிருந்து தனித்து ஒதுங்கும்படியாயிற்று. எல்லா நாடுகளும் நான்கு திசை நாடுகளின் கட்டுப்பாட்டின் கீழ் இருப்பனவாம். நான்கு திசை நாடுகள் காஞ்சிவரத்திலுள்ள மகாநாட்டின் கட்டுப்பாட்டின் கீழ் இருப்பனவாம். நான்கு திசை நாடுகளாவன:-

1. காமாட்சியம்மன் நந்தியைக் காவலாக வைத்திருப்ப

தாகச் சொல்லப்படும் காஞ்சிவரத்திற்கு கிழக்கே உள்ள சிவபுரம் (வாலாஜாபாத்).

2. தொண்டி விநாயகர் எழுந்தருளியுள்ள தொண்டிபுரம்.

3. மேற்குத் திசையில் உள்ளதான சுப்ரமணியர் காவல் காக்கும் விரிஞ்சிபுரம்.

4. பைரவர் காவல் காக்கும் தெற்கே உள்ள சோளிங்க புரம்.

எழுபத்திரண்டு நாடுகளும் பேரூர், சிற்றூர்களைத் தம் மகத்தே கொண்ட கிளைக் கிராமங்களாகப் பல உட்பிரிவு களாக்கப்பட்டுள்ளன. செங்குந்தர் சாதித் தொடர்புடையதான தமிழ் நூல்களுள் காஞ்சிவரம் மகா நாடு எனக் கூறப்பட்டுள்ள தோடு அவ்விடத்தைச் சேர்ந்தவர்கள் தொள்ளாயிரவர் எனவும், அவர்கள் மற்ற இடங்களைச் சேர்ந்த கைகோளர் களால் மரியாதை காட்டப்படுவதற்குரியவர்கள் எனவும் கூறப்பட்டுள்ளது. மகா நாட்டுப்பிரிவைச் சேர்ந்த கைகோளர் களுக்குரிய மற்றுமொரு பெயர் ஆண்டவர் எனத் தெரிகிறது. எனினும் நடைமுறையில் இப்பெயர் மகா நாட்டினைச் சேர்ந்த சாதித் தலைவனுக்கும் அவன் குடும்பத் தவர்களுக்குமே உரியதாக உள்ளது. ஊரவைக் கூட்டங்களில் இவர்கள் தங்கள் முதுகினைத் தூண்களோடு சாய்த்துக் கொண்டு உட்காரும் உரிமை பெற்றவர்கள். இதனால் திண்டு சார்ந்தான் என்ற பட்டப்பெயரும் இவர்களுக்கு உரியதாக வழங்கி வருகின்றது. தற்போது காஞ்சிவரத்தில் இரண்டு பிரிவினராகக் கைகோளர்கள் வாழ்கின்றனர். அவற்றுள் ஒன்று அய்யம்பேட்டையிலும், மற்றது பிள்ளைபாளையத்திலும் உள்ளது. முன்னவர் அய்யம்பேட்டைதான் மகா நாடு எனக் கூறுவதோடு பிள்ளைபாளையத்தை ஒப்புக் கொள்ள மறுப்பர். பிள்ளைபாளையமே காஞ்சிவரத்தின் நடுவிடத்தில் மகா நாடாக விளங்குகின்றது. இவற்றிடையே ஏற்பட்ட வழக்கு 1904 வேலூர் வழக்கு மன்றத்திற்குச் செல்ல அங்கு அய்யம்பேட்டை மகா நாடு எனக் கூறிக் கொள்ள எந்த உரிமையும் இல்லை எனத் தீர்ப்பு வழங்கப்பட்டது.

கைகோ்ளர் குடும்பங்கள் பலவும் தற்போது விவசாயம், வணிகம் ஆகியவற்றில் நாட்டமுடையனவாகத் தங்கள் பரம் பரைத் தொழிலான நெசவினைக் கைவிட்டுவிட்டன. இச்சாதி யைச் சேர்ந்த ஏழைகள் வண்டி ஓட்டியும், கூலி வேலை பார்த் தும் பிழைப்பு நடத்துகின்றனர். கோயமுத்தூரில் பரம்பரை நெசவாளர் சிலர் வண்டியோட்டுபவர்களாகவும், வண்டி ஓட்டு பவர்கள் சிலர் உள்ளூர் சிறையில் கட்டாயத்தின் பேரில் நெச வாளர்களாகவும் பணிபுரிகின்றனர்.

கைகோளர் குடும்பம் ஒவ்வொன்றும் குறைந்தது ஒரு சிறு மியைக் கோயிற் பணிக்குரியவளாக ஆக்கிவிடுதல் வேண்டும். இவ்வாறு விடப்படும் அவளோ, அவளுக்குப் பிறக்கும் அல்லது அவள் தத்து எடுத்துக் கொள்ளும் பெண்களின் வழித் தோன் றல்களோ உயிரோடு வாழ்ந்து வரும் காலம்வரை அந்தக் குடும்பத்திலிருந்து வேறொருத்தியை கோயிலுக்காகத் தத்தம் கொடுக்க வேண்டியதில்லை என்பது விதியாக உள்ளது எனத் தெரிய வருகின்றது. அந்தக் கால்வழி எப்பொழுது அற்றுப் போகின்றதோ உடனே வேறொருத்தியைத் தத்துக் கொடுத் தாக வேண்டும். கைகோளர் அனைவரும் தங்களுக்குத் தேவ தாசிச் சாதியோடு எத்தகைய தொடர்பும் இல்லை எனக் கூறு கின்றனர். என்றாலும் கைகோளர் திருவிழாச் சமயங்களில் தாசிகளின் இல்லங்களில் தாராளமாக உணவு உண்கின்றனர். அத்துடன் செல்வர்களான கைகோளரோடு உறவுடையவர் களாக நடைமுறையில் தாசித் தொழிலை மேற்கொண்டுள்ள வர்களையும் ஆங்காங்கே காணலாம்.

கைகோளர் சிறுமிகள் கோயிலுக்கு முறைப்படி தாசிகளாக நேர்ந்து விடப்படுவர். அல்லது சாதித் தலைவன் அவர்களுக்குத் தாலி எனப்படும் நாட்டுப் பொட்டினைக் கட்டி அவர்களைத் தாசிகளாக்குவான். ஒரு பெண் பூப்படைந்தபின் அவளைக் கோயிலுக்கு நேர்ந்து அளிப்பது பாவமாகக் கருதப்படுவதால் தற்போது இரண்டாவதாகக் கூறப்பட்ட முறையிலேயே பெண் கள் தாசிகளாக்கப்படுகின்றனர். ஒருத்தியைத் தாசியாக்க உரிய சான்றிதழ்களைப் பெறுவதில் மிகுந்த சங்கடங்கள் இருப்ப தாலேயே இரண்டாவது முறை பின்பற்றப்படுகின்றது.

"ஒரு குடும்பத் தலைவன் ஆண் சந்ததியின்றி இறப்பா னாகில் அவன் பெண்களுள் ஒருத்தி தறியில் ஆணினைப் போலப்பணி செய்வதற்காகத் தாசியாக்கப்படுகிறாள் எனக் கூறப்படுகிறது. இவ்வாறு நேர்ந்துவிடப்படாத பெண்கள் குலத்தொழிலான அப் பணியினைச் செய்வதில்லை'' எனத் திரு ஸ்டுவர்ட் வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் கூறியுள்ளார்.

ஒரு சிறுமியைத் தாசியாக நேர்ந்தளிப்பதற்கான முறைப் படியான சடங்குகள் தொடர்பான விவரங்களைப் பின்வரு மாறு கோயமுத்தூரைச் சேர்ந்த கைகோளர்கள் தருகின்றனர். அவ்வாறு நேர்ந்தளிக்கப்படும் சிறுமிக்குப் 'பாடவும் ஆடவும் கற்றுத்தரப்படுகிறது. நாட்டியம் கற்றுத் தரும் நட்டுவனார் கைகோளர் சாதியைச் சேர்ந்தவராகவும், பாட்டுக் கற்றுத் தரு பவர் பிராமணர் சாதியைச் சேர்ந்த பாகவதராகவும் இருப்பார். நேர்ந்து விடப்படும் சிறுமி பூப்படைந்தபின் நடைபெறும் தாலி கட்டும் சடங்கின்போது அவளை அணிகள் பூட்டி அலங்கரித்து, நெற்குவியலின் மீது நிற்கும்படி செய்வர். அவளுக்கு முன்பக்கம் அதேபோல நெற்குவியலின் மீது நிற்கும் இரண்டு தாசிகள் மடிக்கப்பட்ட ஒரு சேலையினைப் பிடித்துக் கொண்டு நிற்பர். அச்சிறுமி அந்தத் துணியினைப் பிடித்துக் கொள்வாள். அவளுக் குப் பின்னால் அமர்ந்திருக்கும் நட்டுவனார் அவளுடைய கால் களைப் பிடித்தபடி முழங்கும் இன்னிசைக்கேற்ப மேலும் கீழும் அசைப்பார். அன்று பகல் உறவினர்களுக்கும் நண்பர் களுக்கும் விருந்தளிப்பர். மாலையில் அச்சிறுமியினை ஒரு மட்டக் குதிரை மீது அமர்த்திக் கோயிலுக்கு அழைத்துச் செல்வர். அங்குத் தெய்வத்திற்கான புதிய துணி, தாலி, பூசைக்கு வேண்டிய பொருள்கள் ஆகியன தயார்படுத்தப்பட்டிருக்கும். அச் சிறுமியினைக் கோயிலிலுள்ள தெய்வத்தின் சிலையை நோக்கி அமரச் செய்து, பூசை செய்யும் பிராமணர் அவளுக்குப் பூவும் சந்தனமும் வழங்கியபின், தெய்வத்தின் காலடியில் வைக் கப்பட்ட தாலியினை அவள் கழுத்தில் கட்டுவார். தாலி தங்கத் தகடும், கறுப்புப் பாசிமணிகளும் கொண்டதாக இருக்கும். கூடியிருப்பவர்களுக்கு வெற்றிலை பாக்கும் பூவும் வழங்கியபின் ஊரின் முக்கிய தெருக்கள் வழியே அவளை வீட்டிற்கு ஊர்வல மாக அழைத்துச் செல்வர். அதன்பின் தொடர்ந்து ஆடலும்

பாடலும் கற்று வரும் அவள் திருமணம் சார்ந்த ஒரு சடங்கினைச் செய்து கொள்வாள். நல்லதொரு நாளில் உறவினர்களை அழைத்து அப்பெண்ணின் தாய்மாமனோ அவன் சார்பில் ஒருவனோ பெண்ணின் நெற்றியில் தங்கத் தகடு ஒன்றினை அணிவிப்பான். அதன்பின் அவன் அவளைத் தூக்கிச் சென்று கூடியுள்ள விருந்தினர்கள் முன் ஒரு பலகை மீது அமர்த்துவான் பிராமணப் புரோகிதர் ஒருவர் மந்திரம் ஓதிப் புனித நெருப்பினை மூட்டுவார். பெண்ணின் தாயார் பெண்ணின் மாமனுக்குப் புதிய உடைகளை வழங்குவாள். அந்தப் பெண்ணோடு அன்று உடலுறவு கொள்ள செல்வனான ஒரு பிராமணனோ அது இயலாதாயின் வசதியற்ற ஒரு பிராமணனோ ஏற்பாடு செய்யப்படுவர். கோயிலிலுள்ள தெய்வத்திற்கு அடுத்த படியாக அதனுடைய பிரதிநிதியாகப் பிராமணன் இருப்பதாலேயே அவனை இதற்காகத் தேர்ந்தெடுக்கின்றனர். அவளோடு முதன் முதல் உறவு கொள்பவன் அவள் பக்கத்தில் சில மணித்துளி நேரம் படுக்கையில் ஒரு வாளினை வைத்திருந்த பின்னரே உறவு கொள்ள வேண்டும் என்பது வழக்கம் என்று கூறப்படுகிறது. ஒரு தாசி இறப்பாளானால் கோயிலில் உள்ள சிலை மீதிருந்து கொண்டு வரப்பட்ட புதுச் சேலையினை அவளுக்குப் போர்த்துவர். அவள் சேர்ந்துள்ள கோயிலிலிருந்து அவளுடைய பிணத்திற்கு மலர்கள் அனுப்பப்படுவதோடு கூட அவளுடைய உடல் அடக்கம் செய்யப்படும் வரை அந்தக் கோயிலில் பூசையும் நடத்தமாட்டார்கள். கோயிலில் உள்ள தெய்வம் அவளுடைய கணவனாகப் பாவிக்கப்படுவதால் அதுவும் தீட்டிற்கு ஆட்பட்டிருப்பதாகக் கருதுவதே இதற்கான காரணமாகும்.

ஒரு நூற்றாண்டிற்கு முன் (1807-இல்) கைகோளர் சாதியைச் சேர்ந்த தாசிகளைப் பற்றிப் புச்சனன் கூறியுள்ளதாவது:- நாட்டியம் ஆடும் இந்தப் பெண்களும் அவர்களுக்கு வாத்தியம் இசைப்பவர்களும் இப்பொழுது தனிச் சாதியாகக் கருதப்படுகின்றார்கள். தாசிகள் குறிப்பிட்ட எண்ணிக்கையில்,

---

* மைசூர், கன்னட, மலபார் பகுதிகள் வழியான பயணம். (Buchanan-Journey through Mysore, Canara and Malabar.)

ஒவ்வொரு வசதியுள்ள கோயிலுக்கும் உரியவர்களாகப் பணியில் அமர்த்தப்பட்டுள்ளனர். இசைவாணர்கள் கோயிலில் செய்யும் சேவைக்காகப் பெறும் ஊதியம் அற்பமானதே. எனினும் காலையிலும் மாலையிலும் இவர்கள் கோயிலுக்குச் சென்று தெய்வத்தின் முன் இன்னிசை வாசித்தல் வேண்டும். அரசு சார்பில் ஊருக்குப் பயணம் மேற்கொண்டு வருபவர்களை ஊர் எல்லையில் ஆடல் பாடலுடன் வரவேற்று அவர்கள் தங்கும் இடத்திற்கு அழைத்துச் செல்வதும் இவர்களுடைய பொறுப்பாகும். அழகு நலம் வாய்க்கப் பெற்ற பெண்கள் அனைவருக்கும் ஆடவும் பாடவும் கற்றுத் தரப்படுகின்றது. அத்தகையவர்கள் பிராமணர்களுக்காக மட்டுமே பொதுமகளிராக உள்ளனர். சாதாரணமானவர்கள் அனைவருக்கும் பொதுவானவர்களாகவே உள்ளனர். கம்பெனி ஆட்சிக்குக் கட்டுப்பட்ட அரசின் மேற்பார்வையில் உள்ள கோயிலைச் சேர்ந்த தாசிகள், பெரும்பாலும் பிராமணர்களாக இருக்கும் இந்திய அதிகாரிகளுக்கு உரியவர்களாகத் தனியே ஒதுக்கீடு செய்யப்பட்டு வைக்கப்படுகின்றனர். தாழ்ந்த சாதியாரோடோ சாதிக்கு உரியவர்களல்லாத கிறித்தவர்கள், முகம் மதியர்கள் ஆகியவர்களோடோ உறவு வைத்துக் கொள்ளும் தாசிகளை மற்றத் தாசிகள் தங்கள் குழுவிலிருந்து தள்ளி வைத்து விடுவர். இந்தத் தாசிப் பெண்களுள் பார்க்கச் சற்றே அழகாக உள்ள ஒவ்வொருத்தியையும் அரசுத்துறை அலுவர் யாரேனும் தனக்கே உரியவளாகத் தேர்ந்தெடுத்து வைத்துக் கொள்வதோடு அந்த அலுவலர்கள் அப்பெண்களைத் தனியே கோயிலுக்குச் செல்லவும் கூட அனுமதிப்பதில்லை. இந்த அலுவலர்களில் பெரும்பாலானவர்களுக்கு ஒன்றுக்கு மேற்பட்ட மனைவியர் உளர். பிராமணப் பெண்கள் நல்ல அழகிகளாக இருப்பினும் அவர்களுடைய கவர்ச்சியற்ற தன்மை காரணமாகவும், ஒரு சிறிதும் கல்வி, கலை அறிவு வாய்க்கப் பெறாதிருப்பதாலும் இந்தியர்களான அலுவலர்கள் தாசி மோகம் கொண்டவர்களாக உள்ளனர். முகமதியர்களான அரசு அலுவலர்களும் இந்தத் தாசிகள் மீது மோகம் கொண்டவர்களாகத் தங்கள் வருமானத்தின் பெரும்பகுதியை இவர்களுக்காகவே செலவிடுகின்றனர். தாராளமாகப் பணம் தரும் முகமதியருடனோ

அவருடைய நண்பர்களுடனோ சேர்ந்து கொள்ள விரும்பும் பெண்களைத் தடுக்கப் பிராமணர்கள் தைரியமாக முன்வருவ தில்லை. இந்தப் பெண்களின் சிறுபிள்ளைத் தனமான ஆடலில் எனக்குச் சிறிதும் ரசனை இல்லை. அதற்கான இவர்கள் இன்னி சையோ அதனைக் காட்டிலும் நயமற்ற காட்டுமிராண்டித்தன மானதாக உள்ளது. பழக்கம் காரணமாக ஐரோப்பியர் சிலர் இந்த ஆடலிலும் பாடலிலும் நாட்டம் கொண்டவர்களாக இருப்பதோடு இந்தப் பெண்களிடத்தும் மயங்கிப் போனவர் களாக உள்ளனர். நான் பார்க்க நேரிட்டவர்களில் பெரும்பா லோர் மிகச் சாதாரண அழகுடையவர்களாகவும் நயமற்ற வகையில் ஆடை புனைந்தவர்களாகவும் அழுக்கு மேனியராக வுமே இருந்தனர். இவர்களுள் பலர் சொறியினாலும், அதனி னும் பலர் கொடிய நோயினாலும் பீடிக்கப்பட்டிருந்தனர்.''

கைகோளர் இடங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்களாக இருந் தாலும், பேரி செட்டிகளாலும் கம்மாளர்களாலும் வைப்புக் களாக வைத்துக் கொண்டுள்ள தாசிகளைத் தவிர மற்ற தாசி கள் வலங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்களே. கைகோளர் தாசிகள் கம்மாளர் தெருவை ஊர்வலம் கடக்கும்போது ஆடுவதை நிறுத்தி விடுவர். இவர்கள் கம்மாளர்களுக்கும் பேரி செட்டிகளுக்கும் வணக்கம் செலுத்துவதில்லை.

தனக்குரிய மணமகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும் சிறு தாலிகட்டுதல் என்னும் அரியதொரு வழக்கம் கைகோள ரிடையே அருகிய வழக்குடையதாக இருப்பதாகத் தெரிகிறது. தன் மாமன்மகளையோ அத்தைமகளையோ மணந்து கொள்ள விரும்பும் ஒருவன் அவள் சேலையிலிருந்து ஒரு சிறு பகுதியைக் கிழித்து அவள் கழுத்தைச் சுற்றிக் கட்டிய பின் அச்செயலைத் தன்னுடைய பெற்றோருக்குத் தெரிவிப்பான். அவ்வாறு கட்ட இயலாது அப்பெண் தப்பிச் செல்வாளானால் அவன் அவளை உரிமை கொண்டாட முடியாது. இச் செயலில் அவன் வெற்றி பெறுவானாயின் அவள் அவனுக்கு உரியவளாவாள். சிலவிடங் களில் ஒரு பெண்ணின் மண நிகழ்ச்சிக்கான அனுமதியினை அவளுடைய தாய்மாமன் அவளைக் கைகளால் தூக்கி வந்து மணப் பந்தலில் அமர்த்துவதன் மூலம் தெரிவிப்பான். முள்

முருக்கு (*Erthrina indica*) மரக்கிளையே பால்கம்பமாக நடப்படுகிறது. தாலி கட்டிய பின் மணமகன் மணமகளுடைய இடக்காலை எடுத்து அம்மியின் மீது வைப்பான். "மகப்பேறு இல்லாத கைம்பெண்கள் மட்டுமே மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். கைகோளர் சாதிப் பெண்கள் எப்போதும் மலடியாக இருப்பதில்லை என்ற வழக்குமொழி உண்மையானால் இத்தகைய மறுமணங்கள் மிக அரிதாகவே நிகழும் எனலாம்" எனத் திரு ஸ்டுவர்ட் கூறியுள்ளார்.

சாவுச் சடங்கின் இறுதி நாளன்று ஒரு சிறு குடிசை அமைக்கப்பட்டு அதனுள் நாவிதன் கொண்டு வந்த கற்களை அமைத்து அதற்குப் படையல் இடுவர்.

கைகோளர்களைப் பற்றியும் கைகோளரிடையேயும் பின் வரும் பழமொழிகள் வழக்கில் உள்ளன.

1. கைகோளர் இல்லாத ஊரில் போய் கதாபிரசங்கம் செய்ய வேண்டும்,
2. ஒரு நெசவுக்காரனுக்குக் குரங்கு எதற்கு? (குரங்கு அவன் செய்யும் பணியினைச் சீரழித்துவிடும் என்ற கருத்துடையதாகும்.*)
3. நெய்யும் தொழிலுக்கு வேறெதுவும் நிகரில்லை.
4. ஒருமுறை வெளியே எட்டிப் பார்த்தால் எட்டு நூல் வெட்டுப்பட்டுவிடும்.
5. நெய்யக் கூட ரொம்ப சோம்பல்படுபவன் நட்சத்திரத்தைப் பிடிக்கபோனானாம்.
6. செட்டி காசைக் குறைத்தால் நெய்பவன் நூலைக் குறைப்பான்.

முதலி, நாயனார் என்பன கைகோளருக்கு உரிய பட்டப் பெயர்களாகும்.

---

* மறைத்திரு எச். ஜென்சன் – வகைப்படுத்தித் தொகுக்கப்பட்ட தமிழ்ப் பழமொழிகள், 1897. (Rev. H. Jensen – Classified Collection of Tamil Proverbs, 1897.)

கைகோளர்களான இசைவாணர்களிடையே பல படித்தான நிறமும் உடல் வாகும் கொண்டவர்களை நான் கண்டுள்ளேன். நீண்ட கூரிய மூக்கும் சிவந்த நிறமும் நன்கு கட்டமைந்த உடல் வாகும் உடையவர்களிலிருந்து நல்ல கருத்த நிறமும் அகன்ற மூக்கும் 90-க்கும் மேற்பட்ட மூக்கின் நீள அகல விகித எண்ணுடையவர்களையும் நான் கண்டுள்ளேன்.

கங்கம்மா தெய்வத்திற்குத் திருப்பதியில் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாவில் கைகோளர்கள் பங்கு பெறு கின்றனர். "மற்ற இடங்களில் நடைபெறும் திருவிழாக்களி லிருந்து மாறுபட்டதான ஓர் அரிய வழக்கத்தைக் கடைப் பிடித்து வருவதால் இது அவற்றைவிட வேறுபட்டதாக உள் ளது. இதில் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் மாறுபட்ட பல வேடங்களில் மக்கள் தோன்ற வேண்டும். ஞாயிற்றுக் கிழமைக் காலையில் போடப்படும் மாதங்கி வேடம் குறிப்பிடத்தக்க சிறப்புடையது. இந்த வேடம் போட உடன் படுபவன் ஒரு தெய்வத்தின் முன் ஆடல் நிகழ்த்துவான். அவன் அவ்வாறு ஆடும்போது தன்னை மறந்த மயங்கிய நிலையினை அடையும்போது அவனுடைய நாவின் நடுவில் ஓர் உலோகக் கம்பி சொருகப்படும். இதனால் அவனுக்கு வலியோ குருதிக் கசிவோ ஏற்படுவதில்லை. இதற்குப் பரிகாரமாகச் சிறிது வேப் பிலையையும் தெய்வத்திற்குரிய குங்குமத்தையும் வாயிலிட்டு மென்றால் போதுமானது. இந்த வேடத்தைக் கைகோளர் மட்டுமே போட்டு ஆடுகின்றனர். இந்நிகழ்ச்சி சில குறிப்பிட்ட பிராமணர் இல்லங்களிலும், மகந்தர்களுடைய மடங்களிலும் நிகழ்த்தப்படும். விழாவின் இறுதி நாளன்று பேராண்டாளு வேடம் கட்டுவர். கணவனுக்கு முன்பே மஞ்சள் குங்குமத்தோடு உயிர் துறந்த குறிப்பிடத் தக்கவகையில் சிறப்பாக வாழ்ந்த பெண்களே பேராண்டாளு எனப்படுகின்றனர். இந்த வேடம் தாங்கும் கைகோளன் பெண்வேடம் தாங்கிக் குதிரையில் ஏறி அமர்ந்து ஊர்த்தெருக்கள் வழியே குடும்பப் பெண்களுக்குத் தேவியின் குங்குமம், சந்தனம், மலர் ஆகியனவற்றை வழங்கி வருவான்" எனத் திரு ஸ்டுவர்ட் வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் குறிப்பிட்டுள்ளார்.

1908 – ஆம் ஆண்டில் ஆகஸ்ட் மாதத்தில் காஞ்சிவரத்தில் நடைபெற்ற விழா பற்றிய பின்வரும் விவரங்களுக்கு நான் மறைத்திரு ஜெ.எச் மெக்லீன் அவர்களுக்குக் கடப்பாடுடையேன்:- "சுமார் எட்டடி உயரம் உடைய சிறிய கனமில்லாத நான்கு சக்கரங்களோடு கூடிய தேரின் மீது காளியின் உருவம் வைக்கப்பட்டிருந்தது. தங்கள் முதுகுப் பகுதியில் தசையினை இழுத்து மணிக்கயிற்றினைக் குத்திச் சொருகிக் கொண்டு அக் கயிற்றினை அத்தேரோடு பிணைத்துச் சுமார் முப்பது பேர் அத் தேரினை இழுத்துச் சென்றனர். இவ்வாறு தேரிழுத்த இளைஞன் ஒருவனை இரண்டு நாள்களுக்குப்பின் நான் சந்தித்தேன். அவன் முதுகுத் தசையில் 12 அங்குல இடை வெளியுடையதாக மணிக்கயிறு கோக்கப்பட்டிருந்தது. அந்தப் புண்கள் விபூதி இடப்பட்டு மூடப்பட்டிருந்தன. செங்குந்த முதலியார் எனத் தங்களை அழைத்துக் கொள்ளும் காஞ்சிவரத்தில் ஏழுத் தெருக்களைக் கொண்ட பள்ளிபாளையம் பகுதியில் வாழும் நெசவாளர்களால் இந்தத் திருவிழா ஏற்பாடு செய்யப்படுகின்றது. இதற்காக மொத்தம் ரூ. 500 வரை செலவழிக்கப்படுகின்றது. இந்தச் சடங்கின் அடிப்படைக் காரணத்தை மக்கள் தெளிவாக அறிந்து கொண்டுள்ளதாகத் தெரியவில்லை. இது பெரியம்மை வராமல் காப்பதற்காக நடத்தப்படுகின்றது என்ச் சிலர் கூறினர். எனினும் மற்றவர்கள் இதனை ஏற்றுக் கொள்ளவில்லை. பலரும் இது நெடுங்காலமாக இருந்து வரும் பழக்கம் என்றும் இது என்ன நன்மையைச் செய்யும் என்பது தங்களுக்குத் தெரியாது என்றும் கூறினர். இந்த விழா நடந்து முப்பது ஆண்டுகள் கழிந்துவிட்டன. காளி இதுபோல விழா நடத்தும்படி கட்டளை ஏதும் இடவில்லையெனவும் இது பணம் சேர்ப்பதற்கான ஒரு வழி என்றும் ஒருவர் கூறினார். இந்தத் திருவிழா பூந்தேர் என அழைக்கப்படுகிறது."

1908 – ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் சென்னை செயிண்ட் ஜார்ஜ் கோட்டையிலிருந்து வெளியாகும் விவரக் குறிப்பு இதழில் பின்வரும் அறிக்கை வெளியாகியுள்ளது. "திருச்சிராப்பள்ளிப் பிரிவில் உள்ள திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் சமயபுரத்திலும் பிறவிடங்களிலும் நடைபெறும் மாரியம்மன் திருவிழாவின்போது முதுகில் கொக்கிகளைக் குத்திக்

கொண்டு தொங்கி ஆடுவதும், உடலின் பக்கங்களில் ஆண்கள் கொக்கிகளைக் குத்தி மாட்டிக் கொண்டு தேர்களை இழுத்தலும் மற்றும் இதுபோல நிகழ்த்தப்படும் வேறுபல செயல்களும் மக்கள் உயிருக்கு ஆபத்து விளைவிக்கக் கூடியன ஆகையால் மாநில அவையினில் ஆளுநருடைய 1898-ஆம் ஆண்டு குற்றவியல் நடவடிக்கைச் சட்டத்தில் 144-ஆம் பிரிவின் 5-ஆம் உட்பிரிவின்படி, உட்கோட்டக் குற்றவியல் நடுவரின் 1908 ஆண்டு ஆகஸ்டு 7-ஆம் தேதியிட்டு அத்தகைய நடவடிக்கைகளைத் தடைசெய்து பிறப்பிக்கப்பட்ட ஆணை தொடர்ந்து மறு அறிவிப்புச் செய்யும் வரை நடைமுறையில் இருக்கும்."

திரு எப். ஆர். ஹெமிங்வே திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் இரத்னகிரியில் உள்ள கைகோளர்கள் ஒரு வேண்டுதலை நிறைவேற்றும் பொருட்டுத் தங்கள் தெய்வமான சாகாநயனாரைச் சிறப்பித்து வயிற்றுத் தசையில் ஒரு ஈட்டியினைக் குத்திக் கொண்டனர் எனக் குறிப்பிட்டுள்ளார்.

**கைல - Kaila (measuring grain in threshing-floor)**

மாலாக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். களத்திலேயே அடித்த தானியத்தை அளிப்பது எனப் பொருள் படுவது.

**கைமல் – Kaimal**

வல்லமையைக் குறிக்க கை என்ற சொல்லின் அடிப்படையில் பிறந்த நாயர்களுக்கு உரிய பட்டப் பெயர்,

**கைபூத – Kaipūda**

ஹொலையர்களின் ஓர் உட்பிரிவு.

**கைவர்ட்ட - Kaivarta**

கெவுட்டொக்களின் ஓர் உட்பிரிவு.

**காக்கா – Kāka (crow)**

கொயிகள் பற்றிய தலைப்பிலான கட்டுரையில் காக்கா மக்களைப் பற்றிய வாய்மொழி வழி வழங்கும் வரலாறு விவரிக்

கப்பட்டுள்ளது. இதற்குச் சமமானதாக மாலாக்களின் குலப் பிரிவாகக் காக்கி என்பதும் கொந்தரரின் குலப்பிரிவாகக் காகொ என்பதும் உள்ளன.

**காகர அல்லது காகர்ல - Kākara or Kākarla**

பாகல் எனப் பொருள்படும் இது கம்மர், மூக தொர ஆகிய சாதிகளுக்குரிய புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**காக்கை இறக்கை வாண்டுலு - Kākirekka - Vāndlu**

காக்கை இறக்கைக்காரர் எனப் பொருள்படும் இது முத் ராசாக்கள் சாதியாரிடமிருந்து இரக்கும் இரவலர்களைக் குறிப் பது. இரக்கச் செல்லும்போது இவர்கள் இடையைச் சுற்றிக் காக்கை, குருட்டுக் கொக்கு முதலிய பறவைகளின் இறக்கை களைக் கட்டிக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்வதால் இவ் வாறு பெயர் பெற்றுள்ளனர்.

**காக்கா குறவன் - Kakka Kurvan**

திருவாங்கூரைச் சேர்ந்த குறவர்களின் ஒரு பிரிவு.

**கக்கலன் - Kakkalan**

கக்கலன் அல்லது கக்கன் திருவாங்கூர் மாநிலத்தில் வட, நடுப் பகுதிகளில் காணப்படும் நாடோடிகளாவர். இவர்கள் தென் திருவாங்கூரைச் சேர்ந்த காக்கா குறவ்ரை ஒத்தவர்கள். இவர்களிடையே நான்கு அகமணக் கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் உள்ளன. கவிட்டியன், மணிப்பறையன், மெலுத்தன், சட்டப்பறையன் என்பன அவை. இவற்றுள் முதலிரண்டு பிரிவுகளும் குறிப்பிடத்தக்கவை. கவிட்டியன் பிரிவைச் சேர்ந் தவர்கள் மத்திய திருவாங்கூரைச் சேர்ந்தக் கொல்லக் கவுட்டி யன், மலையாளம் கவுட்டியன், பாண்டி நாட்டிலிருந்து வந்து குடியேறிய பாண்டிக் கவுட்டியன் என மேலும் மூன்று உட்பிரி வினராகப் பிரிவுபட்டுள்ளனர்.

கக்கலன்கள் தங்கள் தோற்றம் பற்றிக் கூறும் வழக்கு வரலாறு வருமாறு:- ஒரு சமயம் சிவன் கபாலதாரனாகப் பிச்சை எடுத்தபடி பிராமணர்கள் வாழும் ஒரு தெருவினை அடைந்தார். அத்தெருவில் வாழ்வோர் அங்கிருந்து அவரை விரட்டினர். இதனால் கோபமுற்ற சிவன் அந்த ஊரினை எரித்துச் சாம்பலாக்கினார். குற்றம் புரிந்த ஊரார் அவரிடம் மன்னிப்பு வேண்டினர். இதன்பின் அவர்கள் கக்கலன்களாக இழிவடைந்து பிச்சையெடுத்து உண்ணும்படி சபிக்கப்பட்டனர்.

பெண்கள் இரும்பு, வெள்ளி ஆகியவற்றாலான வளையல்களையும் பல நிறப் பாசிமணிகளாலான பளிங்கு மாலைகளையும் அணிகின்றனர். பச்சை குத்திக் கொண்டுள்ள இவர்கள் பிற சாதியினருக்கும் பச்சை குத்துவதைப் பின்வரும் தங்களுடைய தொழில்களோடு ஒன்றாக மேற் கொண்டுள்ளனர்:-

காதுகுத்தல் - காது மடலில் துளையிடுதல்.

காது வைப்பு - காதுகளை அழகுபடுத்துவதற்கான அறுவை. கனமான காதணிகளை அணியும் நாயர் சாதிப் பெண்களுக்கு இது வேண்டியதாகின்றது.

கைநோக்கு - கைரேகை பார்த்தலில் பெண்கள் ஆண்களைவிடத் தேர்ந்தவர்கள்.

கொம்பு-வைப்பு - உடலில் வீக்கம் உள்ள இடத்தில் ஒரு செடியின் கொம்பினை வைத்து ஊதி வீக்கம் போக்குவது.

தையல் - துணி தைத்தல்.

பாம்பாட்டம் - பாம்பு நாட்டியம். இதில் கக்கலர் மிகத் தேர்ந்தவர்கள்.

குறி கூறல் - ஆருடம் சொல்லுதல்.

கக்கலர் காலையில் உதிக்கும் சூரியனையே சிறப்பாக வழிபடும் தெய்வமாகக் கொண்டுள்ளனர். அதற்கு ஞாயிற்றுக் கிழமையில் பொங்கலிட்டுப் படைப்பர். இவர்களுக்கென்று தனியே கோயில்கள் இல்லை. இந்துக் கோயில்களில் சற்றுத்

தூரமாக நின்று அங்குள்ள தெய்வங்களை வழிபடுவர். அலைந்து திரியும் வாழ்க்கையையே மேற்கொண்டிருப்பினும் இவர்கள் மலபார் புத்தாண்டின்போது வீட்டில் இருக்கும்படியாகப் பார்த்துக் கொள்வர். அப்போது புத்தாடை புனைந்து விருந்துண்பர். ஓணம், விசுத் திருவிழாக்களை இவர்கள் கொண்டாடுவதில்லை.

கக்கலர் பல மனைவியரை மணம் புரிவதில் மிகுந்த நாட்ட முடையவர்கள். சிலர் பன்னிரண்டு மனைவியர் வரை மணந்து கொண்டுள்ளனர். மனைவியர் தொழிலில் ஈடுபட்டவர்களாக இருப்பதால் அவர்களை வைத்துப் பேணுவதில் இவர்களுக்குத் தொல்லை ஏதும் இல்லை. முதல் மணத்தை ஞாயிற்றுக்கிழமை யில் செய்து கொள்ளும் இவர்கள் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய மூன்று நாள்கள் மணநிகழ்ச்சியைக் கொண்டாடுவர். முதல் மணத்தை அடுத்து நடைபெறும் மண நிகழ்ச்சிகள் வியாழக் கிழமைகளில் நடைபெறும். மணநாளுக்கு முந்திய நாளிரவு உடன்பிறந்தவனோ அவனுடைய நெருங்கிய உறவினனோ ஒரு பணம், வெற்றிலை பாக்கு, சமைத்த சோறு ஆகியவற்றைச் சம்பந்தம் பேச மணப்பந்தலில் கொண்டு வந்து வைப்பான். மணமகள் வீட்டைச் சேர்ந்தவர்கள் பழங்கள் முதலியவற்றை அவன் மீது வீசி எறிவர். மறுநாள் மணமகன் மணப் பந்த லுக்கு வந்து சேர்வான். தாலியினை மும்முறை வானத்தை நோக்கி உயர்த்தி மேலுள்ளவர்களின் வாழ்த்தைப் பெற்றபின் அதனை மணமகள் கழுத்தில் அணிவிப்பான். ஒரு சிறுமி பூப் பெய்தும்போது அதனை ஒரு வார காலத்திற்குத் தொடர்ந்து ஆரவாரமாகக் கொண்டாடுவர். இறந்தவர்களை இவர்கள் புதைப்பர். தந்தையிலிருந்து மகனுக்கு என இவர்கள் மக்கள் தாய உரிமையையே பின்பற்றுகின்றனர். குழந்தைகள் பெற்றுக் கொள்ளாத கைம்பெண் ஒருத்தி இறந்துபோன அவள் கணவன் உடன்பிறந்தவர்கள் அனைவருக்கும் பொதுவான உடமையாக இருப்பாள். அவள் வேறு ஒருவனை மறுமணம் செய்துகொண் டால் கணவனுடைய உடமைகளின் மீதான உரிமையை இழப் பாள்.

கக்கலர் மற்றவர்கள் முன்னிலையில் மலையாளத்தையே பேசினாலும் இவர்கள் தங்களுக்கிடையே பேசிக்கொள்ள

மற்றவர்கள் புரிந்துகொள்ள இயலாத தனித்ததொரு மொழியினைப் பயன்படுத்துகின்றனர் எனத் திரு என். சுப்ரமணிய அய்யர் எனக்குத் தெரிவித்துள்ளமைக்குக் கடப்பாடுடையேன்.

**கக்கே – Kakkē (Indian laburnam- *Cassia fistula*)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். கொன்றை எனப் பொருள் படுவது.

**கல – Kala**

*1901* திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**கழைக்கூத்தாடி - Kalaikūttāi (pole – dancer)**

தொம்மரருக்கான இந்துஸ்தானிப் பெயர்.

**கலால் - Kalāl**

கமல்லருக்கான இந்துஸ்தானிப் பெயர்.

**கலம்கொட்டி – Kalamkotti (potter)**

நாயர்களின் தொழில் தொடர்பான பட்டப்பெயர். மண் பாண்டம் வனைவோர் எனப் பொருள்படும்.

**கலாசி – Kalāsi**

வாத மீனவர்களை ஓரியர் அழைக்கும் பெயர்களுள் ஒன்று.

**கால்வாய் – Kālava (channel or ditch)**

பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**கலவந்தர் – Kalavant**

கலவந்தர் ஆடல் பாடல்களில் வல்லவர். மற்ற நாட்டிய மகளிரைப் போலவே இவர்களும் அரசவையைச் சார்ந்தவர்களாக உள்ளனர். இப்பெயர் தென் கன்னடத்தில் மட்டுமன்றித்

தெலுங்குப் பகுதிகளிலும் ஆடல், பாடல் புரிபவர்களுக்குரிய தாக உள்ளது.

**கலிங்கர் – Kalinga**

கோமட்டிகளின் ஓர் உட்பிரிவு. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "இவர்கள் முன்பு கலிங்கநாட்டில் தங்கி வாழ்ந்தவர்கள். ஊன் உண்ணும் காரணத்தால் மற்ற கோமட்டி பிரிவினரைவிடத் தாழ்ந்தவர்களாகக் கருதப் படுகின்றனர். சுபத்தி, பாத்ரொ, சௌத்ரி என்பன இவர்களுக் குரிய பட்டப் பெயர்கள்" எனப் பதியப்பட்டுள்ளது. கஞ்சம் மாவட்டம் கையேட்டில், "வணிகர்களாகவும் கடைக்காரர்க ளாகவும் உள்ள இவர்கள் சிக்ககோல் பிரிவிலேயே மிகுதியாகக் காணப்படுகின்றனர். கிலிங் அல்லது கலிங் என்ற பெயர் கடல் இடைகழிக் குடியேற்றப் பகுதிகள் உள்ளிட்ட மலேசிய நாடுகளில் அந்த நாடுகளோடு வணிகத்தில் ஈடுபட்டிருந்த தென்னிந்தியரைக் குறிக்கப் பயன்படுத்தும் பெயருமாகும்" எனக் கூறப்பட்டுள்ளது. முனைவர் என். அனன்டேல் ஓரங் கிலிங் இஸ்லாம் (சென்னைக் கடற்கரை சார்ந்த முகமதியர்) என்ற தொடர் படனி மலாய் மொழியில் காணப்படுவதாகக் குறித்துள்ளார்.

**காலிங்கியும் காலிஞ்சியும் – Kālingi and Kāliuji**

பதியப்பட்டுள்ள குறிப்புகளில் இந்த இரண்டு பெயர் களுக்கும் இடையே மிகுந்த குழப்பம் காணப்படுகின்றது. கஞ்சம் மாவட்டக் கையேட்டில் காலிஞ்சியர் அந்த மாவட்டத் தைச் சேர்ந்த பயிர்த்தொழிலாளர் எனக் கூறப்பட்டுள்ளது. விசாகப்பட்டினம் கையேட்டில் அம் மாவட்டத்திற்குரிய பயிர்த் தொழிலாளர் எனவும் செயப்பூரைச் சேர்ந்த போர்த் தொழிலில் ஈடுபட்டுள்ள பைக்குகள் சாதியினர் எனவும் கூறப்பட்டுள்ளது. 1891 கணக்கெடுப்பு அறிக்கையில் காலிங்கிகள் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "கஞ்சம் மாவட்டத்தில் பெரும் எண் ணிக்கையினராக இவர்கள் உள்ளார்கள் எனினும் விசாகப் பட்டினத்திலும் குறிப்பிடத்தக்க எண்ணிக்கையுடையவர்களாக உள்ளனர். இச்சொல் தெலுங்குக் கடற்கரைப் பகுதி சார்ந்த கலிங்கத்தைச் சேர்ந்தவன் எனப் பொருள் தருவதாகும்.

முனைவர் கால்டுவெல் தெலுங்கு என்ற சொல்லையே திரிகலிங்க என்றசொல்லின் திரிந்த வடிவம் எனக் கருதுகின்றார். புரகம், கிண்டல, ஒடிய என்பன இந்தச் சாதியின் மூன்று பெரிய உட்பிரிவுகளாம். அவற்றுள் கிண்டல உட்பிரிவினைச் சேர்ந்த கைம்பெண்கள் தங்களுக்கு ஆண் குழந்தைகள் இல்லையெனில் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். மற்ற உட்பிரிவுகளுள் கைம்பெண்களின் மறுமணம் அனுமதிக்கப்படுவதில்லை. மது, மாமிசம் ஆகிய இரண்டினையும் இவர்கள் பயன்படுத்துகின்றனர். நாயுடு, சௌத்ரி என்பன இவர்களுக்குரிய பட்டப் பெயராகும்.'' 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் கலிங்கிகள் பற்றி மேலும் கூறப்பட்டுள்ள தகவல்கள் வருமாறு:- ''இவர்கள் கஞ்சம், விசாகப்பட்டினம் மாவட்டங்களிலேயே சிறப்பாகக் காணப்படும் கோயில் பூசாரிகளும், பயிர்த்தொழிலாளரும் ஆவர். பிராமணர்கள் வருகைக்கு முன் இவர்களைக் கலிங்க நாட்டு மன்னர்கள் வேறெங்கிருந்தோ கோயில் பூசை செய்ய அழைத்து வந்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது. இவர்கள் ஒரிய அல்லது தெலுங்கு மொழியினைப் பேசுகின்றனர். லங்குல்ய ஆற்றுக்குத் தெற்கே வாழும் கிண்டலி கலிங்கர், அதற்கு வடக்கே வாழும் புரகம் கலிங்கர் என இவர்கள் இரு உட்பிரிவினராக உள்ளனர். இந்த இரு பிரிவுகளிலிருந்தும் சாதி விலக்குச் செய்யப்பட்ட பண்டிரி அல்லது பெவரணி கலிங்கர் என்று மூன்றாவதாக ஓர் உட்பிரிவினரும் இவர்களிடையே உள்ளனர். விசாகப்பட்டினத்தில் உள்ள மோகலிங்கத்தில்* வாழும் கலிங்கரைத் தவிர மற்றவர்கள் நாயக பலிகள் அல்லது சாண்டோக்கள் எனப்படும் சாதித் தலைவர்களை உடையவர்களாக உள்ளனர். கலராசுக்கள் எனப்படும் பூசாரிகளும் இவர்களிடையே உள்ளனர். குறிப்பிட்ட சில ஊர்மக்களின் ஆன்மீகத் தேவைகளை இந்தக் குலராசுக்கள் நிறைவு செய்கின்றனர். பல குடும்பங்களைக் கொண்ட புறமணக்கட்டுப்பாடு உடைய பல குலங்களாக அல்லது வம்சங்களாக இவர்கள்

---

* மோகலிங்கம் கஞ்சம் மாவட்டத்தில் உள்ளதேயன்றி விசாகப்பட்டினம் மாவட்டத்தில் இல்லை.

பிரிவுபட்டுள்ளனர். ஒரு பெண் பறவையின் பெயரைக் கொண்ட அருத்ர என்பதும் அரச மரத்தின் பெயரைக் கொண்ட ரெவிசெட்டி என்பதும் குலமரபுச் சின்னங்களின் அடிப்படையில் அமைந்தவை. ஒவ்வொரு பிரிவினரும் தங்கள் குல மரபுச் சின்னத்தை வழிபடுகின்றனர். சிறுமியர் பூப்படையுமுன் மணம் செய்விக்கப்பட வேண்டும் என்பதே விதி. இச் சாதி யில் பன்னிரண்டு வயதிற்குள்ளாக மணம் செய்விக்கப்பட்ட பெண்களும் கைம்பெண்களாக உள்ள பெண்களும் சாதி யாரின் மொத்த எண்ணிக்கையின் விகிதத்தோடு ஒப்பிடுகையில் மிகுதியானவராகவே உள்ளனர். கைம்பெண்களின் மறு மணத்தைப் புரகம் பிரிவுக் கலிங்கர் அனுமதிப்பதில்லை. கிண்ட லிப் பிரிவினர் இதனைத் தாராளமாக அனுமதிக்கின்றனர். ஒரு கன்னியின் மணச் சடங்குகளிலிருந்து ஒரு கைம்பெண்ணின் மறுமணச் சடங்கு எங்கும் இருப்பதைப் போல வேறுபட்டதா கவே உள்ளது. ஒரு புதுத் துணியில் மஞ்சள் கலவையைப் பூசி அதனை நீர் நிறைந்த பானை ஒன்றின் மீது விரித்துப் போட்டு அதனருகே மறுமணச் சடங்குகளை நிகழ்த்து கின்றனர். மணச்சடங்கை உறுதிப்படுத்தும் நிகழ்ச்சி குங்கும நிறக் கயிறு ஒன்றினைப் பெண்ணின் மணிக்கட்டில் கட்டுவ தாகும். கலிங்கர் ஸ்ரீ ராதாகிருட்டிணனிடமும் சைதன்யரிடமும் தனிப் பக்தி செலுத்துகின்றனர். கோயிலில் பணிபுரியும் இச் சாதியாருள் சிலர் பூணூல் அணிவதோடு தங்களைப் பிராமணர் கள் எனவும் அழைத்துக் கொள்கின்றனர். என்றாலும் பிரா மணர்கள் இவர்களைத் தங்களுக்குச் சமமானவர்களாகக் கருது வதில்லை. கலிங்கர் அனைவரும் இறந்தவர்களைப் புதைக்கும் பழக்கத்தையே மேற்கொண்டுள்ளனர். கிண்டலி உட்பிரிவைச் சேர்ந்தவர்கள் மட்டுமே சிரார்த்தம் செய்யும் பழக்கம் உடைய வர்களாக உள்ளனர். புரகம் கலிங்கர் தங்கள் தலையின் முன் பக்கத்தை மழித்துக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொள்வ தில்லை. பித்தளை, வெள்ளி, வெண்கலம், கண்ணாடி ஆகிய வற்றால் ஆன வளையல்களைக் கலிங்கர் சாதிப் பெண்கள் மணிக்கட்டிலிருந்து முழங்கை வரை பூட்டிக் கொள்கின்றனர். நாயுடு, நாயார்லு, சௌத்ரி, பிஸ்ஸோயி, பொதானொ, ஜென்னா, சுவாயி, நாய்கோ என்பன இச் சாதியாருக்குரிய பட்டப் பெயர்களாகும்.

மேற்கூறப்பட்ட விவரங்கள் ஒரிய மொழி பேசும் காலிஞ்சிகளும் தெலுங்கு மொழி பேசும் காலிங்கரும் ஆன இரு பிரிவினரையும் பற்றிய பொதுவான செய்திகள் பற்றியனவாம். காலிஞ்சிகளைச் சில சமயம் மற்ற சாதியார் கலிங்கர் என அழைப்பதால் குழப்பம் நிகழ்ந்துள்ளதாகத் தெரிகிறது. காலிங்கிகள் பெரும்பாலும் தெலுங்கு பேசுபவர்கள். இவர்கள் கஞ்சம், விசாகப்பட்டினம் மாவட்டங்களுக்கிடையே உள்ள எல்லைப் பகுதிகளில் வாழ்கின்றனர். இதற்கு மாறானவர்களாகக் காலிஞ்சிகள் தொலுவ, அலிய, பொசாந்தியர்களோடு நெருங்கிய தொடர்புடைய ஒரியர்கள். அச் சாதியாரைப் போலவே இவர்களும் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளனர். காலிங்கர் பூணூல் அணிபவர்களாக இருப்பதால் இவர்களிலிருந்து பூணூல் அணியாதவர்களான காலிஞ்சிகளை வேறுபடுத்தி அறிவது எளிதானதே. காலிஞ்சிகளின் சாதியின் தோற்றம் பற்றி வழங்கும் கதை வருமாறு:- கட்டு குன்னரடேயுக்கு அருகே உள்ள ஒரு கோட்டையில் கொள்ளையர் கூட்டம் ஒன்று ஒரு காலத்தில் வாழ்ந்துவந்தவர்களாக மக்களை வருத்தி வந்தனர். மக்கள் பூரியிலிருந்து ஆண்ட அரசரை அங்கு வந்து அவர்களை விரட்டி உதவும்படி வேண்டினர். இதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட வீரர் குழுவுள் கொண்டயெட்டொ சாதியைச் சேர்ந்த ஒருவனும் இருந்தான். அரசருடைய அனுமதியுடன் அவன் அந்தக் கொள்ளையரை விரட்டியடிப்பதில் வெற்றி கண்டான். அவனை மக்கள் திண்ணிய உள்ளம் கொண்டவன் என்ற பொருளில் பொடொ காலிஞ்ச என அழைத்தனர், அவனும் அவனோடு வந்த மற்ற வீரர்களும் கஞ்சம் பகுதியிலேயே தங்கினர். அவர்களுடைய வழிவந்தவர்களே காலிஞ்சர்கள். இச் சாதியினர் அம் மாவட்டத்தின் வட பகுதியில் மிகுதியும் பரவியுள்ளனர்.

காலிஞ்சியரிடையே எத்தகைய உட்பிரிவுகளும் இருப்பதாகத் தெரியவில்லை. மொகிரி காலிஞ்சி என்ற அகமணக் கட்டுப்பாடு உடைய ஒரு சிறு கூட்டம் இவர்களிடையே உள்ளது. மொகிரி கஞ்சம் மாவட்டத்தின் சிறந்ததொரு பகுதியாகும். அங்கு வாழும் காலிஞ்சிகள் மற்றவர்களோடு மண உறவு கொள்வதோடு தனித்ததொரு வகுப்பாராக இல்லை. மொகிரி காலிஞ்சிகள் ஒரியப் பகுதியில் சென்று தங்கி வாழும் தெலுங்குக்

காலிஞ்சிகள் ஆகலாம் என்ற ஒரு கருத்துக் கூறப்படுகிறது. பிற ஓரிய சாதியாரைப் போலவே காலிஞ்சிகளிடையே கோத்திரப் பிரிவுகள் உள்ளன. பானு (சூரியன்), சுக்ரொ (வீன்ஸ்மீன்), சங்கொ (சங்கு), பாகொ (புலி), நாகொ (நாகம்) என்பன அவற்றுள் சிலவற்றின் பெயர்களாம். திருமணம் தொடர்பான ஏற்பாடுகளின்போது இக்கோத்திரங்களிடையே மிகுந்த குழப்பம் விளைந்தபடி உள்ளது. உதாரணமாக, சுக்ரொ என்ற ஒரு கோத்திரம் சிலவிடங்களில் புறமணக்கட்டுப்பாடு உடையதாயிருக்க மற்ற இடங்களில் அவ்வாறு இல்லை. பொரடொ, பிஸ்ஸாயி, பாரிகொ, பேகர, தொலெயி, காண்டொ, ஜென்ன, மொலிகொ, நாய்க்கொ, பாட்ரொ, பொத்தானொ, புல்லெயி, ராவுட்மெ, சாண்டோ, சாவு, சுவாயி, குரு என்பது போன்ற பல பட்டப் பெயர்கள் காலிஞ்சிகளிடையே வழக்கில் உள்ளன. சில இடங்களில் இந்த பட்டப்பெயர்களே வம்சங்களைக் குறிப்பனவாக உள்ளன. அவை புறமணக்கட்டுப்பாடு உடையன. ஒரே பட்டப்பெயரை உடைய குடும்பங்கள் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. தொலெயி பட்டப்பெயரைத் தாங்கிய ஒருவன் அதே பட்டப்பெயரையுடைய குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணை மணக்கமாட்டான். அவள் அவனுடைய கோத்திரத்தைச் சேர்ந்தவளாயின் இந்த விதி மேலும் கண்டிப்புடன் பின்பற்றப்படுகிறது. ஆனால் தொலெயி பட்டப்பெயர் கொண்ட ஒருவன் புல்லெயி பட்டப்பெயர் தாங்கிய குடும்பத்தைச் சேர்ந்தவளை அவள் அவனது கோத்திரத்தைச் சேர்ந்தவளாயிருந்தாலுங்கூட மணந்து கொள்ளலாம்.

காலிஞ்சிகளின் சாதித் தலைவன் சாண்டோ என அழைக்கப்படுகிறான். அவனுக்குப் பாத்ரொ என்ற உதவியாளன் உளன். பொல்லொபைய என்ற சாதிக்காரர்களிடையே தகவல்களைச் சென்று கூறுபவனும் உளன். இந்தச் சாதி முழுவதற்குமாக மொத்தம் நான்கு சாண்டொக்களும், நான்கு பாத்ரொக்களும் உள்ளதாகக் கூறப்படுகிறது. அவர்கள் அட்டகட, சின்னசிமெதி, பெத்தசிமெதி, மொகிரி ஆகிய இடங்களில் வாழ்கின்றனர். முட்டைப் புழுவுடைய புண்ணோடு கூடிய காயத்தை உடைய ஒருவன் சாதியை விட்டு விலக்கி வைக்கப்படுவதோடு

புண் ஆறிய பின் சாதிச்சபை முன் அவன் வந்து அதனைக் காட்டிய பிறகே சாதியில் சேர்த்துக்கொள்ளப்படுகிறான்.

. . ..

பூப்படையுமுன்னரே பெண்கள் பொதுவாக மணம் முடிக்கப் பெறுகின்றனர். அவளுக்குத் தக்க கணவன் கிடைக்கவில்லையாயின் அவளுடைய அக்காளுடைய கணவனுடனோ சாதியைச் சேர்ந்த வேறொரு பெரியவருடனோ அவளுக்குப் போலி மணச் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. மணமாகாத ஒருவன் ஒரு கைம்பெண்ணை மணப்பானாகில் அவன் முதலில் ஒரு பிரச (*Streblus asper*) மரத்திற்கு மணம் செய்விக்கப்படுகின்றான். துவ்வ துவ்வி எனப்படும் கைம்பெண்களின் மணம் தாராளமாக அனுமதிக்கப்படுகின்றது. கணவனோடு பிறந்த சகோதரனை உடைய ஒருத்தி 'டசடொ பத்ரொ' எனப்படும் விடுதலைப் பத்திரத்தை எழுதி வாங்கிக் கொள்ளாமல் வேறொருவனை மணந்து கொள்ள முடியாது. இவர்களுடைய மணச் சடங்குகள் ஒரியர் சடங்குகளை ஒத்தன. சிலவிடங்களில் மணமக்களின் கைகளை நூலால் இணைத்துக் கட்டுவதற்குப் பதிலாக அவர்களுடைய சிறுவிரலை மட்டும் இணைத்து வைக்கின்றனர். நான்காம் நாள் ஒரு பொந்தாரி (நாவிதன்) மணமேடையின் மீது கொஞ்சம் அவலையும் வெல்லத்தையும் வைப்பான். மணமக்கள் அவற்றை உறவினர்களுக்குக் காசுக்கோ தானியத்துக்கோ விற்பர். அதற்குக் கிடைக்கும் விலை பொந்தாரியைச் சேரும். ஏழாம் நாள் மணமகன் மணமேடையில் ஒரு பானையை உடைத்தபின் மணமகளோடு அங்கிருந்து வெளியேறுவான். மணமகளின் சகோதரன் அவன்மீது கத்தரிக்காயினை விட்டெறிவான்.

இறந்தவர்கள் எரிக்கப்படுதலே வழக்கம். இறப்புக்கு மறுநாள் வேப்பிலையிட்டுச் சமைத்த சோறு படைக்கப்படும். சுடுகாட்டிலிருந்து ஒரு துண்டு எலும்பினை எடுத்து வந்து ஓர் அரச மரத்தடியில் புதைப்பர். பத்தாம்நாள் வரை நாள்தோறும் அந்த இடத்தின் மீது ஏழு முறை தண்ணீர் ஊற்றுவர். இறந்துபோனவர் சமூகத்தைச் சேர்ந்த பெரிய மனிதராயின் பத்தாம் நாள் 'ஜொல்ல-ஜொல்ல ஹண்டி' சடங்கு துளை

களிடப்பட்ட பானையினைக்கொண்டு நடத்தப் பெறும். (பார்க்க : பொந்தாரி)

**கல்கட்டர் - Kalkatta**

தென் கன்னடத்தைச் சேர்ந்த கல்கட்டிடம் கட்டுபவர்களுக்கான தொழில் தொடர்பான பெயர்.

**கல்கட்டி – Kalkatti**

கண்ணாடிப் பாசி மணிகளை அணிபவர்கள் எனப் பொருள்படும் இது இடையர்களின் ஓர் உட்பிரிவைக் குறிக்கும். நீலகிரியினைச் சேர்ந்த படகருள இலிங்காயதப் பிரிவினர் தங்கள் கழுத்திலிருந்து ஒரு சிறுபெட்டியில் ஒரு லிங்கத்தைக் கட்டித் தொங்கவிட்டுக் கொள்வதால் கல் கட்டி என அழைக்கப்படுகின்றனர். நீலகிரியைச் சேர்ந்த இருளர் சிலரும் இதே பெயருக்கு உரியவர்களாக உள்ளனர்.

**கள்ள - Kalla**

கள்ளர்கள் மிகுதியாக வாழும் பகுதிகளில் சாணார், இடையர் ஆகிய சாதியாரிடையே இந்த உட்பிரிவு உள்ளதாகப் பதியப்பட்டுள்ளது.

**கள்ளாடி - Kallādi**

செறுமான்களின் சாவுச் சடங்கில் பல முக்கியமான சடங்குகளை நிகழ்த்தித் தருபவன். இறந்து போனவரின் ஆவி ஏறப் பெறுபவனுக்குரிய பட்டப் பெயருமாகும்.

**கள்ளாடி மங்கன் - Kallādi Mangan**

மொண்டிக்கு உரிய வேறொரு பெயர்.

**கல்லடி சித்தன் - Kalladi Siddhan**

தன்னைக் கல்லால் அடித்துக் கொள்ளும் பிச்சைக்காரன் எனப் பொருள்படும் பெயர் இது. இவர்கள் தெலுங்கு பேசும் இரவலர்கள். பிச்சைகேட்டு ஆர்ப்பாட்டம் செய்து அடம் பிடிப்

பவர்கள்.' இந்தப் பெயர் மற்றவர்களுக்குத் தொல்லை தந்தவர்களாக அடம்பிடித்து ஆர்ப்பாட்டம் செய்பவர்களைக் குறிக்கும் இகழ்ச்சிக்குரிய பெயராகவும் வழங்குகின்றது. இந்த இரவலர் தங்களுடன் ஒரு சுரக்குடுக்கையினை எடுத்துச் செல்வர். தங்கள் முழங்கையில் ஆமை ஓட்டினையும், சோழிகளையும் கட்டித் தொங்கவிட்டுக் கொண்டிருப்பர். கையில் தாங்கிச் செல்லும் இரும்புத் துண்டால் மற்றொரு கையில் அணிந்திருக்கும் இரும்பு வளையத்தைத் தட்டியபடி செல்வர். வாந்தி எடுத்ததைப் போல தங்கள் மீது சோற்றினைப் பூசிக் கொண்டு பார்க்க அருவருப்பான தோற்றம் தரும் இவர்கள் நாகதாளிக் *(Opuntia Dillenii)* கள்ளிச் சாற்றினையும் மேலே பூசிக் கொள்வர். அவ்வாறு இவர்கள் பூசிக் கொள்வதற்கான காரணம் கத்தியால் அறுத்துக் கொண்டு இரத்தம் வருவித்துக் கொண்டுள்ளனர் என இவர்களைப் பார்ப்பவர்களை நம்பச் செய்வதற்காகவேயாகும். வலைகளைக் கொண்டு காக்கைகளைப் பிடிக்கும் இவர்கள் அவற்றைத் தின்பதில் ஆர்வம் மிக்கவர்கள். (பார்க்க- மொண்டி)

**களமு - Kallumu (threshing floor)**

பண்ட ரெட்டிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். தானியம் அடிக்கும் களம் என்ற பொருள் தருவது.

**கள்ளர் - Kallan**

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த கள்ளர்களைப்பற்றிச் சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் (1817 - இல்) திரு டி. டர்ன்புல் எழுதியுள்ள சிறப்பான விவரங்களிலிருந்து தொகுக்கப்பட்ட சுருக்க வரலாறே பின்வருவது:- "கள்ளர்கள் பொதுவாக ஈட்டி எறிவதிலும், வளரி எனப்படும் வளைதடியினை எறிவதிலும் திறமை மிக்க அஞ்சா நெஞ்சர்கள். இந்தப் போர்க் கருவி இச் சாதியாரிடையே பெருவழக்கினதான ஒன்றாகும். சுமார் 30 அங்குலம் உள்ள வளைவுடையதான ஒரு கருவியாகும் இது. கள்ளர் என்ற சொல் சாதி, இனம், நாடு முதலிய வேறுபாடின்றித் திருடர்களைக் குறிக்கப் பயன்படும் சொல்லாகும்.

இச் சாதியினர் இப் பெயருக்கு உரியவர்களாகத் திருட்ர் என்ற பொருளுக்கு உரியவர் போலவும், மதுரை அரசன் ஒருவனுக்கு வரி செலுத்துவதிலிருந்து விலக்குப் பெறாத ஒரு நாட்டுப் பகுதியைச் சேர்ந்த மக்களாகவும் வளர்ந்துள்ளதான பரிணாம வளர்ச்சி ஆராயப்பட வேண்டியதாகும். இவர்கள் தென் மாவட்டங்களில் நாட்டுப்புறப் பகுதிகள் பலவற்றில் பரம்பரை யாகத் தங்கி வாழ்ந்ததோடு அவற்றின் பல பகுதிகளைத் தங்க ளுக்கு உரிமை உடையதாகவும் ஆக்கிக் கொண்டனர். இவ்வாறு தங்களுடையதாக ஆக்கிக் கொண்ட ஒவ்வொரு பகுதியி லும் இவர்கள் தங்களுக்கெனத் தனியே ஒரு தலைவனையும் பெற்றிருந்தனர். அவனுடைய ஆணையின்படி அனைவரும் பணிந்து நடக்கும் கடப்பாடு உடையவர்கள். இவர்கள் அனை வரும் இன்றும் தங்கள் பெயருக்கேற்பத் தங்கள் நாட்டுப் பகுதி வழியே பொருள்களைக் கொண்டு செல்லும் வணிகர்களுடைய பொருள்களை முழுதும் பறித்துக் கொள்வதில்லையெனி னும் அவர்களிடமிருந்து ஏதேனும் பெற்றுக் கொண்டே அவர்கள் அப்பொருள்களைக் கொண்டு செல்ல அனுமதிக்கின் றனர். பயணிகள், யாத்திரை மேற்கொள்பவர்கள், பிராமணர் கள் ஆகிய அனைவருமே தாக்கப்பட்டு வழிப்பறிக்கு உள்ளா கின்றனர். பிராமண்ர்கள் உட்பட அனைத்துச் சாதியினரையும் தாக்கிக் கொல்லவும் இவர்கள் தயங்குவதில்லை. வழிப்பறியின் போது ஒரு பிராமணன் கொல்லப்பட நேர்ந்தால் அத்தகவல் அப்பகுதிக்குரிய தலைவனுக்குத் தெரிவிக்கப்படுமாயின் அக் குற்றம் இழைத்தவனுக்குக் கொடிய ஒறுப்புத் தண்டனை விதிக் கப்படுவதோடு தண்டத் தொகையும் விதிக்கப்படுகிறது. மேலும் அத்தகைய குற்றவாளிகள் சமூகத்திலிருந்து ஆறு திங்கள் வரை விலக்கி வைக்கவும் படுகின்றனர். மேலூரைச் சேர்ந்த வேளாளரும், சேறுகுடி நாயுடுகளும் கீழ்நாட்டவர் எனப் பெயரிடப்பட்டதோடு அங்கு வாழ்ந்த கள்ளர்களும் அம்பலக் காரர் எனப் பட்டப்பெயரிடப்பட்டனர்.

"கள்ளர் பெண்கள் சிறிது பழி ஏற்படும்படி நடத்தப்பட்ட தாக ஐயுற்ற அளவிலேயே பின் விளைவுகளைப் பற்றிச் சற்றும் எண்ணிப் பாராது கொதித்தெழுந்து தங்களுக்குப் பழி உண்டாக்

கியவர்களைப் பழிக்குப்பழி வாங்குவர். கள்ளர் பெண்கள் தங்களிடையே உட்பூசலோ மன வேறுபாடோ கொள்வார்களாயின் அருவருப்பானதொரு பழக்கத்தை மேற்கொள்கின்றனர். பழிப்புக்கு உள்ளானவள் தன்னைப் பழித்துச் சாடியவள் வீட்டு வாசலில் தன் குழந்தையைக் கொண்டு வந்து கொன்று போட்டுத் தன் பழியினைத் தீர்த்துக் கொள்கின்றாள். அவளுடைய இந்தப் பழிவாங்கும் நடவடிக்கை காட்டுமிராண்டித் தனமானதாயினும் அதனைச் செய்து முடித்தவுடன் அவள் தன் பொருள்களை எடுத்துக் கொண்டு அடுத்த ஊருக்குப் புறப்படுவாள். அவளுடைய இந்த நடவடிக்கையினை அண்டை அயலார் தடுத்து நிறுத்த முற்படும்போது ஒரே களேபரமும் ஆர்ப்பாட்டமும் நிகழும். இது பற்றிய குற்றச்சாட்டுப் பின்னர் தலைமை அம்பலக்காரரிடம் சென்று கூறப்படும். அவர் அதனை ஊர்ப் பெரியவர்களிடம் எடுத்துக் கூறி அந்தப் பூசலில் தலையிட்டு அதனை ஒரு முடிவுக்குக் கொண்டுவர உதவுமாறு கூறுவார். இந்த வழக்கினை ஊர்ப் பெரியவர்கள் ஆராய்ந்து கொண்டிருக்கையில் குற்றமிழைத்தவளாகக் கருதப்படும் பெண்ணின் கணவன் தன் மனைவியே சண்டையை மூட்டிவிட்டுத் தவறிழைத்தவள் எனக் கருதப் போதுமான சான்றுகள் வெளிப்படக் காண்பானாகில், அவன் சபையோருக்குத் தெரியாதபடி தன் வீட்டுக்குச் சென்று, தன் குழந்தைகளில் ஒன்றினை அழைத்துக் கொண்டு, முன்பு தன் வீட்டுவாசலில் வந்து குழந்தையைப் பலியிட்டவள் இல்லத்தை அடைந்து, அவள் வீட்டு வாசலில் நாலுபேர் பார்க்கத்தன் குழந்தையைக் கொன்றுபோடுவான். இவ்வாறு செயல்படுவதால் அவன் மீது சபையார் சுமத்த உள்ள தொல்லைகளிலிருந்தும் தண்டச் செலவிலிருந்தும் தன்னைக் காத்துக் கொண்டதாகக் கருதுகிறான். இந்த நிகழ்ச்சி உடனடியாக ஊர் அவையினருக்கு அறிவிக்கப்படும். அவர்கள் இழைக்கப்பட்ட குற்றத்திற்குத் தக்க வகையில் பழி வாங்கும் நிகழ்ச்சி நடந்து விட்டதென அறிவித்துவிடுவர். இவ்வாறு தானே முன் வந்து குற்றத்திற்கு ஆட்பட்டவன் பழிதீர்த்து வைக்கும் நடவடிக்கையில் ஈடுபடவில்லையாயின் ஊர்ச்சபைக் கூட்டம் பதினைந்து நாள்களுக்குத் தள்ளி வைக்கப்படும். அந்தக் காலக்கெடு முடிவதற்குள்ளாகக் குற்றம் சுமத்தப்பட்டவனின் குழந்தைகளில் ஒன்று

கொல்லப்படவேண்டும். அதோடு அந்தக் காலக்கெடு வரை யான நாள்களுக்கு அவையோருக்கான உணவு முதலியவற்றின் செலவுத் தொகையும் அவன் தலைமீது விழும். . . .

"இந்த நாடுகளைச் சேர்ந்த ஆண் பெண்களிடையே குறிப் பிடத்தக்க ஒரு பழக்கம் நிலவுகின்றது. இவர்கள் தங்கள் காது களைத் துளையிட்டுக் காதுமடல்கள் தோள்வரை நீண்டு தொங் கும்படியாக ஈயத்தாலான கனமான வளையங்களைக் காதுகளில் தொங்கவிட்டுக் கொள்கின்றனர். தொங்கும் காது மடல்கள் அழகு ஒன்றை மட்டுமே கருதி அவ்வாறு பெரிய துளை உடையனவாக ஆக்கப்படுவதில்லை. அதற்கு வேறு காரணமும் உள்ளது என்பதனை இவர்களுடைய நடைமுறைகள் புலப் படுத்துகின்றன. இந்த நாடுகளின் வழியாக வணிகர்களோ, பயணிகளோ செல்லும்போது அவர்கள் அப்பகுதிகளை எத்தகைய தொல்லைக்கும் ஆட்படாமல் கடந்து செல்ல வேண்டி அந்த நாட்டுப் பகுதியினைச் சேர்ந்த சிவரின் நட்பினைப் பெறக் குறிப்பிட்ட ஒரு தொகையினை அவர்களுக்குச் செலுத்துவர். அதனைப் பெற்றுக் கொண்டவர்கள் அவர் களோடு ஒரு சிறுமியை உடன் அனுப்புவர். அவ்வாறு அவர்களோடு அனுப்பப்படும் வழிகாட்டியான சிறுமி தன் காதுத் துளையில் ஒரு விரலை விட்டுக்கொண்டவளாக வழி நடத்திச் செல்வாள். இவ்வாறு ஒரு சிறுமியின் பாதுகாவலோடு வரும் பயணிகளைத் தாக்கி வழிப்பறி செய்ய எந்தக் கள்ளனும் துணியான். சில சமயங்களில் இத்தகைய பாதுகாவலினைப் பெற்றுச் செல்பவர்களும் தாக்குதலுக்கு உள்ளாவது உண்டு. அவ்வாறு தாக்கப்பட்டால் அச் சிறுமி உடனே ஒரு காதின் மடலை அறுத்துக்கொண்டு திரும்பிவந்து அவ்வாறு தாக்கப் பட்ட செய்தியினை அறிவிப்பாள். பின்னர் அச் செய்தி நாட்டுத் தலைவனுக்கும் பெரியவர்களுக்கும் அறிவிக்கப்படும். நாட்டுத் தலைவன் உடனே ஊர்ச் சபையினைக் (இச்சபைகள் பெரும் பாலும் ஊர்ப்பொதுவிடத்திலுள்ள பெரிய புளிய மரத்தின் அடியில் கூடும்) கூட்டுவான். குற்றவாளிகள் தண்டிக்கப்படுவார் களாயின் தொடர்ந்து அதன் காரணமான எதிர் விளைவுகள் நிகழும். அவைக்கூட்டம் குற்றம் புரிந்தவர்களுக்கு உரிய



தொங்கும் காது மடல்களோடு கூடிய கள்ளர் குழந்தைகள்

தண்டனையாக இரு காது மடல்களையும் அறுக்கும்படி முடிவு செய்யும். முடிந்தால் குற்றவாளிகளுக்குத் தண்டத் தொகை விதிக்கப்படுவதோ பணம் பெற்றுக் கொண்டு அவர்களை மன்னிப்பதோ செய்யப்படும். இந்த ஏற்பாட்டால் பயணிகள் பொதுவாக இப்பகுதிகளில் பாதுகாவலோடு பயணம் மேற் கொள்ள முடிகின்றது. (இன்றுங்கூடத் தாழ்ந்த சாதிகளைச் சேர்ந்த பெண்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொள்ளும் போது நீண்டு தொங்கும் காது மடல்களே தாக்குதலுக்கு உள்ளாகின்றன. காது மடல் அறுக்கப்பட்டதான வழக்குகளே காவல்துறைப் பதிவுகளில் மிகுதியும் இடம் பெற்றுள்ளன.*)

"மேலூர் நாடு முதலில் வேளாளர்களுக்குரியதாக அவர்கள் தங்கி வாழ்ந்து பயிர்த்தொழில் நடத்தி வந்த பகுதியாக இருந்தது. ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் காஞ்சிவரம் மாவட்டத்தைச் சேர்ந்த வெள்ள நாட்டைச் சேர்ந்த கள்ளர் சிலர் அப்பகுதியிலிருந்து கைவேல், குறுந்தடி, குண்டாந்தடி வளரி ஆகியன ஏந்தி வேட்டை நாய்கள் தொடர வேட்டைக் குப் புறப்பட்டனர். அவர்கள் தங்கள் வேட்டையினிடையே ஒரு மயிலானது தங்கள் வேட்டை நாய் ஒன்றினை எதிர்த்து நிற்பதைக் கண்டனர். இதனைக் கண்டு மிகுந்த வியப்புக்கு உள்ளான அவர்கள் அந்த நாட்டில் வாழ்பவர்களும், அங்கு உறையும் உயிரினங்களும் மிக்க வீரமுள்ளனவாக இருத்தலால் அது நற்பேறு சேர்க்கும் நாடாதல் வேண்டும் என எண்ணினர். காஞ்சிவரம் பகுதியில் உள்ள தங்கள் நாட்டைவிட இந்த நாட்டில் வந்து குடியேறிப் பயிர்த்தொழில் செய்ய அவர்கள் விரும்பினர். அந்த விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்ள அவர்கள் தங்களை வேளாளர் நற்கருத்தில் இடம் பெறும்படி யாக ஆக்கிக் கொண்டனர். வேளாளர்களின் பணியாளர்களா கச் சேர்ந்த இவர்களை வேளாளர் அங்குத் தங்கி வாழ அனு மதித்தனர். காலப்போக்கில் அவ்வாறு தங்கியவர்கள் தங்கள் உறவினர்களையும், நண்பர்களையும் தங்களோடு அழைத்து

---

* மதுரை மாவட்ட விவரக்குறிப்பு. (Gazetteer of the Madurai District.)

வைத்துக் கொண்டனர். புறத்தே வேளாளருக்கு நன்றியுள்ளவர்கள் போலவும் கீழ்ப்பணிந்து நடப்பவர்கள் போலவும் நடித்து வந்த இவர்கள் அதற்குரிய பயனைப் பெறும் காலம் கிட்டியது. சிறிது காலம் சென்றபின் வேளாளர்கள் கள்ளர்கள் மேல் தங்கள் விருப்பம் போல் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கிக் கள்ளர்கள் அவர்கள் பணியின்போது செய்யும் தவறுகளுக்கும் குற்றங்களுக்கும் உரிய தண்டனைகளை விதிக்கத் தொடங்கினர். இதனால் கள்ளர்கள் ஆத்திரம் கொண்டனர். படிப்படியாக அவர்கள் தங்கள் பண்ணையார்கள்மீது ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி அவர்களைப் பலவந்தத்திற்கு உட்படுத்திப் பின்வரும் விதிகளைக் கண்டிப்புடன் பின்பற்றி நடக்கச் செய்யும்படியாக உடன்படிக்கை செய்து கொண்டனர். அவ் விதிகளாவன:-

1. ஒரு கள்ளனுடைய பல் உடையும்படியாக அவனுடைய ஆண்டை அவனை அடிப்பானாயின் அக் குற்றத்திற்கு ஈடாக அவர் பத்துச் சல்லிச் சக்கரம் செலுத்த வேண்டும்.

2. கள்ளனின் ஒரு காது மடல் அறுபட நேருமானால் வேளாளன் அவனுக்கு ஆறு சக்கரம் தண்டமாகத் தர வேண்டும்.

3. கள்ளனின் மண்டை உடைபடுமானால் வேளாளன் அதற்குப் பதிலாகத் தன் மண்டையை உடைத்துக் கொள்ளாவிடில் முப்பது சக்கரம் தண்டமாகக் கள்ளனுக்குச் செலுத்த வேண்டும்.

4. ஒரு கள்ளனின் காலோ கையோ முறிந்து போகுமாயின் அவனை அரை மனிதனாகக் கருத வேண்டும். அத்தகைய சூழ்நிலையில் குற்றம் இழைத்தவன் ஒரு கலம் விதைக்கான நஞ்சை நிலத்தையோ, இரண்டு கூர்கும் (Koorkums) புஞ்சை நிலத்தையோ கள்ளனுக்குத் தனி உரிமை உடையதாக ஆக்கி வைப்பதோடு மேலும் அந்தக் கள்ளனுக்கு ஒரு துப்பட்டியும் அவன் மனைவிக்குச் சேலையும் தருதல் வேண்டும். அத்தோடு இருபது கலம் நெல்லோ வேறு தானியங்

களோ கொடுத்துக் கைச்செலவுக்கு இருபது சக்கரங்களும் தரக் கடமைப்பட்டவனாவான்.

5. ஒரு கள்ளன் கொலைக்கு ஆளாவானாயின் குற்றம் இழைத்தவன் நூறு சக்கரம் தண்டத் தொகை செலுத்துதல் வேண்டும். அல்லது கொலைக்கு ஆளானவன் பக்கத்தைச் சேர்ந்தவர்களால் அவனது உயிர் போக்கப் பட உடன்படல் வேண்டும். இந்தஇரண்டில் ஒன்றுக்குக் குற்றம் இழைத்தவன் உடன்படும்வரை குற்றம் இழைக்கப்பட்டவன் கூட்டாளிகள் குற்றம் புரிந்தவன் உடமைகளைச் சூறையாடுவதோடு தங்களுடையதாகக் கொள்ளவும் உரிமை உடையவர்களாவர்.

தங்கள் ஆண்டைகளின் மீது இத்தகைய உடன்பாட்டுக்கு ஒவ்வாதனவாகிய விதிகளைச் சுமத்தி அடாத வகையில் மிகுதியான பொருளைத் தரும்படி வற்புறுத்தி வேளாளர்களைக் கள்ளருக்கு அஞ்சும்படியாகவும், கள்ளரின் தயவை நாடி நிற்பவர்களாகவும், கள்ளர்கள் விருப்பம்போல் ஆடுபவர்களாகவும் மடக்கிப்போட்டு அவர்களை ஏழ்மையில் வீழ்த்தி, அவர்கள் தங்கள் ஊர்களையும், உடமைகளையும் ஒருங்கே கைவிட்டு வேறு நாடுகளில் சென்று குடியேறும்படியாகச் செய்துவிட்டனர். நன்றி உணர்வும், பணிவுடமையும் உள்ளவர்களாக இருப்போம் எனக் கூறிய உறுதிமொழியை காற்றில் பறக்கவிட்டு வேளாளர் பலரைக் கொலைக்கும் ஆட்படுத்தினர். இப்படியாகத் தங்கள் முந்தைய ஆண்டைகளைக் கொஞ்சமும் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை அற்றவர்களாக அவர்களுக்கு உரிய நாட்டை விட்டுத் துரத்திவிட்டுக் கள்ளர்கள் அப் பகுதியினை உரியவர்கள் மட்டும் அறிந்த காட்டுப் பகுதி என்ற பொருளில் துன் அர்ரச நாடு எனப் பெயரிட்டு ஆளத் தொடங்கினர். (இது தாங்களே ஆளும் நாடு எனவும் பொருள்படும் என மதுரை மாவட்ட விவரக் குறிப்பு விளக்கம் தந்துள்ளது.) சுருங்கக் கூறவேண்டுமானால் இந்தக் கள்ளர்கள் இறுதியில் அப்பகுதியை ஆண்ட அரசினையே கலக்கும் அளவிற்குப் பலம் பெற்றவர்களாக எழுச்சி உற்றனர். அழகர்கோயிலில் குடிகொண்டிருக்கும் அழகரை வழிபடுதெய்வமாக இவர்கள்

ஏற்றுக் கொண்டதோடு, தாங்கள் மேற்கொள்ளும் முயற்சிகளில் வெற்றி கிட்டும் போதெல்லாம் அழகருக்குச் சிறப்பாகச் சமயச் சடங்குகளை நிறைவேற்றி வந்தனர். இன்றுவரை அழகரை வழிபட்ட பின்னரே இவர்கள் எந்தச் செயலிலும் ஈடுபடுவதோடு கோயிலவர்கள் கோயிற் பணிக்காகவோதெய்வத் திருவிழாச் சடங்குகளுக்காகவோ பணமோ தானியமோ கேட்டு வரும்போதெல்லாம் இவர்கள் தங்களால் இயன்ற மட்டும் அவர்களுக்குக் கொடுத்து உதவுகின்றனர். இந்த நாட்டைச் சேர்ந்த கள்ளர்கள் கர்த்தாக்களைப் (Kurtaukles) பின்பற்றியவர்களாகச் சென்று இளவரசருக்கு உரிய உடமையான பசுக் கூட்டத்தைக் கவர்ந்து சென்று விட்டனர். இந்தக் களவினை அறிந்த இளவரசர் கன்றுகள் பாலின்றித் தவிப்பது அறிந்து அவற்றை அவிழ்த்துப் பசுக்கள் இருக்கும் இடத்திற்குச் சென்று சேரும்படியாக விரட்டும்படி ஆணையிட்டார். கர்த்தாக்களின் நல்லெண்ணத்தையும், பெருந்தன்மையையும் கண்டு மனம் மகிழ்ந்த கள்ளர்கள் உடனே தங்கள் நாட்டிலுள்ளவர்களிடம் வீட்டுக்கு ஒரு பசுவாக ஆயிரம் பசுக்களைத் திரட்டி அவற்றோடு தாங்கள் கவர்ந்து வந்த பசுக்களையும் சேர்த்து மதுரைக்கு ஓட்டிவிட்டனர். இவர்களிடையே பூசலோ வழக்கோ நிகழும்போது இரு பக்கத்தைச் சேர்ந்தவர்களும் எதிர்ப்பக்கத்தவரை அம்பலக்காரர் பெயரைச் சொல்லிக் கைது செய்வதாகக் கூறுவர். அம்பலக்காரரை மதிப்புடையவராக நடத்துவதோடு அவரால் வழக்கை நடத்த நியமிக்கப்படும் நடுவர்களுக்கே இவர்கள் மதிப்பும் மரியாதையும் தருவர்.

''பண்ணை அடிமை முறை கள்ளர்களிடையே நிலவிய நீண்ட காலப் பகுதியில் எந்தக் காரணத்தின் அடிப்படையிலும் அப்போதைய அரசு தங்கள் மீது ஆதிக்கம் செலுத்தக் கள்ளர்கள் அனுமதிக்கவில்லை. அரசுக்குரிய வரியினைச் செலுத்தும்படியாகக் கேட்டால் கள்ளர்கள் மிக ஆணவத்துடன், 'வானம் பொழியுது, பூமி விளையுது, எங்கள் கால்நடை ஏர உழுகின்றது, நாங்கள் நிலத்தில் உழைத்து அதனைப் பண்படுத்துகிறோம், நிலைமை இப்படி இருக்க அதன் விளைவுகளை உழைப்பவர் மட்டும்தானே அனுபவிக்க வேண்டும்? எங்களோடு ஒத்த

ஒருத்தனைப் பணிந்து அவனுக்கு நாங்கள் வரி செலுத்த வேண்டும் எனக் கூறுவதேன்?' எனக் கேட்பர்.

''விசய ரகுநாத சேதுபதியின் ஆட்சியின்போது கள்ளர் குழு ஒன்று இராமநாதபுரம் மாவட்டத்தில் புகுந்து சூறையாடி அரசரின் உடமையான இரண்டாயிரம் காளைகளைக் கவர்ந்து சென்றுவிட்டது. இதனால் பெரிதும் எரிச்சலுற்ற மன்னர் இராமநாதபுரம், சிவகங்கை ஆகிய மாவட்டங்களில் வெவ்வேறு இடங்களில் ஐந்து கோட்டைகளைக் கட்டுவித்து அந்த நாட்டின் முதன்மையானவர்களோடு தான் நல்லெண்ணமுடையவராக நட்புக் கொள்ளப் போவதாகக் கூறி அழைப்புவிடுத்து வருவித்து அவர்கள் மனத்தில் நம்பிக்கை வளரும்படியாகப் பல சிறப்புக்களைச் செய்து இறுதியில் பெரும் எண்ணிக்கையிலான அவர்களைக் குத்திக் கொல்ல ஏற்பாடு செய்தார். அவ்வாறு கொலையுண்டவர்களின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களை இராமேசுவரத்திற்குக் கடத்திக் கொண்டுபோய் அங்கு அவர்களுக்குக் கோயில் முத்திரையிட்டு அவர்களைக் கோயிலுக்குரிய தேவதாசிகளாகவும், அடிமை மகளிராகவும் ஆக்கினார். புகழ் பெற்ற அந்தத் தீவில் தற்போது உள்ள ஆடல் மகளிர் அந்தக் கள்ளர் சாதியின் வழிவந்தவர்கள் எனக் கூறப்படுகிறது.'' பதினெட்டாம் நூற்றாண்டில் காப்டன் ரம்லெ (Captain Rumley) கள்ளர்களின் கிளர்ச்சியை அடக்குவதற்காக அனுப்பப்பட்டான். ''கள்ளர் நாட்டினர் அவன் பெயரைக் கேட்ட அளவிலே அஞ்சிக் கலங்கினர். அவனை மதித்துப் போற்றிய அவர்கள் அவனை ரம்லெசாமி என அழைத்ததோடு பின்னர் அந்தப் பட்டப் பெயராலேயே அவனைக் கள்ளர்கள் சுட்டுவராயினர்.'' திருச்சிராப்பள்ளியில் நடைபெற்ற போரின்போது கிளைவ், ஸ்டிரிங்கர் லாரன்ஸ் ஆகிய இருவரின் குதிரைகளையும் இரு கள்ளர் சகோதரர்கள் திருடிச் சென்றுவிட்டனர் என்ற செய்தி பதிவுகளில் உள்ளது.

வழக்கு வரலாறாகக் கூறப்பட்டு வரும் செய்தி வருமாறு:- ''மதுரையில் உள்ள திருமலை நாயக்கர் அரண்மனையில், திருமலையின் பள்ளியறையில் அவருடைய கட்டில் உயர இருந்து சங்கிலியில் பிணைக்கப்பட்டுத் தொங்கும். கதை வழக்குப்படி

ஓர் இரவில் ஒரு கள்ளன் அரண்மனையின் மேற்கூரையில் கன்னம் வைத்து சங்கிலிகள் வழியாகக் கீழே வந்து அரசருக்கு உரிய அணிமணிகளைக் கவர்ந்து சென்று விட்டான். அரசர் அக் கள்வனைப் பிடித்து வருபவனுக்கு ஒரு ஜாகிரைப் பரிசாகத் தரப் போவதாக அறிவித்தவுடன் அந்தக் கள்ளன் தானே நேரில் வந்து சேர்ந்தவனாக வாக்களித்தபடி ஜாகீரைத் தருமாறு கேட்டான். அரசரும் சொல் தவறாது அவனுக்கு ஜாகிரைத் தந்து உடனே அவனைச் சிரச் சேதமும் செய்தார்."*

"தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை ஆகிய மாவட்டங் களிலும் புதுக்கோட்டைப் பகுதியிலும் மிகுதியாகக் காணப் படும் நடுத்தர உடல்வாகும், கறுத்த நிறமும் கொண்ட பழங் குடிகள் கள்ளர்கள். திருட்டு எனப் பொருள்படும் கள்ளம் என்ற தமிழ்ச் சொல்லிலிருந்து வந்த பெயரே கள்ளன் எனப் பொது வாக வழங்கி வருகின்றது. திரு நெல்சன் அவர்கள் மதுரை மாவட்டக் கையேட்டில் இவ்வாறு கொள்வது பொருந்துமா என ஐயம் தெரிவித்துள்ளார். முனைவர் ஒப்பெர்ட் (Dr.Oppert) இக் கருத்தை ஏற்றுக் கொள்கின்றார். பல்லவர் நாடான தொண்டை மண்டலமே கள்ளர்கள் தொடக்கத்தில் வாழ்ந்து வந்த நாடாதல் வேண்டும். இவ் வகுப்பாரின் தலைவரான புதுக்கோட்டை மன்னர் இன்றும் தொண்டைமான் என்று அழைக்கப்பட்டு வருகிறார். கள்ளர்கள் குறும்பர்களின் ஒரு பிரிவினர் எனக் கொள்ள ஏற்ற பல காரணங்கள் உள்ளன. முதலில் படை வீரராக இருந்த இவர்கள் அதனைக் கைவிட வேண்டி வந்தவுடன், கொள்ளையில் ஈடுபட்டுத் தங்களுடைய திருட்டு, வழிப்பறி ஆகியவற்றால் மற்றவர் வெறுப்பினுக்கு மிகுதியும் ஆட்பட்டு விட்டதால் கள்ளன் என்ற பெயருக்கு உரியவர்களான இந்தச் சாதியினருக்கு அப்பெயரே சாதிக் குரிய பட்டப் பெயராக நிலைத்துவிட்டது† கீழ்த்திசைக் கையெழுத்து மூலங்களைத் தொகுத்த மறைத்திரு டெய்லர்,

---

* மதுரை மாவட்ட விவர குறிப்பு. (Gazetteer of the Madurai district.)

† ஜி. ஒப்பொட் – சென்னை இலக்கிய அறிவியல் இதழ், 1888-89. (G. Oppert–Madras Journ. Lit. Science, 1888-89)

டெய்லர் கள்ளர்களைக் குறும்பர்கள் என்றே இனங்காண்கின் றார். அவருடைய இந்த முடிவினைத் திரு நெல்சனும் ஏற்றுக் கொள்கின்றார். மக்கள் கணக்கெடுப்புப் பதிவுகளில் குறும்பன், கள்ளர் சாதியின் பல உட்பிரிவுகளுள் ஒன்றாகப் பதியப்பட் டுள்ளது" என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் கள்ளர் களைப் பற்றித் திரு எச்.எ. ஸ்டுவர்ட் கூறியுள்ளார்.

"பதினொன்றாம் நூற்றாண்டில் பாண்டிய அரசினைச் சோழர்கள் வெற்றி கொள்வதன் முன் சோழ நாடு அல்லது தஞ்சாவூரே கள்ளர்களுக்கு உரிய வாழ்விடமாய் இருந்து அந்த வெற்றியின் பின்னர் கள்ளர்கள் பாண்டிய நாட்டில் குடியேறி யவர்களாதல் வேண்டும். தஞ்சாவூரில் கள்ளர்கள் பெரும் எண் ணிக்கையினரான பிராமணர்களின் தாக்கத்திற்கு ஆட்பட்டுள் ளனர். தங்கள் தலையை மழித்துக் கொள்ளும் பழக்கத்தை மேற்கொண்டுள்ள இவர்கள் பிராமணர்களைப் புரோகிதர் களாக அமர்த்துகின்றனர். இங்கு இவர்கள் திருமணத்தில் மண மகனே மணமகளுக்குத் தாலி கட்டுகின்றான். மற்றப் பகுதிகளில் மணமகன் உடன்பிறந்தவளே அதனைச் செய்கிறாள். தஞ்சை யின் எல்லைக்கு அப்பால் மதுரையில் வாழும் இவர்கள் இனத் தவர்கள் தங்கள் தலைமயிரை இன்னமும் குடுமியாக முடிந்து கொள்ளும் பழக்கத்தையே மேற்கொண்டுள்ளனர். அவர்கள் தங்கள் சாதிக்காரர்களையே புரோகிதர்களாக அமர்த்துகின் றனர். ஒரு சாதியின் ஒரு பிரிவினருடைய இத்தகைய முன்னேற் றம் காலப்போக்கில் அச்சாதி முழுவதையுமே சமூகப் படிநிலை யில் உயர்த்தி விடக் கூடியதாகும்" எனத் திரு டபிள்யூ. பிரான் சிஸ் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் எழுதியுள்ளார்.

கள்ளர்களினுடைய வளர்ச்சிப் போக்கினைப் பற்றி, "மற்ற வர்களின் வாழ்க்கை முறையினை - சிறப்பாக மாவட்டத்தின் முன்னேற்றம் பெற்றுள்ள பகுதிகளில் - பின்பற்ற ஆர்வங் கொண்ட கள்ளர்கள் பிராமணர்கள், வேளாளர்கள் ஆகியோரின் நடைமுறையினைப் பின்பற்றுகின்றனர். இதனால் இடத்திற்கு இடம் இவர்களுடைய பழக்கவழக்கங்களில் பெரிதும் வேறுபாடு

காணப்படுகிறது. இந்த மாவட்டத்தைச் சேர்ந்த கள்ளர்களுக்கும் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த கள்ளர்களுக்கும் இடையே புழக்க வழக்கங்களில் பெரிய இடைவெளி காணப்படுகின்றது'' என்த் தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது

''நல்ல வருமானம் தரும் உழவுத் தொழிலோடு நிலவுடைமைக்கு உரியவர்கள் என்றதொரு தற்காப்பு உணர்ச்சியும் சேர்ந்து கள்ளர்கள், படையாச்சிகள் ஆகியோருள் பெரும்பாலானவர்களைப் போதுமென்ற மனங்கொண்ட, ஆர்வத்தோடு உழைக்கும் இனத்தவர்களாக மாற்றிவிட்டது. இன்று அவர்கள் பயிர்த்தொழிலிலும் அது தொடர்பான வழக்குகளிலும் முழு மூச்சுடன் ஈடுபட்டவர்களாக உள்ளதால் சட்டத்திற்குப் புறம்பான தங்களுடைய பரம்பரைச் செயல்களில் ஈடுபட மனம் இருந்தாலும் அதனைப் பற்றி நினைக்க நேரமற்றவர்களாக உள்ளனர். காவிரிப் படுகையில் வளமான பயிர்த்தொழில் நடைபெறுவதான பழைய திருவாடி வட்டத்தின் ரயத்துவாரி நிலங்களின் பெரும்பகுதிக்கு உடமையாளர்களாக விளங்குபவர்கள் கள்ளர்களே. பொதுவாக இவர்கள் செல்வ வளம் படைத்த உயர்குடியினராகவே உள்ளனர். காவேரியின் கரை சார்ந்த ஊர்ப் புறங்களைச் சார்ந்த கள்ளர்களானஉழவர்கள் உடையிலும் தோற்றத்திலும் பொதுவாக வேளாளர்களை ஒத்தவர்களாக உள்ளனர். தெற்கே இருந்து அண்மையில் லந்து குடியேறியவர்களுள் மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களிலிருந்து வந்த, புதுமைக்கு ஆட்படாத, மற்றவர்களுடன் வம்பு வழக்கு வைத்துக் கொள்ளாத கள்ளர்களைப் பரம்பரையாக வாழும் கள்ளர் குடியிருப்புகளிடையே மிக எளிதாக அடையாளம் கண்டு கொள்ளலாம். இவர்கள் தெற்கே இருந்து வந்து குடியேறியவர்கள் என்ற பொருளில் அவ்வாறு வந்தேறிய மற்றச் சாதியாரோடும் சேர்த்து தெற்கத்தியார் என்று வழங்கப்படுகின்றனர். இத் தெற்கத்தியார் புதுக்கோட்டையின் எல்லை சார்ந்த மாவட்டத்தின பகுதிகளிலேயே காணப்படுகின்றனர். இப் பிரிவைச் சேர்ந்த கள்ளர்கள் பெண்களைப் போலத் தலை முழுக்க நீளமாக மயிர் வளர்க்கின்றனர். ஆண்களும் பெண்களும் பனையோலைப் பாம்படங்களை இட்டுக் காது மடல்களின்

துளைகளை மிகப் பெரியதாக ஆக்கிக் கொண்டுள்ளனர்'' எனத் தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது. தெற்கத்தியார் என்ற வழக்கு தஞ்சாவூர் மாவட்டத்தில் வந்து குடிபுகுந்த கள்ளர், மறவர், அகமுடையார் ஆகியோரையும் மற்ற வந்தேறிகளையும் குறிப்பதாகும். மாயவரத்தில் இவ் வழக்கு கள்ளர், அகமுடையார், வலையர் ஆகியோருக்கு உரிய தாக வழங்கப்படுகிறது. 1891 கணக்கெடுப்பு அறிக்கையில் அகமுடையார், கள்ளர் என்பன மறவர்களின் உட்பிரிவாகக் குறிப்பிடத்தக்க வகையில் பெரும்பான்மையோரால் பதியப் பட்டுள்ளது. ''மறவர் என்பதும் கள்ளர்களின் உட்பிரிவில் ஒன்றாகக் காணப்படுவதால் களளர், மறவர், அகமுடையார் ஆகிய மூவரிடையேயும் நெருங்கிய உறவு உள்ளது என்பதில் சிறிதும் ஐயுற வேண்டியதில்லை.'' '' கள்ளர் சாதியின் தோற் றம் மறவர், அகமுடையார் சாதியாரின் தோற்றம் போல் புராணத் தொடர்புடையதாக இந்திரன், கௌதம முனிவரின் மனைவியாகிய அகலிகை, ஆகியோரை மூலமாகக் கொண்ட தாக உள்ளது. கதை வழக்குப்படி கௌதம முனிவரும், இந்திரனும் மற்றவர்களோடு அகலிகையினை அடையப்போட்டி யிட்டனர். இப் போட்டியில் கௌதம முனிவரே வெற்றி பெற் றார். இதனால் மனக் கொதிப்படைந்த இந்திரன் எத்தகைய ஆபத்துவரினும் அகலிகையை அடைந்தே தீர்வது என முடிவு செய்தவனாக மதி நுட்பமுடையவனாக ஒரு தந்திரத்தைக் கை யாண்டு வெற்றியும் பெற அகலிகை அவன் வாயிலாக மூன்று மக்களைப் பெற்றெடுத்தாள். அவர்கள் முறையே கள்ளன், மறவன், அகமுடையான் எனப் பெயரிட்டு அழைக்கப்பட்டனர். இந்த மூன்று சாதியார்களும் தேவன் வழிவந்தவர்கள் எனக் கூறிக் கொண்டு தேவன் என்ற பட்டப் பெயரையும் சூட்டிக் கொள்கின்றனர்'' எனத் திரு எப். எஸ் முல்லலெ எழுது கின்றார்.* இந்தக் கதையின் மற்றொரு வழக்குப்படி கூறப் படுவதாவது:- ''கௌதம முனிவர் ஒருக்கால் தன் இல்லத்தை விட்டுத் தொழில் மேல் வெளியே சென்றார். அவர் இல்லத்தில்

* சென்னை மாநிலத்துக் குற்றம்புரி வகுப்பார் பற்றிய குறிப்புகள். (S. S. Mullaly-Notes on Criminal Classes of the Madras Presidency.)

இல்லாத இந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு இந்திரன் அவருடைய மனைவியிடம் வரம்பிகந்தவனாகச் சிற்றின்பம் துய்த்தான். இதன் விளைவாக மூன்று குழந்தைகள் பிறந்தனர். முனிவர் திரும்பி வந்தபோது அவர்களுள் ஒருவன் கதவின் பின்புறம் திருடனைப் போல் மறைந்து கொண்டான். அப்போதிருந்து அவன் கள்ளன் என வழங்கப்படுகின்றான். மற்றொருவன் ஒரு மரத்தின் மீது ஏறிக்கொண்டுவிட்டானாகையால் மறவன் என்றழைக்கப்பட்டான். மூன்றாமவன் உள்ளம் தளராது மன உறுதியுடன் வீட்டகத்திலேயே நின்றான். ஆகையால் அவன் அகத்தில் உறுதியுடையவன் என்ற பொருளில் அகமுடையான் என அழைக்கப்பட்டான். இப்பெயர் அகம்படையான் எனத் திரிந்ததாக வழங்குகின்றது.''* ஒரு கள்ளன் மறவனாவான் என்ற தமிழ்ப் பழமொழி ஒன்று வழங்குகின்றது. மரியாதைக்குரியவனானவுடன் அவன் அகமுடையானாவான். பின்பு படிப்படியே உயர்ந்து வேளாளனாகி அதிலிருந்து முதலியாராக உயர்வான்.

“கள்ளர் மாட்டிறைச்சி தவிர மற்ற விலங்குகளை உண்பதோடு போதைதரும் மதுவகைகளையும் கட்டுப்பாடின்றிப் பயன்படுத்துவர். வழக்கமாக* பயிர்த்தொழிலாளராகவும், வயல் வேலையாள்களுமாக உள்ள இவர்களுள் பலர் ஊர்க் காவலர்களாகவும் மற்ற இடங்களிலும் காவல் பணியாளர்களாகவும் தொழில் செய்கின்றனர். பலர் தங்கள் வாழ்க்கையை நடத்தத் திருட்டையும் கொள்ளையையுமே நம்பியுள்ளனர். திருச்சிராப்பள்ளி நகரத்தில் குடியிருப்பவர்கள் கள்ளர் சாதியினைச் சேர்ந்த ஒருவனை இந்தக் கள்வர்களிடமிருந்து தங்களைக் காத்துக் கொள்ள, பணியில் அமர்த்திக் கொள்ள வேண்டிய கட்டாயத்திற்கு உட்பட்டவர்களாக உள்ளனர். அவ்வாறு வைத்துக் கொள்ளும் வழக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுப்பார்களேயாயின் அவர்கள் தங்கள் உடைமையினைப் பறிகொடுக்க நேரிடும். இதற்கு மாறாகக் கள்ளன் ஒருவனைப் பணியாளனாக வைத்துக் கொண்டிருக்கும் வீட்டில் எதிர்

---

* சென்னை ரெவியூ - *1899*, (Madras Review, 1899.)

பாராது திருட்டு ஏதேனும் போய்விடுமானால் திருட்டுப்போன பொருள்கள் மீட்கப்பட்டு உரியவரிடம் சேர்ப்பிக்கப்படும். மதுரை நகரில் சில தெருக்களில் ஆண்டு ஒன்றுக்கு ஒரு வீட்டிற்கு நான்கணா என்று கள்ளர் சாதித் தலைவன் வசூலித்துக் கொண்டு அதற்கு ஈடாக அத் தெருக்களில் திருட்டேதும் நிகழாமல் பாதுகாப்பு அளிக்கிறான் என நான் கேள்விபட்டேன்'' என்று 1891-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு எச். எ. ஸ்டுவர்ட் எழுதியுள்ளார். ''கள்ளர், மறவர், அகமுடையார் ஆகிய சாதிகளைச் சேர்ந்தவர்களே தென் மாவட்டங்களில் நிகழும் குற்றங்களில் பெரும்பாலானவற்றிற்குக் காரணமானவர்கள். இது அவர்களுடைய மக்கள் தொகையின் எண்ணிக்கையின் விகிதத்தைக் காட்டிலும் மிகவும் அதிகமானதாக உள்ளது. 1897-இல் சிறைச்சாலைகளின் மேற்பார்வையாளர்களின் முதல்வர் மதுரைச் சிறைச்சாலையில் உள்ள கைதிகளில் 42 சதவீதத்தினரும் பாளையங்கோட்டைச் சிறைச்சாலையில் உள்ள கைதிகளில் 30 சதவீதத்தினரும் இந்த மூன்று சாதிகளுள் ஏதாவது ஒரு சாதியைச் சேர்ந்தவர்களாக உள்ளனர் எனக் கூறியுள்ளார். 1894-ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் 137 கால்நடைத் திருட்டுக்களை இம்மூன்று சாதிகளைச் சேர்ந்தவர்கள் நிகழ்த்தியிருக்க, மற்றச் சாதியினர் 47 திருட்டுக்களை மட்டுமே நிகழ்த்தியுள்ளனர். இது இம்மூன்று சாதியினையும் சேர்ந்தவர்களுள் 1497 பேருக்கு ஒருவர் திருட்டு நிகழ்த்தியுள்ளதாக ஆகும். இதற்கு மாறாக மற்றச் சாதியார்களுள் 37, 830 பேருக்கு ஒருவரே திருட்டு நிகழ்த்தியவர்களாக உள்ளனர். திருச்சிராப்பள்ளி, மதுரை ஆகிய மாவட்டங்களிலும் இவர்களைப் பற்றியதான குற்றச் செயல்களின் புள்ளி விவரங்கள் மோசமானவையாகவே உள்ளன. அண்மைக் காலம்வரை குடிக்காவல் எனக் கூறப்படும் அச்சுறுத்திப் பொருள் பறிக்கும் முறையினை இவர்கள் மேற்கொண்டிருந்தனர். இத்திட்டத்தின்படி ஒவ்வொரு ஊராருக்கும் தங்கள் ஊரில் திருட்டு நிகழாமல் காக்க ஒரு குறிப்பிட்ட தொகையினைச் செலுத்தி வந்தனர் அத்தகைய தொகையைச் செலுத்துவதில் நிலுவை இருக்குமானால் அந்த ஊர்களில் உடனே கால்நடைத் திருட்டுக்களின் எண்ணிக்கை மிகுவதோடு எதிர்பாராத தீ விபத்துக்களின்

எண்ணிக்கையும் உயரும். அண்மையில் மதுரையைச் சார்ந்த ஊர் மக்கள் இத்தகைய பயமுறுத்தலுக்கு எதிராகக் கிளர்ந் தெழுந்தனர். இந்த அச்சுறுத்தலால் இயல்பாகவே பாதிப்புக்கு உள்ளான இடையர் சாதியைச் சேர்ந்த ஒருவனால் இந்த எதிர்ப்பு இயக்கம் தொடங்கப் பெற்று 1893 வரை நீடித்தது'' எனத் திரு பிரான்சிஸ் 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் கூறி யுள்ளார். இந்த எதிர்ப்பு இயக்கம் தங்கள் சாதியைச் சேர்ந்த பெண் ஒருத்தியை மயக்கி அழைத்துக்கொண்டு சென்றதோடு பின்னர் அவளுடைய மகளையும் அழைத்துச்சென்று இருவரை யும் தன்னுடைய கட்டுப்பாட்டின் கீழ் வைத்துக் கொண்ட கள்ளர் சாதிக் கயவன் ஒருவன் மீது இடையர் சிலர் கொண்ட கோபத்தால் மூண்டெழுந்ததாகும். 1896 – ஆம் ஆண்டு காவல்துறைச் செயல்முறை அறிக்கையில் கள்ளருக்கு எதிரானதான இந்த இயக்கம் பற்றிப் பின்வருமாறு கூறப் பட்டுள்ளது:- ''பல சிற்றூர்களில் காவல் முறைப்படி காவல் காரர்களாகக் கள்ளர்கள் பலர் இருந்தனர். காவல் முறைப்படி காவல்காரர்கள் அதற்கான கட்டணம் பெற்றுவந்தனர். சில இடங்களில் ஊராரின் பொருள்களைத் திருட்டிலிருந்து காப் பதற்காகத் திருட்டுப்போகுமானால் அதற்கு ஈடான தொகையை வழங்குவதற்காக வரி செலுத்தாதவர்களாக நிலத்தையும் அனுபவித்து வந்தனர். இந்த முறையினால் கள்ளர்களின் தொல்லைக்கு மிகுதியும் உள்ளானவர்கள் ஆட்டிடையர்களே. அவர்களுடைய மறியையும் வெள்ளாட்டையும் கள்ளர்கள் எளிதில் கவர்ந்து சென்றனர். செலுத்தப்படாத காவல் தொகையின் பாக்கிக்காக அவை அப்புறப்படுத்தப்பட்டன. அச்சுறுத்திப் பணம் பறிப்பதற்காகவும் ஆடுகள் திருடிச் செல்லப்பட்டன. இடையர் சாதியைச் சேர்ந்த ஒருவனால் தொடங்கப்பட்ட கள்ளர் எதிர்ப்பு இயக்கம் எங்கும் வேகமாகப் பரவியது. ஆயிரக் கணக்கில் மக்கள் கூடும் ஊர்க் கூட்டங்கள் நடத்தப்பட்டன. அவர்கள் கள்ளர்களை இனிக் காவலுக்கு அமர்த்திக் கொள்வதில்லை எனத் தங்கள் கலப்பையின் மீது ஆணையிட்டு முடிவெடுத்தனர். திருட்டுப் போகும் கால்நடை களுக்கு ஈடுதரவும் கள்ளர்கள் நெருப்புக்கு இரையாகுபவர் களுக்கு ஈடுதரவும் அவர்கள் தங்களுக்கான ஒரு நிதியை ஏற்

படுத்தினர். இரவில் ஊர்க்காவலினை மேற்கொள்ள அவர்கள் தங்களுக்குள்ளாகவே காவலர்களை ஏற்படுத்தினர். ஊருக்கு ஊர் திருட்டுச் செய்தியினை விரைவாக அறிவிக்க அவர்கள் ஊது கொம்புகளைப் பயன்படுத்தினர். கொம்புகளின் முழக்கத்தைக் கேட்டதும் வந்து சேராத ஊரார்களுக்கு அவர்கள் அபராதம் விதித்தனர். இதனால் வட பகுதியில் இருந்த கள்ளர்களில் பலர் தங்கள் நிலத்தை விற்றபின் தங்கள் ஊரினை விட்டு வெளியேறினர். சில இடங்களில் அவர்கள் எதிர்த்து நின்றனர். ஆறு மாதங்கள் குற்றங்கள் ஏதும் நிகழவில்லை. ஒருவன் தெரிவித்ததைப் போல மக்கள் வாளிகளைக் கூடக் கிணற்றடியிலேயே விட்டு வைக்கத் தொடங்கினர். ஓரிரு இடங்களில் கள்ளர்கள் ஒன்றாகக் கூடி ஊராரை எதிர்க்கத் தொடங்கினர். இதன் காரணமாகக் கலவரம் மூண்டது. ஓர் ஊரில் மூவர் கொலையுண்டதோடு கள்ளர் குடியிருப்புகள் நெருப்புக்கு இரையாயின. நெருப்பிட்டவர்கள் கோனார்களா, கள்ளர்களா என்பது இறுதிவரை கண்டுபிடிக்கப்படவில்லை. ஆகஸ்ட் மாதத்தில் திண்டுக்கல் உட்கோட்டத்தில் ஊரார் ஒன்றாகத் திரண்டு இரண்டு ஊர்களில் கள்ளர் குடியிருப்புக்களை நெருப்புக்கு உள்ளாக்கினர்.''

“வீடுகளில் கன்னமிடுதல், வழிப்பறி, கூட்டுக் கொள்ளை, திருட்டுக் கால்நடைகளைக் கவர்தல் ஆகியனவே கள்ளர்கள் வழக்கமாக ஈடுபடும் குற்றச் செயல்கள். அவர்கள் வளரி தடியினையும், மேற்குக் கடற்கரைப் பகுதியினைச் சேர்ந்தவர்கள் வைத்திருப்பதைப் போன்ற கத்தியினையும் வைத்திருப்பர். அவர்கள் வீடுகளில் கன்னமிடும்போது முதலில் கதவுக்குக் கீழாகச் சுவரினைத் துளையிடுவர். உருவில் சிறிய சிறுவன் அதன் வழியே ஊர்ந்து உட்சென்று மற்றவர்களுக்காகக் கதவின் தாழ்ப்பாளினைத் திறந்து விடுவான். தூங்கும் பெண்களின் நகைகளை இவர்கள் திருடமாட்டார்கள். திருடிய பொருள்களைச் சாக்கடை, கிணறு, வைக்கோல் போர் ஆகிய பாங்கான இடங்களில் பதுக்கி வைப்பர். சில சமயம் பொருளைப் பறிகொடுத்தவர்களிடம் துப்புக் கூலி எனப்படும் தொகையினை அச்சுறுத்திப் பெற்றுக் கொண்டு அதனை அவர்களுக்கே மீட்டுத்

தருவர். குற்றங்கள் இழைப்பதில் பொதுவாகப் பெண்கள் பங்கு கொள்வதில்லை. எனினும் திருடும் பொருள்களைச் செட்டி களிடம் விற்பதில் இவர்கள் ஆண்களுக்கு உதவுவர்'' எனத் திரு எஃப். எஸ் முல்லலெ கூறுகின்றார்.* "திருட்டுத் தொழில் தனக்கோ தன் இனத்திற்கோ இழிவு ஏற்படுத்துவதாக இவர் கள் கருதுவதில்லை. இவர்கள் திருட்டினைப் பிறப்புரிமையின் அடிப்படையில் தங்களுக்குரிய கடமையாக அமைந்த தொழி லாகக் கருதுவதே இதற்குக் காரணம் ஆகும். கள்ளன் ஒருவனை நீ எந்தச் சாதியினைச் சேர்ந்தவன் எனக் கேட்டால் அவன் கலக்கம் ஏதுமின்றித் தான் ஒரு கள்ளன் எனக் கூறுவான்'' என அப்பெ துபைஸ் குறித்துள்ளார்.

"பயணிகளை இரவில் வழிமறித்துக் கொள்ளை அடிப்பது கள்ளர்களின் முக்கிய தொழிலாகும். பெரியகுளத்திலுள்ள அம்மய்யநாயக்கனூரிலிருந்தும் மதுரையிலிருந்தும் செல்லும் சாலைகளிலேயே இவர்கள் இச்செயல்களில் அடிக்கடி ஈடுபடுவர். முதலில் வண்டி ஓட்டுபவனை அச்சுறுத்தி வண்டியின் போக்கினை மாற்றி அதனைச் சாலை ஓரத்துக் குழியில் இறக்குவர். பின்னர் கொள்ளைக்கு உட்படும் பயணிகளைத் தரையில் குனிந்து, சாலையை நோக்கியபடி வண்டிக்கு முதுகுகாட்டிய வர்களாக அமரச் செய்வர். கொள்ளையரில் சிலர் பின்னர் அவர்களுடைய மூட்டை முடிச்சுக்களைத் தேடி மதிப்புவாய்ந்த பொருள்களைக் கைப்பற்றுவர். இந்தக் கொள்ளைக் கூட்டத் தார் தற்பொழுது வழிப்பறிக் கொள்ளையினைத் தொல்லை யானதென அடியோடு கைவிட்டவர்களாக அரசு அலுவலர் களின் பணப்பெட்டிகளையும் கால்நடைகளையும் கவரும் எளிதானதும், நல்ல பொருள் வரவு தருவதுமான களவு களில் ஈடுபடுகின்றனர். கால்நடைகளைக் கவருவதிலேயே தற் போது இவர்கள் மிகுதியும் ஈடுபாடுடையவர்களாக உள்ளனர். கால்நடைகளை வசப்படுத்துவதில் இவர்கள் கெட்டிக்காரர்கள். சல்லிக்கட்டு (பார்க்க: மறவர்) இப்பகுதிகளில் மிகுந்த செல் வாக்குப் பெற்றிருப்பதற்கு இவர்கள் வாழ்க்கை நடத்த

---

* முந்து நூல் (op. cit.)

அன்றாடம் இது போலக் கால்நடைகளோடு போராட வேண்டியிருப்பதே காரணமாகலாம். திருடப்பட்ட் கால்நடைகள் அன்றே இரவோடு இரவாக அங்கிருந்து இருபது முப்பது மைல்கள் ஒட்டிச் செல்லப்படுகின்றன. பின்னர், பகல் முழுதும் தெரிந்தவர்கள் வீட்டிலோ காடு மலைகளிலோ மறைத்து வைக்கப்பட்டு மறுநாள் இரவு மறுபடியும் தொலைதூரத்திற்கு ஓட்டிச் செல்லப்பட்டு மறுபடியும் மறைத்துவைக்கப்படுகின்றன. எந்தத் திசையில் சென்று தேடுவது என அறியாதவரான கால்நடை உரிமையாளர் அதனைத் தேடிச் செல்வதில் இந்நிலையில் நம்பிக்கை அற்றவராக இருப்பார். எனவே அவர் ஊரிலுள்ள எல்லோருக்கும் நன்கு அறிமுகமானவரான இடையாளினைத் தேடிச் சென்று அவர் தன் கால்நடையினைத் திரும்பக் கொண்டு வரின் உரிய துப்புக் கூலி எனப்படும் தொகையினைத் தருவதாகக் கூறுவார். அது பெரும்பாலும் கால்நடையின் விலை மதிப்பில் பாதியளவினதாக இருக்கும். கள்ளன் திருட்டுப் போன எருதுகளைத் தேடிச் செல்வதாகக் கூறி விரைவில் திரும்பி வந்து, அவற்றைத்தான் கண்டுபிடித்து விட்டதாகக் கூறித் துப்புக் கூலியினைப் பெற்றுக் கொண்டு, கால்நடைக்கு உரியவனிடம் குறிப்பிட்டதொரு இடத்தைக் கூறி அங்குச் சென்றால் அவன் தன் கால்நடைகளைக் காணலாம் என அறிவிப்பான். அது பெரும்பாலும் ஆள் நடமாட்டமற்ற தனித்த இடமாக இருக்கும். உரியவன் அங்கு சென்று தன் கால்நடை கட்டப்பட்டிருப்பதைக் காண்பான். இவ்வாறு தரப்படும் தகவல் எப்பொழுதும் சரியானதாகவே இருக்கும். இம்முறைக்கு மாறாகக் கால்நடையைப் பறிகொடுத்தவன் காவலர்களிடம் வழக்குக் கொடுப்பானாயின் அவன் தன் கால்நடையைத் திரும்பப் பெற உதவ எந்தக் கள்ளனும் முன்வர மாட்டான். இறுதியில் அவை வேறு மாவட்டங்களுக்கோ திருவாங்கூருக்கோ கொண்டு சென்று விற்கப்படும். அல்லது தூத்துக்குடி துறைமுகம் வழியாக இலங்கைக்கு அனுப்பப்பட்டுவிடும். இதன் காரணமாகக் கால்நடைத் திருட்டு எதுவுமே காவலர்களிடம் தெரிவிக்கப்படுவதில்லை. கள்ளர்கள் எண்ணிக்கையில் மிகுதியாக வாழும் பகுதிகளில் மக்கள் தங்கள் வீடுகள் நெருப்புக்கு இரையாகாமல் இருக்கவேண்டிக் கீற்று வேய்வதற்குப் பதிலாக

ஓடுகள் வேய்வர் அல்லது மேலே தளம் இடுவர். கால்நடைகள் எப்பொழுதும் இரவு நேரத்தில் வீட்டுக்குள்ளாகவே கட்டி வைக்கப்படும். கள்ளர்கள் பற்றிய அச்சம் காரணமாக அவர் கள் அவற்றை இரவில் வயல்களில் விட்டுவைப்பதில்லை. நாள் தோறும் மாலையில் அவை கூட்டங்கூட்டமாகப் புழுதியைக் கிளறி எல்லோரையும் மூச்சுத் திணற வைத்தபடி ஊருக்குள் நுழைவதைக் காணலாம். ஒரு நாளின் 24 மணியில் 12 மணி நேரம் வயலில் நின்று எருவாகச் சாணமிட்டு வயலை வளப் படுத்த வேண்டிய அவை வீடுகளுக்கு வந்து சேர்க்கின்றன. எருமைகளை வீட்டுக்கு வெளியேயே கட்டிப் போடுவர். கள்ளர்கள் எருமைகளைத் திருடிச் செல்வதில் ஆர்வங்காட்டு வதில்லை. அவை விலை மதிப்பில் குறைந்தவை என்பதும் புதியவர்கள் பிடிக்க வரும்போது முரண்டு செய்பவை என்பதும் அவற்றை ஓர் இரவில் கொஞ்ச தூரமே நடத்திச் செல்ல முடியும் என்பதுமே அவற்றிடம் அவர்கள் ஆர்வங்காட்டாததற்கான காரணங்களாகும். கொள்ளையிலும், திருட்டிலும் மீள முடியா தபடி ஊறிப் போயுள்ள கள்ளர்கள் இன்றுவரை அரசு அதிகாரி களுக்கு நிரந்தரத் தலைவலியாய் உள்ளனர். மாவட்டத்தில் நிகழும் திருட்டுக்களில் பெரும்பாலானவற்றிற்கு இவர்களே காரணமாக உள்ளனர். இதற்காக இவர்கள் சற்றும் மன வருத்தம் கொள்வதில்லை. கள்ளன் ஒருவன் தங்கள் சாதியின் செயலை நியாயப்படுத்த ஒவ்வொரு வகுப்பாரும் ஒரு வகையில் திருடுகின்றனர் என்பதனை அரசு ஊழியர்கள் கையூட்டுப் பெறுவதையும், வழக்குரைஞர் பகைமையை வளர்த்து அதன் காரணமாக வழக்காடக் கிடைக்கும் கட்டணத்தைப் பெறுவ தையும் வணிகர் சாராயத்தில் தண்ணீரையும், சர்க்கரை யில் மணலையும் கலப்படம் செய்வதையும் போன்றவற்றை எடுத்துக் கூறிக் கள்ளன் திருடும் முறையில்தான் வேறுபாடு உள்ளது என்றான். மேலூரைச் சுற்றியுள்ள பகுதியில் இச் சாதியார் பெரியாறு திட்டத்தின் கீழ் அண்மையில் அப்பகுதியில் வந்து பாயும் நீரினைப் பயன்படுத்தி நன்செய் பயிர்கள் செய்வ தில் ஈடுபட்டவர்களாகக் கால்நடைத் திருட்டை அடியோடு கைவிட்டுவிட்டனர். அவ்வூருக்குத் தெற்கே உள்ள சில ஊர்க் காரர்கள் களவில் ஈடுபடுவது கூடாது எனவும், இலங்கைக்கும்

பிற வெளிநாடுகளுக்கும் கூலிகளாகக் குடிபெயர்ந்து சென்றுள்ள பெண்கள் அனைவரையும் திரும்ப அழைத்துக் கொள்வது என்றும் தங்களுக்குள் பேசி உடன்படிக்கை எழுதி அதனைப் பதிவும் செய்துள்ளனர். மேலும் வயல்களிலிருந்து வறட்டிக்காகச் சாணத்தை எடுப்பதையும், குடிநீருக்கான ஊருணிகளில் இறங்கி அவற்றின் தூய்மையைக் கெடுப்பதும் போன்ற சிறு குற்றங்களையும் கைவிடுவதாக இவர்கள் செய்துள்ள முடிவுகள் மற்றச் சாதியார்களுக்குத் தலைக்குனிவை ஏற்படுத்தும் முன்னேற்ற வழிபட்ட செயல்களாகும். கள்ளர்கள் மீது பல்வேறு பழிகள் சுமத்தப்பட்டாலும் அவர்களிடம் காணப்படும் நல்ல பண்புகளையும் ஒத்துக்கொண்டே ஆக வேண்டும். கற்புடைமை பேணும் பெண்களின் ஒழுக்க நெறிப்பட்ட நடத்தையும், வீட்டையும் ஊரையும் சுற்றியுள்ள பகுதிகளைத் தூய்மை பேணிக் காப்பதும் அளவோடு குடிப்பதுமான பழக்கமும் அவற்றுள் குறிப்பிடத்தக்கவை. கள்ளர்கள் வாழும் ஊரில் உள்ள கள்ளுக் கடையால் லாபம் அடைவது மிக அரிது.''

அண்மையில் வெளியான ஒரு குறிப்பிலிருந்து* துப்புக் கூலி பற்றிய பின்வரும் தகவல்களை நான் பெற்றேன்:- ''கால்நடைத் திருட்டுக் குற்றத்திற்குக் கள்ளர்களே பெரிதும் பொறுப்பாக உள்ளனர். பெரும்பாலும் துப்புக்கூலியினைப் பெற்றுக் கொண்டு அவர்கள் திருடிச் சென்ற கால்நடைகளைத் திரும்பக் கொண்டு விட்டுவிடுகின்றனர். அலுவலகக் குறிப்புகளில் இத்தகைய திருட்டுப்பற்றிய பதிவுகள் மிகச் சிலவே. கால்நடையினைப் பறிகொடுத்த யாரும் அதனைப் பற்றி வழக்குப் பதிவு செய்ய நினைப்பதில்லை. அவர்கள் அது கயிற்றை அவிழ்த்துக் கொண்டு எங்கேனும் மேயச் சென்றிருக்கும் என்றே முதலில் நினைக்கின்றனர். துப்புக்கூலி முறை, கால்நடையைத் திருட்டுக் கொடுத்தவன் அதனைத் திரும்பப் பெற உதவுகின்றது. அவன்

---

* சட்டமும் குற்றவியலும் பற்றியதான செய்தித் தொகுப்பு 1, 3. 1908. வேலூர். (Illustrated Criminal Investigation and Law Digest, 1, 3,1908, Vellore.)

துப்புக் கூலியாகத் தன் கால்நடையின் மதிப்பில் பாதியினைத் தந்தால் போதுமானது. அவன் இழந்த கால்நடையினைத் திரும்பப் பெறும்போது லாபமானதொரு உடன்பாட்டினைச் செய்துகொண்ட முழுத் திருப்தியோடு இறுதியில் வீடு திரும்பு கின்றான். மனக்குறைப்பட்டுக் கொள்ள இந்த உடன்பாட் டில் இடமில்லை. அதற்கு மாறாக உழவு வேலைகள் மேற் கொள்ள வேண்டிய சமயத்தில் தன் எருதுகள் தனக்குக் கிடைத் ததில் அவன் மனமகிழ்ச்சியே அடைகின்றான். உழவனுக்கு ஆண்டு முழுதும் எருதுகளின் உதவி தேவைப்படுகிறது. பருவ மழை பொய்த்துவிடும் சமயங்களில் வேண்டுமானால் அவை அவனுக்குச் சுமையாக இருக்கலாம். நீண்ட வறட்சிக்குப் பின் மறுபடியும் நல்லதொரு மழை பெய்தவுடன் ஒவ்வொரு உழவ னும் தன் நிலத்தில் சென்று ஏர் உழத் தொடங்கிவிடுவான். அத் தகைய சமயத்தில் அவனுடைய எருதுகள் திருடப்படுமானால் அது அவன் வயிற்றில் அடிக்கப்பட்டதாகவே ஆகும். அவன் வருங்கால வாழ்வுக்கு வழியற்றவனாவான். அப்போது வாட கைக்கும் எருதுகள் கிடைக்கமாட்டா. இழந்த தன் எருதுகளை அதுபோன்ற சமயத்தில் திரும்பப் பெற அவன் எதனை வேண்டுமாயிலும் கொடுக்க முன் வருவான். அதுபோன்ற சம யங்களில் கண்ணோட்டமற்ற துப்புக்கூலி முறை அவன் உத விக்கு வருவதால் அவன் அதனை நாடிச் செல்கிறான். அதன் உதவியால் உடனுக்குடனோ சற்றுக் காலங்கடந்தோ அவன் தன் எருதுகளைத் திரும்பப் பெறுகின்றான். இதற்கு மாறாக அவன் காவல்துறையினரிடமோ குற்றவியல் நடுவரி டமோ சென்று வழக்குப் பதிவு செய்வானாயின் இழந்த எருது களைத் திரும்பப் பெறுவதற்கான வழி அடைபட்டுப்போகும். உழவு மாடுகளைத் திருட்டுக் கொடுத்தவன் எடுக்கும் நட வடிக்கைகளை உளவு அறிந்து சொல்லத் துப்புக்கூலி பெறுவோ ரின் கையாட்கள் ஆங்காங்கே வேவு பார்த்தபடி இருப்பர். வழக்குக் காவல்நிலையத்திற்குச் சென்று விட்டது எனத் தெரிந்து கொண்டவுடன் எப்படியும் தங்களிடமுள்ள எருது உரியவருக்குச் சென்று சேரமுடியாதபடி பார்த்துக் கொள்வர். இருவருக்கும் மிக நெருங்கிய ஒருவர் வேண்டுமானால் அது போன்ற சமயத்தில் அவர்களிடையே சமரசம் செய்து வைத்து

வழக்குத்தொடுத்தவன் தன் எருதுகளைத் திரும்பப் பெற உதவக் கூடும். இது போன்ற சமயங்களில் திருடப்பட்ட கால்நடை ஊர்ப்பட்டியிலே அடைக்கப்படும். இவ்வாறு மற்றவர் நிலத்தில் மேயச்சென்று ஊர்ப்பட்டியில் அடைக்கப்பட்ட கால் நடைகளைத் திரும்பப் பெறுவதை ஒத்ததே இம்முறை. குற்றம் புரிந்தவனைஅதிகாரிகளிடம் ஒப்படைக்கப் போவதில்லை என இரு சாராரும் முழு மனத்துடன் ஆணையிட்டுக் கொண்ட பின்னரே இவ்வாறு ஊர்ப்பட்டி வாயிலாகக் கால்நடைகள் திரும்பப் பெறப்படும் முறை மேற்கொள்ளப்படுகிறது.''

முன்பு கூறிய வளரி தடியினைப் பற்றி முனைவர் ஒப்பெர்ட் எழுதுவதாவது:-* ''மான் வேட்டையாடும்போது மறவர்களும், கள்ளர்களும் பூமராங்கைப் பயன்படுத்துகின்றனர். சென்னை அருங்காட்சியகத்தில் மூன்று வளைதடிகள் (தந்தத்தால் இரண்டும், மரத்தால் ஒன்றும்) தஞ்சாவூர் போர்ப்படைச் சாலையிலிருந்து பெற்று வைக்கப்பட்டுள்ளன. புதுக் கோட்டை அரசரின் படைக்கலங்களுள் மரத்தாலான வளைதடிகள் எப்போதும் இருப்பில் இருக்கும். இவற்றுக்கான தமிழ்ப் பெயர் வளைதடி என்பதாகும்.'' வளைதடி தொடர்பாகப் புதுக்கோட்டை அரசின் திவான் எனக்குப் பின்வருமாறு எழுதித் தெரிவித்துள்ளார். ''வளரி எனப்படும் வளைதடி சேகேறிய மரத்தாலான குட்டையான போர்க் கருவியாகும். சிலபோது இதனை இரும்பாலும் செய்வர். பிறை வடிவினதான இதன் ஒரு முனை மற்றொரு முனையைவிடத் தடித்ததாகவும் வெளிப்பக்கம் கூர்மையாக்கப்பட்டதாகவும் இருக்கும். இதனை வீசுவதில் பயிற்சி பெற்ற ஆண்கள் மெலிந்த முனையினைக் கையில் பிடித்துத் தோளுக்கு மேலே தூக்கிச் சிலமுறை அதனைச் சுற்றி வீழ்த்தப் படவேண்டிய குறியின் மீது மிக வேகமாகச் சென்று தாக்குமாறு குறிபார்த்து எறிவர். ஒரே வீச்சில் சில விலங்குகளையும், சிலசமயம் ஆள்களைக் கூட வீசி வீழ்த்தக் கூடிய வளையெறி வல்லுநர்கள் உள்ளதாகக் கூறப்படுகிறது. காட்டுக் கோழி,

---

* சென்னை அறிவியல் இலக். இதழ்கள், XXV (Madras Journ. Lit. Science. XXV.)

முயல் ஆகியனவற்றை வேட்டையாட இன்றுங்கூட வளைதடி எப்போதாவது பயன்படுத்தப்படுவதாகக் கூறப்படினும் மேற்கூறியது போன்ற வல்லுநர்கள் இந்த மாநிலத்தில் தற்போது இருப்பதாகத் தெரியவில்லை. இதன் பயன்பாடு பழைய வரலாறாகப் போய் விட்டது என்றே கருத வேண்டியுள்ளது. சென்ற நூற்றாண்டில் பாளையக்காரர்களுக்கிடையேயான போரில் இக்கருவி குறிப்பிடத்தக்கதாக இருந்துள்ளது என்பது வாய்வழி வரலாறாக வழங்கி வருகின்றது. இன்று அது முரடர்களான கள்ளர், மறவர் சாதியைச் சேர்ந்த போர் வீரர்களின் வழித்தோன்றல்களின் இல்லங்களில் செயலற்று உறங்குகின்றது. சென்ற நூற்றாண்டில் கண்டோர் அஞ்சும்படியாகப் பயன்படுத்தப்பட்ட அதனை இன்று அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த மற்றப் போர்க் கருவிகளுடன் பழம்பெருமையின் சின்னமாகப் பூசை அறையில் வைத்துப் பாதுகாத்து வருகின்றனர். ஆண்டுதோறும் ஆயுதபூசை நாளில் (படைக்கருவிகளுக்கும் தொழிற் கருவிகளுக்கும் பூசையிடும் நாள்) அதனை வெளியே எடுத்துச் சுரண்டிச் சுத்தப்படுத்தி மீண்டும் அதற்குரிய இடத்தில் சேர்ப்பித்து விடுகின்றனர்.''

1891 கணக்கெடுப்பின்படி கள்ளர்களின் உட்பிரிவுகள் எண்ணிக்கையில் மிகப் பலவாகப் பதியப்பட்டுள்ளன. ஈசங்க நாடு (விசங்குநாடு), குங்கிலியன், மேநாடு, நாட்டு, பிரான மலைநாடு, சிறுகுடி என்பன அந்த உட்பிரிவுகளாம். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் பதியப்பட்டுள்ளபடி, ''மதுரையைச் சேர்ந்த கள்ளர்கள் பத்து அகமணக்கட்டுப்பாடு உடைய முக்கிய பிரிவுகளாக உள்ளனர்.* அவை அவர்கள் வாழும் நிலப்பகுதியினை அடிப்படையாகக் கொண்டமைந்தவை. அவை வருமாறு:-

1. மேல் நாடு
2. சிறுகுடி நாடு
3. வெள்ளூர் நாடு
4. மலைக்கோட்டை நாடு

* மேல் நாடு, சிறுகுடி, மேலக்கோட்டை, புறமலை ஆகிய நான்கு பிரிவுகளே அகமணக்கட்டுப்பாடு உடையன என எனக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

5. பாகனேரி
6. கண்டரமாணிக்கம்
7. கண்டதேவி
8. புறமலை நாடு
9. தென்னிலை நாடு
10. பாளைய நாடு

புறமலை நாட்டின் பிரிவின் தலைவன் இடையர்களால் தேர்வு செய்யப்பட்டு அப்பதவியில் அமர்த்தப்படுகிறான் எனக் கூறப்படுகிறது. கள்ளர், இடையர் ஆகிய இரு சாதியாருக்கும் இடையே இது போன்ற உறவு ஏற்படக் காரணம் என்ன என்பது தெளிவாகப் புலப்படவில்லை. நாடு என்பது இங்கு ஒரு வட்டாரத்தைக் குறிக்கும் பின்னிணைப்பாகும். இப் பிரிவுகள் மேலும் பல புறமணக்கட்டுப்பாடு உடைய வகுப்புகள் எனப்படும் உட்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. மேல் நாட்டுக் கள்ளர்கள் வடக்குத் தெரு, கிழக்குத் தெரு, தெற்குத் தெரு என மூன்று உட்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். சிறுகுடி கள்ளர்கள் ஒவ்வொரு வகுப்பாரும் தாங்கள் வழிபடும் தெய்வத்தின் பெயர்களான ஆண்டி, மண்டை, அய்யனார், வீர மாகாளி என்பன போன்றவற்றைத் தங்கள் வகுப்பாரின் பெயராகக் கொண்டுள்ளனர். வெள்ளூர் நாட்டுக் கள்ளர்களின் வகுப்புப் பெயர்கள் கேட்க விசித்திரமானவை. வேங்கைப் புலி, வெக்காலிப்புலி, செம்புலி, சாமிப்புலி, சம்மட்டிமக்கள், திருமான், சாயும்படைதாங்கி என்பன அவற்றுள் சிலவாம். தஞ்சாவூர் கள்ளர்களில் ஒரு பிரிவினர் தங்கள் வகுப்புக்களுக்குப் பல்லவ ராசா, தஞ்சாவூர் ராசா, தெற்கை வென்றவன், வல்லமை உடைய மன்னன் என்பன போன்ற பலவகை உயர்பட்டப் பெயர்களை உடையவர்களாக உள்ளனர்.

மதுரை, தஞ்சாவூர் மாவட்டங்களைச் சேர்ந்த பகுதிகள் சில நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. நாடு என்ற இப்பெயர் கள்ளர்கள் வாழும் பகுதிகளுக்கு உரியனவாகும் எனத் திரு நெல்சன் கருதுகின்றார். ஒவ்வொரு நாட்டிலும் அதில் வாழும் பல சாதியினைச் சேர்ந்த மக்களிடையே எழும் வழக்குகளைத் தீர்த்து வைப்பதில் முன்னிற்பவன் அந்த நாட்டின் சாதியைச் சேர்ந்த நாட்டானே. சிவகங்கைச் சமீனைச் சேர்ந்த தேவ

கோட்டையைச் சுற்றிலும் பதினான்கு நாடுகள் உள்ளன. இந்த நாடுகளைச் சேர்ந்த முகவர்கள் கண்டதேவியில் உள்ள சுவர்ண மூர்த்தி சாமியின் ஆண்டுவிழாத் தொடர்பாகப் பேசி முடி வெடுக்க கண்டதேவியில் கூடுவர். அதே சமீனில் உள்ள ஊஞ் சனை, செம்பொன்மாரி, இறவாச்சேரி, தென்னிலை ஆகிய நான்கும் ஒரு குழுமமாக அமைந்துள்ளன. இவற்றுள் இறுதியில் கூறப்பட்ட தென்னிலை நாடே தலைமை தாங்குதற்குரியது. சாதிக்குள் மூளும் எல்லா வழக்குகளும் அங்கேயே தீர்க்கப்பட வேண்டும். திருமணம் தொடர்பான உறவுகளில் இந்த நான்கு பிரிவுகளும் ஒரே அகமணக்கட்டுப்பாடுடைய பிரிவாக உள்ளன. அவை மேலும் பல கரைகள் எனப்படும் - குலங்களாக-உட் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. வல்லம்பர்களிடையே இந்தக் கரை என்ற பிரிவு ஆண் சந்ததிகளின் வழிப்பட்டுச் செல்பவை. ஆனால் கள்ளர்களிடையே கரைப் பிரிவு நிலவுடமை தொடர் பாக அமைபவை. ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதி ஒரு கரையைச் சேர்ந்த பிரிவினருக்கு மட்டுமே உரிய உடமையாக விளங்கும். அப்பகுதியின் சட்டப்படியான நில உரிமையாளர்கள் அக் கரைப் பிரிவினைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுவர். ஒருவன் தன் நிலத்தை விற்க முற்படுமுன் கரையைச் சேர்ந்த முகவர்கள் உடன்பாட்டினைப் பெறவேண்டும. சிவகங்கையைச் சேர்ந்த நாட்டார் கள்ளர்கள் கிளை அல்லது பிரிவு எனப்படும் புற மணக்கட்டுப்பாடு உடைய கிளைகளாகப் பிரிவுபட்டுள்ளனர். அவை மறவர்களிடையே வழக்கில் உள்ளதைப் போலப் பெண் கள் வழிப்பட்டவை. பிராமணர்கள் உள்ளிட்ட சில சாதி யாரிடையே ஒருவன் தன் சகோதரியின் மகளை மணந்து கொள்ளும் வழக்கம் உள்ளது. இது நடைமுறைக்கு முழுதும் இயையாததொரு வழக்கம். இந்த வழக்கம் மேற்குறிப்பிட்ட முறையிலான கிளைகளையுடைய கள்ளர்களிடையே அமைய வாய்ப்பில்லை. ஒரு சிறுமியின் தாய்மாமனும், அச்சிறுமியும் ஒரே கிளையினராக அமைந்து விடுவதுதான இவ்வாறு இவர் களிடையே உடன்பிறந்தவன் மகளை மணக்கும் வழக்கு அமைய இயலாமல் போவதற்கான காரணமாகும். ஆனால் உடன்பிறந்த சகோதரன் சகோதரி ஆகியோரின் சந்ததிகள் தங்களிடையே மணஉறவு கொள்ள வழி உள்ளது. இதற்குக்

காரணம் அவர்கள் வேறு வேறு கிளையினைச் சார்ந்தவர் களான தங்களுடைய அன்னையரின் கிளையினைச் சேர்ந்தவர் களாக இருப்பதேயாகும்.




மேலே தரப்பட்டுள்ள உதாரணத்தில் மீனாட்சியும் கறுப் பனும் ஒரே கிளையைச் சேர்ந்தவர்களாக உள்ளதால் மீனாட்சி கறுப்பனை மணந்து கொள்ள முடியாது. என்றாலும் அவள் வேறு கிளையினைச் சேர்ந்த இராமனை அவன் எவ்வளவுதான் தன்னைவிட வயதில் சிறியவனாக இருப்பினும் மணந்து கொள்ளக் கடமைப்பட்டவள்,

சிவகங்கைக் கள்ளர்களிடையே ஒரு கிளையைச் சேர்ந்த ஒரு கள்ளன் இறக்கும்போது இறந்து போனவரின் உடமை களுக்கு உரிமையுடையவன் அந்தக் கிளையினைச் சேர்ந்த மற்ற ஆண்களுக்குப் புதிய துணி வழங்க வேண்டும் என்ற வழக்கம் உள்ளது. அவ்வாறு துணியினைப் பெறும் ஆடவர்கள் அதனைத் தன்னுடன் பிறந்த சகோதரிக்கு வழங்கி விட வேண்டும். அவள் உடன்பிறந்தவன் அவ்வாறு தராது போவானாயின் அவளு டைய கணவன் அதனைத் தன்னை அவமானத்திற்கு உள்ளாக் கியதாகக் கருதி அவளை விலக்கி வைத்து விடுவான்'' என்று 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப் பட்டுள்ளது. புதுக்கோட்டை, தஞ்சாவூர் பகுதிகளைச் சுற்றி வாழும் கள்ளர்களிடையே பட்டப்பேரு என வழங்கப்படும் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப்பெயர்கள் உள்ளன. அவர் கள் முத்து உடையான், கறுப்ப தொண்டமான் என்பது போலத் தங்கள் குலப்பெயரைப் பட்டப்பெயராகப் பயனபடுத்துகின் றனர். தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் கள்ளர்கள்

உட்பிரிவுகள் ஓநாயன், சிங்கத்தான் என்பது போல மேலும் பல சிறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதாகக் குறிக்கப் பட்டுள்ளது.

புறமலை நாட்டைச் சேர்ந்த கள்ளர்கள் சுன்னத்துச் செய்து கொள்ளும் விசித்திரமான வழக்கத்தை மேற்கொள் கின்றனர். இந்த வழக்கத்தின் தோற்றம் உறுதியாகக் கூற முடியாததாக உள்ளது. மதுரை மாவட்டக் கையேட்டில் தங்கள் ஆட்சி முகமதியர் படையெடுப்பால் வீழ்ந்தவுடன் முகமதியர் களால் கட்டாயமாக மதம் மாற்றப்பட்ட குறும்பர்கள் வடக்கு நோக்கி ஓடி வந்தபின் தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டு வரும் வழக்கம் இது எனக் குறிக்கப்பட்டுள்ளது. சுன்னத்துச் சடங்குக் காக நிச்சயிக்கப்பட்ட நேரம் நெருங்கியதும் சடங்கு செய்து கொள்ளும் சிறுவனை அவன் தாய்மாமன் ஊருக்குப் புறத்தே உள்ள தோப்புக்கோ ஒரு வெட்டவெளிக்கோ தன் தோளில் வைத்துத் தூக்கிச் செல்வான். அங்குக் கூடியுள்ள அனை வருக்கும் வெற்றிலை வழங்கிய பின் ஒரு நாவிதன் சடங்கினைச் செய்து முடிப்பான். அந்த இடத்திற்குச் சிறுவனைத் தூக்கிச் செல்லும்போது வழிநெடுகவும், சடங்கின்போதும் சங்கு முழக் கப்படும். அச் சிறுவனுக்கு அப்போது புதிய ஆடைகள் புனை விப்பர். மதுரை மாவட்ட விவரக் குறிப்பில், "ஒவ்வொரு கள்ள இளைஞனும் தன் அத்தை மகளை மணந்து கொள்ளும் உரிமையை வற்புறுத்தலாம். அவனுடைய சுன்னத்துச் சடங்குக் கான செலவினை அவனுடைய அத்தையே ஏற்றுக் கொள்ள வேண்டும். அதே போன்று ஒவ்வொரு சிறுமியும் பூப்படையும் போது மேற்கொள்ளப்படும் சடங்குகளுக்கான செலவுகளை அவளுடைய தாய்மாமன் ஏற்றுக் கொள்ள வேண்டும். இவ் வாறு வற்புறுத்தப்படுவதற்குக் காரணம் அவன் தன் மகனுக்கே அவளை மணமுடித்துத் தர வேண்டும் எனக் கேட்கும் உரிமை பெற்றுள்ளமையாலேயே ஆகும். இந்த இரண்டு சடங்குகளும் ஒரே நேரத்தில் பல சிறுவர்களுக்கும், சிறுமிகளுக்கும் செய்து வைக்கப்படுகின்றன. குறிப்பிட்ட ஒரு நல்ல நாளில் சிறுவர் சிறு மியருக்கு நல்ல விருந்திட்டுச் சிறந்த ஆடைகளை அணிவித்து ஆற்றங்கரைக்கு அழைத்துச் செல்வர். பெண்களின் அன்னையர்

வாழையிலையில் விளக்குச் செய்து ஏற்றி அதனை ஆற்று நீரில் மிதக்க விடுவர். சிறுவர்களுக்கு உள்ளூர் நாவிதன் சுன்னத்துச் சடங்கினை நிகழ்த்துவான்'' எனக் கூறப்பட்டுள்ளது. 1901 மக்கள் கணக்கெடுப்பு அறிக்கையில் சிறுகுடி கள்ளர்கள் பயன் படுத்தும் தாலியில் முகமதியர் சின்னமான பிறைநிலவும் விண் மீனும் பொறிக்கப்பட்டிருக்கும் எனக் கூறப்பட்டுள்ளது.

கள்ளர்களின் திருமணம் பற்றித் திரு எம். எஸ். நடேச சாஸ்திரி குறிப்பிட்டுள்ள* செய்திகள் வருமாறு:- ''மாட்டுப் பொங்கல் நாளன்று மாலை நேரம் நெருங்கும்போது கற்றாழை நார்க் கயிற்றிலும், துணியிலும் காசுகளை முடிந்து அவற்றைக் காளைகள் பசுக்கள் ஆகியவற்றின் கொம்பில் கட்டித் தொங்க விட்டபின் அவற்றைத் தப்பட்டை மற்றும் இன்னிசை முழக்கத் தோடு தெருவில் துரத்தி விடுவர். மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களைச் சார்ந்த ஊர்களில்–சிறப்பாகக் கள்ளர்கள் வாழும் ஊர்களில்-கன்னியர் எத்தகைய தீங்குக்கும் உள்ளாகாத வாறு காளைகளின் கொம்புகளில் கட்டப்பட்ட துணியினை அவிழ்த்துக் கொண்டு வந்து தங்களிடம் தரும் வீரமிக்க இளைஞர்களையே தங்களுக்குரிய கணவராக வரிப்பர். பர பரப்பான இசை முழக்கத்தாலும் தப்பட்டை ஒலியாலும் கொம்புகளில் சுற்றப்பட்ட பணமுடிப்புகளோடு காளைகள் அச்சமுற்று மிரண்டு தெருவில் ஓடும்படியாகத் துரத்துவர். மிரண்டு ஓடும் அவற்றைக் கூச்சலிட்டுக் கத்தும் மக்கள் மேலும் மிரட்சிக்கு உள்ளாக்குவர். கள்ள இளைஞன் ஒரு குறிப்பிட்ட காளையினைச் சுட்டிக் காட்டித் தான் அதனை அடக்கி அதன் கொம்பிலுள்ளதைக் கொண்டுபோகப் போவதாகக் கூறுவான். சில சமயங்களில் இந்த முயற்சி ஆபத்தில் முடிவதும் உண்டு. ஒரு காளையினைத் துரத்தி அடக்கும் செயலின்போது காயம் அடைவதைக் கள்ளர்கள் தங்களுக்கு ஏற்பட்ட பெரிய இழிவாகக் கருதுவர்.''

கிறித்து சகாப்தத்தின் தொடக்க காலத்தைச் சேர்ந்த

* இந்து விழாக்கள், விரதங்கள், சடங்குகள், 1903. (Hindu Feasts, Fasts and Ceremonies, 1903.)

புலவர் ஒருவரின் பாடலை எடுத்துக் காட்டித் திரு கனகசபை பிள்ளை* ஆயர்கள் இடையே அந்நாளில் நிலவிய இந்தப் பழக்கத்தைப் பின்வருமாறு விவரித்துள்ளார்:- "பெரிய நிலப் பரப்பு கூர்முட்களிட்டும், கம்பங்கள் நட்டும் வளைக்கப்படும். அவ் வளைவினுள் கொம்புகள் சீவிக் கூராக்கப்பட்ட வெறி கொண்ட காளைகளைத் துரத்தி விடுவர். அந்த வளைவினை நோக்கியபடி உயரத்தில் மேடை அமைத்து அதில் மணம் செய் விக்கப்படுவதற்குரிய ஆயர் குலக் கன்னியர் நின்றிருப்பர். ஏறு தழுவ முற்படும் ஆயர் குல இளைஞர்கள் முதலில் முதிய ஆலம் அல்லது அரச மரங்களின் கீழ் இருக்கும் தெய்வங்களின் உருவங் களை அல்லது குளக்கரையில் இருக்கும் தெய்வங்களை வணங்கிய பின் சிவந்த காந்தள் மலர்களாலும், ஊதா நிறக் காயா மலர் களாலும் ஆன மாலைகளை அணிந்து கொள்வர். முரசு முழக் கம் ஏறு தழுவுதல் தொடங்க இருப்பதை அறிவித்தவுடன் அந்த இளைஞர்கள் வளைவினுள் குதித்து முரசு முழக்கத்தால் மிரண்டு அவர்கள் மேல் பாய்வதற்காக முனைப்போடு சீறிய படி நிற்கும் காளைகளைத் தழுவி அடக்க முயல்வர். ஒவ்வொரு இளைஞனும் தான் தழுவி அடக்கத் தேர்ந்தெடுத்துள்ள காளை யினை நெருங்குவான். அக்காளைகளோ வாலை உயர்த்தியபடி அவர்களைத் தாக்கக் கொம்புகளை முன்னோக்கி நீட்டியபடிக் கோபத்தோடு அவர்கள் மீது பாய முற்படும். சில இளைஞர்கள் அஞ்சாது அவற்றை எதிர்கொண்டு அவற்றின் கொம்புகளைப் பிடிப்பர். சிலர் ஒரு பக்கமாக ஒதுங்கி அவற்றின் வால்களைப் பிடிப்பர். மிக்க ஆற்றல் வாய்ந்த சில இளைஞர்கள் அவை அவர்களைத் துள்ளித் தரையில் தூக்கி வீசும்வரை அவற்றைப் பிடித்துத் தொங்குவர். நற்பேறு வாய்க்கப் பெறாத இளைஞர் பலர் இதுபோல வீழ்ந்து படுவர். சிலர் உடலில் சிறு காயமும் படாது தப்ப, மற்றவர்கள் காளைகளின் கால்களால் மிதிக்கப் பட்டும் அவற்றின் கொம்புகளால் குத்தித் துளைக்கப்பட்டும் வீழ்வர். சிலர் காயம்பட்டுக் குருதி வழிய நேர்ந்தாலும் மீண்டும் காளைகளின் மீது பாய்ந்து பற்றுவர். காளைகளை அடக்குவதில் இறுதியில் வெற்றிபெறும் மிகச் சிலர் அன்றைய ஏறு தழுவலில் வாகை சூடியவர்களாக அறிவிக்கப்படுவர். அதன்

* ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர்-1904.

பின் பெரியோர்கள் ஏறுதழுவுதல் விழா முடிவுற்றதாக அறிவிப்பர். புண்பட்டவர்கள் வளைவிலிருந்து அகற்றப்பட்டு மருத்துவ உதவி அளிக்கப் பெறுவர். வெற்றி பெற்றவர்களும் அவர்களை மணக்க உள்ள கன்னியரும் அருகே உள்ள சோலைக்குச் சென்று மண ஏற்பாடுகள் நிகழும்வரை கூடியாடி மகிழ்வர்.

கள்ளர்கள் திருமணம் பற்றித் திரு நெல்சன் தந்துள்ள விவரம் வருமாறு:- "கள்ளர்களின் கருத்துப்படி ஓர் ஆணுக்கும் அவனுடைய அத்தைமகளுக்கும் இடையே ஏற்படும் மண உறவே பொருத்தமான மண உறவாகும். ஒருவனுக்கு அத்தகைய உறவு முறையிலான மணமகள் இருப்பாளானால் அவர்களுக்கிடையேயான வயதில் எவ்வளவு வேறுபாடு இருப்பினும் அவன் அவளையே மணந்தாக வேண்டும். பதினைந்து வயதுடைய ஒரு சிறுவன் அவனுடைய அத்தை மகள் முப்பது அல்லது நாற்பது வயதுடையவளாக இருந்தாலும் கூட அவளுடைய தந்தை அவனை வற்புறுத்துவானாகில் அவன் அவளை மணந்தாக வேண்டும்.ஒருவனுக்கு இத்தகைய அத்தை மகள் வாய்க்கவில்லையாயின் அவன் தன் அத்தை அல்லது ஒன்றுவிட்ட அத்தை மகள் அல்லது நெருங்கிய உறவினள் ஆகியவர்களுள் யாரேனும் ஒருவரை மணக்கக் கடமைப்பட்டவனாவான். அவனுடைய தந்தையோடு உடன்பிறந்த சகோதரனுக்கு ஒரு மகள் இருந்து அவள் தந்தை இவன் அவளை மணந்தாக வேண்டும் என வற்புறுத்தினால் இவன் அவளை அவளுடைய வயது வேற்றுமையைப் பொருட்படுத்தாது மணந்தே ஆக வேண்டும். மேற்குப் பகுதிகளைச் சார்ந்த கள்ளர்களின் பழக்கங்களில் ஒன்று விசித்திரமானது. ஒருத்தி ஒரே சமயத்தில் தொடர்ந்து பத்து, எட்டு, ஆறு, இரண்டு கணவர்களை உடையவளாக இருப்பாள். அவர்கள் அனைவரும் அவளுக்குப் பிறந்துள்ள குழந்தைகளுக்குத் தந்தையராகப் பொதுவாக வைத்து எண்ணப்படுகின்றனர். இதனினும் வியப்பிற்குரியது அவ்வாறு அவளுக்குப் பிறந்த குழந்தைகள் வளர்ந்த பின் பத்து, எட்டு அல்லது ஆறு தந்தையருக்குப் பிறந்தவர்கள் எனக் கூறிக் கொள்ளாமல் தங்கள் தந்தையர் எட்டும் இரண்டும் எனவும் ஆறும் இரண்டும் எனவும் நாலும் இரண்டும் எனவும் கூறிக் கொள்வதுதான்.

இவ்வாறு தந்தையரின் எண்ணிக்கையை இவர்கள் பிரித்துக் கூறிக் கொள்வதற்கான காரணம் என்னவென்று தெரியவில்லை. மணச்சடங்கு நிகழ்ச்சியின்போது மணமகனின் உடன்பிறந்தவள் மணமகளின் பெற்றோரின் இல்லம் சென்று அவர்களிடம் இருபத்தொரு காளி பணமும் ஒரு சேலையும் தருவதோடு அப்போதே மணமகள் கழுத்தில் குதிரையின் மயிர் ஒன்றினைக் கட்டி விடுவாள். அதன்பின் அவள் மணமகளையும் அவள் உறவினர்களையும் மணமகன் இல்லத்திற்கு அழைத்து வருவாள். அங்கு விருந்து நிகழும்.

விருந்துக்காக மறிகள் வெட்டப்படும். அனைவரும் மகிழ்ச்சியில் மூழ்கும்படியாகச் சாராயம் தாராளமாக வழங்கப்படும். அதன்பின் மணமக்கள் மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லப்படுவர். அங்கு இரு வீட்டாரும் தங்களுக்கிடையே வளரி தடியினை மாற்றிக்கொள்ளும் சடங்கு சிறப்புக்கு உரியதாக நிகழ்த்தப்படும். மணமகள் இல்லத்தில் இன்னொரு விருந்து நடைபெறும். அப்போது மணமகளின் பெற்றோர் அவளுக்கு ஒரு மரக்கால் அரிசியும் ஒரு கோழியும் பரிசளிப்பர். அதன் பிறகு அவள் தன் கணவனுடன் அவன் இல்லம் அடைவாள். மணம் நிகழ்ந்த முதல் பன்னிரண்டு மாதங்களின்போது மணமகளின் பெற்றோர் மணமக்களைத் திருவிழாக்களின்போது ஓரிரு நாள்கள் அழைத்து விருந்து வைப்பதோடு அவர்கள் திரும்பும்போது அவர்களுக்கு ஒரு மரக்கால் அரிசியும் ஒரு கோழியும் அன்பளிப்பாகக் கொடுத்தனுப்புவர். திருமணத்திற்குப் பிறகு வரும் முதல் பொங்கல் விழாவின்போது மருமகனுக்கு ஐந்து மரக்கால் அரிசி, ஐந்து இணை புதுப்பானைகள், தட்டுக்கள், ஐந்து சீப்பு வாழைப்பழம், ஐந்து தேங்காய், ஐந்து கட்டி வெல்லம் ஆகியனவற்றைப் பரிசாக அளிப்பது வழக்கம். கணவன் மனைவியரில் யார் ஒருவர் விரும்பினாலும் மணமுறிவினை எளிதில் பெறலாம். தன் மனைவியிடம் திருப்தியுறாத கணவன் தன் உடமைகளில் ஒரு பாதியினை அவளுக்குத் தர முன்வருவானாயின் அவளை மணமுறிவு செய்து அனுப்பிவிடலாம். அதே போல ஒருத்தி தன் கணவன் செலுத்திய நாற்பத்தொரு காளி பணங்களைத் திரும்பச் செலுத்தியபின் அவனைப்

பிரிந்து போகலாம். கைம்பெண் ஒருத்தி தன் விருப்பம்போல் ஒருவனை மணந்து கொள்ளலாம். அவ்வாறு மணக்க முன்வரு பவன் அவளுக்குப் பத்துப் பணம் பரிசளிக்க வேண்டும்.''

நாட்டார் கள்ளர்கள் இடையே மணம் செய்துகொண்ட ஒரு பெண்ணின் உடன்பிறந்தவன் ஒவ்வொரு ஆண்டும் பொங்கலின் போது அரிசி, ஆடு, சேலை ஆகியனவற்றை அவள் வாழ்நாள் முழுதும் தந்து வர வேண்டும் என்று மேலே தரப்பட்டுள்ள விவரங்கள் தொடர்பாக எனக்குத் தெரிவிக்கப்பட்டுள்ளது. வளரிதடியை மாற்றிக் கொள்ளும் வழக்கம் பலராலும் கைவிடப் பட்டு வருகின்றது. எனினும் 'வளரிதடியினை அனுப்பி மரு மகளை அழைத்துவா' என்ற பழமொழி இன்னமும் வழக்கில் உள்ளது. மணமகள் கழுத்தில் கட்டப்படுவதாகக் கூறப்படும் குதிரையின் மயிருக்குப் பதிலாகப் பருத்தி நூலிலேயே தாலி கோத்துக் கட்டப்படுவதாகத் தெரிய வருகிறது. குதிரை மயிராலான கழுத்து அணியினைப் பூப்படையாத சிறுமியரும், மணம் புரிந்துகொள்ளாத பெண்களும், கைம்பெண்களும் ஆகிய இவர்களே அணிந்து வருகின்றார்கள். இதே போன்ற கழுத்தணி யினை மறவர், வலையர், மொரச பறையர், புறமலைக் கள்ளர் ஆகிய பிற சாதியாரும் அணிந்து வருகின்றனர். புறமலைக் கள்ளர் பிரிவைச் சேர்ந்த பெண்களை அவர்கள் தங்கள் தாலி யோடு கோத்து அணிந்து கொள்ளும் முக்கோண வடிவிலான பதக்கத்தை வைத்து அடையாளம் கண்டு கொள்ளலாம். ''ஒரு சிறுமி பூப்படைவாளாயின் அவள் குழந்தைப் பருவத்திலிருந்து கழுத்தில் அணிந்து வந்த பாசிமணி மாலையை அகற்றிவிட்டுக் கள்ளர் சாதிப் பெண்களுக்கே உரிய குதிரை மயிராலான கழுத் தணியை அணிந்து கொள்கின்றாள். இதனை அவள், தான் இறக்கும்வரை கைம்பெண்ணாகிவிட்டாலும்கூடத் தொடர்ந்து அணிந்து வருவாள். செல்வர்களான கள்ளர்கள் குதிரை மயிருக்குப் பதிலாக வெள்ளியாலான கம்பி இழைகள் சில வற்றை முறுக்கிக் கழுத்தணியாக அணிவர். திருமங்கலத்தில் உள்ள பெண்களில் பலர் வியக்கத்தக்க வகையில் அளவில் பெரிய ஆறு, ஏழு அங்குலங்கள் நீளமுள்ள பதக்கங்களைக் கழுத்தில் அணிந்து கொள்கின்றனர்'' என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

1891 கணக்கெடுப்பு அறிக்கையில் "ஒரு கள்ளன் மணமுறிவுக்கு அடையாளமாகச் சாதியினைச் சேர்ந்தவர்கள் முன்னிலையில் ஒரு வைக்கோல் துரும்பினைத் தருவான். தமிழில் 'துரும்பினைக் கொடுத்தல்' என்ற வழக்கு மணமுறிவினையும், 'துரும்பினை ஏற்றல்' என்ற வழக்கு மணமுறிவுக்கு உடன்பாடு தெரிவித்தலையும் குறிக்கும்'' எனக் குறிக்கப்பட்டுள்ளது.

கள்ளருள் சில பிரிவினர் பிராமணப் புரோகிதர்களின் செல்வாக்குக்கு ஆட்பட்டவர்களாகப் புராண முறையிலான திருமணச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். வயது வந்தபின் பெண்களுக்கு மணம் செய்வித்தலே இவர்களுடைய வழக்கம் எனினும் பிராமண வழிப்பட்ட கள்ளர் சிலர் குழந்தை மணம் செய்வித்தலையும் மேற்கொள்கின்றனர். இந்த வழக்கத்தினைப் புறமலைக் கள்ளர்கள் தீவீரமாக எதிர்க்கின்றனர். அவர்களிடையே ஒரு பெண்ணை மணம் செய்து கொடுத்தபின் அவள் முதன்முதல் பிள்ளை பெற்றுக்கொள்ளும் வரை ஆண்டுதோறும் அவளுக்குக் கோழி, அரிசி, ஆடு, வெல்லம், வாழைப்பழம், வெற்றிலை, மஞ்சள், பல சரக்குகள் ஆகியனவற்றைப் பிறந்த வீட்டார் கொடுத்து வர வேண்டும் என்ற வழக்கம் உள்ளது. வயது வந்தபின் மணம் செய்விப்பதால் இவ்வாறு அன்பளிப்புத் தர வேண்டிய காலப் பகுதி குறைந்து அதிகப்படி செலவு மீதமாகின்றது. கள்ளர் பிரிவினர் சிலரின் திருமணம் தொடர்பாக நான் சேகரித்த தகவல்களின்படி ஒரு பெண்ணின் திருமணத்திற்கு அவள் தாய்மாமன் உடன்பாடு பெறுதல் இன்றியமையாதது எனத் தெரிய வருகின்றது. மண உறுதிச் சடங்கிற்கு மணமகன் தந்தையும் அவன் தாய்மாமனும் பெண் கேட்டுச் செல்வர். அங்கு விருந்து நடைபெறும். மணத்திற்காகக் குறிக்கப்பட்ட நாளினை மஞ்சள் தோய்த்த இரண்டு பனையோலைகளிலோ சிவப்புத் தாளிலோ எழுதுவர். தாய்மாமன்மார் அதனைத் தங்களுக்குள் மாற்றிக் கொள்வர். மணநாளன்று மணமகனின் உடன்பிறந்தவள் மலர், தேங்காய், வெற்றிலை, அகத்திக்கீரை, நெல், பால், நெய் ஆகியனவற்றை ஏந்திவரும் பெண்களோடு மணமகள் இல்லம் செல்வாள். ஒரு சேலையும் வண்ணானிடமிருந்து பெற்ற சிவப்புத் துண்டில் சுற்றப்பட்ட

தாலிச் சரடும் அடங்கிய கூடையினை மணமகன் உடன்பிறந்தவளோ அவன் குலத்தைச் சேர்ந்த வேறொரு பெண்ணோ ஏந்தி வருவாள். மணமகள் இல்லம் செல்லும் வழி நெடுக இரு பெண்கள் சங்கினை முழக்கியபடி இருப்பர். மணமகள் வீட்டைச் சேர்ந்தவர்கள் மணமகன் வீட்டிலிருந்து வந்தவர்களிடம் அவனுடைய குலம் பற்றிக் கேட்பர். அவர்கள் நாங்கள் அகல்ய கோத்திரத்தைச் சேர்ந்த தளவல நாட்டு இந்திர குலத்தவர் என்பது போல விடையிறுப்பர். மணமகன் உடன்பிறந்தவள் தாலியினை எடுத்துக் கூடியுள்ளவர்கள் தொட்டு வாழ்த்தும் படியாக அனைவரிடமும் காட்டிய பின் மணமகள் கழுத்தில் கட்டி அதற்கு மலர்களை அணிவிப்பாள். பின்னர் மணமகள் மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லப்படுவாள். அங்கிருந்து மணமக்கள் மறுநாள் மணமகள் இல்லம் திரும்புவர். மணமுடித்துக் கொண்ட புது மணமக்கள் ஒரு பலகையில் அமர்ந்திருக்க மஞ்சள் நீரும், சுண்ணாம்பும் மஞ்சளும் கலந்த சோறும் அவர்களைச் சுற்றி ஆரத்தியாகக் காட்டப்படும். அப்போது பெண்கள் "கில்லா, லல்லா, ல்லா; கில்லா, லல்லா, ல்லா" எனக் குலவை இடுவர். இச் சடங்கு குலவையிடல் எனப்படும். சிலபோது இதனைத் தாலிகட்டும்போதும் நிகழ்த்துவர்.

தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் கள்ளர்கள் திருமணம் தொடர்பாகப் பதியப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- "மணமகன் மணமகள் வீட்டிற்கு வந்து சேரும் நிகழ்ச்சி சிலபோது சிறப்பு வாய்ந்த நிகழ்ச்சியாக விளக்கப்பட்டுள்ளது. தன் தாய்மாமன் துணை வரக் குதிரையில் ஏறி மணமகள் இல்லம் அடையும் மணமகனையும் அவனுடன் வருவோரையும் மணமகள் வீட்டைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் குதிரை மேல் ஏறிச்சென்று எதிர்கொண்டு மணப்பந்தலுக்கு அழைத்துச் செல்வான். அங்கு மணமகளின் தந்தை அவனை எதிர்கொண்டு வெற்றிலை பாக்கில் ஒரு ரூபாய் வைத்து தருவார். மணமகளின் தாயார் அவன் பாதங்களைப் பாலாலும், நீராலும் கழுவிக் கால்விரல்களுக்கு மெட்டி அணிவிப்பாள். தாலியினை நூலில் கோப்பதற்குப் பதிலாக வெள்ளி அல்லது தங்கத்தாலான கழுத்துச் சங்கிலியில் கோத்திருப்பா. எனினும் கறுப்பன்

தெய்வம் கோபம் கொள்ளும் என்ற அச்சத்தால் பின்னர் அதனை நூலிலேயே கோத்துக் கொள்வர். மணமகன உடன் பிறந்தவளோ சுமங்கலியான வேறொருத்தியோ கையில் ஒரு விளக்கை ஏந்தி நிற்பாளெனினும் அது இடையில் அணைந்து போகுமேல் அபசகுனமாகப் போய்விடும் என்ற அச்சத்தால் அதனை ஏற்றாமலேயே வைத்திருப்பர். சில பகுதிகளில் தாலியினை மார்பில் தொங்கும்படியாக அணிவிப்பர். தன் கணவனோடு வாழ்ந்த வாழ்க்கையின்போது பல குழந்தைகளைப் பெற்றுக்கொண்டவள்கூட, விரும்பினால் அவனை விட்டுச் சென்று வேறொரு கணவனை மணந்து கொள்ளலாம். கைம் பெண்கள் மறுமணம் செய்து கொள்ளும் போது அவள் குழந்தைகள் இறந்துபோன கணவனுடைய வீட்டிலிருந்து வாழ்வது போல இங்கும் அவள் குழந்தைகள் முதல் கணவனுடைய குடும்பத்தைச் சார்ந்தவர்களாகவே இருப்பர். இந்த மறுமணம் தொடர்பாகக் கள்ளர் சாதிப் பெண்கள் பெற்றுள்ள உரிமையைப் பற்றி, "நூல் நூற்கின்ற கட்டையில் நூல் இல்லாதிருந்தாலும் இருக்கலாம் கள்ளர் சாதி பெண்கள் கழுத்து நூல் இல்லாது இருக்காது" என்ற பழமொழியும் "எந்த நூல் அறுந்தாலும் கள்ளர் சாதிப் பெண்கள் கழுத்து நூல் அறாது" என்ற பழமொழியும் தெளிவுபடுத்துவனவாம்.

ஒரு சிறுமி முதன்முதலாகப் பூப்படையும்போது கள்ளரில் சில பிரிவினர் ஏழு நாள்களோ ஒன்பது நாள்களோ தீட்டு மேற்கொள்கின்றனர். பதினாறாம் நாள் பூப்படைந்த பெண்ணின் தாய்மாமன் ஆடும் அரிசியும் சீர் கொண்டு வருவான். அவளைக் குளிக்கச் செய்து அலங்கரித்துப் பலகையில் அமர்த்தி அவளுக்கு முன்னே தண்ணீர், சுண்ணாம்பும் மஞ்சளும் கலந்த சோறு, நெல் நிறைந்த வெற்றிலை சொருகப்பட்ட எழுத்தாணியோடு கூடிய படி ஆகியனவற்றை ஆரத்தியாகச் சுற்றுவர். அவள் தலை, முழங்கால், தோள் ஆகியவற்றினைப் பணியாரங் கொண்டு தொட்டு அவைகளை வீசி எறிவர். பின் அப் பெண்ணை மணைப் பலகையினைச் சுற்றி அழைத்துச் செல்லும் ஒருத்தி, ஒரு சொம்பிலிருந்து அவள் கையில் வைத்திருக்கும் வெற்றிலை வழியே நீர் வழிந்து, சுற்றுவட்டத்தின் நான்கு

திசைகளிலும் தரையில் சிந்தும்படியாக ஊற்ற அத்திசைகளை நோக்கி அச்சிறுமி வணங்குவாள்.

ஒரு பெண் கருவுற்ற ஏழாம் மாதம் பொதுவாக ஒரு சடங்கு நடத்தப்படுகிறது. இதற்காக அவள் கணவனின் உடன் பிறந்தவள் பொங்கலிடுவாள். கருவுற்றவள் மணைப்பலகையில் அமர அவள் முன் அரிசியினை ஆரத்தி எடுப்பர். அதன்பின் அவள் எழுந்து நின்று குனிந்து கொள்ள அவளுடைய நாத்தனார் ஒரு வெற்றிலை அல்லது அரசிலை வழியாக அவள் முதுகில் வழிந்து போகும்படி பாலினை ஊற்றுவாள். விருந்தோடு இச்சடங்கு முடிவுறும். வெள்ளூர் நாட்டுக் கள்ளர்களிடையே அச்சமயத்தில் கருவுற்ற பெண்ணின் முதுகில் அரிசி மாவால் கோலமிட்டபின் அதன்மீது பால் வார்ப்பர் என 1901 மதுரை மாவட்டக் கணக்கெடுப்பு அறிக்கையில் குறிக்கப்பட்டுள்ளது. அவள் நாத்தனார் ஓர் அம்மியின் மீதும் அதே போலக் கோலமிட்டுப் பால் வார்த்துக் கருவுற்றவள் கல்லினைப் போல உறுதியான ஆண் குழந்தையைப் பெற்றெடுக்க வேண்டும் என வேண்டுவாள்.

ஒரு குடும்பத்தில் குழந்தை பிறக்குமானால் குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் முப்பது நாள்கள் தீட்டுக்கு உட்பட்டவர்களாகக் கருதப்படுவர். அந்த நாள்களில் அவர்கள் கோயிலினுள் நுழைய அனுமதிக்கப்படுதில்லை. நாட்டார் கள்ளன்களிடையே குழந்தை பிறந்து ஒரு மாதம் சென்ற பின் எப்பொழுது வேண்டுமாயினும் குழந்தைக்குப் பெயரிடலாம் என்ற பழக்கம் உள்ளது. புறமலைக் கள்ளன்களிடையே தலைச்சன் குழந்தைப் பெண்ணாக இருக்குமானால் அதற்கு ஏழாம் நாள் காது குத்தும் சடங்கினை நிகழ்த்திப் பெயரும் இடப்படுகிறது. "கள்ளர்கள் அனைவரும் சைவ சமயத்திற்கு உரியதான திருநீற்றினை முக்கியமான விழா நாள்களில் அணிகின்றனர். எனினும் அவர்கள் பொதுவாக வைணவ சமயத்தைத் தழுவியவர்களாகவே உள்ளனர். இறந்தவர்களைப் புதைப்பதே பெருவழக்கு. சாவுச் சடங்குகளின்போது சுருட்டுக்களைக் கூடியுள்ளவர்களுக்குப் புகைப்பதற்காக வழங்கும் பழக்கம் உள்ளது எனத் திரு பிரான்சிஸ்

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறியுள்ளார். குடும்பத்தில் சாவு நிகழ்ந்தால் ஒரு பானையில் சாணி, தண்ணீர், விளக்குமாறு, கொள்ளிக்கட்டை ஆகியனவற்றை இறந்தவரின் ஆவி திரும்ப வீட்டிற்கு வராமல் தடுப்பதற்காக முச்சந்தியிலோ வீட்டின் வாயிலிலோ வைப்பர்.*

"கீழ்நாட்டுக் கள்ளர்கள் இறந்தவர்களைப் புதைப்பதே பெருவழக்கு. அவ்வப்போது இறந்தவர்களைப் புதைத்த இடத்தில் கட்டப்பட்டுள்ள மேடைமீது விளக்கினை ஏற்றி வைப்பர். அந்த மேடைக்கு ஆண்டுதோறும் வெள்ளை அடிப்பர். பிரான் மலைப் பிரிவுக் கள்ளர்கள் இறந்தவர்களை எரிப்பர். பெண் ஒருத்தி கருவுற்ற நிலையில் இறப்பாளாகில் அவள் கருவில் உள்ள குழந்தை வெளியே எடுக்கப்பட்டு ஈம விறகில் அவள் அருகே வைக்கப்படும். இந்த மாவட்டத்தில் பெரும்பாலான சாதியாரிடையே இந்தப் பழக்கம் உள்ளது. கருவுற்ற ஒருத்தி இறப்பாளாகில் அவளுடைய உறவினர்களால் பாதையோரத்தில் சுமைதாங்கிக் கல் நிறுத்தும் பழக்கம் சில சாதியாரிடையே உள்ளது. சுமையோடு இறந்த ஒருத்தியினுடைய ஆவி மற்றவர்கள் தங்கள் சுமையை இறக்கி வைப்பதைப் பார்த்து மகிழும் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலேயே இவ்வாறு சுமை தாங்கி அமைக்கப்படுகிறது. இச் சாதி வடக்கே இருந்து வந்து குடியேறியது என்று வழக்குவழி வரலாறு கூறுகிறது. இதன் காரணமாக இறந்தவர்கள் முகம் வடக்குப் பார்த்தபடி இருக்கும்படியாகப் புதைப்பதோடு சாதிக்குரிய குலதெய்வமான கறுப்பண்ணசாமிக்குப் பூசை போடும்போது இவர்கள் வடக்குத் திசையைப் பார்த்தே வணங்குவர்" என மதுரை மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ளது.

"கள்ளர்கள் பெயரளவில் மட்டுமே சைவர்கள். உண்மையில் அவர்கள் சிறு தேவதைகள் வழிபாட்டில் நம்பிக்கையுடைய சமயநெறி சார்ந்தவர்களாகவே உள்ளனர். மதுரைக்கு வடக்கே பன்னிரண்டாவது மைலில் உள்ள அழகர்கோயிலில் உள்ள

---

* தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Tanjore District.)

அழகர் சாமியே இவர்கள் வழிபடும் சிறப்பான 'தெய்வம். அழகர்கோயிலுக்கு மிகப் பெரிய அளவில் நன்கொடைகளை வழங்கும் இவர்கள் கள்ளழகர் என அழைக்கப்படும் அக் கோயிலில் உள்ள தெய்வத்தையே தங்களுடைய குல தெய்வ மாகக் கொண்டாடுகின்றனர்'' எனத் திரு எஸ். எ. ஸ்டு வர்ட் கூறுகின்றார். கள்ளர்கள் திருட்டுக்காகப் புறப்படுமுன் சகுனம் பார்ப்பதாகவும், தங்கள் குல தெய்வத்திடம் குறி கேட் பதாகவும் திரு மூல்லலெ கூறுகின்றார். "சிவப்பும் வெள்ளை யுமான நிறமுடைய இரண்டு மலர்கள் கள்ளழகர் வடிவிலான தெய்வத்தின் முன் வைக்கப்படும். வெள்ளை மலரையே எப் போதும் வெற்றிக்குரிய அடையாளமாகக் கருதுவர். வயதில் சிறிய ஒரு குழந்தையிடம் அந்த இரண்டு மலர்களில் ஒன்றிலி ருந்து ஒரு இதழைப் பிய்த்துத் தரும்படி கூறுவர். அவர்கள் திருட்டுத் தொழில் மேல் செல்வதா வேண்டாமா என்பதனை அக்குழந்தையின் செயலே முடிவு செய்யும்.'' இதே போன்று இருவரிடையேயான மண உறவுக்கான உடன்பாடு காணும்முன் மணந்து கொள்ள உள்ள மணமக்களின் பெற்றோர் ஒரு கோயி லுக்குச் சென்று ஒரு சிவப்பு மலரையும் வெள்ளை மலரையும் தனித்தனியே வெற்றிலையில் சுருட்டிக் கட்டித் தெய்வத்தின் முன் இட்டு ஒரு குழந்தையிடம் அவற்றில் ஒன்றினை எடுக்கும் படி கூறுவர். அக்குழந்தை எடுக்கும் இலைக்கட்டில் வெள்ளை மலர் இருக்குமாயின அதனை நல்ல வாக்காகக் கருதி மணம் முடிப்பர்.

அழகர்கோயிலில் சென்று ஆணையிட்டுச் சத்தியம் செய் தல் பற்றி நான் படித்தறிந்த தகவல் வருமாறு:-* சத்தியம் செய்து கொடுப்பவனைக் கள்ளழகரை வணங்கச் செய்து தலை யில் பரிவட்டம் கட்டிக் கழுத்தில் மாலை அணிவித்துக் கறுப் பண்ணசாமியின் பதினெட்டுப் படிகளில் பதினெட்டாம் படி மீது ஏறி நிற்கச் செய்து அவனைப் பின்வருமாறு கூறச் செய் வர் 'நான் கள்ளழகர், கறுப்பண்ணசாமி பேரில் ஆணையா கச் சரியாக நடந்து கொண்டேன்.' இதுபோலச் சத்தியம்

---

* மெயில் நாளிதழ் – சென்னை, 1908. (Madras Mail. 1908.)

செய்பவன் பொய்யுரைப்பானாகில் அவன் மூன்றாம் நாள் இறந்துவிடுவான். அவன் உரைப்பது உண்மையாக இருக்குமானால் அவனுடைய எதிரிக்கு அக்கதி ஏற்படும்.''

''திண்டுக்கல்லில் நடைபெறும் சல்லிக்கட்டின்போது கள்ளர்களே பூசாரிகளாகச் செயல்பட்டு அங்குள்ள தெய்வத்திடம் குறி கேட்கும் உரிமை உடையவர்கள். இச் சமயத்தில் அவர்கள் உரோமானிய வேளாண்மைத் தெய்வத்தின் பூசாரிகளைப் போலப் பிராமணர்களைவிட உயர்ந்தவர்களாகத் தங்களைக் கருதி ஆணவம் கொள்வர்'' எனத் திரு வால்ஹவுஸ் குறித்துள்ளார்.* ''சல்லிக் கட்டு விளையாட்டில் தீரமிக்க சாதியார்கள்–சிறப்பாகக் கள்ளர்கள் – மிகுதியான ஆர்வம் காட்டுகின்றனர். பல ஊர்களில் தனியே இதற்காகவென்றே சாதிக் காளைகளை வளர்க்கின்றனர். கள்ளர்கள் வாழும் பகுதியான திருமங்கலத்திலேயே மிகச் சிறந்ததான சல்லிக்கட்டைக் காணலாம். இதற்கு அடுத்தபடியாக மேலூரிலும் மதுரை மாவட்டங்களிலும் நடைபெறும் சல்லிக்கட்டைக் கூறலாம்'' என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் பதியப்பட்டுள்ளது. (மேலும் விவரங்களுக்கு, பார்க்க: மறவர்)

''கறுப்பன் கள்ளர்களுக்கு உரிய தெய்வம். அதிலும் மேலூரைச் சார்ந்த கள்ளர்களுக்கு அவர் மிகச் சிறப்பான உரிமை உடையவர். அப் பகுதியில் கறுப்பண்ணசாமி கோயிலே கள்ளர்கள் பஞ்சாயத்து அவை கூடும் சாவடியாகும். கள்ளர் அல்லது குயவர் சாதியைச் சேர்ந்தவர்களே அவருக்குப் பூசாரியாக இருப்பர். அழகுத் தெய்வமாகப் போற்றப்படும் அழகர் சாமியிடமும் கள்ளர்கள் தனி மதிப்பு வைத்து உள்ளனர். அவர் பொதுவாகக் கள்ளழகர் என அழைக்கப்படுவார். இச் சாதியைச் சேர்ந்தவர்களே அழகர்கோயில் தேர்த்திருவிழாவின் போது தேரினை இழுக்கும் உரிமைபெற்றவர்கள். அழகர்கோயிலிலிருந்து கள்ளழகர் மதுரைக்கு செல்லும்போது கள்ளன்போல் வேடம் தரித்து அச்சாதிக்குரிய தொங்கும் காது மடல்களை

---

* இந்தியத் தொல்லியல், III, 1874, (Ind, Ant. III 1874.)

உடையவராகக் கள்ளரின் பழைய போர்க்கருவிகளான வளை தடியும் குறுந்தடியும் ஏந்திச்செல்வது வழக்கம். களவுத் தொழிலின் மேற்செல்லும்போது கள்ளர் இவருடைய ஆசியை வேண்டுவரெனவும் தங்கள் முயற்சியில் வெற்றி கிட்டுமாயின் திருட்டால் வந்த லாபத்தில் ஒருபகுதியைக் கோயிலில் வைத்துள்ள உண்டியலில் போடுவர் எனவும் பேசிக் கொள்கின்றனர்'' என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் பதியப்பட்டுள்ளது.

பின்வரும் குறிப்பிற்கு நான் மறைத்திரு ஜெ. சார்ராக் அவர்களுக்குக் கடப்பாடுடையேன்:- ''கள்ளர்களுக்குரிய முக்கியமான கோயில் மதுரையிலிருந்து மேற்கே பத்து மைல் தொலைவில் அழகர் சாமிக்குரியதாக அமைந்துள்ளது. இவர் விட்டுணுவின் அவதாரம் எனக் கூறப்படுவதோடு மீனாட்சியின் உடன் பிறந்தவர் எனவும் கூறப்படுகிறார். மதுரையை ஆண்ட பாண்டிய மன்னனின் மகளான கயல்விழி கொண்ட அழகிய நங்கையே மீனாட்சி. மீனாட்சி பிராமணர்களால் சிவனுக்குத் தற்போது திருமணம் செய்து வைக்கப்படுவதால் இந்து சமயம் திராவிட நெறியோடு உறவு கொண்டுவிட்டதைப் பார்க்கின்றோம். இங்கு மற்ற நெறியாளர்களோடு உடன்பட்டுப் போவதில் பிராமணர்களின் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை மிகத் தாராளமானதாக இருப்பதைக் காண்கிறோம். ஆண்டுதோறும் சித்திரை மாதத்தில் நடைபெறும் சித்திரைத் திருவிழாவின்போது அழகரின் தெய்வ உருவம் மதுரைக்கு எடுத்து வரப்படும்போது வைகைக் கரையில் மூன்று இலட்சம் பக்தர்கள் கூடுவார்கள். இவர்களுள் பெரும்பாலோர் கள்ளர்களே. இந்தத் திருவிழாவில் கள்ளழகரின் தேர் வடம் பிடிக்கும் முதலுரிமை கள்ளர்களுக்கே உரியதாய் உள்ளது. மற்றச் சாதியார் பின்னர் அதில் இவர்களோடு சேர்ந்து பங்கு பெறலாம். அழகர் சாமி உயிர்ப் பலி ஏற்கும் தெய்வம் அன்று. ஆகையால் அதற்கு குருதிப் பலி தரப்படுவதில்லை. பிராமணர்கள் செல்வாக்கே இதற்குக் காரணம் எனலாம். அவர்களுடைய மற்றச் சாதாரணச் சடங்குகளில் கள்ளர் தெய்வங்களைத் திருப்திப்படுத்த ஆடுகளைப் பலியிடுகின்றனர். தறுகண்மையும் கள்ளமும் ஒருங்கே பெற்றுள்ள தங்கள் சாதி இயல்புக்கேற்பக் கள்ளர்

தெய்வத்திடத்தில் கூடத் தங்கள் கைவரிசையைக் காட்டத் தயங்க மாட்டார்கள். ஒரு தெய்வம் தங்கள் பொருள் பறிக்கும் செயலுக்கு உரியதாயிருக்கும் எனின் அதனிடமும் பொருள் பறிப்பர்.* கோயிலில் உள்ள சிலைகளின் அடியில் வழக்கமாக இடப்படும் காசுகளையும், அணிமணிகளையும் அச்சமின்றித் தோண்டி எடுப்பர். இவர்கள் தங்கள் உள்ளூர் தெய்வத்திடம் அச்சமில்லாதவர்களாயினும் வெளியூர்களுக்குச் செல்லும்போது அங்குள்ள கடவுளர்களிடமும், கொள்ளைக்காகக் காடுகளின் வழியே செல்லும்போது அங்கு உள்ள தெய்வங்களிடமும் அச்சங்கொண்டவர்களாகவே உள்ளனர். தங்கள் ஊர்த் தெய்வங்களிடம் உரிமை கொண்டாடுபவர்களாக உள்ள இவர்கள் அவை இவர்களுக்குத் திருட்டில் உதவினால் அதனால் கிடைக்கும் பொருளில் திருடர்களிடையே நிலவும் நேர்மை தவறாத நெறியினைப் பின்பற்றும் மரபுப்படி தெய்வத்திற்குரியதான பங்கினைத் தாராளமாகவே முன்பு வேண்டிக் கொண்டு ஒப்புக் கொண்டபடி செலுத்துவர். உள்ளூர் தெய்வத்திற்கான ஆண்டு விழாவின்போது ஒவ்வொரு குடும்பமும் ஓர் ஆட்டினைக் கோயிலில் பலியிடும். பலியிடப்படும் ஆட்டின் தலை பூசாரிக்குரிய பங்காகும். உடம்பினைப் பலி கொடுப்பவன் வீட்டுக்குக் கொண்டு சென்று சமைத்து ஊர்ப் பொதுவிருந்தில் எல்லோருடனும் சேர்ந்து உண்பான். குலமரபுச் சின்னங்களின் வழிபாட்டுக் கூறுகள் இரண்டு இங்குப் புலப்படுகின்றன. குலத்திற்குரிய தெய்வத்தினைத் திருப்திப் படுத்துவதற்காக அப்பாவியான ஓர் உயிரின் குருதி சிந்தப்படுகிறது. அதைத் தொடர்ந்து அனைவரும் கூடி இருந்து விருந்து உண்ணும் மரபும் பேணப்படுகிறது. இத்தகைய பலிச் சடங்குகளில் சிலபோது பிராமணர்களும் பங்கு கொள்கின்றனர். எனினும் பலியிடப்படும் ஆட்டினை அவர்கள் தங்களுடன் எடுத்துச் செல்வதில்லை. முழுவதையும் பூசாரிக்கே உரியதாகக் கொடுத்துவிடுவர். பொதுவில் அனைவரும் கூடி உண்ணும் விருந்திலும் அவர்கள் பங்குபெறுவதில்லை. திருடச் சென்ற இடத்தில் எதிர்பாராது முன்பின் கண்

---

* Compare the theft of Laban's teraphim by Rachel, Genesis XXXI 19.

டறியாத தெய்வங்களை எதிர்ப்படும் கள்ளர்கள் தங்கள் முயற்சியில் வெற்றி கிடைத்தால், கிடைக்கும் பொருளில் ஒரு பகுதியை மறுநாள் அந்தத் தெய்வத்தின் கோயிலில் கொண்டு வந்து சேர்ப்பதாகவோ தெய்வத்தின் பூசாரியிடம் சேர்த்து விடுவதாகவோ ஆணையிடுவர். இத்தகைய பாதுகாப்பான உடன்படிக்கையைச் செய்துகொள்ளவில்லையாயின் அந்தத் தெய்வம் தங்கள் கண்களைக் குருடாக்கிவிடக் கூடும் அல்லது தங்களைத் திருட்டில் அகப்பட்டுக் கொள்ள செய்யும் அல்லது தங்களைக் குப்புறத் தள்ளி இரத்தம் கக்கிச் சாகும்படியாகச் செய்யும் என இவர்கள் அஞ்சுகின்றனர். தாங்கள் முன்பின் அறியாத இந்தத் தெய்வங்களை இவர்கள் காண நேரிட்டாலோ அவற்றால் அச்சுறுத்தவோ மனம் பேதலிக்கப்படவோ செய்யப்பட்டாலோ அவற்றிற்குத் தங்கள் கொள்ளையில் ஒரு பங்கினைத் தருவதற்குப் பதிலாக வேறொரு வகையில் அவற்றைத் திருப்திப் படுத்துவர். சில நாள்களுக்குப் பின் நள்ளிரவில் அக் கோயிலுக்கு வந்து சிறப்பான பலி தருவர். அதற்குத் தாங்கள் சினம் தணிவிக்க வேண்டிய தெய்வத்திற்கு வழக்கமாகப் பூசை செய்யும் பூசாரியையே அமர்த்துவர். ஆடு, அரிசி, கறிப்பொடி வகைகள், சாராயம், ஆகியவற்றை இதற்காகக் கொண்டுவரும் இவர்கள் ஆட்டினைப் பலியிட்டபின் அதன் வளமான உறுப்புக்களின் பகுதியோடு ஆட்டின் தலையையும் பூசைக்குக் காணிக்கையாகக் கொஞ்சம் பொருளையும் பூசாரிக்கு வழங்குவர். இச் சடங்குகளில் சில விவரிக்கத்தக்க சிறப்புடையவை. முதலில் தெய்வ உருவினைத் தண்ணீரில் குளிப்பாட்டி ஆண் தெய்வமாயின் சந்தனத்தையும், பெண் தெய்வமாயின் குங்குமத்தையும் அதன் நெற்றியில் இடுவர். கழுத்தில் மாலை அணிவித்து மணியினை அடித்து ஒலி செய்வதோடு எங்கும் விளக்குகளையும் ஏற்றி வைப்பர். அதன் பின் பூசாரி உடுக்கையினை அடித்தபடி திரும்பத் திரும்ப அத் தெய்வத்தின் பெயரைச் சொல்லி அழைப்பர். உடுக்கை நடுவில குறுகிய இடையினை உடைய சிறிய முரசாகும். இதனை இடக் கையால் ஒரு பக்கம் இடக் காதருகே இருக்கும்படியாகப் பிடித்துக் கொள்ளும் பூசாரி வலக் கை விரல்களால் அதனைத் தட்டி ஒலி எழுப்புவான். பழம்பாணியிலான இந்த ஓசை நாகரிகமற்ற பக்தர்களின் காதுகளுக்குக்

கேட்க இனிமையாக ஒலிப்பதோடு அவர்களுக்குக் கடவுளின் தெய்வ வாக்கினையும் ஒருங்கே அறிவிக்கின்றது. உடுக்கையின் விளிம்பினைக் காதருகே வைத்துக் கொள்ளும் பூசாரி இவர்களுடைய திருட்டுக்கான பயணத்தின்போது நடந்தவை பற்றிக் கடவுளின் கருத்துரை என்ன என்பதை அவனுடைய பக்தர்கள் அனைவரும் கேட்டு வியக்கும்படியாக விளக்கிக் கூறுவான். (புத்திசாலியான நாடோடியைப் போலப் பூசாரி திருடப் போன இடத்தில் நடந்தது என்ன என்பதை முன் கூட்டியே இயன்ற அளவு அங்கங்கே கேட்டுத் தெரிந்து வைத்திருப்பான்.) அவனுக்குப் போதுமான தகவல்கள் கிடைக்கவில்லையாயின் அறிவற்றவர்களான அந்தப் பக்தர்கள் வாயிலிருந்தே செய்திகளை வரவழைக்கும்படியாக ஓரிரு கேள்விகளைக் கேட்டும் அவர்களிடம் குறுக்குக் கேள்வி போட்டும் தகவல்களைத் தெரிந்து கொள்வான். இவர்கள் கொள்ளையிடச்சென்ற இடத்தில் என்ன நடந்தது என்பது அனைத்தும் சாமிக்குத் தெரியும் என அவர்களை நம்பும்படியாகச் செய்வதே அவன் குறிக்கோளாக இருக்கும். இத்தகைய பலிச் சடங்குகளின்போது பலியிடப்படும் ஆட்டின்மீது அது உடலைச் சிலிர்கின்றதா என அறிந்து கொள்ள கொஞ்சம் தண்ணீர் தெளிப்பது வழக்கம். அப்போது அது உடல் சிலிர்க்குமானால் தெய்வம் அந்தப் பலியினை ஏற்றுக் கொள்கின்றது எனக் கொள்வர். சில பலி நிகழ்ச்சிகளின்போது பலியாடு உடலைச் சிலிர்க்கவில்லையாயின் அதனை ஒதுக்கிவிட்டுப் பலியிட வேறு ஆட்டினைக் கொண்டு வருவர். சில சமயங்களில் பலியாடு மிக மெலிந்ததாக இருக்கின்றது எனப் பூசாரி கருதும்போது அவன் அதன்மீது அளவோடு தண்ணீரைத் தெளித்து வேறு ஆட்டினைக் கொண்டு வரும்படி செய்வான் எனக் கூறிக் கொள்கின்றனர். இதற்கு மாறாகக் கடவுளின் பிரதிநிதியான பூசாரிக்கு மன நிறைவினைத் தரும்படியானதாகப் பலியாடு இருக்குமாயின் அவன் அதன் மீது அது முழுதும் நனைந்து தனது சாவு ஓலையினை அதுவே தீட்டிக் கொள்ளும்படியாக அடுத்தடுத்துத் தண்ணீரைத் தெளித்து அதனை உடல் சிலிர்க்கும்படி செய்வான். அதன்பின் பலிச் சடங்கில் பங்கு பெற்ற அனைவரும் ஒன்றாகக் கூடி இருந்து உண்பர். கடவுள் முன்னிலையில் செய்யப்படும் சத்தியத்திற்கு எந்த அளவு மன

பூர்வமான மதிப்பு அளிக்கப்படுகிறது என்பதற்கு நான் ஒரு எடுத்துக் காட்டினைத் தருகின்றேன். கள்ளர் சாதியைச் சேர்ந்த ஒரு பண்ணையாரின் பண்ணையாள்கள் ஓர் ஆட்டினைத் திருடியதான குற்றச்சாட்டின் பேரில் ஊர் மணியகாரர் முன் கொண்டுவந்து நிறுத்தப்பட்டனர். அவர்கள் தங்கள் மீது சுமத்தப்பட்ட குற்றத்தை மறுக்கவே மணியகாரர் அவர்களை ஊர்த் தெய்வமான கறுப்பன் முன் அழைத்துச் சென்று சத்தியம் செய்யும்படி கூறினார். அவர்கள் அங்கும் பொய்ச் சத்தியம் செய்யவே குற்றத்திலிருந்து விடுவிக்கப்பட்டனர். பின்னர் அவர்களுடைய பண்ணையார் அவர்களிடம் அமைதியான முறையில் அவர்களால் எப்படிக் குலதெய்வத்திற்கு முன்னாலேயே பொய்ச் சத்தியம் செய்ய முடிந்தது என்று கேட்க அதற்கு அவர்கள், 'நாங்கள் வாயால் பொய்ச் சத்தியம் செய்யும்போதே மனசில் கறுப்பனிடம் அவனுக்கு அந்தப் பாவத்திற்கு ஓர் ஆடு பலி தருவதாக வேண்டிக் கொண்டோம்' எனப் பதிலுரைத்ததோடு அவ்வாறே பலியும் தந்து தங்களுடைய இரண்டு குற்றங்களுக்கும் (திருட்டுக்கும், பொய்ச் சத்தியத்திற்கும்) பரிகாரம் தேடிக் கொண்டனர்.''

இவர்களுடைய பேய் வழிபாட்டுக்கு எடுத்துக்காட்டாகத் தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஒரத்தநாடு பகுதியைச் சேர்ந்த வலையர், கள்ளர் ஆகியோர் வழிபாட்டு முறையைத் திரு எப். ஆர். ஹெமிங்வே தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் பின்வருமாறு விளக்குகின்றார். ''வலையர்களின் வீட்டுப் புறக்கடையில் பெரும்பாலும் ஓர் ஒதிய மரம் (*Odina Wodiar*) இருக்கும். அதில் பேய்கள் தங்கி இருப்பதாக நம்புவர். கள்ளர் வாழும் தெருக்கள் ஒவ்வொன்றிலும் பேய்கள் தங்கி வாழ அம் மரம் இருக்கும். அவற்றைக் குறைந்தது ஆண்டுக்கு ஒரு முறையாவது வழிபடுவர். அவற்றுள் மிகக் கொடியனவற்றை மரத்தடியிலேயே வழிபடுவா. மற்றவற்றை வீட்டிலிருந்தே வழிபடுவர். இந்தப் பேய் வழிபாடு பொதுவாக வெள்ளி, திங்கட்கிழமைகளிலேயே நடத்தப்படும். கள்ளர்கள் ஆடி வெள்ளிக்கிழமை, தை மாட்டுப் பொங்கல் நாள், கார்த்திகை மாதத் திருக்கார்த்திகை நாள் ஆகியனவற்றை முக்கியமான விழா

நாள்களாகக் கருதுகின்றனர். மௌனத்தையும் தூய்மையையும் குறிக்கும் வகையில் தன் வாயினைத் துண்டில் மூடிக் கட்டிக் கொண்ட ஒருவன் வீட்டின் புறக்கடையில் பொங்கலிட்டு அதனோடு பாலும் வெல்லச் சர்க்கரையும் கலந்து பேய்த் தெய்வம் வாழும் மரத்தின் முன் படைப்பான். தேங்காய் உடைப்பதோடு கள்ளும் படைக்கப்படுவது உண்டு. இவை மரத்தடியில் பேயினைக் குறிக்கும் வகையில் வைக்கப்பட்டுள்ள செங்கல் முன்போ மண் உருவத்தின் முன்போ படைக்கப் படும். இறுதியில் கர்ப்பூர ஆரத்தி காட்டுவர். அதன்பின் ஓர் ஆட்டினைக் கொண்டு வந்து பலியிடுவர். மரத்தில் வாழும் பேய்கள் ஒன்றன் பின் ஒன்றாக இறங்கி வந்து அங்கு கூடி நிற்பவர்களில் ஒருவர் மீது ஏறிக் கொள்ளும். அவன் தெய்வ உணர்வு ஏறப் பெற்றவனாக ஆவேசங் கொண்டு பேய்களின் சார்பாக அவற்றின் திருப்தியை அல்லது திருப்தியின்மையைத் தெரிவிப்பான். தெளிவற்ற சொற்றொடர்களால் கேள்வி கேட் பவர்களுக்கு வர உள்ள நலந் தீங்குகளைப் பற்றிக் கூறுவான். எல்லாப் பேய்களும் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லி முடித்தவுடன் அவனை விட்டு நீங்க, அவன் மீண்டும் தன்னு ணர்வு பெறுவான். வீடுகளிலும் பேய்கள் இதுபோலவே வழி படப்படுகின்றன. வீடுகளில் செய்யப்படும் வழிபாட்டில் ஆட் டினைப் பலியிடுவதில்லை. உயிர்ப்பலி தருவது போலக் கருதியே எல்லாச் சடங்குகளும் நிகழ்த்தப்படும்."

காளைகளைக் கட்டி வீழ்த்துவதில் கள்ளர்கள் மிகுந்த ஆர்வம் உடையவர்கள் எனத் திரு ஹெமிங்வே கூறுகின்றார். இது இரண்டு வகைப்படும். முதல்வகை மற்றச் சாதியார் மேற் கொள்ளும் விளையாட்டினைப் போன்றதே எனினும் கள்ளர் கள் இந்த விளையாட்டுக்கான காளைகளைத் தாங்களே பயிற்சி தந்து வளர்த்து வருவதோடு அவ்வப்போது விளை யாட்டு நிகழ்ச்சிகளை ஊரார் அனைவரும் காணும்படியாக ஏற்பாடு செய்வர். இந்த நிகழ்ச்சி பொங்கலின்போது தொடங்கி மே மாதம் வரை நடத்தப்படும். இந்த விளையாட்டு, தொழு மாடு எனப்படும். இந்த விளையாட்டுக்கான சிறந்த காளைகள் மதுரை மாவட்டத்தில் உள்ள புலிகுளம் ஊரைச் சேர்ந்தன

வாகும். மற்றொரு வகை விளையாட்டு பாய்ச்சல் மாடு எனப்படும். இதில் காளைகளை நீண்ட கயிற்றால் கட்டிப் பின் அவற்றைக் கீழே வீழ்த்தப் பார்ப்பர். இந்த விளையாட்டின் நோக்கம் காளையைக் கீழே வீழ்த்தி அதனை மீண்டும் எழ முடியாதபடி கட்டிப் பிடிப்பதாகும். இந்த விளையாட்டில் கீழே வீழ்த்த முடியாததான வலிமை வாய்ந்த காளை நல்ல விலை போகும்.

''கள்ளர்களின் ஊர்களில் வழக்கமான சாதிப் பஞ்சாயத்துச் சபைகள் உள்ளன. சிலவிடங்களில் வேளாளர்களைப் பார்த்து இவர்களும் அவற்றை இப்போது கூட்டுவதில்லை. ஒரத்தநாட்டில் கொடுக்கப்பட்ட தகவல்களின்படி அம்பலக்காரன் குடும்பத்தைச்சேர்ந்த உறுப்பினர்கள் பரம்பரை உரிமையாக ஒவ்வொரு ஊரிலும் ஊர்த்தலைவனுக்கு உதவும் காரியஸ்தன் என்ற முறையில் சபையில் அமரும் உரிமை பெற்றுள்ளனர். இக் குடும்பங்களுள் ஒன்று மற்றவற்றைவிட உயர்ந்த தகுதி வாய்ந்த தாகக் கருதப்படும். அத்தகைய குடும்பத்தைச் சேர்ந்த ஒருவனே அவைத் தலைவனாக இருப்பான். ஊர்களைச் சேர்ந்த பஞ்சாயத்து அவைகளின் தலைவர்கள் பல ஊர்களுக்கும் பொதுவான விவகாரங்கள் சபை முன் வருமேயானால் அதனை எல்லாச் சபைத் தலைவர்களும் கூடித் தீர்ப்பதற்காக ஊரவைக் கூட்டத்தைத் தள்ளி வைப்பர். கள்ளர்கள் வாழும் ஊர்களில் கள்ளர் சாதித் தலைவன் மற்றத் தாழ்ந்த சாதியரிடையே மூளும் வழக்குகளைக் கேட்டறிந்து குற்றம் புரிந்தவர்களுக்கு உரிய தண்டத்தொகை விதிக்கும் பழக்கம் உள்ளது'' எனத் தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

''கீழ்நாட்டுக் கள்ளர்களினுடைய சாதி அமைப்பு மலைக்கு அப்பால் வாழும் அவர்கள் சாதியைச் சேர்ந்த கள்ளர்களின் சாதி அமைப்பிலும் வேறுபட்டது. கீழ்நாட்டுக் கள்ளர்களிடையே ஒவ்வொரு ஊருக்கும் பரம்பரையாகத் தலைமை ஏற்று நடத்தும் அம்பலக்காரன் எனப்படும் சாதித் தலைவன் உள்ளான். ஊரிலுள்ள குடும்பங்களில் சடங்குகள் நடக்கும் போது அவன் சிறு தொகையினைப் பெறுவதோடு முதல்

வெற்றிலை பாக்குப் பெறும் உரிமையையும் சாதியாருக்கு இடையே மூளும் சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைக்கும் உரிமையையும் பெற்றுள்ளான். அவன் விதிக்கும் தண்டத் தொகை சாதிக்கு உரிய பொதுப் பணத்தின் கணக்கில் சேரும். மேற்குப் பக்கத்துக் கள்ளர்கள் இதனினும் மிகுந்த உரிமை பெற்ற திருமலை பின்னைத் தேவன் என வழங்கப்படும் சாதித் தலைவன் ஆளுகைக்கு உட்பட்டவர்கள். இந்தப் பரம்பரைப் பெயர் அவர்களுடைய மூதாதையர்களுக்குத் திருமலை நாயக்க மன்னரால் பல்லக்கு முதலிய பதவிக்கு உரிய அடையாளச் சின்னங்கள் வைத்துக் கொள்ளும் உரிமையோடு கூட மூன்று உதவியாளர்களையும் ஏற்படுத்தி வைத்து வழங்கப்பட்டுள்ளது. அவன் வழங்கும் தீர்ப்புக்குக் கட்டுப்பட யாரேனும் மறுப்பார்களானால் முள்ளிடும் சடங்கு நடத்தி அவர்கள் சாதியிலிருந்து விலக்கி வைக்கப்படுவர். இச்சடங்கில் முரண்டு செய்பவன் வீட்டுவாசலில் முள்வேலியிட்டு அடைத்துவிட, அவன் உடமை பாழ்பட்டுக் காடு மண்டிக் குட்டிச்சுவராகிவிடும். பின்னைத் தேவனிடம் சென்று பணிந்து மன்னிப்பு வேண்டிப் பெற்ற பின்னரே அவன் வீட்டின் முன் இடப்பட்ட முள்வேலி அகற்றப் பட்டு அவன் மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவான்'' என மதுரை மாவட்ட விவரக் குறிப்பில் பதியப்பட்டுள்ளது.

கள்ளர்கள் வழக்கமாகச் சூடிக் கொள்ளும் பட்டப்பெயர் அம்பலக்காரன் (அவைத் தலைவன் என்னும் பொருளது) என்பதாகும். சிலர், மறவர்களையும் அகமுடையார்களையும் போலத் தேவன் (தெய்வம்) அல்லது சேர்வைக்காரன் (படைத் தளபதி) என்ற பட்டப்பெயரையும் வைத்துக் கொள்கின்றனர் என 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை தெரிவிக்கின்றது.

**கல்லன்கணத்தோர் - Kallankanadoru (stone)**

கோமட்டிகளின் உட்பிரிவில் ஒன்று. இப் பிரிவினர் பெனுகொண்டா கன்யாகம்மா கோவிலில் கோமட்டி சாதிப் பெரியவர்கள் நெருப்புக் குண்டத்தில் தீமிதிக்க இறங்குவதா வேண்டாமா எனப் பேசிக் கொண்டிருந்தபோது அதில் பங்கு

கொள்ளாமல் வெளியே கல்மண்டபத்தில் அமர்ந்திருந்த மூதாதையரின் வழி வந்தவர்கள்.

**கல்லன் மூப்பன் - Kallan Mūppan**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கல்லன் மூப்பன் "கல்வேலை செய்யும் மலபார் கம்மாளர் சாதியில் ஓர் உட்பிரிவினர்" எனப் பதியப்பட்டுள்ளது. "கம்மாளர் தீட்டு உண்டாக்கும் சாதியாராக இருப்பதோடு அச்சாதிப் பெண்கள் பல கணவரை மணக்கின்றனர். கல்லன் மூப்பன் சாதியார் கோயிலின் வெளிவாயிலினுள் நுழைய அனுமதிக்கப்படுகின்றனர். இவர்கள் தங்கள் சாதிக் கைம்பெண்களை மறு மணம் செய்துகொள்ள அனுமதிப்பதில்லை. மேலும் இவர்கள் சாதிப் பெண்கள் ஒரு கணவனோடு மட்டும் வாழ்க்கை நடத்துகின்றனர். தமிழ் நாவிதர்களே இவர்களுடைய மணச் சடங்குகளைப் புரோகிதர்களாக இருந்து நடத்தி வைக்கின்றனர். மணமகனுக்கு நாவிதன் மணச் சடங்குக்கு முன் முகம் மழித்து விடுகிறான். புரோகிதனான அவனே மணமகன் தன் வீட்டிலிருந்து புறப்பட்டு மணமகள் இல்லம் அடையும்வரை வழி நெடுகச் சங்கும் முழக்கிக் கொண்டு வரவேண்டும்" என எனக்கு ஒருவர் இவர்களைப் பற்றித் தகவல் எழுதி அனுப்பியுள்ளார்.

கல்லன், கல்கொட்டி என்ற பெயர்கள் மலபார் கல்கட்டிடப் பணி செய்யும் ஒட்டர்களுக்குரிய பெயருமாகும்.

**கல்லங்கி – Kallangi**

கல்லங்கி, கல்லவேலி என்பன பள்ளியர் கணக்கெடுப்பின் போது பதிந்துள்ள வேடிக்கையான பெயர்களாகும்.

**கல்லாசாரி - Kallasāri (stone – workers)**

மலையாளம் கம்மாளரின் ஓர் உட்பிரிவினருக்கான தொழில் தொடர்பான பெயர்.

**கல்லாடகுருப்பு - Kallātakurup**

அம்பலவாசிகளின் ஓர் உட்பிரிவினர். இவர்கள் பகவதி கோயிலில் பாட்டுப்பாடுபவர்கள். நந்துருணி என்னும் நரம்பி

சைக் கருவியை இசைப்பர். அது நீண்ட தண்டில் மரத்தாலான பல பிடிப்புகளையும் இரண்டு நரம்புகளையும் மரத்தாலான ஓர் இறகுடிக் கோலையும் கொண்டதாக இருக்கும்.

### கல்லு - Kallu (stone)

காணீகர், ஒட்டே சாதிகளின் உட்பிரிவு. கல்லுக் கொட்டி என்பது மலபார் கம்மாளர்களின் கல்வேலை செய்யும் ஓர் உட்பிரிவினருக்கான பெயர்.

### கல்லுக்கட்டி - Kallukatti

"கருங்கல்லாலான அரைக்கும் கல் தென் கன்னடத்திற்கே உரித்தான சிறப்பானதொரு பொருளாகும். இது நீள் வட்டத்தில் அரை வட்ட வடிவினதாகத் தட்டையான அடிப்பாகத்தோடும் மேல்பக்கத்தில் வட்டமான குழியோடும் இருக்கும். இதனோடு நீள் வட்டமான வடிவுடைய மெலிந்த நீண்ட முன்னே கூறிய குழியினுள் செல்லும்படியாகக் குழவி வடிவமைக்கப்பட்டிருக்கும். இந்த இரண்டும் சேர்ந்து அந்த மாவட்டத்தில் அரவைக் கல் என வழங்கப்படுகின்றது. கறி வகைகள், அரிசி, கோதுமை முதலியன ஆட்ட இது பயன்படுத்தப்படுகின்றது. தானியத்தை இடிக்கவும் கல் உரல்கள் வடிவமைக்கப்படுகின்றன. முன்பு கல்லுக்கட்டி என்ற சாதியாரே இக்கற்களை வடிவமைத்து வந்தனர். தற்போது வேறு சாதியாரும் இத் தொழிலைச் செய்கின்றனர். மைல் கற்கள், கோயில் கதவுகளுக்கான கற்பலகைகள், கோயில்களுக்குத் தேவையான தெய்வ உருவங்கள், மற்றச் சிலைகள் ஆகியனவற்றையும் கருங்கல்லைக் கொண்டு செய்கின்றனர்", எனத் தென் கன்னட மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

### கல்லூர் – Kallūr

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் நாயர்களின் ஓர் உட்பிரிவான புலிக்கப் பணிக்கர்களுக்கு உரிய பெயர் கல்லூர் எனப் பதியப்பட்டுள்ளது.

**கல்லூரி - Kallūri (stone village)**

மேதரரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கல்லா லான ஊர் எனப் பொருள்படும்.

**கல் தச்சன் - Kal Tacchan (stone - mason)**

கம்மாளர்களின் ஓர் உட்பிரிவு.

**கழற்றி - Kalti (expunged)**

சாதியிலிருந்து விலக்கப்பட்ட பறையனுக்கு உரிய பெயர் கழற்றி. சென்னை, செங்கல்பட்டு, வட ஆர்க்காடு ஆகிய வற்றைச் சேர்ந்த பறையர்களிடையே சாதி வழக்கப்படி நடந்து கொள்ளாதவர்களைச் சாதிச் சபை சாதிவிலக்குச் செய்யும் வழக்கம் உள்ளது. அவ்வாறு சாதியிலிருந்து விலக்கப் பட்டவன் வேலூருக்கு அருகே உள்ள விண்ணமங்கலத்தில் உள்ள முன்பே அதுபோலச் சாதியிலிருந்து விலக்கி வைக்கப் பட்ட பறையர் கூட்டத்தைச் சேர்ந்தவனாகி விடுகின்றான்.

**கழுகுநாடு - Kaluginādu (eagle's country)**

மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த தமிழ்ப் பொற்கொல்லர் களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கழுதை - Kaluthai (possessors of donkeys)**

ஒட்டேக்களின் ஓர் உட்பிரிவு. கழுதை வைத்திருப்பவர்கள் இவர்கள்.

**கல்யாணகுலம் - Kalyānakulam**

மங்கலர்கள், கணக்கெடுப்பில் பதிந்துள்ள விசித்திரமான தொரு பெயர். இவர்கள் திருமண நிகழ்ச்சிகளில் இசைவாணர் களாகப் பணிபுரிவர்

**கமதி - Kamadi (tortoise)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். ஆமை எனப் பொருள்படும்.

**காமாட்சியம்மா - Kāmākshiamma**

வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் வாணியர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. காமாட்சியம்மன் காஞ்சிவரத்தில் சிறப்பாக வழிபடப்படும் தெய்வம். காஞ்சி காமாட்சியும், மதுரை மீனாட்சியும் சைவர்கள் சிறப்பாக வழி படும் தெய்வங்கள். இந்த இரண்டு பெயர்களும் சிவபெரு மானின் மனைவியான பார்வதிக்குரிய வேறு பெயர்களாகும்.

**காமாட்டி - Kāmāti (foolish)**

தச்சர்களுக்கு உரியதாகச் சில சமயங்களில் வழங்கப்படும் பெயர். ஒக்கிலியர்களின் ஓர் உட்பிரிவின் பெயராகவும் இது உள்ளது. இவர்கள் தங்கள் குலத் தொழிலான பயிர்த்தொழி லைக் கைவிட்டுக் கட்டிட வேலையில் ஈடுபட்டுள்ளவர்களாவர்.

**கம்பளம் – Kambalam**

தொட்டியன், அனுப்பன், காப்பிலியன், சக்கிலியன் முத லான ஒன்பது சாதிக்காரர்களைச் சுட்டும் குழுப் பெயர். இவர்கள் தங்கள் சாதிச் சபை கூடும்போது ஒரு கம்பளத்தை விரித்து அதன் நடுவே நீர் நிறைந்த ஒரு பித்தளைக் கலசத்தில் மலர்களையிட்டு வைப்பர். (பார்க்க: தொட்டியன்)

**கம்பளத்தான் - Kambalattān**

தொட்டியருக்குரிய மற்றும் ஒரு பெயர்.

**கம்பன் - Kamban**

ஓச்சர்களுக்குரிய பட்டப் பெயர்களுள் ஒன்று. தமிழ்க் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பன் இந்தச் சாதிக்குரியவராகக் கருதப்படுகிறார்.

**கம்பா – Kambha**

கம்பம், கம்பாபு என்பது தூண் எனப் பொருள்படும். இது மாதிகர், கோமட்டி ஆகிய சாதிகளுக்குரிய புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயராகும்.

**கம்மா – Kamma**

கம்மர், காபு அல்லது ரெட்டி, வெலமர், தெலகர் ஆகியவர் களைப்பற்றிப் பொதுப்படத் திரு டபிள்யூ. பிரான்சிஸ் எழுதி யுள்ளதாவது:– "இந்த நான்கு பெரிய சாதியினரும் தோற்றத்திலும் பழக்க வழக்கங்களிலும் ஒன்று போலவே காணப்படுவதால் இவர்கள் திராவிட இனத்திற்குரிய பொதுவானதொரு குடி மூல மரபிலிருந்து பிரிந்து சென்ற வர்கள் எனக் கருத இடமுள்ளது. முதலில் படைவீரர்களாக இருந்த இவர்கள் தற்பொழுது பயிர்த்தொழில் புரிபவர்க ளாகவும், வணிகர்களாகவும் உள்ளனர். வடபகுதிகளில் சிலர் சமீன்தாரர்களாகவும் உள்ளனர். தங்களைச் சத்திரியர் எனத் தற்பொழுது கூறிக் கொள்ளும் ராசுக்கள், காபுக்கள், கம்மர், வெலமர் ஆகிய சாதியாரின் வழி வந்தவர்களாதல் வேண்டும். மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களைச் சேர்ந்த கம்மர்களும் காபுக்களும் விசயநகர அரசின் படையோடு தெற்கே வந்து பின்னர் நாயக்கர்கள் ஆளுநர்களாக அமர்த்தப்பட்டபோது இங்கேயே தங்கி விட்டவர்களாதல் வேண்டும். வடபகுதிகளில் உள்ள இதே சாதியினைச் சேர்ந்த பெண்களைப் போல இவர் களின் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் வெளியாரோடு கலந்து பழகுவதில் கண்டிப்புடையவர்களாக ஒதுங்கியிருப்பதில்லை. வடக்கத்திய பெண்டிர் தங்கள் நற்பெயரைக் காத்துக் கொள்வ தில் எப்பொழுதும் கருத்துடையவர்கள். கம்மர்களின் ஒரு பிரிவினர் முகமதியர்களைப்போல முகத்திரையிடும் முறை யினைக் கூட மேற்கொண்டு வருகின்றனர்."

கம்மர், காபு, வெலமர் சாதிகளின் மூதாதையர் ஒருவரே என்பதனைச் சுட்டிக் காட்டும் வகையில் பல கதைகள் இன்றும் வழக்கில் உள்ளன. கம்ம என்ற தெலுங்குச் சொல் பெண்கள் அணியும் காதணியினைக் குறிக்கும். வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ள ஒரு வாய்வழி வரலாற்றுக் கதை யில் "அரக்கர்களால் தொலலைப்பட்ட முனிவர்கள் விட்டுணு

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1901. (Madras Census Report, 1901.)

விடம் சென்று தங்களைக் காக்கும்படி வேண்ட அவர் இலட்சுமி யினை அணுகுமாறு அறிவுறுத்தினார். தெய்வத் திருமகளான அவள் தன் காதணியாகிய கம்மல் ஒன்று வைக்கப்பட்ட பெட்டி யினை அவர்களிடம் தந்து, அதனை நூறாண்டுகள் வழிபட்டு வரும்படி கூறினாள். அந்தக் காலம் முடிந்தவுடன் படைக்கலம் தாங்கிய ஐந்நூறு வீரர் குழு அந்தப் பெட்டியிலிருந்து வெளிப் பட்டு முனிவர்கள் கேட்டுக் கொண்டபடி அரக்கர் கூட்டத் தினை அழித்து ஒழித்தனர். அதன்பின் இவர்கள் பயிர்த்தொழி லில் ஈடுபடுமாறு கேட்டுக் கொள்ளப்பட்டதோடு பெரும் நிலப் பரப்புகளுக்கு உரிமையும் சத்திரியர் என்ற தகுதியும் வழங்கப் பட்டனர். இதன்படி இவர்கள் பெரிய அளவிலான நிலப்பகுதி களின் உடமையாளர்களாக அமராவதி, கிருட்டிணா, நெல்லூர் ஆகிய மாவட்டங்களில் தங்கிப் பயிர்த்தொழிலினைச் சிறப்புறச் செய்து வருவாராயினர்'' எனக் கூறப்பட்டுள்ளது.

கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த சில கம்மர்களைத் திரு எப். ஆர். ஹெமிங்வே நேரில் கண்டு கேட்டறிந்த தகவல் களின்படி முதலில் சத்தியர்களாக இருந்த இவர்கள் நெடுங் காலத்திற்கு முன் பரிசீத்து மன்னர் குலத்தைச் சேர்ந்த அரசன் ஒருவனை வேசிமகன் என ஏளனமாகக் கூறியதால் அவனால் தண்டிக்கப்பட்ட நிலையில் காபுகளை அடைந்து, தஞ்சம் புகுந்து, தங்களுக்கு அடைக்கலம் தந்த அவர்களுடைய பழக்க வழக்கங்களை மேற்கொண்டுவிட்டனர் எனத் தெரிகின்றது. மற்றொரு வாய் வழியான வழக்கு வரலாற்றின்படி பிரதாப ருத்ர மன்னரின் மதிப்பு வாய்ந்த காதணிகள் அவருடைய பகைவர்கள் கையகப்பட்டன. அப்பகைவர்களைக் காபுகளின் ஒரு பிரிவினர் வீரத்தோடு எதிர்த்துப் போரிட்டு அக்காதணி களை மீட்டு வந்தனர். இந்த வீரச்செயல் காரணமாக அவர் களும் அவர்கள் வழிவந்தவர்களும் கம்மர் எனச் சிறப்பிக்கப் பட்டனர் எனக் கூறப்படுகிறது. சில காபுகள் அப்போது ஓடி ஒளிந்தனர். அவ்வாறு விலகி வெளியே ஓடியவர்களின் சந்ததியினரே வெலமர்கள். கம்மர்களும் வெலமர்களும் ஒரே சாதியினராக இருந்தபோது அவர்கள் முகமதியர்களைப் போல முகத்திரையிடும் முறையைப் பின்பற்றியவர்களாகத் தங்கள்

சாதிப் பெண்களைத் தனித்திருக்கச் செய்து வந்தனர். இவர்கள் மேற்கொண்டுள்ள தொழிலான பயிரிடும் தொழிலுக்கு இது மிகுந்த இடையூறாக இருந்தமையால் இவர்கள் அம்முறையைக் கைவிட முடிவு செய்தனர். இந்த முடிவின்படி பனை யோலையில் உடன்படிக்கை ஒன்று எழுதப்பட்டது. அதில் கையொப்பம் இட்டவர்கள் கம்மர் சாதியினராயினர். கையொப் பமிட மறுத்தவர்கள் வெலமர்கள் அல்லது வெளியே தனித்து நின்றவர்களாயினர். கம்ம என்ற சொல்லின் ஒரு பொருள் பனையோலைச் சுருள் என்பதாகும். அது காது மடலின் துளையினைப் பெரிது படுத்தக் காதில் அணியப்படுவது, மற்றொரு கதைப்படி முன்னொரு காலத்திலே பெல்தி ரெட்டி என்ற அரசன் ஒருவன் ஆண்டு வந்தான். அவனுக்குப் பல மனைவியர் இருந்தனர். அவர்களுள் அவன் அன்புக்குரிய ஒருத் தியை அவன் பட்டத்தரசியாக்கி இருந்தான். அவனுடைய மற்ற மனைவியர் அவள் மீது பொறாமை கொண்டவர்களாகத் தங் கள் பிள்ளைகளை அனுப்பி அவளுடைய அணிமணிகளைத் திருடி வரும்படி கூறினர். அவர்கள் அச்செயலில் ஈடுபட்டிருக்கும் போது அரசனால் பிடிக்கப்பட்டனர். அவன் மறுநாள் தன் பட்டத்து அரசியினை அவளுடைய அணிமணிகளைக் கொண்டு வரும்படி கூறினான். அவளால் அவற்றைக்கொண்டு வந்து காட்ட இயலவில்லை. அரசியரின் பிள்ளைகள் சிலர் ஓடி ஒளிந் தனர். அவர்களே வெலமர் சாதியினராயினர். மற்றவர்கள் அணிகளைக் கொண்டு வந்து தந்து விட்டதால் கம்மர் என அழைக்கப்பட்டனர். இது பற்றிய மற்றொரு கதை வருமாறு:- பிரதாப ருத்ர மன்னனுடைய மனைவியின் காதணியினைக் கள்வர்கள் கவர்ந்து விடவே அதனைத் தேடிக் கொண்டுவர நான்கு படைத்தலைவர்களை அரசன் அனுப்பினான். அவர் களுள் ஒருவன் காதணியினை மீட்டு வந்தான். அவன் வழி வந்தவர்களே கம்மர். இரண்டாமவன் கள்வர்களைத் தாக்கி னான். அவன் வழிவந்தவர்களே வெலமர். மூன்றாமவன் ஓடி ஒளிந்தான். அவன் வழி வந்தவர்கள் பாகனாடியர். நான்கா மவன் என்னவாயினன் என்பதனைப் பற்றிய தகவல் இல்லை.

1891 ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு அறிக்கையின்படி கம்மர்

களின் முக்கிய உட்பிரிவுகள் கம்ப, இல்லுவெள்ளானி, கோத சாதி, காவாலி, வடுக, பெத்த, பங்காரு என்பனவாம். இவர் களிடையே காம்ப சாடு, கோத சாடு என்ற இரண்டு அகமணக் கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் இருப்பதாகத் தெரிகிறது. சாடு என்பது திரை அல்லது மறைவிடம் எனப் பொருள்படும். இந்த இரு பிரிவுகளின தோற்றம் பற்றி வழங்கும் கதை வரு மாறு:- ஒரு குளத்தில் அக்காவும் தங்கையுமான இருவர் குளித் துக் கொண்டிருந்தனர். அச்சமயம் ஓர் அரசன் அவ்வழியாக வந்தான். அவன் பார்வையிலிருந்து மறைந்து கொள்ள ஒருத்தி ஒரு கூடையின் பின்னும், மற்றவள் ஒரு சுவரின் பின்னும் ஒளிந்து கொண்டனர். இந்த அக்கா தங்கைகளின் வழி வந்த வர்களே காம்ப சாடுக் கம்மரும் கோத சாடுக் கம்மருமாவர். தங்கள் தோற்றத்தின் உறவின் நெருக்கம் காரணமாக இந்த இரு பிரிவினரும் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. மற்றொரு கதை வழக்குப்படி ஒரு நெருக்கடியான போர் நிகழ்ச்சியில் சிலர் கூடைகளின் பின் மறைந்தவர்களாகவும், சிலர் சுவரின் பின் மறைந்தவர்களாகவும் தப்பியதால் இப்பெய ருக்குடையவராயினர் எனப்படுகிறது. இல்லுவெள்ளானி, பெத்த என்பன கோத சாடுகளுக்கான வேறு பெயர்கள் எனத் தெரிகின்றது. இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் முகத்திரை அணிவதோடு பொதுவிடங்களில் வந்து பழகவும் அனுமதிக்கப் படுவதில்லை. இன்றும் அவர்கள் வயல்களில் மற்றவர்களைப் போல வேலை பார்க்கச் செல்வதில்லை. இல்லுவெள்ளானி என்பது இல்லத்தை விட்டு வெளியே செல்லாதவர்கள் எனப் பொருள்படும். பெத்த என்ற பெயர் மற்றப் பிரிவினரைவிட உயர்ந்தவர்கள் எனப் பொருள்தருவது. வடுக என்பது தெலுங் கர் எனப் பொருள்படும். இது தமிழர்கள் தங்களிடையே வாழும் தெலுங்கர்களுக்கு வழங்கிய பெயராதல் கூடும். பங் காரு என்ற பெயர் இப்பிரிவைச் சேர்ந்த பெண்கள் எப்பொழு தும் தங்கத்தாலான மூக்குத்தியையே அணியும் பழக்கத்தைக் குறிப்பதாகும். கோதர் சாதி உட்பிரிவினர் வட ஆர்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களிலும் இல்லு வெள்ளானி உட்பிரி வினர் கிருட்டிணா, நெல்லூர், அனந்தப்பூர் மாவட்டங்களிலும் எண்ணிக்கையில் மிகுதியாக உள்ளனர். காவலி உட்பிரிவினர்

72:3-9,

கோதாவரி மாவட்டத்திற்கு மட்டும் உரியவர்களாக இருக்கப் பெத்த பிரிவினர் கிருட்டிணா மாவட்டத்தில் மட்டும் காணப் படுகின்றனர். வடுகக் கம்மர் கோயமுத்தூர் மாவட்டத்திலேயே மிகுதியாகக் காணப்படுகின்றனர்.

கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த கம்மர்களைப் பற்றிய தன்னுடைய குறிப்பில் திரு ஹெமிங்வே எழுதுவதாவது:- "இந்த மாவட்டத்தில் கம்மர் காவிடியர், எரேடியர், கம்பர் அல்லது கூடர், உக்கம்கள், ராசாக்கள் எனப் பிரிவுபட்டுள்ள னர். இப் பகுதியில் தரப்படும் விளக்கத்தின்படி இப் பிரிவு களின் பெயர்கள் பொதுவாக இவர்கள் தண்ணீர் எடுத்துச் செல்லும் பழக்கத்தின் அடிப்படையில் அமைந்தவையாகும். காவிடியர் காவடியில் பானைகளைக் கட்டி மட்டுமே தண்ணீர் எடுத்துச் செல்வர். ஏரேடியர் பொதிஎருதின் மேல் வைத்தே தண்ணீர் எடுப்பர். உக்கம் பிரிவினர் கைகளில் தாங்கியபடி நீர்க் குடத்தைத் தூக்கிச் செல்வார்களேயன்றி இடுப்பிலோ தலையிலோ நீர்க் குடத்தை வைக்க மாட்டார்கள். ராசாக்கள் நீர்ப் பானையினை எப்போதும் இருவராகச் சேர்ந்தே தூக்கிச் செல்வர். காம்ப பிரிவைச் சேர்ந்த பெண்கள் முதன் முதல் கணவன் வீட்டுக்குச் செல்லும்போது வழக்கமான சீதனப் பொருள்களை ஒரு கூடையில் இட்டு எடுத்துச் செல்வர். இந்த வழக்கம் இன்றும் இவர்களால் பின்பற்றப்படுவதாகக் கூறப் படுகிறது."

1886 - இல் வெளியான கர்நூல் மாவட்டக் கையேட்டில் இல்லுவெள்ளானிக் கம்மர்களைப் பற்றிக் கூறப்பட்டுள்ளதா வது:- "இப்பிரிவினைச் சேர்ந்த ஒரு சில குடும்பங்களே இம் மாவட்டத்தில் உள்ளன. இப் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் அனைவரும் முகத்திரை அணிகின்றனர். நூல் நூற்பதையும் பிற தொழில்களில் ஈடுபடுவதையும் இப் பெண்கள் கேவலமான தாகக் கருதுகின்றனர். இப் பிரிவின் ஓர் உட்பிரிவினர் புல்லல் செருவில் வாழ்கின்றனர். அவர்கள் குடுமபத்தைச் சேர்ந்த பெண்கள் முகத்திரை அணியும் வழக்கம் உள்ளவர்கள் எனினும் மற்றச் சாதிப் பெண்களைப் போல நூல் நூற்கும் பணியினைச் செய்கின்றனர். ஓவக் அருகே வீட்டினுள்ளே வாழும் பெண்

களையுடைய் கம்மர் பிரிவு ஒன்று வாழ்ந்து வருகின்றது. அவர்கள் பதினாறாம் நூற்றாண்டில் குண்டூரிலிருந்து கண்டிக்கோட்டைக்குச் சென்ற நாயக்கர்களைப் பின்பற்றிச் சென்றவர்களின் வழிவந்தவர்களாதல் வேண்டும். தங்கள் செல்வத் தகுதியில் தற்போது தாழ்ந்துவிட்ட அவர்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் காபு பிரிவுப் பெண்களைப்போல வயல் வேலைகளைச் செய்கின்றனர். வீட்டின் உள்ளேயே இருக்கும் கம்மர் பெண்கள் இடத் தோளில் சேலைத் தலைப்பை இடுவதைப் போலன்றிக் கம்பர் பிரிவினரைச் சேர்ந்த பெண்கள் வலத் தோளில் சேலைத் தலைப்பை இடுவதைக் கொண்டு இவர்களை வேறுபடுத்தி அறியலாம்.''

மற்றத் தெலுங்குச் சாதியாரிடையே உள்ளதைப் போலவே கம்மர்களிடையேயும் புறமணக்கட்டுப்பாடு உடைய பல குலப் பிரிவுகள் (இல்லப் பெயர்கள்) உள்ளன. அவற்றுள் சிலவற்றின் பெயர்கள் வருமாறு:-

| | |
|---|---|
| அனுமொல்லு (மொச்சை) | பலகல (பலகை) |
| தாசண்ட (வரி அல்லது சாந்தா) | கஸ்தூரி (கஸ்தூரி) |
| ஜாஸ்தி (அதிகம்) | பந்தால (அரிசி) |
| மல்லெல (மல்லிகை) | கர்ணம் (கணக்கன்) |
| இலங்கா (தீவு) | ஈர்ப்பிணை (சீப்பு) |
| தொட்டகூர (தண்டுக்கீரை) | காலி (காற்று) |
| கொம்ம (கொம்பு அல்லது மரக்கிளை) | சேனி (புஞ்சை நிலம்) |
| தானியா (கொத்து மல்லி) | |

சிட்டிபுள்ளா, குறுநொல்லு, குலகல, உப்பால, செருக்கு, வள்ளோட்ல, யெனமல்ல போன்ற கோத்திரங்களும் கம்மர்களுக்கு உடையனவாக உள்ளன.

சாதியார் தொடர்பான வழக்கு விவகாரங்களைச் சாதிப் பெரியவர்களைக் கொண்ட சபை தீர்த்து வைக்கும். சில இடங்களில் மன்னே மந்திரி அல்லது சௌத்ரி எனப்படும் நிலையான சாதித் தலைவன் உள்ளான்.

வயலில் கூலிகளாக வேலை செய்ய முற்படும் கம்மர்கள் எந்தக் காரணங் கொண்டும் வீட்டு வேலைக்காரர்களாக அமர விரும்ப மாட்டார்கள். ''நல்ல உடற்கட்டு வாய்க்கப் பெற்ற பயிர்த்தொழில் செய்யும் வகுப்பாரான இவர்கள் பெரிதும் மான உணர்ச்சி உடையவர்கள். தனித்தே இருக்க விருப்பமுள்ள இவர்கள் பட்டண வாழ்க்கையை விரும்புவதில்லை. பலர் தங்களுடைய மனைவியரை வீட்டு எல்லையைத் தாண்டிச் செல்ல அனுமதிப்பதில்லை. இவர்களுள் பலர் ஞாயிற்றுக் கிழமைகளில் வயல் வேலைக்குக் கூடச் செல்லாமல் வீட்டிலிருந்து குடும்ப நலத்திற்கானவற்றை மேற்கொள்வர் எனக் கூறப்படு கிறது'' என மறைத்திரு ஜெ. கெயின் கூறுகின்றார்.*

கிருட்டிணா மாவட்டத்திலிருந்து ஒருவர் எனக்கு எழுதித் தெரிவித்திருப்பதாவது:- 'கிராமத்தில் எதிர்ப்படுபவரிடம் ஒருவரைக் குறிப்பிட்டு அவர் பிராமணரா என்று கேட்டால் அதற்கு அவர் 'இல்லை, அவர் வெறும் ஆசாமிதான்' என்று பதிலிறுப்பார். அவர் குறிப்பிடும் ஆசாமி ஒரு காபுவாகவோ கம்மராகவோ இருப்பார். ஓர் ஊரில் எத்தனை பேர் வருமான வரி செலுத்துகின்றார்கள் என்று கேட்டால் 'இரண்டு பாணி யாக்களும், இரண்டு சம்சாரிவாளும்' (செல்வமிக்க கம்மர் பண்ணையார்கள்) எனப் பதிலிறுப்பார்.''

''கம்மர் மிகுந்த சுறுசுறுப்பும் அறிவாற்றலும் வாய்க்கப் பெற்ற பயிர்த்தொழிலாளர். தற்போது முகத்திரை அணியும் வழக்கத்தை அவர்கள் கைவிட்டு விட்டதால் பயிர்த்தொழிலில் அவர்கள் மற்ற எல்லாச் சாதியாரைவிடவும் முற்போக்கு உடையவர்களாக உள்ளனர். இவர்களின் இந்தத் திறமை யினை மெய்ப்பிக்கும் வகையில் பின்வருவன போன்ற பழமொழிகள் வழங்கி வருகின்றன.

1. கம்மன் கையைக் கட்டிப் போட்டாலும் அவன் ஏதாவது செய்தபடி இருப்பான்.

---

* இந்தியத் தொல்லியல் இதழ், VIII, *1879*. (Ind, Ant, VIII, *1879*.)

2. கம்மர் நுழைந்த இடத்திலிருந்து மற்றவர்கள் வெளி யேறுவதைத் தவிர வேறு வழியில்லை.

3. கம்மரைக் கண்டால் பூமாதேவி கூட அஞ்சி நடுங்குவாள்.

சுறுசுறுப்புடையவர்களாகவும் செல்வ வளமுடையவர்களா கவும் இருப்பதோடு கூட அவர்கள் மிகுந்த தன்மானம் உடை யவர்களாகவும் உள்ளனர். கிருட்டிணா மாவட்டத்தில் நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சி இதனை விளக்கும். நிலவுடைமையை உரிமையாக்கும் அலுவலர் இவர்களுக்கு நிலப் பட்டா வழங்கும்போது அந்த ஆவணத்தில் இவர்களை நாயுடு என்று மட்டும் குறித்திருந்த காரணத்தைக் காட்டி மரியாதைக்குரியதான 'காரு' என்ற பின் இணைப்பையும் சேர்த்து எழுதி வழங்கினால்தான் அந்தப் பட் டாக்களைப் பெற்றுக் கொள்ளமுடியும் எனக் கூறிவிட்டனர். இறுதியில் இவர்கள் விருப்பப்படியே உரிய திருத்தங்கள் செய்து அவை வழங்கப்பட்டன. இவர்கள் தங்கள் சாதி அந்த மரியா தைக்கு உரியது என்பதனை இந்த நிகழ்ச்சியின் வாயிலாக மெய்ப்பித்து விட்டனர். வட ஆர்க்காடு மாவட்டத்தில் கம்மர் கள் இந்த மரியாதைக்குரிய இணைப்பினைப் பற்றி அவ்வள வாகப் பொருட்படுத்துவதில்லை. அங்கும் சிலர் நாவிதன் முன் தலை குனிய வேண்டி இருக்கின்றது என்ற காரணத்திற்காகத் தலையை மழித்துக் கொள்வதில்லை. விட்டுணுவோடு கங்கை யையும் கம்மர்கள் வழிபடுகின்றனர். இவ்வாறு இவர்கள் கங்கையை வழிபடுவதற்குக் காரணமாகக் கூறப்படும் செய்தி வருமாறு:- தங்கள் சாதிப் பெண் ஒருத்தியை மணம் செய்து தர மறுத்ததால் ஓர் அரசனின் கோபத்திற்கு ஆட்படாமல் தப்புவதற்காக வட நாட்டிலிருந்து இவர்கள் தெற்கு நோக்கி ஓடிவரும்போது அந்த மன்னன் இவர்களைத் துரத்தி வந்தான். மகாநதியின் கரையினை அடைந்தபோது இவர்கள் சாதிப் பெண்கள் தங்களுக்கு வழிவிடும்படி கங்கை யிடம் வேண்டக் கங்கை அந்த ஆற்றின் குறுக்கே இவர்கள் நடந்து கடக்க நீரற்ற பாதையினை வகுத்து உதவினாள். ஆற் றைக் கடந்தபின் இவர்கள் அனைவரும் துவரை வளர்ந்திருந்த காடுகளில் ஒளிந்து கொண்டவர்களாகத் துரத்தி வருபவர் களுக்கு அகப்படாமல் தப்பினர். இதன் காரணமாக இவர்கள்

தங்கள் திருமணத்தின்போது மணப்பந்தலின் வட கிழக்கு மூலையில் நிற்கும் பந்தல் காலில் துவரை இலைக் கொத்தைக் கட்டிவைப்பதோடு தாலி கட்டும் முன் கங்கையையும் வழி படுகின்றனர் எனத் திரு எச். எ. ஸ்டுவர்ட் வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் கூறியுள்ளார்.

தமிழ் நாட்டுக் கம்மர்களிடையே சிலபோது மணமகன் மணமகளைவிட வயதில் மிக இளையவனாக இருப்பான். 22 வயதினளான மனைவி ஒருத்தி தன் குழந்தைக் கணவனை, தாய், குழந்தையை இடுப்பில் தூக்கித் திரிவதைப் போலத் தூக்கித் திரிந்த நிகழ்ச்சி பதியப்பட்டுள்ளது.* இதேபோல உருசியாவிலும் கொஞ்ச காலத்திற்கு முன்பு வயதான பெண்கள் தங்களுக்கு மணஉறுதி செய்யப்பட்ட சுமார் ஆறேழு வயதுடைய சிறுவர்களைத் தூக்கித் திரிந்துள்ளனர்.† கம்மர்களிடையே கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. கோத சாடு பிரிவுக் கைம்பெண்கள் வெள்ளைச் சேலை அணிகின்றனர். மற்றப் பிரிவுக் கைம்பெண்கள் வண்ணச்சேலையே புனைகின்றனர்.

மண உறுதிச் சடங்கிற்கு முன் மூதாதையர், விநாயகர், உள்ளூர்த் தேவதைகள் ஆகியோரை வழிபடுவர். மணமகனாதற்குரியவனின் நெருங்கிய உறவினர் ஒருவர் பெண் கேட்க மணமகளாதற்குரியவள் இல்லத்திற்கு மற்றும் சிலரோடு செல்வார். வழியில் நல்ல சகுணம் ஏற்படுகின்றதா - பறவைகள் வலமாகச் செல்லுதல் போன்றவை - என்பதனைக் கவனித்தபடி செல்வர். அவ்வாறு நல்ல சகுனம நிகழ்ந்தவுடன் கர்ப்பூரம் கொளுத்தித் தேங்காய் உடைப்பர். தேங்காய் பொக்கை விளிம்பு ஏற்படாது நன்றாக உடைபட் வேண்டும். அதில் ஒரு முடியை மணமகன் வீட்டிற்கு அனுப்பிவிட்டு மற்றதைத் தங்களுடன் மணமகள் இல்லம் எடுத்துச் செல்வர். உடைக்கப்படும்

---

* 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. (Madras Census Report, 1891.)

† ஹட்சின்சன், பல நாடுகளுக்கும் உரிய மண முறைகள் - 1897. (Hutchinson, Marriage Customs in many lands, 1897.)

முதல் தேங்காய் ஒழுங்காக உடையவில்லையாயின் ஒரு தேங் காய் நன்றாக உடையும்வரை அடுத்தடுத்துத் தேங்காய்களை உடைப்பர். பெண் வீட்டார் இல்லம் அடைந்தவுடன் மணமகள் சகுனத் தேங்காய் முடி எங்கே எனக் கேட்பாள். அவள் மடி யில் மலர்கள், தேங்காய், மஞ்சள், வாழைப்பழம், வெற்றிலை, பாக்கு, சீப்பு, சந்தனம், குங்குமம் ஆகியன இட்டு நிரப்புவர். அதன்பின் மணநாள் உறுதி செய்யப்படும். திருமணம் மண மகன் இல்லத்தில் நடைபெறுவதே பெருவழக்கு. மணமகளுக் கான பரிசப் பணத்தைப் பெற்றுக் கொள்ளாமல் கன்னிகாதன மாகப் பெண்ணைத் தரும் மணமாக இருந்தால் மணநிகழ்ச்சி மணமகள் இல்லத்தில் நடைபெறும். காம்ப பிரிவினரிடையே மணமகளுக்கு அதிக விலை-பரிசம்-தரப்படுகின்றது. திருமணச் சடங்குகள் தொடங்கும் முதல் நாளன்று 'பெட்ட முகட சாங்கியம்' எனப்படும் பெட்டி மூடிச்சடங்கு நடைபெறும். மண மகளுக்கு உரிய புதிய ஆடைகள், ஐந்து வாழைப்பழம், பாக்கு, மஞ்சள் துண்டு, இரண்டு சீப்பு, நான்கு ரூபாய், மணப் பெண் ணுக்கான பரிசப்பணம் அல்லது நகை ஆகியவற்றை ஒரு பெட் டியில் வைத்து அதை மணமக்களின் பெற்றோர் அருகே வைப்பர். பின் பெட்டியினுள் உள்ளவை வெளியே எடுக்கப் பட்டுப் பெட்டியின் மூடி மீது வைக்கப்படும். அதனை இரு சம்பந்திகளும் சரி பார்ப்பர். மணமகளின் தந்தை மணமகன் தந்தையிடம், "என் பெண் உன்னுடையவள், உன் பணம் என்னு டையது" எனக் கூறியபடி வெற்றிலைபாக்கினைத் தருவார். "உன் பெண் என்னுடையவள், என் பணம் உன்னுடையது" என மணமகன் தந்தை அதனைத் திரும்பத் தருவார். இவ்வாறு கூறியபடி மும்முறை அவர்கள் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொள்வர். புரோகிதர் இன்னாருடைய மகளை இன்னாருடைய மகனுக்கு மணம் முடிப்பதாகக் கூடியுள்ள தேவ, பிராமணர்கள் முன்னிலையிலும் அக்கினி முதலான தேவதைகளின் முன்னிலை யிலும் முடிவு செய்யப்பட்டுள்ளதாகக் கூறுவார். இந்தச் சடங்கே மணத்தை உறுதிப்படுத்துவதாகும். இந்தச் சடங்கின் பின் தாலிகட்டும் முன் மணமகன் இறந்துபோக நேரிட்டால் மணமகள் கைம்பெண்ணாகவே வாழ்நாளினைக் கழிப்பாள். இதன் பின் பால்கம்பம் நாட்டி மணப் பானைகளை அடுக்கி நலங்குச் சடங்கினை நடத்துவர். அப்போது மணமக்களுக்கு

எண்ணெய் பூசி மஞ்சள் கலவையினைத் தடவுவர். நாவிதன் மணமகன் நகங்களைக் களைவான். மாவிலையினைப் பாலில் தொட்டு மணமகள் நகங்கள் மீது பூசுவான். சில இடங்களில் கம்பர் பிரிவினர் இச் சடங்கினை நிகழ்த்துவதில்லை. பருத்தி நூல் சுற்றப்பட்ட தோரணம் எனப்படும் மரச்சட்டம் மணப் பந்தலில் தொங்கவிடப்படும். இதனைக் கம்மர்கள் மணத்தில் மட்டுமல்லாது பலிசர், காபுகள்,வெலமர் ஆகியோர் மணத்திலும் வண்ணான் பந்தலில் கட்டித் தொங்கவிடுவான். மணமக்கள் குளித்துத் திரும்பிய பின், மணமகனை அலங்கரித்து வீட்டி னுள்ளோ வெளியிலோ தனியாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இடத்திற்கு வீரகுடி மொக்கடம் எனப்படும் வீரர்களை அவர் கள் கோயிலில் வழிபடும் சடங்குக்காக அழைத்துச் செல்வர் இதற்காக அமைக்கப்பட்டுள்ள இடத்தில் பந்தலிட்டு அதன் கீழ் வீரர்களைக் குறிககும் மூன்று அல்லது ஐந்து செங்கற்கள் வைக்கப்பட்டிருக்கும். அந்தச் செங்கற்களுக்கு மஞசள் கலவை பூசிக் குங்குமப் பொட்டிடுவர். அவை ஒவ்வொன் றின் முன்னும் ஒரு பானை வைக்கப்படும். பின் தேங்காய் உடைத்து நறுமணப் புகையும் கர்ப்பூர ஆரத்தியும் காட்டி வழிபாடு நடத்தப்படும். மணமகன் அச் செங்கற்களின் முன் தரையில் விழுந்து வணங்கிய பின் ஒரு வாளினை எடுத்து எலுமிச்சம் பழங்களை நறுக்கி அவற்றால் அப்பானைகளை மும்முறை தொடுவான். முன்னாளில் எலுமிச்சம் பழங்களுக்குப் பதிலாக ஆடோ மறியோ பலியிடும் வழக்கம் இருந்து வந்தது. கோதா பிரிவினர் மேற்கொள்ளும் வீரர் வழிபாடு மேலே கூறப்பட்ட முறையிலிருந்து மாறுபட்டதாகும். பந்தலிடுவதற்குப் பதிலாகக் கோதரர் ஓர் அரசமரத்தடிக்குச் சென்று அதனருகே ஓரிரு வாளினை வைத்து வணங்குவர். அங்கும் உயிர்ப்பலிக்குப் பதிலாக எலுமிச்சம்பழம் நறுக்கிப் படைக்கப்படும். வீரர் வழி பாடு முடிந்தபின் மணமக்கள் மணிக்கட்டில் பருத்தி, கம்பள நூலாலான கங்கணம் அணிவிப்பர். அதன்பின் மணமகன் குளித்துப் புத்தாடைகள் புனைந்து கோயிலுக்குச் செல்வான். அவன் மணப்பந்தலுக்குத் திரும்பிவரும்போது புரோகிதர் புனித நெருப்பினை மூட்டுவார். மணமக்கள் அருகருகே மணைப்பலகை ஒன்றின் மீது அமர்வர். அவர்களிடையே

திரைச்சீலை ஒன்றினைத் தொங்கவிடப்பட்டபின் மணமகன் தனது வலக்கால் பெருவிரலால் மணமகள் வலக்கால் பெரு விரலை மிதித்தபடி அவள் கழுத்தில் தாலி அணிவிப்பான். பின் அவர்கள் ஆடைகள் முடிச்சிடப்படும், அவர்கள் மணமேடையை மும்முறை வலம் வருவர். கம்பர் பிரிவினர் தாலி உட்குழிந்த தங்க வட்டாகும். கோதரர் பிரிவினர் தாலி அகன்ற தட்டை யான தங்க வட்டாக இருக்கும். இதற்கு மறுநாள் நாகவல்லிச் சடங்கு எனப்படும் தேவர்களுக்குப் படையலிடும் சடங்கு நிகழ்த்தப்பட்டுச் சிறிய வட்டான தங்கத் தகட்டாலான நாக வல்லித் தாலி அணிவிக்கப்படும். கூடியுள்ள உறவினர்கள் மண மக்களுக்குப் பரிசுகள் வழங்குவர். அதன்பின் மணமக்கள குடும்பம் நடத்துவது போல நாடகம் நடிப்பர். மூன்றாம் நாள் மணப்பந்தலில் உள்ள பானைகளுக்குப் பொங்கலிட்டு வழி பாடு செய்தபின் கங்கணத்தை அவிழ்ப்பர். பள்ளி சாதியைச் சேர்ந்த மணமகனைப் போலவே கம்ம சாதி மணமகனும் உழவு செய்யும் போலிச் சடங்கினை மேற்கொள்வான். பள்ளி சாதி யாரைப் போலக் குளக்கரைக்குச் செல்லாமல் இச் சடங்கினை வீட்டிலேயே செய்து முடிப்பர். இரும்பாலான கொழு, எருதுகளை ஓட்டும் சாட்டைவார், கயிறு ஆகியனவற்றை எடுத்துக் கொண்டு தன் மனைவி மடியில் விதைகளை ஏந்தி வர மணமகன் மண் நிரப்பப்பட்டுள்ள ஒரு கூடையினை நோக்கிச் செல்வான். அவன் அக்கூடையில் உள்ள மண்ணில் உழவு செய்வதுபோல் நடிக்கும்போது அவனுடைய உடன்பிறந்தவள் குறுக்கே விழுந்து அவன் அவ்வாறு செய்யமுடியாதபடி தடுப் பாள். அவன் தனக்குப் பிறக்கும் முதல் பெண்ணை அவளுடைய மகனுக்கு மணம் செய்து தருவதாக உறுதி கூறிய பிறகே அவள் அவனை உழும் பணியைத் தொடர அனுமதிப்பாள். மணப் பந்தலில் உள்ள புதுப் பானைகள் மணமகன் உடன்பிறந்த பெண்களுக்கு அன்பளிப்பாக வழங்கப்படும். மணச் சடங்கின் போது கம்மர் மாமிசம் சமைப்பதில்லை.

கம்மர்கள் மணச் சடங்கு நிகழ்ந்து முடிந்த மூன்று மாதங் களுக்குப் பிறகே இல்வாழ்க்கையைத் தொடங்குகின்றனர். திரு மணம் நிகழ்ந்த முதலாம் ஆண்டின்போது ஒரு குடும்பத்தின்

எண்ணிக்கை மூன்றாக இருப்பது நல்லதன்று எனக் கருதப் படுவதே இவ்வாறு மணவாழ்க்கை தள்ளி வைக்கப்படுவதற் கான காரணமாகும். மூன்று மாதங்கள் மணமக்கள் .உறவு கொள்ளாதிருப்பதால் மணமான இரண்டாம் ஆண்டிலேயே குழந்தை பிறக்க வாய்ப்பு ஏற்படுகின்றது. எனவே முதலாம் ஆண்டில் குடும்பத்தில் கணவன், மனைவி என இரண்டு பேர் மட்டுமே இருப்பர். கங்கைமக்கள், மாதிகர் ஆகியோரிடையேயும் இதேபோல மணச் சடங்கு முடிந்த மூன்று மாதங்களுக்குப் பின்னரே மணமக்கள் உடல் உறவு கொள்கின்றனர் எனத் திரு பிரான்சிஸ் பெல்லாரி மாவட்டக் கையேட்டில் குறித்துள் ளார்.

கருவுற்ற ஒருத்தி பிள்ளையைப் பெற்றவுடன் அந்த. வீட்டினைச் சுற்றி நஞ்சுண்டா (*balanies roxburghii*) மரத்தின் இலைக் கொத்துககள் சொருகப்படும்.

இறந்தவர்களை எரிப்பதே கம்மர் வழக்கம். ஒருவன் சாகும் நேரம் நெருங்கிவிட்டது என்று தெரிந்தவுடன் ஒரு தேங் காய் உடைத்துக் கர்ப்பூர ஆரத்தி எடுப்பர். பிணத்தின் கைப் பெருவிரல்களும். கால் பெருவிரல்களும் சேர்த்துக் கட்டப்படும். கைம்பெண்ணாக ஆக இருக்கும் ஒருத்தி அவளுடைய கணவ னுடன் வெற்றிலை பாக்கு மாற்றிக் கொள்வதோடு அவனு டைய வாயில் அரிசியும் இடுவாள். ஒரு பாடையில் பிணத்தின் தலை வீட்டை நோக்கி இருக்குமாறு சுடுகாட்டிற்குத் தூக்கிச் செல்வர். அரிச்சந்திரன் கோயில் எனப்படும் இடத்தை நெருங் கியவுடன் பாடையைத் தரையில் வைத்து அதன் நான்கு மூலை களிலும் சோறு வைப்பர். அதன்பின் ஒரு பறையன் அல்லது மாலன் ''நானே இந்தச் சாதியில் மூத்தவன். நான் முதலில் பூணூல் அணிந்திருந்தேன். என் பெயர் சங்குப் பறையன் (அல்லது ரெட்டி மாலன்) நான் அரிச்சந்திரனைக் காப்பாற்றி யவன். பிணத்தை அதன் தலை மசானத்தை நோக்கி இருக்கும்படியும் கால் வீட்டை நோக்கி இருக்கும்படியும் திருப்பித் தூக்கிச் செல்லுங்கள்'' எனக் கூறுவான். பிணத்தை ஈம விறகின் மீது கிடத்திய பின் உறவினர்கள் அதன்மீது அரிசி இடுவர். கொள்ளியிடுபவன் தோளில்

ஒரு பானையில் தண்ணீரைச் சுமந்தபடி அதனை மும்முறை சுற்றி வருவான். அந்தப் பானையில் நாவிதன் ஒரு துளையிடு வான். மூன்றாவது சுற்று வரும்போது ஈம விறகில் நெருப்பு மூட்டிவிட்டுத் தோளில் உள்ள பானையை வீசியவனாகக் குளிக்கச் செல்வான். அதற்கு மறுநாள் வீட்டில், இறந்தவன் உயிர்விட்ட இடத்தில் ஒரு கல்லினை வைத்து, அதன் பக்கத்தில் அவன் உடைகளை வைப்பர். பெண்கள் அக்கல்லின் மீது பால் ஊற்றுவதோடு பால், தேங்காய், சோறு, வெற்றிலை ஆகிய வற்றை அதற்குப் படைப்பர். பின் அவை ஆண்களால் சுடு காட்டிற்கு எடுத்துச் செல்லப்படும். அரிச்சந்திரன் கோயிலை நெருங்கியவுடன் ஓர் இலையில் கொஞ்சம் சோற்றைப் படைப் பர். சுடுகாட்டில் நெருப்பை அணைத்த பின் எலும்புகளைப் பொறுக்கி ஒரு வாழையிலையில் வைப்பர். அங்குள்ள சாம் பலைக் கொண்டு மனிதன் ஒருவனின் உருவத்தைத் தரையில் அமைத்து அதற்கு நான்கு இலைகளில் சோறு படைப்பர். அந்த இலைகளில் ஒன்று அந்த உருவின் வயிற்றின் மீதும் மற்ற மூன்றும் அதன் பக்கத்திலும் இடப்படும். வயிற்றின் மீது உள்ள இலையினைப் பறையனும் மற்றவைகளை நாவிதன், வண்ணான். பணிசவன் (இரவலன்) ஆகியோரும் எடுத்துக் கொள்வர். இறுதிச் சாவுச் சடங்கு பதி னாறாம் நாள் நிகழ்த்தப்படும். அது புண்யாகம் எனப்படும் தீட்டு நீக்கும் சடங்குடன் தொடங்கப் பெறுவதோடு பிரா மணர்களுக்குத் தானமும் வழங்கப்படும். இறந்தவனுடைய ஆடைகளை வீட்டினுள்ளே வைத்துப் பெண்கள் வழிபாடு செய்வர். இறந்தவனுடைய மனைவியைக் குளக்கரைக்கோ கிணற்றடிக்கோ அழைத்துச் சென்று அங்கு அவள் நாகவல்லித் தாலியினை நீக்குவர். அது விரைவிலே தேய்ந்து போகக் கூடி யதாகையால் இச் சடங்கிற்காகவே புதியதொன்று செய்து அணிந்திருப்பாள். ஆண்கள் ஒரு குளக்கரைக்குச் சென்று அதன் அருகே தரையில் ஒரு மனித உருவத்தினைச் செய்து அருகே மூன்று சிறிய கற்களை வைப்பர். அவற்றை நீரால் கழுவியபின் சோறு, காய்கறி ஆகியனவற்றைப் படைப்பா. கொள்ளியிட்டவன் அதன்பின் அந்த மண் உருவத்தை ஏந்திய படி நீரில் இறங்கி அதனை நீரில் வீசிவிட்டுப் பிணத்தை எரித்த

நாளிலிருந்து கருமாந்திரம் செய்யும் நாள்வரை இடையில் எத்தனை நாள்கள் கழிந்தனவோ அத்தனை முறை நீரில்மூழ்கி எழுவான். பிராமணர்களுக்கும் பங்காளிகளுக்கும் அன்பளிப்பு வழங்குவதோடு இச் சடங்கு ஒரு முடிவுக்கு வரும். அன்று மாலை தரையில் கொஞ்சம் அரிசியினைப் பரப்பி அதன்மீது கணவனை இழந்தவளை அமரச் செய்து அவள் தாலியினை நீக்குவர். கம்மர்கள் முதலாம் ஆண்டு சிரார்த்தம் செய்வார் கள். தொடர்ந்து அடுத்து வரும் ஆண்டுகளில் சிரார்த்தம் செய்யும் வழக்கம் இல்லை.*

கம்மர்கள் சைவம், வைணவம் ஆகிய இரண்டு சமய நெறி களையும் பின்பற்றுகின்றனர். சைவர்களில் பெரும்பாலோர் ஆராத்திய பிராமணர்களின் சீடர்கள். வைணவர்கள் வைண வப் பிராமணர்களையோ சாதானிகளையோ தங்கள் குரு வாகக் கொள்வர். கம்பர் பிரிவினர் திரௌபதை, மன்னார் சாமி, கங்கம்மா, அங்கம்மா, படைவெட்டியம்மா ஆகிய சிறு தெய்வங்களையும் வழிபடுகின்றனர். கோதர்கள் பொலெ ரம்ம, வெய்கண்டலதாளி, படைவெட்டியம்மா ஆகிய சிறு தெய்வங்களை வழிபடுவர்.

**கம்மல் - Kamma (ear ornament)**

மொட்டடி காபுக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**கம்மாளன் - Kammālan (Tamil)**

கண்ணாளன் அல்லது கண்ணாளர் என்பதே கம்மாளன் என்பதன் பண்டைவடிவமாதல் வேண்டும். இவ்விரு சொற் களும் தொண்டைமண்டல சதகத்திலும், கம்பர் பாடியதாகக் கூறப்படும் ஏர் எழுபதிலும் இடம் பெற்றுள்ளன. கண்ணாளன் என்ற சொல் கண்ணை ஆள்பவன் அல்லது கண்ணைத் தருபவன் எனப் பொருள்படும். ஒரு சிலை செய்து முடிக்கப்பட்டவுடன் அதனைப் புனிதப்படுத்தும் சடங்கு ஒரு கோயிலில் நிகழும்

---

* அனந்தப்பூர் மாவட்ட விவரக்குறிப்பு. (Gazetteer of the Ananthapur District.)

அச்சடங்கு முடிவுறும் நிலையில் அதனைச் செய்த கம்மாளன் முன் வந்து அந்தச் சிலைக்குக் கண்களை வடிப்பான். இச் சொல் மக்களின் கண்களுக்கு விருந்தாகும் அழகிய பொருள் களைப் படைப்பவர் என்ற பொருளையும் தரும்.

இலங்கையில் நுண்வினைக் கலைஞர்கள் உருவங்களின் கண்களை வண்ணததில் வடிக்கும் நேத்திர மாங்கல்யம் என் னும் சடங்கைப் பற்றித் திரு எ.கே. குமாரசுவாமி கருத்தாழ மிக்க கட்டுரை ஒன்றினை வெளியிட்டுள்ளார்*. அக்கட்டுரை யில் அவர் எழுதியுள்ளதாவது:- "ஒரு விகாரைப் புதிதாகக் கட்டும்போதோ புதுப்பிக்கும்போதோ நடத்தப்படும் சடங் குகளுள் மிகவும் சிறப்பாகக்குறிப்பிடத்தக்கது நேத்திர மாங்கல்ய எனப்படும் கண் திறக்கப்படும் சடங்காகும். எத்தகைய உருவினை வடித்து அமைப்பதாயிருந்தாலும் அது எங்கே நிறு வப்பட இருந்தாலும் இந்தச் சடங்கினை நிகழ்த்தியே ஆக வேண்டும். வண்ண ஓவியங்களை வரைந்து முடிக்கும்போது கூட இந்தச் சடங்கினைச் செய்தே ஆக வேண்டும். ரூபவலிய விதிகளின்படி வரையப்பட்ட கடவுளர்களின் உருவங்கள் அடங்கிய புத்தகத்தை எனக்காக டி. எஸ். முகன்டிரம் வரைந்து கொண்டு வந்து தந்தபோது அவர் அந்த உருவங்களின் கண் களைப் பின்னர் ஒரு நல்ல நேரத்தில் அதற்குரிய எளிமையான சடங்குகளைச் செய்து எழுதுவதற்காக அப்படியே விட்டுவிட்டி ருந்தார்.

"இது தொடர்பாக நாக்ஸ் அவர்கள் கூறியுள்ள குறிப்புகள் வருமாறு:- 'சிலர் புத்த பெருமானிடம் கொண்ட ஆழ்ந்த பக்தி காரணமாகத் தங்களுடைய சொந்தச் செலவில் அவரு டைய சிலையினை அமைக்க முன் வருவர். இதற்காக அவர்கள் சிலையை உருவாக்குபவருக்குப் பெருந்தொகையினைத் தருதல் வேண்டும். அத்தகைய சிலைகளின் கண்கள் திறக்கப்படுமுன் தெய்வங்களாக மதிக்கப்படுவதில்லை. அவை வார்ப்புச் சாலை யில் மற்ற உலோகத் துண்டுகளோடு எத்தகைய மதிப்பும் தரப்படாமல் எங்காவது போடப்பட்டுக் கிடக்கும். அவற்றின்

---

* சிங்களவரின் இடைக்காலக் கலை. (Madiaeval Sinhalese Art.)

கண்களைத் திறக்கும் நேரம் வரும்போது வார்ப்படக் கலைஞருக்கு முன்பு பேசிய தொகையோடுகூட மேலும் அன்பளிப்புக்கள் தந்து சிறப்புச் செய்ய வேண்டும். கண்கள் திறக்கபபட்டவுடன் அவை தெய்வததன்மை வரப் பெற்ற தெய்வங்களாகக் கருதப்படுகின்றன. அதனை வார்ப்படக் கலைஞரின் பட்டறையிலிருந்து கடவுளருக்குரிய மரியாதையோடு கொண்டு வந்து, உரிய புனிதச் சடங்குகளை நிகழ்த்தி ஊர்வலமாகக் கோயிலுக்கோ அதற்காக என்று கட்டி அமைக்கப்பட்ட சிறு கோயிலுக்கோ எடுத்துச் செல்வர்.'' எனக்காகச் சிறப்பாகச் செய்யப்பட்ட - நேர்ந்து கொண்டு கோயிலில் கொண்டு வைப்பதற்குரியவை-களிமண் பொம்மைகளுக்குக் குயவன் தன்னுடைய வீட்டில் வண்ணம் தீட்டாமல் அவற்றை நான் தங்கியிருந்த பயணிகள் விடுதியின் தாழ்வாரத்தில் கொண்டு வந்து வைத்தே வண்ணம் தீட்டினான்.

தமிழ்க் கம்மாளர் பாண்டியர், சோழர், கொங்கர் என மூன்று அகமணக்கட்டுப்பாடு உடைய பிரிவினராக உள்ளனர். பாண்டியர் மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களிலேயே மிகுதியாக வாழ்கின்றனர். சோழர் பிரிவினர் திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், செங்கல்பட்டு, வட, தென் ஆர்க்காடுகள், சென்னை மாவட்டங்களில் மிகுதியாக வாழ்கின்றனர். கொங்கர் சேலம், கோயமுத்தூர் மாவட்டங்களில் மிகுதியாக வாழ்கின்றனர். சில இடங்களில் இந்தப் பிரிவினர் வட்டார அடிப்படையில் மேலும் பல உட்பிரிவினராகப் பிரிந்துள்ளனர். இதன்படி பாண்டிய நாட்டுத் தட்டார் கரகத்தார், வழ்பனத்தார், பெண்ணைக்கு அக்கரையார் (பெண்ணையாற்றுக்கு அப்பால் வாழ்பவர்), முந்நூறு வீட்டுக்காரர் என்பது போலப் பிரிவுபட்டுள்ளனர். இந்த உட்பிரிவுகள் ஒவ்வொன்றும் மேலும் பல புறமணக் கட்டுப்பாடு உடைய குலங்களாக ஊர்களின் அடிப்படையில் பெருகமணி, முசிறி, ஒரிய நாடு, திருச்செந்துறை, கலங்குநாடு என்பன போலப் பிரிவுகளுக்கு உட்பட்டனவாக உள்ளன.

கம்மாளர்கள் தொழில் அடிப்படையில் பொற்கொல்லர், கன்னார், தச்சர், கல்தச்சர், கருமார் என ஐந்து பிரிவினராகப் பிரிந்துள்ளனர். பாஞ்சாலர் என்ற சொல் இந்த ஐந்து பிரிவினரையும் சேர்த்து ஒரு சேர வழங்கச் சிலபோது தமிழ்நாட்டுக்

கம்மாளராலும் கன்னட நாட்டுக் கம்மாளராலும் பயன்படுத் தப்படுகிறது. இந்த ஐந்து பிரிவினரும் தங்களுக்குள் மண உறவு கொள்கின்றனர் எனினும் பொற்கொல்லர் கருமாரோடு மண உறவு கொள்வதை நிறுத்திவிட்டனர். பின்னர் விளக்கப்படு வதைப் போலத் தங்களைப் பிராமணர்களென அழைத்துக் கொள்ளும் கம்மாளர்கள் பிராமணர்களின் கோத்திரங்களைப் போலத் தங்களுக்கும் கோத்திரங்கள உண்டு எனக் கூறிக் கொள்கின்றனர். இந்த ஐந்து பிரிவினரும் விசுவாகு, சனகர், அகிமர், சனார்த்தனர், உபகேந்திரர் என ஐந்து முனிவர்களின் பெயரிலான ஐந்து கோத்திரங்களைச் சேர்ந்தவர்களாக உள்ள னர். இந்தக் கோத்திரங்கள் ஒவ்வொன்றையும் சார்ந்த இருபத் தைந்து கோத்திர உட்பிரிவுகள் உள்ளன. அவற்றின் பெயர்கள் எவையென விவரமாக யாரும் அறிந்திருக்கவில்லை. கம்மாளர் களுடைய புரோகிதர்களாக இருக்கும் ஒரு சிலரைத் தவிர மற்றவர் யாரும் இந்தக் கோத்திரங்களின் உட்பிரிவுகளைப் பற்றி எதுவும் தெரிந்து வைத்திருக்கவில்லை. கம்மாளர்கள் தங்கள் திருமணச் சடங்குகளைப் பிராமணர்கள் திருமணச் சடங்குகளைப் பின்பற்றி அமைத்துக் கொண்டுள்ளனர். திருமணச் சடங்குகள் அவரவர்களுடைய பொருள் வசதிக் கேற்ப மூன்று நாள்களாகவோ ஐந்து நாள்களாகவோ நீட்டிக்கும். பிராமணரல்லாதார் சாதிகளிடையே இருப்பதைப் போல இவர்களிடையே பெண்ணுக்குப் பரிசப் பணம் தரும் பழக்கம் உள்ளது. கைம்பெண்கள் சாதாரண நகைகளை அணிந்து கொள்ளவும் வெற்றிலை போட்டுக்கொள்ளவும் அனுமதிக்கப்படுகின்றனர். பிராமணர்களிடையே இவை அனு மதிக்கப்படுவதில்லை. இவர்கள் சாதிக் கைம்பெண்கள் பிரா மணர்கள் சாதிப் பெண்களைப்போல வழக்கமான விரதங் களை மேற்கொள்ளவும் வற்புறுத்தப்படுவதில்லை. பிரா மணர்கள் பொதுவாக மேற்கொள்ளும் விருந்து விழாக்களையும் இவர்கள் கடைப்பிடிப்பதில்லை.

கம்மாளரிடையே உறுதியான கட்டுப்பாடுடைய சாதி அமைப்பு ஏற்படுத்தப்பட்டுள்ளது. இத்தகைய கட்டுப்பாட்டிற் கான அமைப்பு முறைகள் வகுக்கப்பட்டுள்ள முறை குறிப்பிடத் தக்க சிறப்புடையது. கம்மாளரின் ஐந்து பிரிவுகளுக்கும் தனித்

தனியே ஒரு நாட்டாண்மைக்காரனும் ஒரு காரியஸ்தனும் உள்ளனர். காரியஸ்தன் எனக் கூறப்படும் தலைமை நிருவாக அலுவலர் அந்தப் பிரிவினரால் தேர்ந்தெடுக்கப்படுபவர் ஆவார். இவர்கள் அனைவருக்கும் மேலே அஞ்சு வீட்டுப் பெரிய தனக்காரன் (இவன் அஞ்சு சாதி நாட்டாண்மைக்காரன் எனவும் வழங்கப் பெறுவான்) உளன். இவனைக் குலுக்கல் முறையில் ஐந்து உட்பிரிவினரும் தேர்ந்தெடுத்துள்ள பிரதிநிதிகளுள் இருந்து தேர்ந்தெடுப்பர். தேர்தலில் போட்டியிட ஐந்து பிரிவினருளிருந்தும் பத்துப் பத்து முகவர்கள் முதலில் தேர்ந் தெடுக்கப்படுவர். இந்தப் பத்து முகவர்களும் தங்களுக்குள் ஒருவனைத் தலைவனாகத் தேர்ந்தெடுப்பர். அவனே அந்தப் பிரிவுக்கு உரிய நாட்டாண்மைக்காரனாகின்றான் அல்லது அந்தப் பதவிக்குரியவனாக வரக்கூடியவனாகின்றான். இவ் வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட ஐந்து நாட்டாண்மைக்காரர்களும், ஒரு குறிப்பிட்ட நாளில் சாதிக்குரிய தெய்வமான காமாட்சி யம்மன் கோவிலில் சாதிக்காரர்களோடு வந்து கூடுகின்றனர். அந்த ஐந்து நாட்டாண்மைக்காரர்களின் பெயர்களையும் ஐந்து துண்டுக் காகிதங்களில் எழுதி அவற்றோடு சில வெற்றுக் காகிதத் துண்டுகளையும் சேர்த்துத் தெயவத்தின் முன் இடுவர். கூட்டத்தில உள்ள குழந்தைகளில் ஒன்றினை அழைத்து அந்தத் துண்டுத் தாள்களை எடுத்துத் தரும்படி கூறுவர். அந்தக் குழந்தை முதலில் எடுத்துத் தரும் பெயருக்குடையவரே அஞ்சு வீட்டு நாட்டாண்மைக்காரனாக அறிவிக்கப்பட்டு அவர் தலை யில் சாதிப் பூசாரி பெரிய உருமாலை கட்டுவார். இந்தச் சடங்கு 'உருமாலை கட்டறது' எனப்பட்டுஅவரைப் பதவியில் நியமிக்கப் பட்டதற்கான அடையாளமாகஅமையும். அதன்பின் தொடர்ந்து குலுக்கல் முறையில் சீட்டு எடுக்கப்பட்டு அஞ்சு வீட்டு நாட் டாண்மைக்காரனுக்குக் காரியஸ்தன் எஞ்சிய நால்வருள் யார் என்பது முடிவு செய்யப்படும். அதன்பின் அனைவருக்கும் வெற்றிலைபாக்கு வழங்குவர். புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவனும், காரியஸ்தனும் முதலில வெற்றிலை பாக்குப் பெறு வர். அடுத்து உள்ளூர்த் தலைவர்களுக்கும், பின்னர் கூடி யுள்ளவர்களுக்கும் வெற்றிலை பாக்கு வழங்குவர். இத்ச' ன் பட்டம் கட்டுதல் எனப்படும் நாட்டாண்மைக்காரானைப்பதவி

யில் அமர்த்தும் சடங்கு முடிவுறும். இதற்கான செலவுகளுக்குக் கோயிலுக்கு உரிய நிதியிலிருந்து பணம் எடுத்துக் கொள்வர். தனியே இதற்கென்றே வசூலும் நடைபெறும். அதற்கு அனைவரும் தாராளமாக நிதியுதவி வழங்குவர். அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் சாதியின் செயற்பாடுகளில் அனைத்து முடிவுகளையும் எடுக்க உரிமை பெற்றவனாவான். அவன் கட்டளைக்குச் சாதியைச் சேர்ந்த அனைவரும் கீழ்ப்படிந்து நடத்தல் வேண்டும். உடமைகள், மண உறவுகள் தொடர்பான வழக்குகளில் அவன் கூறும் முடிவே இறுதியானது. வட்டாரத் தலைவர்கள் இது போன்ற வழக்குகளை முதலில் கேட்டுத் தங்கள் முடிவினை அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரனிடம் தெரிவிப்பர். அதனை அவன் உறுதி செய்வான். இந்த முடிவினை வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் ஏற்றுக் கொள்ள மறுப்பார்களேயாயின் அவர்கள் வழக்குமன்றங்களை நாடும்படி அறிவுறுத்தப்படுவர். அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் சிலபோது வட்டாரத் தலைவர்களைத் தானே நியமிப்பான். அத்தோடு தேர்ந்தெடுக்கப்படும் வட்டாரத் தலைவர்களை ஏற்றுக் கொள்ளவும் தள்ளிவிடவும் அவனுக்கு உரிமையுண்டு. காரியஸ்தனோடும் வட்டாரத் தலைவனோடும் கலந்து பேசிக் குறிப்பிட்ட இடங்களுக்கு என்று தனியே நாட்டாண்மைக்காரன்களையும் காரியஸ்தன்களையும் நியமித்து அவர்களிடம் தன் அதிகாரத்தை ஒப்படைப்பதும் உண்டு. மதுரை மாவட்டம் சோழவந்தான், வத்தலக்குண்டு முதலிய சாதியைச் சேர்ந்தவர்களின் எண்ணிக்கை மிகுதியாக உள்ள இடங்களிலேயே இது போல அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் தன் பொறுப்பினை மற்றவர்களிடம் ஒப்படைப்பான். இது தொடர்பாக நிலவி வரும் எங்கும் வழக்கில் இல்லாத ஒரு வழக்கத்தைக் குறிப்பிட வேண்டும். மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் சாதிப் பிள்ளைகள் என அழைக்கப்படும் பள்ளர்களை அழைத்துக் குறிப்பிடப்பட்ட ஓர் ஊர், உள்ளூர் அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் கீழ் வர இருப்பதாகவும், பள்ளர்களும் தங்கள் சாதிக்கெனத் தங்களுக்குள் ஒருநாட்டாண்மைக்காரனையும், ஒரு காரியஸ்தனையும் ஏற்படுத்திக் கொள்ளலாம் எனவும் கூறுவர். இவ்வாறு கூறப்பட்டவுடன் பள்ளர்களுள்

அவ்வாறு நியமிக்கத் தக்கவர்களைப் பள்ளர்களே கூற அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் அப்பதவிகளில் அவர்களை அமர்த்துவான். அன்றிலிருந்து அவ்வாறு பதவியில் அமர்த் தப்பட்டவர்கள் கள்ளர்களிடமிருந்து வாடகை தராமலேயே ஏரினைப் பெற்றுக் கொண்டு, அறுவடையின்போது விளைச் சலில் ஒரு பகுதியை அதற்கு ஈடாகத் தரும் உரிமை பெறு கின்றனர். உள்ளூர் நாட்டாண்மைக்காரன்கள் அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன், காரியஸ்தன் ஆகியோர் கட்டளைப்படி அவனுக்கு அடங்கி நடக்கும் கட்டுப்பட்ட அதிகாரிகளே. காரி யஸ்தனே சாதிக்காரரிடையே மிகுந்த மதிப்பும் செல்வாக்கும் உடையவனாக உள்ளான். உள்ளூர் நாட்டாண்மைக்காரன் களை அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் அல்லது அவன் காரியஸ்தன் பதவியிலிருந்து நீக்க உரிமை பெற்றிருப்பினும் அத்தகைய நிகழ்ச்சிகள் மிக அரிதாகவே நிகழ்கின்றன. தக்க காரணங்கள் காட்டி உள்ளூர் மக்கள் அவர்களை நீக்கும்படி வற்புறுத்தினாலன்றி அவர்கள் பதவியிலிருந்தும் நீக்கப்படுவ தில்லை. ஒரு நாட்டாண்மைக்காரனோ காரியஸ்தனோ பதவி லிருந்து விலக விரும்பினால் வெற்றிலை பாக்கினைக் கொண்டு வந்து அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் முன் அல்லது அவன் காரியஸ்தன் முன் வைத்து அவன் முன்னால் தரையில் விழுந்து வணங்க வேண்டும். இத்தகைய பதவிகள் பலவும் பரம் பரை உரிமையாக மாறி வருகின்ற ஒரு போக்குக் காணப்படு கின்றது. அவ்வாறு பரம்பரை உரிமை பெறுபவர்கள் செல்வமும் செல்வாக்கும் உடையவர்களாக இருந்தால் அவர்கள்சாதியாரால் ஏற்றுக்கொள்ளப்படுகின்றனர். தன்னுடைய அதிகாரத்தின் கீழ் வராத பகுதிகளில் நடைபெறும் திருமணங்களில் கூட அஞ்சுவீட்டு நாட்டாண்மைக்காரன் முதல் வெற்றிலை பாக்குப் பெறும் உரிமை பெற்றுள்ளான். இவனுடைய அதிகாரம் திருநெல் வேலியில் தங்கி வாழும் கம்மாளர் சாதிக்குரிய குருவின் அதிகாரத்தோடு முற்றும் முரண்பட்டதாக உள்ளது. அந்தக் குரு எப்போதாவது வடக்குப் பகுதிகளில் பயணம் மேற்கொள் வார். மது, மாமிசப் பழக்கத்திற்கு ஆளானவர்கள், கடல் கடந்து சென்றவர்கள் ஆகியோர் அவரிடம் தங்கள் பாவம் போக்கிப் புனிதப்படுத்த வேண்டி வருவார்களாயின், இவர் அவர்களுக்கு

அதனைச் செய்விப்பார். அவ்வாறு அவர்கள் வந்து பாவம் போக்கிக் கொள்ளாவிடினும் கூட அந்தக் குரு தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி அவர்களைச் சாதிவிலக்கம் செய்ய முற்படுவதில்லை. அவர் துறவு மேற்கொண்டவராக இல்லாமல் இல்லறத்தவராகவே உள்ளார். தன் பெண்களைச் சாதியைச் சேர்ந்தவர்களுக்குத் திருமணம் செய்து தரும் இவர் தன் பெண்களுடைய வீட்டில் சென்று உணவு கொள்வதில்லை.

இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில் புதைப்பதே பெரு வழக்கு. எனினும் தற்போது இறந்தவர்களை எரிக்கும் பழக்கமும் சிலபோது மேற்கொள்ளப்படுகின்றது. சாவுத்தீட்டு மற்றப் பிராமணர்களல்லாத சாதியாருக்கு உள்ளதைப் போலவே இவர்களுக்கும் பதினாறு நாள் அளவினதாகும். ஒரு பண்டாரமே சாவுச் சடங்குகளை முன்னின்று நடத்தி வைப்பான். இறந்து போனவரின் பிணத்தை அன்று எண்ணெய் பூசிச் சீவக்காய் தேய்த்துக் குளிப்பாட்டுவர். மூன்றாம் நாள் சேற்று மண்ணால் ஐந்து லிங்கங்கள் செய்து நான்கினைப் பிணம் புதைக்கப்பட்ட புதைகுழியின் நான்கு மூலைகளில் வைத்து எஞ்சியதைப் புதைகுழியின் மேல் நடுவில் வைப்பர். ஐந்தாம் நாள் பண்டாரத்திற்கும் சாதியைச் சேர்ந்த மற்றவர்களுக்கும் சோறிடுவர். பெரிய பேரூர்கள் தவிர மற்ற இடங்களில் சிரார்த்தச் சடங்கு மேற்கொள்ளப்படுவதில்லை.

பிராமணர்களின் சமயமான சைவத்தைப் பின்பற்றும் கம்மாளர்கள் சிவனின் மூத்த பிள்ளையான பிள்ளையாரிடம் மிகுந்த பக்தி செலுத்துகின்றனர். சிலர் லிங்காயத சமய நெறிப்பட்டவர்களாக மாறியுள்ளனர். இவர்களால் விருத்தி தெய்வம் என அழைக்கப்படும் காமாட்சி அம்மனே இவர்கள் சிறப்பாக வழிபடும் தெய்வமாகும். எல்லா உட்பிரிவினரும் காமாட்சி அம்மனை வழிபடுகின்றனர். பெண் குழந்தைகளுக்குக் காமாட்சி என்ற பெயரை விரும்பி வைப்பர். இச்சாதியார் தங்கள் பணிக்கு உதவும் தீச்சட்டியிலும், துருத்தி ஊதும் நெருப்பிலும் அவள் வீற்றிருப்பதாகக் கருதுகின்றனர். புனித நிகழ்ச்சிகள் நடைபெறும் சமயத்திலெல்லாம் அவளுடைய பெயரில் வெற்றிலைபாக்கும் காணிக்கையும் முதலில் செலுத்தப்

பட்டு அவை உள்ளூரிலுள்ள காமாட்சி அம்மன் கோவில் பூசாரிக்கு அனுப்பப்படும். அவள் பெயரில் ஆணையிடும் இவர்கள் சாதித் தொடர்பான வழக்கு விவகாரங்களை அவள் கோயில் முன்னே வைத்துத் தீர்த்துக் கொள்கின்றனர். கோயிலின் முன் சாதிக்கான பதவிக்குரிய தேர்தல்களும் நடத்தப் படுகின்றன. காமாட்சி அம்மனோடு இந்தச் சாதியாருக்கு உரிய சிறப்பான உறவினுக்கு உரிய தொடர்புக்கான காரணம் புலனாகவில்லை. தெளிவற்ற வழக்கு வழியான வரலாற்றுப்படி தீயினில் பாய்ந்து உயிர்விட்ட கன்னியருள் இவளும் ஒருத்தி எனவும், அதன் காரணமாகத் தெய்வமாக்கப்பட்டவள் எனவும் கருதப்படுகின்றாள். இவர்கள் ஊர்த் தேவதைகளை வழிபடுவதோடு அவற்றிற்கு உயிர்ப்பலியும் தருகின்றனர். எனினும் ஊன் உண்ணாத இவர்கள் அவற்றின் இறைச்சியை உண்பதில்லை. இத் தெய்வங்களுள் சப்த கன்னியரும், கோச்சடைப் பெரிய ஆண்டவனும், பெரிய நாயானாரும் குறிப்பிடத்தக்கவை. சப்த கன்னியரை வழிபடுபவர் தாய் வழிபாட்டு நெறியினர் என்பதைத் தெளிவுறுத்தும் வகையில் மாதா வகுப்பார் என அழைக்கப்படுகின்றனர். மற்ற இரண்டு தெய்வங்களையும் வழிபடுகின்றவர்கள் நாதீகா வம்சத்து ஆள்கள் என அழைக்கபபடுகின்றனர். இவர்கள் ஏழு கன்னியரின் அருள் பெற்ற ஆண்களின் வழிப்பட்டவர்கள். கோச்சடைப் பெரிய ஆண்டவன் என்பது ஒரு சடைப் பெரிய பாண்டியன் என்பதன் திரிபு எனச் சொல்லப்படுகிறது. ஒரே சடாமுடியினை உடைய புகழ்பெற்ற பாண்டியன் என்பது இதன் பொருள். இவர் விட்டுணுவின் அவதாரமாகவும், பெரிய நாயனார் சிவனின் அவதாரமாகவும் கருதப்படுகின்றனர். கோச்சடைப் பெரிய ஆண்டவனே, பாண்டியத் தட்டார் எனக் கூறிக் கொள்ளும் தட்டாரைத் தன் நாட்டில் வந்து தங்கும்படி அழைத்தவன். இவர்கள் வடக்கே இருந்து வந்து மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் தங்கியதாக வழக்கு வழி வரலாறு வழங்குகின்றது. கோச்சடைப் பெரிய ஆண்டவன் நினைவாக ஆண்டுதோறும் இந்த மாவட்டங்களில் விழாக் கொண்டாடப்படுகிறது. இந்த விழாவிற்கான செலவுகளுக்காக ஐந்து பிரிவுக் கம்மாளர்களிடையேயும் சந்தா வசூல் செய்யப்படுகிறது. இந்த விழா

மூன்று நாள்கள் தொடர்ந்து நடைபெறும். விழாவின் முதல் நாளன்று கடவுள் மங்கலஞ் செய்யப்பட்ட மன்னரின் உருவத் திற்கு நீரும், மா, பலா, வாழை ஆகிய முக்கனிகளும் பிழிந்த சாறும் கலந்து அபிடேகம் செய்வர். இதனை முப்பழப் பூசை என வழங்குவர். இரண்டாம் நாள் பொங்கலிட்டுப் படைப் பர். இறுதி நாளன்று கொழுத்த செம்மறி ஆடுக்கடா ஒன்றி னைப் பலியிடுவர். இந்த விழா, சாதியைச் சேர்ந்த அனை வரையும் எத்தகைய தீங்கும் வந்து சூழாதபடி பாதுகாப்பதற் காகக் கொண்டாடப்படுவது. புதிய வீடுகள் கட்டும்போது மர வேலையைத் தொடங்கும் தச்சர் வழக்கமாக ஒரு செம்மறி யாட்டுக் கடாவினைப் பலியிட்டோ ஆட்டுக்கடா அல்லது ஆட்டின் காதினை அறுத்தோ அதன் குருதியினை அந்த வீட் டின் ஒரு தூணில் அல்லது சுவரில தடவுவர்.

கம்மாளர் தாங்கள் தேவர்களின் கட்டிடக் கலைஞனான விசுவகர்மாவின் வழி வந்தவர்கள் எனக் கூறிக் கொள் கின்றனர். சில பகுதிகளில் இவர்கள் தங்களைப் பிரா மணர்களைவிடச் சாதியில் உயர்ந்தவர்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். அவ்வாறு கூறிக் கொள்பவர்கள் பிராமணர் களைக் கோ பிராமணர் எனவும், தங்களை விசுவ பிராமணர் கள் எனவும் கூறிக் கொள்வர். விசுவகர்மாவிற்கு மனு, மயன், சில்பி, திவஸ்தரன், தெய்வக்ஞன் என ஐந்து மக்கள் இருந்தனர். இந்த ஐவருமே ஐவகைக் கம்மாளர் தொழிலினைப் படைத்த முதல்வர்கள். அவர்களுடைய பரம்பரையினர் அத்தொழில் களைத் தொடர்ந்து செய்தனர். அதன்படி சிலர் கொல்லுத் தொழிலில் ஈடுபட அவர்கள் மனுக்கள் என அழைக்கப் பட்டனர். தச்சுத் தொழிலில் சிலர் முறைப்படி ஈடுபட்டனர். அவர்கள் மயன்கள் எனப்பட்டனர். கல்லின் செதுக்கு வேலை புரிந்தவர்கள் சில்பிகள் எனப்பட்டனர். உலோகத்தினை உருக்கிப் பொருள்கள் செய்தவர்கள் திவஷ்டர் எனப்பட்டனர். அணிமணிகள் செய்யும் பணியினை மேற்கொண்டவர்கள் விசுவாங்கர் அல்லது தெய்வாங்கர் எனப்பட்டனர். கம்மாளர் களின் தோற்றம் பற்றிய ஒரு கதை வழக்குப்படி இவர்கள் பிராமணன் ஒருவனுக்கும் பேரி செட்டிப் பெண் ஒருத்திக்கும்

பிறந்தவர்களின் வழிவந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. இதன் அடிப்படையிலேயே கம்மாளனும் பேரி செட்டியும் ஒன்று என்ற பழமொழி வழங்கி வருகின்றது. மகென்சி கையெழுத்துச் சுவடிகளில் இடம் பெற்றுள்ள கதை ஒன்று தமிழ்நாட்டில் பெரு வழக்கினதாக உள்ளது. மந்தாபுரி என்ற நகரில் முன்பு ஐந்து பிரிவினரான கம்மாளர்கள் ஒற்றுமையாக வாழ்ந்துவந்தனர். எல்லாப் பிரிவு மக்களுக்கும் இவர்கள் தொழில் செய்தனர். அங்கு வேறு கைவினைஞர்கள் இல்லாத காரணத்தால் இவர்கள் தாங்கள் செய்யும் பொருள்களுக்கு மிகுதியான விலை கூறினர். அரசர்கள் எவருக்கும் அஞ்சாது வாழ்ந்த இவர்கள் அந்த அரசர்களை மதிக்கவும் இல்லை. இதனால் மனக்கொதிப்பு அடைந்த அந்த நாட்டு அரசர்கள் அவர்களுக்கு எதிராக ஒன்றாக எழுந்தனர். தங்களைப் பாதுகாத்துக் கொள்ளக் கம்மாளர்கள் காந்தக் கல்லாலேயே முழுவதும் கட்டப்பட்ட காந்தக்கோட்டை என்ற கோட்டையில் சென்று ஒளிந்து மறைந்து வாழ்ந்தனர். அககோட்டை மீது வீசப்படும் படைக்கலங்களை அது தன் காந்த ஆற்றலால் இழுத்துக் கொண்டது. அந்த நாட்டு அரசன் அந்தக் கோட்டையை எரித்து அழிப்பவர்களுக்குப் பெரும் பரிசு வழங்கப்படும் என அறிவித்தான். இறுதியில் ஒரு கோயிலைச் சேர்ந்த தேவதாசிகள் தாங்கள் அதனைச் செய்து முடிப்பதாக உறுதி கூறி அதன் அடையாளமாக வெற்றிலை பாக்குப் பெற்றுக் கொண்டனர். அந்த அரசன் காந்தக் கோட்டைக்கு எதிரில் இந்தத் தேவதாசிகளுக்கு ஒரு கோட்டையினைக் கட்டித் தந்தான். அவர்கள் தங்கள் பாட்டிசையால் கம்மாளர்களைப் பரவசப்படுத்தித் தங்களபால் ஈர்த்து அவர்கள் வாயிலாகக் குழந்தைகளையும் பெற்றுக் கொண்டனர். தேவதாசியருள் ஒருத்தி ஓர் இளைஞனான கம்மாளனிடமிருந்து அந்தக் கோட்டையைச் சுற்றி வரகுத் தட்டையிட்டு நெருப்பிட்டால் அதனை எரித்து அழித்து விடலாம் என்ற உண்மையைத் தெரிந்து கொண்டாள். அந்த அரசன் அதன்படி அந்தக் கோட்டைக்கு நெருப்பிட ஆணையிடத் திடீரெனக் கோட்டையைச் சுற்றி வளைத்துக் கொண்ட நெருப்பிலிருந்து தப்ப முயன்ற கம்மாளர்களில் சிலர் உயிரிழந்தனர். மற்றவர்கள்

கடற்கரையை அடைந்து கப்பல்களில் தப்பியோடினர்; அல்லது அரசனால் பிடிக்கப்பட்டு உயிரிழப்புக்கு உள்ளாயினர். இதன் காரணமாக அந்த நாட்டில் கைவினைஞர் இல்லை யாயினர். அச்சமயம் கருவுற்றிருந்த கம்மாளப் பெண் ஒருத்தி பேரி செட்டி ஒருவன் வீட்டில் அடைக்கலம் புகுந்து அவனு டைய மகள் எனத் தன்னைக் கூறிக் கொண்டு உயிரிழக் காமல் தப்பினாள். கைவினைஞர்கள் இல்லாத காரணத்தால் அந்த நாடு பெரும் நெருக்கடிக்கு உள்ளாயிற்று. உழவர்கள், பொருள்கள் தயாரிப்போர், நெசவாளர் முதலிய பலரும் பெரும் தொல்லைக்கு உள்ளாயினர். அந்த நாட்டு அரசன் யாரேனும் கம்மாளன் எங்கேனும் அந்தச் சூதியின் அழிவிற்கு ஆட் படாமல் தப்பிப் பிழைத்துள்ளானா என அறிய விரும்பினான். அதற்காக வளைவு நெளிவுகளை மிகுதியும் உடைய நுண்ணிய துளையை உடைய பவளக் கட்டி ஒன்றினையும் நூல் ஒன்றி னையும் தன் நாடெங்கும் எடுத்துச் செல்லும்படி ஏற்பாடு செய்தான். அந்த நூலினை அந்தப் பவளத்தில் உள்ள நுண் துளை வழியே செலுத்துவதில் வெற்றி காண்பவர்களுக்குப் பெரும் பரிசு வழங்கப்படும் என அறிவித்தான். தப்பிப்பிழைத்த கம்மாளப் பெண்ணுக்குப் பிறந்து, செட்டியின் வீட்டில் வளர்ந்து வந்த சிறுவன் இறுதியில் தான் அச்செயலைச் செய்து முடிப்பதாகக் கூறி அந்தப் பவளக் கட்டியினை ஒரு எறும்புக் குழியின் நுழைவாயில் திணித்து வைத்து அந்த நூலினைச் சர்க்கரை நீரில் தோய்த்துச் சற்றுத் தூரத்தில் வைத்தான். எறும்புகள் அந்த நூலினைப் பவளத்தின் துளை வழியே இழுத்துச் சென்றன. அச் சிறுவனின் செயலில் மகிழ்ந்த அரசன் அவனுக்குப் பல பரிசல்கள் நல்கி அவனை மேலும் பல வேலைகளைச் செய்து முடிக்கும்படி பணித்தான். அவற்றையும் அவன் தன் தாயாரின் உதவியோடு செய்து முடித்து அந்த அரசனைத் திருப்திப்படுத்தினான். இதனால் அந்தச் சிறு வனைப் பற்றி ஐயுற்ற அரசன் செட்டியினை அழைத்து அச் சிறுவனின் தாய் தந்தையர் யாரென உண்மையை உரைக்கும் படி கேட்டான். அதன்படி அச் செட்டியும் அச்சிறுவனின் பிறப்பு வரலாற்றின் உண்மையைக் கூறினான். அந்த அரசன் அவனுக்குக் கலப்பைக்கான கொழுக்களை மிகுதியான அளவில்

செய்யத் தேவையான பொருள்களைத் தந்து உதவியதோடு ஒரு செட்டியின் மகளையும் மணம் முடித்து வைத்து அவன் குடும்பம் நடத்த உதவியாக நிலபுலன்களையும் வழங்கினான். அந்தச் செட்டிப் பெண் வாயிலாக அவனுக்கு ஐந்து பிள்ளைகள் பிறந்தனர். அந்த ஐவரும் இன்று கம்மாளர் மேற்கொண்டுள்ள ஐவகைத் தொழிலையும் ஆளுக்கொன்றாக மேற்கொண்டனர். அந்த அரசன் அவர்களுக்குப் பஞ்ச ஆயுதத்தார் என்ற பட்டம் வழங்கிச் சிறப்பித்தான். அவர்கள் இப்பொழுது தங்களுக்குள் மண உறவு கொள்கின்றனர். செட்டியின் மகள் வழி வந்தவர்களாகையால் அவர்கள் பூணூல் அணிகின்றனர். கடல் வழியாகத் தப்பிச் சென்றவர்கள் சீனாவிற்குச் சென்று விட்டதாகக் கூறுவர். அவர்கள் இன்று கம்மாளர்கள் காணப்படுகின்ற சிங்களத் தீவிற்குச் சென்று சேர்ந்தனர் என்றும் கூறப்படுகிறது. மேற்கூறப்பட்ட கதை தொடர்பாக நாம் கருத்தில் கொள்ள வேண்டிய உண்மை ஒன்று உண்டு. ஒரே வீட்டில் இரண்டு வேறு வேறு சாதியினைச் சேர்ந்த குடும்பத்தினர் வாழ்கின்ற நடைமுறை வழக்கில் இல்லை. ஆனால் பேரி செட்டிச் சாதியினரும் கம்மாளரும் அது போல வாழ்கின்ற வழக்கத்தைக் காண்கின்றோம். பேரி செட்டிகளின் ஒரு பிரிவினரான அச்சரப்பாக்கம் செட்டிகளுக்கும் கம்மாளர்களுக்கும் இடையே நெருங்கிய உறவு காணப்படுகிறது. இவ்விரு சாதியினரும் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பர். இரு சாதியினரும் இறந்தவர்களை உட்கார்ந்த நிலையிலேயே புதைக்கின்றனர். இவ்விரு சாதியாரும் அணியும் தாலி அளவிலும் வடிவமைப்பிலும் ஒன்று போலவே உள்ளது. அச்சரப்பாக்கம் செட்டிகளின் தாலி பொதுவாகப் பேரி செட்டிகள் அணியும் தாலி போன்றதாக இல்லை என்பதனையும் கருத வேண்டும். அச்சரப்பாக்கம் செட்டிகள் மளிகைச் செட்டிகள் என்றழைக்கப்படுகின்றனர். இவர்கள் அநதக் கம்மாளர் சாதிப் பெண்ணையும் குழந்தையினையும் பேணி வளர்த்தவர்கள் வழி வந்தவர்கள் எனவும் கம்மாளர்களோடு மண உறவு கொண்டவர்கள் எனவும் கருதப்படுகின்றனர். இன்றும் சென்னை நகரில் சாதிக் கூட்டம் நடத்தும் பேரி செட்டிகள், மளிகைச் செட்டிகள் தவிர அனைவரும் வந்து கூட வேண்டும் என்றே அறிக்கை விடுக்கின்றனர். கந்தசாமி

கோவில் தொடர்பான நடைமுறைகளில் பேரி செட்டிகள் கலந்து கொள்ளவும் தேர்தலில் நின்று வாக்குப் பெறவும் உரிமையுடையவர்களாக இருக்க அச்சரப்பாக்கம் செட்டிகளுக்கு அத்தகைய உரிமைகள் வழங்கப்படுவதில்லை.

கம்மாளர்களின் பேரழிவுக்குத் துணை நின்று துரோகம் இழைத்தவர்கள் தேவதாசிகளே. அத்தேவதாசிகள் கைகோளர் சாதியைச் சேர்ந்தவர்கள். அவர்களுக்கு முறைகேடாகப் பிறக்கும் குழந்தைகள் அவர்களுடைய மூதாதையரைப் போலவே நெசவாளிகளாகின்றனர். பழந்தமிழ்ப் பாடல்களின்படி தென்னிந்தியாவைச் சேர்ந்த நெசவாளர்களுள் கம்மியன் அல்லது கம்மாளர் சாதியினரும் அடங்கியிருந்தனர் எனத்தெரிகிறது.* கி.பி. 1013 வரையிலும் கூடக் கம்மாளர் தாழ்ந்த சாதியினராகக் கருதப்பட்டதோடு ஊர்களுள் அவர்களுக்கெனத் தனித்த சேரி ஒதுக்கப்பட்டிருந்ததாகப் பல கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.† பிற்காலக் கல்வெட்டு ஒன்று சோழ மன்னன் ஒருவன் ஓர் ஆணையின் மூலம் கம்மாளர்களுக்குச் சங்கினை ஊதவும், திருமணம், சாவு முதலான சடங்குகளில் கொட்டு முழக்கு வைத்துக் கொள்ளவும், சந்தனம் பூசிக் கொள்ளவும், வீடுகளுக்குக் காரை பூசவும் அனுமதி வழங்கியதாகக் கூறுகின்றது.‡ "கம்மாளர் சமூகத்தில் தாழ்ந்தவர்களாகக் கருதப்படுவதற்கான காரணம் எளிதில் புலனாவதாகவே உள்ளது. பண்டை நாள்களில் உலகத்தில் மற்றெல்லா நாடுகளிலும் போலவே இந்தியாவிலும் படைவீரர் சாதியினைச் சேர்ந்தவர்கள் தொழிலில் ஈடுபட்டிருந்த மற்றச் சாதியார்களை – அவர்கள் சாதாரணத் தொழிலாளிகளாயினும் கைவினைஞராயினும் – தாழ்ந்தவர்களாகவே நடத்தினர். படைவீரர்களின் மேலாண்மையின் செல்வாக்குக்குறைந்தபின், அனைவருக்கும் பயன்படும் கைவினைஞரான கம்மாளரைப் போன்ற சாதியார் தகுதியில் உயர்ந்தவ

---

* மதுரைக்காஞ்சி, வரி, 521.

† ஈ. ஹியுல்ட்ச், தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், II, i, 44, 46, 1891. (E. Hultzsch S.I. Inscriptions, II, i 44, 46, 1891.)

‡ முந்நூல், III, 47, 1

ராதல் இயல்பானதே. நெடுநாள்களாகத் தாழ்ச்சியுற்றிருந்த இவர்கள் வாய்ப்புக் கிடைத்தவுடன் தங்களைத் தாங்களே மிக மிக மேம்படுத்திக் கொண்டனர். இது அவர்களுக்கு மேலும் கீழும் உள்ள சாதியாரால் கேலிக்கு உரியதாகக் கருதப்பட்டது'' எனத் திரு. எச். ஸ்டுவர்ட் 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறியுள்ளார். இவ்வாறு இவர்கள் மேம்படுத்திக் கூறிக் கொள்வதாக மேலே சுட்டப்படுவது இவர்கள் தங்களைத் தச்சனான விசுவகர்மாவின் வழிவந்தவர்களெனவும் பிராமணர்கள் எனவும் கூறிக் கொள்வதைச் சுட்டுவதாகும்.

திரு எப். ஆர். ஹெமிங்வே தந்துள்ள குறிப்பு ஒன்று முகமதியர்களும் கம்மாளர்களும் மானி (பெரியப்பா) என ஒருவரை ஒருவர் அழைத்துக் கொள்வதற்கான காரணத்தைப் பின்வருமாறு விளக்குகின்றது. அதன்படி ''இப்ரகாம் நபி என்ற முகமதிய துறவியாரை நாம தூதன் என்ற இந்து அரசன் கொன்று விடுவான் என்ற அச்சத்தால் அவருடைய தந்தையார் ஒரு கம்மாளர் வீட்டில் விட்டு வைத்திருந்தார். நாமதூதன் என்ற மன்னனின் அவைக்களச் சோதிடர்கள் அவ்வாறு அந்த முகமதியப் புனிதரைக் கொலைக்கு உள்ளாக்கினால்தான் அவன் தனக்கு வர இருக்கும் பெருங்கேட்டிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள முடியும் எனச் சோதிடம் கூறியிருந்தனர். அந்தக் கம்மாளன் தான் வளர்க்க ஏற்றுக்கொண்ட துறவியாருக்குப் பதிலாகத் தன்னுடைய மகளை அந்தத் துறவியாரின் தந்தையிடம் கொடுத்து விட்டிருந்தான். மற்றொரு கதை வழக்குப்படி (இதுவும் கம்மாளர்களிடையே வழங்குவது) கம்மாளர்கள் ஒரு காலத்தில் காந்தக் கலலாலான காந்தக்கோட்டை என்ற பெயருடைய கோட்டையில் வாழ்ந்து வந்தனர். அந்தக் கோட்டையை வரகுத் தட்டில நெருப்பிட்டே அழிக்க முடியும். முகமதியர்கள் அந்தக் கோட்டையைப் பற்றிய இரகசியததை வெளிக்கொணர முகமதியப் பொதுமகளிரை அனுப்பி வைத்தனர். கம்மாளர்கள் அவ்வாறு கோட்டைக்குள் நுழைந்த முகமதிய பரத்தையரோடு உறவு மேற்கொண்டதால் இவ்விரு பிரிவினரிடையேயும் நட்புறவு ஏற்பட்டதாகவும் கூறுவர்.

கம்மாளர்கள் வலங்கைப் பிரிவினருக்கு எதிரணியினரான



கம்மாளர்

இடங்கைப் பிரிவினைச் சேர்ந்தவர்கள். சாதிகள் இவ்வாறு இடங்கை, வலங்கை எனப் பிரிவுபட்டது எப்படி நிகழ்ந்தது என்பதற்கான காரணங்கள் தெளிவற்றனவாக உள்ளன. வேளாளருக்கும், கம்மாளருக்கும் இடையேதோன்றிய ஒரு பூசல் காரணமாகத் தோன்றியது இது என ஒரு வழக்கு நிலவுகிறது. வேளாளர்கள் கம்மாளர்கள் தங்கள் சாதியை நம்பி வாழும் சாதிப் பிள்ளைகள் எனக் கூறி உரிமை கொண்டாடினர். கம்மாளரோ வேளாளர் தங்களை நம்பியிருப்பதாகக் கூறினர். இந்தப் பூசல் முற்றவே காஞ்சிவரத்தில் இருந்து அரசாண்ட சோழ மன்னன் இந்த இரண்டு சாதியாரையும் அவர்களுடைய ஆதரவாளர்களையும் எதிரெதிரே நிறுத்தி, அவர்களிடையேயான பூசலை விசாரித்தான். கம்மாளர்களும் அவர்களை ஆதரித்தவர்களும் அரசனின் இடப்பக்கம் நின்றனர். வேளாளர்களும் அவர்களுடைய கூட்டாளிகளும் வலப் பக்கம் நின்றனர். அரசன் இந்த வழக்கில் கம்மாளருக்கு எதிராகத்தீர்ப்பு வழங்கவே கம்மாளர்கள் நாலாத் திசைகளிலும் கலைந்து சென்றனர். மற்றொரு வழக்கு வரலாற்றுப்படி ஒரு கம்மாளனுக்குப் பலிசர் சாதியைச் சேர்ந்த மனைவி வழியே ஒரு மகனும், கம்மாளர் சாதியைச் சேர்ந்த மனைவி வழியே ஒரு மகனும் இருந்தனர். அந்தக் கம்மாளனைக் காஞ்சிவரத்தைச் சேர்ந்த மன்னன் அநியாயமாகக் கொன்றுவிட அதற்குப்பழி வாங்க அவனுடைய இரண்டு பிள்ளைகளும் அந்த அரசனைக் கொலை செய்து அவன் உடம்பை இருவரும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர். கம்மாளன் அந்த அரசன் தலையை எடுத்துக் கொண்டுபோய் தராசுத் தட்டாகப் பயன்படுத்தினான். பலிசன் அந்த அரசன் தோலினைக் கொண்டு ஒரு தலைச்சுமை வணிகன் பயன்படுத்தும் கம்பளமாக்கியதோடு தசைநார்களை வளையல்களைக் கோக்கும் நூலாக்கினான் அவர்கள் ஒருவர் மீது ஒருவர் மன்னனுடைய உடலில் அதிகம் கொண்டு சென்று விட்டதாகக் குறைகூறிச் சண்டையிட்டுக் கொண்டனர். மற்றச் சாதியினர் அனைவரும் இந்தச் சண்டையில் தலையிட்டுக் கம்மாளன் அல்லது பலிசன் பக்கத் திலுமாகப் பிரிந்து சேர்ந்து கட்சி கட்டினர். காஞ்சிவரத்தில் நாட்டிய மகளிர், கோயில்கள், மண்டபங்கள் ஆகியன வலங்கை,

இடங்கைப் பிரிவுக்கு உரியனவாக வேறுவேறாக இன்றும் உள்ளன. தஞ்சாவூரிலும் அதுபோலவே கம்மாளருக்கெனத் தனியே நாட்டிய மகளிர் உள்ளனர். கம்மாளர் இடங்கைப் பிரிவைச் சேர்ந்தவர்களாதலால் வலங்கைப் பிரிவினைச் சேர்ந்த நாட்டிய மகளிர் அவர்கள் முன்போ அவர்கள் வீடு களிலோ ஆடமாட்டார்கள். இதேபோல வலங்கைப் பிரிவி னைச் சேர்ந்த இசைவாணர்களும் கம்மாளர்கள் வீடுகளில் நிகழ்ச்சி நடத்தமாட்டார்கள். முன் நாள்களில் கம்மாளர்கள் வலங்கைப் பிரிவினர் குடியிருக்கும் தெருக்கள் வழியே பல்லக்கில் செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. அவ்வாறு செல்ல முற்படின் கலவரம் மூளும். இது போன்ற கலவரங்கள் பதினெட்டாம் நூற்றாண்டில் அடிக்கடி நிகழ்ந்துள்ளன. மசூலிப்பட்டினத்தில் நிகழ்ந்த இத்தகைய கலவரம் ஒன்றினைப் பிரையர் (Fryer) குறிப்பிட்டுள்ளார். அதில் தெலுங்குக் கம்மாளர்களின் பிடி வாதமும் முரட்டுத்தனமும் மற்ற சாதியினரால் முகமதியர் களின் உதவிபெற்று ஒடுக்கப்பட்டது எனக் கூறியுள்ளார்.

கம்மாளர்கள் தங்களை ஆசாரி என்றோ பத்தர் என்றோ அழைத்துக் கொள்கின்றனர். இவை பிராமணர்களின் பட்டப் பெயரான ஆச்சாரி, பட்டர் என்பனவற்றோடு ஒத்தவை. இவர்கள் தங்களுக்கு வேதமும் தெரியும் எனக் கூறிக்கொள் கின்றனர். திருமணம், சாவு முதலிய எல்லாச் சடங்குகளையும் இவர்கள் சாதியைச் சேர்ந்த புரோகிதரே நடத்தி வைக்கின் றார். உபநயன நாள் தொடங்கி இவர்கள் பூணூல் அணிந்து கொள்கின்றனர். சிலர் வழக்கமான பூணூல் அணியும் சடங்கி னையும் மேற்கொள்கின்றனர். இவர்களில் பெரும்பாலா னவர்கள் ஊன் உண்பதில்லை எனக் கூறிக் கொள்கின்றனர். பிராமணரல்லாத மற்றச் சாதியார் பிராமணர்களுக்குத் தருவது போன்ற மரியாதையை இவர்களுக்குத் தருவதோ இவர்களை எதிர்ப்பட நேர்ந்தால் நமஸ்காரம் செய்வதோ இல்லை. கம்மாளர் பெண்கள் மற்றச் சாதியினரைப் போலன்றிச் சேலைத் தலைப்பை வலத் தோளில் போட்டுக் கொள் கின்றனர். நட்டு என்ற மூக்குத்தியினை அணிந்திருப்பதை வைத்து இவர்களை எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம்.

கம்மாளர்களின் தொழில் முறை தொடர்பாகச் சர்ஜன் மேஜர் டபிள்யூ. ஆர். கார்னிஷ் 1871 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பின்வருமாறு எழுதுகிறார்:- "கொல்லர்களும், தச்சர்களுமான இக் கைவினைஞர்கள் தங்கள் குழநதைகளுக்கும் தங்கள் தொழிலையே பயிற்று விக்கின்றனர். பல தலைமுறையினர் தொடர்ந்து ஒரே தொழிலில் ஈடுபடுவதால் பரம்பரைச் செல்வாக்குக் காரணமாக அவர்கள் அத்தொழிலில் மிகவும் தேர்ச்சி பெற்றவர்களாக விளங்க முடியும் எனக் கருதப்படுகிறது. ஆனால், நடைமுறையில் அவ்வாறில்லை. உலோகம், கல், மரம் ஆகியன கொண்டு இந்தியர்கள் செய்யும் பொருள்கள் நயமற்றும் பரும்படியாகவும் இருப்பதோடு வடிவ அமைப்புகள் மாற்றமின்றி ஒரே அமைப்புடையனவாகவும் உள்ளன. சென்ற சில ஆண்டுகளில் இவர்கள் கைத்தொழில் நுட்பத்திறனில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் ஐரோப்பியர்களின் தொடர்பு காரணமான செல்வாக்கால் ஏற்பட்டதாகும். இருப்புப்பாதை அமைத்தவர்கள் கைவினைஞர்கள் தொழில்நுட்ப முன்னேற்றத்திற்குப் பெரிதும் உதவியுள்ளனர். சென்ற இருபது ஆண்டுகளில் இருப்புப் பாதைப்பணி நடைபெறும் மாவட்டங்களில் கல் கட்டிடம், செங்கல் வைப்பு, தச்சு, கொல்லு ஆகியன மிகப் பெரிய அளவில் முன்னேற்றம் கண்டுள்ளன. தென்னிந்தியாவில் வெள்ளி, தங்கம் ஆகியவற்றில் தொழில் செய்யும் கொல்லர்கள் எண்ணிக்கையில் மிகுதியாக உள்ளனர். இவர்களின் பணி பெருமபாலும் இந்தியர்களுக்கான அணிமணிகளைச் செய்வதேயாகும். அவற்றின் வடிவமைப்புக்களில் சில இவர்கள் சொந்தமாகக் கற்பனை செய்து அமைத்தவை. இத்துறையிலும் அப் படைப்புக்கள் நுட்பமற்றனவாகவே இந்தியர்களுக்காகப் படைக்கப்படுகின்றன. ஐரோப்பியச் சந்தைக்காகச் செய்யப்படும் ஒரு சில பொருள்களைத் தவிர மற்றவை வடிவமைப்பிலும் வேலைப்பாட்டிலும் சிறப்புப் பெற்றனவாக இல்லை. இந்தியக் கைவினைஞர் கைநுட்பத் திறனை வளர்த்துக் கொள்ளும் ஆற்றல் உடையவர்கள் என்பதனை அவர்கள் தங்களுக்குத் தரப்படும் முன் மாதிரியினைப் பார்த்து

அப்படியே வடிவமைக்கும் ஆற்றல் உடையவர்களாக இருப்பதைக் கொண்டும் ஐரோப்பியர்களின் மேற்பார்வையில் பணியாற்றும்போது மிகச் சிறப்புற நிறை திட்பம் உடையனவாகப் பொருள்களைப் படைப்பதைக் கொண்டும் தெளியலாம். பொற்கொல்லர் தங்கள் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டுமானால் திட்பம் வாய்ந்தனவாகப் படைக்கப்படும் பொருள்களுக்குத் தேவை மிகுதல் வேண்டும். இந்தியாவில் நகைகளை அணிபவர்கள் அதன் பொருள் மதிப்பைக் கருதுகின்றார்களேயன்றி அவற்றின் தொழில்நுட்ப மதிப்பினைப் பற்றிக் கவலைப்படுவதில்லை. இதனாலேயே கைவினைஞர்கள் தங்கள் திறமை முழுவதையும் காட்ட முற்படுவதில்லை.'' 1886-இல் லண்டனில். நடைபெற்ற குடியேற்ற நாடுகள் மற்றும் இந்திய நாட்டுப் பொருட்காட்சியில் இடம்பெற்ற வெள்ளி நகைகள் சென்னை அருங்காட்சியகத்தில் இடம்பெற்றுள்ளன. வெள்ளியாலான அப்பொருள்கள் கொல்லர்களின் கலைநுட்பத் திறனுக்குச் சான்று பகர்வனவாம். சென்னையில் உள்ள பீரங்கி வண்டித் தொழிற்சாலையின் கண்காணிப்பாளரான கர்னல் டௌன்ஸ்கெண்ட் அண்மையில் "தென்னிந்தியாவைச் சேர்ந்த கொல்லர்களும் பம்பாயைச் சேர்ந்த கொல்லர்களைப் போலவே திறமை வாய்ந்தவர்களாக உள்ளனர் என்பதோடு இந்துஸ்தானத்தில் உள்ள கொல்லர்களில் இவர்களே திறமை மிக்கவர்களாக உள்ளனர். இவர்களுள் திறன் மிக்க சிலரைத் தேர்ந்தெடுத்தால் இவர்கள் ஆங்கிலேயக் கொல்லர்களுக்குத் தொழிற்திறமையிலும் செயல் வேகத்திலும் ஒருங்கே ஈடுகொடுக்கக்கூடியவர்களாக இருப்பர்''* எனக் கூறியுள்ளார்.

தென்னிந்தியாவின் புகழ்பெற்ற கோயில்களைக், குறிப்பாகத் தஞ்சாவூரிலும் மதுரையிலும் உள்ள கோயில்களையும்

---

* நியூ ஏசியாட்டிக் ரெவியூ, சனவரி, 1907. (New Asiatic Review, Jan, 1907.)

கோயில்களுக்குரிய தேர்களையும் பார்த்தவர்கள் தென்னிந்தியாவைச் சேர்ந்த கல்தச்சர், மரத்தச்சர் ஆகியோருடைய தொழில் நுட்பத்திறன்பற்றி ஓரளவு புரிந்து கொள்வார்கள். சிலைகளையும் சிலை வடிப்பவர்களையும் பற்றிய பின்வரும் குறிப்பு அண்மையில் வெளியான ஒருகட்டுரையிலிருந்து எடுக்கப்பட்டதாகும்.*

“இந்த நாட்டின் மற்றெந்தக் கைத்தொழிலையும் போலவே சிற்பத் தொழிலும் பரம்பரை பரம்பரையாகப் பயின்று மேற்கொள்ளப்படும் ஒன்றே. தன்னுடைய திறமையினாலோ தன் முன்னோர் திறமையினாலோ ஒருவன் பெயர் பெற்றவனாக விளங்க முடியும். வடமொழியில் ஸ்தபதி என அழைக்கப்படும் சிற்பி, கைவினைஞர் சாதிகளுள்ளும் சமூகத்திலும் மிக உயர்ந்தவனாக மதிக்கப்படுகின்றான், தடித்த பூணூல் அணிந்து பிராமணர்களின் ஒழுக்க நெறியினை மேற்கொண்டவனாக அவன் ஒழுகுதல் உண்மையே. ஊன் உணவினை ஒதுக்கிவிட்ட அவன் மது வகைகளையும் சாதாரணமாகத் தொடுவதில்லை. நல்ல கண் பார்வையும் தடுமாற்றம் இல்லாத கைச்செயலாண்மையும் அவன் தொழில் வெற்றிக்கு இன்றியமையாதன என்பதனை அவன் உணர்ந்துள்ளான். கோயில்கள் அனைத்திலும் இருவகையான சிலைகள் இடம் பெற்றிருக்கும். அவற்றுள் ஒன்று இடம் பெயராத வகையில் தரையில் நிறுவப்பட்டுள்ள மூலவரின் கற்சிலையாகும். மற்றொன்று ஊர்வலங்களில் பயன்படுத்தப்படும் உற்சவரின் உலோகத்தாலான சிலையாகும். மிகச் சிறிய கோயிலில் கூட இவ்விருவகைச் சிலைகளும் பத்துப் பன்னிரண்டு இடம் பெற்றிருக்கும். கற்சிலைகள் எண்ணெயும் கரியும் ஏறியனவாகக் கறுத்து ஒளியிழந்துவிடினும்கூடப் பலதலை முறைகளுக்கு அவை தொடர்ந்து வழிபடப்பட்டு வரப்படுகின்றன. இவ்வாறு காலமும் அழுக்கும் கூடக்கூட அவற்றின் புனிதத் தன்மையும் கூடும். அவ்வப்போது சில காரணங்களால் அவை தெய்வத்தன்மை இழந்துவிட்டனவாகக் கருதப்பட்டு அவற்றிற்குப் பதிலாகப் புதிய சிலைகள் அமைக்கப்படுகின்றன. கோயில்கள் விரிவாக்கப்படும்போது, இந்து சமயத்திற்கு உரியனவாக உள்ள தெய்வங்களுள் அக் கோயில்களுள் முன்பு இடம்

* சென்னை மெயில் இதழ், 1907. (Madras Mail, 1907.)

பெறாதவை உருவாக்கப்பட்டுத் தெய்வங்களாக நிறுத்தப்பட வேண்டியிருக்கலாம். இது போன்ற சமயங்களிலேயே உள்ளூர் ஸ்தபதியின் பணி மிகுதியும் வேண்டப்படுவதோடு அவனுடைய தொழிற்கூடம்' தேன்கூட்டினைப் போலச் செயற்பாடு உடையதாக இயங்கும். ஏராளமான சிலைகளைக் கொண்ட மதுரையில் உள்ள மீனாட்சி கோயிலைப் போன்ற கோயில்களில் குறிப்பிட்டதொரு தொகையினை ஊதியமாகப் பெறும் ஸ்தபதிகள் பணியில் அமர்த்தப்பட்டிருப்பர். ஆண்டுக்கு இவ்வளவு என வழங்கப்படும் இந்த ஊதியம் மிகக் குறைந்ததாக இருப்பினும் இப் பணியினை மேற்கொள்ளப் பலரும் முன்வருகின்றனர். இதனால் ஒருவன் பல்வேறு சலுகைகளைப் பெறுவதோடுகூட இந்த நல்ல வாய்ப்பின் காரணமாக அவன் தன் தொழிற்கூடத்தைக் கோயில் எல்லையிலேயே அமைத்துக்கொண்டு தன் தொழிலுக்கு நல்ல விளம்பரமும் பெறும் வாய்ப்பினையும் பெறுகின்றான். கோயில் தொடர்பான பணிகள் இல்லாத ஓய்வான சமயங்களில் அவன் வெளி வேலைகளை ஏற்றுக் கொண்டு சிறிய அளவில் வருமானமும் தேடிக் கொள்ளத் தடையேதும் இல்லை. இந்தியா முழுதும் பெரும்புகழ்பெற்ற தெய்வமாக விளங்கும் கணபதியின் உருவமே கல்லுருவங்களுள் மிகுதியும் பலராலும் விரும்பி வாங்கப்படுவது. சிற்றூர்கள் அனைத்திலும் இத் தெய்வத்திற்கான தனித்த சிறு கோயில்கள் இருக்கக் காணலாம். எதிர்பாராத இடங்களில் கூட இத் தெய்வத்திற்கான கோயில்களை எதிர்ப்படலாம். தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள மணற்பாங்கான சாலைகளில் பாதையோரத்து நிழல் தரும் மரங்களின் கீழ் தமக்கே உரித்தான தும்பிக்கையினைத் தொங்கவிட்டபடி கவலையற்றவராக மன நிறைவோடு அரை மைல் தூர இடைவெளிகளில் இத்தெய்வம் வீற்றிருப்பதைப் பயணிகள் அடிக்கடி எதிர்ப்பட்டிருத்தல் கூடும். தென்னிந்தியாவில் சாலையோரத்துக் கோயில்களில் வைத்து வழிபடப்படுகின்ற தெய்வங்களுள் மதுரைத்தெய்வமும் சாராயம் கேட்கும் சாமியுமான மதுரை வீரன், பெரிய அம்மைக்கு உரிய தெய்வமான மாரியம்மா, கேட்டினைத் தரும் பேய்த் தெய்வமான சங்கிலிக் கறுப்பன் ஆகியோரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். நாகதேவதையின் சிலை உருவங்கள் பல ஊர்ப்புறங்களில்

72:3-11,

உள்ள அரசமரத்தடியில் நிறுவப்படுகின்றன. இரங்கூனுக்குப் புறப்படும் பயணிகள் கப்பலில் பர்மாவில் குடியேறியுள்ள தென்னிந்தியர்கள் அமைத்துள்ள கோயில்களுக்காகவும், தனியாரின் குடும்ப வழிபாட்டுக்காகவும் பெரும் அளவில் கற்சிலைகளும், உலோகச் சிலைகளும் வாரந்தோறும் ஏற்றி அனுப்பப்படுகின்றன. கருவறைச் சிலைகள் பெரும்பாலும் நின்ற திருக்கோலத்தனவாக இருக்கும். திருவரங்கம் கோயிலிலுள்ள விட்டுணு மட்டும் விதிவிலக்காகப் படுத்த திருக்கோலத்தவராகக் காட்சி தருகிறார். அவ்வுருவங்கள் பொதுவாக நான்கடி உயரம் உடையனவாக இருக்கும். சில பேருருவினவாக இருப்பதும் உண்டு. கல்தச்சர் பணி செய்யும் கருங்கல்லின் கடினத்தையும் அவர்கள் அதனைக் கொத்தத் தொடர்ந்து மேற்கொண்டு வரும் பழங்காலத் தொழில் முறையினையும் கருத்தில் கொண்டு பார்க்கும்போது அவர்கள் அக்கற்களில் குறிப்பிடத்தக்க வகையில் பளபளப்பும் வழவழப்பும் ஏற்றுவதைப் பாராட்டாமல் இருக்க முடியாது. எதனையும் துருவி நோக்கும் அவன் பார்வைக்குத் திருப்தி தரும் வகையில் அவன் ஒரு கற்சிலையினை வடிக்கப் பல வாரங்கள் ஆகின்றன. விநாயகரின் துதிக்கையையும், ஒரு முனிவரின் சடாமுடியையும் வடிக்க அவன் தொடர்ந்து பல மணி நேரம் பணியாற்றியதை நான் நேரில் கண்டுள்ளேன். கற்சிலைகளைச் சமைப்பதைவிட உலோகத்தாலான சிலைகளை வார்ப்பது பல நிலைகளில் பல்வேறு வகையான பணிகளை மேற்கொண்டு முடிக்கப்பட வேண்டியதாக உள்ளது. பித்தளை, செம்பு, ஈயம் ஆகிய மூன்று உலோகங்களின் கலவையே சிலைகள் வார்க்கப் பயன்படுத்தபடுகின்றன. வசதியுள்ளவர்கள் கொஞ்சம் வெள்ளியையும் தங்கத்தையும் உடன் சேர்த்துக் கொள்வர். தேவையான தெய்வ உருவினை முதலில் மெழுகு அல்லது கொழுப்பால் உருவாக்குவர். அதன் மீது ஈரமான குழைவான களிமண்ணை மெல்லியதாகப் பூசுவர். அதில் ஓரிரு இடங்களில் துளை விடப்படும். களிமண் உலர்ந்ததும் அந்த உருவத்தினைக் காளவாயில் வைத்துச் சுடுவர். அப்போது வெளிப்படுகிற உருகிய மெழுகு ஏற்படுத்துகின்ற இடைவெளியினை நிரப்பும் படியாக உருக்கிய உலோகக் கலவையை ஊற்றுவர். காளவாயின நெருப்புப் பின்னர் அணைக்

கப்படும். உலோகம் இறுகிக் கெட்டியானபின் அதன் மேற் பூச்சாக உள்ள களிமண்ணை அகற்றுவர். வேண்டிய உருவத் தின் வடிவமைப்பினை இதுபோலப் பரும்படியாகச் செய்து முடித்தபின் அரத்தினையும், உளியினையும் கொண்டு நுட்ப மான செதுக்கு வேலைகளைச் செய்து முடிக்கும்போது களிமண் போர்வையில் அடைபட்டிருந்த உருவத்தினைவிட முற்றிலும் வேறானதொரு கலைப்படைப்பாக அது திகழும். இவ்வாறு ஒவ்வொரு உலோகச் சிலையும் ஒரே முழு உருவமாக வார்த் தெடுக்கப்படுகிறது. எனினும் தேவைக்கேற்ப தனியே கைகளும் கால்களும் வார்த்துத் தருகின்றனர். கோயில் அர்ச்சகர் இந்தக் கைகளையும் கால்களையும் திருகாணிகளிட்டும் சிறு கயிறு களால் பிணைத்தும் சிறு மரக்கட்டைகளோடு இணைத்தும் அத்தகைய இணைப்பு வெளியே தெரியாதபடி துணியாலும் பூவாலும் அலங்காரம் செய்வார். இவ்வாறு ஒரு சிலையே ஊர்வலத்தின் தேவைகளுக்கு ஏற்பப் பல்வேறு வடிவங்களை உடையனவாக உருமாற்றம் கொள்ளும்.

1903–ஆம் ஆண்டில் சென்னையைச் சேர்ந்த கம்மாளர்கள் விசுவ கர்ம குலாபிமான சபை என்ற சங்கத்தை ஏற்படுத்தி யுள்ளனர். தொழில் துறையிலும், அறிவாக்க வழியிலும் சாதி யார் முன்னேற்றம் பெற வழிகாட்டுவதும் சாதியின் நலன் களையும், உரிமைகளையும், வளத்தையும் பேணிக் காப்பதும் சாதிக்குத் தேவையான கலை அறிவியல் துறையிலான பயிற்சி களைத் தரும் தொழிற்பள்ளி, தொழிற்கூடம் போன்றவற்றை அமைப்பதும் இச் சங்கத்தின் குறிக்கோள்களாக உள்ளன.

இக் கைவினைஞர்கள் பற்றி வழங்கும் பழமொழிகளுள் பின்வருவன குறிப்பிடத்தக்கன.

1. ஒரு தட்டான் ஆயிரம் பேருக்குப் பதில் சொல்ல வேண்டியிருக்கும். (குறிப்பிட்ட காலத்தில் தன்னால் செய்து முடிக்கக் கூடிய அளவிற்கு மேலாகவே பணிகளை ஏற்றுக் கொள்ளும் பொற்கொல்லரின் பழக்கத்தைக் குறிப்பது இது.)

2. தட்டானுக்குத் தெரியும் ஏது நல்ல தங்கம் என்பது.

(ஊரில் யார் உண்மையில் செல்வர் என்பதனைத் தட்டார் அறிவார் என்பதனைக் குறிப்பது.)

3. அது தட்டானிடம் இருக்க வேண்டும் இல்லையேல் அவன் பொன்னை உருக்கும் தீச்சட்டியில் இருக்க வேண்டும். (ஒரு மதிப்புள்ள பொருளைத் தேடுபவர்களைக் குறித்து அது வீட்டில் தான் எங்கேனும் இருக்கும் என்பதனைக் குறிக்கும் பழமொழி.)

4. தட்டான் மட்டத் தங்கத்தைத் திரவச் சட்டியில் போடுவதைப் போல.

5. நல்லதா அமைஞ்சிட்டா வார்ப்பிலே ஊற்று, இல்லாத போனால் உருக்குப் பானையில் ஊற்று. (மறைத்திரு எச். ஜென்சன்*, பொற்கொல்லன் பொன்னை உருக்கிய பின், அதனை ஆராய்ந்து அது மாசு ஏதும் இன்றி இருந்தால் வார்ப்பில் ஊற்றுவதையும் மாசு இருந்தால் மீண்டும் உருக்கும் பானையில் ஊற்றுவதையும் இது குறிக்கும் என விளக்கியுள்ளார்.)

6. தட்டான் தன் தாயாரிடம் கூடக் கால் பவுனைத் திருடுவான்.

7. திருடின தங்கம் தட்டானிடம் இருக்க வேண்டும் அல்லது அவன் தீச்சட்டியில் இருக்க வேண்டும்.

8. கம்மாளன் வீட்டு மாட்டுக் காதை அறுத்துப் பார்த்தால் அதனுள்ளே கூடக் கொஞ்சம் அரக்கு இருக்கும். (கம்மாளன் தங்கத்திற்குப் பதிலாக முத்திரை அரக்கினை நகைகளின் உள்ளே வைத்து மக்களை ஏமாற்றுவதாகக் கூறப்படுகிறது.) இந்தப் பழமொழி கம்மாளனிடமிருந்து ஒரு பசுவைக் கூட ஏற்றுக் கொள்ளக்கூடாது என அறிவுறுத்துகின்றது. மற்றொரு விளக்கப்படி, ஒரு கம்மாளன் உயிருடையதைப்

---

* வகுத்தமைக்கப்பட்ட தமிழ்ப் பழமொழிகளின் தொகுப்பு, 1897. இந்த நூலிலிருந்தே இங்குச் சில பழமொழிகள் எழுத்தாளப்பட்டுள்ளன. (Classified collection of Tamil Proverbs, 1897.)

போலத் தோற்றம் தரும் ஒரு பசுவைச் செய்து வைத்திருந்த தாகவும் அதனை உயிருள்ள பசுவென்று கருதி ஒரு பிராம ண்ன் ·தான் நெடுநாள் முயற்சி செய்து ஈட்டிய பொருளைக் கொடுத்து விலைக்கு வாங்கியதாகவும் அது உயிருள்ள பசு அன்று என்ற உண்மை புரிந்ததும் அவனுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதாகவும் கூறுவர். அப்போதிலிருந்து கம்மாளர்கள் விற்க முற்படும் கால்நடைகளை நன்கு ஆராய்ந்து காதினை அறுத்துப் பார்த்து வாங்கும்படி மக்கள் அறிவுறுத்தப்பட்ட னர். இந்தப் பழமொழிக்கான மற்றுமொரு வகையான விளக்கமாக ஒரு கம்மாளன் விற்க முற்படும் பசுவினை அதன் காதினை அறுத்துப் பார்த்து வாங்கினாலும் அவன் அதன் காதில் சிவப்பு அரக்கினை வைத்து அறுத்துப் பார்ப்பவர் களுக்கு அதனைத் தசை போலத் தெரியும்படி செய்திருப்பான் எனக் கூறப்படுகின்றது.

9. நாய்க்குக் கொல்லன் பட்டறையில் என்ன வேலை? (தனக்கு ஏற்புடையது அல்லாத தொழிலை மேற்கொள்பவர் களைப் பற்றிக் கூறப்படுவது.)

10. இரும்பு பழுக்கக் காய்ந்துவிட்டது எனக் கண்டவுடன் கொல்லன் தன்னை அறியாமலேயே அதனை அடிக்க எழுந் திருப்பான்.

11. சமட்டி ஓசைக் கேட்டுக் கொல்லன் பயப்படுவானா என்ன?

12. கொல்லன் வீட்டில் பிள்ளை பிறந்தால் தேவடியாள் தெருவில் சர்க்கரை வழங்குவார்கள். (கம்மாளர்களுக்கும் கைகோளர்களுக்கும் இடையே இருந்து வருவதாகக் கூறப்படும் நெடுநாள் உறவினை விளக்கும் பழமொழி.)

13. கொல்லன் பட்டறையும் கழுதை படுத்துப் புரளும் இடமும் ஒன்று போலவே இருக்கும்.

14. தச்சனையும் கொல்லனையும் அவனவனுக்கு உரிய தகுதியில் இருக்கச் செய்ய வேண்டும். (அதாவது அவர்களைக் கம்மாளச் சேரியில் தங்க வைக்க வேண்டும் என்பது கருத்து.,

15. தச்சன்சம்சாரம் விதவையாகிவிட்டால் அதனாலென்ன ஆகிவிடப்போகிறது? (இது அவர்களிடையே முன்பு கைம்பெண் கள் மறுமணம் செய்து கொள்ளும் பழக்கம் இருந்ததைச் சுட்டுவதாகலாம்.)

16. தச்சன் நீளமான மரக்கட்டை கேட்பான். கொல்லன் குறுகலான இரும்புத் துண்டு கேட்பான். (தச்சன் எளிதில் நீண்ட மரத்துண்டைக் குறுகலாக்கி விடுவான். கொல்லன் சின்ன இரும்புத் துண்டைச் சுலபமாக நீளமாக்கிக் கொள்வான் என்ற கருத்தில் இப்பழமொழி வழங்குகிறது.)

**கம்மாளர் (மலையாளத்து) - Kammālar (Malayalam)**

"மலபாரைச் சேர்ந்த கம்மாளர்கள் மேலே கூறப்பட்ட தமிழ்க் கம்மாளர்களைப் போன்ற கைவினைஞர்களே. எனினும் இவர்கள் மேலே கூறப்பட்ட கம்மாளர்களை விடவும் மற்றக் கடற்கரைப் பகுதி சார்ந்த கம்மாளர்களை அல்லது கன்னடம் பேசும் பாஞ்சாலர்களை விடவும் சமூகப்படி நிலையில் தாழ்ந் தவர்களாகவே உள்ளனர். இவர்கள் தங்களைப் பிரமாணர்கள் எனக் கூறிக் கொள்ளாததோடு, பூணூலும் அணிவதில்லை. கோயில்களின் உள்ளும் பிராமணர்கள் இல்லங்களின் உள்ளும் புகும் உரிமையற்ற தீட்டு உண்டாக்கும் சாதி தங்களுடையது என்பதனை இவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். இவர்களுள் உயர்ந்த பிரிவினர் தச்சுத்தொழிலை மேற்கொள்ளும் ஆசாரி களே. வீடு கட்டுதலோடு தொடர்புடைய சில சடங்குகளின் போது இப்பிரிவினர் பூணூல் அணிந்து கொள்கின்றனர்" என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு பிரான்சிஸ் எழுதியுள்ளார்.

திரு எம். பாவ்செட் அவர்கள் கருத்துப்படி, "கம்மாளரி டையே ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள பிரிவுகள் ஐந்தே. இக் கை வினைஞர்கள் தோலில் பணி செய்யும் பிரிவினைச் சேர்ந்தவர் களைத் தங்கள் குழுவினைச் சேர்ந்தவர்களாகக் கொள்ளாது அதில் நான்கு பிரிவுகளே உள்ளதாகக் கூறுவர். இவர்கள் கருத் துப்படி ஐந்தாவது பிரிவினர் ஈழவர் (இலங்கை) நாட்டுக்கு ஓடிப்

போனவர்கள் திரும்பி வந்தபோது அவர்களுடன் மலபாருக்கு உடன் வராமல் அங்கேயே தங்கி விட்ட செம்புக் கொட்டிகள் ஆவர்:* எனினும் இவர்கள் தங்களை ஐங்குடி அதாவது ஐந்து வீட்டுக்கம்மாளர் என்றே கூறிக் கொள்கின்றனர். தச்சர்கள் தங்கள் பிரிவைச் சேர்ந்த பதினெட்டுக் குடும்பத்தினர் திரும்பி வராது, ஈழவர் நாட்டிலேயே தங்கி விட்டதாகக் கூறுகின்றனர். அவர்களுள் சிலர் நெடுநாள்களுக்குப் பின் திரும்பி வந்தபோது மீண்டும் சாதியில் சேர்ந்து கொள்ள அனுமதிக்கப்படவில்லை. இவ்வாறு ஒதுக்கி வைக்கப்பட்டவர்கள் புழுதித் தட்டார் எனவும் பதினெட்டாம் வீட்டார் எனவும் அழைக்கப்படுகின்றனர். இந்தப் பிரிவினைச் சேர்ந்த நான்கு குடும்பத்தவர்கள் பர்பன்காடி அருகே தற்போது தங்கி வாழ்ந்து வருகின்றனர். அவர்கள் தச்சர்களாகத் தொழில் செய்தாலும் ஆசாரிகள் இவர்களைச் சாதியைச் சேராதவர்களாகவே கருதி நடத்தி வருகின்றனர்."

மலபார் கம்மாளர் பற்றிய பின்வரும் குறிப்புக்கு நான் திரு எஸ். அப்பாதுரை அய்யருக்குக் கடப்பாடுடையேன்:- ஐங்குடிக் கம்மாளர்களின் ஐந்து பிரிவுகள் பின்வருமாறு அமைகின்றன.

ஆசாரி – தச்சர்
கருமான் – கொல்லன்
தட்டார் - பொற்கொல்லர்
மூசாரி - உலோகக் கொல்லர்
செம்பொட்டி - செம்புக்கொட்டி

செம்பொட்டி என்ற பெயர் செம்பு, கொட்டி என்ற சொற்கள் இணைந்து செம்பினை அடிப்பவன் என்ற பொருள் தரும்படி அமைந்ததாகும். "மலபார் கம்மாளர்களிலிருந்து வேறுபட்ட செம்புக் கொல்லர் மலபாரில் உள்ளனர். இவர்கள் கோயிலுக்கான செப்புப் படிவங்களைச் சமைப்பவர்களின் வழிவந்தவர்கள் எனக் கருதப்படுவதால் கம்மாளர்களை விடச் சமுகப் படிநிலையில் உயர்ந்தவர்களாகவும் நாயர்களுள் தாழ்ந்த பிரி

---

* தீயர் (Tiyan) என்ற தலைப்பில் கூறப்பட்டுள்ள வாய்வழி வழக்கு வரலாற்றைப் பார்க்கவும்.

வினருக்குச் சமமானவர்களாகவும் கருதப்படுகின்றனர்." என இவர்களைப் பற்றித் திரு பிரான்சிஸ் தன் கருத்தைத் தெரிவித் துள்ளார்.

குருப்பு, தோல்கொல்லர், புள்ளுவர், மண்ணார், தண்டர் ஆகிய சாதியாரின் இல்லங்களில் உண்ணக் கம்மாளர் உடன் படுவதில்லை. அதேபோன்று கம்மாளர் இல்லங்களில் உண்ப தைத் தங்கள் தகுதிக்குக் குறைந்ததாகத் தண்டர் கருதுகின்ற னர். கம்மாளர் தாங்கள் மலபாருக்கே உரிய தொல்குடியினர் எனக் கூறிக் கொள்கின்றனர். ஒருத்தி பல கணவர்களோடு வாழ்க்கை நடத்தும் பழக்கம் தங்களிடையே தோன்றியதற்குப் பாண்டவர்கள் நாடுவிட்டுக் காடு வந்த காலத்தில் தங்கள் மனைவி பாஞ்சாலியோடும் தாய் குந்தியோடும் வள்ளுவ நாட்டுப் பிரிவினைச் சேர்ந்த காட்டில் வந்து தங்கியதே காரண மாகும் என இவர்கள் பெருமையாகக் கூறிக் கொள்கின்றனர். வள்ளுவநாட்டுப் பிரிவைச் சேர்ந்த அரக்குப்பரம்ப அமிசத் தில் பாண்டவர்களை அழிக்கும் சூழ்ச்சி நடந்ததாகவும் குரு வமிசத்தார் தச்சன் நாட்டுக்கரை அம்சத்தைத் தச்சர்கள் அனுப விக்க வழங்கியதாகவும் இவர்கள் கூறுகின்றனர். பாண்டவர் கள் அட்டபாடிப் பள்ளத்தாக்கில் உள்ள பீம நாட்டில் சிறிது காலம் தங்கி வாழ்ந்ததாகவும் பின் அட்டபாடிப் பள்ளத்தாக் கினை அடைந்து அங்குப் பலநூறு அடி உயரத்திலிருந்து விழும் அருவிக்குப் பின்புறம் தங்கள் சமையல் பாத்திரங்களை மறை வாகக் கவிழ்த்து வைத்ததாகவும் அந்த அருவி அப்பகுதியில் குந்திபுழா என அழைக்கப்படுவதோடு வீழும் அருவி கவிழ்த்து வைத்திருக்கும் பாத்திரங்களின் மேல் விழுவதால் அருவியின் ஓசை நெடுந்தொலைவு கேட்பதாகவும் இவர்கள் கூறுகின்றனர்.

கம்மாளர் சாதி ஆணும் பெண்ணும் நாயர் சாதியாரைப் போலவே உடை உடுத்துகின்றனர். இவர்கள் அணிமணிகளும் நாயர் சாதியாரது அணிமணிகளை ஒத்தனவே. தட்டான் சாதிப் பெண்கள் தங்கள் வலக் காதில் மட்டுமே சித்து எனப் படும் வளையம் அணிகின்றனர். நாயர்களிலிருந்து மாறுபட்ட தான இவர்கள் பழக்கம் இது ஒனறே எனலாம்.

வீடு கட்டும்போது தொடக்கத்திலிருந்து இறுதிவரை ஆசாரியின் பணி வேண்டியுள்ளது. கட்டிடத்திற்கான திட்ட உருவைவ் வரைபவன் ஆசாரியே. கதவு நிறுத்தும்போதும் விட்டத்தை மேலே ஏற்றும்போதும் அவன் தனக்குச் சேர வேண்டிய அதற்கான தொகையினைப் பெறுகின்றான். குட்டி பூசை செய்து முடிக்கும் போதே ஒரு வீடு கட்டி முடிந்ததாகக் கருதப்படும். இந்தச் சடங்கிற்கு வீட்டு உரிமையாளன் வீட்டின் நான்கு மூலைகளிலும் பலியிட நான்கு ஆடுகளும் வீட்டினுள்ளே பலியிட்டபின் பலியான அவற்றின் குருதியினைச் சுவர்களிலும் மேற்கூரையிலும் பூச உதவும்படியாகப் பல கோழிகளையும், வீடு கட்டும் தொழிலாளருக்குத் தருவதோடு அவர்களுக்கு நல்ல விருந்தும் இட்டுச் சாராயமும் வாங்கித் தர வேண்டும். விருந்து முடிந்த பின் பணியாளர்களுக்கு மோதிரங்கள், கடுக்கன்கள், பட்டு பருத்தி ஆடைகள் ஆகியன பரிசளிக்கப்படும். இவற்றில் பெரும்பகுதி மூத்த ஆசாரி ஆகிய தலைமைத் தச்சனுக்கே சென்று சேரும். "நமது கட்டிடத் தொழில் தொடர்பாக எல்லை வகுத்து முளை அடித்தல் முதல், பேய்களை புதிய வீட்டிலிருந்து விரட்டுதல் வரையான அனைத்துப் பணிகளையும் ஊர்ப் புறத்து ஆசாரியே செய்து முடிக்கின்றான். வீடு கட்டி முடிக்கப்பட்டபின் பூசை செய்து பேய்களை விரட்டும் சடங்கினைச் செய்து முடிக்க உரியவனும் அவனே. மக்கள் தற்பொழுது இந்தப் பழைய வழக்கத்தினைக் கைவிட்டுத் தச்சனால் செய்து முடிக்க இயலாது என அவர்கள் கருதும் பணியினைத் தகுதி வாய்ந்தவர்களிடம் ஒப்படைக்கத் தொடங்கி விட்டனர்" எனத் திரு கோபால் பணிக்கர் கூறுகின்றார்.

"ஒரு வீட்டைக் கட்டத்தொடங்கும்போது கடைகாலிட்டுக் கம்பம் நிறுத்துவதைக் கிழக்குப் பக்கம் செய்ய வேண்டும். தச்சர்கள் மூன்று அல்லது நான்கு தேங்காய்களை அவற்றின் உள்ளே இருக்கும் நீர் சிந்தி விடாதபடி கவனமாக உடைப்பர். உடைத்த தேங்காய் முடியினுள்ளே இருக்கும் நீரில் வெற்றிலையின் நுனிகள் சிலவற்றைக் கிள்ளி இடுவர். அவை அந்தத் தண்ணீரில் மிதக்கும் விதத்தின் அடிப்படையில் கட்டப்பட உள்ள வீடு அதிர்ஷ்டமாவதாக அமையுமா அமையாதா

என்பதனையும் நீண்ட நாள்கள் நிலைத்திருக்குமா இருக்காதா என்பதனையும் அதன் இடத்தில் வேறொரு வீடு கட்டப்படும்வாய்ப்பு ஏற்படுமா ஏற்படாதா என்பதனையும் கணித்துக்கூறுவர். பப்பொனெட்டிக்கோட்டை நமது படையினரால் அழிந்துவிடும் என்பதனை இது போல நிமித்தம் பார்த்து இவர்கள் முன்பே கூறியதாகக் கூறப்பட்டிருக்கிறது'' எனக்காண்டெர் விஸ்செர் மலபாரிலிருந்தான கடிதங்களில் கூறியுள்ளார்.

செல்வர்களுடைய இல்லங்களுக்குத் தேவையான பூட்டுக்கள், சாவிகள், அலங்கார இரும்பு, பித்தளைப் பொருள்கள் ஆகியனவற்றைத் தயாரிக்கக் கொல்லர்கள் அமர்த்தப்படுகின்றனர். கொல்லன் பட்டறை அவன் குடிசைக்கு அருகிலேயே அமைந்திருக்கும். அவன் மனைவியே துருத்தியினை ஊதுவாள். வண்டிச் சக்கரங்களுக்கான பட்டா, மண்வெட்டி, கொடுவாள், சுத்தி, அரிவாள், கரண்டி, கொழு, கால்நடைகளுக்கான லாடம் முதலியவற்றைக் கொல்லன் தயாரிக்கின்றான். பித்தளையால் இவர்கள் அழகான வெற்றிலைச் செல்லம் தயாரிக்கின்றனர். வள்ளுவநாட்டில் உள்ள ஒரு கொல்லன் மையில் தொட்டு எழுதும் கம்பிமுனைப் பேனாக்களைக்கூடத் தயாரிப்பதாகக் கூறப்படுகிறது. மூசாரி வெண்கலப் பணியாளன். வீட்டு உபயோகத்திற்கான வெண்கலச் சாமான்களையும், பெரிய அளவினவான சமையல் பாத்திரங்களையும் இவன் தயாரிக்கின்றான். செம்பு, ஈயம், பித்தளை ஆகியனவற்றை உரிய விகிதத்தில் கலந்து இத்தகைய வெண்கலப் பாத்திரங்களைத் தயாரிப்பதில் மூசாரி திறமை பெற்றுள்ளான். செல்வர்கள் சிலருடைய இல்லங்களில் ஆயிரம் ரூபாய் வரை மதிப்புடைய சமையல் பாத்திரங்கள் இருக்கக் காணலாம். வடக்கு மலபாரிலுள்ள குன்கிமங்கலத்திலும் செறுபல்சேரியிலும் வெண்கலத்தால் மிக நேர்த்தியான பொருள்கள் வார்த்து வடிக்கப்படுகின்றன. ஐரோப்பாவிலிருந்து எனாமல், அலுமனியப் பாத்திரங்களும் விளக்குகளும் இறக்குமதியாகத் தொடங்கிய பின் இந்த மாவட்டத்தின் உலோகத் தொழில்

முடங்கத் தொடங்கிவிட்ட காரணத்தால்மூசாரிகளும். கொல்லர்களும் தங்கள் தொழில் வாய்ப்பினை இழந்து வருகின்றனர்.

மலையாளிகள் அணியும் எல்லா வகையான நகைகளையும் பொற்கொல்லர் உருவமைக்கின்றனர். மற்றக் கைவினைஞர்களை விட இவர்கள் வாழ்க்கை வசதி பெற்றவர்களாக உள்ளனர்.

"கள்ளிக்கோட்டை, வள்ளுவ நாடு, பொன்னாணி வட்டங்களில் உள்ள தச்சர்களிடையேயும் கொல்லர்களிடையேயும் மக்கள் தாய உரிமை முறை மேற்கொள்ளப்பட்டாலும் உடன் பிறந்தவர்கள் பலரும் ஒரே மனைவியை உடையவர்களாக இருக்கும் வழக்கம் காணப்படுகிறது" எனத் திருமணங்கள் பற்றியதான மலபார் விசாரணைக் குழு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. வறுமைக்கோட்டின் விளிம்பில் மிகவும் சிக்கனமாக வாழ்க்கை நடத்த வேண்டிய கட்டாயத்திற்கு ஆளாகியுள்ள கொல்லர்களிடையே உடன்பிறந்தவர்களான பலரை ஒருத்தி மணந்து கொள்ளும் மணமுறை பரவலாகக் காணப்படுகிறது. நாயர்களைப் போலவே இவர்கள் தாலிகட்டுக் கலியாணமும் நடத்தியாக வேண்டும். இதற்குப் பெண்ணைப் பெற்றவர் முதலில் பல சாதகங்களைப் பரிசோதித்துத் தக்க மணவாளன் ஒருவனைத் தேர்ந்தெடுக்க வேண்டும். நல்ல நாள் பார்த்து அவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட மணவாளனுக்குப் புதிய உடைகள் வழங்கப்படும். சிறுமியும் குளித்து முடித்துப் புத்தாடைகளை அணிவாள். பின் அவளையும் மணவாளனையும் தாலிகட்டுச் சடங்கு நடக்கவுள்ள பந்தலுக்கு அழைத்துச் செல்வர். அச்சடங்கு முடிந்த பின் மணவாளன் தன் புதிய வேட்டியிலிருந்து ஒரு நூலை எடுத்து அதனை இரண்டாக அறுத்தபின் தனக்கு அச்சிறுமியோடு உள்ள உறவு முடிந்து விட்டது எனக் கூறுவான். அதன்பின் அவன் பின்னால் திரும்பிப் பாராமல் அங்கிருந்து வெளியேறுவான். ஒரு கம்மாளன் மணம் செய்துகொள்ள நினைத்தால் அவன் பெற்றோர் அவனுக்குத் தகுந்த மணமகளைத் தேடத் தொடங்குவர். பெண்வீட்டார் பெண்கேட்கச் செல்லும் அவர்களை வரவேற்று உபசரிப்பர். அவர்கள் அதன் பின் பெண்ணைப் பற்றிய விவரங்களைக் கேட்டறிவர். இதே

போன்று அவர்கள் திரும்ப இருமுறை பெண் வீட்டுக்குச் செல்வர். மண உறவு கொள்ள விருப்பம் தெரிவிக்கப்பட்டு ஏற்பாடுகள் நிகழுமாயின் பின்னர் அந்த ஊரைச் சேர்ந்த சோதிடரை அழைத்து மணமக்களின் சாதகத்தின் பொருத்தம் பார்ப்பர். பெண்கேட்டு வருபவர்களின் பிள்ளைகளுள் ஒருவன் சாதகம் மணமகள் சாதகத்தோடு பொருந்துமாயின் போதுமானது. மணமகன்களின் பெற்றோர் அச்சாரப் பணமாக நான்கு, எட்டு, பன்னிரண்டு அல்லது இருபத்தொரு பணத்தில் ஏதாவது ஒரு தொகையைத் தங்கள் வசதிக்கு ஏற்றபடி அந்த ஊரைச் சேர்ந்த கம்மாளர்களின் முன்னிலையில் தருவர். கச்சா எனப்படும் புதுத்துணி ஒன்றினை மணமகளுக்குப் பரிசாக அளிப்பர். இப்படியாக அவள் அவர்களுடைய மகன்களுக்கு மனைவியாவாள். அச்சாரம் தரும் மணச் சடங்கு முடிந்த உடனேயே மணமகளைக் கணவன்மார் வீட்டுக்கு அழைத்துச் சென்ற நிகழ்ச்சிகள் உள. அவளுக்குக் கணவனாதற்குரிய உடன்பிறந்தவர்கள் அனைவரும் புத்தாடை புனைந்து, அணிகளால் தங்களை அலங்கரித்துக் கொண்டு, கையில் புதிய பனையோலைக் குடை தாங்கியவர்களாக மணமகள் இல்லத்திற்கு ஊர்வலமாக வருவர். அங்கே அவர்களை மணமகளின் பெற்றோரும் நண்பர்களும் வரவேற்று மணப் பந்தலுக்கு அழைத்துச் செல்வர். மணமகளும் மணமகன்களும் ஒரு வரிசையில் அமர மணமகளின் பெற்றோர் அவர்களுக்குப் பழமும் சர்க்கரையும் வழங்குவர். இச்சடங்கு மதுரம்கொடுத்தல் என்றழைக்கப்படும். அதன்பின் அனைவரும் மணமகன்கள் இல்லம் புறப்படுவர். அங்கு அனைவருக்கும் விருந்து நடைபெறும். அந்த விருந்தின்போது பால்கொடுத்தல் என்ற சடங்கு நிகழும். கம்மாளர் சாதிக்குரிய புரோகிதர் ஒரு பாத்திரத்தில் கொஞ்சம் பாலை எடுத்து வரிசையாக அமர்ந்திருக்கும் மணமக்கள் வாயில் கொஞ்சம் கொஞ்சம் விடுவார். மணமகன்களுள் மூத்தவன் தொடங்கி வரிசைப்படி அவர்கள் அமர்ந்திருக்க மணமகள் இறுதியில் அமர்ந்திருப்பாள். மணமக்கள் உடலுறவு கொள்ளத் தொடங்கும் நாளன்று மணமகளின் பெற்றோர் அண்டா, விளக்கு, வட்டில், சமையல் பாத்திரம், குடம், படிக்கம் ஆகியனவற்றைப் பரிசாகத் தரவேண்டும். உடன்பிறந்தவர்களுள்

மூத்தவன் அன்று மணமகளோடு உறவு கொள்வான். ஒவ்வொரு மணமகனுக்கும் தனித்தனியே ஒருநாள் ஏற்பாடு செய்யப்படும். கம்மாளர் பெண்களிடையே ஒருத்திக்கு எத்தனைக்கு எத்தனை கணவர்கள் அதிகமாக இருக்கின்றார்களோ அத்தனைக்கு அத்தனை அவளுக்கு வாழ்க்கையில் மகிழ்ச்சி மிகுதியாக இருக்கும் என்ற நம்பிக்கை நிலவுகின்றது. உடன் பிறந்தவர்களுள் ஒருவன் கூட்டுக் குடும்பமாக இயைந்து வாழும் மனப்பான்மை அற்றவனாக வேறொருத்தியைப் புதிதாக மணம் செய்துகொண்டு வருவானாகில் அவள் மற்ற உடன்பிறந்தவர்களோடும் உடலுறவு கொள்ள உரிமையுடையவளாக இருப்பாள். சில சமயங்களில் ஒருத்தி இருபத்தைந்து வயது முதல் ஐந்து வயது வரையான வயது வேறுபாடுடைய உடன்பிறந்தவர்களை ஒரே சமயத்தில் மணந்து கொள்ள நேரலாம். அவர்களுள் இளையவன் பருவம் வந்தவனாக ஆகும்போது அவள் முப்பது வயதுக்கு மேற்பட்டவளாக ஆகி விடக் கூடும. அத்துபோன்ற சமயத்தில் பதினைந்து வயதினனான அந்த இளைஞன் தன்னை விட இரண்டு மடங்கு மூத்த அவளுக்கு ஒரு கணவன் ஆற்ற வேண்டிய கடமையை ஆற்ற வேண்டியவனாகின்றான்.

அச்சாரக் கல்யாணம் செய்து முடிக்குமுன் ஒருத்தி கருவுறுவாளாகில் அவளுடைய பெற்றோர் சாதியைச் சேர்ந்தவர்களுக்குச் சாதியைச் சேர்ந்த ஒருவனே அவள் அவ்வாறு கருவுறக் காரணம் என்பதனை மெய்ப்பிக்கக் கடமைப்பட்டவராகின்றனர். பின் அவன் அவளை மணக்கக் கடமைப்பட்டவன். கருவில் இருக்கும் அந்தக் குழந்தைக்கு யார் தந்தை என்பதனை உறுதி செய்ய இயலவில்லையானால் அவள் சாதி விலக்கம் செய்யப்படுவாள். கருவுற்ற ஆறாம் அல்லது எட்டாம் மாதம் பெண்கள் தாய் வீட்டுக்கு அழைத்துச் செல்லப்படுவர். அங்கு அவள் தன் முதல் குழந்தை பிறக்கும்வரை தங்கியிருப்பாள். அப்போது அவளுக்குப் புளிகுடிச் சடங்கு நடத்தப்படும். அப்போது அவளுடைய கணவன்மார் அங்கு வந்து அவளுக்குப் புதுச்சேலை ஒன்றினை வழங்குவர். வீட்டுக் கொல்லையில் புளியங்கொம்பு ஒன்று நடப்படும். கூடியுள்ள உறவினர்கள் முன்னிலையில் கருவுற்றவளின் உடன்பிறந்தவன் அவளுக்குப் புளி, காட்டுமா,

புளிச்சகீரை ஆகியன கலந்த கஞ்சியினைத் தருவான். பின்னர் வழக்கமான விருந்து நடைபெறும். நாசுவத்தி ஒருத்தியே மகப் பேறு பார்ப்பவளாகப் பணியாற்றுவாள். குழந்தை பிறந்த பதினான்காம் நாள் தளிக்குருப்பு பிள்ளை பெற்றவள் மீது நீரினைத் தெளிப்பார். வண்ணாத்தி அவளுக்குத்துவைத்த சேலை ஒன்றினை உடுத்தத் தருவாள். இருபத்தெட்டாம் நாள் குழந் தைக்குப் பெயரிடும் சடங்கு நிகழும். குழந்தையைத் தந்தையின் மடியில் வைத்து அதன்முன் வாழையிலையில் ஒரு படி அரிசியை யும், ஒரு படி நெல்லையும் குவித்து வைப்பர். பித்தளை விளக் கினை ஏற்றி வைத்துத் தேங்காய் உடைத்துக் கணேசரை வழி பட்டபின் குழந்தைக்கு அதன் தாத்தா அல்லது பாட்டியின் பெயரை இடுவர். ஆறாம் மாதம் குழந்தைக்குச் சோறு ஊட்டும் சடங்கு நடைபெறும். குழந்தைக்கு முதலாண்டு நிறைவுறும் முன்னரே காது குத்திக் கடுக்கன் அணிவிப்பர். குழந்தை பெண் ணாக இருந்தால் காது குத்தும் சடங்கு ஆறாம் அல்லது ஏழாம் ஆண்டில் நிகழும். பெண் குழந்தைகளின் வலது மூக்குக் குத்தப்பட்டு மூக்குத்தி அணிவிக்கப்படும்.

கம்மாளர்களுடைய மண உறுதிச் சடங்கு பற்றி மலபார் மாவட்ட விவரக் குறிப்பில் பதியப்பட்டுள்ளவை வருமாறு:- "கம்மாளரிடையே தீயர்களிடையே போன்ற மண உறுதிச் சடங்கு நடைபெறுகின்றது. ஒரு சிறுமிக்கு ஒன்றுக்கு மேலான உடன்பிறந்தவர்கள் மணம் செய்விக்கப்பட வேண்டியிருப்பின், பெண்ணின் தாயார் எத்தனை மணமகன்கள் உள்ளனர் எனக் கேட்பாள். அதற்குப் பதிலாக அவள் இத்தனைப் பாய்களும் மணைகளும் உள்ளன எனப் பதில் கூறுவாள். மண உறுதிச் சடங்கு நிகழ்ந்த அன்றிரவு தொடங்கியே மணமக்களிடையே உடல் உறவு நிகழத் தொடங்கும். மணமகன்களுள் மூத்தவனே முதலில் மணமகளோடு உடலுறவு கொள்வான். அடுத்து அவனுக்கு இளையவர்கள் வரிசை முறைப்படி மணமகளின் உடன்பிறந்தவனால் அவளுக்கு அறிமுகப்படுத்தி வைக்கப்படு வர். அப்பெண் உடனே கருவுறுவாளாயின் ஆறு மாதம் நிறைவுறும் முன் முறைப்படியான திருமணம் நிகழ்த்தப்பட வேண்டும். முறைப்படியான திருமணத்தில் மணமகன்களை

மணமகளின் தாயாரும் உடன்பிறந்தவர்களும் வரவேற்பர். ஏற்றப்பட்ட விளக்கின் முன் இரண்டு மணைப்பலகைகள் இடப் படும். அதன்முன் மணமகன்களும் மணமகளும் தரையில் விழுந்து வணங்குவர். புதுச்சேலையினைப் புனைந்தவளாக இருக்கும் மணமகளை மணமகன்களின் உடன்பிறந்தவள் உட்காரச் செய்து இனிப்புப் பணியாரங்களை உண்ணப் படைப்பாள்.

"மறுநாள் மணமகன்களைச் சேர்ந்த உறவினர்கள் அனை வரும் மணமகள் ஊரைச் சேர்ந்த தண்டானிடம் செல்வர். அவன் அவர்களுக்குச் சாராயமும் கறியும் தருவான். அதனைப் பெற்றுக் கொள்ளும் மணமகன்கள் அவனுக்கு இரண்டு பணம் அன்பளிப்பாகச் செலுத்துவர். மறுநாள் மணமகளுக்கு அவள் வீட்டில் மணமகன்கள் விருந்திடுவர். நான்கு உலோகத் தட்டு கள், ஒரு காளங்கி, ஒரு கிண்டி, ஒரு வெண்கல விளக்கு ஆகிய வற்றை அவர்கள் அவளுக்குப் பரிசத்திற்கான அன்பளிப்பாகத் தருவர். பின்னர் அனைவரும் மணமகன்கள் இல்லம் அடைவர். அங்குத் தண்டான் அவர்களுடைய பட்டப்பெயரையும், ஊரை யும் அனைவரும் அறியக் கூறுவான். திருமணத்தில் பங்கு கொள்ள உள்ள உடன்பிறந்தவர்கள் அனைவரும் ஒரு பாயில் வரிசையாக அமர்வர். மணமகள் கடைசியில் இடக் கோடியில் அமர்வாள். எல்லோரும் தேங்காய்ப்பால் குடிப்பர். முன்பு கூறிய சடங்குகளின்போது உடன்பிறந்தவர்களுள் மூத்தவன் மட்டும் இருந்தால் போதுமானதெனினும் இந்தச் சடங்கின் போது உடன்பிறந்தவர்கள் அனைவரும் வந்து கலந்து கொள்ள வேண்டியது கட்டாயமானதாகும்."

வயதானவர்கள் இறந்தால் எரிக்கும் கம்மாளர் இளை யோரைப் புதைக்கின்றனர். பதினைந்து நாள்கள் இவர்கள் தீட்டினை மேற்கொள்கின்றனர். அதன் முடிவில் தளிக்குருப்பு நீர் தெளித்தால் தீட்டு நீங்கும். மூன்றாம் நாள் இறந்தவரின் எரிந்த பிணத்தின் எலும்புகளைப் பொறுக்கித் திரட்டி ஒரு புதுப் பானையிலிட்டு இறந்தவர் வாழ்ந்த இல்லத்தில் அப்பானை யினைப் புதைப்பர். இறந்துபோனவரின் மகன்களில் ஒருவன் பலி கொடுப்பதோடு, ஓராண்டுக் காலம் முடி வளர்க்கும் தீட்சையினையும் மேற்கொள்வான். அதன்பின் புதைத்த எலும்

புகளைப் பொன்னாணியில் உள்ள திருநாவய அல்லது கொச்சியில் உள்ள திருவிலமலை அல்லது கோயமுத்தூரில் உள்ள பேரூர் அல்லது வயநாட்டில் உள்ள திருநெல்லிக்கு எடுத்துச் சென்று ஆற்றில் விடுவர். இறுதியாகப் பலி கொடுத்துச் சிரார்த்தச் சடங்கினை முடிப்பர். இறந்தவர்கள் சூன்ய வித்தையில் தேர்ந்தவராக இருந்தாலோ பில்லி சூன்யம் யாரேனும் வைத்து அதனால் அவர் இறந்து போயிருந்தாலோ அவருடைய ஆவி வீட்டை விட்டுப் போகாமல் வீட்டில் உள்ளவர்களுக்குத் தொல்லை கொடுத்தபடி இருக்கும் எனக் கூறுகின்றனர். அதனைத் திருப்திப் படுத்த ஊரைச் சேர்ந்த வண்ணான் வரவழைக்கப்படுவான். அவன் உடுக்கை அடித்தபடி பாடி அந்தப் பேயினை வீட்டில் உள்ள ஒருவர் மீது ஏறச் செய்து அது எந்த தேவதைக்குக் கட்டப்பட்டதெனவும் அதனை எப்படித் திருப்திப்படுத்தவேண்டும் எனவும் கேட்டுத் தெரிந்து கொள்வான். அதன்பின் ஒரு கோழியைப் பலி கொடுத்துக் குடிக்க இளநீரையும் கொடுத்து அதனைத் திருப்திப்படுத்துவர். அது தனக்காக வீட்டிலோ புறக்கடையிலோ ஓர் இடத்தை ஒதுக்கும்படி வேண்டுவதோடு ஆண்டுக்கு ஒரு முறை பலி தரும்படியும் வேண்டும். அதன்படி ஏழு நாள்களுக்குப் பிறகு இறந்து போனவரின் அடையாளமாக வீட்டின் அறைகளில் ஒன்றின் மூலையில் ஒரு குந்துமணை இடப்பட்டு ஆண்டுக்கு ஒரு முறை தேங்காய், கள், சாராயம், கோழி ஆகியன படைத்து வழிபடுவர். சில வீடுகளின் புறக்கடையில் இறந்தவர்களின் நினைவாக அமைக்கப்பட்ட சிறு கோயில்களைக் காணலாம். இவற்றை ஆண்டுக்கு ஒரு முறை திறந்து படையல் இடுவர்.

தீக்குட்டி, பறக்குட்டி, கால பைரவன் முதலிய சிறு தெய்வங்களையும் கம்மாளர்கள் வழிபடுகின்றனர். சிலர் மரங்களின் அடியில் அமைக்கப்பட்ட கற்களை மட்டுமே ஆண்டுக்கு ஒருமுறை வழிபடுகின்றனர். இவர்களுக்கெனத் தனியே நாவிதர்கள் உள்ளனர். அவர்களுள் மண்ணான் ஆண்களுக்கும் மண்ணாத்தி பெண்களுக்கும் சவரம் செய்வர். இவ்வாறு சவரத் தொழில் செய்பவர்கள் அதனைவிட மேம்பட்டதாகக் கருதப்படும் துணி வெளுக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள மண்ணார் சாதியினுள் சேர்த்துக் கொள்ளப்படுவதில்லை.

1901-ஆம் ஆண்டு சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் மலபார் கம்மாளருக்கு உரியனவாகப் பின்வரும் உட்பிரிவுகள் பதியப்பட்டுள்ளன:- கள்ளன் மூப்பன் எனப்படும் கல்கொட்டி, கொட்டோன், பொன் செட்டி, பூழி ஆசாரி, மூசாசாரி, கொல்லன், தட்டான், தோல் கொல்லன் என ஆறு பிரிவினராக உள்ளனர். இந்த ஆறு பிரிவினுள் முதல் ஐந்து பிரிவினரும் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பதோடு மண உறவும் மேற்கொள்வர். தோல் கொல்லர் தோலில் வேலை செய்வதால் தாழ்ந்த சாதியாராகக் கருதப்படுகின்றனர். தோலில் செய்யப்படும் முதல் கட்டப் பணிகள் புனிதமற்றவையாகக் கருதப்படுவதே இதற்கான காரணமாகும். மற்ற உட்பிரிவினர் தோல் கொல்லர் தங்களைத் தீண்டுவதைக் கூட அனுமதிப்பதில்லை. மர ஆசாரி பிரிவில் மர ஆசாரிகளும், தச்சர்களும் அடங்குவர். இந்தப் பிரிவினைச் சேர்ந்த மற்றச் சாதியார் தச்சர்களைத் தனித்த சாதியாராகக் கருதுவதோடு அவர்கள் தங்களைத் தீண்ட அனுமதிப்பதில்லை. எல்லா உட்பிரிவினருமே மக்கள் தாய உரிமை முறையினை மேற்கொள்கின்றனர். இவர்களுள் மருமக்கள் தாய உரிமை முறையினை மேற்கொண்டிருந்தமைக்கான சில தடயங்களும் காணப்படுகின்றன. இவர்களிடையே குருப்பு என்ற உட்பிரிவும் உள்ளது. இந்த உட்பிரிவினைச் சேர்ந்த சாதியினர் கம்மாளர்களின் நாவிதர்களும், புரோகிதர்களுமாவர். கம்மாளர்களின் திருமணம், சாவு தொடர்பான சடங்குகளில் இவர்களே புரோகிதர்களாகப் பணியாற்றுகின்றனர். ஆசாரியும், மூசாரியும் ஒரு கோயிலினுள் செல்லவோ கோயிலில் உள்ள கொடிக்கம்பத்தை நெருங்கவோ வேண்டியிருந்தால் அப்பொழுது மட்டும் பூணூல் அணிந்து கொள்ளும் தனியுரிமை அவர்களுக்கு வழங்கப்படுகின்றது. பிராமணர்களை இவர்கள் இருபது அடி தூரத்திற்கு உள்ளாக நெருங்குவார்களாயின் அவர்களுக்குத் தீட்டு ஏற்படுத்துபவர்களாகின்றனர். ஒரு கட்டிடத்தைக் கட்டி முடித்தவுடன் மர ஆசாரி, கல் ஆசாரி, கொல்லன் ஆகியோர் அந்தக் கட்டிடத்திலிருந்து அதுவரை அங்கு குடிகொண்டிருந்த பேய்களையும் ஆவிகளையும் வெளியே விரட்ட கோழி அல்லது ஆட்டினைப் பலியிட்டு அதற்கான பூசையினைச் செய்வர்'' 'எனக் கூறப்பட்டுள்ளது.

72:3-12,

திருவாங்கூரைச் சேர்ந்த கம்மாளர்களைப் பற்றிய பின் வரும் குறிப்புக்கு நான் திரு என். சுப்ரமணிய அய்யருக்குக் கடப்பாடுடையேன்:- மலையாளத்தைச் சேர்ந்த கம்மாளருக்குரிய பட்டப்பெயர் பணிக்கன், கணக்கன் என்பனவாம். பணிக்கன் என்ற சொல் பணி செய்பவன் எனப் பொருள்படும். இது ஒவ்வொரு ஊரிலும் மற்றக் கம்மாளர்களின் பணியினை மேற்பார்ப்பவர்களான அதிக ஊதியம் பெறும் வயதான மரியாதைக்குரிய சில கம்மாளர்களுக்குரிய பட்டப் பெயராகும். கட்டிடத்திற்குரிய வரைபடத்தைத் தீட்டுவதும் வாஸ்து பூசையினை முன்னின்று நடத்துவதும் இவர்கள் பொறுப்பு ஆகும். தமிழ் நாட்டைச் சேர்ந்த கம்மாளர் பலர் மேற்குக் கரையில் வந்து குடியேறி மலையாளத்தைப் பேசுபவர்களாக மலையாளிகளாகவே மாறிவிட்டனர். இவர்களும் மலையாளத்துக் கம்மாளர்களும் தங்களுக்கிடையே மண உறவுகளோ ஒருவர் வீட்டில் மற்றவர் உண்ணும் பழக்கமோ வைத்துக் கொள்வதில்லை. மலையாளத்துக் கம்மாளர்கள் ஆசாரி அல்லது மரப்பணிக்கன், கல்லன் அல்லது கல் ஆசாரி, மூசாரி, தட்டான், கொல்லன் என ஐந்து பிரிவினராக உள்ளனர். இந்த ஐந்து பிரிவோடும் ஆறாவதான தச்சன் அல்லது ஈர்ச்சகொல்லன் என்னும் மரங்களை வீழ்த்துவதையும் அறுப்பதையும் தொழிலாகக் கொண்டுள்ள ஒரு பிரிவினரையும் சாதி நிருணயமும், கேரள விசேஷ மகாத்யமும் சேர்த்துக் கூறுகின்றன. தச்சர்களான இப் பிரிவினர் வில்லாசான் எனவும் அழைக்கப்படுகின்றனர். திருவாங்கூரைச் சேர்ந்த படை வீரர்களுக்கு வில்லும் அம்பும் செய்து தருவது இவர்கள் பணி ஆகையால் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர்.

கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே மலபார் கம்மாளர்களிடையே ஐந்து பிரிவுகள் இருந்துள்ளன என்பதனைக் கல்வெட்டுச் சான்றுகள் சுட்டிக்காட்டுகின்றன. சிரியன் கிறித்தவர்களுக்கு வழங்கப்பட்ட பட்டயம் ஒன்றில் இவர்கள் ஐம்வழிக் கம்மாளர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளனர். பரசுராமனால் கேரளத்திற்கு அழைத்து வரப்பட்ட இவர்கள் கொடுங்கோளூரைச் சேர்ந்த அரசரான பெருமாள் ஒருவரால் வண்ணார்

சாதியாரோடு மண உறவு கொள்ளும்படி வற்புறுத்தப்பட்ட படியால் அவர்கள் அதனை மறுக்கவே ஒரு சாவுச் சிக்கலிலி ருந்து. தப்பிய வெறுத்தொதுக்கப்பட்ட அச்சாதியார் அனை வரும் ஒரு சேர இலங்கைக்குச் சென்று சேர்ந்தனர். அரசர் களுக்கிடையேயான அருள் உறவு அடிப்படையில் இலங்கை அரசர் அக் கம்மாளர்களில் ஒரு சிலரைத் திரும்ப அனுப்பும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். தங்களைத் தண்டிக்க முற்பட்ட அரசனிடம் திரும்பிச் செல்ல அவர்கள் அஞ்சியதால் அந்தத் தீவின் படைவீரர் பிரிவைச் சேர்ந்த ஈழவர் சிலர் அவர்களுக்குப் பொறுப்பாளராக உடன் அனுப்பப்பட்டனர். இது தொடர் பான வழக்கு வரலாற்றினை விரிவாகக் கூறும் காண்டெர் விஸ்ச்செர் பின்வருமாறுஇது பற்றி எழுதுகின்றார்:- "சேரமான் பெருமாளின் ஆட்சிக் காலத்தில் வண்ணார் சாதியினைச் சேர்ந்த ஒருத்தி உவர்மண் நீரில் துணிகளை நனைத்துத் துவைத்துக் கொண்டிருக்கும்போது துணிகளைச் சுண்டப் பிழிய உதவக் கூடிய வகையில் மறுமுனையைப் பிடித்துக் கொள்ள யாரும் இல்லாததால் தன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டில் தனியே இருந்த ஆசாரியின் மகளை உதவிக்கு அழைத்துக் கொண்டாள். அவ்வாறு அவளோடு சென்று உதவுவது சாதிக் கட்டுப்பாட் டினை மீறிய செயலாகும் என்பதனை அறியாத அச்சிறுமி அவளுக்கு உதவியபின் இல்லம் திரும்பினாள். இதனால் தைரி யம் வரப்பெறற வண்ணாத்தி சில நாள்கள் சென்றபின் அந்த ஆசாரியின் வீட்டினுள் நுழைந்தாள். 'என்ன தைரியம் இருந் தால் நீ என் வாசற்படியைத் தாண்டி உள்ளே வருவாய்?' என அந்த ஆசாரி அவளைப் பார்த்துக் கோபமாகக் கேட்டான். அதற்கு அவள் அவனுடைய மகள் தனக்குத் துணி துவைக்க உதவியதால் அவனும் தன் சாதியைச் சேர்ந்தவனாகி விட்ட தாகக் கூறினாள். தனக்கு நேர்ந்த அவமானத்தைக் கேட்ட அவன் அந்த வண்ணாத்தியை கொலை செய்தான். அவளுக்கு வேண்டியவர்கள் இதனைச் சேரமான் பெருமாளிடம் சென்று முறையிடவே அவர்களுக்காகப் பரிவு கொண்ட அவர் தச்சர் களை அச்சுறுத்தவே அவர்கள் அனைவரும் ஒன்று திரண்டு இலங்கையில் சென்று தஞ்சம் புகுந்தனர். மலபாரைச் சேர்ந்த வர்களால் நன்கு மதிக்கப்படும் கண்டி மன்னர் இவர்களை

அன்போடு வரவேற்று உபசரித்தார். தன் நாட்டில் வீடுகள் கட்டவோ அகப்பைகள் செய்யவோ தேவையானவர்கள் இல்லாத காரணத்தால் சேரமான் பெருமாள் பெரும் நெருக்கடிக்கு உள்ளானார். அவர் கண்டி மன்னருக்குக் கம்மாளரைத் திரும்ப அனுப்பும்படியும் தான் அவர்களுக்கு எந்தத் துன்பமும் தரப்போவதில்லை என்றும் வேண்டுகோள் விடுத்தார். அவருடைய இந்த உறுதிமொழியை நம்ப ஆசாரிகள் ஒப்பவில்லை. அவர்கள் கண்டி மன்னரிடம் தங்களைப் பாதுகாக்கவும் சேரமான் பெருமாள் தங்களிடம் எப்படி நடந்து கொள்கின்றார் என நேரில் அறிந்து கொள்ளவும் இரண்டு சோகன்களை அவர்களுடைய மனைவியரோடு கூடத் தங்களோடு அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொண்டனர். தங்கள் வீட்டில் நிகழும் திருமணம், சாவு போன்ற எல்லாச் சடங்குகளின்போதும் தான் உடன் அனுப்பி வைக்கும் இரண்டு சோகன்களுக்கும் அவர்கள் வழிவரும் சந்ததியினருக்கும் தங்களைக் காப்பதற்கு ஈடாக இரண்டு படி அரிசியினைத் தர ஆசாரிகள் உடன்பட்டால் அதுபோல இருவர் உடன் அனுப்பி வைக்கப்படுவர் என்ற உடன்பாட்டின் பேரில் கண்டி மன்னர் இரு சோகன்களை அவர்களோடு அனுப்பி வைத்தார். அந்த உடன்பாட்டின்படி சோகன்கள் குடும்பத்தினர் இன்றும் அரிசி பெற்று வருகின்றனர். அவ்வாறு விதித்தபடி அரிசியினைக் கொடுக்க வசதியற்ற வறுமை நிலையில் ஓர் ஆசாரி இருப்பானாகில் சோகன்கள் தாங்கள் பெறுவதற்குரிய அரிசியினை முறைப்படி இவர்களிடமிருந்து பெற்றுத் தங்கள் உரிமையை நிலைநாட்டியபின் அந்த அரிசியினைத் திரும்ப அந்த ஆசாரிக்கே கொடுத்துவிடுகின்றனர்.

‘‘கம்மாளர்கள் ஓரளவு கல்வியறிவு பெற்றுள்ளனர். அவர்களுள் சிலர் ஓரளவுக்கு வடமொழி அறிவும் பெற்றுள்ளனர். வடமொழியில் கட்டிடக்கலை தொடர்பான பல நூல்கள் உள்ளன. இவர்களுடைய வீடுகள் கொட்டில் எனப்படும் தாழ்வாக வேயப்பட்ட கூரைக் கொட்டகைகளாகும். ஊன், மீன் ஆகியவற்றை உண்பதோடு இவர்கள் போதை தரும் சாராய வகைகளையும் குடிக்கின்றனர். நாயர்களைப் போலவே அணிமணிகள் அணியும் இவர்கள் சாதிப் பெண்களை மூக்குத்தியும்

ஞுட்டும் அணியாதிருத்தல் கொண்டு வேறுபடுத்தி அறியலாம். மத்திய திருவாங்கூரில் சிலர் வெள்ளியாலான மூக்குத்தி அணிகின்றனர். முன்பு பெருவழக்கினதாக இருந்த பச்சை குத்தும் பழக்கம் வழக்கிழந்து வருகின்றது.

''மரத்தில் வேலைப்பாடுகள் செய்வதில் ஆசாரி கைதேர்ந்தவனாக உள்ளான். தங்கம், வெள்ளி ஆகியவற்றில் நுட்பமான வேலைப்பாடுகளைச் செய்வதில் தமிழ்நாட்டுத் தட்டான்களை விடக் கம்மாளர்கள் கைதேர்ந்தவர்களாக உள்ளனர். ஆசாரியின் வீடுகட்டும் பணியானது ஓரளவு சமய அடிப்படைகளை உள்ளடக்கியதாகும். ஒரு கோயிலைக் கட்டும்போது அனுஜங்க என்ற அடிப்படைச் சடங்கை நடத்திக் கோயில் பூசாரி கோயிலில் உள்ள சிலையின் உயிர்ப்பாற்றலை மாற்றிக் கொண்டபின், ஒரு பசுவையும் கன்றையும் கோயிலைச் சுற்றி மும்முறை ஓட்டிச் செல்வர். அதன் பின்னரே கணக்கன் தன் பணியினை மேற்கொள்ளக் கோயிலினுள் வருமாறு அழைக்கப் படுவான். பசுவும் கன்றும் பணியைத் தொடங்கச் செல்லும் அவனுக்கு முன்னே உள்ளே செல்லுமாறு விரட்டப்படும். கட்டிடம் கட்டி முடித்தவுடன் வாஸ்துபலி எனப்படும் படையல் இடப்படும். வாஸ்து வீட்டினைக் காக்கும் தெய்வம் என நம்பப்படுகின்றது. இத்தெய்வங்கள் வீட்டினைக் கட்டுவதற்காக வீடு கட்டும் இடத்தில் நின்ற மரங்களை வெட்டி வீழ்த்தும்போது அம்மரங்களில் வாழ்ந்த பேய்கள் என்பர். இந்த ஆவிகளைத் திருப்திப்படுத்தப் பொடியினால் தரையில் ஒரு பேயின் உருவத்தை வரைந்தபின் கணக்கன் தன் குல தெய்வமான பத்ரகாளியை வணங்கித் தரையில் வரையப்பட்ட உருவங்களுக்குப் பிராமணரல்லாதார் வீடுகளில் உயிர்ப் பலிகளையும், பிராமணர்கள் வீடுகளில் காய்கறிகளையும் பலியாகத் தருவான். வாழ்வின் இறுதிக் கட்டத்தை நெருங்கிவிட்ட வயதான ஒரு தச்சன் கட்டி முடித்த அந்தப் புதிய வீட்டினுள் நுழைந்து எல்லாக் கதவுகளையும் மூடிக் கொள்வான். கணக்கன் வீட்டிற்கு வெளியே இருந்தபடி உள்ளே இருக்கும் அவனை வீட்டின் எல்லாப் பகுதிகளையும் பார்த்துச் சரியாக எத்தகைய குறையும் இல்லாதிருக்கின்றதா எனப் பொறுப்பாக விடை

கூறும்படி கேட்பான். அதற்கு உள்ளே இருப்பவன் எல்லாம் ஒழுங்காக அமைந்துள்ளன எனக் கூறியவுடன் வெளியே கூடி இருக்கும் ஆசாரிகள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்வர். இவ்வாறு வீட்டினுள் சென்று சரி பார்க்கும் ஆபத்தான வேலையினை மேற்கொள்ள ஒரு சில தச்சர்களே முன் வருவர். அந்த வீட்டில் வாழும் திருப்தியுறாத பேய்கள் இந்தப் பணியினை மேற்கொள் பவர்களை விரைவில் கொன்று தீர்த்து விடும் என நம்பப்படு வதே இதற்குக் காரணம். இந்தச் சடங்கு முடிந்தபின் தரையில் வரையப்பட்ட பேயின் உருவம் அழிக்கப்பட்டுவிடும். அதன் பின் நல்ல நேரத்தில் சென்று அந்த வீட்டில் பால் காய்ச்சும் வரை அந்த வீட்டினுள் யாரும் நுழையமாட்டார்கள்.

"வில்குருப்பு என்றும் வில்கொல்லக்குருப்பு என்றும் அழைக் கப்படும், மலபார் படை வீரர்களுக்கு வில்லும் அம்பும் செய்து தரும் பணியினை மேற்கொண்டிருந்தவர்களே முன்பு கம்மா ளர்களின் புரோகிதர்களும் நாவிதர்களுமாக இருந்தனர். இன் றும் அவர்கள் ஓணம் திருவிழாவின்போது விற்களும் அம்புகளும் செய்து வழங்கி வருகின்றனர். சில இடங்களில் கம்மாளர் தங்களுக்கெனப் புரோகிதம் செய்யப் பயிற்சி பெற்ற தங்கள் சாதிப் பூசாரிகளையே வைத்துள்ளனர். மலையாளத்துக் கம் மாளர்கள் தமிழ்நாட்டுக் கம்மாளர்களைப் போலப் பூணூல் அணிந்து கொள்வதில்லை. கோயில்களில பணியாற்றும்போதும் சிலைகள்வடிக்கும்போதும் சிலபோது இவர்கள் பூணூல் அணிந்து கொள்வதுண்டு. காளி, மாடன் போன்ற தெய்வங்களை இவர்கள் வழிபடுகின்றனர். தமிழ்க் கம்மாளர்களைப் போல சமூகத்தில் மதிக்கப்படாமல் இவர்கள் தீட்டு உண்டாக்கும் சாதியாராகக் கருதப்படுகின்றனர். பணிக்கு உரிய கருவிகளைக் கையில் வைத்திருக்கும்போது மட்டும் தீட்டினைத் தராதவர் களாக இவர்கள் விதிவிலக்குப் பெறுகின்றனர். தென் திருவாங் கூரில் சில பகுதிகளில் இவர்கள் ஈழவர்களை விடச் சமூகப் படி நிலையில் உயர்ந்தவர்களாக மதிக்கப்பட்டாலும் இந்த நிலை பிற இடங்களில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

"வழிப்பு என்ற சடங்கினை நடத்தி இவர்கள் தாலிகட்டுச் சடங்கினைச் செல்லாததாக்குகின்றனர். இதன் வழி தாலி

கட்டியவனுக்கும் தாலி கட்டிக்கொண்ட சிறுமிக்கும் இடையே உள்ள எல்லா உறவுகளும் அறுந்து போகின்றன. இவர்கள் திருமணத்தில் கட்டும் தாலி ஈழவர்களின் மின்னு எனப்படும் அணியினை ஒத்ததாகும். மக்கள் தாய உரிமை முறையினையே இவர்கள் பின்பற்றுகின்றனர். இது போலமக்கள் தாய உரிமை முறையினை மேற்கொண்டுள்ள ஒரு சமூகத்தில் ஒருவனுக்குப் பிறந்த உடன்பிறந்தவர்கள் தங்களுக்குரிய பொது மனைவி யாக ஒருத்தியை மணந்துகொள்ளும் விசித்திரமான வழக்கு அண்மைக்காலம் வரை நடைமுறையில் இருந்து வந்துள்ளது. 'ஒருத்தி பல கணவர்களை உடையவளாக இருக்கும் இந்த வழக்கம், தச்சர், கொத்தர் ஆகியவர்களிடையேயும் மற்றச் சாதிகளைச் சேர்ந்த தனிப்பட்டவர்களிடையேயும் நடை முறையில் உள்ளது. ஒரே குடும்பமாக வாழும் உடன் பிறந்தவர்கள் தனித்தனியே ஒருத்தியை மணந்து கொண்டு காப்பாற்ற வசதியற்றவர்களாக இருப்பதால் தங்கள் அனை வருடனும் பொது மனைவியாக வாழும் ஒருத்தியை மனைவி யாகஏற்றுக் கொள்கின்றனர். அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் வரிசை முறைப்படிக் குடும்பமாக வாழும் உடன்பிறந்தவர் களுக்கு உரியனவாகக் கருதப்படும்' என மட்டீர் (Mateer) கூறி யுள்ளார். இது தக்க விளக்கமாக அமைகின்றது என்பதனை ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டும். குடும்பக் கால்வழி அற்று விடாதபடி காக்கும் பொறுப்பினை ஆண்கள் ஏற்றுக் கொண்டு நடத்த இயலாதபடி அவர்கள் கடமைகளும், அவர் களுக்கு இடர்களும் மிகுந்துள்ளதான சமுதாய அமைப்பின் கீழ், குழப்பமானதொரு காலப் பகுதியில் வாழும் சமூகத்தார் மருமக்கள் வழியான தாய உரிமை முனறயே தக்கது எனக் கண்டு அதனை இன்றியமையாததொரு சமுதாயப் பழக்கமாக ஏற்றுக்கொண்டு விடுவார்களானால் சில கோட் பாட்டாளர்களின் கருத்துப்படி தந்தை வழியான கால்வழி அற்றுப்போய் விடுதல் கூடுமோ என்ற உறுதியற்றதொரு நிலைக்குப் பாதுகாவலாக இது அமைகின்றது எனக் கொள்ள இடம் ஏற்படுகின்றது. மருமக்கள் தாய உரிமை முறையினைப் போல நெடுநாளையதான வழக்காக இல்லாது, அண்மைக் காலத்தில் புகுத்தப்பட்டதான, ஒருத்தி பல கணவர்களோடு

வாழும் நெறி பலரும் இரங்கத்தக்கதான நிலைக்குத் தனி மனித னும் சமுகமும் மிகுந்த வறுமை வாய்ப்பட்டதொரு சூழ்நிலை யினால் ஏற்றுக் கொள்ளப்பட்டதொரு அமைப்பே அன்றி விலங்கு நெறிப்பட்ட உடலுறவு வேட்கையின் வழிப்பட்ட தன்று என்பதனைப் புரிந்து கொண்டால் மக்கள் வழித் தாய உரிமை முறை பேணும் ஒரு சமுகம் இத்தகையதொரு வழக்கின் பாற்பட்டதாக இருப்பதன் காரணத்தைப் புரிந்து கொள்வதில் இடையூறு ஏதும் இருக்காது. மேலும் கம்மாளர்களுடைய இந்த வழக்கு நாயர்களிடையே மருமக்கள் தாய உரிமை வழக்குத் தோன்றியன் காரணத்தை எதிர் மறைமுகமாகச் சுட்டிக் காட்டு கின்றது. கம்மாளர்கள் வீட்டுக்கு உள்ளேயே இருந்து பணிபுரி கின்றனர். இடர் விளைவிக்கக் கூடிய இயங்கு பொறிகள் பொருத்தப்பட்ட பெரிய ஆலைகளில் இவர்கள் பணி மேற் கொள்ளவில்லை. எனவே, போர்க்களத்தில் சென்று உயிரா பத்துக்கு உள்ளாகும் நாயர்களைப் போல ஆபத்துக்குள்ளாகித் தந்தை வழியாகக் கால்வழியினை நிலைப்படுத்த முடியாது போகுமோ என இவர்கள் இம்முறையினை மேற்கொண்டார் கள் என்பது பொருந்தாது. மருமக்கள் தாய உரிமை முறை போர்க்களம் செல்பவர்களான சத்திரியர்களுக்கு உரியதாக வகுக்கப்பட்டுள்ளதேயன்றிச் சமய நெறிப்பட்டவர்களுக் காகவோ தொழில் துறையில் ஈடுபட்டு உழைப்பவர்களுக் காகவோ ஏற்பட்டதன்று என்பதனை இங்கு வலியுறுத்திக் கூற விரும்புகின்றேன்.''

**கம்மரர் – Kammara**

தெலுங்கு பேசும் கம்மாளர்களின் கொல்லர் பிரிவினர் கம்மரர். பயிர்த்தொழிலாளருக்குத் தேவையான கருவிகளைச் செய்யவும் அவற்றை அடிக்கடி பழுது பார்க்கவும் இவர்கள் பணி பெரிதும் தேவைப்படுகின்றது. ''அண்மைக்காலம் வரை கருப்பம் சாறு காய்ச்சும் பெரிய இரும்புக் கொப்பரைகள் தயாரிப்பது கமலாபுரத்தில் குறிப்பிடத்தக்கதொரு தொழிலாக இருந்தது. சாண்டூர் மலைப் பகுதியில் ஹோஸ்பெட்டில் உள்ள ஜம்புநாத மலையிலிருந்து பொதி எருதுகளில் இரும்புத் தாதி னைக் கொண்டுவந்து கம்மரர் சாதியினைச் சேர்ந்தவர்கள்

உருக்கிப் பிரித்தெடுத்துத் தொழில் செய்வர். சென்ற சில ஆண்டு களாக மலிவான ஆங்கில நாட்டு இரும்பு உள்ளூர் இரும்புத் தாது உருக்கும் தொழிலை அடியோடு முடங்கிப் போகச் செய்து விட்டது. இப்பொழுது கம்மரர் ஆங்கிலேயரிடமிருந்து இறக்கு மதி செய்த இரும்பினைக் கொண்டு கொப்பரைகளைச் செய்வ திலும் பழுதுபார்ப்பதிலும் ஈடுபட்டுவருகின்றனர். இவர்கள் தங்களுக்கே உரித்தான காளி கோயில் ஒன்றினைத் தங்கள் ஊரில் கட்டித் தங்கள் சாதிக்காரர் ஒருவரைக் கொண்டே பூசை நிகழ்த்தி வருகின்றனர்" எனப் பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது. வெளியூரைச் சேர்ந்த கம்மரர் எனப் பொருள்படும் பைட்ட கம்மரர் என்ற பெயர் ஊருக்கு வெளியே வெட்ட வெளியில் தொழில் செய்து வரும் தாழ்ந்த நிலையில் உள்ள கம்சாளர் கொல்லர்களைக் குறிக்கப் பயன் படுத்தப்படுவது என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

**கம்மியன் – Kammiyan**

தமிழ்க் கொல்லர்களுக்குரிய ஒரு பெயர்.

**கம்ப – Kampa (bush of thorns)**

யெருக்கலர் சாதிக்குரிய புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**காம்பொ – Kāmpo**

கஞ்சம் மாவட்டக் கையேட்டில் காம்பொக்கள் ஒரிய மொழி பேசும் பயிர்த்தொழிலாளர் என விளக்கப்பட்டுள்ளனர். 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் இந்தப் பெயர் காபு என்பதன் ஒரிய வடிவமாகக் கூறப்பட்டுள்ளது. காம்பு சவரர்களுக்குரிய பெயர். இந்துக்களான காம்பொக்களின் பழக்க வழக்கங்களை மேற்கொண்டுள்ளவர்கள் இச் சவரர்.

**கம்சாளர் – Kamsala**

கம்சாளர் சிலபோது கம்சரர் என்றும் அழைக்கப்படுகின் றனர். இவர்கள் தமிழ் பேசும் கம்மாளரை ஒத்த தெலுங்கு

பேசும் கைவினைஞர்கள். வடக்கே கஞ்சம் மாவட்டத்தில் உள்ள பெர்காம்பூர் வரை இவர்கள் காணப்படுகின்றனர். ஒரு அரசன் இந்தச் சாதியாருக்குத் தொல்லை கொடுத்த காரணத்தால் இவர்கள் இது போல வடக்கு மாவட்டங்களில் வந்து குடியேறியதாக ஒரு வழக்கு உள்ளதாகக் கம்மாளர்களைப் பற்றிய குறிப்புக் கூறுகின்றது. விசாகப்பட்டினத்தில் எண்ணிக்கையில் மிகுதியாகக் காணப்படும் கம்சாளர்கள் ஒரு சோழ மன்னன் ஆட்சிக் காலத்தில் தங்கள் மூதாதையர் பிராமணர்களோடு தாங்களும் சாதியில் சமமானவர்கள் என உரிமை கொண்டாடியதாகவும் அதனால் கோபமுற்ற அந்த அரசன் அவர்களைக் கொன்று அழிக்கும்படி ஆணையிட்டதாகவும், அவர்கள் வடக்கு நோக்கி ஓடி வந்ததாகவும் சாவிலிருந்து தப்ப சிலர் ஓசு சாதியாரை அண்டித் தப்பியதாகவும் தங்களைக் காத்த ஓசு சாதியாருக்கு நன்றி காட்டச் சிலர் தங்கள் இல்லப் பெயர்களோடு ஓசு என்பதையும் இணைத்து லக்க ஓசு, கட்டோசு, பட்டோசு என அமைத்துக் கொண்டிருப்பதாகவும் கூறுகின்றார்.

முருக்கி நாடு, பாகி நாடு, திராவிட என்பது போல வட்டார அடிப்படையிலான உட்பிரிவுகள் கம்சாளரிடையே காணப்படுகின்றன. கம்மாளர்களிடையே காணப்படுவதைப் போல இவர்களிடையேயும் கம்சாளி (பொற்கொல்லர்), கஞ்சாரி அல்லது மூசாரி (பித்தளைக் கொல்லர்), வத்ரங்கி (தச்சர்), காசி அல்லது சில்பி (கல்தச்சர்) போன்ற தொழில் அடிப்படையிலான ஐந்து பிரிவுகள் உள்ளன. கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த கம்சாளர் பற்றிய ஒரு குறிப்பில் திரு எப். ஆர். ஹெமிங்வே, "இவர்களிடையே தேசாயி (தேசத்திற்குரியவர்கள்), துருபுசாகர் (கிழக்கத்தியார்) என்ற விசாகப்பட்டினத்திலிருந்து வந்தேறிகள் என்ற இரு பிரிவினர் உள்ளதாக இவர்களே ஒப்புக் கொள்கின்றனர். இவர்கள் சிலபோது தொழில் தொடர்பான தங்கள் பிரிவுகளைக் கோத்திரங்கள் எனக் கூறிக் கொள்கின்றனர் இதன்படி சனாதனர் (இரும்புக் கொல்லர்), சாநாகர் (தச்சர்), அய்கோநசர் (பித்தளை வேலை செய்வோர்),

பிரதானசர் (கல்தச்சர்), சுபர்னாசர் (பொற்கொல்லர்) எனத் தொழில் அடிப்படையில் கோத்திரங்களாகப் பிரிவுப்பட்டுள்ளனர்'' எனக் கூறுகின்றார். இப் பிரிவினரிடையே மண உறவுகள் நிகழ்கின்றன. எனினும் பொற்கொல்லர் பிரிவினர் கொல்லர்களைவிடத் தங்களைச் சமூகப் படிநிலையில் உயர்ந்தவர்களாகக் கருதுவதோடு அவர்களோடு கலந்து உண்ணவோ மண உறவு கொள்ளவோ உடன்படுவதில்லை. தங்களைப் பிராமணர் என அழைத்துக் கொள்ளும் இவர்கள் பிராமணர்களுக்குரிய கோத்திரப் பிரிவுகளை மேற்கொண்டிருப்பதோடு பிராமணர்களைப் போலவே மணச் சடங்குகளையும் மேற்கொள்கின்றனர். இவர்கள் பிராமணர்களை அவர்களுடைய தகாத செயல்களைச் சுட்டிக் காட்டி நையாண்டி செய்த கவிஞரான வேமன்னாவினுடைய பாடல்களை மேற்கோளாகக் காட்டுவதோடு, வடமொழியில் அமைந்த கட்டிடக் கலை நூல்களான மூலஸ்தம்பம், சில்பசாஸ்திரம் ஆகியவற்றிலிருந்தும் எடுத்துக்காட்டுக்களைக் காட்டுவர். தெய்வத்தச்சனான விசுவகர்மாவின் மரபில் வந்தவர்கள் தாங்கள் என்பதனை இவர்கள் எடுத்துக்காட்டி நிலை நிறுத்தப் பார்ப்பர். விசுவகர்மாவிற்கு ஐந்து பிள்ளைகள் இருந்ததாகக் கூறுவர். அவர்களுள் முதலாமவன் கம்மராச்சாரியர். வசிஷ்டரின் மகளான சூரேலவதியை இவன் மணந்து கொண்டான். இரண்டாவது மகன் வத்லாச்சார்யுடு. மூன்றாவது மகன் ருத்ர அல்லது கம்சராச்சாரியர். இவன் அப்கவன்ச கோத்திரத்தைச் சேர்ந்தவன். பவுலஸ்திய பிரம்கவின் மகளான சலாவதியை இவன் மணந்து கொண்டான். நான்காவது மகன் பிரஸ்சை கோத்திரத்தைச் சேர்ந்த காசாச்சாரியடு. இவன் விசுவாசுவவின் மகளான கணவதியை மணந்து கொண்டான். ஐந்தாமவன் அகசாலாச்சாரியர். சந்திர எனவும் அழைக்கப்படும் இவன் சுவர்ணச கோத்திரத்தைச் சேர்ந்தவன். இவன் பிருகுமகா முனியின் மகளான சௌனதியை மணந்துகொண்டான். விசுவகர்மாவிற்கு ஐந்து பெண்களும் இருந்தனர். அவர்களுள் சரசுவதி பிரம்மனையும் சசிதேவி இந்திரனையும் மண்டோதரி இராவணனையும், அகல்யா கௌதமரையும் மணந்து கொண்டனர். இவர்கள் தேவர்களை மணந்து கொண்டதால் இவர்கள் மரபில் வந்தவர்கள் ஆச்

சாரியா என்ற பட்டத்தைத் தரிக்கின்றனர். குடை, பூணூல், தங்கப் பூணிட்ட கைத்தடி, கருட முத்திரை கொண்ட விருதுச் சின்னம், பேரிவாத்திய முழக்கம் ஆகியன இவர்களுக்கு அனுமதிக்கப்படுகின்றன. ''வலங்கைப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் எனக் கூறப்படுவோர் கம்சாளிலு களைப் பல்லக்கில் தூக்கிச் செல்வதை மிகத் தீவிரமாக எதிர்த்தனர். மூன்று ஆண்டுகளுக்கு முன் கம்சாளிகள் மண நிகழ்ச்சி ஒன்றின் போது இவர்களில் சிலர் கலகம் ஏற்படுத்தப் போவதாக அச்சுறுத்தினர். பல்லக்கை இரவலாகக் கொடுத்திருந்தவர் தன் பல்லக்குப் பாதுகாப்பாகத் திரும்பக் கிடைக்க வேண்டும் என்ற கவலையில் அதனைத் திருமண நிகழ்ச்சிகளின் மூன்றாம் நாளின்போது திரும்பப் பெற்றுக் கொண்டதால் கலகம் செய்ய நினைத்தவர்களுக்கு அதற்கு வாய்ப்பு ஏற்படவில்லை. இந்தக் கலவரத்தை முன்னின்று நடத்தியவன் சென்னையைச் சேர்ந்த ஒரு பறையன ஆவான். கம்சாளிலுகள் முன்பெல்லாம் அவர்கள் வீட்டின் வெளிப் பக்கத்தை வெள்ளையடிக்க அனுமதிக்கப்பட்டதில்லை. பிராமணர்களின் எதிர்சார்பான எண்ணத்தைவிட நகராட்சியாளரின் சட்ட நடைமுறை இவர்கள் வீட்டிற்கு வெள்ளையடிக்க உறுதியான ஆதரவாக அமைந்துவிட்டது'' என மறைத்திரு ஜெ. கெயின் அவர்களால் பதியப்பட்டுள்ளது.* கஞ்சம், விசாகப்பட்டினம் ஆகிய மாவட்டங்களைச் சேர்ந்த கம்சாளர் அம்மாவட்டத்திற்குத் தென்பகுதிகளில் உள்ளவர்களைப் போலத் தங்களைப் பிராமணர்கள் என நிலைநாட்டிக் கொள்வதில் தீவிரம் உடையவர்களாக இல்லை. கோழி வளர்க்கும் இவர்கள் ஊன் உணவினை உண்பதோடு கூட மது வகைகளையும் பயன்படுத்துகின்றனர். இவர்களிடையே கோத்திரப் பிரிவுகள் இல்லை. இவர்களிடையே பூணூல் அணியாத உட்பிரிவினர் உள்ளனர். அவர்கள் ஊரெல்லைக்கு வெளியே மட்டுமே தொழில் செய்வர். கரமலர் எனப்படும் உட்பிரிவினர் பூணூல் அணியாத இத்தகைய உட்பிரிவினரான கொல்லர் ஆவர். பைத கம்மரர் என்ற கொல்லர் பிரிவினர் பூணூல் அணியாதவர்களாக

---

* இந்தியத் தொல்லியல் VIII, 1879. (Ind, Ant, VIII, 1879.)

அவர்களுடைய பெயர் தெரிவிப்பதைப் போலஊருக்குவெளியே தொழில் செய்கின்றனர். விசாகப்பட்டினத்தில் தாழ்ந்த சர்தியினரான மாலர்களும் ரெல்லிகளும் மட்டுமே கம்சாளர் கொடுக்கும் உணவைப் பெற்று உண்ண முன் வருகின்றனர். தசாகலரும் யதரும் கூட அவர்களிடம் உணவு பெறுவதில்லை. கம்சாளர் மற்றச் சாதியார் அனைவரையும் விட ஏழு வீசை எடை குறைந்தவர்கள் என்ற யாவரும் அறிந்த பழமொழியும் வழக்கில் உள்ளது.

1885-இல் சென்னை உயர்நீதி மன்றத்தின் முன் ஒரு வழக்கு வந்தது. அதில் ஒரு பொற்கொல்லன் ஓர் லிங்கத்தின் மீது இளநீர் விட்டு அபிடேகம் செய்ததாகக் குற்றம் சாட்டப் பட்டிருந்தான். நடுவர்களில் ஒருவர் தனது தீர்ப்பில் கூறியுள்ள தாவது:- ''சாதியில் பொற்கொல்லரான முதலாவது குற்றவாளி மகாசிவராத்திரி அன்று இரவு விசாகப்பட்டினத்திலுள்ள கோயில் ஒன்றினுள் நுழைந்து லிங்கத்துக்கு அபிடேகம் செய்தார் எனக் கூறப்பட்டுள்ளது. அவர் அவ்வாறு செய்யும் போது இரண்டாம், மூன்றாம் குற்றவாளிகளான பிராமணர் கள் மந்திரங்கள் ஓதினார்கள் எனக் கூறப்படுகிறது. அப்போது அங்கிருந்த மற்றொரு பிராமணர் பொற்கொல்லரான முதல் குற்றவாளி தானே சென்று அபிடேகம் செய்ய உரிமையில்லை என அறிவுறுத்தியபோது அதற்கு முதற் குற்றவாளி அந்த லிங்கத்தைச் செய்த தனக்கு அவ்வாறு லிங்கத்திற்கு அபிடேகம் செய்யத் தகுதி உண்டு எனக் கூறினார். அப்போது அந்தப் பிராமணர் கூச்சலிடவே மற்றப் பிரா மணர்கள் வந்து கூடி முதற் குற்றவாளியை அபிடேகத்தைத் தொடர இயலாது தடுத்து வெளியேற்றினர். லிங்கத் தினைப் புனிதப் படுத்த அவர்கள் பத்து ரூபாய் செலவழிக்க வேண்டியதாயிற்று. இரண்டாவது வகுப்புக் குற்றவியல் நடுவர் முதல் குற்றவாளிக்கு இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 295, 296-ஆம் பிரிவுகளின்படியும், இரண்டு மூன்றாம் குற்றவாளி களை அதற்கு உடைந்தையாக இருந்தார்கள்எனவும் தண்டித் துள்ளார். இந்தத் தண்டனைகள் அனைத்தையும் மாவட்டக் குற்றவியல் நடுவர், மேல்முறையீட்டின் மீதான தமது தீர்ப்பில்

செல்லாததாக்கிவிட்டார். சமயச் சடங்குகளோ சமய வழிபாடு களோ நடத்திக் கொண்டிருந்தவர்களுக்குக் குற்றம் சாட்டப் பட்டவர்கள் வேண்டுமென்றே தடங்கல் செய்தார்கள் என்ப தற்கான சான்றுகள் ஏதும் இல்லை. ஆதலால் 296-ஆம் பிரிவின் படியான தண்டனைக்கு ஆதாரங்கள் உள்ளன எனக் கூற இடமில்லை. 295-ஆம் பிரிவின்படி ஒருவரைத் தண்டிக்க வேண்டு மானால் 1) குற்றவாளி லிங்கத்தின் தூய்மையைக் கெடுத்தார் என்றோ 2) ஒரு குறிப்பிட்ட வகுப்பார்- அதாவது பிராமணர் கள் அவர்கள் சமயத்தினை இழிவு படுத்துவதாகக் கருது வார்கள் என்பதனை அறிந்தே அதனை அவர் செய்தார் என்றோ வழக்குத் தொடர்பவர்கள் மெய்ப்பிக்க வேண்டும். முதற் குற்ற வாளி பிராமணர்களின் சமயத்தையே சேர்ந்தவராக உள்ளார் என்பதனைக் கருத்தில் கொண்டு பார்த்தால் அவர் செய்த செயல் இழிவு உண்டாக்குவதாயின் அது அவருடைய சமயத் திற்கே அவர் இழிவு உண்டாக்கிக் கொண்டதாக ஆகும். இங்கு இழிவுபடுத்தச் செய்யப்பட்ட செயலாக இலிங்கத்திற்கு அபிடேகம் செய்ததனையே குறிப்பிடுகின்றனர். அந்தச் செயல் அதன் அளவில் வழிபாட்டுக்குரியதாகப் பாராட்டப்படவேண்டி யது. எனக்குத் தெரிந்தவரை இங்கு இழிவு செய்யப்பட்டதானது அச் செயலைச் செய்யத் தகுதியுடையவரல்லாத-பிராமணர் அல்லாத-ஒருவர் அதைச் செய்தார் என்பதுதான். அவர் அதனை ஒரு பிராமணரைக் கொண்டு செய்வித்திருக்க வேண்டும் என்ப தில் தான் அடங்கியுள்ளது.'' இவ்வழக்கின் மற்றொரு நடுவர் (சர். டி. முத்துசாமி அய்யர்) இது பற்றிக் கூறியுள்ளதாவது:- ''இந்த மாவட்டத்தில் உள்ள பல கோயில்களில் வழிபாடு செய் பவர்கள் சிலையினைத் தொடுவதோ அதற்கு அபிடேகம் செய் வதோ வழக்கத்தில் இல்லை. அப்பணிக்கென்று அமர்த்தப்பட் டவர்களான தூய்மை நெறி பேணி வருபவர்களே அச்செயலைச் செய்வர். நம்முன் உள்ள வழக்கில் குற்றவாளி தான் அபிடேகம் செய்ய முற்பட்ட கோயில் அத்தகைய கோயில்களில் ஒன்று என்பதனைத் தெரிந்திருந்தும் அவர் மேற்கொண்டதாகக் கூறப்படும் செயலை மரபுப்படியான வழக்கினை இழிவு செய்வதற்காக மேற்கொள்கின்றோம் என்று தெரிந்து வேண்டுமென்றே வழிபாடு செய்பவர்களின் மனத்தைப் புண்படுத்துவதற்காகச் செய்தார் என மெய்ப்பிக்கப்படு

மானால் அவர் குற்றம் செய்தவராவார். துணைக் குற்றவியல் நடுவர்) இந்த மரபினைக் குற்றவாளி அறிந்திருந்தார் என்பதாகத் தனது தீர்ப்பில் எங்கும் சுட்டிக்காட்டவில்லை. தாழ்ந்த வகுப்பார் வழிபாடு செய்யும் சில கோயில்களில் விலங்குகளை வெட்டிக் கொல்வது வழிபாடாகக் கருதப்படுகிறது என்பதனை நான் இங்குச் சுட்டிக்காட்ட விரும்புகின்றேன். ஆனால் அதே செயல் மற்ற வகுப்பார் வழிபடும் கோயில்களில் செய்யப்படுமானால் அது பொதுவாக மிகப் பெரிய குற்றமாகவும் இழிவுபடுத்தும் செயலாகவும் கருதப்படுகின்றது.'' உயர் நீதி மன்றம் மாவட்டக் குற்றவியல் நடுவரின் தீர்ப்பு முறையானதே எனத் தீர்ப்பளித்துவிட்டது.

கம்சாளர்களின் உட்பிரிவு ஒவ்வொன்றுக்கும் குலம்பெத்த என்ற சாதித் தலைவன் உள்ளான். சாதித்தொடர்பான பொதுவான முக்கியமான விவகாரங்களைத் தீர்க்க இந்த ஐந்து பிரிவுகளின் சாதித் தலைவர்களும் அவ்வப்போது கூடுவர்.

கம்சாளன் ஒருவன் மேநரிகம் என்ற வழக்குப்படி தன் தாய் மாமன் மகளை மணந்து கொள்ள உரிமை பாராட்டலாம். இவர்கள் திருமணச் சடங்குகள் தொடர்பாக நெல்லூர் மாவட்டக் கையேட்டில் தரப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- "மணமகனின் உறவினர்கள் முதலில் மணமகள் இல்லம் சென்று அவள் பெற்றோரிடமோ பாதுகாவலரிடமோ தங்கள் விருப்பத்தைக் கூறி உடன்பாடு கேட்பர். அத்தகைய உடன்பாடு கிடைக்குமானால் ஒரு நாள் குறிப்பிட்டு அன்று மணமகனின் உறவினர்கள் மணமகள் இல்லத்திற்கு தேங்காய், மணமகளுக்கான சேலை, வெற்றிலை, மஞ்சள் ஆகியவற்றோடு செல்வர். அங்கு மணமகளின் உறவினர்கள் அனைவரும் கூடியிருப்பர். அப்போதே மணமகளுக்கான பரிசப் பணம் பற்றி முடிவு செய்யப்படும். மணமகள் மஞ்சள் பூசிக் குளித்துப் புதுச்சேலை அணிந்து, பூச்சூடி வந்து மணமகன் வீட்டார் கொண்டு வந்துள்ள பரிசப் பொருள்களைப் பெற்றுக் கொள்வாள். மணத்திற்காகக் குறிக்கப்பட்ட நல்ல நாளில் மணமகளின் உறவினர்கள் மணமகன் இல்லம் சென்று மணமகனைப் பல்லக்கில் ஏற்றி வருவர்.

ஒரு பிராமணனை அழைத்து வருவர். அவன் மணமேடையில் அமர்ந்துள்ள மணமக்களுக்குச் சடங்குகளை நடத்துவான். மணமக்கள் முன் மந்திரங்கள் சொல்லி முடித்தவுடன் மணமக்களின் மாமன்மார்களை அழைத்து அவர்களை அப் பிராமணன் வாழ்த்துவான். அதன்பின் மணமகன் காவி ஆடை உடுத்தித் தலையில் ஒரு பித்தளைத் தண்ணீர்க் குடத்தை வைத்தபடி கிழிந்த குடை ஒன்றினைப் பிடித்துக்கொண்டு தான் காசிக்குப் போவதாகச் சொல்லி மணப் பந்தலை விட்டு வெளியேறுவான். மணமகள் உடன்பிறந்தவன் அவன் பின் ஓடித் தன் தங்கையை அவனுக்கு மணம் செய்து தருவதாக மும்முறை சத்தியம் செய்வான். அதனால் திருப்தியுற்ற மணமகன் தன் சந்நியாசி ஆடைகளைக் களைந்து குடையோடு அவற்றைப் பிராமணனுக்குத் தருவான். மணமக்கள் மீண்டும் மணமேடையில் அமர்வர். பிராமணன் சில மந்திரங்களைச் சொல்லிய பின் மணமகன் அவன் தோளில் மாட்டிக் கொள்ள ஒரு புனித நூலினைத் தருவான். அதன்பின் அவன் மங்கல சூத்திரத்தை (தமிழர் தாலியினை ஒத்தது) வாழ்த்தி மணமகன் கையில் தர, அவன் அதனைத் தன் உடன் பிறந்தவள் அல்லது ஒரு வயதான சுமங்கலியின் உதவியோடு மணமகள் கழுத்தில் அணிவிப்பான். மணமகளின் தந்தை முன்னே வந்து தன் மகளின் வலக் கையினை எடுத்து மணமகன் வலக் கையில் வைத்து அதன்மீது நீர் வார்ப்பான. மற்றச் சடங்குகள் முழுதும் பிராமணர்கள் மேற்கொள்ளும் சடங்கினை ஒத்தனவாக அமையும்.'' பெண்கள் பெரும்பாலும் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப் படுகின்றனர். கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. மணவிலக்கும் இவர்களிடையே வழக்கில் இல்லை.

கம்சாளர் மாத்வர்களாகவோ சைவர்களாகவோ லிங்காயதர்களாகவோ உள்ளனர். இவர்கள் அனைவரும் தங்கள் சாதிக்குரிய காமாட்சியம்மனைச் சிறப்பாகப் போற்றுவர். ஒவ்வொரு பிரிவினரும் தனித்தனியே காமாட்சியம்மன் குடிகொண்டிருப்பதாக ஒரு பொருளைச் சிறப்பாகக் கருதுகின்றனர். கஞ்சாரரான உலோகத் தொழில் புரிவோர் தாங்கள் உலோகத் தகட்டை வைத்து அடிக்கும்

கல்லில் அவள் இருப்பதாகக் கருதுகின்றனர். பொற்கொல்லர் இடுக்கி முதலான கருவிகளில் இருப்பதாகவும் கொல்லர் ஊதும் துருத்தியில் இருப்பதாகவும் கருதுகின்றனர். தசரா விழாவின் பதினெட்டாம் நாளின்போது காமாட்சியைச் சிறப்பிக்க ஒரு விழாவினை ஆண்டுதோறும் இவர்கள் கொண்டாடுவர்.

இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில் வைத்துப் புதைப்பதே இவர்கள் வழக்கம். தற்போது கம்சாளர்களில் சிலர் இறந்தவர்களை எரிக்கும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். சாவுச் சடங்கும் பெரிதும் பிராமணர்கள் மேற்கொள்ளும் சடங்குகளை ஒத்தமைகின்றன. சாவுத் தீட்டுப் பன்னிரண்டு நாள்களுக்கு மேற்கொள்ளப்படுகிறது.

விசாகப்பட்டினம் மாவட்டத்தில் சில கைவினைஞர்கள் தந்தக் கடைசல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். “இவர்கள் ஐரோப்பியருக்காகச் சதுரங்கப் பலகை, நிழற்படச் சட்டம், சீட்டுக்கட்டுப் பெட்டி, நகைப் பெட்டி முதலிய கண்கவர் பொருள்களை ஆமை ஓடு, விலங்குகளின் கொம்பு, முள்ளம்பன்றி முள், தந்தம் ஆகியன கொண்டு படைக்கின்றனர். நன்கு வளர்ந்துள்ள இத் தொழில் பொருட்காட்சிகளில் பல பதக்கங்களைப் பெற்றுள்ளது. 1859 முதல் 1862 வரை இம்மாவட்டத்தில் ஆட்சியாளராக இருந்த திரு பேனே அவர்களே இத் தொழிலை இம் மாவட்டத்தில் அறிமுகப்படுத்தி வைத்தவர். இதனைக் கம்சாளர் பேணி வளர்த்தபின் மற்றச் சாதியாரும் பின்னர் இதில் ஈடுபட்டுத் தொழில் செய்து வருகின்றனர். இத்தகைய கண்கவர் பொருள்களுக்கு அடித்தளமாக அமைவது சந்தன மரமே. இதனைப் பம்பாயிலிருந்து தருவிக்கின்றனர். இதன் மேல் முள்ளம்பன்றியின் முள்ளினைப் பாதியாகப் பிளந்தோ எருமை அல்லது மான் கொம்புகளின் மெல்லிய துண்டுகளை அறுத்தோ அருகருகே அமைப்பர். ஆமை ஓட்டுத்துண்டு, யானைத் தந்தத் துண்டு ஆகியனவற்றையும் இது போலப் பிளந்து சந்தனக் கட்டை மேல் அமைக்கின்றனர். பெரும்பாலும் யானைத் தந்தத் துண்டினை அழகிய வடிவமைப்புகள் உடையனவாக சிறு இரம்பம் கொண்டு அறுத்து ஆமை ஓட்டினையோ எருமைக் கொம்பினையோ முதலில் பதித்து அதன்மீது பதிப்பர். அல்லது

யானைத் தந்தத்தைத் தெய்வ உருவங்களாகவோ, மலர்களின் வடிவங்களாகவோ செதுக்கிப் பதிப்பர். அம்பு முனையினை ஒத்த அமைப்புடைய சிறிய உளியினைச் செதுக்கு வேலைக் காகப் பயன்படுத்துவர். செதுக்கிய குழிவில் பின்னர் கறுப்பு நிற மெழுகினைப் பற்ற வைப்புக் கோல் போன்ற கருவியின் துணை கொண்டு உருக்கி வார்ப்பர். செதுக்கிய பகுதிக்குமேல் அதிகப்படியாகப் படிந்துவிடும் மெழுகினை உளிகொண்டு செதுக்கி நீக்கியபின் அந்தச் செதுக்கு அமைப்பினை மரந்தின்னி ஆத்தி (*Ficus asperrim*) இலையினைக் கொண்டு தேய்த்துப் பளபளப்பாக்குவர். (இந்த மரத்தின் இலைகள் மிகச் சொர சொரப்பானவை. ஆகையால் இவை உப்புக் காகிதத்திற்குப் பதி லாகப் பயன்படுத்தப்படுகின்றன.) இறுதியில் வெண்மையான அடித்தளத்தில் கறுத்த உருவமைப்புப் பெறப்படுகின்றது. விலங்கு களின் கொம்புகளும் முள்ளம் பன்றி முள்ளும் முகவர் ஆட்சிப் பகுதியிலிருந்து பெறப்படுகின்றன. ஆமை ஓடும் யானைத் தந்தமும் உள்ளூர் மார்வாரிகளின் வாயிலாகப் பம்பாயிலிருந்து வரவழைத்துக் கொள்ளப்படுகின்றன. செதுக்கு மற்றும் அரிவரிக் கடைசல் வேலைப்பாடுகளுக்காகப் பயன்படுத்தப்படும் வடிவ மைப்புக்கள் உலோகத்தில் அமைக்கும்போது பலமாகச் சுத்தி கொண்டு கொட்ட வாய்ப்பு உள்ளது. தந்தத்தில் இந்த வடிவ மைப்புகளை அமைப்பதன் சிறப்பே அந்தப் பலமான கொட்டு வேலையினை நுட்பமாகத் தந்தத்தில் செதுக்கும் கைத்திறனில் தான் அமைந்துள்ளது. விசாகப்பட்டினக் கைவினைப் பொருள் களுக்கு மட்டுமன்றி, இந்தியக் கலைப் பொருள்கள் அனைத்திற் கும் உரிய பண்பாகும் இது. இப்பொழுது தந்தச் செதுக்குவேலை மிக அரிதாகவே உள்ளது. கல்கத்தா அருங்காட்சியகத்திலும் மற்ற இடங்களிலும் தொன்மையான இந்த விசாகப்பட்டினக் கலைப் பொருள்களைக் காணலாம். அவை பெரும்பாலும் தந்தத் தில் கடைந்து அமைக்கப்பட்ட சமயம் சார்ந்த புனிதக் கருத் துரைகளாக இருக்கும்."*

கம்சாளர்களின் வழக்கமான பட்டப்பெயர் அய்யா என்பதே

---

* விசாகப்பட்டின மாவட்ட விவரக்குறிப்பு. (Gazetteer of Vigsagapatnam District.)

அண்மைக் காலமாக அவர்களில் சிலர் ஆச்சாரி என்ற பட்டப் பெயரையும் தரித்து வருகின்றனர்.

பன்சர், ருஞ்சர் என்ற இரண்டு இரவலர் சாதியார் கம்சாளர்களிடம் மட்டுமே இரக்கும் வழக்கத்தை மேற்கொள் கின்றனர் எனத் திரு ஹெமிங்வே கூறியுள்ளார். அவர்களைப் பற்றி அவர் கூறியுள்ள விவரம் வருமாறு:- “பனசர் அப்பெய ருக்குரிய கோமட்டி சாதியின் உட்பிரிவிலிருந்து சாதி விலக்கம் செய்யப்பட்டவர்கள் எனக் கூறப்படுகிறது. முன்பு நிசாமிடம் பணியிலிருந்த இவர்களை இழிவுபடுத்தியவனாக ஒரு கம்சாள னிடமிருந்து இழிந்த உணவினைப் பெற்று உண்ணும் கட்டா யத்திற்கு அவன் உள்ளாக்கினான் எனக் கூறப்படுகிறது. எனவே கம்சாளர்கள் அவர்களைத் தங்கள் பொறுப்பில் ஏற்றுக்கொண் டனர். ருஞ்சர் சிவனால் ஒரு காரணங்கருதிப் படைக்கப் பட்டவர்கள் எனக் கூறப்படுகின்றது. ரவுண்டசூரன் என்ற அரக்கனைச் சிவன் கொன்றபோது அந்த அரக்கன் உயிர்விடும் சமயத்தில் தன் கைகால்களை இசைக்கருவிகளாக்கி, அவைகளை வாசிக்க ஒரு தனிச் சாதியாரைப் படைத்து, அக் கருவிகளைச் சிவனுடைய திருமணத்தின்போது அவர்கள் இசைக்க வேண்டு மென கேட்டுக் கொள்ள அதற்காகப் படைக்கப்பட்ட சாதி யாரே ருஞ்சர்கள். தெய்வமான சிவன் கம்சாளர்களின் முன்னோனான விசுவகர்மாவினை அச்சாதியாரை ஆதரிக்கும் படி கட்டளையிட்டான். அந்தப் பொறுப்பு இப்பொழுது தங்களுடையதாகிவிட்டது எனக் கம்சாளர் கூறுகின்றனர்.”

“கோல்கொண்டாவில் பச்சேலுவாரு என்ற கோமட்டிகள் பிரிவினர் வரிப்பாக்கியினைச் செலுத்த இயலாத காரணத்தால் சிறையிடப்பட்டனர். கைவினைத் தொழிலாளர் சாதியினைச் சேர்ந்த சிலர் தெருவில் வெற்றிலையை மென்று துப்புவதைக் கண்ட அவர்கள் அதனை எடுத்துத் தங்கள் வாயிலிட்டுக் கொண்டு அக் கைவினைஞர்களிடம் தங்களைச் சிறையிலிருந்து காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டனர். அவர்கள் மீது இரக் கங்கொண்ட அக் கைவினைஞர்கள் வரிப் பாக்கியினைச் செலுத்தி அவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தனர். அச் சமயத்தில் கம்சாளர்கள் அனைவரும் பனசர் சாதியினைக்

காப்பாற்ற வீட்டுக்கு இவ்வளவு ஆண்டு வரி செலுத்த வேண்டும் என ஏற்பாடு செய்தனர். அப்போது பனசர் மற்ற எந்தச் சாதியாரிடமும் சென்று இரத்தல் கூடாது என்றும் விதிக்கப் பட்டது" என ஒரு கதை வழங்குவதாகக் கர்நூல் மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ளது.

**கமுகம் - Kamukham (areca nut: *Areca Catechu*)**

கொண்டையங்கோட்டை மறவர்களின் ஒரு மரம்* அல்லது கோது.

**கமுஞ்சியர் - Kamunchia**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ள எண்ணிக்கையில் குறைந்தவர்களான ஒரியப் பயிர்த்தொழிலாளர்.

**காணகு - Kānagu (*Pongamia glabra*)**

குறவர், தூமடி கோல்லர் சாதிகளின் புறமணக்கட்டுப் பாடு உடைய குலத்தின் பெயர். புங்க மரத்தின் பெயர் இது. தூமடி கோல்லர் இம் மரத்தின் விதைகளிலிருந்து எடுக்கப்படும் எண்ணெயினைப் பயன்படுத்துவதில்லை.

**கனகர் - Kanaka**

நீலகிரியைச் சேர்ந்த படகர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

**கணக்கன் - Kanakkan**

ஒரிய கொரொணொ சாதியோடு ஒத்த தமிழ்நாட்டுக் கணக்குப் பார்ப்போர் சாதி இது. வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் திரு எச். எ. ஸ்டுவர்ட் இவர்களைப் பற்றித் தந்துள்ள விவரம் வருமாறு:- "வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு

---

* இளை என்ற குலப்பிரிவு இங்கே மரம் எனச் சுட்டப்பட்டதாதல் வேண்டும். (மொ. ர்)

செங்கல்பட்டு ஆகிய மாவட்டங்களிலேயே இவர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றனர். கணக்கு என்ற தமிழ்ச் சொல்லின் அடியாகப் பிறந்தது இப் பெயர். இது கணக்குப் பார்ப்பவர் எனப் பொருள்படும். பண்டைக் காலத்தில் அரசர்கள் இவர்களை ஊர்களுக்குரிய கணக்கர்களாக அமர்த்தியிருந்தனர். கல்வெட்டுக்களில் கர்ணம் அல்லது கணக்கன் என்ற சொல் மிகுதியும் இடம் பெற்றிருக்கக் காணலாம். இவர்களின் பட்டப் பெயர் வேளான் என்றே பல இடங்களில் தரப்பட்டுள்ளது. இது வேளாளன் என்ற சொல்லின் சுருங்கிய வடிவமாகலாம். தமிழ் நாட்டுக் கணக்கன்கள் கஞ்சம் பகுதி மற்றும் தெலுங்கு மாவட்டங்களைச் சேர்ந்த கணக்கன்களிலிருந்து (பார்க்க: கொரொணோ) பெரிதும் வேறுபட்டவர்கள். தெலுங்குப் பகுதியைச் சேர்ந்தவர்களுள் சிலர் தங்களைச் சத்திரியர் எனவும் பிராமணர் எனவும் கூறிக் கொள்கின்றனர். கர்ணம்கள் தங்களைப் பிரமனின் பிள்ளைகள் என உயர்த்திக் கூறிக் கொள்வது உண்மையே. ஆனால் மற்றவர்கள் இவர்கள் ஒரு சூத்திரப் பெண்ணுக்கும் வைசியன் ஒருவனுக்கும் பிறந்தவனின் வழிவந்தவர்கள் எனக் கொள்வர். சீர், சரட்டு, கைகாட்டி, சோழிய என நான்கு பிரிவினைக் கொண்டுள்ளது இச்சாதி எனக் கூறுவர். சீர் கர்ணம் பிரிவினர், இந்த நான்கினுள்ளும் உயர்ந்தவர்களாகக் கருதப்படுவதோடு இப்பிரிவினர் மதிநுட்பம் வாய்ந்த கணக்கர் எனவும் கருதப்படுகின்றனர். எனினும் மேற்கே மலைப்பகுதிகளில் கணக்கர்களாக இருக்கும் பிராமணர்களைவிட இவர்கள் திறமையில் குறைந்தவர்களாகவே மதிக்கப்படுகின்றனர். கைகாட்டிக் கர்ணம் பிரிவினர் அவர்களிடையே வழக்கில் உள்ள விசித்திரமான பழக்கம் காரணமாக இவ்வாறு அழைக்கப்படுகின்றனர். இப்பிரிவினைச் சேர்ந்த மருமகள் மாமியாரோடு சைகையில் பேச அனுமதிக்கப்படுகின்றாளேயன்றி வாய் திறந்து பேச அனுமதிக்கப்படுவதில்லை. இதன் காரணம் அனைவரும் ஊகம் செய்து கொள்ளக் கூடியதே. இந்த நான்கு பிரிவினரும் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. இச் சாதியாரின் பழக்க வழக்கங்கள் சில விசித்திரமானவை. பூணூல் அணியும் இவர்கள் மதுவகைகளைக் குடிப்பதை அனுமதிக்காததோடு ஊன் உண்டலையும், கைம்பெண்

களின் மறுமணத்தையும் கூட அனுமதிப்பதில்லை. இவர்களில் பெரும்பாலோர் சிவனை வழிபடுகின்றனர். சிலர் வைணவர்களாக உள்ளனர். மிகச் சிலர் லிங்காயத நெறியினைத் தழுவியவர்களாக உள்ளனர்.'' பிள்ளை என்பது இவர்கள் பட்டப்பெயர். தமிழ்நாட்டோடு தொடர்புடைய ஆவணங்களில் கோணி கொபொளெ, கோணிகொப்ளே கணக்கப்பேள் எனப் பலவாறு கணக்குப் பிள்ளை என்பது சிதைந்த வடிவினதாகக் காணப்படுகின்றது. 1680-ஆம் ஆண்டிற்குரிய சென்னை செயிண்ட் சார்ஜ் கோட்டைக் குரிய ஆவணம் ஒன்றில் "ஆளுநர் தன் அவையினரோடும் தொழிற்சாலையைச் சேர்ந்த பலரோடும் ஆறு வரிசையில் படைவீரர்கள் தொடர்ந்து பின்வர கம்பெனி ஏவலர்கள், 300 சலவையாளர்கள், பெத்த நாய்குவ், நகரத்திற்கும் நிலங்களுக்கும் உரிய கண்கொப்ளை ஆகியோரரோடு நகரைச் சுற்றி வந்தார். நிலங்களுக்கான கண்கொப்ளை அவற்றை அவருக்கு விளக்கிக் கூறினார். 1672–இல் பால்டெயஸ், சாவெரியர் பல இடங்களிலும் கணக்கப்பெள்ளையர் என்ற ஆசிரியர்களை அமர்த்தியதாகக் குறித்துள்ளார்.* சென்னை மாநகராட்சியின் கணக்குகளை ஆய்பவருக்கு இன்றும் கொணிக்கொ பிள்ளை என்ற பட்டப் பெயர் வழங்குகின்றது.

கிராம அலுவலர்களின் கையேட்டில் கர்ணங்கள் பின்பற்ற வேண்டியவனாக விதித்துள்ளன வருமாறு:- "ஓர் ஊரின் கணக்குகளை வைத்திருக்கும் பொறுப்பு வைக்கும் கர்ணம் ஊர்த்தலைவனுக்குக் கீழ் பணிபுரிபவனாவான். எல்லாவற்றிலும் அவன் ஊர்த் தலைவனுக்கு உதவவும், வழிகாட்டவும் கடமைப் பட்டவன். ஊர்த்தலைவன், ஊருக்குரிய முனிசீப்பும் குற்றவியல் நடுவருமாகப் பணியாற்றும் காலத்தில் இவன் அவருக்கு எழுத்தனாக இருப்பான். எழுத்தில் வடிக்கப்பட வேண்டிய அறிக்கைகள், கணக்குகள், புள்ளி விவரங்கள் ஆகியவற்றைத் தயாரிக்க வேண்டியது இவன் கடமையாகும்.'' ஓர் ஊரின் எல்லையில் இயல்புக்கு மாறான சாவு நிகழுமானால் அது தொடர்பாக

---

* யேலும் பர்னலும் ஹாப்சன்-ஜாப்சன். (Yule and Burnell, Hobson-Jobson.)

விசாரிக்கப்படுபவர்கள் கூறும் சாட்சியங்களைக் கேட்டு எழுதுவ தோடு, அந்தச் சாவு பற்றிய விசாரணையின் முழு அறிக்கை யினையும் தயாரிக்க வேண்டியது கர்ணத்தின் பொறுப்பாகும். சிறை சென்றவர்கள் ஊர்த்தலைவனால் வைதல், அடிதடியில் ஈடுபடுதல் போன்ற சிறுகுற்றங்களுக்காகத் தண்டிக்கப்பட்ட வர்கள் ஆகியோர் பட்டியல் அடங்கிய பதிவேட்டினையும் அவன் எழுதி வர வேண்டும். அரசு வருவாய் தொடர்பான கணக்குகள், தானியங்கள், விலை நிலவரம் பற்றிய பதிவுகள், ஊர் வழியாகச் செல்லும் மறுபடியும் திரும்பும் புதியவர்கள், பிறப்பு, இறப்பு, கால்நடைகளின் சாவு, நோய் (சப்பை முதலான தொற்று நோய்) பற்றிய அனைத்தையும் அவன் எழுதிவர வேண்டும். அரசின் நில அளவைத் தொடர்பான கருவிகளையும் தக்க வகையில் பாதுகாக்க வேண்டியது கர்ணத்தின் கடமை யாகும்.

திருமணம், சாவு முதலியன தொடர்பான சடங்குகளைக் கணக்கன்கள் தமிழ்ப் புராண மரபுப்படி வேளாளரைப் பின் பற்றிச் செய்கின்றனர். கைகாட்டிப் பிரிவினர் ஒரு தனிப்பட்ட வழக்கினை மேற்கொள்கின்றனர். மணச் சடங்கு முடிந்தபின் பெண்ணை வெளியே செல்ல விடாது வீட்டினுள் இரண்டு அல்லது மூன்று நாள்களுக்கு வைத்திருப்பர். அச்சமயத்தில் அவள் ஒருவகைத் தீட்டுப்பட்டவளாகக் கருதப்படுகிறாள். முன்னாள்களில் அவளை அதுபோல நாற்பது நாள்களுக்கு அரிசியினையும் பருப்பையும் கலந்து கொடுத்து அவற்றைப் பிரிக்கும் வேலையில் ஈடுபட்டிருக்கும்படியாக வைத்திருப்பர் எனக் கூறுகின்றனர்.

செல்வாக்குள்ள ஊர் அலுவலரான கணக்கன் மக்களின் பாராட்டினைப் பெற்றவனாக விளங்குதல் அரிது. அவனைப் பற்றி வழங்கும் பின்வரும் பழமொழிகள் அவன் தொழிலைச் சிறப்பிப்பனவாக இல்லை.

1. காசுக்கு ஒரு குழந்தை என்று விற்றாலும் கணக்கன் குழந்தை மட்டும் நமக்கு ஆகாது.

2. காக்கைக் குஞ்சையும் கணக்கன் குழந்தையையும் கண்ட இடத்தில் கண்ணைக் குத்திவிடு.

திருவாங்கூரில் கம்மாளர்களைக் கணக்கரே என அழைப்ப தோடு தொடுபுழா வேளாளர் கணக்கன் என்பதனைத் தங்கள் பெயரின் பின் இணைப்பாகவும் சேர்த்துக் கொள்கின்றனர். கணக்கன் என்பது மேற்குக் கடற்கரைப் பகுதியில் செறுமான் அல்லது புலையன் சாதியாரின் ஓர் உட்பிரிவின் பெயராகவும் உள்ளது.

கொச்சி மாநிலத்துக் கணக்கர் பற்றிய பின்வரும் குறிப் புக்கு நான் திரு எல். கே. அனந்தகிருட்டிண அய்யருக்குக் கடப்பாடுடையேன்.*

கணக்கன்கள் அடிமைச் சாதிகளைச் சேர்ந்தவர்கள். இன்றுங்கூட அவர்கள் சில நிலக்கிழார்களின் பிணை உரிமை யுடையவர்களாக உள்ளனர். திருச்சூர், முகுந்தபுரம், கொடுங் கோளூர் வட்டங்களிலேயே நான் இவர்களைப் பற்றிய விவரங் கள் அனைத்தையும் கேட்டறிந்தேன். இப்பகுதியில் வாழும் இவர்கள் திருச்சூருக்கு அருகே உள்ள பெருமனொம் ஊரில் உள்ள சித்தூர் மணக்கால் நம்பூத்ரி பாடுவின் அடியாராக (அடிமைகளாக) உள்ளனர் என அறிகின்றேன். கொச்சி மாநி லத்தில் உள்ள கணக்கன்கள் மட்டுமன்றி ஆங்கில அரசின் ஆளுகைக்கு உட்பட்ட பொன்னாணி, சௌகாட், கள்ளிக் கோட்டை ஆகிய வட்டங்களைச் சேர்ந்த கணக்கன்கள்கூடத் தாங்கள் அந்த நம்பூத்ரிபாடுவின் அடிமைகள் என்பதனைத்தெரி வித்துக்கொள்ளச் சில அணாக்களைக் (திருமூலக் கழஞ்சுகள்) கொண்டுவந்து கொடுத்து மரியாதை செலுத்திச் செல்வதாக அந்த நம்பூத்ரிபாடுவே என்னிடம் கூறினார். இதனைக் கொடுங் கோளூரைச் சேர்ந்த கணக்கன் பிரிவினர் ஒருவர் உறுதிப்படுத்தி னார். அவர் தானும் தன் சாதியைச் சேர்ந்தவர்களும் அந்தப் பண்ணையாரின் அடிமைகள் என்பதனை ஒப்புக் கொண்ட தோடு, தங்கள் சாதிக்குள் ஏதும் வழக்கு நிகழுமானால் அத னைப் பண்ணையாரிடம் சென்று முறையிடாமல் கொச்சி அரசரிடம் சென்று முறையிட்டே தீர்த்துக் கொள்ளும் வழக்கம்

---

* கொச்சி இனவியல் புள்ளி விவரத் தனிக் கட்டுரை, எண் 4, 1905. (Monograph Eth. Survey of Cochin, No. 4, 1905.)

உடையவர்களாக இருப்பதாகக் கூறினார். கணக்கனுடைய குடும்பத்தில் உள்ளவர்களுக்கு நோயோ வேறு கேடுகளோ வருமாயின் ஒரு கணியனைக் (சோதிடனைக்) கண்டு, வந்த நோய் அல்லது கேட்டின் காரணத்தையும், அதனைத் தீர்க்கும் வழியினையும் கேட்டறிவர். அவ்வாறு செல்பவர்களைச் சில போது சோதிடர்கள் பண்ணையாருக்கு வழக்கமாகச் செலுத்த வேண்டிய மரியாதைக்கு அறிகுறியான (நம்பிகூறு) கட்டண மான சில அணாக்களைச் செலுத்திவிடும்படி அறிவுறுத்துவர். தை மாதத்தில் பூசம் நாளன்று மாநிலத்தின் பல்வேறு பகுதி களிலும் வாழும் கணக்கன்கள் அனைவரும் ஒன்றாகத் திரண்டு சென்று நிலக்கிழாரான பண்ணையாருக்கு ஒவ்வொருவரும் சில அணாக்களைக் காணிக்கையாகச் செலுத்துவர். எனக்கு விவரம் தெரிவித்தவர் பின்வரும் கதையினை என்னிடம் கூறினார். அவருடைய முன்னோர்களில் ஒருவர் அரசு குடும்பத்தினர் கொச்சியில் தங்கி இருக்கும் போது நாட்டை ஆளுபவரைக் கண்டு மரியாதை செலுத்த வேண்டிச் சென்றபோது, ஒரு புயலில் படகு கவிழ கணக்கன் சாதியைச் சேர்ந்த படகு வலிப்ப வர்களின் தீரத்தினால் அவர் காப்பாற்றப்பட்டதாகவும், இந்த நிகழ்ச்சியைச் சன்னல் வழியே பார்த்துக் கொண்டிருந்த அரசர், அவர்கள் தீரத்தைப் பாராட்டிச் சில கணக்கன்களைத் தமது பணியில் சேர்த்துக் கொள்ள விருப்பம் தெரிவித்ததாகவும் கூறினார்.

கணக்கன்களிடையே பட்டுன்னர், வேட்டுவர், சாவலர், பராட்டுவர் என்ற நான்கு அகமணக் கட்டுப்பாடுடைய பிரிவு கள் உள்ளன. இவர்களுள் பட்டுன்னர் முன்பு உப்பளங்களில் பணி செய்தவர்கள். இந்த நான்கு பிரிவுகளும் மேலும் பல புறமணக் கட்டுப்பாடு உடைய 'கிரியம்' எனப்படும் குலங் களாகப் பிரிவுபட்டுள்ளன.

ஓர் இளைஞன் தன் தாய்மாமன் மகளை மணந்து கொள்ள லாம். ஆனால், சில இடங்களில் இது அனுமதிக்கப்படுவ தில்லை. பட்டுன்னர் பிரிவினர் குழந்தை மணம், வயது வந்த பின் மணம், ஆகிய இரு மண முறைகளையும் மேற்கொள் கின்றனர். ஒரு சிறுமிக்குப் பத்து வயது முதல் பதின்மூன்று

வயதுக்குள்ளாக மணம் செய்விக்கின்றனர். வேட்டுவக் கணக்கன்கள் பெண்கள் பூப்படைந்த பின்னரே மணம் செய்விக்கின்றனர். அவர்கள் மணமகனை மணமகள் சிறுமியாக இருக்கும்போதே தேர்ந்தெடுத்து வைத்திருந்து, தங்கள் மகள் பூப்படைந்தபின் மணம் முடிப்பர்.

ஒரு சிறுமி பருவம் அடைவாளாயின் அவளைத் தீட்டுப் பட்டவளாகக் கருதி வீட்டின் ஒரு பக்கத்தில் ஏழு நாள்கள் தனியே இருக்கச் செய்வர். நான்காம் நாள் அவளைக் குளிக்கச் செய்வர். ஏழாம் நாள் காலையில் ஏழு சிறுமியரை உடன் அழைத்தபடி அவள் ஆற்றுக்கோ குளத்திற்கோ குளிக்கச் செல்வாள். அங்கு அவர்கள் எண்ணெய் தேய்த்துக் குளித்தபின் இல்லம் திரும்புவர். குடிசைக்கு முன்புறமோ அதற்கென அமைக்கப் பட்ட பந்தலிலோ அச்சிறுமி சிறந்த ஆடைகளைப் புனைந்தவளாக மணைப்பலகையில் அமர்வாள். நெல் நிறைந்த ஒரு சிறு பாத்திரம், ஒரு தேங்காய், ஏற்றிய விளக்கு ஆகியன அவள் முன் வைக்கப்படும். அவளுடைய இணங்கன் அவள் முன் இன்னிசையினை ஓரிரு மணி நேரம் இசைத்து முடித்தபின் அவள் முன் வைக்கப்பட்ட பொருள்களை எடுத்துக் கொள்வான். அவனுடைய மனைவி சாணி நீர் தெளித்து அச் சிறுமியைத் தீட்டுப் போக்கியதற்காக ஒரு சில அணாக்களை அன்பளிப்பாகப் பெறுவாள். அதனை நல்ல சுபவேளையாகக் கருதி அச் சிறுமியின் தாயார் அவள் கழுத்தில் தாலியை அணிவிப்பாள். அவளுடன் குளிக்கச் சென்ற சிறுமியர் எழுவருக்கும் சோறிட்டுத் தலைக்கு ஓரணா வழங்குவர். அழைக்கப்பட்ட விருந்தினருக்கும், சாதியைச் சேர்ந்தவர்களுக்கும் நல்ல விருந்து படைப்பர். அங்கிருந்து புறப்படுமுன் விருந்தினர்கள் விருந்து தந்தவர் செலவினைச் சரிக்கட்ட உதவும் பொருட்டுச் சில அணாக்களை அன்பளிப்பாகச் செலுத்திச் செல்வர். இவ்வாறு ஒருவருக்கொருவர் உதவிக் கொள்ளும் பழக்கம் புலையர்களிடையேயும் பெருவழக்காக உள்ளது. இச்சடங்கிற்குப் பின் அச்சிறுமி சமையல் கட்டில் புகுந்து தன் குடும்பக் கடமைகளை மேற்கொள்ளலாம். மணமகனின் பெற்றோர் இச்சடங்கிற்கு ஒரு கட்டி வெல்லம், ஒரு துண்டு, கொஞ்சம் எண்ணெய்,

இஞ்சா (*Acacia Intsia*) –இதன் மெல்லிய நார் சோப்புக்குப் பதிலாகப் பயன்படுகிறது – ஆகியவற்றினைத் தங்கள் பங்காகத் தருவர். இதனைப் 'பெண்டு நியயம்' என அழைப்பர். பூப் படையும் முன்பே ஒரு சிறுமிக்கு மணம் முடிக்கப்பட்டு அவள் தன் கணவனோடு சென்று வாழும் காலத்தில் அவள் பூப்படை வாளாகில் இச்சடங்கு அவள் கணவன் குடிசையிலேயே நடை பெறும். அதற்கான செலவினை அவள் கணவன் பெற்றோர் ஏற்றுக் கொள்வர். அவளுடைய பெற்றோர் தங்கள் பங்காக அதில் ஒரு பகுதியைக் கொடுத்து உதவுவர்.

வேட்டுவக் கணக்கன் பிரிவைச் சேர்ந்த ஒரு சிறுமி பருவம் அடைவாளாயின் அச்செய்தி சாதித் தலைவனுக்கும் (வதிகாரன்) தெரிவிக்கப்படும். அவன் தன் மனைவியுடன் வந்திருந்து அச் சிறுமியின் சடங்கினை நடத்த அவள் பெற்றோருக்கு உதவு வான். ஏழு சிறுமிகள் அழைக்கப்படுவர். அவர்கள் ஒவ்வொ ருத்தியும் ஒரு தேங்காயை உடைத்து அதன் நீரினை அச்சிறுமி யின் தலையில் விடுவர். அவள் தலையில் தண்ணீரும் ஊற்று வர். இவ்வாறு அவள் குளித்தபின் வீட்டின் ஓர் அறையிலோ குடிசையின் ஒரு மூலையிலோ தங்க அனுமதிக்கப்படுவாள். அவள் அருகே உலோகத் தகட்டாலான முகம் பார்க்கும் கண்ணாடி, ஒரு பாத்திரத்தில் நெல், ஒரு பானையில் தண்ணீர், ஏற்றிய விளக்கு ஆகியன வைக்கப்படும். அவள் கணவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட இளைஞன் அழைக்கப்படுவான். அவன் ஒரு தென்னை மரத்தில் ஏறி அச் சிறுமிக்காக ஓர் இளநீர் பறிப்பதோடு மலர்களின் கொத்து ஒன்றையும் கொண்டு வர வேண்டும். அதன் பின் அவன் அங்கு உணவு உண்டு திரும்பிச் செல்வான். இதே சடங்கு மீண்டும் நான்காம் நாளும் ஏழாம் நாளும் நடக்கும். அப்போது அந்த இளைஞன் மலர்க் கொத் தினை எடுத்து நீரில் விடுவான்.

ஓர் இளைஞன் மணப் பருவம் அடைந்தவுடன் அவன் பெற்றோர் அவனுக்கு மனைவியாக ஒருத்தியைத் தேடிஅலைவர். அவளைத் தேடி முடித்ததும் மணமகன் பெற்றோர் மணத் திற்கான பேச்சு வார்த்தைகளைத் .தொடங்குவர். மணமகன்

தாங்கள் முன்பே தேடி முடித்த மணமகள் இல்லம் செல்வர். அங்கு அந்த மணப்பெண்ணின் உறவினர்களும் நண்பர்களும் முன்பே வந்து குழுமி இருப்பர். முறையான பேச்சு வார்த்தைகளுக்குப் பின் பரிசப் பணத்தின் ஒரு பகுதி அப்போதே கொடுக்கப்பட்டு விடும். மணத்திற்குரிய நல்ல நாள் குறிக்கப்படுவதோடு மணத்திற்கு அழைக்கப்பட வேண்டிய விருந்தினர் எண்ணிக்கையும் முடிவு செய்யப்படும். அங்குக் கூடியுள்ளவர்களுக்காகப் பொழுதுபோக்கு நிகழ்ச்சியும் நடத்தப்படும். தேர்ந்தெடுக்கப்பட்ட மணமகன் வீட்டிலும் இதுபோல் விருந்தும் நிகழ்ச்சியும் நடைபெறும். இவர்கள் உள்ளூர் சோதிடரை அழைத்துப் பொருத்தம் பார்க்கக்கூட வசதியற்றவர்கள். எனினும் மணமக்கள் ஒரே நட்சத்திரத்தில் பிறந்தவர்கள் எனத் தெரியவரின் அந்த மண உறவு கைவிடப்படும். மணம் நடைபெறுவதற்காகக் குறிக்கப்பட்ட நாளன்று மணமகன் தன்னை நன்கு அலங்கரித்தவனாகக் கத்தியும் எழுத்தாணியும் உடன் எடுத்துக் கொண்டு தன் பெற்றோருடனும் மற்ற உறவினர்களுடனும் ஊராருடனும் குடிசையை விட்டுப் புறப்பட்டு மணமகள் குடிசையைச் சென்றடைவான். அங்கு அவர்கள் வரவேற்கப்பட்டு மணப்பந்தலில் பாயில் அமரும்படி கேட்டுக் கொள்ளப்படுவர். ஓரளவு முகத்திரை இட்டவளாக மணமகள் மணப்பந்தலுக்கு அழைத்து வரப்பட்டு மணமகன் அருகே அமர்த்தப்படுவாள். அவர்கள் கணவன் மனைவியராகிவிட்டனர் என்பதனை உறுதிப்படுத்த அவர்களுக்குப் பால், சர்க்கரை, வாழைப்பழம் ஆகிய மூன்றும் கலந்து தயாரித்த இனிப்பு வழங்கப்படும். அங்குத் தாலி அணிவிக்கும் பழக்கம் இல்லை. கூடியுள்ள விருந்தினருக்கு நல்ல விருந்து அளிக்கப்படும். அவர்கள் விடைபெற்றுச் செல்லும் போது விருந்து உபசரித்தவருக்குச் செலவைச் சரிக்கட்டும் வகையில் ஓரிரு அணாக்களை அன்பளிப்பாகத் தருவர். மணமகன் தன் உறவினர்களுடன் மணமகளையும் அழைத்துக் கொண்டு தன் குடிசைக்குத் திரும்புவான். அங்கும் சில சடங்குகள் நிகழும். அதன்பின் விருந்தினருக்கு விருந்திடுவர். மணமக்களை அருகருகே அமர்த்தி அவர்களுக்கு இனிப்பு வழங்கிய பின் மணமகனின் பெற்றோரும் தாய் மாமன்மாரும் மணமக்கள் தலையினைத் தொட்டு "என் மகன், என் மகள், என் தமையன்

மணமகள் தங்கள் குடும்பத்தவளாகிவிட்டாள் என்பதனைக் குறிப்பதாகும். அவர்களுக்குத் தங்கள் வாழ்த்தினை உணர்த்தும் அடையாளமாக அவர்கள் தலைமீது அரிசியினைத் தூவுவர். அதன்பின் மணமக்கள் கணவனும் மனைவியுமாக உறவு கொள்வர். சில இடங்களில் பதில் ஆள்களை வைத்து மணச் சடங்கு நிகழ்த்தப்படுகிறது. வேட்டுவக் கணக்கனான இளைஞன் இதுபோலப் பதில் ஆளினை அமர்த்தியோ தாலி கட்டும் சடங்கு நிகழ்த்தாமலோ மணம் புரிந்து கொள்ள முடியாது.

ஒருத்தி தாழ்ந்த சாதியாரோடு உறவு கொள்வாளானால் அவளைச் சாதிவிலக்கம் செய்வர். அவள் கிறித்தவ சமயத்தையோ முகமதிய சமயத்தையோ மேற்கொள்வாள். பிறர் மனை நயத்தல் வெறுக்கத்தக்க ஒழுக்கமாகக் கருதப்படுகிறது. சிறு குற்றங்கள் அனைத்தையும் சாதித் தலைவனே விசாரித்துத் தண்டனை வழங்குவான். தீட்டுரம் எனப்படும் அரசாணையினை அவன் இதற்கான உரிமையாகப் பெற்றுள்ளான். திருமணம், சாவுச் சடங்கு போன்ற பிற நிகழ்ச்சிகளை முன்னின்று நடத்தும் இவன் அதற்கான ஒரு தொகையைக் கட்டணமாகப் பெறுகின்றான். ஒரு கழி, எழுத்தாணி, தங்க இழை பதிக்கப்பட்ட கத்தி ஆகியனவற்றை இவன் பயன்படுத்தலாம். திருமணச் சடங்குக்காக ஆறு கம்பம் நட்டுப் பந்தலிடும் உரிமையும் இவனுக்கு உண்டு. வெள்ளைக் கோட்டு, தலைப்பாகை, காதுக்கடுக்கன், குடை ஆகியன இவன் பதவியைக் காட்டும் சின்னங்கள். இவன் அரசனுக்குப் பத்து அணாக்கள் வரியாகச் செலுத்த வேண்டும். தலப்பிள்ளெ வட்டத்தினைச் சேர்ந்த சித்தூர் மணக்கால் நம்பூத்ரிபாடு, கொடுங்கோளூர் வட்டத்தைச் சேர்ந்த கொடுங்கோளூர் மன்னர், மேன்மை தங்கிய கொச்சி மன்னர் ஆகியோரே இவர்களிடையேயும் பிற சாதிகளிடையேயும் தோன்றும் பூசல்களைத் தீர்த்து வைக்கும் அதிகாரம் பெற்றவர்கள்.

மந்திரம், மாயவித்தை, பில்லிசூன்யம் ஆகியவற்றில் கணக்கன்கள் நம்பிக்கை உடையவர்கள். இந்த வித்தைகளில் ஈடுபடுபவர்கள் இச்சாதியில் ஒரு சிலரே உள்ளனர். இவர்கள் பாணன், வேலன், பறையன் ஆகியோருடைய உதவி தேவைப்

படும்போது அவர்களை நாடுவர். இந்து சமயத்தை மேற்கொண்டுள்ள இவர்கள் சிவன், விட்டுணு, கணபதி, சுப்ரமணியர், மூக்கன், சாத்தன், கண்டகாணன் ஆகிய தெய்வங்களையும் முன்னோர் ஆவிகளையும் வழிபடுகின்றனர். வேட்டுவக் கணக்கன்கள் கப்பிரி, வீரபத்ரன் ஆகிய தெய்வங்களையும் வழிபடுகின்றனர். கொடுங்கோளூரில் சாத்தனை வழிபடுதல் இயலாது. அவன் உள்ளூர் தெய்வத்திற்கு எதிரானவன் ஆவான். முன்னோர்களின் மரத்தாலான அல்லது பித்தளையாலான உருவங்களை இவர்கள் குடிசையில் வைத்திருப்பதோடு அவற்றிற்கு கர்க்கடம் (ஆடி), துலாம் (ஐப்பசி), மகரம் (தை) ஆகிய சங்கராந்தி நாள்களில் எப்போதும் படையலிடுவர். இவர்கள் வீட்டு எல்லையில் மரத்தினடியே ஒரு உயர்ந்த மேடையின் மீது பேய்களைக் குறிப்பனவான சில கல்லுருவங்கள் இருக்கக் காணலாம். அவற்றிற்கு இலையில் படையல் இடுவர்.

பட்டுன்னர் பிரிவுக் கணக்கன்கள் இறந்தவர்களைப் புதைப்பதே பெருவழக்கு. இவர்கள் மற்றத் தாழ்ந்த சாதியார் மேற்கொள்வது போன்ற சாவுச் சடங்குகளையே பின்பற்றுகின்றனர். சாவுத் தீட்டினைப் பதினைந்து நாள்களுக்கு மேற்கொள்வர். பதினாறாம் நாள் காலையில் குடிசையினையும் சுற்றுப் புறத்தையும் பசுஞ்சாண நீரால் மெழுகுவர். விருந்தினர்களையும் சாதியார்களையும் அன்று அழைப்பர். அவர்கள் கொஞ்சம் அரிசியும் கறிக்கான பொருள்களும் கொண்டுவருவர். இறந்தவருக்கு ஈமச் சடங்கு செய்தவனுடனும் அவன் உடன்பிறந்தவர்களுடனும், அவர்கள் ஊர்க் குளத்திற்கோ ஆற்றுக்கோ சென்று குளித்து வருவர். இணங்கன் குடும்பத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள், அவர்கள் மீது பசுஞ்சாண நீர் தெளித்துத் தீட்டுப் போக்குவர். பின்னர் வீட்டினை அடையும் அவர்களுக்கு நல்ல விருந்து அளிக்கப்படும். இறந்தவரின் மகன் நாற்பத்தொரு நாள்களுக்கோ ஓராண்டுக்கோ தீக்சா எனப்படும் துக்கம் மேற்கொள்வான். அதன்பின் மசம் எனப்படும் பெருவிருந்து கொண்டாடப்படும்.

உப்பங்கழிகளில் கணக்கன்கள் மீன் பிடிக்கும் பணியில் அமர்த்தப்படுகின்றனர். மரம் வெட்டுதல், அவற்றை மூங்கில்

தெப்பத்தில் ஏற்றி மழைக்காலத்தில் ஆற்று வழியே கொண்டு செல்லுதல், படகு ஓட்டுதல், நெல் வயல்களில் புகும் வெள்ளத்தை நீர்ச் சக்கரங்கொண்டு இறைத்தல் போன்ற பல பயிர்த் தொழில் பணிகளில் ஈடுபட்டு வருகின்றனர். ஒரு காலத்தில் இவர்கள் உப்பங்கழிகளில் உப்புக் காய்ச்சும் தொழிலில் மட்டுமே ஈடுபட்டிருந்தனர். பெண்கள் கயிறு திரித்தலிலும் வயலில் கூலி வேலை செய்தலிலும் ஈடுபடுகின்றனர். வேட்டுவக் கணக்கன்கள் தென்னை வளர்ப்பிலும், கிளிஞ்சல் சுண்ணாம்பு தயாரிப்பதிலும் ஈடுபட்டுள்ளனர். இவர்கள் தேங்காய் பறிப்பதற்காகத் தென்னை மரம் ஏறுவதில் திறமை பெற்றுள்ளனர்.

கணக்கன்கள் உயர் சாதியைச் சேர்ந்தவர்கள், கம்மாளர், ஈழவர், மாப்பிள்ளாக்கள் ஆகியோர் தயாரிக்கும் உணவை உண்பர். வெளுத்தேடர் (வண்ணார்), வௌக்கத் தலைவர் (நாவிதர்), பாணர், வேலன், கணியர் ஆகியோரிடம் உணவு பெற்று உண்ண இவர்கள் உடன்படுவதில்லை. புலையர், உள்ளாடர், நாயாடியர் ஆகியோர் இவர்களை நெருங்காது தூரவே நிற்றல் வேண்டும். உயர்ந்த சாதி இந்துக்களிடமிருந்து கணக்கன்கள் 48 அடி விலகி நிற்கக் கடமைப்பட்டவர்கள். ஈழவர்களை இவர்கள் தொடுவதாலும் கம்மாளர்களையும் வேலன்களையும் மிகக் கிட்ட நெருங்குவதாலும் இவர்கள் தீட்டுப்படுத்துவர். உயர்ந்த சாதியாருக்கு உரிய கோயில்களை இவர்கள் நெருங்க முடியாது. எனினும் நாட்டுப் புறங்களில் உள்ள கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களில் இவர்கள் பங்கு பெறலாம். கொடுங்கோளூரில் உள்ள கோயிலில் கோழிக்கல் வரை இவர்கள் நெருங்கி வரலாம். தாழ்ந்த சாதியார் கோழியினைப் பலியிடுவதற்காகக் கோயிலுக்கு வெளியே சற்று தூரத்தில் அமைக்கப்பட்டுள்ள கல்லாகும் இது.

**கணக்கு – Kanakku**

நாயர்கள் தங்கள் பெயரின் முன் சேர்த்துக் கொள்ளும் முன் இணைப்பு ஆகும். எடுத்துக்காட்டு:- கணக்கு ராமன் கிருஷ்ணன். திருவாங்கூரைச் சேர்ந்த தொடுப்புழா வேளாளரும் இதே போல இதனைத் தங்கள் பெயரின் முன் இணைப்பாகக் கொள்வர்.

**கஞ்சாரன் - Kanchāran**

பித்தளைப் பாத்திரங்கள் தயாரிக்கும் தொழிலில் ஈடு பட்டுள்ள மலபாரைச் சேர்ந்த சாதியார்.

**கஞ்சேரன் - Kanchāra**

கஞ்சேர, கஞ்சாரி என்பன தெலுங்குப் பிரிவைச் சேர்ந்த உலோகக் கொல்லர்களுக்கான பெயராகும்.

**காஞ்சிமண்டலம் வேளாளர் - Kānchimandalam Vellāla**

சேலம் மலைகளில் வாழும் மலையாளிகள் தங்களை இவ்வாறு கூறிக்கொள்கின்றனர். இவர்கள் காஞ்சிவரத் திலிருந்து இப்பகுதிக்கு வந்து குடியேறிய வேளாளர் எனத் தங்களைக் கூறிக் கொள்கின்றனர்.

**கஞ்சு - Kanchu (bell metal)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். கஞ்சு கெஜ்ஜி (வெண்கல மணி) தொரெயர்களின் ஓர் உட்பிரிவின் பெயராக உள்ளது.

**கஞ்சுகாரர் - Kanchugāra**

சென்னை மற்றும் மைசூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக் கைகளில் கஞ்சுகாரர் பஞ்சாலர் சாதியின் ஓர் உட்பிரிவின ராகப் பதியப்பட்டுள்ளனர். கஞ்சுக்காரர் உட்பிரிவினைச் சேர்ந்தவர்கள் பித்தளை, செம்பு, வெண்கலம் ஆகியவற்றில் பணிபுரிபவர்கள் ஆவர். தென் கன்னடத்தைச் சேர்ந்த கஞ்சு காரர் பற்றித் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் திரு எச்.ஏ.ஸ்டுவர்ட் கூறியுள்ளது வருமாறு:- "இவர்கள் கன்னடம் பேசுபவர்கள், பித்தளையில் பணி செய்யும் கொல்லர்கள். இந்த சமயத்தின் வைணவப் பிரிவினைச் சார்ந்துள்ள இவர்கள் திருப் பதியில் உள்ள வெங்கடரமணரைத் தங்கள் வழிபடு தெய்வ மாகக் கொண்டுள்ளனர். ராமசந்திரபுரம் மடத்தின் தலை வரே இவர்களுடைய சமய குருவாக உள்ளார். ஒருவன் தன் கோத்திரம் அல்லது குடும்பத்தின் உள்ளேயே மணம் செய்து

கொள்ளுதல் என்பது இயலாது. இவர்கள் மகன் வழியான தாய உரிமை முறையினையே பேணுகின்றனர். சிறுமியர் பருவம் அடையும் முன்பே தாரே மணச் சடங்கு (பார்க்க: பண்டர்) நெறியில் மணம் செய்விக்கப்படுகின்றனர். கைம் பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுவ தில்லை. ஒருத்தி கற்பிழந்தவள் என மெய்ப்பிக்கப்பட்டால் ஒழிய மணமுறிவு அனுமதிக்கப்படுவதில்லை. இறந்தவர்களை எரிப்பர் அல்லது சாய்ந்து படுத்த நிலையில் புதைப்பர். பிராமணர்களே இவர்களுக்குப் புரோகிதம் செய்கின்றனர். இவர்கள் போதை தரும் மது வகைகளைக் குடிப்பர்; இறைச்சி, மீன் ஆகியவற்றை உண்பர். விளக்கு, கூசா, சாடி போன்ற வீட்டில் புழங்கும் பொருள்களைச் செய்ய வெண்கலமே பெரிதும் பயன்படுத்தப்படுகின்றது. இந்தப் பொருள்களைச் செய்யும் முறை வருமாறு. இவற்றுக்கான மாதிரிகளை முதலில் களிமண்ணில் செய்து உலர வைத்து தேவையான பொருளின் கனத்திற்கு ஏற்ப அதன்மீது மெழுகினைப் பூசி மீண்டும் உலர்த்தி அதில் ஓரிரு துளைகளை இட்டுச் சூடேற்றி மெழுகினை வெளியேற வைப்பர். இதன் பிறகு உருக்கிய உலோகக்கல வையை அதனுள் வார்ப்பர். பின்னர் களிமண் மாதிரிகளை உடைத்து உள்ளே உள்ளபொருள்களை எடுத்து மெருகிடுவர்.

**கந்தப்பன் - Kandappan**

ஓச்சர் குலத்தின் ஓர் உட்பிரிவு.

**கண்டுலு - Kandulu (dal; cajanus indicus)**

யெருக்கலர், சாதியின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இது துவரைக்கு உரிய பெயராகும். கண்டிகட்டு (துவரைக் கூட்டு) மேதரரின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலமாக உள்ளது.

**கங்காரர் - Kangara**

இவர்கள் கொங்காரர் எனவும் அழைக்கப்படுகின்றனர். கங்காரன் என்ற சொல் வேலைக்காரன் எனப் பொருள்படும்.

72:3-14,

கங்காரர் விசாகப்பட்டினம் முகவர் பகுதிகளில் தொடக்கத்தில் ஊர்க்காவலர்களாகப் பணியாற்றி வந்துள்ளனர். இவர்களைத் தமிழ்நாட்டுக் காவல்காரர்களோடு ஒப்பிடலாம். சென்ற நூற்றாண்டின் அறுபதுகளில் செயப்பூரில் ஆளுநரின் துணை முகவராயிருந்த லெப்னெனன்ட் ஜெ. மெக்டனால்டு சுமித் கங்காரர் பற்றிப் பின்வருமாறு கூறுகின்றார்:– "கொங்கரர் ஊர்க் காவல்காரனேயன்றி வேறு யாருமில்லை எனத் தெரிகிறது. இந்தியாவின் பல பகுதிகளிலும் இவர்கள் திருடர்களை விடச் சற்றே மேலான சமூகப் படிநிலையில் உள்ளனர் என்பதனை அனைவரும் அறிவர். என் முன் விசாரணைக்கு வந்த ஒரு வழக்கிலிருந்து செயப்பூரில் இவர்கள் செயல்படும் முறை எப்படிப்பட்டது என்பது வெட்ட வெளிச்சமானது. அது வருமாறு:- நாம் இந்தியாவை ஆளத் தொடங்கு முன் ஒரு வட்டத்தின் அதிகாரம் முழுவதும் வரி வசூலிப்பவரான அமீனிடம் இருந்தது. திருட்டு நடைபெறும் போதெல்லாம் திருட்டுப் போன பொருள் மேற்கொண்டு செலவு செய்து தொல்லைக்கு உள்ளாகி மீட்கக் கூடிய அளவிற்கு மதிப்பு வாய்ந்ததாக இருக்குமானால் திருட்டுக் கொடுத்த பயணியோ குடும்பியோ உடனே அமீனின் உதவியை நாடிச் செல்வான். அமீனிடம் சென்று வழக்குப் பதிவு செய்பவர் அமீனுக்கு நல்ல விருந்து வைப்பரானால் அந்த அமீன் உடனே அப்பகுதிக்குரிய தலைமைக் கங்காரனைத் தன்னிடம் அழைத்துத் திருட்டுப்போன பொருளை அது எதுவாயினும் உடனே மீட்டுக் கொண்டு வரும்படி ஆணையிடுவான். அந்தக் கங்காரனுக்கு எங்கே போனால் அந்தப் பொருளை உடனே மீட்கலாம் என்ற விவரம் பொதுவாகத் தெரிந்திருக்கும். எனவே அவன் திருட்டுப்போன பொருளின் ஒரு பகுதியினை அமீன் கேட்டுக் கொண்டபடி உடனே கொண்டு வந்து சேர்ப்பான். அமீன் இவ்வாறு பொருளைத் திரும்பப் பெறுவதனை விரைவு படுத்துவது பொருளை இழந்தவர் அமீனுக்குத் தரும் கையூட்டின் அளவினைப் பொறுத்து வேறுபடும். என் முன் வந்த வழக்கில் செயப்பூரைச் சேர்ந்த கங்காரர் அப்பகுதி முழுவதிலும் திருட்டுப் போகும் பொருள்களைக் கண்டு பிடித்துத் தரும் முறை இத்தகையதுதான் என்பதனைக் கண்டு கொண்டேன். காவல்துறையின் அதிகாரத்தின் கீழ் வரும் வட்டங்களில்

மேற்கூறிய நடைமுறை வழக்கு வீழ்ந்து விடுகின்றது. அதன் பின் கங்காரர்களே விரும்பி நமது ஊர்க்காவல் படையில் சேர்ந்துவிடுகின்றனர். அவர்கள் அத்துறையில் மதிநுட்பமும் அஞ்சாமையும் மிக்கவராகச் செயல்படுகின்றனர்.'' செயப் பூரைச் சேர்ந்த முன்னாளைய அரசர்களும் அவர்களின் கீழ் பணிபுரிந்த தலைமை அதிகாரிகளும் கொங்காரர் என்ற திருட்டைத் தொழிலாகக் கொண்ட சாதியாரைப் பணியில் அமர்த்திக் கொண்டு செயப்பூர் மலைநாட்டுப் பகுதியிலும் சமவெளிகளிலும் கொள்ளை, கொலை ஆகியவற்றில் ஈடுபடுத்தி வந்தனர் என மெரைய அலுவலர்கள் (Meriah Officers) 1845-61-இல் குறிப்பிட்டுள்ளனர்.

கொங்காரருள் பெரும்பாலோர் பைதிகள் சாதியைச் சேர்ந்த வர்களே. இவர்கள் சந்ததியினர் இன்றும் விசாகப்பட்டினம் மாவட்டத்தில் பேர்போன கூட்டுக் கொள்ளைக் கூட்டத் தினராக உள்ளனர். 1907-இல் விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில் இவர்கள் கொள்ளையில் ஈடுபடும் முறை பின் வருமாறு விளக்கப்பட்டுள்ளது:- ''கொண்ட தொரையர் போலவே இவர்களும் பொருள்களைத் திருட்டுப் போகாமல் காக்கத் தங்களுக்குள் சிலரைக் காவலுக்கு அமர்த்தும்படி மக்களைக் கேட்டுக் கொள்வர். இவர்களைக் காட்டிலும் மோசமான நடத்தையில் ஈடுபடும் ராயகட, குணுப்பூர் வட்டங்களைச் சேர்ந்த தோம்புகளுடன் இவர்களுக்குத் தொடர்பு உள்ளது. அடையாளம் புலப்படாமல் இருக்க முகத்தில் கரியினைப் பூசிக் கொண்டு ஐம்பதிற்கும் மேற்பட்ட கூட்டத்தினராக ஆயுதங்கள் ஏந்தி இரவில் வீடுகளைக் கொள்ளையிடுவர். ஊரார் யாரும் வெளியே தலைகாட்டாதபடி அவர்களை அச்சுறுத்தி வீட்டினுள் பதுங்கி இருக்கும்படி செய்த பின் இவர்கள் சில பணக்காரர் வீடுகளை இடித்து அல்லது கதவை உடைத்து உட்புகுந்து ஆண்களைக் கட்டிப் போட்டுப் பெண்களைக் கற்பழிப்பதோடு மதிப்பு வாய்ந்த பொருள்களை எல்லாம் கொள்ளையிட்டுச் செல்வர். இதற்காக இவர்கள் அப்பகுதியைச் சேர்ந்த சொண்டி, சாராயக் கடைக்காரர், வட்டிக்கடை சௌகார் போன்றவர்களின் இல்லங்களையே

தேர்ந்தெடுப்பர். வீட்டு உரிமையாளர்களிடமிருந்து மறைத்து வைத்துள்ள உடைமைகளைப் பற்றித் தெரிந்து கொள்ள இவர்கள் கொதிக்கும் எண்ணையை அவர்கள் மீது தெளிக்கும் பழக்கத்தையே பெரும்பாலும் மேற்கொள்கின்றனர்.

**கங்காயன் - Kangayan**

திருவாங்கூரில் சென்று குடியேறியுள்ள இடையர்களின் ஒரு பிரிவினர்.

**காணியாளன் – Kāniālā (land owner)**

வேளாளர்களின் ஓர் உட்பிரிவு.

**கணிகிரி - Kanigiri (a hill in the Nellore district)**

மேதரரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். நெல்லூர் மாவட்டத்தில் உள்ள ஒரு குன்றின் பெயர்.

**காணிக்காரர் – Kānikar**

காணியர் எனப் பொதுவாக வழங்கப்படும் காணிக்காரர் தென் திருவாங்கூர் மலைகளை வாழ்விடமாகக் கொண்ட காட்டினக் குடிகளாவர். புதியவர் ஒருவர் இவர்கள் குடியிருப்பினை நெருங்குவதாகத் தெரிந்தவுடன் தங்களினப் பெண்கள் அனைவரையும் அடர்ந்த காட்டினிடையே தனியே அனுப்பிவிடும் பழக்கத்தை அண்மைக்காலம் வரை இவர்கள் மேற்கொண்டு வந்துள்ளனர். தற்போது இவர்கள் இப் பழக்கத்தை அரிதாகவே மேற்கொள்கின்றனர். இன்று இவர்களுள் சிலர் நகரங்களைச் சார்ந்த பகுதிகளில் குடியேறி மற்றவர்களோடு கலந்து பழகி வருகின்றனர். குள்ள உருவமும் கறுத்த தோலும் அகன்ற மூக்கும் கொண்டதான தொடக்க நிலையான உடலமைப்பு இன்னமும் இவர்களிடையே காணப்படினும், வெளியுலகத் தொடர்பு காரணமாக உடலமைப்பில் ஏற்பட்டுள்ள உருமாற்றத்தால் இடைப்பட்டதான அல்லது நீண்ட மூக்கும் நடுத்தர உயரமும் கொண்ட பல காணிக்காரர்களைத் தற்போது காணலாம்.

| | உடல்வாகு | | | மூக்கின் விகித அளவு எண் | | |
|---|---|---|---|---|---|---|
| | சராசரி | மேல் அளவு | கீழ் அளவு | சராசரி | மேல் அளவு | கீழ் அளவு |
| காட்டினத்தவர் | 152.2 | 170.3 | 150.2 | 84.6 | 105 | 72.3 |
| நாட்டவரோடு தொடர்பு கொண்டவர் | 158.7 | 170.4 | 148 | 81.2 | 90.5 | 70.8 |

காணிக்காரர் சிறந்த தன்மான உணர்வு, நேர்மை, உண்மை ஆகிய பண்புகளை வாழ்க்கை நெறிகளாக மேற்கொண்டுள்ளனர். இவர்கள் விலங்குகள் சென்ற தட அடையாளம் காணும் திறமையும் வேட்டையாடும் விருப்பமும் உடையவர்கள். காட்டிடையே மரங்களையும் புதர்களையும் அகற்றி வழி காண்பதில் இவர்களுக்குச் சமமானவர்களாக எவரையும் கூற முடியாது. காட்டு வழியில் பயணம் மேற்கொள்ள விரும்பும் மற்றவர்கள் இவர்களிடம் வழிகாட்டும்படியும் உதவும்படியும் உதவி வேண்டி வந்தால் ஆர்வத்தோடு விரும்பி உதவ முன் வருவர்.

காட்டுக் காணிக்காரர் காட்டில் நிலையாக ஓரிடத்தில் தங்கி வாழாமல் காட்டில் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு அடிக்கடி தங்கள் குடியிருப்பை மாற்றிக் கொண்டிருப்பர். இவர்கள் குடியிருப்புக்கள் மூங்கிலையும், நாணலையும் கொண்டு அமைக்கப்பட்ட தாழ்ந்த குடிசைகள். குடியிருப்பவர்கள் நோயுற்றாலோ காட்டு விலங்குகளால் குடியிருப்புக்குத் தொல்லைகள் ஏற்பட்டாலோ நிலத்தின் வளம் குறைந்தாலோ இவர்கள் தங்கள் குடியிருப்பினைக் கைவிட்டு வேறிடங்களுக்குக் குடிபெயர்வர். இவர்கள் குடியிருப்புகள் பெரும்பாலும் யானைகள் வழக்கமாகச் செல்லும் யானை வழிகளை விட்டு விலகிச் செங்குத்தான மலைச் சரிவுகளில் இடம் பெற்றிருக்கும். செங்குத்தான மலைப் பக்கங்களில் மேடை அமைப்பில் நிலத்தைத் திருத்திப் பயனுள்ள மரங்களை நடுவர். பயிரிடுவதற்காகக் காட்டின் ஒரு பகுதியை இவர்கள் முதலில் தீயிட்டு

அழித்தபின் நிலத்தைத் திருத்தாது அதில் அப்படியே விதை யைத் தூவி வைப்பர். இரண்டு மூன்றாண்டுகளில் நிலவளம் குறைந்தவுடன் அப்பகுதியினைக் கைவிட்டுக் காட்டின் வேறொரு பகுதியினை அடைந்து திரும்பவும் முன் போலவே பயிரிடத் தொடங்குவர். இவ்வாறாகக் காட்டின் பகுதிகள் கொஞ்சம் கொஞ்சமாகப் பயிரிடுவதற்காகப் பயன்படுத்தப் பட்டுக் காட்டின் பெரும்பகுதி முழுவதுமாக அழிக்கப் பட்டுவிடும். தற்பொழுது காணிக்காரர்கள் இடம் பெயர்ந்து சென்று பயிரிடும் இம்முறையைப் பெரிதும் கைவிட்டு விட்ட னர். தற்போது நடைமுறையில் உள்ள வனத்துறை விதிமுறை களின்படி காடுகளுக்குத் தீயிடுவதோ விருப்பம்போல் எத் தகைய கட்டுப்பாடும் இன்றி மரங்களை வெட்டி வீழ்த்துவதோ அனுமதிக்கப்படுவதில்லை. இவர்கள் பலவகைத் தானியங்கள், பருப்பு வகைகள், மரவள்ளிக் கிழங்கு, வள்ளிக் கிழங்கு, கஞ்சா, புகையிலை ஆகியவற்றைப் பயிரிடுகின்றனர். ஒவ்வொரு குடி யிருப்புக்கும் பயிரிடுவதற்கெனக் குறிப்பிட்ட ஒரு காட்டுப் பகுதி ஒதுக்கப்படுகின்றது. அதில் மற்ற இனத்தவர்கள் புக அனுமதிக்கப்படுவதில்லை. அப்பகுதியில் காணிக்காரர் மரங் களை வெட்டி வீழ்த்திக் காட்டைத் திருத்தித் தானியங்களைப் பயிரிட அனுமதிக்கப்படுகின்றனர். இதற்காக இவர்கள் அரசுக்கு வரி ஏதும் செலுத்துவதில்லை. ஆண்டுக்கு ஒரு முறை அவர்கள் பெருங் கூட்டமாகத் திருவனந்தபுரத்திலிருக்கும் அரசரைச் சந்திக்கச் செல்கின்றனர். "இவர்கள் அரசருக்குக் காணிக்கையாகக் கொண்டு செல்லும் பெரிய மூங்கில் வாழைப் பழங்கள் கொண்ட குலை – அதில் ஒரு சில பழங்களே இருக் கும் – மூட்டுச்சேரி மலை மூங்கில் அரிசி கொண்ட சிப்பம், பலவகைத் தேன் கொண்ட மூங்கில் குழல்கள். புனுகுப் பூனைச் சட்டம் ஆகியவற்றை அவர் பெற்றுக்கொண்டு இவர்களை அன்போடு வரவேற்பர். அரசரை அழைத்தற்குரிய மரியாதை வழக்கும், அரசவையில் நடந்துகொள்ள வேண்டிய நாகரிக நடைமுறையும் அறியாதவர்களாகக் கள்ளங் கபடமற்ற மனத் தவர்களான இவர்கள் அன்பில் மகிழ்ந்தவராக அரசர் வேட்டி பணம், உப்பு, புகையிலை ஆகியவற்றை இவர்களுக்குத் தரு வார். இவர்களும் அவற்றைப் பெற்றுக்கொண்டு திருப்தியோடு

காட்டுக்குத் திரும்புவர்.'' மறைத்திரு மட்டீர் தான் மூங்கில் வாழையின் கன்றினைக் காணிக்காரிடம் கேட்ட போது அவர் கள் 'அது மகாராசாவுக்காக மட்டும் பயன்படுத்த ஒதுக்கப் பட்டது எனக் கூறி அதனைக் கொடுக்க மறுத்து விட்டனர் எனக் குறித்து உள்ளார்.

காணிக்காரர் சிலர் மலைத்தோட்டங்களில் கூலிகளாகப் பணிபுரிகின்றனர். காடுகளில் ஒப்பந்தக்காரரிடம் மரங்களை வெட்டுதல், மூங்கில் வெட்டுதல் போன்ற கூலி வேலைகளிலும் சிலர் ஈடுபட்டுள்ளனர். மற்றவர்கள் விற்களையும் அம்புகளை யும் தயாரிப்பதில் ஈடுபடுகின்றனர். மரமுனையோடு கூட இரும்பு முனை பொருத்தப்பட்ட அம்புகளையும் இவர்கள் தயாரிக்கின்றனர். இவர்களுடைய கரும்புக் காடுகளையும் மற்றப் பயிர் நிலங்களையும் பாழ்படுத்த வரும் யானைக் கூட்டங்களை அடித்து விரட்ட கூடாக்கப்பட்ட அம்புகளை இவர்கள் பயன்படுத்துகின்றனர். அவ்வாறு யானையை விரட்டு பவர்கள் உயர்ந்த மரங்களின் மேல் கிளைகளோடு பொருத்திக் கட்டப்பட்ட பாதுகாப்பான குடிசைகளிலிருந்தோ மூங்கிலால் அமைக்கப்பட்ட ஏரல் இலைகளாலோ வேறு பெரிய இலை களாலோ மறைக்கப்பட்ட மறைவிடங்களிலிருந்தோ அம் பெய்வர். இதற்காகப் பயன்படுத்தப்படும் குடிசைகள் ஆனை மாடங்கள் எனப்படுகின்றன. ''இந்த மலைகளில் காட் டெருமை, கரடி, கடமான் ஆகிய காட்டு விலங்குகள் அடிக்கடி எதிர்ப்படலாம். யானைகளும், புலிகளும் மிகுதியாக இருப்ப தால் சில பகுதிகளில் காணிக்காரர் தங்கள் குடியிருப்புக்கான குடிசைகளை மரங்களின் மேல் உயரமான இடத்தில் அமைத் துக் கொள்ள வேண்டியதாகின்றது. தொடக்க காலத்தைச் சார்ந்த இக்குடிசைகளை விரைவாக எளிதில் கட்டி முடிக்கலாம். இவற்றின் சுவர்கள் மூங்கிலால் அமைந்திருக்கும். மேலே காட்டு மரஞ்செடிகளின் இலைகளை வேய்ந்து கூரை அமைப்பர். இவை பொதுவாகத் தரையிலிருந்து ஐம்பது அடி உயரத்தில் அமைக் கப்படும். உறுதியான பெரிய மரத்தின் கிளைகளோடு இறுகப் பிணைத்து இவற்றைக் கட்டுவர். பரும்படியாக அமைந்த மூங்கில் ஏணியை உயரத்திலிருந்து கீழே இறங்கப் பயன்படுத்து



காணிக்காரர் நெருப்புக் கடைதல்

கின்றனர். இரவில் குடிசையைச் சேர்ந்த அனைவரும் பத்திர மாக மேலே வந்து சேர்ந்த பின் அந்த ஏணியை யானை களுக்கு எட்டாதபடி பின்னர் உயர இழுத்து வைப்பர். இல்லை யாயின் குறும்புக்கார யானைகள் தங்கள் பாதையில் எதிர்ப் படும் அந்த ஏணிகளை இழுத்துத் தள்ளிக் காணிக்காரர்களைத் தரைக்கு இறங்கி வரத் திண்டாடும்படி செய்துவிடும்.'' சில போது எதிர்எதிர் பக்கங்களில் வளர்ந்துள்ள மூங்கில் சிமிர் களை வெட்டியபின் அதனையே ஏணிக்குப் பதிலாகப் பயன் படுத்துவர். பயிரிட்ட நிலத்தில் பயிர் விளையும் பருவத்தை அடைந்தவுடன் காணிக்காரரின் காவல்காரர்கள் எப்போதும் வில் அம்புகளுடன் காவல் காப்பதற்குரிய குடிசைகளில் தங்கள் இனத்தவருக்குரிய பாடல்களை உரக்க ஓயாது பாடியபடி தங்கி இருப்பர். சில சமயங்களில் அம்பின் கட்டையான முனையினைத் தீக்கடையும் குச்சியாகப் பயன்படுத்துவர். இதற்காக ஊனு சடிச்சா (*Grewia tiliaefolia*) முதலான மரக் குச்சிகள் பயன்படுத்தப்படும். தீ உண்டாக்கக் காணிக்காரர் "இரண்டு மரக்கட்டைகளைப் பயன்படுத்துவர். அவற்றுள் ஒன்று அரை அங்குல ஆழமுடைய சிறிய குழியினை உடைய திண்மையற்ற மரக்கட்டையாகவும், மற்றொன்று உறுதியான பதினெட்டு அங்குல நீளமுள்ள ரூல் தடியை ஒத்ததான குச்சி யாகவும் இருக்கும். இந்த நீண்ட குச்சியினைக் காணிக்காரர் தங்கள் உள்ளங்கைகளின இடையே நெட்டுக் குத்தாகப் பிடித்து அதன் ஒரு முனை மற்றொரு மரக்கட்டையில் உள்ள குழியில் பொருந்துமாறு வைத்து வேகமாக அதனை முன்னும் பின்னு மாக உருட்டுவர். சற்று அழுத்திக் கடையும்போது உண்டாகும் உராய்வு குழிவில் வைக்கப்பட்டுள்ள பஞ்சு இழைகளில் நெருப்புப் பொறிகளைப் பற்றிக் கொள்ளும்படி செய்யும்.''

தேன், மெழுகு, இஞ்சி, ஏலம், கெட்டிப் பிசின், யானைத் தந்தம் ஆகியவைகளைச் சேகரிக்க அரசு காணிக்காரர்களைப் பணிக்கு அமர்த்துகின்றது. இப்பணிக்கு ஈடாக அவர்களுக்குக் குடிவாரம் எனப்படும் சிறுதொகை கூலியாக வழங்கப்படுகின் றது. யானைகளை அகப்படுத்தல், பிடித்தல் ஆகியவற்றோடு யானை, புலி, காட்டுப்பன்றி ஆகியவற்றைக் கொல்லும்

தொழிலை இவர்கள் மேற்கொள்வர். இதனோடு மூங்கில் அல்லது பிரம்பு ஆகியவற்றால் கூடை முதலியன முடையும் பணியினையும் இவர்கள் மேற்கொள்கின்றனர். மறைத்திரு எஸ். மட்டீர் ஒரு மட்டக் குதிரை நடந்து போகக் கூடிய உறுதி கொண்ட சுமார் நூறடி நீளமுள்ள பிரம்பால் பின்னப்பட்ட பாலத்தினைத் தான் பார்த்ததாகக் குறிப்பிட்டுள்ளார். உறுதியான மரக்கட்டைகளால் புலிகளை அகப்படுத்தும் கூண்டுகள் பெரிய அளவினவாக அமைக்கப்படும். அதன் ஒரு பகுதியில் புலியைக் கவர்ந்து கூண்டினுள்ளே ஈர்ப்பதற்காக உயிருள்ள ஆடு கட்டப்பட்டிருக்கும். அந்தப் பகுதியின் மரக்கட்டைகள் சுருள் கம்பிகளால் தாங்கப்பட்டிருக்கும். புலி அப்பகுதியில் நுழையும்போது சுருள் கம்பிகள் விலகிப் புலியினை அடைத்துப் போடும் கட்டைகளைக் கீழே விழும்படி செய்யும்.

காணிக்காரர் தேனினைத் தேடி எடுக்க மலைப்பகுதிகளில்பல பகுதிகளிலும் அலைந்து திரிவர். திருவாங்கூரில் வாழும் ஒருவர் காணிக்காரர் தேன் எடுத்தல் பற்றித் தான் கண்டவற்றை எழுதுவது வருமாறு:- "ஒரு பக்கத்திலிருந்து மட்டுமே ஏறி உச்சியினை அடையக் கூடிய செங்குத்தான சரிவோடு கூடிய மற்றொரு பக்கத்தை உடைய பலநூறு அடிகள் உயரங்கொண்ட பாறையினை நான் கண்டேன். அப்பாறையின் ஆழ்ந்த இடுக்குகளில் தேன் கூடுகள் மிகுதியாகக் காணப்பட்டன. அவற்றுள் சில பல தலைமுறைகளாக அவ்விடத்தில் தொடர்ந்து இடம் பெற்றுள்ளன. காணிக்காரர் அவ்வப்போது அந்தத் தேனில் ஒரு பகுதியினையாவது எடுக்கும் தீரமிக்க செயலில் ஈடுபடுபவர். அந்தச் செங்குத்தான மலைச்சரிவில் வட்ட வட்டமான வளையங்களை உறுதியாக இணைத்து உருவாக்கப்பட்ட பல நூறு அடி நீளமுள்ள பிரம்பங் கொடிகளால் பின்னப்பட்ட கயிற்று ஏணி மேலே உயர உள்ள ஒரு மரத்தோடு சேர்த்துப் பிணைக்கப்பட்டுத் தொங்கிக் கொண்டிருப்பதை நான் பார்த்துள்ளேன். அதற்குச் சற்று முன்புதான் காணிக்காரர்கள் தேன் கூடுள்ள பாறையில் வழக்கம் போலத் தேனெடுக்க இறங்கியுள்ளனர். தேனடையைச் சேகரிக்க ஒரு கூடையினை முதுகில் கட்டியபடி கையில் தேனீக்களை விரட்ட உதவும் தீப்பந்தத்தைத் தாங்கிய

படி ஒரு காணிக்காரன் அந்த ஏணியில் இருநூறு அடி தூரம் கீழே இறங்கினான். தரையிலிருந்து சுமார் முந்நூறு அடி உயரத்தில் அவன் தீப்பந்தத்தைக் கொளுத்திப் புகையினை எழுப்பித் தேனீக்களை ஓட்டத் தொடங்கினான். புகை நன்கு படர்ந்து தேனீக்களை விரட்டச் சற்று நேரம் செல்லும். தேனீக்கள் கூடுகளை விட்டு விரைந்து கலைந்து செல்லும். அதன்பின் காணிக்காரன் தேன் கூட்டினை அழிக்கத் தொடங்குவான். ஒவ்வொரு முறை அவன் தான் இறங்கி வந்த கயிற்று ஏணியினை உதைத்து, முன்னும் பின்னும் செல்லும்படி ஆட்டும் போதும், அது அப்படியே அற்று விழுந்து விடுமோ எனப் பார்ப்பவர்களுக்குத் தோன்றும். எனினும் அது போன்ற ஆபத்து ஏதும் நிகழ்வதில்லை. தன் கூடையில் எந்த அளவு தேன் கூட்டினைத் தொல்லைப்படாமல் மேலே சுமந்து செல்ல முடியுமோ அந்த அளவு தேனடைகளைச் சேகரித்தபின் அவன் கயிற்று ஏணியில் மேலே ஏறத் தொடங்குவான். ஒவ்வொரு வளையமாகக் கால் வைத்து மேலே உள்ள வளையங்களைக் கையில் பற்றி மிக லாவகமாக அவன் உச்சியை அடைவது கூர் நுனிக் கோபுரத்தில் வித்தை செய்பவன் செயலை ஒத்ததாக அமையும்.'' இவ்வாறு சேகரிக்கும் தேனினை மூங்கில் குழல்களில் நிரப்பி விற்பனைக்குக் கொண்டு செல்வர்.

திருவனந்தபுரத்தில் உள்ள விலங்குக் காட்சிச் சாலைக்குச் சிலபோது தாங்கள் உயிரோடு கைப்பற்றிய விலங்குகளைக் காணிக்காரர் கொண்டு செல்வர்.

காணிக்காரன் என்ற சொல் நிலத்திற்கு உரிமை உடையவன் எனப் பொருள்படும். சீரங்கன், வீரப்பன் என்ற இரண்டு அரசர்கள் ஒரு காலத்தில் மலைநாட்டை ஆண்டு வந்தனரெனவும் அவர்கள் சந்ததியினர் பாண்டிய நாட்டுப் பகுதியில் உள்ள அகத்தியர் கூடத்திற்கு அப்பாலிருந்து வந்த வலிமை வாய்ந்தவர்களால் விரட்டப்பட்டு, இப்பகுதிக்கு வந்தவர்கள், திரும்பவும் அங்கே போகவில்லை எனவும் ஒரு வழக்கு வரலாறு வழங்கி வருகின்றது. பின்வரும் பழங்கதை ஒன்று காணிக்காரரிடையே வழங்கி வருகின்றது:- ''ஒரு காலத்தில் கடலே அனைத்தையும்

போர்த்திருந்தது. கடவுள் மலைகளை விட்டுக் கடல் நீர் விலகிச் செல்லுமாறு செய்தார். அதன்பின் பரமசிவனும் பார்வதியும் ஓர் ஆணையும் பெண்ணையும் படைத்தனர். அவர்கள் சந்ததியினர் ஐம்பத்தாறு இனத்தவர்களாகப் பிரிந்து பெருக்கம் அடைந்ததால் உலகினில் பஞ்சம் ஏற்பட்டது. அந்நாள்களில் மக்கள் விலங்குகளை வேட்டையாடியும் காடுகளில் கனிவகைகளை மரங்களிலிருந்து பறித்து உண்டும் வாழ்க்கை நடத்தி வந்தனர். தானியங்கள் ஏதும் வழக்கில் இல்லை. நெல்லை எப்படி விதைத்துப் பயிர் செய்வது என்பதனை மக்கள் அறியாதவர்களாக இருந்ததே இதற்குக் காரணம். பஞ்சத்தால் வாடிய மக்களின் கூக்குரல் பரமசிவன் பார்வதி ஆகியோர் காதுகளை எட்டியது. பரமசிவனும் பார்வதியும் இரண்டு அன்னங்களாக உருவம் கொண்டு பூமிக்கு வந்து (அன்னம் பிரமனின் வாகனம்) ஒரு காஞ்சிர மரத்தில் அமர்ந்தனர். அங்கு உட்கார்ந்திருக்கும் போது இரண்டு தும்பிகள் ஆணும் பெண்ணுமாக இணைந்து பறப்பதைக் கண்ட அவர்கள் மனத்தில் காதல் உணர்ச்சி மேலிட அவர்கள் ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டு மக்கள் மீது இரக்கங் கொண்டவர்களாக கடற்கரை சார்ந்த தாழ்ந்த பகுதிகளில் ஒரு வயலில் நெல்லினை முளைக்கும்படி அருளினர். அவ்வாறு நெல் முளைத்து வளர்வதைக் கண்ட பறையர்களும் புலையர்களும் அதனை முதலில் சுவைத்து நல்ல வளம் பெற்றனர். இந்த நிகழ்ச்சி நடைபெற்றது திருவாங்கூருக்கு நெடுந்தொலைவு வடக்கே உள்ள மலபாரில் ஆகும். இந்தப் புதிய தானியத்தைப் பற்றிக் கேள்விப்பட்ட திருவாங்கூர் மன்னர் அதனைக் கண்டு, கொண்டு வருமாறு ஏழு பச்சைக் கிளிகளை அனுப்பினார். அவை ஏழு நெற்கதிர்களைக் கொண்டு திரும்பின. அதனைக் களஞ்சியத்தில் சேர்த்த மன்னர் சில மணிகளை விதைக்கும்படி பறையர்களிடம் தந்தார். அவை வியக்கும் படியாக விளைந்து பெருகின. அரசர் அதனை எப்படிச் சமைப்பது என அறிந்து கொள்ள விரும்பினார். மீண்டும் அதனைத் தெரிந்து வரக் கிளிகள் அனுப்பப்பட்டன. அவை பறந்து போய் ஒரு பறையனின் மனைவி தயாரித்திருந்த பதினெட்டு வகை அரிசிச் சோற்றினைக் கொண்டு வந்தன. அவற்றைப் பார்த்து அவ்வாறே அரசரின் சமையல்காரர்கள் சமைத்தவற்றை உண்டு

பார்த்த அரசர் அந்த உணவு வகைகளுக்கு அடிமையாகித் திருப்தியாக உண்டார். உண்டு முடித்த பின் அவர் கொல்லைப் பக்கம் கையலம்பச் சென்றார். கை அலம்பிய பின் அவர் கைகளைத் துடைத்துக் கொள்ளுமுன் வலக் கையில் ஒட்டியிருந்த நீர்த் துளிகளை உதறினார். அப்போது அவர் அணிந்திருந்த மூன்று கற்கள் பதிக்கப்பட்ட தங்க மோதிரம் கீழே விழுந்து சேற்றில் மீட்க இயலாதபடி புதையுண்டு போனது. இந்த இழப்புக் காரணமாக மன்னர் மிகவும் மனம் வருந்தினார். அதற்கு ஈடு செய்யும் வகையில் பரமசிவன் அந்த மோதிரம் விழுந்து மறைந்த இடத்திலிருந்து திருவாங்கூரைச் சேர்ந்தவர்களுக்கு மிகுதியும் பயன்தரும் மூன்று மரங்கள் முளைக்கும்படியாகச் செய்தார். அந்த மரங்கள் தரும் பயன்களை விற்பதால் அரசர் மிகுந்த வருவாய் பெற்றுச் செல்வ வளம் மிகுந்தவரானார். சமயச் சடங்குகளுக்குப் பயன்படும் பிசின் தரும் டம்மர் (dammer) மரம், மணம் மிக வீசும் சந்தன மரம், காணிக்காரருக்கு இன்றியமையாததாகப் பயன்படும் மூங்கில் ஆகிய மூன்றுமே அவர் முளைக்கச் செய்த மூன்று மரங்கள் ஆகும்.''

காணிக்காரரிடையே இல்லங்கள் என்ற உட்பிரிவுகள் உள்ளன. அவற்றுள் ஐந்து அகமணக்கட்டுப்பாடு உடையவை. மேலும் ஐந்து புறமணக்கட்டுப்பாடு உடையவை. இவற்றுள் முன்னவை மச்சம்பி (மைத்துனர்) இல்லங்கள் எனவும் பின்னவை அண்ணன் தம்பி இல்லங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. அவை பாலமலை, தலைமலை என்பது போல மலைகளின் பெயர்களையும், வேழ நாடு என்பது போல இடங்களின் பெயரையும் கொண்டு விளங்குகின்றன. கோடையாற்றுக்குத் தென் பகுதியில் வாழும் காணிக்காரர் அந்த ஆற்றுக்கு வடக்கே வாழும் காணிக்காரர்களோடு மண உறவு வைத்துக் கொள்வதில்லை. அந்த ஆறு மணத் தொடர்பினைக் கட்டுப்படுத்தும் எல்லைக் கோடாக அமைந்துள்ளது.

பரப்பன், சந்திரன், மார்த்தாண்டன், முண்டன், காளியன், மாடன், நீலி, கறும்பி என்பன காணிக்காரர் சூடிக்கொள்ளும் பெயர்களுள் சிலவாம். பரப்பன் என்ற பெயர் பரந்த முகம்

உடையவன் என்ற பொருளையும் பரப்பு என்ற பெயருடைய இடத்தில் வாழ்பவன் என்ற பொருளையும் தருவதாகும். முல்ல்ன் என்ற பெயருடைய பலரையும் அவர்கள் வாழும் இடத்தை வைத்து குழுகும்பி முல்லன், ஆனைமலை முல்லன், செம்பில கயம் முல்லன் என்பது போல அழைப்பர்.

மூத்தகாணி என்ற குழுத் தலைவன் கீழ் காணிக்காரர்கள் சிறுகுடியிருப்புகளில் வாழ்கின்றனர். மூத்தகாணிக் குடியிருப்பில் வாழ்பவர்கள் மீது மிகுந்த செல்வாக்கு உடையவனாக இருப்ப தோடு அவர்களிடமிருந்து பலவற்றையும் பெற்றுக் கொள்ளும் உரிமை உடையவன். இனத்தவர் சமூகத் தொடர்பான விவகாரங்களை ஆராய்ந்து முடிவெடுக்கும் சபைக்கு மூத்தகாணியே தலைமை தாங்குவான். காட்டில் மரங்களை வெட்டிப் பயிரிடத் தகுந்த நிலமாக அதனை ஆக்குவதற்கான நேரம், விதைக்கும் சமயம், அறுவடைக்கான சமயம், தெய்வ வழிபாட்டுக்கான சமயம் முதலியன அவன் தலைமையிலான சபைக் கூட்டத்திலேயே முடிவு செய்யப்படுகின்றன. சபையோரால் விதிக்கப் படும் தண்டத் தொகை தெய்வத்திற்கான படையலுக்காகச் செலவிடப்படும்.

தமிழ்க் கலப்பினை மிகுதியும் உடைய மலையாளக் கிளை மொழியினையே காணிக்காரர் பேசுகின்றனர். இவர்கள் தங்கள் மொழியினை ‘மலம் பாஷ’ என வழங்குவர்.

மலையில் வாழும் இவர்கள், மக்கள் தாய உரிமை முறையினையே மேற்கொள்கின்றனர். எனினும் ஒருவன் சொந்த உடைமைகளில் பாதி அவனுடைய உடன்பிறந்தவர்கள் பிள்ளைகளுக்கு உரியதாகும். சமவெளியில் வாழ்பவர்களை ஒப்ப ஒருவன் தன் சொந்த முயற்சியில் ஈட்டிய உடைமைகளை அவன் பிள்ளைகளும் அவன் உடன் பிறந்தவர்கள் பிள்ளைகளும் சமமாகப் பங்கிட்டுக் கொள்வர். ஒருவனுக்குப் பிள்ளைகள் இல்லையாயின் அவன் உடன் பிறந்தவர்கள் பிள்ளைகளுக்கே அவன் உடமைகள் உரிமையாகும். அவனுடைய மனைவி வாழ்க்கை நடத்தத் தேவையான பொருள் மட்டும் பெற உரிமை உடையவள்.

காட்டில் உறையும் தெய்வம் எனக் கூறப்படும் சாஸ்தாவே இவர்கள் சிறப்பாக வழிபடும் தெய்வம். எனினும் அம்மன், பூதத்தான், வெட்டிக்காட்டுப் பூதம், வடமலை பூதத்தான், அம்கலன் போன்ற வேறு பலவகையான தெய்வங்களுக்கும் காணிக்காரர் வழிபாடு நிகழ்த்துகின்றனர். "சில குறிப்பிட்ட இடங்கள், சில மரங்கள், சில பாறைகள் ஆகியவற்றை இவர்கள் சிறப்பாக வழிபடுகின்றனர். அந்த இடங்கள் இவர்கள் நண்பர் களுக்கோ உறவினர்களுக்கோ நலத்தையோ தீமையையோ விளைவித்த சிறப்பிற்குரியனவாகும். அத்தகைய இடங்களில் இவர்கள் அவ்வப்போது குழுமித் தங்கள் தோழர்களுக்கு அங்கு ஏற்பட்ட தீங்கு தங்களுக்கு நிகழாமல் காக்கவேண்டும் என்றோ அந்த இடத்தில் மற்றொருவருக்கு நிகழ்ந்த நன்மை தங்களுக்கும் நிகழ வேண்டும் என்றோ வாழ்த்தி வணங்குவர்." ஆண்டுதோறும் பிப்ரவரி மாதத்தில் காணிக்காரர் அனைவரும் கூடிக் கோடை விழாக் கொண்டாடுவர். அப்போது ஆடு களையும் கோழிகளையும் பலியிடுவதோடு பூசாரி பொங்கலிட்டு ஊன்கறி படைத்து முல்லை நிலக் காடுவாழ் தெய்வத்திற்கு வழிபாடு நிகழ்த்துவான். இந்த விழாவில் சமவெளியிலிருந்தும் பலர் வந்து கலந்து கொள்வர். குடித்துக் கும்மாளமிட்டு ஆடு வதோடு கோடை விழா முடிவுறும். நாணலாலான குழல் அல்லது கிளாரினெட் போன்ற ஊது குழலால் காணிக்காரர் சிலரால் இசைக்கப்படும் இசைக்கு ஏற்ப மற்ற ஆண்கள் ஆடுவர். பெண்கள் இசைக்கேற்ப கைதட்டி மகிழ்வர். காணிக் காரர் மீனம் (பங்குனி), கன்னி (புரட்டாசி) ஆகிய இரு மாதங் களிலும் ஆண்டுக்கு இரண்டு முறை தங்கள் தெய்வங்களை வழிபடுவர். விழா நாளன்று காலையில் ஒவ்வொரு குடும்பத் தினரும் மூத்தகாணியின் இல்லத்திற்கு அரிசியும், பழங்களும் கொண்டு சென்று தருவர். அதில் ஒரு சிறு பகுதியினை எடுத்து வைத்துவிட்டு, எஞ்சியதைக் குளித்துவிட்டுக் கைகால்களைக் கழுவித் தூயவர்களாக வரும் சிறுவர்களும் ஆண்களும் குற்றி மாவாக்குவர். அதனைக் காட்டினை வெட்டி இடம் உண்டாக் கிய வயற்பகுதிக்கு எடுத்துச் செல்வர். தெய்வத்தை அழைத்தல் எப்படி என்பதனை அறிந்தவனான ஒரு காணிக்காரன் குளித்து விட்டு அங்கே வந்து வரிசையாக வாழை இலைகளை இட்டு

ஒவ்வொரு இலையிலும் கொஞ்சம் அரிசிமாவினைப் பரப்பி அதன்மீது வாழைப் பழத்தினை வைப்பான். அவற்றினை வாழையிலையிட்டு மூடியபின் அந்த இலைகளின்மீது கொஞ்சம் அரிசி தூவப்படும். பூசாரியாகப் பணிபுரியும் காணிக்காரன் சாம்பிராணி தூபம் போட்டு அதனை அந்த இடத்தினைச் சுற்றி எடுத்துச் சென்று காட்டியபின் அந்த இடத்தின் முன் கொண்டு வைப்பான். அனைவரும் கையெடுத்துக் கும்பிட்டு வணங்கி அறுவடையின்போது நல்ல பயன் கிடைக்க வேண்டு மென வேண்டுவர். பூசை போடுபவன் சில சமயங்களில் வெளிச் சப்பாடு போலத் தெய்வம் ஏறப்பெற்று வரப்போகும் பல நிமித்தங்களை வாய்விட்டுக் கூறுவான். சடங்கின் முடிவில் அரிசி மாவும் வாழைப்பழமும் கூடியுள்ள அனைவருக்கும் வழங்கப்படும். பயிரிடுவதற்காகக் காட்டினை அழிக்க வேண்டிய சமயத்தில் மூத்தகாணியை அழைத்து அவனுக்குக் கொஞ்சம் அரிசியும் தேங்காயும் வழங்குவர். அவற்றை அவன் படையலாக இட்டுக் காட்டின் சிறுபகுதியைத் தன் கையால் வெட்டி அந்த வேலையைத் தொடங்கி வைப்பான். வளர்ந்த பயிர் முதன்முதல் கதிர் வாங்கத் தொடங்கியவுடன் காணிக் காரர்கள் இரண்டு இரவுகள் பறை கொட்டி, ஆடிப் பாடுவ தோடு நான்கு கம்பங்கள் நட்டு ஆவிகளுக்காக மேடை அமைத்து அவற்றினுக்குப் பச்சரிசி, இளநீர், மலர்கள் முதலியன வற்றைப் படைப்பர். அறுவடையின் போது அரிசி, வாழைப் பழம், பணியாரம், மலர்கள் முதலியனவற்றை மலைகளில் வாழும் பூச்சமல்லன் பேய், பூனை அரக்கன், அதிரக் கொடிப் பேய், எல்லைக் கொடிகாக்கும் பேய், முதலிய பேய்களுக்குப் படைப்பர்.

காணிக்காரரின் அறுவடைத் திருவிழாத் தொடர்பான பின்வரும் குறிப்புக்கு நான் திரு எஸ். பி. ஸ்மித் அவர்களின் கட்டுரை* ஒன்றினுக்குக் கடப்பாடுடையேன்:- இந்த விழா பர தேவதையின் அருளைப் பெறுவதற்காக மேற்கொள்ளப்படு

---

* மலபார் க்வார்டர்லி ரெவியூ, 1905. (Malabar Quarterly Review, 1905.)

கின்றது. அல்லது அந்த வட்டாரத்தாரால் வீட்டில் வழிபடும் தெய்வமாகக் கொண்டாடப்படும் மாடனுக்கு உரிய வழிபாடு ஆகவும் இதனைக் கொள்ளலாம். உண்பிக்கும் சடங்கு எனப் பொதுவாக அழைக்கப்படும் இதனை அறுவடைப் பருவம் தொடங்குவதற்குச் சற்று முன்பாக நிகழ்த்த வேண்டும். "இந்தச் சடங்கில் பூசாரியாகப் பணியாற்றும் காணி, வயதான செல் வாக்குடைய காணிக்காரனாக இருப்பான். தூங்கும்போது தான் தெய்வச் சமிக்ஞைகளும் உள்ளுணர்ச்சிகளும் பெற்றதாக அவன் கூறுவான். இந்தச் சடங்கை நிகழ்த்தத் தேவைப்படுபவை பதுக எனப்படும் பலிப் பொருளும் அஷ்டமங்கலமுமாகும். பதுக எனப்படும் பலி சவ எனப்படும் வயதான ஆண் பெண் தெய்வங்களுக்கு உரியது. அஷ்டமங்கலம் கன்னியராகவே இறந்து போனவர்களான கன்னிகா எனப்படுபவர்களுக்கு உரியது. சடங்கு நடத்தும் வீட்டின் முன் தற்காலிகமாகப் பந்தல் இடப்படும். பந்தலில் விதானம் எனப்படும் மேற்கட்டி களிலிருந்து நீண்ட இளந் தென்னங்குருத்து ஓலைகள், வாழைக் குலைகள், இளநீர்க் குலைகள் முதலியன கட்டித் தொங்கவிடப் படும். கமுக மரத்தின் இலைக் கைகளும் கமுகம் பூக்களும் கொண்டு பந்தலின் கம்பங்களை அலங்கரிப்பர். பந்தலில் தனித்த குறிப்பிட்ட ஏழு இடங்களில் வாழை இலைகளிட்டு அவற்றில் பொங்கல், நெல், இளநீர், ஒரு கமுகம் பூக் கொத்து, வெற்றிலை ஆகியவற்றைப் படைப்பர். பூசை நடத்தும் பூசாரி முறைப்படி கூடியுள்ளவர்களின் ஒப்புதலோடு அடுத்து அங்கு முக்கிய பங்கு வகித்து நாட்டியம் ஆடுபவனாகத் தோன்றப் போகின்றவனுடைய அனுமதியையும் பெற்றுக் கலப்படமானது போல் தோற்றுகின்றதொரு மொழியில் திரும்பத் திரும்ப ஒரே மாதிரியான ஒலியினை எழுப்புவான். இந்த உலகத்தில் அரசாண்ட மன்னர்களின் தோற்ற வரலாறாகவும் இந்த உலகத்தில் பிறந்து இறந்த ஆவிகளின் செயல்களை விளக்குவ தாகவும் அந்த ஆவிகளின் நல்லாசியை வேண்டிக் கேட்பதா கவும் எந்த ஆவிகளைத் திருப்திப் படுத்த அந்தச் சடங்கு நிகழ்த்தப்படுகின்றதோ அநத ஆவிகளின் நலத்தை விரும்பிக் கேட்பதாகவும் அவனுடைய உரத்த ஒலி மற்றவர்களால் புரிந்து கொள்ளப்படும். இதனைப் பாடுபவனை அல்லது கதை

சொல்பவனை இடையிடையே உணர்ச்சிகள் ஆட்கொள்ளும். அச்சமயங்களில் அவன் உரக்கக் கூக்குரல் இடுவான் அல்லது அழுத்தமான சைகைகளின் மூலம் தனது உணர்ச்சி பாவத்தை வெளிப்படுத்துவான். இது போலப்பாட்டு ஒலித்தல் தொடர்ந்து மூன்று அல்லது நான்கு மணி நேரம நடைபெறும். அச் சமயம் இடையிடையே பழங்காலத்திய துப்பாக்கியினை வெடித்து வெடியொலி எழுப்புவர். அல்லது பெண்கள் நடுங்கும் குரலில் அழுது ஆரவாரம் செய்வர். பாட்டு ஒலித்தல் முடிவுக்கு வருவதற்கு முன்பு அடிப்பக்கத்தில் ஒரு கெசம் பரப்பளவினதாக உள்ள தட்டில் சிவந்த நிறமுடைய தீட்டிப் பூக்களைக் (*Ixora Coccinea*) குவியலாகப் பந்தலில் மேலே நடுவில் உயர்த்திக் கட்டுவர். அது கமுகம் பாளைகளை இடையே சேர்த்து நல்ல கலைநுட்பமுடைய வடிவமைப்பாகத் தோற்றும்படி கட்டப் பட்டிருக்கும். ஒரு காட்டு விலங்கின் உறுமலை ஒத்த மனிதனின் கொடிய கூக்குரல் அங்குள்ள அனைவரையும் செயலில் ஈடுபடத் தூண்டும் வகையில் திடீரென ஒலிக்கும். குடிசையின் பின்புறம் இருந்து நாட்டியம் ஆடுபவனாக உள்ளவன் என முன்பே குறிப்பிடப்பட்டவன் அரைகுறை ஆடை அணிந்து, தலைமயிர் அவிழ்ந்து புரளக் கண்களை உருட்டி விழித்து முறைத்தபடி, வாயில் நுரை போன்ற ஒன்று தள்ள அங்குத் தோன்றுவான். அங்கு அவன் நிற்பான்; சற்றுத் தொலைவு ஓடுவான்; பாய்ந்து குதிப்பான்; உட்காருவான்; தன் உடலை அப்படியும் இப்படி யாக அசைப்பான்; நாட்டியம் ஆடுவான்; உடுக்கை அடிக்கும் ஓசைக்கு ஏற்பக் காலடியிட்டு லயம்பட ஆடுவான். இவ்வாறு கிட்டத்தட்டப் பத்து மணித் துளிகள் வரை அவன் செயற்படு வான். திடீரென மாடன் தெய்வத்திற்காகப் படையலிடும் குடிசையுள் கத்தியபடி பாயும் அவன், முனைகளில் மணிகள் பொருத்தப்பட்டு அணி செய்யப்பட்ட குலுங்கிக் கலகலக்கும் இரண்டு தடிகளுடன் வெளிப்பட்டு வருவான். கட்டுப்பாட்டுக் கும் ஒழுங்கு முறைக்கும் வசப்படாத எழுச்சியுற்றவனாக அவனு டைய அசைவுகள் அதுவரை அமைதியாக அந்தக் காட்சியினை வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த இளைஞன் ஒருவனைத் தொற்றுநோய்போலப் பற்றிக் கொள்ள அந்த இளைஞன் எழுந்து கைகளை அசைத்து ஆட்டியபடி வெறிகொண்டு

அடியிட்டு ஆடத் தொடங்குவான். இது முதலிலிருந்து ஆடியபடி உள்ளவனை மேலும் எழுச்சியுறச் செய்யும். உடனே அவன் அருகே நிற்கும் ஒருவனை இறுகப் பிடித்துத் தன் கைகளில் உள்ள மணிகளோடு கூடிய தடிகளை அவனிடம் ஒப்படைத்து விட்டு அவனும் ஆடத் தொடங்கி விடுவான். பத்து மணித் துளிகளுக்குள்ளாக அங்கு ஒரு அரை டஜன் ஆடும் சாமியார் களின் ஆட்டம் தொடங்கி விடும். கத்தியும், முக பாவங்களைக் காட்டியும் சுற்றியும் தங்கள் இயல்பான நிலையை மறந்தவர்க ளாக அவர்கள் ஆடுவர். அந்த இடத்தில் முன்பே எரிந்து சாம் பல் பூத்துள்ள அனல் குவியல் எல்லோருடைய கருத்தையும், கவருவதாக இருக்கும். ஆடுபவர்களில் முக்கியமானவன் அந்த அனல் குவியலின் மீது ஆடத் தொடங்கித் தீப்பொறிகளைப் பறக்கச் செய்வதோடு விறகுக் கட்டைகளையும் சிதறச் செய்து கூடியுள்ளவர்களின் கருத்தைக் கவர்வதோடு அவர்களுடைய பாராட்டையும் பெறுவான். வியர்வை வழிய சாம்பல் படிந்தவ னாகப் பரபரப்புடன் தலைவிரி கோலமாகக் களைத்துப் போய் நாட்டியம் ஆடியவர்களில் முக்கிய பேயாட்டக்காரன் அந்தப் பந்தலில், முன்பே குவித்து வைத்துக் கட்டப்பட்டுள்ள சிவந்த மலர்க் குவியலின் அருகே அமர்ந்து அந்த மலர்களை வாரி மலர் மாரி போலத் தன் தலையில் இறைத்துக் கொள் வான். இதில் அவனுக்கு வயதான காணிக்காரர்களும், பக்கத் தில் கூடி நிற்பவர்களும் உதவுவர். ஒரு சிறுவனை அவன் முன்னே கொண்டு வந்து நிறுத்துவர். அவன் அந்தச் சிறுவனை ஒரு பெயர் சொல்லி அழைப்பான். அதுவே அந்தச் சிறுவனுக்கு அப்போதிலிருந்து பெயராகும்படியாக அது அவனுக்குப் பெய ரிடும் நிகழ்ச்சியாக அமைந்துவிடும். முக்கிய ஆட்டக்காரன் அதன்பின் எழுந்து நின்று தெய்வம் ஏறப்பெற்றவன் போலக் காட்சி தருவான். ஒரு நல்ல வயதான சேவலைக் கொண்டு வந்து அதன் கழுத்தினை அறுத்து அதனை ஆட்டக்காரனிடம் தருவர். அவன் தன் இதழ்களை அதன் வெட்டப்பட்ட கழுத் தில் வைத்து இரத்தம் முழுவதையும் ஓசை உண்டாகும்படியாக குடித்து விழுங்குவான். அந்தப் பறவையைப் பிடித்த பிடியினை விடும் முன்பு அவன் மயக்கம் அடைந்தவனைப் போலத் தரை யில் மயங்கி விழுவான். இது அவர்கள் தந்த பலி ஏற்றுக்

கொள்ளப் பட்டதாகவும். படையல் மிகச் சிறப்பாக முடிந்ததாகவும் தெரிவிக்கும் அறிகுறியாகும். அதில் ஆர்வத்தோடு பங்கு கொண்ட அனைவருடைய விருப்பங்களும் நிறைவேற்றப்படும். கூட்டத்தினர் அதன்பின் பலிக்காகப் படைக்கப் பெற்றவற்றை உண்டும் குடித்தும் தீர்த்தபின் கலைந்து செல்வர்.''

வயது வந்த பின்னும் குழந்தைப் பருவத்திலும் இவர்கள் மணம் நடத்துகின்றனர். குழந்தைகளை மணந்து கொண்டவர்களை அது பற்றிக் கேட்டால் அதுவே பாதுகாப்பான மணமுறை என்று கூறுவதோடு வயது வந்த பெண்களை மணந்தால் அவர்கள் சில சமயம் தங்கள் பெற்றோர் வீட்டிற்கு ஓடிவிடுவதாகவும் பெண்களைச் சின்னஞ்சிறு சிறுமிகளாக இருக்கையிலே மணந்து கொண்டால் அவர்கள் கணவன் வீட்டோடு பழகியவர்களாகி விடுகின்றனர் எனவும் விளக்கம் தருவர். மணச் சடங்குக்காகக் குறிக்கப்பட்ட நாளுக்கு ஒரு மாதத்திற்குட்பட்டதாக உள்ள ஒரு நாளில் நான்கு காணிக்காரர்கள் ஒரு சிறுவன் தங்களுடன் வெற்றிலை பாக்கு எடுத்து வர மணமகள் இல்லம் சென்று அதனை அக்குடியிருப்பில் உள்ள குடும்பத்தினருக்கு வழங்குவர். மண நாளன்று காலையில் அனைவரும் மணப் பந்தலில் கூடுவர் மணமகன் அனைவருக்கும் வெற்றிலை பாக்கு வழங்குவான். அவனுடைய உடன்பிறந்தவள் பின்பு மணமகளை அழைத்து வருவாள். மணமகள் அவளுக்கு ஒரு சேலை வழங்க அவள் அதனை உடுத்திக் கொள்வாள். மணமகள், மணமகன், ஒரு சிறுவன் ஆகிய மூவரும் பந்தலின் கீழ ஒரு பாயில் நிற்பர். மணமகன் அப்பொழுது மணமகள் கழுத்தில் மின்னு எனப்படும் தாலியினை அணிவிப்பான். மணமகள் குழந்தையாக இல்லாது வளர்ந்தவளாக இருந்தால் மணமகன் அவள் கழுத்தில் முன் தாலியினைப் பிடித்துக் கொள்ள அவனுடைய உடன் பிறந்தவளே அதனை அவள் கழுத்தில் கட்டி முடிச்சிடுவாள். அதன்பின் மணமக்கள் முன் வாழை இலையினை இட்டு அதில் அவர்களுடைய அன்னைமார் கறியும் சோறும் படைப்பர். அந்த இலையில் உள்ள கறியும் சோற்றில் கொஞ்சத்தை அந்தச் சிறுவன் எடுத்து ஏழுமுறை மணமக்கள் வாயில் இடுவான்.

மணமகனின் இளையோன் அதன்பின் மணமகளுக்கு ஒரு கவளம் சோறு ஊட்டுவான். விருந்துடன் மணச் சடங்குகள் ஒரு முடிவுக்கு வரும். புல்லரிவாள், பித்தளைப் பாத்திரங்கள், கோடரி, தானியம், பருப்பு ஆகியன பரிசமாகத் தரப்படுவனவற்றுள் அடங்கும். மட்டீர் கூற்றுப்படி மூத்தகாணி பின்வருமாறு மனைவியை எப்படி அடக்கி ஆள்வது என்பது பற்றி மணமகனுக்கு அறிவுரை கூறுவான். அவனுடைய அறிவுரைகளைத் தொகுத்துப் பின்வரும் தலைப்புக்களில் அடக்கலாம்:- சொல்லித் திருத்தல், கிள்ளித் திருத்தல், அடித்துத் திருத்தல் ஆகியனவே அவை. அவள் இம்முறைகளுக்கு வழிக்கு வராவிட்டால் அடித்துத் திருத்தல் என்ற இறுதி முறை மேற்கொள்ளப்படும். கைம் பெண்களின் மறுமணத்தின்போது மணமகன் மணமகளுக்கு ஒரு இணை சேலை தந்து அவளுடைய குடும்பத்தைச் சேர்ந்த ஆண் உறுப்பினர்களின் உடன்பாடு பெற்று அவளைத் தன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு போவான்.

ஒருத்தி கருவுற்ற ஏழாம் மாதத்தில் வயிற்றுப் பொங்கல் என அழைக்கப்படும் ஒரு சடங்கினை நடத்துதல் வேண்டும். ஏழு அடுப்புகளில் ஏழு பானைகள் வைத்து அவற்றில் அரிசி இட்டு அது கொதிக்கும் போது அப்பெண் அவற்றை வணங்குவாள். கூடியுள்ள அனைவரும் பொங்கல் உண்பர். "கருவுற்ற சமயத்தில் நடத்தப்படும் சடங்கான வயிற்றுப் பொங்கல் எனப்படுவது சூரியனுக்குப் பொங்கலிட்டுப் படைத்தலாகும். ஒரு பிள்ளையாரைப் பிடித்துத் தக்கதொரு இடத்தில் வைத்தபின் பொங்கல் வைக்கத் தொடங்குவர். அதில் அவர்கள் படையலாக அவல், வறுத்த பொரி, பணியாரம், வாழைப்பழம், இளநீர், தென்னங்குருத்து, கமுகம்பூ ஆகியவற்றை இடுவர். மூத்தகாணி அதன்பின் ஆடத் தொடங்கி மந்திரங்களை உச்சரிப்பான். அந்தப் படையல்களை அவன் சூரியனை நோக்கி ஆட்டிப் படைப்பான். சோற்றில் கொஞ்சத்தை முதல்ல் ஒரு குழந்தைக்கு ஊட்டிய பின் அனைவருக்கும் விருந்திடுவதோடு காட்டில் உறையும் பேய்களுக்கும் படையல் இடுவர்'' என மட்டீர் கூறியுள்ளார்.

காணிக்காரர் சாவுச் சடங்குகள் பற்றி மட்டீர் எழுதியுள்ளதாவது:– "ஒருவன் நோயுற்றால் அத்தகவல் உடனே மூத்த காணிக்குத் தெரிவிக்கப்படும். அவன் நோயுற்றவனை வந்து பார்த்துப் பறைகொட்டிப் பாடி ஆடும் சடங்கினை இருமுறை நிகழ்த்தும்படி ஆணையிடுவான். நோயுற்றவன் நலம்பெற வேண்டி ஓர் இரவு முழுவதும் பறைக் கொட்டும் பாட்டும் ஆட்டமும் வாழ்த்து வழிபாடும் நிகழும். மரவள்ளிக் கிழங்கு மாவு, தேங்காய் முதலியன படையலாக இடப்படும். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு சாதித் தலைவன் பேய் ஏறப் பெற்றவனாக வேறு ஆளாகத் தன்னை மாற்றிக் கொண்டவனாக நோயுற்றவன் பிழைப்பானா அல்லது இறப்பானா எனக் கூறுவான். அவன் இறப்பான் எனக் கருதுவானாகில் ஒரு மந்திரத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லியபடி (இது குடுமி வெட்டு மந்திரம் எனப்படும்) நோயுற்றவன் குடுமியை அறுப்பான். இச்செயல் அவன் இறக்கப்போகின்றான் என்பதற்கான அறிகுறியாகும். அவனுடைய உறவினர்களும் மற்றவர்களும் இதை அறிந்தவுடன் அவனைக் கடைசியாகப் பார்க்க வருவர். ஒருவன் இறந்தபின் இறந்த பிணத்தின் வாயில் கஞ்சா, பச்சரிசி, தேங்காய் ஆகியவற்றை அவன் பிள்ளைகளும் அவனுடைய உடன்பிறந்தவர்கள் பிள்ளைகளும் இடுவர். பிணத்தினைக் குடியிருப்புக்கு அருகே உள்ள ஓர் இடத்தில் மந்திரங்கள் கூறிப் புதைப்பர். சில சமயங்களில் இறந்தவர்களை எரிக்கவும் செய்வர். இறந்தவரை அடக்கம் செய்தபின் அவருடைய உறவினர்கள் குளித்துவிட்டு இல்லம் திரும்புவர். சாவுத்தீட்டு நீங்கும்வரை அவர்கள் தங்கள் நிலத்தில் விளைந்த எதையும் உண்ணமாட்டார்கள். அவ்வாறு உண்டால் பேய்கள் தங்களையோ தங்கள் நிலத்தில் உள்ள பயிர்களையோ அழிக்கும் என நம்புகின்றனர். மூன்றாம் நாள் காட்டினை அழித்துப் பயிர் நிலமாக்கியுள்ள எல்லை ஓரத்தில் ஒரு கொட்டகை இட்டு மூன்றுபடி அரிசியினைப் பொங்கலிட்டு அதனை ஒரு குண்டாவிலோ வாழையிலையிலோ இட்டு அந்தக் குடிசையினுள் வைப்பர். அதன்பின் அனைவரும் குளித்து வீட்டிற்குத் திரும்புவர். ஏழாம் நாள் முன்பு போட்ட கொட்டகையைப் பிரித்துவிட்டுப் புதிதாக ஒரு கொட்டகை அமைத்து மீண்டும் அச்சடங்கு நிகழ்த்தப்படும். தங்கள்

குடியிருப்புக்குத் திரும்பியபின் வீட்டினுள்ளும், வாசலிலும் பசுஞ் சாண நீர் தெளித்து இறுதியாகச் சாவுத் தீட்டிலிருந்து விடுபடு வர். வசதி படைத்தவர்கள் கூடியுள்ள அனைவருக்கும் சோறும் கறியும் விருந்து வைப்பர்." பசுஞ்சாண நீரினை மாவிலைக் கொத்து, பலா இலைக் கொத்து அல்லது கமுகம் பூம்பாளை ஆகியன கொண்டு தெளிப்பர். இறந்தவர்களின் சாம்பலை ஒரு பானை அல்லது வாழை இலையில் சேகரித்து அருகே ஓடும் ஆறு அல்லது ஓடையில் விடுவர். ஆண்டுக்கு ஒருமுறை இறந்த முன்னோர்களின் நினைவாக நிகழ்த்தும் சடங்கில் பொங்க விட்டுப் படைப்பர்.

இருளர், தமிழ்நாட்டு ஏனாதியர், தெலுங்கு ஏனாதியர் ஆகியோரைப் போலவே காணிக்காரரும் தீட்டு உண்டாக்காத வகுப்பாராகக் கருதப்படுகின்றனர். இவர்கள் புலையர், குறவர், வேடர் ஆகியோரைத் தங்களை நெருங்க அனுமதிப்பதில்லை. காட்டுப்பன்றி, மான், முள்ளம்பன்றி, முயல், குரங்கு, கோழி, மறியாடு, வெள்ளாடு, கிளி, புறா, ஆமை, மீன், நண்டு, மயில், புலி (இதன் சுவை குரங்கின் சுவை போல இருக்கும் என்பர்) ஆந்தை, அணில், வயல்எலி, ஆகியவற்றைக் காட்டில் கிடைக்கும் காய்கறிகளுடன் காணிக்காரர் உணவாகக் கொள்கின்றனர். மாட்டு இறைச்சி, காட்டெருமையின் இறைச்சி ஆகியவற்றை இவர்கள் உண்பதில்லை.

காணிக்காரர் சிலர் நெற்றியில் பிறைவடிவ உருவம், புள்ளி ஆகிய இரண்டையும் பச்சை குத்திக் கொண்டுள்ளனர். செங்குத் தான ஒரு கோட்டினை அவற்றிற்குப் பதிலாகப் பச்சைகுத்திக் கொள்வதும் உண்டு. தங்கள் முன்னோர் காட்டு நாராலான ஆடையினை உடுத்தி வந்ததாகவும் தற்பொழுது பருத்தித் துணியால் ஆன கோவணத்தை அதற்குப் பதிலாகத் தாங்கள் அணிவதாகவும் இவர்கள் கூறுகின்றனர். "ஆணும் பெண்ணும் கழுத்தில் நிறையச் சிவப்புப் பாசிமணி மாலைகளையும் சங்கு வளையல்களையும் அணிகின்றனர். இவை பெண்களின் கழுத்திலிருந்து வயிறு வரை கீழே தொங்கும். ஆண்கள் பித் தளை அல்லது வெள்ளியாலான காதுக் கடுக்கன்களை அணி

கின்றனர். பெண்கள் கைகளில் பித்தளை, இரும்பு வளையல் களையும் விரல்களில் மிகுதியாகப் பித்தளை மோதிரங்களையும் அணிகின்றனர். ஆண்கள் ஒரு தோளில் இரண்டு அல்லது மூன்று உட்பைகள் தைக்கப்பட்ட துணிப்பையினைத் தொங்க விட்டுக் கொள்வர். அதில் இவர்கள் விலங்குப் பெட்டி அல்லது வெற்றிலை, புகையிலை, சுண்ணாம்பு ஆகியனவற்றை வைத் திருப்பர். தோளில் அதனோடு கூடப் பிரம்பால் பின்னப்பட்ட கூடை ஒன்றையும் இவர்கள் எடுத்துச் செல்வர். அதில் இவர் கள் அன்றாடம் தேடும் தானியம், கிழங்கு முதலிய உணவுப் பொருள்களை வைத்திருப்பர். இடுப்பு அரைஞாண் கயிற்றில் அல்லது இடைக் கச்சையில் இவர்கள் புல்லரிவாள், கத்தி ஆகியவற்றைத் தொங்கவிட்டுக் கொண்டிருப்பதோடு தோளில் விற்களையும் அம்புகளையும் சுமந்தபடி திரிவர். பல குடியிருப்புக் களிலும் உள்ள காணிக்காரர்கள் ஒன்றாகக் கூட வேண்டிய திருந்தால் அல்லது அனைவரும் ஒன்றாகக் கூடி ஒரு பொதுக் காரியத்தை முன்னிட்டுச் செல்ல வேண்டியிருந்தால் ஒரு பச்சைக் கொடியில் முடிச்சிட்டு ஒருவன் ஒரு காணியிலிருந்து மற்றொரு காணிக்கு அதனை எடுத்துச் செல்வான். இந்த முடிச்சு, அழைப்பு வந்துள்ளது என்பதனை அக்குடியிருப்புக்குத் தெரிவிக்கும் அடையாளமாகும். வேண்டிய அளவு காணிக்காரர் கள் வந்து கூடும்வரை முடிச்சிடப்பட்ட கொடியினை ஒரு காணியிலிருந்து மற்றொரு காணிக்குத் தொடர்ந்து அனுப்பிய படி இருப்பர். மேன்மை தங்கிய கர்சான் பிரபுவும் அவர் மனைவியாரும் வருகை தந்தபோது அவர்களுக்குக் காணிக் காரர்களை அறிமுகப்படுத்திவைக்க நான் இம்முறையைப் பின்பற்றித்தான் இவர்களை ஒன்று திரட்டினேன்'' எனத் திரு ரத்னசாமி அய்யர் எழுதியுள்ளார்.

இந்தக் கட்டுரையில் இடம் பெற்றுள்ள பெரும்பாலான செய்திகளுக்கு நான் மட்டீரினுடைய 'திருவாங்கூரில் இந்தியர் வாழ்க்கை' (Native life in Travancore) என்ற நூலுக்கும், திரு ரத்னசாமி அய்யர் எழுதியுள்ள ஒரு கட்டுரைக்கும்*,

---

* இந்தியன் ரெவியூ, III, *1902*. (Indian Review, III, 1902.)

திரு என். சுப்ரமணி அய்யர் தந்துதவிய குறிப்புக்களுக்கும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

**கணி குருப்பு - Kani Kuruppu**

இவர்கள் கணியன்களின் நாவிதர்.

**கணி ராசு - Kani Räzu**

குறி கூறும் ராசுகள் என்பதனைக் குறிக்கும் பெயர். சில சமயம் பட்ராசுகளும் இப்பெயரால் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் பாடும் பாட்டில் இப்பெயர் இடம் பெற்றுள்ளது. குறி கூறுவோர் என்பதைக் குறிக்கும் கணி வாண்டுலு யெருகலருக் குரிய மற்றும் ஒரு பெயராகும்.

**கணியன் - Kaniyan**

மலபாரில் கணிசன் என எழுதவும் உச்சரிக்கவும்படுகின்ற கணியன் என்ற சொல் சோதிடன் எனப் பொருள்படுகின்ற கணிக என்ற வடமொழிச் சொல்லின் சிதைந்த வடிவமாகும். கணி என்பதே இச்சொல்லின் பண்டை வடிவமாகும். மலையாள நூல்களிலும் தமிழ் ஆவணங்களிலும் கணி என்ற சொல்லே பெருவழக்காக இடம்பெற்றுள்ளது. மரியாதைக்குரிய 'அன்' என்ற விகுதியினைப் பிற்காலத்தில் அதனோடு இணைத்துக் கொண்டனர்.

பணிக்கன், ஆசான் என்ற இரண்டு பட்டப் பெயர்களும் பொதுவாகக் கணியன்களுக்கு உரியனவாக வழக்கில் உள்ளன. பணிக்கன் மலபாரில் பொதுவாக வழக்கில் உள்ள பட்டப் பெயராகும். இது திருவாங்கூரின் வட மாவட்டங்களில் மட்டுமே பயன்படுத்தபபடுகின்றது. பணிக்கர் என்ற சொல் பணி அல்லது வேலை என்ற சொல்லின் அடியாகப் பிறந்த படைப் பணிப் பயிற்சியில் ஈடுபட்டுள்ளவர்களைக் குறிக்க வழங்கும் சொல் லாகும். இன்று இந்தப் பட்டப்பெயரைத் தாங்கியுள்ள குடும்பத் தினரில் பெரும்பாலோர் களரிப் பயிற்சி தரும் ஆசிரியர்களாக ஒரு காலத்தில் விளங்கியவர்களாவர். படைப் பயிற்சிப் பள்ளி

என்பதனைக் குறிக்கும் களரி என்ற சொல்லாலேயே இவர்களுடைய இல்லங்கள் குறிக்கப்படுவது இதனை மேலும் உறுதிப்படுத்தும். கேரளோற்பத்தி நூலும் களரிப் பயிற்சியை இச்சாதிக்குரிய கடமையாகக் குறிப்பிடுகின்றது. வடமொழிச் சொல்லான ஆச்சாரியன் என்பதன் சிதைந்த வடிவமான ஆசான் என்பது திருவாங்கூரின் தென் மாவட்டங்களில் கணியன்களுக்கு உரிய பொதுவான பட்டப்பெயராகும். அனந்த பத்மனாபன், சிவசங்கரன், சங்கிலி என்பது போன்ற சிறப்பான பட்டப் பெயர்களைத் தெற்கே வாழும் சில குடும்பத்தினர் தங்களுக்குரியனவாகக் கொண்டுள்ளனர். இவை அக்குடும்பங்களைச் சிறப்பிக்க அரசர்களால் முன்பு வழங்கப்பட்ட பெயர்களாகும். வடக்கே வாழும் சில கணியன்கள் நம்பிகுருப்பு என்ற குடும்பப் பட்டப்பெயரை உடையவர்களாக உள்ளனர்.

கணியர், தீண்ட என்ற இரண்டு அகமணக்கட்டுப்பாடு உடைய பிரிவுகளாகக் கணியன்கள் பிரிந்துள்ளனர். பின்னவர் குடைகள் செய்வதையும் பேய்ஓட்டுவதையும் தங்கள் தொழிலாகக் கொண்டுள்ளனர்.மற்றப்பிரிவினர் சோதிடர்களாகத் தூய எளிய வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். ஆலங்காட்டில் வாழும் சில குடும்பத்தவர்கள் வடக்கன் கணியன்கள் என அழைக்கப்படுகின்றனர். இவர்கள் திப்பு சுல்தான் படையெடுப்பிற்குச் சற்று முன்னதாக அங்கு வந்து குடியேறியவர்களாகக் கருதப்படுகின்றனர். கணியன்களின் பழமையான பிரிவினைச் சேர்ந்த பெண்கள் இவர்களோடு ஒன்றாக இருந்து உண்பதில்லை. பழைய வழக்கின்படி கணியன்களுள் எட்டு உட்பிரிவுகள் உள்ளதாகத் தெரிய வருகின்றது. அவற்றுள் நான்கு கிரியம்கள் எனவும், எஞ்சிய நான்கு இல்லங்கள் எனவும் அழைக்கப்படுகின்றன. முந்தைய நான்கிற்கும் உரிய பெயர்களாக அண்ணாவிக்கன்னம், கரிவட்டம், குடப்பிள்ளா, நன்னா என்பன வழங்குகின்றன. பம்பர, தச்சழகம், நெடுங்கணம், அய்யர்கால என்பன பின்னவை நான்கிற்கும் உரிய பெயர்களாகும். இந்தப் பிரிவுகளுங்கூட ஒரு காலத்தில் அகமணக் கட்டுப்பாடு உடைய பிரிவுகளாக இருந்து இன்று அத் தன்மையினை இழந்து விட்டன.

கொச்சி மாநிலத்தைச் சேர்ந்த கணியன்கள் பற்றிய குறிப்பில் திரு எல். கே. அனந்த கிருட்டிண அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- "மாநிலத்தின் தென் பகுதியில் வாழும் கணியன்களுக்கும் வட பகுதிகளில் வாழும் களரிப் பணிக்கன்களுக்கும் இடையே சமூகப் படிநிலையில் சிறிது உயர்வு தாழ்வு உள்ளதாகத் தெரிகின்றது. களரிப் பணிக்கன்கள், கணியன்களுக்குக் களரிகள் இல்லையாதலால் தாங்கள் அவர்களைவிடச் சமூகப் படிநிலையில் உயர்ந்தவர்கள் என்ற எண்ணம் உடையவர்களாக உள்ளனர். கணியன்கள் முதலில் குடை செய்யும் தொழிலை மேற்கொண்டவர்களாகவே இருந்து வந்தனர்எனவும் பிற்காலத்திலேயே சோதிடத் தொழிலைப் பின்பற்ற தொடங்கினர் எனவும் களரிப் பணிக்கன்கள் கூறுகின்றனர். இன்று அவர்கள் ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பதோ ஒரு பிரிவினரோடு மற்றப் பிரிவினர் மண உறவு கொள்வதோ இல்லை. கணியன்கள களரிப் பணிக்கர்களைத் தொட்டால் களரிப் பணிக்கர்கள் தீட்டுப்பட்டவர்கள் ஆகின்றனர்." மலபார், கொச்சி, திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் நிலவிய பண்டைய ஊராட்சி அமைப்பு முறைபற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் மேலும் கூறுவதாவது:- "ஒவ்வொரு தரையும் கரையும் (சிற்றூர்கள்) பிராமணர்களின் கீழ் நாயர்களின் பல பிரிவினரும் கூடி வாழும் அமைப்பையும், கம்மாளர், ஈழவர், பாணான்கள், மண்ணன்கள் ஆகிய பிற சாதியார் தனித்தனியே வாழும் பகுதிகளையும் கொண்டனவாக இருந்தன. இத்தகைய அமைப்புடைய ஒவ்வொரு சிற்றூரிலும் களரி வைத்திருக்கும் ஒரு களரிப் பணிக்கனும் இருந்து வந்தான். களரியில் இளைஞர்கள் - சிறப்பாக நாயர் சாதி இளைஞர்கள் - எல்லா வகை விளையாட்டுக்களும் படைக்கலப் பயிற்சிகளும் பயிற்றுவிக்கப்பட்டனர். களரி என்ற அமைப்பு இன்று இல்லையாகிவிட்டது. சில இடங்களில் அவை நடைபெற்று வந்த கட்டிடங்கள் மட்டும் உள்ளன. பணிக்கர்கள் இன்று சோதிடர்களாகவும் பள்ளி ஆசிரியர்களாகவும் தொழில் புரிகின்றனர். கேரளத்தைத் தன்னடிப்படுத்தி மக்களைக் குடியேற்றியவரான பரசுராமன், நாடெங்கிலும் களரிகளை ஏற்படுத்திப் பணிக்கர்களான இவர்களை, நாட்டினை அந்நியர் படையெடுப்பிலிருந்தும் காக்கச் சூத்திர இளைஞர்களுக்கு எல்லா

வகையான வித்தைகளையும் கற்றுத்தரும்படி பணித்தார் (அவ்வித்தைகள் மொத்தம் ஆயிரத்தெட்டு என்பர்.) என இவர்களே கூறுகின்றனர். அப்பொழுது படைவீரர் வகுப்பினராய் முன்னணியிலிருந்த நாயர்களுக்குப் பணிக்கர்கள் பயிற்சி தந்தனர். இதன் நினைவாக மாநிலத்தின் வட பகுதியினையும் மலபாரின் தென் பகுதியினையும் சேர்ந்த களரிப் பணிக்கன்கள் தங்களை நாயர்களின் குருக்கள் எனக் கூறிக் கொள்கின்றனர். நாயர்களும் இவர்களுடைய திருமண நிகழ்ச்சிகள் மற்றச் சடங்குகள் ஆகியவற்றிற்கு வந்திருந்து சிறப்பிக்கின்றனர். நாயர்கள் அவர்களுடைய களரிகளைத் தங்களிடமிருந்து பெற்றதாகப் பணிக்கன்கள் கூறுகின்றனர். இன்றும் சில இடங்களில் அவர்களிடையே இளைஞர்களுக்குப் பலவகை வித்தைகளைக் கற்றுத் தரும் சில பணிக்கன்கள் உள்ளனர் அந்த வித்தைகள் வருமாறு:-

1. பிடிச்சுக் களி:- இருவர் செண்டை முழக்க, மூன்றாவதாக ஒருவன் கச்சை கட்டியவனாக நன்கு ஆடை உடுத்தித், தலையில் தலைப்பாகை அணிந்து, கைகளில் வாளும் கேடயமும் ஏந்திச், செண்டை வாத்திய இசைக்கு இயையப் பலவகைத் தீரச் செயல்களைப் புரிவான். இது வாளேந்தி ஆடும் ஒருவகை ஆட்டம்.

2. பரிசத்தாளம் களி:- இந்த வீர விளையாட்டு நடைபெறும் வீட்டின் முன் பெரிய பந்தல் இடப்படும். இதில் பயிற்சி பெற்ற பதினான்கு வயதுக்கு உட்பட்ட இளைஞர்கள் அங்கு அழைத்து வரப்படுவர். இந்நிகழ்ச்சி இரவில் நடைபெறும். செண்டை, மத்தளம், செங்கல, இலைத்தாளம் ஆகிய இசைக் கருவிகள் இந்நிகழ்ச்சியில் பயன்படுத்தப்படும். (இலைத்தாளம் நடுவில் சற்றுக்குழிந்த வெண்கலத்தாலான வட்டத்தட்டு) ஆசானிடம் பயிற்சி பெற்ற இளைஞர்கள் நிகழ்ச்சிக்குப பிறகு அவர் முன் வந்து வணங்கித் தங்களால் இயன்ற காணிக்கையினைச் செலுத்துவர். ஊர்ப்புறங்களில் சுப நிகழ்ச்சிகள் நடைபெறும் போதெல்லாம் இந்த வீர விளையாட்டுக்கு ஏற்பாடு செய்வர்.

3. கோலடி:- ஏற்றி வைக்கப்பட்ட விளக்கைச் சுற்றித்

தங்கள் கரங்களில் பெருவிரல் கனமும் ஓரடி நீளமும் உள்ள குச்சியை ஏந்தியபடி. பலர் வட்டமாக நிற்பர். அவர்கள் முதலில் மெதுவாகப் பாடத் தொடங்குவர். படிப்படியாகப் பாட்டின் வேகம் அதிகரிக்கும். அக்காலகதிக்கு ஏற்ப ஒவ்வொருவரும் தங்கள் கையில் உள்ள குச்சியால் தனக்கு இருபுறமும் நிற்பவர்களின் குச்சியினைத் தட்டுவர். இதற்கு மிகுந்த நுட்பமும் காலகதியின் உணர்வும் வேண்டப்படுவதோடு பலரோடும் இயையச் செயல்படும் திறனும் அடியிடும் பயிற்சியும் தேவைப்படும். ஆட்டத்தின் வேகம் அதிகரிக்கும்போது பயிற்சியில்லாத புதியவர்கள் பக்கத்திலுள்ளவர்கள் கையில் உள்ள குச்சியால் அடிபட நேரிடும். இந்த நிகழ்ச்சியில் பாடப்படும் பாடல்கள் கடவுளைப் போற்றுவனவாகவோ மக்களை வாழ்த்துவனவாகவோ இருக்கும்.

ஒரு காலத்தில் பிராமணர்களாக இருந்த கணியன்கள், அவர்கள் கூறும் கணிப்புக் காலப்போக்கில் தப்பாகப் பிழைபட்டுப் போய்விடத் தொடங்கத் தங்கள் சிறப்பினைப் படிப்படியே இழந்து பின்னர் சாதியில் தாழ்ந்தவர்களாக வேண்டியதாயிற்று என ஒரு வழக்கு நிலவுகின்றது. இந்த வாய்வழியான வழக்குப் பற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் பின்வருமாறு எழுதுகின்றார்:- “முன்பு ஒரு சமயம் சிவபெருமான் மகனான சுப்பிரமணியனும் அவனுடைய நண்பனும் சோதிடம் கற்றுக் கொண்டிருந்தபோது பக்கத்தில் பலலி சொல்லியதை வைத்துச் சுப்பிரமணியனுடைய அன்னைக்கு ஏதோ தீது நிகழப் போகின்றது என அறிந்தனர். சுப்பிரமணியனுடைய நண்பன் சில மந்திரச் சடங்குகள் நிகழ்த்தி அந்தத் தீங்கினை நிகழாது காத்தான். தன்னிலை மறந்து மயங்கிய நிலையிலிருந்த சுப்பிரமணியனின் அன்னை தூக்கத்திலிருந்து விழிப்பது போலத் தன் சுய நினைவு வரப் பெற்றுத் தன் மகனிடம் நான் காண்பது யார் என்ற பொருளில் ‘காணிய ஆர்’ எனக் கேட்டாள். அதற்கு அவளுடைய மகன், அவள் ஒரு கணியனைக் (சோதிடனை) காண்பதாகப் பதிலிறுத்தான். இன்றும் தங்கள் தொழிலுக்கு உரியனவான குடை, தடி, விபூதி, சோழிப்பை ஆகிய பொருள்கள் சுப்பிரமணியரால் தங்களுக்குத் தரப்பட்டவை எனக்

கணியன்கள் நம்புகின்றனர். இச் சாதியின் தோற்றம் பற்றிய மற்றொரு வழக்கு வரலாறு வருமாறு:- முன்காலத்தில் பாணன்க்ள், வேலன்கள், கணியன்கன் ஆகியோர் மாய வித்தைகளை நடத்துவதைத் தொழிலாகக் கொண்டிருந்தனர். சோதிடம் பிராமணர்களுக்கு மட்டுமே உரிய தொழிலாக இருந்தது. தலைக்களத்துப் பட்டாத்திரிபாடு என்ற புகழ்பெற்ற சோதிடர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அந்நாளில் அவரே மிகப் புகழ்பெற்ற சோதிடராக விளங்கினார். அவருக்கு ஒரு மகன் இருந்தான். அவனுடைய சாதகத்தைக் கணித்த அவர், அவன் நீண்ட நாள் வாழ்வான் என முடிவு செய்திருந்தார். அவருடைய கெட்ட காலம் அவருடைய கணிப்புத் தப்பாகி அவருடைய மகன் இறந்துவிட்டான். தன்னுடைய கணிப்பிலும் கொண்ட முடிவிலும் எப்படித் தவறு நிகழ்ந்தது என்பதனைக் கண்டுகொள்ள முடியாதவரான அவர், தன் மகனின் சாதகத்தைச் சோழ நாட்டில் தன்னைப் போலவே புகழ் பெற்றவராக விளங்கிய ஒரு சோதிடரிடம் எடுத்துச் சென்றார். பட்டாத்திரி தன்னிடம் வந்த காரணத்தைப் புரிந்து கொண்ட சோழ நாட்டுச் சோதிடர், அவருடைய கணிப்பும் வருவதுரைக்கும் திறனும் பலிக்க ஏதேனும் ஒரு தெய்வத்தை வழிபடு தெய்வமாகக் கொண்டால் அதன் உதவியால் அவர் சரியான கணிப்புக்களைச் செய்யலாம் என அவருக்கு அறிவுறுத்தினார். அந்த அறிவுரையின்படி அவர் திருச்சூர் வந்து அங்குள்ள தெய்வத்திற்குச் சில நாள்கள் வழிபாடு நிகழ்த்தினார். அதன்பின் சோதிடத்தில் அவர் பல வியக்கும்படியான கணிப்புக்களைக் கூறவே மலபார், கொச்சி, திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் அவருடைய புகழ் பரவியது. ஆட்சி புரிந்த அரசர்களின் பாராட்டுக்கு உரியவரான அவரைச் சாதகம் எழுதவும், வருங்காலப் பலனைக் கணித்து உரைக்கவும் அரசர்களும் அழைக்கலாயினர். ஒரு நாள் ஒரு பிராமணன் காசியில் இருக்கும் தன் குரு மிகவும் நோயுற்றிருப்பதாகக் கேள்விப்பட்டு, அவரை அவர் இறக்குமுன் தான் எப்படி, எப்பொழுது காண முடியும் எனப் பட்டாத்திரிபாடினைக் கண்டு கேட்டான். பிராமணரான அந்தச் சோதிடர், தன்னிடம் கேள்வி கேட்டவனைத் திருச்சூர் கோயிலின் தெற்குப் பக்கமாகச் சென்றால் கேள்வி கேட்டவன் தன் குருவைக் காண உதவக் கூடிய இரு

வரைச சந்திக்கலாம் என வழிப்படுத்தினார். அந்த இருவரும் உண்மையில் எம தூதர்கள். கேள்வி கேட்டவன் அவர்களைச் சென்று கண்டவுடன் அவர்கள் தங்களைத் தொடும்படியாக அவனிடம் கூறினர். உடனே அவன் தான் தன் குருவின் அருகில் இருப்பதை உணர்ந்தான். அந்தத் தூதர்கள் இருவரும் அவனைத் தங்களிடம் அனுப்பி வைத்தது யாரென விசாரித்தனர். அவன் அவர்களிடம் புகழ்பெற்ற பட்டாத்திரி சோதிடரே அவ்வாறு அனுப்பியவர் எனக் கூற அவர்கள் அந்தச் சோதிடர் சாதியிலிருந்து விலக்கப்பட்டவராவார் எனச் சபித்தனர். இந்தச் சாபம் பட்டாத்திரிபாடுக்கு எதிர்பாராது வரும் கெட்ட செய்தியாக இருக்கவில்லை. அதற்கு முன்பே கோள்களின் தீமை தரும் கூட்டமைப்பு நிகழ இருப்பதைக் கணித்துத் தனக்கு இழிவும் கேடும் வர இருப்பதை அவர் உணர்ந்திருந்தார். தனக்கு வர இருக்கும், தான் எதிர்பார்க்கும் கேட்டிலிருந்து தப்புவதற்காக அவர் தன் வீட்டையும் நண்பர்களையும் பிரிந்து பழூருக்கு அருகே உள்ள ஓர் ஆற்றில் படகில் ஏறிப் பயணம் மேற்கொண்டார். அவர் நள்ளிரவில் ஆற்றின் நடுவே சென்று சேர்ந்தபோது இரவு இருண்டதாக இருந்தது. கடும் புயல் மழையோடு வீசவே ஆற்றில் வெள்ளம் பெருகியது. புதியதொரு இடத்திற்கு அவருடைய படகு சென்று சேரவே கொட்டும் மழையிலும் இருட்டிலும் வழி காண இயலாதபடி துன்புற்றார். தான் கரை சேர்ந்த இடத்தின் அருகே ஒரு வீட்டில் விளக்கு வெளிச்சம் தெரியவே மிகக் களைத்துச் சோர்ந்தவராக அவர் அங்குச் சென்று சேர்ந்தார். அங்கு, அந்த இரவு நடைபெற்ற நிகழ்ச்சிகளிலும் பிரிந்து வந்த குடும்பத்தார் பற்றிய சிந்தனையிலும் தன் நினைவின்றி அந்த வீட்டின் முன் இருந்த திண்ணையில் அவர் படுத்துக் கிடந்தார். அந்தக் குடிசை ஒரு கணியனின்* குடிசை. அன்று அந்தக் குடிசைக்கு உரியவன் தன் மனைவியோடு சண்டையிட்டுக் கொண்டு குடிசையை விட்டு வெளியேற நேர்ந்து போயிருந்தது. தன் கணவன் திரும்பி வரக்கூடும் என ஆவலோடு எதிர்

---

* அந்தக் குடிசை ஒரு தீயனுக்கு உரியது என இந்தக் கதையின் மற்றொரு மாதிரியான வழக்கு வரலாறு கூறுகின்றது.

பார்த்துக்கொண்டிருந்த அவனுடைய மனைவி நள்ளிரவில் கதவினைத் திறந்து பார்த்துத் திண்ணையில் படுத்திருந்த வனைத் தன் கணவன் எனத் தவறாக எண்ணிவிட்டாள். தன் குடும்பத்தைப் பற்றிய சிந்தனையில் மூழ்கிப் போயிருந்த பட்டாத் திரியும் அவளைத் தன்னுடைய மனைவியாகத் தவறாக நினைத் துக் கொண்டு விட்டார். தூக்கத்திலிருந்து விழித்தெழுந்த அந்தப் பிராமணன் தன் அருகே படுத்துக் கிடப்பவள் ஒரு கணியன் சாதிப் பெண் எனத் தெரிந்து கொண்டார். அப்போது நேரத்தைக் கணக்கிட வானில் மீன்களை நிமிர்ந்து நோக்கிய அவர் தான் சாதி விலக்கம் பெறுவதற்குரியதாகக் கணித்து வைத்திருந்த நேரம் அப்போது கூடிவிட்டிருந்ததை உணர்ந்தார். தனக்கு நேர்ந்த இழிவினை விதியின் செயலென ஏற்றுக் கொண்ட அவர் தனது எஞ்சிய வாழ்நாளை அந்தக் கணியன் சாதிப் பெண்ணுடனேயே கழித்தார். அவர் வழியாக அவள் பல பிள்ளைகளைப் பெற்றாள். அவர்களை அவர் தன் தொழி லான சோதிடத்தில் நன்கு பயிற்றுவித்தார். தனது செல்வாக் கால் இந்தச் சமுதாய அமைப்பில் அவர்களுக்குச் சோதிடர்கள் (கணக்கன்கள்) என்ற ஒரு சிறப்பான தனியிடத்தை ஏற்படுத்தித் தந்தார். அவருடைய கட்டளைப்படி அவர் இறந்தபின் அவரு டைய உடலை ஒரு சவப்பெட்டியில் வைத்து அந்த வீட்டின் வாசலில் புதைத்தனர். அந்த இடம் இன்றும் எல்லோராலும் சென்று காண்பதற்குரியதாய் அதன்மீது ஒரு மேடையும் மேலே ஒரு கீற்றுக் கொட்டகையும் அமைக்கப்பட்டு விளங்குகின்றது. அந்த மேடையின் மீது எப்பொழுதும் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருக்கும். அம் மேடையின்முன் இருந்து சாதகம் கணித் தலும் சாதகங்களுக்கான பலன் உரைத்தலும் செய்கின்றனர். அச் செயல்களுக்கு அக்கலையில் வல்லவரான நடநதவைகளையும், நடக்க இருப்பவைகளையும் கூறும் குல முன்னோரான அந்தப் பிராமணனின் ஆவி துணை செய்வதாகக் கூறுகின்றனர். இதற்குச் சான்றாகப் பின்வரும் நிகழ்ச்சியை எடுத்துக் காட்டு வர். புகழ்பெற்ற பிராமணத் துறவியான வில்வமங்கலத்துச் சாமியார் ஒரு சமயம் வயிற்று வலியால் துன்புற்றார். அவர் தன் துன்பத்தைப் போக்கும்படி கிருஷ்ணபரமாத்மாவிடம் வேண்டிக் கொண்டார். அதனால் பலன் ஏதும் ஏற்படவில்லை.

எனவே அவர் தன் நண்பரான பிராமண யோகியார் ஒருவரை அடைந்து தன் குறையினைக் கூறினார். யோகியார் தந்த விபூதியினை உண்ட அவருடைய வயிற்றுவலி நீங்கியது. இதனை அவர் தனது இஷ்ட தெய்வமான கிருஷ்ணனிடம் கூறினார். கிருஷ்ணன் அந்த யோகியாரின் பக்தியில் மகிழ்ந்தவனாக அவர் முன் தோன்றி அவருக்காக விதிக்கப்பட்ட ஒரு பிறவிக்குப் பதிலாக அவர் மூன்று பிறவிகள் எடுக்க வேண்டிவரும் எனக் கூறினான். அந்தப் பிறவிகள் எவை என்பதனைத் தெரிந்து கொள்ள ஆவல் கொண்ட அவர் பட்டாத்திரிபாடுவிடம் சென்று அதுபற்றிக் கேட்டார். பட்டாத்திரிபாடு அவர் முதலில் ஒரு சாரைப் பாம்பாகவும் அடுத்து ஓர் எருதாகவும் மூன்றாவதாக ஒரு துளசிச் செடியாகவும் பிறக்க இருப்பதாகவும் அந்த மூன்று பிறவிகளிலும் தான் அவருடன் இருக்கப் போவதாகவும் கூறினார். இதனைக் கேட்டு மகிழ்ந்தவராக அவர் இல்லம் திரும்பினார். அந்தச் சோதிடரே பின்னர் எருதாகப் பிறந்ததாகவும் அவ்வாறு பிறந்த அவரை அவருடைய குடும்பத்தார் காப்பாற்றி வந்ததாகவும் கூட ஒரு கதை வழங்குகின்றது. இந்த நிகழ்ச்சி எர்ணாக்குளத்திற்குக் கிழக்கே பதினெட்டாவது மைலில் உள்ள பழூரில் நிகழ்ந்ததாகக் கூறுவர். அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பழூர் கணியன்கள் என்ற பெயரில் மலபார், கொச்சி, திருவாங்கூர் ஆகிய பகுதிகளில் சோதிடம் கணித்துச் சொல்வதில் வல்லவர்கள் என்ற புகழோடு வாழ்ந்து வருகின்றனர். இன்றும் எல்லாப் பிரிவுகளைச் சேர்ந்த மக்களும் வருவது அறிய அவர்களை நாடிச் செல்கின்றனர். கொச்சியின் வட பகுதியைச் சேர்ந்த களரிப் பணிக்கன்கள் தங்கள் சாதியின் தோற்றம் பற்றி வேறு மாதிரியானதொரு கதையினைக் கூறுவர். ஒரு காலத்தில், துறவியும் சோதிடனுமான கணிகன் என்ற முனிவர் ஒரு சூத்திரனுக்கு அவனுடைய வருங்காலம் பற்றிக் கூறினார். அவர் இதனைத் தூய்மையற்றதொரு நிலையிலே செய்தமையால் சப்த ரிஷிகளும் அவரைச் சபித்தனர். இதனால் அவருடைய சந்ததியினரான பணிக்கன்கள் பிராமணர்கள் நீங்கலாக மற்றத் தாழந்த சாதியாருக்கு ஆசிரியர்களாகவும், சோதிடர்களாகவும் விளங்கும்படியான விதி ஏற்பட்டது.''

மற்றொரு வழக்கு வரலாற்றுப்படியான செய்திகள் வரு

மாறு:- பட்டாத்திரியின் காலத்திற்கு முன்பே கணியன்கள் இருந்தனர். பின்னர் அவரோடு கொண்ட உறவு காரணமாக அவர்கள் சோதிடக் கலையில் தேர்ச்சியுற்றவர் ஆயினர். தலைக் குளத்துப் பட்டாத்திரியே புகழ்பெற்ற சோதிடர்களுள் மிகத் தொன்மையான காலத்தைச் சேர்ந்தவர். முகூர்த்தப்படவி என்ற நூலின் ஆசிரியரான அவர் கி.பி. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். நெய்யாற்றங்கரைக்குத் தெற்கே வாழும் கணியர்களிடையே தங்கள் முன்னோர் ஒரு கந்தர்வப் பெண்ணோடு மேற்கு மலைப் பகுதியில் வாழ்ந்த பிராமணத் துறவியான கணி ஒருவன் கொண்ட உறவால் தோன்றியவர்கள் என நம்புகின்றனர். அவர்களுடைய பேரன் சோதிடக் கலைக்குரிய தெய்வமான சுப்பிரமணியரை வழிபட்டு, என்றும் பொய்க்காத வாய்மொழி வல்லவராக விளங்கி 'நாழிக' என்ற சிறப்புப் பெற்றிருந்தான். தெற்கத்திய கணியன்கள் சிலர் இன்றும் தங்களை நாழி என அழைத்துக் கொள்கின்றனர். மற்றொரு வழக்கு வரலாறு கூறுவதாவது:- பரமசிவனும் பார்வதியும் மகிழ்ச்சியாக வாழ்க்கை நடத்திக்கொண்டிருக்கையில் அக்கினி, பார்வதியின் மீது பெரும் மோகங்கொண்டவனானான். கடைசியாக ஒரு சமயம் அவர்கள் இருவரும் ஒன்றாக இருக்கும்போது அங்குச் சிவபெருமான் வந்து சேர்ந்தார். அக்கினியைக் காப்பாற்றுவதற்காகப் பார்வதி அவனைத் தன் உடம்பினுள் மறைந்துகொள்ளுமாறு கூறினாள். அவள் உடலில் அக்கினி புகுந்ததும் பார்வதி வெப்பத்தால் மிகுந்த நோய்க்கு உள்ளானாள். தன் மனைவி பார்வதி துன்பத்தில் துவண்டு புரள்வதைக் கண்ட பரமசிவன் அதனால் மனம் வருந்திக் கண்ணீர் சிந்தினார். அந்தக் கண்ணீரில் ஒரு துளி தரையில் விழுந்தது. அது உடனே ஒரு மனிதனாக உருக்கொண்டது. தெய்வத் தன்மை வாய்க்கப் பெற்ற அவன் உடனே பார்வதியின் துன்பத்திற்கான உண்மைக் காரணத்தைக் கண்டு, கொஞ்சம் சாம்பிராணியை வரவழைத்து எரியும் தீப்பந்தம் ஒன்றில் தூவினான். அதிலிருந்து புகை வெளிப்பட்டவுடன் தான் தப்ப வழி கிடைத்ததால் அக்கினி அந்தப் புகையில் மறைந்து பார்வதியின் உடலைவிட்டு வெளியேறினான், உடனே பார்வதியின் துன்பம் நீங்கியது. அவன் செய்த இந்த உதவியைப்

பாராட்டிய பரமசிவன் அவனை வாழ்த்தி அவனும் அவன் சந்ததியினரும் நோய் நீக்கவும் பேய் ஓட்டவும் வருவது உரைக்கவும் ஆன பணிகளை மேற்கொள்ளும்படி அமர்த்தினார்.

மலபாரைச் சேர்ந்த கணியன்களைத் தமிழ்நாட்டில் பள்ளர், பறையர் ஆகிய சாதியாருக்குப் பூசாரிகளாகவும் மருத்துவர்களாகவும் சோதிடர்களாகவும் உள்ள தமிழ்நாட்டைச் சேர்ந்த வள்ளுவன்களோடு தொடர்புபடுத்திக் கூறும் வழக்கும் உள்ளது. மலையாளம் ஆண்டு 350-இல் கேரளத்தை அரசாண்டவரான பெருமாள் ஒருவரால் கிழக்கே இருந்து அழைத்து வரப்பட்ட வள்ளுவன்களோடு இன்றைய கணியன்கள் தொடர்புபடுத்தப்படுகின்றனர். அவ்வாறு அழைத்து வரப்பட்ட வள்ளுவன்களே இன்றைய கணியன்களாக உள்ளனர். அதற்கு முன்பிருந்து கணியன்களாக அங்கே இருந்து வந்தவர்கள் தீண்டாக் கணியன்களாகத் தாழ்ந்த சாதியாராகிவிட்டனர். அவ்வாறு அழைத்து வரப்பட்ட வள்ளுவன்களின் தலைவனான ஒரு யோகியாரிடம் நம்பூத்ரி ஒருவர், பழூரில் தொலைந்து போன ஒரு பொருளைப் பற்றிக் கேட்டதாகவும், அதற்கு அவர் தொலைந்து போன அந்த மோதிரம் நம்பூத்ரிகளுக்கான குளத்தில் ஒரு பொந்தில் வைக்கப்பட்டிருப்பதாகச் சரியாகக் கூறியதாகவும் இதனால் யோகியாரை அங்கேயே நிலையாகத் தங்கி விடும்படி ஏற்பாடு செய்தனர் எனவும் கூறுவர்.

ஆசார நெறிப்படி தங்கள் உடல், உடை ஆகியவற்றின் தூய்மை பேணும் கணியன்களை அவர்களுடைய தூய்மையான தோற்றம், இடுப்பில் உள்ள எழுத்தாணி, விளிம்பில சுற்றிலும் பல சாதகங்கள் தொங்கும் பனையோலைக் குடை, அவர்கள் செலுத்தும் நயமான பணிவான வணக்கம், கேட்கும் கேள்விகளுக்குக் கருத்தூன்றிச் சொல்லும் திறமையான பதில் ஆகியன கொண்டு எளிதாக அடையாளம் கண்டுகொளளலாம். இவர்களில் பெரும்பாலோர் அறிவு நுட்பமும் மலையாளம், வடமொழி ஆகியவற்றில் நல்ல தேர்ச்சியும் வாய்க்கப் பெற்றவர்கள். கையால் தொழில் செய்வதை இழிவாகக் கருதுவதோடு வாழ்க்கை நடத்த பரம்பரைத் தொழிலையே நம்பி

யிருப்பதால் இவர்கள் வாழ்க்கை வளம் வாய்க்கப் பெறாதவர் களாகவே உள்ளனர். மற்ற எல்லாப் பிரிவினரையும் விட பழ்மையில் ஊறிப் போயுள்ள இவர்களுக்கு மேற்கத்திய வழிப் பட்ட கல்விமுறையில் ஆர்வம் சிறிதும் இல்லை. உடை அணி வதில் மலபாருக்குரிய மரபினையேஇவர்கள் பின்பற்றுகின்றனர். ஆண்கள் தங்கள் வேட்டியினைத் தழையத் தொங்க விடாமல் பணிவு தோன்ற இழுத்து இறுக்கியே அணிகின்றனர். கணியன் களிடம் யாரேனும் சோதிடங்கேட்க அவர்களைத் தேடிவரின் அவர்கள் தங்கள் மார்பு, கைகள், நெற்றி ஆகியவற்றில் சிவ னுக்கு உரிய விபூதிச் சின்னத்தை முப்பட்டையாகத் தீட்டிய படி வந்தே சோதிடம் சொல்வர். கணியன்கள் சாதிப் பெண் களின் அணிகள் ஈழவர் அணிகளை ஒத்திருக்கும். மீன், ஊன் ஆகியன இவர்களுக்கு விலக்கப்பட்டன அல்ல. எனினும் பழூர், ஓணக்கூறு போன்ற பல குடும்பத்தினர் இறைச்சியினை முற்றும் விலக்கியவர்களாகவே இருந்து வருகின்றனர். இறைச்சி உண் ணும் குடும்பத்தினரும் இறைச்சியை விலக்கியவர்களான குடும் பத்தினரும் தங்களுக்குள் மண உறவு மேற்கொள்ளவே செய் கின்றனர். ஊன் உணவு உண்ணும் குடும்பத்தைச் சேர்ந்த ஒருத்தி மரக்கறி உணவு உண்ணும் குடும்பத்தில் வாழ்க்கைப்பட்ட வுடன் புலால் உண்ணும் பழக்கத்தைக் கைவிட்டு விட வேண்டும். கணியன்கள் தொழில் சோதிடம் கூறுதலாகும். திருவாங்கூரைப் பற்றிப் பதின்மூன்றாம் நூற்றாண்டு அளவில் விவரித்துள்ள மார்கோ போலோ அதனைச் சோதிடர்கள் மிகுந்த இடம் என அந்தக் காலத்திலேயே குறிப்பிட்டுள்ளார். பதினாறாம் நூற் றாண்டின் தொடக்கத்தில் கணியன்களைப் பற்றி விரிவாக எழுதியுள்ள பர்போசா அவர்களைப் பற்றிக் கூறுவதாவது:-

"இவர்கள் மொழிப் பயிற்சியும், சோதிடப் பயிற்சியும் பெற்ற வர்கள். இவர்களுள் சிலர், மனிதர்கள் பிறந்த நேரத்தைக் கொண்டு அவர்களைப் பற்றிக் கணித்து மதிப்பிடும் ஆற்றலும் மேல் வருவது பற்றிய பலவற்றையும் முன்பே அறிந்து கூறும் திறனும் மிக்கவர்கள். அரசர்களும், பெரிய மனிதர்களும் இவர் களை ஆள் அனுப்பி வரவழைத்துத் தங்கள் அரண்மனை களையும், கேளிக்கைக் கொட்டகைகளையும் விட்டு வெளி யேறித் தோட்டங்களுக்கு வந்து தங்கள் விருப்பம் நிறை

வேறுமா எனக் கேள்வி கேட்கின்றனர். இந்தச் சோதிடர்கள் அவர்கள் கேட்ட கேள்விகளைப் பற்றிச் சில நாள்கள் ஆராய்ந்து பின்னர் திரும்பி வருவர். இவர்கள் சாதியில் தாழ்ந் தவர்கள் ஆகையால் அரண்மனையினுள் நுழையவோ அரசர் களை நெருங்கவோ இயலாது. அரசர்கள் சோதிடம் கேட்கும் போது மட்டும் இவர்களோடு தனித்து இருப்பார். தெய்வ நோக்கு வாய்க்கப் பெற்ற இவர்கள் எங்கே, எப்பொழுது ஒருவருக்கு நன்மையும் தீமையும் நிகழும் எனக் கண்டு அதனை அரசர்களும் பெரிய மனிதர்களும் வணிகர்களும் உணர்ந்து கொள்ளும்படியாகக் கூறுவர். அவ்வாறு இவர்களிடம் நேரமும் இடமும் பற்றிக் கருத்துரை பெற்ற அவர்கள் தங்கள் வாணிபம், பயணம், திருமணம் ஆகியவற்றை மேற்கொள்ளும்போது அந்தக் கருத்துரைப்படி நடந்து பெரிதும் ஆக்கம் பெறுவர்.'' பர்போசாவிற்கு மூன்று நூற்றாண்டுகளுக்குப் பின் கேரளத் தில் பயணம் செய்த புச்சனனும் கணியன்களின் வளமான வாழ் வினைப் பற்றி மேற்கண்டவாறே புகழ்ந்து பாராட்டியுள்ளார். இவர்கள் மிகத் தாழ்ந்த சாதியார் எனக் குறித்துள்ள அவர் ஒரு நம்பூத்ரியை இருபத்தி நான்கடி தூரத்திற்கு உள்ளாக இவர்கள் நெருங்குவார்களாயின் அந்த நம்பூத்ரி தீட்டினைப் போக்கிக் கொள்ளக் குளித்து வழிபாடு செய்ய வேண்டியவ னாவான் எனவும் குறித்துள்ளார். ''கணியன்கள் பஞ்சாங் கத்தை வைத்துள்ளனர். அதன் உதவியினால் அவர்கள் மக் களுச்குச் சடங்குகள் நிகழ்த்துவதற்கான நல்ல நேரத்தையும் விதைப்பதற்கான நேரத்தையும் ஒரு செயலில் இறங்குவதற் கான சுப, அசுப வேளைகளையும் கண்டு கூறுவர். ஒருவன் நோயுற்றாலோ தொல்லைக்கு ஆட்பட்டாலோ பன்னிரண்டு கட்டங்களில் சில மாய வித்தைகள் செய்து எந்த ஆவியின் காரணமாக அத்தீங்கு நிகழ்ந்தது என்றும் அந்த ஆவியினைத் திருப்திபடுத்துவது எப்படி என்றும் கண்டு கூறுவர். சில கணியன்கள் பேய்களை விரட்டும் ஆற்றல் மிக்க மந்திரங்கள் தம்மிடம் உள்ளன எனக் கூறுகின்றனர்'' எனப் புச்சனன் இவர் களைப் பற்றிக் கூறியுள்ளார். அவருக்கு இருபது ஆண்டுகளுக் குப் பின் காப்டன் கொன்னர் குறித்துள்ளதவாது:- ''கணியன் களின் பிரிவினர் சிலர் தாங்கள் மேற்கொண்டுள்ள குறிகூறல்

தொழிலில் புகழ் பெற்றவர்களாக உள்ளனர். கணியன்கள் எல்லாச் செயல்களையும் தொடங்குவதற்கான நல்ல நேரத்தைக் கணித்துக் கூறுவர். இசிப்பு நோய்கள் அனைத்தும் தொல்லை தரும் ஆவிகள் ஏறிக் கொள்வதன் காரணமாக ஏற்படுவதாக நம்புவதால் அவற்றை ஓட்டும் ஆற்றல் கணியன்களின் மந்திர உச்சாடணம் ஒன்றுக்கே உண்டு என நம்புகின்றனர்.''

திருவாங்கூரைச் சேர்ந்தவர்களுடைய சமூக, குடும்பப் பாடுகள் அனைத்திற்கும் நடைமுறையில் வழிகாட்டும் ஊக்க ஆற்றலாய் விளங்குபவர்கள் கணியன்களே. முகமதியர்களும் கிறித்தவர்களும் கூட இவர்கள் வழிகாட்டும் நெறிமுறைகளைப் பின்பற்றி ஊதியம் பெறுகின்றனர். ஒருவன் பிறந்த நாள் தொட்டுச்-பிறக்கும் நேரத்தைச் சாதகம் கணிக்கக் குறிப்பவர்கள் கணியன்களே-சாகும் வரை சிற்றூர்களில் வாழும் சோதிடர் களின் உதவி தேவைப்படுகிறது. வாழ்வில் எதிர்பாராது இன்னல்கள் நிகழ்வதன் காரணத்தை அறிய அவர்களை நாடிச் செல்கின்றனர். அவர்கள் மிகுந்த முன்னெச்சரிக்கையுடன் தரும் பதில்கள அவ்வாறு செல்பவர்களைத் திருப்தியுறச் செய் கின்றன. ''புத்ரோ ன புத்திரி'' என்ற தொடரைப் பையனில்லை பெண்தான், பெண்ணல்ல ஆனால் ஒரு பையன் என்பது போல இரு பொருள்படும்படியாகப் பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா எனக் கேட்கப்படும் கேள்விக்குக் கணி யன்கள் பட்டும்படாததுமாகப் பதிலிறுக்கும் பான்மைக்கு உதாரணமாக அனைவரும் சுட்டிக்காட்டுவர். மலபார் மாவட்டக் கையேட்டில் திரு லோகன் கணியன்கள் பற்றி எழுதியுள்ளதாவது:- ''ஒரு செயலில் ஈடுபடுவதற்கான நல்ல நாளினையும் நேரத்தையும் முன் கூட்டியே சொல்லுதல், சாதகம் எழுதுதல், எதிர் பாராது வரும் இடர்களுக்கான காரணத்தைக் கண்டு கூறுதல், அத்தகைய தீங்குகளிலிருந்து தப்பப் பிராயச்சித்தம் கூறுதல், நோயுற்றவருக்கு மருத்து வராக உதவுதல் என நாள்தோறும் கணியன்கள் உதவி வேண்டப் படுவதால் அவர்களில்லாமல் நடைபெறக்கூடிய ஒரு சிறப்பான நிகழ்ச்சியைக் கூடச் சுட்டிக் காட்டல் இயலாது. பயணம் மேற்கொள்ள, தொழில் தொடங்க, கடன் கொடுக்க, பத்திரம்

எழுத, தலை மழித்துக் கொள்ள என எல்லாவற்றிற்கும் அவர்களிடம் பஞ்சாங்கத்தைப் பார்த்து நல்ல நேரமும் நாளும் கூறும்படி கேட்பர். பிறப்பு, திருமணம், மொட்டையடித்தல், பூணூல் அணிவித்தல், அ,ஆ,இ சொல்லித்தரத் தொடங்குதல் போன்ற நிகழ்ச்சிகளுக்குக் கணியன் உதவி இன்றியமையாதது. குடும்பத்தில் நடைபெறும் சின்னஞ்சிறு செயல் முதற்கொண்டு மிகக் கருத்துடன் நடத்தப்பட வேண்டிய செயல்கள் வரை எல்லாவற்றோடும் கணியன் பணி தொடர்புடையதாக இருப்பதால் இவன் செல்வாக்கும் தகுதியும் அதற்கேற்ப மிக மிக மதிப்புடையனவாகவே உள்ளன. சோதிடன் கணித்துக் கூறும் சொல்லானது தெய்வத்திடமிருந்து பெறப்படும் அசரீரிக்குச் சமமானது எனக் கூறினால் அது மிகைப்படக் கூறியதாகாது. அந்தச் சொற்படி அனைவரும் மனம் திருப்திப்பட்டவர்களாக வாழ்க்கையை வகுத்துக் கொள்ள வேண்டியவர்களாகின்றனர், ஏழைகளான மக்கள். அவன் கூறும் வழிகளைக் கொஞ்சமும் தயக்கம் இன்றிப் பின்பற்றுகின்றனர். அவனுடைய இந்தப் பணிக்குக் குறிப்பிட்ட கட்டணம் ஏதும் வகுக்கப்படவில்லை. ஊர்ப் பக்கங்களில் உள்ள மருத்துவர்களையும ஆசிரியர்களையும் இதில் அவன் ஒத்தவனாக உள்ளான். அவனிடம் சோதிடம் கேட்க வருபவர்கள் வெறுங் கையராக வருதல் அரிது. சோதிடம் சொல்ல எடுத்துக் கொள்ளும் நேரத்திற்கும் கேட்க வருபவர்களின் வசதிக்கும் ஏற்பக் கட்டணம் அமைந்துவிடும். சோதிடன் தன்னலமற்றவனாகவும், பேராசை பிடித்து அலையாதவனாகவும் இருக்கக் கடமைப்பட்டவன் என அத்தொழில் முறைக்கு விதிக்கப்பட்டிருப்பதால் அவன் கட்டணம் செலுத்தாதவர்களை வற்புறுத்துவதும் இல்லை. பொது விழாக்களின்போதும், குடும்பத்தில் சிறப்பான நல நிகழ்ச்சிகள் நடைபெறும் சமயங்களிலும் சோதிடனுக்குத் தரப்பட வேண்டியது இவ்வளவு என வரையறை செய்யப்பட்டுள்ளது. திருமண நிகழ்ச்சிகளும் பயிர் அறுவடையும் மிகுதியும் நடைபெறும் தை முதல் ஆனி முடிய உள்ள காலமே சோதிடன் சுறுசுறுப்பாகச் செயல்பட வேண்டிய காலம். எஞ்சிய மற்ற ஆறு மாதங்களிலும் அவனுக்கு ஏதேனும் பணி வந்து கொண்டே இருக்கும். அவனுக்கு நல்ல வருமானம் ஈட்டித் தருவது ஒருவன் சாதகத்தை எழுதிப் பிறப்பு

முதல் இறப்பு வரையான காலத்தில் நடக்கவுள்ள நிகழ்ச்சிகளையும் இடர் வரவுள்ள சமயங்களையும் அதனை விலக்கச் செய்யப்பட வேண்டிய பிராயச்சித்தங்களையும் வழிபடுவதற்குரிய தெய்வங்களையும் வரையறுத்துத் தரும் ஆயுள் முழுவதற்குமான பலன் கூறுவதாகும். அவன் பிறந்த நேரத்திலான கிரகங்களின் நிலையினையும் அப்போதைக்கப்போது கிரகங்களின் போக்கில் ஏற்படும் மாற்றங்களையும் வைத்து அவனுடைய மனப்போக்கு, நடத்தை ஆகியனவற்றின் இயல்பைக் கூடக் கூறுவர். இத்தகைய கணிப்புக்களுக்கு மிகுந்த உழைப்பும் அதிக நேரமும் செலவழிக்க வேண்டியிருக்கும். இது போல ஆயுட் கால சாதகப் பலன்களைக் கணித்து வைத்துக் கொள்ளாத வசதி மிக்க குடும்பத்தவர்கள் ஒரு சிலரே. இதற்காக அவன் தகுதிக்கு ஏற்பச் சோதிடனுக்கு ஐந்திலிருந்து இருபத்தைந்து ரூபாய் வரையான கட்டணத்தைத் தர யாரும் சலித்துக் கொள்வதில்லை. பையில் சோழிகளும் கையில் பஞ்சாங்கமும் எப்பொழுதும் சோதிடர் வைத்திருக்கும் இரண்டு பொருள்களாம். யாரேனும் சோதிடம் கேட்க அவனிடம் வரின், ஒரு பலகையிலோ பாயிலோ சூரியனைப் பார்த்தபடி அமைதியாகச் சில மந்திரங்களையோ வழிபாட்டுப் பாடல்களையோ முணுமுணுத்தபடி அமர்ந்தவனாகத் தன் சோழிப் பையினைத் திறந்து சோழிகளைத் தரையில் கொட்டுவான். தனது வலக் கையால் அவன் அச்சோழிகளைச் சுற்றிச் சுழற்றியபடி பக்தி சிரத்தையுடன் தன் குருவையும், குல தெய்வத்தையும் தனக்கு அருள் செய்யும் படியாக ஓரிரு பாடல்களால் போற்றி வணங்குவான். பின் அவன் தன் செயலை நிறுத்திவிட்டுத் தான் செய்வது என்ன என விளக்குவான். அவ்வாறு விளக்கிக் கொண்டிருக்கும்போதே அந்தச் சோழிகளின் குவியலிலிருந்து ஒரு கைப்பிடி அளவு சோழிகளை எடுத்துத் தனியே ஒரு பக்கமாக வைப்பான. அவன் முன் சுண்ணாம்பால் தரையில் வரையப்பட்ட பன்னிரண்டு ராசிகளுக்குமான கட்ட அமைப்பு இருக்கும். அந்தக் கட்டங்களில் செயல்படுவதற்கு முன்னதாகக் குவியலில் மேலாக இருக்கும் மூன்று அல்லது ஐந்து சோழிகளைப் பொறுக்கி எடுத்துத் தனக்கு வலப்பக்கமாக வரிசையாக வைப்பான். (என்னிடம் உள்ள ஒரு விவரப்படி மூன்று சோழிகளும் இரண்டு கண்

ணாடிக் கோலிக் குண்டுகளும் அவ்வாறு வைக்கப்படும் எனக் கூறப்பட்டுள்ளது.) அவை கணபதி, சூரியன், வியாழ பகவான், சரசுவதி, சோதிடரின் குரு ஆகியோரைக் குறிப்பனவாகும். அவற்றினுக்கு இரண்டு கைகளாலும் மூன்று தடவை காது களைப் பிடித்தும், தரையினைத் தொட்டும் வணக்கம் செலுத் துவான். அதன் பின் சோழிகளைக் கட்டங்களில் ஒழுங்குபட வைத்து அவற்றை அப்படியும் இப்படியுமாக நகர்த்தியபடி தான் அவ்வாறு நகர்த்துவதற்கான காரணத்தையும் செய்யுட் கள் வாயிலாக ஒப்புவித்துக் கொண்டிருப்பான். இறுதியாக அவன் தன்னை நாடி வந்தவரின் கேள்விகளுக்கு விடை அளித்த பின் மீண்டும் தெய்வமாக வைக்கப்பட்ட சோழிகளுக்கு வணக்கம் செலுத்திய பின் சோதிடம் கூறும் பணியினை முடித்துக் கொள் வான். இது பற்றிய இன்னொரு விவரக் குறிப்பில் கூறப்பட் டுள்ளதாவது:-* "சோதிடன் சோழிப் பையினைத் தரையில் கொட்டி மந்திரங்கள் கூறியபடி சோழிகளைக் கையால் உருட் டியபடி அவற்றுள் பெரியனவாக உள்ளனவற்றைப் பொறுக்கி எடுத்துக் கட்டத்திற்கு வெளியே வலப் பக்க மூலையில் வரிசை யாக அமைப்பான். அவ்வாறு அமைக்கப்படும் ஏழு சோழி களும் ஏழு கிரகங்களைக் குறிப்பனவாகும். அவன் அவற்றிற்குத் தன் நெற்றியையும் தரையையும் மூன்று முறை தொட்டு வணக்கம் செலுத்திய பின் ஒன்பது கிரகங்களும் நிற்கும் நிலை, சோழிகளைக் கட்டத்தில் அமைத்துக் கணித்து அறியப்படும்.

புத்தாண்டு பிறக்கும்போது மலபாரில் நடத்தப்படும் பயிரி டத் தொடங்குதல் தொடர்பான சால் திருவிழாவின்போது, "மாவட்டத்தில் உள்ள ஒவ்வொரு இந்துவின் இல்லத்திற்கும் கணியன் சென்று, வர இருக்கும் பருவம் எப்படிப்பட்டதாக இருக்கும் எனப் பனையோலையில் எழுதிக் கொடுத்து அதற் குரிய அன்பளிப்பாகக் கொஞ்சம் அரிசி, காய்கறி, எண்ணெய் ஆகியனவற்றைப் பெற்றுச் செல்வான். இது விசு பலம் எனக் கூறப்படுகிறது. இது ஒருவருடைய சாதகத்தைச் சூரியன் பூமத்

---

* மலபார் மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Malabar district.)

திய ரேகையைத் தாண்டும் நேரத்தை வைத்துக் கணிக்கப்படும் நேரத்தோடு ஒப்பிட்டுக் கணிக்கப்படுகிறது. கிரகங்களின் நிலையினை வைத்து மழை பெய்யக் கூடிய காலங்கள் பற்றியும் கணித்து அந்த ஓலையில் குறிப்பான். தண்ணீரைத் தேக்கி வைப்பதற்கான பெரிய அணைகளோ குளங்குட்டைகளோ இல்லாத மாவட்டத்தைச் சேர்ந்தவர்களுக்கு இது பெரியதொரு உதவியாக அமைவது இயல்பே."*

சோதிடக் கலை மற்றச் சாதியாராலும் கற்றுத் தொழில் முறையில் மேற்கொள்ளப்படுகிறது எனினும் பழூரைச் சேர்ந்த கணி வீட்டாரே மிகவும் புகழ்பெற்றவர்களாக விளங்குகின்றனர். பழூர் கணியன்களின் சோதிடப் புலமை பற்றிப் பற்பல கதைகள் கூறப்படுகின்றன. அவற்றுள் ஒன்றில் கிரகங்களுள் இருவரான புதனும் சுக்கிரனும் அவ்வூர் கணியன் ஒருவன் வீடு தேடி வந்ததாகவும், அவன் அவர்களை வாசலில் காத்திருக்கும்படி கூறிவிட்டு அருகே இருந்த ஒரு கிணற்றில் சில வழிபாடுகளைச் செய்ய இறங்கியவனாக அவர்களைத் தன் வீட்டு வாயிலில் எப்போதும் காத்திருக்கும்படி செய்து விட்டதாகவும் கூறப்படுகிறது. இதில் அவன் வெற்றி பெற்று விட்டதால் இன்றும் புதனும் சுக்கிரனும் காத்திருக்கும் அந்த வெளி முற்றத்தில் இருந்து கூறப்படும் வருங்காலம் பற்றிய பலன்கள் அப்படியே பலிப்பதாகக் கூறப்படுகிறது.

சோதிடத்தோடுகூடக் கணியன்கள் மாந்திரீகம், பேய் ஒட்டுதல் ஆகியனவற்றையும் மேற்கொள்கின்றனர். இவற்றைத் தீண்டாக் கணியன்களே மேற்கொள்வதற்குரியர். பேயினை இவர்கள் கோலம் துள்ளல் என்ற ஒரு தனிப்பட்ட ஆட்டமுறையில் ஓட்டுகின்றனர். வீட்டில் இருக்கும் ஒருவருக்குப் பேய் பிடித்திருப்பதாகச் சந்தேகப்படுவார்களாயின் கணியன்களின் ஆட்டக் குழுவினர் அந்த இல்லத்திற்கு அழைக்கப்படுவர்.

---

* சென்னை அருங்காட்சியக செய்தி மடல் V, 2, 1906 இல் சி. கருணாகர மேனன் கட்டுரை. (C. Karunakara Menon, Madras Mus. Bull. V, 2. 1906.)

அவர்கள் கந்தர்வன், யக்ஷி, பைரவன், ரக்தேசுவரி முதலிய பேய்களைக் குறிக்கும் முகமுடி அணிந்து தென்னங்குருத்தோலை யினைப் புனைந்தவர்களாகப் பாட்டும் வாத்தியங்களும் முழக் கியபடி கூடியிருப்பவர்களின் நடுவே அமர்ந்திருக்கும் பேய் பிடித்திருப்பவரை நோக்கி விரைந்து சென்று அவரைப் பிடித் திருக்கும் கெட்ட ஆவியினை விரட்டுவர். சாதாரண மருத்துவ முறைகளால் தீர்க்க முடியாத நோய்களைத் தீர்க்கக் 'கால பாசம் தீக்குக' எனப்படும் பேயோட்டும் சடங்கினை நிகழ்த்து வர். இச் சடங்கின்போது இரண்டு கணியன்கள் சிவனும் எம னுமாகப் பாத்திரம் ஏற்று மேடையில் ஏறி நடிக்கும்போது வேறு ஒருவன் சாகாத வரம் பெற்றவனான மார்க்கண்டேயன் வரலாற்றைப் பாட்டாகப் பாடுவான்.

பணிக்கர்கள் சோதிடத்தில் கணித்துச் சொல்வனவற்றை பின்வருமாறு மூன்று பகுதியாகப் பிரிக்கலாம் எனத் திரு எப். பாவ்செட் கூறுகின்றார்:

1. கணிதம் - விண்மீன் குழுக்களின் நிலை.
2. சங்கீடம் - விண்மீன் குழுக்களின் தோற்றம், வால்மீன், எரிமீன், நில அதிர்ச்சி ஆகியன பற்றிய விவரம்.
3. ஓரை - மனிதரின் தலைவிதி பற்றிய விளக்கம்.

"தங்கள் முன்னோர்களின் தொழிலை மேற்கொள்ளும் பணிக்கன்கள் சோதிடம், கணிதம் ஆகியவற்றில் நல்ல புலமை பெற்றிருப்பதோடு வேதமும் கற்றவர்களாக இருத்தல் வேண்டும். உடல் நலம், மன நலம் ஆகியன வாய்க்கப் பெற்றி ருப்பதோடு அவன் உண்மை கூறுபவனாகவும் பொறுமையுடை யவனாகவும் இருத்தல் வேண்டும். தன் குடும்பத்தை நன்கு பேணுவதோடு சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், சுக்கிரன், சனி, இராகு, கேது ஆகிய ஒன்பது கோள்களையும் முறையாக வழிபடும் பழக்கம் உடையவனாயிருத்தல வேண் டும். இறுதியாகக் கூறப்பட்ட இரு கோள்களும் கண்களுக்குப் புலப்படாதனவாயினும் தனித்த வகையில் பணிக்கர்களால் கோள்கள் என வகுக்கப்பட்டுள்ளன. விட்டுணுவால் வெட்டப்

பட்ட ஒரு அசுரனின் உடலின் இரண்டு பகுதிகள் இவை. பணிக்கர்கள் மாயவித்தையிலும் ஈடுபடுகின்றனர். என்னிடம் ஒரு பணிக்கர் எனக்கு அன்பளிப்பாகத் தந்த சில எந்திரங்கள் உள்ளன. தங்கம், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களில் ஏதாவது ஓர் உலோகத்தின் மெல்லிய தகட்டில் இயந்திரங்கள் எழுதப்பட்டு உடம்பில் சேர்த்துக் கட்டிக் கொள்ளப்பட வேண்டும். தங்கத் தகட்டில் எழுதப்படும் எந்திரங்களே ஆற்றல் வாய்ந்தவை. பொதுவாக எந்திரத் தகடுகளை வெள்ளியாலான சத்து எனப்படும் சிறு குழாயிலிட்டு நூலில் கோத்து இடுப்பில் கட்டிக் கொள்வர். ஒருவரே பல எந்திரங்களை ஒரே சமயத்தில் அணிவதும் உண்டு. எந்திரங்களைச் சிலபோது பனையோலை அல்லது காகிதத்திலும் எழுதுவர். ஓர் ஆட்டின் கழுத்திலிருந்து எடுத்த இந்த வகை எந்திரம் ஒன்று என்னிடம் உள்ளது. கைகளிலும் கழுத்திலும் இவற்றைப் பலர் அணிந்திருப்பதையும் காணலாம்.''

எந்திரங்களின் வகைபற்றிய பின்வரும் குறிப்புகளைத் திரு பாவ்செட் தந்துள்ளார்:-

1. அட்சர மாலா:- ஐம்பதொரு எழுத்துக்கள் கொண்டது. இவையே மற்ற எந்திரங்களின் தொடர்பாகப் பயன்படுத்தப்படுபவை. ஒவ்வொரு எழுத்தும் தனிப் பொருள் கொண்டது. எனினும் அவை சொற்களுக்குப் பதிலாகக் கொள்ளப்பட்டவையல்ல. இந்த எந்திரம் தனியே எத்தகைய பயனும் தரும் ஆற்றல் அற்றது எனினும் மற்ற எந்திரங்கள் எழுதப்படும் அதே தகட்டில் இதுவும் எழுதப்பட வேண்டும்.

2. சாலினி:- மாந்திரீகம், பேய்கள் ஆகியவற்றுக்கு எதிராகப் பாதுகாப்பு அளிப்பது. தேவியின் அருளைப் பெற உதவுவது.

3. மாக சூலினி:- பேய்களால் வரும் அனைத்துத் தீமைகளையும் காக்க வல்லது. அப் பேய்களுள் குழந்தைகளைத் தின்னும் புலதினி குறிப்பிடத்தக்கது. பெண்கள் தங்கள் கருச்சிதைவினைத் தவிர்க்க இதனை அணிவர்.

4. கணபதி:- அச்சம், வெட்கம் ஆகியனவற்றைத் தவிர்க்கவும், அறிவினை வளர்க்கவும் அணியப்படுவது.

5. சரசுவதி:- ஒருவர் பேசும்போது அதனைக் கேட்பவரைக் கவர வேண்டுமானால் இதனை அணியலாம். அறிவினையும் வளர்க்க உதவுவது.

6. சந்தான கோபலம்:– இது ஸ்ரீ கிருஷ்ணனை முழுவதுமாகக் குறிப்பது. மலடிகளான பெண்கள் மகப்பேறு வேண்ட இதனை அணிவர். மற்ற எந்திரங்களைப் போலவே இதனையும் தகட்டில் எழுதி அணியலாம் அல்லது கொஞ்சம் வெண்ணெயில் இதனை எழுதி அதனை உண்ணலாம். இவ்வாறு உண்பவர்கள் தொடர்ந்து நாற்பத்தொரு நாள்களுக்கு அதனை உண்பதோடு அச்சமயத்தில் உடல் உறவு கொள்வதையும் தவிர்க்க வேண்டும். அவளுக்கு வெண்ணையில் எந்திரத்தை எழுதித் தரும் பணிக்கரும் அப்போது உடல்உறவு கொள்ளாதவராக விரதம் காக்க வேண்டும்.

7. நவ்வ:- விபூதியினை ஒரு துணியில் பரப்பி அதில் எந்திரத்தை எழுதிச் சுருட்டி இடுப்பைச் சுற்றி அத்துணியினை அணிந்து கொள்வர். இது பெண்களின் மகப்பேறு வேதனையைக் குறைக்கும்.

8. அசுவருத:- (குதிரை ஏறுதல்) இதனை அணிபவர் நெடுந்தொலைவு எத்தகைய துன்பமும் அடையாது குதிரையில் பயணம் செய்யலாம். ஒரு முரட்டுக் குதிரையின் கழுத்தில் இதனைக் கட்டுவதால் அதனை வழிக்குக் கொண்டு வரலாம். கால்நடைகளை நோயிலிருந்து காக்கவும் இது பயன்படுகிறது.

"இத்தகைய நலம் பயப்பனவான எந்திரங்களை அவற்றிற்கு முதற்கண் செய்ய வேண்டிய தாந்திரிகச் சடங்குகளை நடத்தி அணியாவிட்டால் அவை பயனற்றன ஆகிவிடும். அத்தகைய சடங்குகள் பணிக்கர்கள் பேணிக் காத்துவரும் இரகசியமாகும்" எனத் திரு பாவ்செட் விளக்கியுள்ளார்.

கணியன்களில் பெரும்பாலோர் முன்பு சிற்றூர்களில் பள்ளி ஆசிரியர்களாக இருந்துள்ளனர். திண்ணைப் பள்ளிக்கூடக் கல்வி பயிற்று முறை கைவிடப்பட்ட காரணத்தால் இத்தகைய ஆசிரியர்களின் எண்ணிக்கை வரவரக் குறைந்து வருகின்றது. இவர்களுள் சிலர் நல்ல மருத்துவர்களாக உள்ளனர். கல்வி அறிவு பெறாதவர்கள் ஓலைக்குடைகள் செய்யும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். பெண்களுக்கு இது ஏற்றதொரு கைத்தொழிலாக அமைந்துள்ளது. வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் படும் குடைகளின் போட்டி காரணமாக இக் கைத்தொழிலும் நசிந்து வருகின்றது.

கணியன்கள் சூரியன், மற்றக்கோள்கள், சந்திரன், கணேசன், சுப்பிரமணியன், விட்டுணு, சிவன், பகவதி ஆகிய தெய்வங்களை வழிபடுகின்றனர். வாரத்தின் ஒவ்வொரு கிழமை யின் போதும் அந்தக் கிழமையின் ஆட்சிக்குரியதாகக் கருதப் படும் கோள் சிறப்பாக வழிபடப்படும். கணியன் ஒருவன் சோதி டத்தில் தேர்ச்சி பெற்றுச் சோதிடம் கூறத் தொடங்கிய நாள் முதல் அடுத்த மூன்று வாரங்களாவது இந்த வழிபாட்டினைத் தொடர்ந்து செய்தல் வேண்டும்.

பிரிட்டனின் ஆளுகையில் உள்ள மலபாரில் கணியன்கள் தொடர்பான சமூகப் பிரச்சினைகள் அனைத்திலும் முடிவு கூறும் அதிகாரம் முன்பு குறிப்பிட்ட யோகியாரிடமே உள்ளது. கொச்சியிலும் வட திருவாங்கூரிலும் பழூர் வீட்டினைச் சேர்ந்த தலைவனே இந்தப் பொறுப்புக்கு உரியவன். தென் திருவாங்கூரைச் சேர்ந்த கணியன்களின் சமூகத் தலைவன் திருவனந்தபுரத்தில் உள்ள மணக்காட்டில் வாழும் சங்கிலி எனப்படும் மூத்த கணியன் ஆவான். நடைமுறையில் கண் ணாள்மர் எனப்படும் வழிகாட்டும் குருக்கள் யாருக்கும் கட்டுப் பட வேண்டாதவர்களாக உள்ளனர். இந்த கண்ணாள்மர் மிகவும் மதிக்கப்படுவதோடு ஒவ்வொரு கணியன் குடும்பத்தின ராலும் விழாக்களின்போது காணிக்கை தந்து சிறப்புச் செய்யப் படுகின்றனர். இவர்கள் மற்றப் பெரியவர்களோடு ஒன்றாகச் சபையில் அமர்ந்து பிறனில் விழைவு, தாழ்ந்த சாதியாரோடு

உறவு போன்ற பிற குற்றங்களை விசாரித்துத் தண்டனை வழங்குகின்றனர்.

ஒரு சிறுமி பூப்பு அடையுமுன் தாலி கட்டுச் சடங்கினையும் பூப்படைந்த பின் செய்வதான சம்பந்தம் சடங்கினையும் கணி யன்கள் மேற்கொள்கின்றனர். தந்தை வழி உடமை உரிமை அடையும் இவர்களுடைய குடும்பத்தில் மூத்தவர்களே குடும்பத்து முன்னோர் உடமைகளை மேற்பார்க்கின்றனர். ஒருத்தி உடன் பிறந்த பலரைக் கணவன்களாக மணந்து வாழும் வழக்கு பழங்காலத்தில் இவர்களிடையே நிலவியதாகக் கூறப்படுகிறது. "பாண்டவர்களைப் போல' தங்களுள்ளேயும் உடன்பிறந்தவர் கள் பொதுவாக ஒருத்தியை மனைவியாக வைத்து வாழ்வதாக இவர்கள் பெருமையோடு கூறிக் கொள்வர். இன்றும் அம் மணமுறை சிலரால் மேற்கொள்ளப்படுகின்றது" எனத் திரு லோகன் குறிப்பிட்டுள்ளார். கைம்பெண்கள் மறுமணம செய்து கொள்ளக் கணியன்களிடையே தடையேதும் இல்லை.

பணிக்கன்களிடையே உள்ளதான, ஒருத்தி உடன்பிறந்தார் பலரை மணக்கும் பழக்கம் பற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் கூறுவது வருமாறு:- "கணியன்களிடையேயும் பணிக் கன்களிடையேயும் ஒருத்தி பலரைக் கணவராகக் கொள்ளும் பழக்கம் பெரு வழக்காயுள்ளது. ஒரு பெண்ணை உடன்பிறந்த வர்கள் பலர் தங்களுக்குப் பொதுவாக மனைவியாக்கிக் கொள்ள வேண்டுமானால் அந்த உடன்பிறந்தவர்களுள் மூத்தவன் மண மகள் இல்லம் சென்று அவளுக்கு ஒரு சேலையினை அளிப்பான். மறுநாள் அவளையும் அவள் பெற்றோரையும் உறவினர் களையும் தன் இல்லம் அழைத்துச் சென்று அவர்களுக்கு விருந்தளிப்பான். அந்தப் பெண்ணையும், அவளை மணக்க உள்ள உடன்பிறந்தவர்கள் அனைவரையும் ஒன்றாக உட்கார வைத்த பின் அவர்களுக்கு இனிப்பு வழங்கப்படும். இதுவே, அவள் அவர்கள் அனைவருக்கும் மனைவியாகிவிட்டதை உறுதிப்படுத்தும் சடங்காகும். களரிமூப்பன் (நாயர் - சாதி ஊர்த் தலைவன்) அவள் அவர்களுக்கு மனைவியாகிவிட்டதை முறையாக அறிவிப்பான். அதன்பின் கூடியுள்ள உறவினர்கள்

விடைபெற்றுச் செல்வர். மணமகன்களுள் மூத்தவனையும் மண மகளையும் 'விருந்துஊண்' எனப்படும் நல்ல விருந்து தர மண மகள் வீட்டார் அழைத்துச்செல்வர். அங்கு அவர்கள் சில நாள் தங்கியிருந்தபின் மணமகன் இல்லம் திரும்புவர். இதே போன்று மணமகளின் மற்றக் கணவன்மார் மணமகளோடு அவள் இல்லத்திற்கு ஒவ்வொருவராக அழைத்துச் செல்லப்பட்டு விருந்தளிக்கப்படுவர். உடன்பிறந்தவர்கள் அனைவரும் ஒன்றாக ஒரே வீட்டில் தொடர்ந்து வாழப் பொருள்வளம் இடம் தராது ஆகையால் அவர்கள் சோதிடம் கூறிப் பிழைப்பை நடத்த ஊர் ஊராகச் செல்வர். ஒவ்வொரு மாதத்திலும் ஒரு சில நாள்களே ஒவ்வொருவனும் வீட்டிலிருப்பான்.எனவே உடன்பிறந்த பலரை மணந்துகொண்ட ஒருத்தி ஒரு சமயத்தில் ஒருவனோடு மட்டுமே குடும்பம் நடத்தும்படியாக ஆகின்றது. அவர்கள் பலரும் ஒரு சேர சில வாரங்கள் வீட்டில் தங்கியிருக்க நேரும் சமயங்களில் தங்கள் தாயாரின் அறிவுரைப்படி முறைவைத்துக் கொண்டு அவளோடு உடல் உறவு கொள்வர்.

தங்கள் சடங்குகள் பலவற்றிலும் கணியன்கள் உயர்சாதி இந்துக்களின் நெறியினையே பின்பற்றுகின்றனர். குழந்தைக்குப் பெயரிடுதல், சோறு ஊட்டுதல், குடுமி களைதல் ஆகிய சடங்கு களோடு இட்டலுழிக எனப்படும் பேயோட்டும் சடங்கினையும் குழந்தை பிறந்த ஏழாம் அல்லது ஒன்பதாம் நாள் நிகழ்த்து கின்றனர். கணியன் ஒருவனுக்கு வயது ஏழாகும்போது அவனுடைய கல்வி தொடங்கப்படுகின்றது. பதினாறாம் வயதில் மேல் சாதியாருடைய உபநயனம் சடங்கினை ஒத்ததொரு சடங்கு நடத்தப்படுகிறது. அதன்பின் நாற்பத்தியொரு நாள்கள் சென்றபின் கண்ணாள்மர் இளங் கணியனைச் சோதிடம், மாந் திரிகம் ஆகிய தொழில் தொடர்பான அறிமுக அறிவுரையினைத் தருகின்றனர். குலதெய்வமான சுப்பிரமணியரை வணங்கிய பின ஊன் உண்டலையும் மதுப் பருகுவதனையும் அவன் இச் சடங்கு தொடர்பாகக் கைவிட வேண்டியவன் ஆகின்றான். இந்தச் சடங்கே அவனுடைய பிரமச்சரிய வாழ்க்கை எனப்படும் சாமவர்த்தன வாழக்கைப் பருவம் முடிவதனைக் குறிப்ப தாகும். இச்சடங்கு நடத்தி முடிக்கப்படும்முன் ஒருவன் மணம் செய்து கொள்ள இயலாது.

இவர்களுடைய சமயநெறி பற்றித் திரு அனந்த கிருட்டிண அய்யர் எழுதுவது வருமாறு:- "களரிப் பணிக்கன்களும், கணி யன்களும் பெரிதும் சைவ சமய நெறியினையே மேற்கொண் டுள்ளனர். எனினும் இவர்கள் விட்டுணுவை வழிபட மறுப் பேதும் தெரிவிப்பதில்லை. இவர்களுடைய களரி நாற்பத்து இரண்டு அடி நீளம் உள்ளதெனவும், அதில் நாற்பத்து இரண்டு தெய்வ உருவங்கள் இடம் பெற்றிருக்கும் எனவும் கூறுவர். அவற்றுள் சுப்பிரமணியர், சாஸ்தா, கணபதி, வீரபத்ரர், நரசிம் மர், அஷ்ட பைரவர், அனுமான், பத்ரகாளி ஆகியன குறிப் பிடத்தக்க தெய்வங்களாகும். நான் நேரில் சென்று கண்ட களரிகள் சிலவற்றில் இத் தெய்வங்களின் உலோகச் சிலைகளும் கற்சிலைகளும் இடம்பெற்றிருக்கக் கண்டேன். ஒவ்வொரு நாள் மாலையிலும் அவற்றின்முன் வழிபாட்டுக்காக விளக்கு ஏற்றி வைக்கப்படும். கார்த்திகை மாதம் முதல் தேதி முதல் தை மாதம் பத்தாம் தேதி வரையான நாற்பது நாள்களும் பணிக்கர்கள் குடும்பத்தில் பெரியவர் ஒருவர் அதிகாலையில் குளித்த பின் எல்லாத் தெய்வங்களுக்கும் பொங்கல், பழம், தேங்காய் ஆகியன படைத்துப் பூசை செய்வார். மண்டல பூசையின் இறுதி நாளான நாற்பதாம் நாள் களரியில் உள்ள ஒவ்வொரு தெய்வத்திற்கும் தனித்தனியே விரிவான பூசை நிகழ்த்தப்படும். இது அன்று சூரியன் தோன்றும் நேரம் தொடங்கி மறுநாள் காலை வரை தொடர்ந்து நிகழும். அப் போது பொங்கல், வறுத்த அரிசி, ஆடு, கோழி ஆகியன தெய் வங்களுக்குப் பலியாகத் தரப்படும். இது ஆண்டுக்கு ஒருமுறை நிகழ்த்தப்படும் பெரிய அளவிலான பூசையாகும். மேற்கூறிய தெய்வங்களோடு வேறு சில தெய்வங்களிடமும் இவர்கள் சிறப்பான பற்றுடையவர்களாக வழிபாடு செய்கின்றனர். சான்றாகச் சோதிடம் பலிப்பதற்காகச் சுப்பிரமணியரை வழி படுவர். மகப்பேற்றுக்கும், செல்வ வளத்திற்கும் சாஸ்தாவை வழிபடுவர். அத்தோடு இவர்கள் பாலா, திரிபுரா, மதாங்கி, அம்பிகா, துர்க்கை, பத்ரகாளி எனச் சக்தியினை அவளுடைய பல்வேறு வடிவங்களிலும் வழிபடுவர். மேலும் சோதிடக் கலையைக் கற்றுத் தேர்ந்த இந்தச் சாதியைச் சேர்ந்த குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் காலையில் குளித்தபின ஏழு

கோள்களுக்கும் வழிபாடு நிகழ்த்துவர். இவர்கள் மல்லன் முண்டியன், முனி, ஆயுத வடுகன் ஆகிய சிறு தெய்வங்களையும் வழிபடுகின்றனர். இவற்றுள் முதல் மூன்றும் கால்நடைகள் நலத்திற்காக வழிபடப்படும் தெய்வங்களாம். இறுதியில் உள்ள தெய்வம் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி பெறும் பயிற்சிக்காக வழிபாடு செய்யப்படுகின்றது. இத்தகைய தெய் வங்களை வீட்டு எல்லையில் உள்ள நிழல் தரும் மரங்களின் கீழ் கற்களில் எழுந்தருளச்செய்து வழிபடுவர். ஆடி, ஐப்பசி, தை மாதங்களில் அமாவாசை நாளில் முன்னோர்களின் ஆவிக்கு வழிபாடு நடத்துவர். களரிப் பணிக்கன்கள் இறந்துபோன பெண்பாலாரான முன்னோர்களின் ஆவிக்கு விருந்து கொடுக்கும் சடங்கு ஒன்றினை நடத்துவர். அவர்கள் குடும்பத்தில் திருமணம் நடைபெறும் சமயத்தில் மண நாளுக்குச் சில நாள்கள் முன்னர் இது நடத்தப்படும். மணமகளின் வருங்காலக் குடும்ப வாழ்க்கை இனிதே நடைபெற அம் முன்னோர்களின் ஆசியினை வேண்டி இது நிகழ்த்தப்படு வதாகலாம். பிராமணர்கள் தங்கள் இல்லங்களில் நடத்தும் சுமங்கலிப் பிராத்தனையை (இறந்து போன கன்னியர், மண மான பெண்கள் ஆகியோரின் ஆவிக்காகத் தரப்படும் விருந்து) ஒத்தது இது எனலாம். ஊருக்குள் பெரியம்மை, காலரா முதலிய தொற்று நோய்கள் பரவியுள்ள சமயத்தில் மாரியம்மன், பத்ரகாளி ஆகிய தெய்வங்களுக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்த்தி அத் தெய்வங்களின் கோபத்தைத் தணிவிப்பர். அப் போது அத்தெய்வங்களின் பூசாரிகள் வருவது உரைக்கும் 'வெளிச்சப்பாடு' வாக மாறி எப்போது எப்படி அந்தத் தொற்று நோய்கள் அகலத் தொடங்கும் என நல்வாக்கு அருள்வார்."

கணியன்கள் இறந்தவர்களைப் புதைக்கும் பழக்கத்தையே முன்பு மேற்கொண்டிருந்தனர். எனினும் இப்பொழுது சிறு குழந்தைகளைத் தவிர மற்றவர்களை இடுகாட்டுக்கு அருகில் உள்ள ஒரு பகுதியில் எரிக்கும் பழக்கத்தையே மேற் கொண்டுள்ளனர். எரிக்கப்பட்ட பிணத்தின் சாம்பலை நான் காம் நாள் திரட்டி ஆற்றில் அல்லது குளத்தில் விடுவர். இறந்த

வரின் நினைவாக ஆண்டுக்கு ஒருமுறை சோறு படைப்பதோடு ஒவ்வொரு மாதமும் அமாவாசையின்போது நீர்ப்பலி தருவர்.

பொதுவன்கள் எனப்படும் கணி குருப்புகள் கணியன்களுக்குரிய நாவிதர் ஆவர். கணியன்களுடைய திருமணச் சடங்குகள், சாவுச் சடங்குகள் ஆகியவற்றின்போது முன்னின்று உதவும் பொறுப்பு பொதுவன்களுடையதாகும். தீட்டுக்கு உள்ளான கணியன்கள் இல்லத்தில் இவர்கள் நீர் தெளித்த பின்பே தீட்டுக்குள்ளான குடும்பத்தினர் தீட்டிலிருந்து விடுபட்டவர்களாவர். நாயர்களுக்கும் மாரான்களுக்கும் இடையே உள்ள உறவைப் போன்றதே பொதுவன்களுக்கும் கணியன்களுக்கும் இடையே உள்ள உறவு. பொதுவன்கள் தீண்டாக் கணியன்களுக்கு மழிக்கும் பணி செய்வதில்லை.

கணியன்கள் பிராமணர்களுக்கும் சத்திரியர்களுக்கும் அப்பால் இருபத்தினான்கு அடி தூரத்திலேயும், சூத்திரர்களுக்கு அப்பால் அதில் பாதியளவு தூரத்திலேயும் நிற்கவேண்டும் என்ற விதி உள்ளது எனக் கூறப்படுகிறது. தீண்டாக் கணியன்கள் முப்பத்தாறு அடி தூரத்திலும் பதினெட்டு அடி தூரத்திலும் தீட்டு ஏற்படுத்தாதபடி நின்றுவிடவேண்டும். திருவனந்தபுரத்திலும் அதற்குக் தெற்கே உள்ள பகுதிகளிலும் இந்தத் தடை அப்படியே முழுவதுமாகப் பின்பற்றப்படுவதில்லை. திருமண நிகழ்ச்சிகளின்போது நாயர்கள் சோதிடர்களான கணியன்களை நெருங்கி நின்று அவர்களுக்குச் சில அணாக்களையும் வெற்றிலை பாக்கினையும் தங்கள் அன்பளிப்பாகத் தரும் பழக்கம் உள்ளதெனவும் அப்போது கணியன்களை நெருங்கி நிற்கும் நாயர் தீட்டுக்கு உள்ளாவதில்லை என்றும் திரு அனந்தகிருட்டிண அய்யர் குறிப்பிட்டுள்ளார். "திருமணத்தின்போது நாயர்கள் கிட்டத்தட்டக் கைகளைத் தொட்டபடிதானே தட்சணை தருகின்றார்கள்" என்ற மலையாளப் பழமொழியும் இப் பழக்கத்தினைக் குறித்து வழங்குவதேயாகும். கணியன்கள் பிராமணர்களுக்கு உரிய கோயில்களினுள் நுழையக் கூடாது. மத்திய திருவாங்கூரிலுள்ள சில

ஊர்களைத் தவிர மற்ற இடங்களில் இவர்கள் ஈழவர்களிடமிருந்து உணவு பெற்று உண்பதில்லை. தீண்டாக் கணியன்களிடமிருந்து உணவு பெற்று உண்பது எல்லாப் பகுதிகளிலும் விலக்கப்பட்டதாக உள்ளது. கணியன்கள் கம்மாளர்களிடமிருந்து இனிப்புப் பணியாரங்களைப் பெற்றுக் கொள்ளத் தடையேதுமில்லை.

கணியன்கள் சட்டத்தை மதித்து நடக்கும் சமூகத்தவராக இருப்பதோடுகூட மருத்துவம், சோதிடம், பேயோட்டுதல் ஆகிய தங்கள் குலத் தொழிலோடு ஆங்காங்கே உழவுத் தொழிலையும் உடன் மேற்கொண்டுள்ளனர். இவர்கள் இந்துக்களிடையே போலவே முகமதியர்கள், கிறித்தவர்கள் ஆகியோரிடையேயும் தொழில்முறையில் செல்வாக்கு உடையவர்களாக உள்ளனர்.*

காலஞ்சென்ற திரு போக்சன் அரசாங்க வானியலாளராக இருந்தபோது முற்பகல் பத்து மணி முதல் மாலை ஐந்து மணி வரை ஓர் இந்திய வானியலாளர் தனக்கு உதவியாளராக இருந்ததாகவும் மாலை ஐந்து மணி முதல் முற்பகல் பத்து மணி வரை ஒரு சோதிடர் உதவியாளராக இருந்ததாகவும் கூறுவார்.

### கன்னட – Kannada

அண்மைக் காலக் கணக்கெடுப்புகளின்போது அகசர், பேடர், தேவாங்கர், ஹொலையர், கொறச்சர், கும்பரர், சாமகாரர், ராச்சிவெர் முதலிய பல வகுப்பார் மொழி அடிப்படையிலும் வட்டார அடிப்படையிலும் தங்களைக் கன்னடியர் எனப் பதிந்துள்ளனர்.

### கன்னப் புலையர் – Kanna Pulayan

மறைத்திரு டபிள்யூ ஜெ. ரிச்சார்ட்ஸ் அவர்கள் விளக்கியுள்ளபடி† திருவாங்கூரைச் சேர்ந்த புலையர் தண்டப் புலையர்

---

* இந்த விவரங்கள் திரு எஸ். சுப்பிரமணி அய்யர் எழுதிய கட்டுரையிலிருந்து திரட்டப்பட்டவை ஆகும்.

† இந்தியத் தொல்லியல், IX, 1880. (Ind. Ant. IX, 1880.)

பெண்களைவிட சிறந்ததான நன்கு தைக்கப்பட்ட ஆடைகளை அணிகின்றனர்.

**கணக்கு – Kannaku**

திருவாங்கூரில் உள்ள நாஞ்சில் நாட்டு வேளாளர் தங்கள் பெயருக்கு முன் சேர்த்துக் கொள்ளும் அடைமொழி.

**கன்னான் – Kannān**

கம்மாளர்களின் ஓர் உட்பிரிவினர். பித்தளையில் பணி புரிவோர்.

**கன்னடியர் – Kannadian**

"மைசூர் மாநிலத்திலிருந்து வந்தேறிக் குடியமர்ந்தவர்கள் கன்னடியர். இன்று இவர்கள் பல்வேறு மாவட்டங்களிலும் பல்வேறு தொழிலை மேற்கொண்டவர்களாக இருந்தாலும் போர்ப்படையில் பணியாற்றுவதே இவர்களுடைய பரம்பரைத் தொழிலாக இருந்ததாகக் கூறப்படுகிறது. இவர்கள் வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு, செங்கல்பட்டு மாவட்டங்களில் கால்நடை வளர்ப்பதை வழக்கமான தொழிலாகவும் தென் மாவட்டங்களில் சிறு வணிகத்தைத் தொழிலாகவும் கொண் டுள்ளனர். பெரும்பாலோர் லிங்காயிதர்களாக உள்ளனர் எனினும் வைணவ நெறியினைப் பின்பற்றுபவர்களும் இவர் களிடையே உள்ளனர்" எனக் கன்னடியர்களைப் பற்றி வட ஆர்க்காடு மாவட்டக் கையேட்டில் தொகுத்துக் கூறப்பட் டுள்ளது. 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "இவர்கள் மைசூர் மாநிலத்தில் கௌலியர் என அழைக்கப் படுகின்றனர். இவர்களுடைய திருமணத்தின்போது திருமண மான ஐந்து பெண்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர்களைக் குளிக்கச்செய்து, திருமணச் சடங்குகள் ஒவ்வொன்றையும் நிகழ்த்தும்போது அவர்கள் மட்டுமே மணமக்களைத் தொடவும் சமையல் பணிகளில் ஈடுபடவும் அனுமதிக்கப்படுகின்றனர். எட்டு நாள்கள் வரை நீட்டிக்கும் இவர்கள் மணச்சடங்குகளின் போது மணமக்கள் கம்பளியைத் தவிர வேறு எதன் மீதும்

உட்கார அனுமதிக்கப்படுவதில்லை" எனக் கூறப்பட்டுள்ளது. தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள கன்னடியர் சிலர் நெசவாளர் களாக உள்ளனர். செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த கன்னடியர் பற்றிய பின்வரும் விவரங்களுக்கு நான் திரு சி. ஹயவதனராவிற்குக் கடப்பாடுடையேன்.

சென்னை நகரத்திலிருந்து இருபது மைல் தொலைவில் செம்பரப்பாக்கம் என்ற ஊரின் பெயரைக் கொண்ட பெரிய ஏரி உள்ளது. இந்த ஏரியினைச் சார்ந்துள்ள வளமான நிலங் களுக்கு மற்ற வகுப்பாரோடு லிங்காயதப் பிரிவினைச் சேர்ந்த ஒரு குழுவினரும் உரிமை உடையவராக உள்ளனர். அக் குழுவி னைச் சேர்ந்த குடும்பம் ஒவ்வொன்றுக்கும் பல ஏக்கர் நிலங்கள் அங்கு உடமையாக உள்ளன. அவர்கள் அதில் பயிர்த்தொழில் செய்வதோடு கால்நடைகளையும் மேய்த்து வருகின்றனர். அக் கால்நடைகள் தரும் பால், வெண்ணெய், தயிர் ஆகியவற்றைச் சென்னை நகருக்குக் கொண்டு சென்று நல்ல விலைக்கு விற்று வருகின்றனர். இவர்கள் விற்கும் தயிரினைச் சென்னையைச் சேர்ந்த பிராமணர்கள் மிக விரும்பி வாங்குகின்றனர். அத்தயிர் புளித்து நுரைக்கும்வரை ஒருவகைப் புளிப்புடையதாக வைத் திருக்கக் கூடியதாக உள்ளது. இந்தத் தயிருக்கு உள்ள தேவை யின் மிகுதி காரணமாக இவர்களிடம் முன்பணம் கொடுத்து வைத்துத் தொடர்ந்து தயிர் பெறும் வழக்கமும் உள்ளது. சென்னையில் விற்கும் உள்ளூர்த் தயிரைவிட இதன் விலையும் கூடுதலாகவே உள்ளது. சென்னையில் விற்கும் தயிரை ஒரு லிங்காயதன் வாங்கி அதனை அதிக விலைக்கு விற்க முற்படு வானாயின் 'உள்ளூர்க்காரன்' என்ற பழிப்புரைக்கு அவன் உள்ளாவது உறுதி. இவர்கள் மறிகளையும், ஆடுகளையும் தொடுவது கூட இல்லை. அவற்றின் வாசனையே பசுக்களையும் எருமைகளையும் மலடாக்கிவிடும் என இவர்கள் நம்புகின்றனர்.

செம்பரம்பாக்கம் லிங்காயதர்களின் முக்கியக் குடியிருப் பாக இருப்பினும், காஞ்சிவரம் வட்டத்திலும் அதனை அடுத்த சில ஊர்களிலும் இவர்கள் வாழ்ந்து வருகின்றனர். செங்கல் பட்டு மாவட்டத்தில் இவர்களின் எண்ணிக்கை நாலாயிரம் அளவினதாகலாம்.

செங்கல்பட்டு மாவட்டத்திற்குத் தங்கள் முன்னோர்கள் வந்து குடியேறியது எவ்வாறு நிகழ்ந்தது என்பதனைப் பற்றி இவர்களுக்கு ஏதும் தெரியவில்லை. மைசூரில் உறவினர்கள் உள்ளனரா எனக் கேட்கப்பட்டபோது பலர் அவ்வாறு அங்கு தங்களுக்கு உறவினர்கள் உள்ளதாகவே கூறினர். ஒருவன் அங்கு உயர்பதவியில் உள்ள ஒருவரைத் தன் நெருங்கிய உறவினர் எனக் கூறினான். மற்றொருவன் ஜங்கம் எனப்படும் குருக்கள் தங்களுக்கும் மைசூர் லிங்காயிதர்களுக்குமான பூசாரிகள் எனக் கூறினான். மூனறாவதாக ஒருவன் அவனுடைய பாட்டன் மைசூர், பெல்லாரி ஆகிய பகுதிகளில் உள்ள லிங்காயதர்களின் சிறப்பான வழிபாட்டுக்குரிய கோயில்களுக்கெல்லாம் சென்று வந்துள்ளார் என என்னிடம் கூறினான. உள்ளூர்ச் சாதியாரிடையே ஏற்பட்ட பூசல் காரணமாகச் செம்பரம்பாக்கம் லிங்காயதர்கள் இரு பிரிவினர்களாகப் பிரிந்து அவர்களுக்குள் இரு கட்சிகள் தோன்றிய போது மைசூரிலிருந்து வந்த ஓர் லிங்காயத குரு அவர்களிடையே உடன்பாடு காண உதவியாக எனக்குத் தெரிவிக்கப்பட்டது. இவையெல்லாம் இந்த லியங்காயதர்கள் மைசூரிலிருந்து வந்து குடியேறியவர்கள் என்பதையும் இவர்கள் லிங்காயத சமயத்திற்கு மாறிய உள்ளூர் வாசிகள் அல்லர் என்பதனையும் தெளிவுபடுத்தும். அப்படியாயின் இவர்கள் எப்பொழுது இங்குக் குடியேறியிருக்க கூடும் என்ற வினாவிற்கு விடைகாண வேண்டியவர்களாக உள்ளோம். சிக்க தேவ ராஜா மைசூரினை ஆண்ட காலமான பதினேழாம் நூற்றாண்டே இவர்கள் அவ்வாறு வந்து குடியேறியதாகக் கருதுவதற்குரிய காலத்தின் முன் எல்லையாகும். லிங்காயத சமயத்தவர்கள், நாடு முழுவதும் சிக்க தேவ ராஜாவுக்கு எதிராக கிளர்ந்தெழ முயன்றபோது அதனை அடக்க அவர் கடுமையான அடக்குமுறைகளை மேற்கொண்டார். அவர் கொண்டுவந்த வரி மாற்றங்கள் உள்ளூர் லிங்காயதச் சமயத் தலைவர்களின் வருமானத்தைப் பெரும் அளவில் பாதித்தன. அப்போது நடந்தது என்ன என்பதனை மைசூர் வரலாற்றினை எழுதிய கர்னல் வில்க்ஸ்* அவர்கள் சொற்களாலேயே

---

* வரலாற்றுக் கட்டுரைகள், மைசூர். (Colonal Wilks - Historical Sketches, Mysore.)

காண்போம்:- ''எங்கும், ஊர் மன்றங்களில் உள்ள மரங்களில் தலைகீழாகச் சார்த்தப்பட்டிருந்த கலப்பைகளும் அந்த மரங் களின் நிழல்களில் கூடி நின்ற மக்கள் கூட்டமும் அரசுக்கு எதிரான கிளர்ச்சி மூண்டுள்ளது என்பதனை அறிவித்தன. நிலத்தை உழப்போவதில்லை என்ற முடிவுக்கு வந்துவிட்ட உழவர்கள் ஊர்கள் பாழூர்களாகும்படியாக அவற்றைவிட்டு வெளியேறிவிட்டிருந்தனர். சில ஊர்களில் சட்டத்திற்கு அஞ்சித் தலைமறைவானவர்களைப் போல முடிவு காண நாளாகும் என எண்ணியவர்களைப் போல மறைந்து திரிந்தனர். சில ஊர்களில் பழிவாங்கத் துடிப்பவர்களைப் போல சீற்றம் கொண்டவர்க ளாகத் திரிந்தனர். சிக்க தேவ ராஜா தனக்கு எதிராக எழுந்தவர் கள் இணைந்து செயல்பட வாய்ப்பு அளிக்காதவராக விரைந்து செயல்பட்டார். வெளிப்படையாக வன்முறையில் அவர்களைத் தாக்கத் தொடங்கும் முன் நயவஞ்சமாக அவர்களைப் படு கொலைக்கு உள்ளாக்க அவர் மேற்கொண்ட முயற்சி இரத்த வெறி கொண்டவர்களின் வரலாற்றிலேயே எங்கும் காண இயலாத கொடூரமான செயலாகும். ஜங்கம் பூசாரிகளைப் பின்பற்றுபவர்களுடைய முரண்பாடான போக்கினைப் பற்றி ராஜாவோடு பேச்சுவார்த்தை நடத்த நஞ்சன்கோட்டில் உள்ள பெரிய கோயிலுக்கு வரும்படியாகப் போலியாக எல்லா ஜங்கமங்களுக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது. ஏதோ நம்பிக்கை மோசடி நடக்கப் போகின்றது எனச் சந்தேகப்பட்ட காரணத்தால் சுமார் நானூறு ஜங்கமங்களே அந்த அழைப் பினை ஏற்று அங்கு வந்து கூடினர். சுற்றுச் சுவரால் சூழப்பட்ட மறைவான இடத்தில் முன் கூட்டியே பெரியதொரு பள்ளம் வெட்டப்பட்டது. நாற்புறமும் கூடாரத் திரைச் சுவர்கள் அமைக்கப்பட்ட மேற்கட்டியின் கீழ் அவர்கள் ஒவ்வொருவராக அழைக்கப்பட்டனர். ராஜாவுக்கு வணக்கம் செலுத்திய அவர் கள் வழக்கப்படி ராஜாவின் செலவில் தரப்படும் சிற்றுண்டி வகைகளை உண்ண உள்ளே அனுப்பப்பட்டனர். பின்கட்டில் திறமை வாய்ந்தவர்களான கொலைகாரர்கள் அடுத்துத் தொடர்ந்து வருபவர்கள் ஐயுறாத வண்ணம் அவர்களைத் தலையைச் சீவி குழியில் தள்ளினர். அரசர் கூடியிருப்பவர் களுக்கு இவ்வாறு பேட்டி தருவதான நிகழ்ச்சி யாரும் ஐயுறாத

வகையில் தொடர்ந்து நடந்தபடி இருந்தது. இதே நாளில் தன் ஆட்சி எல்லையில் உள்ள ஜங்கமங்களின் மடங்களை எல்லாம் தாக்கிச் சூறையாடுவதற்கான சுற்றறிக்கையும் அனுப்பப்பட்டிருந்தது. இவ்வாறு அழிக்கப்பட்ட மடங்கள் எழுநூறுக்கும் மேற்பட்டன. இதன் பின்னர் குதிரைப் படை யினருக்குக் கூட்டங்களில் புகுந்து எத்தகைய அறிவிப்பும் இன்றித் தாக்குதல் நடத்தவும் ஜங்கமங்களுக்கு உரியதான ஆரஞ்சு வண்ண உடையணிந்திருக்கும் அனைவரையும் கொன்று குவிக்கும்படியும் தெளிவான கட்டளை பிறப்பிக்கப் பட்டது."

எவ்வளவு தூரம் நிலவுடைமையாளர்கள் தாங்கள் நாட்டை விட்டுக் குடிபெயர்ந்து நெடுந்தொலைவில் சென்று குடியேறு வதில் வெற்றி பெற்றார்கள் என்பதனை இவ்வளவு கால இடை வெளிக்குப் பின் கணித்து அறிதல் கடினமானது. மற்றச் சமயத் தாரை ஒறுத்தலே அவர்கள் அங்கிருந்து குடிபெயர்த்தலுக்குக் காரணம் என உறுதியாகக் கூற இயலாவிடினும் அது காரண மாகலாம் எனக் கொள்ளப் போதுமான இடமுள்ளது.

பதினெட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியை இந்த லிங் காயதக் கன்னடியர்கள் குடிப்பெயர்ந்து வந்ததற்கான மேல் எல்லையாகக் கொள்ளின் அந்நூற்றாண்டின் இறுதிப் பகுதியை அதற்கான கீழ் எல்லையாகக் கொள்ளலாம். இந்திய வரலாற் றின் பிற்பகுதியில் மிகுந்த குழப்பங்கள் நிறைந்த காலப் பகுதியாக அது விளங்கியது. கணவாய்கள் வழியாகப் படைகள் செல்வதும் பின் திரும்புவதும் அடிக்கடி நிகழ்ந்துவந்தது. செங்கல்பட்டினைச் சேர்ந்த லிங்காயதர், படைகளோடு கூட அவற்றின் பின்னால் தயிரும் வெண்ணையும் விற்றபடி வந்த ஆட்டிடையர்கள் என்று வயதான சிலர் சொல்ல நான் கேள்விப்பட்டுள்ளேன்.

இவர்கள் குடிப்பெயர்ந்து வந்ததன் காரணம் எதுவாயினும் செங்கல்பட்டில உள்ள இவர்கள் மைசூர், சேலம், பெல்லாரி ஆகிய பகுதிகளைச் சேர்ந்த லிங்காயதர்களைத் தங்களவர்கள் எனக் கொள்கின்றனர் என்பது உண்மை. அவர்களோடு இவர்

கள் கலந்து பழகுவதோடு திருமண உறவும் செய்துகொள் கின்றனர். இவர்கள் மைசூர், பெல்லாரிப் பகுதிகளுக்கு உரிய கன்னட மொழியினைப் பேசுகின்றனர். இவர்கள் தங்களைத் தாங்கள் பேசும் கன்னடத்தை வைத்துக் கன்னடியன் அல்லது கன்னடியர் என அழைத்துக்கொள்கின்றனர். இவர்கள் வாழும் ஊரின் பெயரும் மொழியின் அடிப்படையில் கன்னடிபாளையம் என்றே வழங்குகின்றது. சென்னையில் சில பகுதிகளில் இவர் கள் தலைச்சுமை தூக்குபவர்கள் என்ற பொருளில் காவடி என் றும் காவடிகா என்றும் அழைக்கப்படுகின்றனர்.

ஆணும் பெண்ணும் அயராத உடல் உழைப்புக்குப் பெயர் பெற்றவர்கள். ஒரு நாள் விட்டு ஒருநாள் எல்லாப் பருவங்களி லும் சென்னையில் தயிரும் வெண்ணையும் விற்பதற்காக வேண்டி இருபது மைலுக்கு மேல் நடக்கின்றனர். அவ்வாறு நடக்கும்பொழுது ஒரு பிரம்புக் கூடையில் பானையில் மூன்று அல்லது நான்கு பெரிய படி தயிரினைத் தலையில் சுமந்து வரு கின்றனர். இவர்களுள் சில ஆண்கள் உடல் வலிமை புலப்படுத் தும் விளையாட்டும் வித்தைகளும் காட்ட வல்லவர்கள். மிக வயதான ஒருவன் மூன்று அல்லது நான்கு உப்புக் கற்களின் மீது தேங்காயை வைத்து அவை நசுங்காதபடி ஒன்றன்பின் ஒன்றாக நான்கு தேங்காய்களை இரண்டாக உடைத்ததை நானே நேரில் பார்த்துள்ளேன். இவ்வாறு ஐம்பது தேங்காய் வரை உடைக்கக்கூடியவர்கள் உள்ளனர் எனக் கூறுகின்றனர். ஒரு வேளை அது சற்று மிகைப்படுத்திக் கூறப்படுவதாகலாம். இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் அழகிகள் எனப் பொது வாகக் கொள்ளலாம். மைசூரில் பெண்மையின் அழகுக்கு லிங் காயதப் பிரிவினைச் சேர்ந்த பெண்களை எடுத்துக் காட்டு வதே வழக்கம்.

இந்த லிங்காயதர்கள் தாமர ஊரினைச் சேர்ந்த கௌலி யர், செம்பரம்பாக்கத்திலும் பிற இடங்களிலும் வாழும் கன்ன டியரான கடபேரி என்ற இரு வகுப்பாராகப் பிரிவுபட்டுள்ளனர். கௌலியர் தங்கள் தயிர்ப் பானைகளைப் பிரம்புக் கூடையில் வைத்து எடுத்துச் செல்வர். கன்னடியர் மூங்கில் கூடைகளில் தயிர்ப்பானையினை வைத்து எடுத்துச் செல்வர். ஒவ்வொரு

பிரிவினரும் சென்னை நகரில் குறிப்பிட்ட பகுதிகளில் மட்டுமே தயிர் விற்பர். பிரம்புக் கூடைக்காரர்களில் பெரும்பாலோர் திருவல்லிக்கேணிப் பகுதியில் சுற்றி வருவர். மூங்கில் கூடைக் காரர் ஜார்ஜ்டவுனிலும் அதனைச் சார்ந்த பகுதிகளிலும் சென்று தயிர் விற்பர். இரு பிரிவினரும் ஒரே தெய்வத்தை வழி படுகின்றனர். ஒருவர் வீட்டில் மற்றவர் சென்று உண்கின்றனர். எனினும் இவர்கள் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. பிரம்புக் கூடைப் பிரிவினர் மூங்கில் கூடைப் பிரிவினரைவிட உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். இரு பிரிவினுள்ளும் 'பேதககுளு' எனப்படும் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் உள்ளன. பிரம்புப் பிளாச்சு, கரடி, நாவல்பழம் என்பது போல அவை புரிவதும் புரியாததுமான பெயர்களைக் கொண்டுள்ளன.

ஒருவனுக்கு ஒருத்தி என்பதே இவர்களிடையே பொது வான வழக்காக இருப்பினும் முதல் மனைவிக்கு மகப்பேறு வாய்க்காதவர்கள் இரண்டாம் மனைவியை மணந்து கொள் கின்றனர். பெண்கள் பூப்படையும் முன் மணம்செய்விக்கப்பட வேண்டும் என்ற விதியில் இவர்கள் மிக உறுதியுடையவர்க ளாக உள்ளனர். ஓராண்டு கூட ஆகாத சின்னஞ்சிறு பெண் குழந்தைகளுக்கு மணம் முடித்து வைக்கப்பட்டுள்ள சிறுவர்கள் மாடுகள் மேய்த்துக் கொண்டிருப்பதை ஆங்காங்கே காணலாம். சமூகத்தார் அனைவரின் ஒப்புதலோடும் பெற்றோர் நேரிடை யாகவோ தரகர் வாயிலாகவோ தங்கள் குழந்தைகளின் மணத்தை உறுதி செய்வர். மணச் சடங்குகள் பொதுவாக ஒன்பது அல்லது பத்து நாள்கள் தொடர்ந்து நிகழும். திரு மணச் செலவுகளைக் குறைப்பதற்காகப் பல குடும்பத்தினர் சேர்ந்து ஒரே சமயத்தில் தங்கள் குழந்தைகளின் திருமணத்தை நடத்துவர். திருமணம் தொடர்பான ஏற்பாடுகள் அனைத் தையும் - விருந்தினர்களை அழைத்தல் உட்பட - சௌத்ரி என அழைக்கப்படும் சாதிக்கான முகவரே மேற்கொள்வான்.

திருமணத்தின் முதல் நாள் மணப் பந்தல் அமைக்கும் நிகழ்ச்சி மேற்கொள்ளப்படும். மறுநாள் ரவிக்கை அணியும்

சடங்கு நிகழும். மணமக்கள் தங்களுக்குத் தரப்படும் புதிய உடைகளை மகிழ்ச்சி ஆரவாரத்தினிடையே அணிந்து மகிழ்வர். இச் சடங்கு தொடர்பாக மைசூரில் வழங்கும் ஒரு கதையினைக் கூறலாம் என நினைக்கின்றேன். லிங்காயதப் பிரிவினைச் சேர்ந்த ஒருத்தி ரவிக்கை அணியாமல் தெருவில் தயிர் விற்றுச் சென்றதைக் கண்ட திப்பு சுல்தான் அவள் மார்பகங்களை அறுக்கும்படி ஆணையிட்டதாகக் கூறுவர். அப்போதிருந்து தான் மைசூரைச் சேர்ந்த பெண்கள் உடல் முழுவதையும் மறைக்கும் நீண்ட ஆடைகளை அணியத் தொடங்கினர்.

மண நிகழ்ச்சியின் மூன்றாம் நாள் தாலி அணிவிக்கும் முகூர்த்தம் நடைபெறுவதால், அது முக்கியமான நாளாகக் கருதப்படுகிறது. அன்று அனைவரும் சிரித்து மகிழும் புதுமை யானதொரு நிகழ்ச்சி இவர்களிடையே நடைபெறுகிறது. சைவ சமயத்தைச் சேர்ந்த ஒரு பிராமணன் திருமணத்திற்கு அழைக் கப்படுவான். அவன் தனக்கு வர வசதிப்படாது என்பது போலப் பாவனை செய்வான். எப்படியும் வந்தே ஆகவேண் டும் என்ற ஏளனத்தோடு கூடிய வற்புறுத்தலும் நல்லெண் ணத்துடனேயே அழைப்பு விடப்படுகின்றது என்ற உறுதி மொழியும் அவனைச் சந்தேகத்தோடும் ஏமாற்றப்படுவோமோ என்ற மனக் கவலையுடனும் அங்குக் கொண்டு வந்து சேர்க் கும். அவன் மணப்பந்தலை அடைந்தவுடன் மணம் நிகழும் குடும்பத் தலைவன் அவனை இறுகப் பற்றி, அவன் குடுமியில் அவன் உரக்கக் கூக்குரலிட்டுக் கத்துவதைப் பொருட்படுத் தாமல் ஐந்து தேங்காய்களை உறுதியாக முடிந்து விடுவான். கூடியிருப்பவர்கள் அதில் மிகுந்த அக்கறை உடையவர்களைப் போல அவனைச் சமாதானப்படுத்தப் பார்ப்பர். அவனுக்கு ஐந்து ரூபாயைக் கண்ணில் காட்டியதும் அவன் அமைதி அடை வான். ஓர் இணை புது வேட்டிகள், வெற்றிலை பாக்கு ஆகி யவற்றோடு அவன் இதனைப் பெற்றுக் கொள்வான். இதற் கிடையே அங்குக் குழுமியுள்ள சிறுவர்கள் அவன் மீது புதிய பழைய துணிகளை வீசியும், மஞ்சளும் சுண்ணாம்பும் திணிக்கப் பட்ட கத்தரிக்காயினை எறிந்தும் அவனைக் கேலி செய்வர். அவன் அச் சிறுவர்களை ஏதும் செய்ய இயலாது திண்டாடும்

போது பெரியவர்கள் குறுக்கிட்டு, "இருந்திருந்து அவர் ஒரு பிராமணர் அல்லவா? அவரை இப்படியெல்லாம் தொல்லைப் படுத்தலாமா" எனக் கேட்டு அந்தச் சிறுவர்களை விரட்டுவர். அங்கிருந்து விடைபெறும் அந்தப் பிராமணன் திருமணம் முடியும் வரை அதன் சடங்குகள் தொடர்பாக அங்குத் தலைகாட்ட மாட்டான். இந்தச்சடங்கு முழுக்க முழுக்கப் பிராமணனை இழிவு படுத்துவதற்காகச் செய்யப்படுவதாகத் தோன்றுமேயல்லாது அவனைச் சிறப்பிக்கச் செய்யப்படுவதாகப் பார்ப்பவர்களுக்குத் தோன்றாது. லிங்காயதர் பிராமணர்களிடமிருந்து தண்ணீர் கூட வாங்கிப் பருகமாட்டார்கள் என்பது உலகறிந்த உண்மை. மற்றச் சாதியாரைப் போலத் திருமணம், சாவு போன்றவை தொடர்பான சடங்குகளுக்கும் இவர்கள் பிராமணர்களை வைத்துக் கொள்வதில்லை. பிராமணன் குடுமியில் தேங்காய் முடியும் வழக்கம் மூங்கில் கூடைப் பிரிவினரிடையே மட்டும் காணப்படுகிறது. இதற்குச் சமமான விசித்திரமான மற்றும் ஒரு பழக்கம் பிரம்புக் கூடைப் பிரிவினரிடையே காணப்படு கிறது. அவர்கள் ஊரினைச் சேர்ந்த நாவிதனைத் திருமணத் திற்கு அழைத்து, அவன் முன் குழந்தைப் பருவத்தினரான மண மகனையும் மணமகளையும் பிறந்த மேனியராக அமர்த்துவர். ஒரு தேங்காய்ச் சிரட்டையில் கொஞ்சம் நெய்யினை அவனிடம் தருவர். ஒரு புல்லைக் கொண்டு அதில் கொஞ்சத்தை அவன் மணமக்கள் தலையில் தெளிக்க வேண்டும். அவனை அவ்வாறு செய்ய விடாதபடி ஒரு புதுமையானமுறையில் அவனைக் கொடுமைப்படுத்துவர். லிங்கத்தைக் குறிக்கும் வகையில் ஒரு பெரிய கல்லினைக் கயிற்றில் கட்டி அவன் கழுத்தில் தொங்கவிடுவர். இன்னொரு கயிற்றினை அவன் தலையில் கட்டி அவன் இப்படியும் அப்படியுமாகத் தலையை ஆட்டும்படி யாக இளைஞர்கள் அக்கயிற்றை இழுத்து அவனை ஆட்டு விப்பர். கடைசியில் ஒருவழியாக மணமக்கள்மீது நெய் யினைத் தூவ அவன் அனுமதிக்கப்படுவான். சில அணாக்களை யும தொட்டியில் எஞ்சியுள்ள நெய்யையும் தந்து அவனை அனுப்பி வைப்பர். அவன் கழுத்தில் கல்லினைக் கட்டித் தொங்க விட்டதால் அந்த நாவிதன் அப்போதைக்கு ஒரு லிங்காயதனாக ஆகிவிட்டதாகக்கொள்கின்றனர்.

குருக்கள் என அழைக்கப்படும் கன்னடியர் சாதியைச் சேர்ந்த ஒருவனே திருமணச் சடங்குகளை நடத்தி வைப்பவன். கன்னடியர் அவனை அய்யனவரு என மதிப்புடன் அழைப்பர். இப்பட்டம் கன்னட மாவட்டங்களில் பொதுவாகப் பிராமணர்களுக்கே உரியதாக வழங்கப்பட்டு வருகின்றது. நாகசுர இன்னிசை வாசிப்போருக்கான அன்பளிப்பு, துணிமணிகள் வாங்கும் செலவு, வெற்றிலை பாக்குக்கு ஆகும் செலவு ஆகியனவே திருமணச் செலவினங்களில் குறிப்பிடத்தக்கவை. செல்வ வசதி இல்லாத ஒருவன் என்னிடம் தன் வீட்டுத் திருமணத்தில் மூன்று மணங்கு பாக்குச் செலவாயிற்று எனக் கூறினான். பாக்குக்கு ஆகும் செலவே திருமணச் செலவில் அதிகப் பங்குக்கு உரியதாகின்றது. விருந்தாளிகள் சாப்பாட்டை விடப் பாக்குக்காகவே திருமணத்திற்கு வருவதாகவும் திருமணங்களில் போடப்படும் சாப்பாடு நாய்களுக்குக் கூட ஏற்றதாக இருக்காது எனவும் அவனே கூறினான்.

கைம்பெண்கள் மறுமணம் அனுமதிக்கப்படுகிறது. அவளை மணந்து கொள்பவனும் மனைவியை இழந்தவனாக இருக்க வேண்டும். அத்தகைய திருமணங்களுக்குப் பந்தல் போடும் வழக்கம் இல்லை. எனினும் பெரியவர்கள் அனைவரும் அதற்கு வருகை தந்து தங்கள் ஒப்புதலைத் தெரிவிப்பர். இத்தகைய திருமணம் நடுவீட்டுத் தாலி என அழைக்கப்படுகின்றது. பந்தலில் அல்லாமல் வீட்டின் நடுவே வைத்துத் தாலி கட்டப் படுவதால் இவ்வாறு இது வழங்கப்படுகின்றது. பகல் நேரத்தில் நடைபெறுவதற்கு பதிலாகப் பொழுது விழுந்தபின் விரைவாக நடைபெற்று முடிவுறும் எளிய நிகழ்ச்சி இது. இத்தகைய உறவின் வழியே பிறக்கும் குழந்தைகள் உடைமை உரிமைக்கும் முறையாக உரியவர்களாகும் சட்டப்படியான வாரிசுகளே ஆவர். மறுமணம் செய்து கொண்டவர்கள் பிற நிகழ்ச்சிகளில் வெற்றிலை பாக்கு வழங்குதல், ஆரத்தி எடுத்தல் போன்றவற்றில் பங்கு கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. உடல் ஊனம் உற்றவர்களையும் விதவையர் போலவே இது போன்ற நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள அனுமதியாது இருப்பதனை நோக்க அவர்களையும் துணைவரை இழந்தவர்களாகக் கருதுவதாகத் தெரிகின்றது.

பசப்ப, லிங்கண்ண, தேவண்ண, எல்லப்ப. நாகண்ண என்பன ஆண்களுக்குப் பெருவழக்காக வைக்கப்படும் பெயர் களாகும். எல்லம்மா, லிங்கி, நாகம்மா என்பன பெண்களுக்கு உரிய பெயர்கள். அனைவரும் சௌத்ரி என்ற பட்டப் பெயருக்கு உரியவர்கள் எனினும் அது சாதியின் முகவருக்கே சிறப்பாக வழங்கப்படும் பட்டப்பெயராகும். சிக்க, தொட்டதம்ம (சின்னத்தம்பி, பெரியதம்பி), ஆண்டி, கருப்பி, கூனி போன்ற செல்லப் பெயர்களும் பெருவழக்கின. மைசூர் மாநிலத்தில் ஒரு லிங்காயதனை அழைப்பதற்கான சொல் 'சிவனே' என்பதா கும். ராவ், அப்பா, அண்ணா, சௌத்ரி என்பன இவர்களுக்கு உரிய பட்டப்பெயர்கள்.

குழந்தைக்குப் பெயரிடும் சடங்கு முக்கியமானதொரு சடங் காகும். முனையில் எலுமிச்சம் பழங்கள் சொருகப்பட்ட ஐந்து வாள்கள் சீரான இடைவெளிவிட்டு நடப்பட்டபின் அவை ஒவ்வொன்றின் முனனும் இரண்டுவாழைப்பழங்கள், ஒரு தேங் காய், நான்கு பேரிச்சம்பழம், இரண்டு தேங்காய் முடிகள், வெற்றிலை பாக்கு, காராமணி வடை ஆகியன படைக்கப் படும். வாள்களின் முன் மஞ்சளிட்டுப் பிடித்த சோற்று உருண்டை, பலவகைக் கறிகள், பழங்கள், தயிர், பால் ஆகியன வும் வைக்கப்படும். ஒவ்வொரு வாளுக்கு முன்னுமாக ஐந்து இலைகள் போடப்பட்டு அந்த இலைகளின் முன்னர் அந்தக் குடும்பத்திற்கு நெருங்கிய உறவினர்கள் அமர்வர். குடும்பத் தலைவி ஐந்து பானைகளில் தண்ணீர் கொண்டு வந்து அவர்கள் அணிந்துள்ள ஜங்கம் லிங்கங்களுக்கு வழிபாடு செய்ய வைப்ப தோடு விபூதியையும் அவர்கள் அருகே வைப்பாள். அவர்கள் லிங்கத்தை இடக் கையில் பிடித்தபடி அதன்மீது தண்ணீரை ஊற்றிக் குளிப்பாட்டியபின், லிங்கத்திற்கும் தங்கள் நெற்றிக் கும் விபூதியினைப் பூசுவர். அதன்பின் குடும்பத் தலைவி அங்கி ருந்து சென்றுவிட அவர்கள் வயிறார உண்டு முடித்தபின் அவள் ஐந்து மண் பாத்திரங்களில் அவர்கள் கையலம்பத் தண்ணீர் கொண்டு வந்து தருவாள். அவர்கள் கையலம்பிய பின் தண்ணீர் இருந்த பாத்திரத்தை உடைத்து எருக்குழியின் மீது வீசுவர். வெற்றிலை பாக்கு போட்டபின் ஒவ்வொரு

வரும் கொஞ்சம் உணவினை ஒரு துண்டில் முடிந்து கொண்டு கையில் ஒரு வாளினை எடுத்துக் கொண்டு திரும்பிப் பாராமல் அந்த . வீட்டைவிட்டு வெளியேறுவர். அதன்பின் குடும்பத் தலைவன் வாள்களில் உள்ள எலுமிச்சம் பழங்களை நீக்கி விட்டு அவற்றை உறையில் இடுவான். அன்று மாலையில் குழந்தைக்குப் பெயர் வைக்கப்படும். சற்றுச் செலவு அதிகம் ஆகக் கூடிய இந்தச் சடங்கு சிலபோது குழந்தைக்கு ஒரு வயது ஆன பின்னர்தான் நிகழ்த்தப்படுகிறது.

சாவு நிகழ்ந்தவுடன் அந்தச் செய்தியினை இரு சிறுவர்கள் கையில் கோல் தாங்கியவர்களாக உறவினர்களுக்கும் சாதியினைச் சேர்ந்தவர்களுக்கும் சென்று அறிவிப்பர். சாதிப் பூசாரி கூறும் விதிமுறைப்படி சாவு நிகழ்ந்த வீட்டினைச் சேர்ந்தவர்கள் சவ அடக்கத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வர். பிணத்தையும் பூசாரியின் பாதங்களையும் கழுவுவர். பூசாரியின் பாதங்களைக் கழுவிய நீர் பிணத்தின் மீதோ அதன் வாயினுள்ளோ ஊற்றப்படும். சில லிங்காயதப் பிரிவினரிடையே இந்துக்களின் வழக்கத்திற்கு மாறாகச் சாவு விசாரிக்க வந்து கூடியுள்ள நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் விருந்து வைக்கும் பழக்கம் உள்ளது. அந்த விருந்தில் பூசாரியே முக்கிய விருந்தாளியாக இருப்பார். பூசாரி விருந்து உண்டு முடித்தபின் அதில் ஒரு பகுதியினை வாந்தி எடுப்பாரெனவும் அதனை அந்தக் குடும்ப உறுப்பினர்கள் பங்கிட்டு உண்பர் எனவும் கூறப்படுகிறது. எனினும் இந்தப் பழக்கம் செங்கல்பட்டினைச் சேர்ந்த லிங்காயதர்களால் பின்பற்றப்படுவதாகத் தெரியவில்லை. பிணத்தினை இரண்டாம் முறை. மீண்டும் குளிப்பாட்டி, உடம்பில் உள்ள ஒன்பது துவாரங்களையும் பஞ்சு அல்லது துணி கொண்டு அடைப்பர். பின்னர் பிணத்திற்கு அதற்குரிய வழக்கமான ஆடைகள் அணிவிக்கப்படும். இறந்தவர் பூசாரியாயின் அவர் வழக்கமாக அணியும் ஆரஞ்சு நிற உடையினைப் பிணத்திற்கு அணிவிப்பர். பிணத்திற்கு ஆடை அணிவிக்கும் முன் அதன் நெற்றி, மார்பு, வயிறு, கரங்கள் ஆகியனவற்றுக்கு விபூதி பூசப்படும். பாடை, கோயில் திருவிழாக்களில் இழுத்துச் செல்லப்படும் தேர் போல அலங்கரிக்கப்படும். நாலைந்து கம்பங்

களுக்கும் வாழைக்கன்றும் தேங்காயும் வைத்துக் கட்டப்படுவ தோடு அக்கம்பங்களை வண்ண மலர்களாலும் அலங்கரிப்பர். பாடையின் நடுவே அமைக்கப்பட்டுள்ள பலகையில் பிணத் தினை உட்கார்ந்த நிலையில் வைப்பர். பூசாரி தனது வலக் காலால் பிணத்தை நான்கைந்து முறை உதைத்தபின், ஊர்ப் புறத்து இன்னிசை முழங்கப் பிண ஊர்வலம் இடுகாட்டினை நோக்கிப் புறப்படும். பிணத்தைப் பாடையிலிருந்து அகற்றிப் புதைகுழியில் தெற்கு நோக்கியபடி உட்கார்ந்த நிலையில் வைப்பர். இறந்தவரின் குடும்பத்தின் தகுதிக்கேற்ப புதைகுழி யில் உப்பினை இடுவர். ஒருவன் இறந்துபோன தன் சாதியைச் சேர்ந்தவனுக்கு இந்தச் சிறிய உதவியைக்கூடச் செய்யத் தவறுவானாயின் அவன் வாழ்க்கை பொருளற்றதாகி விடும். "அவன் ஒரு பிடி மண்ணுக்கும் கூட வழியற்றுப் போய்விட்டானா என்ன?" என்ற பழமொழியையும் அவர் கள் அடிக்கடி கூறுவர். புதைகுழியை நிரப்பி மூடியபின் அதன் நான்கு மூலைகளிலும் நான்கு விளக்குகளை ஏற்றி வைப்பர். பூசாரி பிணத்தின் தலைக்கு மேலே நேராக புதைகுழியின் மீது தன் காலடியில் நொச்சி (*Vitex Negundo*) தும்பை (*Leucas aspera*) ஆகியவற்றின் கொத்துகளை இட்டபடி விளக்குகளைப் பார்த்தபடி நிற்பார். தேங்காய் உடைக்கப் பட்டுக் கர்ப்பூரம் கொளுத்தப்படும். "லிங்கண்ண! (இறந்து போனவன் பெயர் எதுவோ அதனை இதுபோலச் சொல் வான்) நரகலோகத்தைவிட்டு நீ பூலோகம் சேர்ந்து விட்டாய்" எனப் பூசாரி உரக்க அப்போது கூறுவான். நரலோகமும் பூலோகமும் ஒன்றே ஆகையால் இவ்வாறு சொல்வது முரண் பட்டதாக உள்ளது. ஒருக்கால் பிராமணர்களின் சமய நூல் களுள் கூறப்பட்டுள்ள சுவர்க்க லோகம் என்பதற்குப் பதிலாகத் தவறிப்போய் பூலோகம் எனக் கூறப்படுகின்றதோ என்னவோ? சுவர்க்க லோகம் விட்டுணு குடி கொண்டிருக்கும் இடமாதலால் அவ்வாறு அதனைச் சுட்டிக் கூறாது விட்டுவிடுகின்றனர் போலும்! அதன்பிறகு பூசாரி 'ஒக்காய்! ஒக்காய்' என உரக்கக் கூறுவார். அத்துடன் சாவுச் சடங்குகள் ஒரு முடிவுக்கு வரும். வீட்டுக்குத் திரும்பி வந்த பின் பாடையைத் தூக்கிச் சென்றவர் களும், பூசாரியும், இறந்து போனவரின் மகன்களும் மோரினை

வலக் கையால் எடுத்து இடப் புற முதுகில் அப்பிக் கொள்வர். சேற்றினைக் கொண்டோ செங்கல், காரை ஆகியன கொண்டோ புதைகுழியின் மேல் ஒரு நந்தியின் உருவம் அமைக்கப்படும். திருமணமாகாத கன்னியரும் சிறுவர்களும் கிடந்த நிலையிலேயே புதைக்கப்படுவர். செம்பரப்பாக்கத்தில் உள்ள லிங்காயதர்களிடம் கேட்டறிந்ததிலிருந்து ஒரு குடும்பத்தில் சாவு நிகழ்ந்தால் நெருங்கிய உறவினர்கள் பெல்லாரி, பெங்களூர் போன்ற நெடுந்தொலைவில் வாழ்ந்தாலும் அவர்களும் தீட்டினை மேற்கொள்ளுதல் வேண்டும் என்ற வழக்கம் உள்ளதாகத் தெரிகிறது. குளித்து அவர்கள் தீட்டினைப் போக்கிக் கொள்வர்.

பசவர்கள் கோயில் குளங்களுக்குப் பயணங்கள் மேற்கொள்வதில்லை. செங்கல்பட்டினைச் சேர்ந்த லிங்காயதரர்கள் 'சாட்ரே' எனப்படும் புண்ணியப் பயணங்களை மேற்கொள்கின்றனர். அவற்றுள் குறிப்பிடத்தக்கது சித்திரை, வைகாசி மாதங்களில் மேற்கொள்ளப்படும் வீரபத்ர சாட்ரே. செம்பரப்பாக்கத்தைச் சேர்ந்த மூங்கில் கூடை லிங்காயதரர்கள் கடப்பேரியைச் சேர்ந்த பிரம்பு லிங்காயதரர்களுக்குக் கொஞ்சம் பச்சரிசியோடு கூடக் குறிப்பிட்ட நாளில் தங்கள் ஊரில் நடைபெறவுள்ள திருவிழாவிற்கு அவர்களுடைய தெய்வமான வீரபத்ரர் உருவத்தையும் எடுத்துவரும்படி அழைப்பு அனுப்புவர். கடப்பேரி மற்றும் பிற ஊர்களையும் சேர்ந்த கௌலியர்கள் செம்பரம்பாக்கம் ஊரில் எல்லையில் உள்ள ஏரிக்கு வந்து சேர்ந்தபின், தங்கள் இனத்தவர் விடுத்த அழைப்பினை ஏற்றுத் தாங்கள் வந்துள்ளதாகச் செய்தி அனுப்புவர். செம்பரபாக்கம் ஊரினைச் சேர்ந்த பெரிய மனிதர்கள் சிலர் ஊரார் கூட்டமும் இன்னிசையும் தொடர விருந்தினர் வந்து தங்கியுள்ள ஏரியை அடைந்து கடப்பேரியைச் சேர்ந்த விருந்தாளிகளை அழைத்து வருவர். விருந்து உண்டபின் அனைவரும் உறங்கச் செல்வர். மறுநாள் அதிகாலையில் மூன்று மணிக்குத் திருவிழாவிற்காக விழித்தெழுவர். வாள்கள் உறைகளிலிருந்து எடுக்கப்படுவதோடு தப்பட்டை, குழல் ஆகியன காதடைபடும்படியாக முழங்கும். வீரபத்திரர் உருவங்கள் ஊர்வலமாக ஏரிக்கு எடுத்துச் செல்லப்

படும். அவ்வாறு கொண்டு செல்லும் வழியில் சிலையினைச் சுமப்பவர்கள் தங்கள் மீது சாமி ஏறியிருப்பதாக நடிப்பதோடு பற்பல தெய்வங்களின் பெயரை உரக்கக் கூறுவர். சில , சமயங் களில் அவர்கள் தன்னிலை மறந்தவர்களாக வெறி கொள்வர். அப்போது மக்கள் அவர்கள் தலையில் தேங்காய் உடைப்பர். அல்லது கழுத்திலும் மணிக்கட்டிலும் கோணி ஊசியினைக் குத்துவர். இவ்வாறு செய்தவுடன் வெறிகொண்ட அவர்கள் வெறி அடங்கியவர்களாகச் சுய நினைவு பெறுவர். வழி நெடு கத் தெய்வத்திற்குத் தேங்காய் உடைத்து வழிபாடு நடத்துவர். மொத்தம் நானூறு தேங்காய்கள் வரை உடைக்கப்படும். அவை அனைத்தும் ஊரைச் சேர்ந்த வண்ணானுக்கு உரிமை உடையன வாகும். ஏரியினை அடைந்ததும் அனைவருக்கும் வெற்றிலை பாக்கும் சுண்டலும் வழங்கப்படும். திரும்பி வரும் வழிநெடுக ஊரைச்சேர்ந்த வண்ணான் ஊர்வலத்தில் வருபவர்கள் நடக்கத் துப்பட்டி விரிக்க வேண்டும். நடுப்பகல் நேரத்தில் வயி ராற விருந்து உண்பதோடு விழா முடிவுறும். சில நாள்களுக்குப் பின் இதே போன்றதொரு விழாவினைக் கடப்பேரிக்காரர்கள் நடத்துவர். இந்த இரு பிரிவினருக்கும் உரியனவாக உள்ள வீரபத்ரர்கள் உருவங்கள் உடன்பிறந்தவர்கள் எனக் கூறப்படு கிறது. சடங்குகள்தொடர்பாக இவர்கள் திருத்தணி, திருவள்ளூர், மைலாப்பூர் ஆகிய இடங்களுக்கும் புனிதப் பயணம் மேற்கொள் கின்றனர். திருவள்ளூருக்கு அமாவாசை நாளில் செல்லும் இவர் கள் அங்குக் குளத்தில் குளித்தபின் வைணவர்கள் தெய்வமான வீரராகவனை வழிபடுவர். தென்னிந்தியா முழுதும் கொண்டா டப்படும் பொங்கல் விழாவினை இவர்கள் கொண்டாடுவ தில்லை. ஒரு சமயம் மாடுகள் மிரண்டு ஓடிவிட அவற்றைத் தேடிச் சென்றவர்கள் திரும்ப வராததே பொங்கல் விழாக் கொண்டாடுவதை நிறுத்திவிட்டதற்குக் காரணம் என்பர். உகாதி எனப்படும் புத்தாண்டு நாளினை இவர்கள் பொது வாகத் துக்க நாளாகவே கடைப்பிடிக்கின்றனர். காமன் திரு விழாவினை ஆர்பாட்டமாகக் கொண்டாடும் இவர்களுடைய இனத்துக்குரிய பாடல்களுள் ஒன்று காமனை எரித்த கதையினை விளக்குவதாகும். தலையில் தயிர்ப் பானையினைச் சுமந்து செல்லும்போது அப்பாடலைப் பாடும் இவர்கள் தங்களை

மறந்தவர்களாகச் சேரவேண்டிய இடத்தை களைப்பேதும் உணராதவர்களாகச் சென்று சேர்வதாகக் கூறப்படுகிறது.

ஆண்டுதோறும் சிறப்பாகக் கொண்டாடப் பெறும் வீர பத்ரர் திருவிழாவோடு கூட அரிசேர்வைத் திருவிழாவையும் இவர்கள் சிறப்பாகக் கொண்டாடுகின்றனர். இது விட்டுணுவின் வழிபாடான ஹரிசேர்வை என்பதின் தமிழ்ப் பெயரேயாகும் என்பதில் ஐயமில்லை. லிங்காயதர்கள் இவ்வாறு விட்டுணு வழிபாட்டில் ஈடுபாடு உடையவர்களாக இருப்பது வியப்பதற் குரியதே. இது அவர்கள் வாழும் இடத்தினைச் சூழ நிறைய வைணவக் கோயில்கள் அமைந்திருப்பின் செல்வாக்கின் காரணமாக ஏற்பட்ட மாற்றமாகலாம். இந்த விழா நடை பெறுவதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பே ஊரிலுள்ள பெரியவர்கள் கூடி ஒரு கூடைக்கு மூன்று பைசாவென இந்த விழாவிற்கான வரி விதிப்பரென்றும், வசூலாகும் தொகை சௌத்ரி பொறுப்பில் இருக்கும் எனவும் முடிவு செய்வர். ஒரே வீட்டில் இரண்டு, மூன்று கூடைகளைத் தயிர் விற்கக் கொண்டுபோக அந்த வீட்டைச் சேர்ந்த உறுப்பினர்கள் பயன் படுத்தினால் அவர்கள் கூடை ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு மூன்று பைசா வரியாகச் செலுத்த வேண்டும். வேறு வகையில் சொல்ல வேண்டுமானால் சமூகப் பொதுநல உதவித் தொகை பெறுவதில் குடும்பங்கள் அலகாக இடம்பெறாமல், கூடைகளே அலகாக இடம் பெறுகின்றன. காஞ்சிவரத்திற்கு அருகிலே வாழும் வைணவ நாடகமாடிகளை அரிசேர்வை விழாத் தொடர்பாகப் புரட்டாசி மாதத்தின் கடைசிச் சனிக் கிழமையன்று தங்கள் ஊருக்கு வரும்படி வெற்றிலை பாக்கு வைத்து அழைப்பு விடுத்து வருவர். புரட்டாசி மாதத்தின் நான்கு சனிக்கிழமைகளும் விட்டுணுவிற்கு உரிய சிறப்பான நாள்களாகும். அதன்பின காடனகள், மூங்கில் கூடை லிங்காய தர் வாழும் செம்பரம்பாக்கத்திற்கு வந்து அரிசேர்வை விழா விற்கான ஏற்பாடுகளைச் செய்வர். லிங்காயதப் பிரிவைச் சேர்ந்த ஐவருக்கு அழைப்பு விடுக்கப்படும். அந்த ஐவரும் காலை முதல் மாலை வரை விரதமிருப்பர். அன்று இரவு எட்டு அல்லது ஒன்பது மணி அளவில் விழாவிற்குரிய பூசாரிகளாகக் கருதப்படும்

அந்த ஐவரும் விழாப் பந்தலுக்கு வருவர். அவர்களுக்கு இலை போட்டு சோறு, பருப்புரசம், பணியாரம், தேங்காய் துண்டுகள் முதலியவற்றை இலையில் படைப்பர். அவற்றை உண்பதற்குப் பதிலாக அவர்கள் ஏற்றப்பட்ட விளக்கு ஒன்றினைப் பார்த்த வர்களாக உட்கார்ந்தபடியிருந்த பின்னர் கண்களை மூடித் தியானத்தில் ஆழ்வர். பின்னர் அமைதியாக அங்கிருந்து அவர் கள் தங்கள் இல்லம் திரும்பி இரவு உணவு கொள்வர். நெய்ப்பந்த ஊர்வலம் முடிந்தபின் ஊரினைச் சேர்ந்த வண்ணான் பந்தலுக்கு வந்து அவர்களுக்காக இலையில் படைக்கப்பட்டுள்ள உணவுப் பொருள்களை எடுத்துக் கொள்வான். இரவு 11 மணி அளவில் ஊரார் ஓர் இரவு விட்டு ஓர் இரவு தொடர்ந்து ஐந்து இரவுகள் நடக்கும் இரணிய கசிவு நாடகம் அல்லது பிரகலாத சரித்திரம் பார்க்கச் செல்வர். பிரகலாத சரித்திரம் பாகவதத்தில் உள்ள புகழ்பெற்ற ஒரு கதையின் அடிப்படையில அமைந்ததாகும். ஒரு வைண வனைத் தொலை தூரத்தில் கண்ணால் காண்பதைக் கூடச் சகித்துக் கொள்ள முடியாத வீர சைவர்களான லிங்காயதர்கள் வைணவ சமயத் தொடர்பான இத்தகைய கதையினை நாடக மாக ஆட வைத்துக் காண்பது வியப்புக்கு உரிய ஒன்றே.

காலரா, கால்நடை நோய் ஆகியன வராமல் காக்கும் நாமமதம்மாவினைச் செம்பரப்பாக்கம் லிங்காயதர் ஊரைச் சேர்ந்த மற்றவர்களோடும் சேர்ந்து வழிபடுகின்றனர். அவளை வழிபடும் முறைகளில் ஒன்று ஓர் ஆட்டினைப் பலி கொடுத்த பின் அதன் குடலினை ஒரு பானையில் வைத்து ஆட்டுத் தோலினால் அதன் வாயினைக் கட்டி ஊரைச் சுற்றிக் கொண்டு சென்றபின் ஊரின் ஒரு மூலையில் புதைப்பதாகும். பலிச்சட்டி எனச் சொல்லப்படும் இதனை ஊர்வலமாக எடுத்துச் செல்லும் போது யாரேனும் எதிரே வர நேர்ந்தால் அவன நோய்வாய்ப் படுவான் எனறோ இறந்துபோகக்கூடும் என்றோ நம்பு கின்றனர். பலி கொடுப்பதும், பானையில் குடலை நிரப்புவதும், அப்பானையை ஊரைச் சுற்றிஎடுத்துச் செல்வதும்,பின அதனைப் புதைப்பதும் ஆகிய அனைத்தும் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த ஒச்சர் அல்லது வெட்டியான்களாலேயே செய்யப்படுகின்றன.

செம்பரம்பாக்கம் லிங்காயதர்கள் காலராவிற்கு உரிய தெய்வம் தங்கள் சாதியைச் சேர்ந்த யாரையும் சாவுக்கு உள்ளாக்குவதில்லை என வாக்களித்துள்ளதாகக் கூறுவதோடு அவள் அதன் படியே நடந்து கொண்டுள்ளதாகவும் கூறுவர். மிகத் தீவிரமாகக் காலரா பெரும் அளவில் பரவியிருந்த காலங்களில் கூட இவர்கள் யாரும் காலராவால் இறக்கவில்லை.

**கண்ணி - Kanni (rope)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**கபடர் - Kapata**

கந்தை அணியும் கொரகருக்கான ஒரு பெயர்.

**கப்பலர் - Kappala (frog)**

மாதிகர்களின் புறமணக்கட்டுப்பாடுடைய ஒரு குலத்தின் பெயர். ஏனாதிகளின் ஓர் உட்பிரிவு. இப்பிரிவினர் தவளைகளை உண்பதாகக் கூறப்படுகிறது. இது சணப்பர்களின் ஒரு கோத்திரத்தின் பெயருமாகும். இச் சாதியினைச் சேர்ந்த சில குடும்பத்தினர் மீன் பிடித்துக் கொண்டிருந்தபோது அவர்கள் மீன்களுக்குப் பதிலாக நிறையத் தவளைகளைப் பிடித்தனர். அதன் காரணமாக இக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் தவளைகளுக்கு எத்தகைய தீங்கும் செய்வதில்லை. கொச்சியில் கடைத் தெருவில் தவளைகள் விற்பனைக்காகத் தொங்கவிடப்பட்டிருப்பதை நான் பார்த்துள்ளேன்.

**காப்பிலியர் - Kāppiliyan**

காப்பிலியர் மதுரை, திருநெல்வேலி மாவட்டங்களில் சிறப்பாகக் காணப்படும் கன்னடம் பேசும் பயிர்த்தொழிலாளர். இவர்கள் சிலபோது கரும்புறத்து ஆள்கள் எனவும் அழைக்கப்படுகின்றனர். "முதலில் வந்தேறிய பாளையக்காரர்களில் சிலர் கன்னடம் பேசுபவர்கள். அவர்கள் தலைமையில் காப்பிலியர்களுக்கும் இங்கு வந்து குடிபுகுந்தவர்களாதல் வேண்டும். இவர்கள் நல்ல பழக்க வழக்கங்களை மேற்கொண்ட மரியாதைக்

குரிய பயிர்த்தொழிலாளர்கள். கவுண்டன் அல்லது கவண்டன் என்ற பட்டப்பெயரையே இவர்கள் பெரிதும் பயன்படுத்து கின்றனர்'' என மதுரை மாவட்டக் கையேடு குறிப்பிடுகின்றது.

துங்கபத்திரை ஆற்றங்கரையிலிருந்து, தொட்டியர்கள் காப்பிலியர் சாதிப் பெண்களைக் கவர்ந்து செல்லும் கொடுமை யிலிருந்து தப்ப, ஏழு தலைமுறைகளுக்கு முன் உருமிக்காரன் களுடன் இங்கு வந்து குடியேறியதாகச் சில காப்பிலியன்கள் கூறுகின்றனர். தொட்டியர்களிடையே வழங்குவதான மற்றொரு வாய்வழி வரலாற்றின்படி, "முகமதியர்களின் கெடுபிடிக்கு உள்ளான இச்சாதியார் கடக்க இயலாது வெள்ளப் பெருக் கெடுத்த துங்கபத்திரை ஆற்றின் குறுக்கே விழுந்து கிடந்த இரண்டு புங்க (*Pongamia glabra*) மரங்களைப் பாலமாகப் பயன்படுத்தி ஆற்றைக் கடந்து ஓடி வந்தனர். மைசூரிலிருந்து காஞ்சிவரம் சென்று சேர்ந்த இவர்கள் அங்கிருந்து கோயமுத் தூர் சென்று பின்னர் மதுரை மாவட்டத்தை அடைந்தனர். இவர்கள் காஞ்சிவரத்தில் தங்கிய நிகழ்ச்சி எப்பொழுதும் வற் புறுத்திக் கூறப்படுவதோடு கூட இச்சாதியார் காஞ்சி வரத ராசப் பெருமாளுக்கான தங்களுக்கே உரிய கோயிலைப் பெற் றிருப்பதையும் அதனை உறுதிப்படுத்தும் சான்றாகக் காட்டு வர்'' எனக் கூறப்படுகிறது.*

காப்பிலியர் ஒன்பது கம்பள சாதியார் கூட்டத்தினுள் ஒரு சாதியாராகக் கருதப்படுகின்றனர். சாதிக் கூட்டங்களின்போது ஒரு கம்பளியை விரித்து அதன் நடுவே பூக்களால் அலங்கரிக்கப் பட்ட நீர்க்குடத்தினை மாவிலையாலும், தேங்காயாலும் வாயி னைப் பொத்தி வைக்கும் பழக்கத்தை இவர்கள் மேற்கொள் வதாலே இவ்வாறு அழைக்கப்படுகின்றனர். "இவர்கள் தர்மக் கட்டு, மூன்று கட்டு என்ற இரண்டு அகமணக்கட்டுப்பாடு உடைய உட்பிரிவுகளாகப் பிரிந்துள்ளனர். கணவனை இழந்த ஒருத்தி ஒரே ஒருமுறை மறுமணம் செய்து கொள்வது தர்ம மாகும் எனக் கொண்டு அதனை அனுமதிப்பதால் முன்னவர்

---

* மதுரை மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Madura district.)

அப்பெயர் பெற்றனர். ஒருத்தி மூன்று முறை அடுத்தடுத்து மணம் செய்து கொள்ளலாம் என அனுமதிப்பதால் பின்னவர் அப்பெயர் பெற்றனர்" என மதுரை மாவட்ட விவரக் குறிப்புக் கூறுகின்றது. ஒக்கிலியர், மூன்று வளையல்காரர், பொட்டுக் கட்டிக் கொள்பவர், வொக்குலத்தோர் எனத் தங்களிடையே நான்கு உட்பிரிவுகள் இருப்பதை இவர்கள் ஏற்றுக் கொண்டுள் ளனர். வொக்குலத்தோரில் பல புறமணக்கட்டுப்பாடுடைய குலங்களும் அக்குலங்களுள் மேலும் பல புறமணக்கட்டுப்பாடு டைய உட்பிரிவுகளும் உள்ளன என்பதனைப் பின்வரும் அட்ட வணை விளக்கும்.




ஒரு புறமணக்கட்டுப்பாடு உடைய குலம் யானை என அழைக்கப்படுகிறது. அதன் உட்குலங்களின் பெயராக ஹட்டி (பட்டி), அரணை, புலி, போன்ற உயிருடையனவும் உயிரற்ற னவும் வைக்கப்பட்டுள்ளன.

கௌட என்ற சாதித் தலைவன் சாண்டரி என்ற உதவி யாளன் துணை கொண்டு சாதித் தொடர்பான காரியங்களை மேற்பார்த்து வருகிறான். சில இடங்களில் சாதிப் பள்ளி எனப் படும் பள்ளன் அல்லது மறவன் சாதித் தலைவனுக்கு உதவி யாளனாக உள்ளான்.

வயது வந்த பின்னர் மணமுடிப்பதே பெரு வழக்கு. மண மானதற்கு அடையாளமாக ஒருத்தி வழக்கமாக அணிந்து கொள்ளும் தாலியினை இவர்கள் அணியும் வழக்கமில்லை.

திருமணச் சடங்கின் முதல் நாளன்று மாலையில் மணமக்கள் அவரவர்கள் தாய்மாமன் இல்லம் அழைத்துச் செல்லப் படுவர். அங்கு அவர்களுக்குச் சந்தனமும் மஞ்சளும் பூசும் நலங்குச் சடங்கு நடைபெறும். தாய்மாமன்மார் மனமக்களின் கால் விரலில் மெட்டி அணிவிப்பர். அதற்கு மறுநாள் மண மகளுக்குரிய விலையான பரிசப்பணம் தரப்பட்டபின் கும்மரன், உரிமைக்காரன், வண்ணான் ஆகியோர் முன்னிலையில் ஊர் மக்களுக்கு அவர்களின் தகுதி வரிசைப்படி வெற்றிலை பாக்கு வழங்கப்படும். மூன்றாம் நாள் மணமகன் ஊர்வலமாக மண மகள் இல்லம் செல்வான். அங்கு அவர்கள் விரல்களைத் தாய் மாமன் அல்லது தாய்மாமன்மார் இணைத்து வைப்பர். இதன் காரணமாக இந்த நாள் கைகூடுகாகோடின (கை பிணைக்கும்) நாள் எனப்படுகிறது.

"இவர்கள் மணச் சடங்கில் மணத்தை உறுதிப்படுத்தும் நிகழ்ச்சிகள் மணமகன் அனுப்பிய மஞ்சள் நீர் தோய்த்த துணி யினை மணமகளுக்குப் போர்த்துவதும் மணமகளுக்குக் கறுப் புக் கண்ணாடி வளையல்களை அணிவிப்பதும் (மணமாகாத சிறுமியர் அரக்கு வளையல்களை மட்டுமே அணிந்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர்) மணமக்களின் சிறு விரல்களை ஒன்றாக இணைத்துவைப்பதுமாகிய இவையேயாம். ஒருவன் தன் அத்தை மகளை மணந்துகொள்வதற்கான முன்னுரிமை பெரி தும் தீவிரமாகப் பின்பற்றப்படுகிறது. இதன் காரணமாகத் தொட்டியரிடையே காணப்படுவதைப் போல இவர்களிடையே யும் மிகுந்த வயது வேறுபாடுடைய கணவன் மனைவியர் பல ராக உள்ளனர். தன் கணவன் உடல் உறவு கொள்வதற்கு உரிய வயது வராதவனாக இருக்கும் ஒருத்தி அவனுடைய நெருங்கிய உறவினர்களோடு உடலுறவு கொண்டு பிள்ளை களைப் பெற்றுக் கொள்ளலாம். அத்தகைய உறவின் காரண மாக அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் அவள் கணவனுக்குப் பிறந்த குழந்தைகளாகவே பாவிக்கப்படுவர். (ஒருத்தி தன் கணவனுடைய உடன்பிறந்தவர்களோடு உடலுறவு கொள்வ தால் அவள் ஒழுக்கங் கெட்டவள் என்ற பழிக்கு ஆளாவ தில்லை எனக் கூறப்படுகிறது.) மணமானவர்கள் வேறு சாதி

யாரோடு கள்ளத் தொடர்பு கொண்டால் சாதி விலக்கத்திற்கு உள்ளாவர். அத்தகைய உறவு கொண்டவள் இருந்தும் இறந்தவளாகவே கருதப்படுவதைக் குறிக்கும் வகையில் அவளுடைய சிறிய அணி ஒன்றினுக்கு முறையான சாவுச் சடங்கினை நடத்திப் பின்னர் அதனை எரிப்பர்'' என மதுரை மாவட்டக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

முதன்முதல் பூப்படையும் சிறுமி பதின்மூன்று நாள்களுக்குத் தீட்டுக்குரியவளாகக் கருதப்பட்டு வீட்டின் ஒரு மூலையிலோ ஊர் மந்தையில் தனித்தோ இறுத்தப்படுகிறாள். அவள் வீட்டில் தங்கினால் அவள் தாய் மாமன் அப்பகுதியினைத் திரைச்சீலை ஒன்றிட்டு மறைப்பான். ஊர்ப் பொது மந்தையில் தங்கினால் அங்குக் குடிசை ஒன்று அமைப்பான். இந்தப் பணிக்காக அவனுக்கு நல்ல விருந்திடுவர். பதின்மூன்றாம் நாள் அச்சிறுமி ஊர்க் குளத்தில் குளித்துவிட்டு வந்து ஓர் உலக்கையையும் பணியாரத்தையும் தாண்டி வீட்டிற்குள் புகுதல் வேண்டும். வீட்டு வாசலில் அப்போது கொஞ்சம் சோறு வைத்து அதனை ஒரு நாயினைத் தின்னச் செய்வர். அது அவ்வாறு தின்னும்போது அதனை நன்கு மொத்துவர். மொத்துண்ட அது எவ்வளவுக்கு எவ்வளவு உரக்கக் குலைக்கின்றதோ அத்தனைக்கு அத்தனை அதிகமான குழந்தைகளை அவள் பெற்றெடுத்துக் கொள்வாள். மொத்துண்ட நாய் குலைக்கவில்லையாயின் அவளுக்குக் குழந்தை பிறக்காது எனக் கருதுவர். மஞ்சளில் தோய்த்த பருத்தி நூலினை மணமான ஒருத்தி அவள் கழுத்தில் அணிவிப்பாள். அவள் மணமான சிறுமியாயிருப்பின் கண்ணாடி வளையல்களை அணிந்து கொள்ளலாம். அவள் தங்கியிருந்த குடிசையினை எரிப்பதோடு அவள் பயன்படுத்திய மட்பாண்டங்களையும் உடைப்பர்.

லக்கம்மா, வீர லக்கம்மா ஆகியன இச்சாதிக்குரிய குல தெய்வங்கள் எனக் கூறப்படுகிறது. சென்னராயன், திம்மப்பா, சீரங்கப் பெருமாள் ஆகிய தெய்வங்களையும் இவர்கள் வழிபடுகின்றனர். சில குலத்தவர்கள் தங்கள் குலத்திற்குரிய குல தெய்வங்களைப் பெற்றுள்ளனர். தசிரியோரு குலத்தவருக்குத் திம்ம

ராயரும், ஹட்டியோரு குலத்தவருக்கு மல்லம்மாவும் இதன் படி குலதெய்வங்களாகக் கருதப்படுகின்றனர்.

இறந்தவர்களை எரிப்பதே இவர்கள் வழக்கம். கருவுற்ற பெண்கள், குழந்தைகள், காலரா போன்ற தொற்றுநோய்களால் இறப்பவர்கள் ஆகியோரைப் புதைக்கின்றனர். கருவுற்ற பெண் களைப் புதைக்கு முன் அவர்கள் கருவில் உள்ள குழந்தையை அவர்களை அடக்கம் செய்யுமுன் வெளியே எடுப்பர். தொட்டி யர்களுடைய சாவுச் சடங்கினைப்போலவே இவர்களுடைய சாவுச் சடங்குகளும் நிகழ்கின்றன. சக்கிலியனே சுடுகாட்டுக்குத் தீயினை எடுத்து வருகிறான். சாவுச் சடங்கின் இறுதி நாளன்று (கருமாந்திரத்தின் போது) சமைத்த சோறு கண்டங்கத்திரிப் பழம் (*Solanum xanthocarpum*) தும்பை இலை (*Leucas aspera*) ஆகியனவற்றைச் சிறு பேய்க் கரும்புத் துண்டுடனும் கொஞ்சம் அறுகுடன் தட்டில் வைத்து, அத் தட்டினை ஆற்றங்கரைக்கு எடுத்துச் சென்று அங்கே சமைக்கப்பட்டுள்ள மனித உருவுக்கு மற்ற பொருள்களோடு படைப்பர். சோற்றில் கொஞ்சத்தினை எருக்கம் இலைகளில் வைத்துக் காகங்களுக்கு உண்ண வைப்பர். அங்கிருந்து திரும்பும்போது குறிப்பிட்ட ஓர் இடத்தில் இறந்த வரின் மைத்துனன் அல்லது மாமனார், இறந்தவருடைய பங் காளிகள் இருவருடன் வரிசையாக நிற்பர். அவர்கள் முன் ஒரு துணியினைத் திரை போல நீட்டிப் பிடிக்க அவர்கள் தங்கள் வலக் கரங்களை அதன்மீது வைப்பர். அவர்கள் கைகளை ஒரு வண்ணாத்தி பால், பசுவின் கோமயம், மஞ்சள் நீர் ஆகியவற் றில் அறுகம் புல்லினைத் தோய்த்து மும்முறை தொடுவாள். அதன் பின் வண்ணான் அவர்கள் கையினை நீரால் கழுவு வான். பங்காளிகள் அனைவரும் புதிய தலைப்பாகை அணிந்த வர்களாக ஊர்வலமாக உரிமைக்காரனும் வண்ணானும் உடன் வர ஊருக்குத் திரும்புவர். சடங்குகள் தொடங்கி முடியும்வரை வண்ணான் உடன் இருக்க வேண்டுவது இன்றியமையாதது.

மதுரை மாவட்டத்திலுள்ள கம்பம் பள்ளத்தாக்கினைச் சேர்ந்த காப்பிலியன்களைப் பற்றிய பின்வரும் குறிப்புக்களுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன். இவர்

களிடையே வழங்கி வரும் ஒரு வாய்வழி வழக்குப்படி இவர்கள் தங்கள் கால்நடைகளுக்கான மேய்ச்சல் நிலத்தினைத் தேடிய படி தங்கள் பிறப்பிடத்தை விட்டு இடம் பெயர்ந்து. வந்த தாகக் கூறுகின்றனர். இவர்கள் தங்களோடு ஓட்டி வந்த கால் நடைகளின் மரபு வழிவந்த இனம் இன்னமும் அந்தப் பள்ளத் தாக்கில் காணப்படுகின்றது. உருவில் சிறியனவாயினும் சுறு சுறுப்பும், பாய்ந்தோடும் ஆற்றலும் மிக்கவை அவை. சுமார் நூற்றியைம்பது எண்ணிக்கையிலான இவை புனிதமானவை என்ற கருத்துப்பட கன்னடத்தில் ‘தேவரு ஆவு’ எனவும், தமி ழில் ‘தம்பிரான் மாடு’ எனவும் அழைக்கப்படுகின்றன. இந்த இனப் பசுக்களிடம் இவர்கள் பால் கறப்பதில்லை. இவற்றின் கன்றுகள் வளர்ந்தபின் இனப் பெருக்கத்துக்கு அன்றி வேறு எந்தப் பணியிலும் ஈடுபடுவதில்லை. இந்தக் கால்நடைகள் இறக்குமாயின் இவற்றை ஆழக் குழி தோண்டிப் புதைக்கின்றன ரேயன்றிச் சக்கிலியர்களிடம் ஒப்படைப்பதில்லை. இக்காளை களில் ஒன்று பட்டத்து ஆவு என அழைக்கப்படுகிறது. ஒரு விசித்திரமான சடங்கினை நடத்தி இந்தப் பட்டத்து ஆவினைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஒரு நல்ல நாளில் சாதியைச் சேர்ந்த அனைவரும் கூடிச் சாம்பிராணி, கர்ப்பூரம், தேங்காய் பழம் வெற்றிலை ஆகியவற்றைப் படைத்து ஆவினத்திற்குப் பூசை செய்வர். இதற்கிடையே ஒரு கற்றைக் கரும்பு அவற்றின் முன் கொண்டு வைக்கப்படும். கூடியுள்ளவர்கள், அக்கூட்டத்திலிருந்து எது முதலில் வந்து அக்கரும்புக் கட்டை அடைகிறது என ஆவ லோடு எதிர்பார்ப்பர். அவ்வாறு வரும் காளையினைப் பிடித்து மஞ்சள் பூசி, மாலை அணிவித்துக் காளை ராசாவாகப் பட்டங் கட்டுவர். தெய்வமான ஆயர் குலக் கிருஷ்ணனின் பெயரான நந்தகோபாலன் என்பதையோ வேணுகோபால சுவாமி என்ப தையோ அதற்குச் சூட்டுவர். அதனைச் சாதியார் அனைவரும் போற்றி வழிபடுவர். அதனை மேய்க்கவும் ஓட்டிச் செல்லவும் தனியே ஒருவன் அமர்த்தப்படுவான். அவன் அச்சாதியின் மாரக்கலப் பிரிவில் ஒன்றான எண்டார் உட்பிரிவினைச் சேர்ந்த வனாக இருப்பான். அவன் இறந்தபின் அப்பணிக்கு அதே பிரிவினைச் சேர்ந்த வேறொருவன் பின்வரும் முறையில் தேர்ந் தெடுக்கப்பட்டு அமர்த்தப்படுவான். சாதியைச் சேர்ந்தவர்கள்

அனைவரும் கூடிக் கால்நடைகளுக்குப் பூசை போட்டபின், தெய்வம் ஏறப்பெற்ற சிறுவன் ஒருவன் மாரகலர் கூட்டத்தில் ஒருவனைச் சுட்டிக்காட்ட, அவனே காளை ராசாவினை மேய்ச்சலுக்கு ஓட்டுபவன் ஆவான். அவன் இனாம் நிலத்தை அனுபவிக்கும் உரிமையோடு காளை ராசாவிற்காகத் தொடக்கத்தில் பரிசளிக்கப்பட்ட அணிமணிகளைப் பேணிக்காக்கும் பொறுப்பும், அவற்றின் விவரம் பற்றிப் பொறிக்கப்பட்டுள்ள செப்புப் பட்டயத்தைப் பேணிக்காக்கும் பொறுப்பும் உடையவனாவான். 1905-இல் பதினாறு ஆண்டுகளுக்கு முன்பு வழங்கப்பட்ட இது போன்ற ஒன்பது செப்புப் பட்டயங்கள் இருந்துள்ளன. அவற்றில் பல யார் என விவரம் புரிந்துகொள்ள இயலாத மன்னர்களால் வழங்கப்பட்டவை. கூடலூரைச் சேர்ந்த பொன்னும் பாண்டியன் காளை ராசாவிற்கு நிலமும் மற்றப் பரிசுகளும் வழங்கியுள்ளதாகத் தெரிகிறது. பள்ளாளராயர், ராமராயர் என்ற இருவர் நிலம் வழங்கியுள்ளனர். அவை வழங்கப்பட்ட ஆண்டுகளின் பெயர்கள் மட்டும் பதியப்பட்டுள்ளன. எந்தப் பட்டயத்திலும் சக ஆண்டு குறிக்கப்படவில்லை. ஆண்டுதோறும் கோடைகாலத்தில் கால்நடைகளை மலைப் பகுதிகளுக்கு ஓட்டிச் செல்லும் முன் தலைமைக் காளையிடமிருந்து அவ்வாறு ஓட்டிச் செல்வது நலம் பயக்குமா எனத் தெரிந்து கொள்ள ஒரு சடங்கு நடத்துவர். அதன்படி இரண்டு தட்டுகளில் ஒன்றில் பாலும் ஒன்றில் சர்க்கரையும் இட்டுப் பசுக்கூட்டத்தின் முன் வைப்பர். காளை அரசு அத் தட்டுகள் பக்கமாக வந்து திரும்பிச் சென்ற பின்னரே பசுக்கூட்டத்தை மலைப் பக்கத்துக்கு ஓட்டிச் செல்வர். தலைமைக் காளையினை வழக்கமாக ஓட்டுபவனோ அல்லது அவனுக்குப் பதிலாக வேறொருவனோ தலைமைக் காளையினை ஓட்டிச் செல்வான். பக்கத்து ஊர்களைச் சேர்ந்த காளைகளும் அதனுடன் செல்லும். தலைமைக் காளையினை ஓட்டிச் செல்வபன் ஒரு காவடியில் புதிதாகக் கறந்த பாலினைச் சேர்ந்துக் கட்டி உடன தூக்கிச் செல்வான். மலைப் பக்கத்திலிருந்து மீண்டும் பள்ளத்தாக்கிற்குத் திரும்பும் நாளன்று காவடியில் உடன்கொண்டு சென்ற பாலினைத் திறந்து பார்ப்பர். அந்தப் பால் உறைந்து கெட்டியாகக் காணப்படும் எனக் கூறப்படுகிறது. அதிலிருந்து சிறு துண்டினை வெட்டிப் பசுக் கூட்டத்

தோடு மலைக்குச் சென்ற ஒவ்வொருவருக்கும் வழங்குவர். மலைப்பக்கத்தில் தங்கியிருந்த காலத்தில் புனிதப் பசுக் கூட்டத்திற்கு ஏதேனும் தீங்கு நிகழ்ந்திருக்குமேல் அந்தப் பால் அது போல நல்ல நிலையில் உறைந்திராது எனக்கூறுவர். பள்ளத்தாக்கின் சுற்றுப்புறங்களில் வாழும் பிற சாதியார் புனிதக் காளைக்கு என நேர்ந்துவிடும் கன்றுகளிடையே இருந்தே புனிதக் காளை தேர்ந்தெடுக்கப்படுகின்றது. தை மாதம் முதல் தேதியன்று பிறக்கும் கன்றுகள் இவ்வாறு நந்தகோபாலருக்கு நேர்ந்து விடப்படுகின்றன. இவை சன்னிப் பசவு என அழைக்கப்படுகின்றன. அவற்றின் கால்களிலோ பிட்டத்திலோ முத்திரை இடப்படுவதோடு காதுகளும் சிறிதளவு கிழித்துவிடப்படும். இக்கன்றுகளைப் பால் கறக்கவோ ஏரில் பூட்டவோ பயன்படுத்துவதில்லை. இவற்றை விற்கவும் முடியாது. இவை புனிதப் பசுக்களின் கூட்டத்தில் சேர்க்கப்பட்டாலும் சேங்கன்றுகள் தனித்தே வைக்கப்படுகின்றன. அடுத்தடுத்தப் புனிதக் காளைகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவை பற்றியதான பல அதிசய நிகழ்ச்சிகள் கூறப்படுகின்றன. தொட்டியர்களுக்கும் காப்பிலியர்களுக்குமிடையே திண்டுக்கல்லில் நிகழ்ந்த கலவரத்தின்போது அங்குள்ள ஒரு பாறையில் புனிதக் காளை தன் குளம்படித் தாரையினைப் பதித்துள்ளதாகவும் அதனை அங்கு இன்றும் காணலாம் எனவும் நமபுகின்றனர். அதன்பிறகு அவ்விரு சாதியாருக்கும் இடையே தொம்பச்சேரியில் நடைபெற்ற கலவரத்தில் ஒரு புனிதக் காளை கதிரவனை அவன் பயணப் பாதையில் பின்னோக்கிச் செல்லுமாறு செய்ததாகவும் அப்போது உடன்பாடு காணப் பேச்சுவார்த்தை நிகழ்கையில் ஒரு புளிய மரத்தடியில் விழுந்ததான நிழலினை இன்றும் காட்டுவர். அப்போது அந்தப் புனிதக் காளை செய்த உதவிக்காக மாரகலர்கள் புளியமரத்தினையோ அந்தக் காளை கட்டப்பட்டிருந்த வேல மரத்தினையோ இன்றும் விறகிற்காகவோ வீடுகட்ட மரமாகவோ பயன்படுத்துவதில்லை. பெரியகுளம் வட்டத்தில் தொடர்ந்து மூன்று ஆண்டுகள் சாதியைச் சேர்ந்த அனைவரிடமும் வரிவசூலித்து 1906-இல் ரூ. 11,000 வரை சேர்த்துக் கம்பத்தில் புனிதக் கால்நடைகளுக்குத் தொழுவமாகப் பெரியதொரு காரைக் கட்டிடத்தைக் கட்டியுள்ளனர்.

சாதாரணக் கால்நடைகளுக்கு விதிக்கப்படும் மேய்ச்சல் கட்டணமே தங்களுடைய புனிதக் கால்நடைகளுக்கும் விதிக்கப்பட்டு வருவது அவர்களுக்குப் பெருங்குறையாக உள்ளது. தெய்வங்களை மனிதர்களுக்குச் சமமாக நடத்துவது போன்றதொரு தகாத செயல் இது என அவர்கள் கருதுகின்றனர். சாதித் தொடர்பான வழக்குகளில் உடன்பாடு காணும்போது புனிதக் கால்நடைக்கான தொழுவத்தினுள் இருந்தபடி ஆணையிடும் பழக்கத்தை மேற்கொள்கின்றனர்.

"மக்கள் தொகையில் பெரும்பான்மையோர் காப்பிலியன்களாக உள்ள கம்பம் பகுதியில் கன்னடம் பேசும் மற்றொரு சாதியாரான அனுப்பர் முன்பு பெரும்பான்மையினராக இருந்ததாகவும் இந்த இரு பிரிவினருக்கும் இடையே கலவரங்கள் தோன்றித் தொடர்ந்து நீட்டித்ததில் காப்பிலியர்களின் தலைவனான ராமச்சந்திர கவுண்டன் கொலையுண்டான் எனவும் அவன் உயிர்விடும்போது அனுப்பர்களைச் சபித்ததாகவும் அப்போதிருந்து அவர்கள் வளம் சுருங்கியவர்களாக நலிவுற்றனரெனவும் கம்பத்தில் தற்போது அனுப்பர் சாதியைச் சேர்ந்த ஒருவர் கூட இல்லையெனவும் வாய்வழி வரலாறு வழங்கி வருகின்றது. அந்த ஊருக்குக் கிழக்கே ராமச்சந்திர கவுண்டன் உடல் புதைக்கப்பட்ட இடம் என்று இன்றும் ஓர் அத்திமரத்தடியைக் காட்டுவர். அதன் அருகே ராமச்சன் குளம் என்ற குளம் உள்ளது. அதன் கரையோரம் அவனுடைய சாம்பல் வைக்கப்பட்டுள்ள மடம் உள்ளது."*

காபுகள் – Kāpu

காபுகள் அல்லது ரெட்டிகள் இருபது இலட்சத்திற்கு மேற்பட்ட எண்ணிக்கையினராக உள்ளனர். சென்னை மாநிலத்தில் மிகப் பெரிய எண்ணிக்கை கொண்ட சாதியாரான இவர்கள் தெலுங்கு பேசப்படும் பகுதிகளில், பயிர்த் தொழிலாளராகவும் விவசாயிகளாகவும் பண்ணையார்களாகவும் உள்ளனர். அனந்

* மதுரை மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Madura district.)

தஞ்சாவூர் மாவட்ட விவரக் குறிப்பில் தெலுங்கு மாவட்டங்களில் பெருமளவிலான நிலத்துக்கு உரிமையாளர்களாக இருக்கும் இவர்கள் போதுமான வசதி படைத்தவர்களாகவும் முன்னேறிக் கொண்டிருக்கும் சிறு நிலக்கிழார்களாகவும் இந்து சமூகத்தில் பிராமணர்களுக்கு அடுத்தபடியாக மதிக்கப்படுபவர்களாகவும் மரியாதைக்குரியவர்களாகவும் விளங்குகின்றார்கள் எனக் கூறப்பட்டுள்ளது. "ரெட்டிகள் சிக்கனமானவர்கள். தங்கள் பணத்தை நிலத்தில் முதலீடு செய்வார்கள். எனினும் கஞ்சத்தனமானவர்கள் எனக் கூறமுடியாது. வசதி இருப்பின் நல்ல முறையில் உடை அணிவர். இச்சாதியைச் சேர்ந்த பெண்களும் ஆண்களும் உயர்ரகப் பொன்னாலான அணிகளை அணிவர். இவர்கள் இல்லங்கள் நன்கு அமைக்கப்பட்டனவாகவும் தூய்மையுடையனவாகவும் இருக்கும். போதுமான வசதி பெற்ற குடியானவர்களுக்கு இவர்களை முன் மாதிரியாகக் காட்டலாம். ராகியினை முக்கிய உணவாகக் கொள்ளும் இவர்கள் ஆற்றலும், வனப்பும் வாய்ந்த இனத்தவர்" எனச் சேலம் மாவட்டக் கையேடு கூறுகின்றது. ரெட்டிகளின் பரம்பரைத் தொழில் பற்றி வழங்கும் பழமொழிகளுள் பின்வருவன குறிப்பிடத்தக்கவை:-

1. "ஒவ்வொரு சுற்று மண்ணைப் புரட்டித் தள்ளியவுடனும் ஒரு முறை குடித்தாலும் ரெட்டிதான் நிலத்தை உழக் கூடியவன்."

2. "மண்ணை உழுது பிழைப்பவனெல்லாம் ரெட்டிகள் தான."

3. "கமுகு பயிரிடும் ரெட்டியின் வீட்டில் கணவனுக்கும் மனைவிக்குமாக ஒரே ஒரு துணிதான் இருக்கும்."

"காபு என்ற சொல் காவல்காரனையும் ரெட்டி என்ற சொல் அரசனையும் குறிக்கும். கிறித்தவக் கால வழிப்பின் முதல் நூற்றாண்டுகளில் காபுகளும் ரெட்டிகளும வலிமை வாய்நத திராவிடப் பழங்குடிகளாக இருந்திருக்க வேண்டும். இவர்கள் இந்தியாவின் பெரும்பாலான பகுதிகளில் தாங்கள் தங்கி வாழ்ந்ததற்கான அடையாளச்

சின்னங்களை விட்டுச் சென்றுள்ளனர். சாளுக்கியர்கள், பெள்ளாலர், பல்லவர்கள் ஆகியோரால் இவர்கள் அவ்வப் போது வென்று ஒடுக்கப்பட்டு வந்தாலும் கி.பி. 1323-இல் பிரதாப ருத்ரன் வாரங்கலில் பேரரசன் கியாசு டீன் துக்ளக்கினால் சிறைப்பிடிக்கப்பட்டபின் இச்சாதியினைச் சேர்ந்த பல சமீன்தார் குடும்பங்கள் தோன்றலாயின.*

சேலம் மாவட்டக் கையேட்டில் கொங்கு நாட்டு அரசு பற்றி எழுதும் மறைத்திரு டி. பவுல்க்ஸ் (T. Foulkes) அவர்கள் குறிப்பிடுவதாவது:-"கொங்கு நாட்டுஅரசு கிறித்தவக் கால ஊழியின் தொடக்க நூற்றாண்டுகளிலேயே இருந்துள்ளது. அது தன்னுரிமையுடன் தனி ஆட்சி செலுத்திய மன்னர்களின் கீழ் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை தொடர்ந்து உரிமை பெற்றதாயிருந்து வந்தது. அதன்பின் அதனைத் தஞ்சையை ஆண்ட சோழ மன்னர்கள் வென்று தங்கள் நாட்டுடன் இணைத்துக் கொண்டனர். மக்கென்சியின் கையெழுத்துப் படிகளின் தொகுப்பில் உள்ள கொங்கு தேச ராசாக்கள் சரித்திரம் அதன் முற்பகுதியில் சோழர்கள் அந்த நாட்டை வெற்றி கொள்ளும் வரை அரசாண்ட இருபத்தெட்டு அரசர்களின் சுருக்கமான வரலாற்றைக் கூறிச் செல்கிறது. இந்த மன்னர்கள் இரண்டு அரச மரபினைச் சேர்ந்தவர்கள். அதன் முதல் கால்வழியினர் சூரிய குலத்தவர்கள். பின் வந்தவர்கள் கங்கர் குல மரபினைச் சேர்ந்தவர்கள். முதல் கால் வழியில் பரந்துபட்டதும் இந்தியா முழுவதும் பல்வேறு காலங்களில் தாங்கள் தங்கி வாழ்ந்ததற்கான அடையாளத்தை விட்டுவந்துள்ளதுமான ரெட்டி இனத்தைச் சேர்ந்த ஏழு மன்னர்கள் ஒருவர் பின் ஒருவராக ஆட்சிக்கு வந்துள்ளனர். இவர்கள் அரச மரபினர் என்பதனைக் குறிக்கும் தொன்மையான சான்று இதுவாகவே இருந்திடல் கூடும். இவர்கள் ஆட்சிபுரிந்த பகுதிகளுள் முதன்மையானதாக அமைந்துள்ளதும் இப்பகுதியே. கி.பி. இரண்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்குப் பின் இவர்கள் இப்பகுதியில்

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1891. (Madras Ceusus Report, 1891.)

தொடர்ந்து ஆட்சி செலுத்தினர் என்பதற்கான சான்றேதும் இல்லை. வடக்குத் தக்காணத்தில் கி.பி. நான்காம் நூற்றாண்டில் சாளுக்கிய மரபினர் நர்மதையைக் கடந்தவுடன் வெற்றி கொண்டதாகக் கூறப்படும் அரசுகளில் ஒன்றாக இவர்களது அரசும் கூறப்பட்டுள்ளதே அதனை அடுத்து இவர்களைப் பற்றி நமக்குத் தெரியவரும் வரலாற்றுக் குறிப்பாகும். கொங்கு தேச ராசாக்கள் சரித்திரத்தில் இவர்கள் சூரிய குலத்தவர்களாகக் கூறப்பட்டுள்ளனர். இந்த குலத்தின் கால்வழியின் தொடக்கம் இந்துக்களின் சூரிய குலக் காப்பியத் தலைவனான இராமனின் இரண்டாவது மகனான குசனை முதலாவதாக வைத்துத் தொடங்கியதாகக் கூறப்படுகிறது. எனினும் இவர்களுடைய இந்தக் கூற்றைப் பலர் ஏற்றுக் கொள்வதில்லை. சிலர் இவர்கள் சந்திர குலத்தைச் சேர்ந்த யாதவ மரபின் வழி வந்தவர்கள் எனக் கூறுகின்றனர். இக் கூற்றுப் பிற்காலத்தவர்களான ராத்தோர்களுக்கே பொருந்தும் எனக் கொள்ள வேண்டியதாகின்றது.'' மறைத்திரு டி.பவுல்க்ஸ் அவர்கள் ரட்டி என்ற பெயர் இரட்டு, இரெட்டி, ரத்த, ராத்தொர், ரத்தவுர், ராட்டிரகூட, ரட்ட, ரெட்டி போன்ற பல வடிவங்களில் காணப் படுகின்றன எனக் கூறுகின்றார்.

ராட்டிரகூடர்களைப் பற்றிய ஒரு குறிப்பில் திரு ஜெ.எப். பிளீட் அவர்கள் எழுதுவது வருமாறு:-* "இப் பகுதிகளில் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் முதன்முதலாகச் சாளுக்கியர் நுழைந்தவுடனேயே பம்பாய் மாநிலத்தைச் சேர்ந்த கன்னட மாவட்டங்கள் அவர்கள் வசமாயின. பல்லவர்களும் மற்ற மன்னர்களும் அவர்கள் நாட்டின் மீது படையெடுத்த சில ஆண்டுகள் தவிர கி. பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்க காலம் அல்லது இடைப்பட்ட காலம் வரை இந்தப்பகுதிகள் அவர்கள் ஆட்சியின் கீழேயே இருந்தன. அதன் பின் இப்பகுதியின் மீதான அவர்கள். அதிகாரம் கொஞ்ச காலம் முற்றுமாக

---

* பம்பாய் மாநிலத்துக் கன்னட மாவட்டங்களின் அரசகுல மரபுகள். (Dynasties of the Kanarese Districts of the Bombay Presidency.)

நீங்கிவிட்டது. இந்த இடையீட்டுக்குக் காரணமானவர்கள் இவர்களைப் போலவே வடக்கே இருந்து படையெடுத்து வந்த ராட்டிரகூடர்களே ஆவர். ராட்டிரகூட அரசின் தொடக்கம் எப்பொழுது என்பதனை உறுதிபடக் கூறுவது கடினம். அந்த மரபைப் பற்றிய தொன்மையான குறிப்புக்கள் மேலை சாளுக்கியர்களின் கல்வெட்டுக்களிலேயே காணப்படுகின்றன. மிராஜ் பட்டயங்கள் முதலாம் செயசிம்மன் பல அரசர்களை வென்று சாளுக்கியர்கள் இழந்த பழம்பெருமையையும் அரசினையும் மீண்டும் நிலைநாட்டினான் எனக் கூறுகின்றன. அவன் வென்ற அரசர்களுள் எட்டாயிரம் யானைகளைத் தன் படையில் கொண்டிருந்தவனான கிருட்டிணன் மகனான இந்திரன் என்ற ராட்டிரகூட மரபைச் சேர்ந்தவனும் ஒருவன். அய்ஹொலெமெகுதிக் கல்வெட்டுக்களில் கூறியுள்ளபடி ஆப்பாயிக கோவிந்த என்பவன் வடக்கே இருந்து யானைப் படையோடு சாளுக்கிய அரசின் மீது படையெடுத்து வந்தவன் ஆவான். அவனை எதிர்த்து விரட்டிய இரண்டாம் புலிகேசியும் அதே சாளுக்கிய மரபைச் சார்ந்தவனே. இதிலிருந்து கி. பி. ஆறு, ஏழாம் நூற்றாண்டுகளில் மத்திய அல்லது வட இந்தியாவில் இருந்த அரசுகளுள் ராட்டிரகூட அரசர் குலம் குறிப்பிடத்தக்க சிறப்பான இடம் பெற்றிருக்க வேண்டும் என்பது தெளிவாகப் புலனாகின்றது. பிற்காலக் கல்வெட்டுக்கள் ராட்டிரகூடர்கள் சந்திர குலத்தவரெனவும் யதுவின் மரபில் வந்தவர்கள் எனவும் கூறுகின்றன. டாக்டர் பர்னெல் இந்த மரபு திராவிட இனத்ததாக இருத்தல் வேண்டும் எனக் கருதுகிறார்.* முனைவர் புயுஹெலெர் (Dr. Buhler) ராட்டிரகூடர்கள் சாளுக்கியரைப் போலவே வடபுலத்திலிருந்து வந்து தக்காணத்தில் குடியேறிய ராசபுத்திர இனத்தவர்களா அல்லது தக்காணத்தை வெற்றி கொண்டபின் ஆரியர்களால் தங்கள் சமுகத்தினுள் ஏற்றுக்

---

* இதனை விளக்குமுகத்தான் அவர் திராவிடப் பெயர்கள் வடமொழி வடிவப் படுத்தப்படுவதற்கு 'ராஷ்டிர' என்பதனை ஒரு எடுத்துக் காட்டாகக் காட்டி அது கன்னட, தெலுங்கு மொழிகளுக்குரிய 'ரெட்டி' என்ற சொல்லின் வேறுபட்டதல்லாததான 'ரட்டா' என்பதன் புராண இயல்படத் திரிந்த வடிவமே எனக் கூறுவார்.

கொள்ளப்பட்ட திராவிடர்களா என்பதனைப் பற்றி எந்தக் கருத்தையும் கூற இயலாதவராக உள்ளார். அவர்களுடைய தொடக்ககாலக் கல்வெட்டுக்கள் அவர்கள் வடக்கே இருந்து வந்தவர்கள் எனக் கொள்ளவே இடந்தருகின்றன. அவர்களுடைய தோற்றம் எந்த இனத்தைச் சேர்ந்ததாயினும் ராட்டிரகூடர் என்ற சொல் மற்ற பல அரச மரபினைச் சேர்ந்தவர்களுடைய கல்வெட்டுக்களில் 'ஒரு பகுதி அல்லது மாவட்டத்தின் தலைவன்' எனப் பொருள்படும் ராட்டிரபதி என்பதற்குப் பதிலாகவே பயன்படுத்தப்பட்டிருப்பதைக் காண்கிறோம். அந்தப் பெயரைத் தங்களுடைய மரபுக்கு உரிய பெயராகத் தேர்வு செய்யுமுன் ராட்டிரகூடர் உரிமையுடைய அரசர்களாகத் தனி ஆட்சி புரியத் தொடங்குமுன் அப்பகுதியை ஆண்டு கொண்டிருந்த மரபினரின் கீழ்க் குறுநில மன்னர்களாக இருந்திருக்க வேண்டும் எனவும் அது பற்றி எந்தச் சான்றையும் அவர்கள் பாதுகாத்து வைக்கவில்லை என்றும் எனக்குத் தோன்றுகிறது.''

நெல்லின் வகைகளையெல்லாம் எண்ணினாலும் எண்ணலாம் காபுகளின் சாதிப் பிரிவுகளை எண்ணிச் சொல்ல முடியாது என்ற வழக்கு மொழி காபுகளிடையே வழங்குகின்றது. 'பண்ட பதினாலுகுலாலு' வழக்கினை எடுத்துக்காட்டிச் சிலர் காபுகளிடையே பதினான்கு பிரிவுகளே உள்ளன எனக் கூறுவர்.

திரு ஸ்டுர்வட் அவர்கள் பின்வரும் பிரிவுகளைக் குறிப்பிடத் தக்கனவாகப் பதிந்துள்ளார்:-

1. அயோத்தியர்:- இவர்கள் ஒவுத் எனவும் அழைக்கப்படுவர். இராமன் இருந்து அரசாண்ட நகரம் அயோத்தி. இந்த உட்பிரிவு மதுரை, திருநெல்வேலிப் பகுதிகளிலேயே காணப்படுகிறது. தங்களுக்கு அயோத்தியோடு உள்ள தொடர்பு பற்றி இவர்கள் மிகவும் பெருமைப்பட்டுக் கொள்வர். திருமணச் சடங்கினைத் தொடங்கும் முன் பெண் வீட்டார் மாப்பிள்ளை வீட்டாரைப் பார்த்து நீங்கள் எந்தப் பக்கத்தவர் எனக் கேட்பர். அதற்கு மாப்பிள்ளை வீட்டார் அயோத்தி ரெட்டிகள் எனப் பதிலிறுப்பர். பின்னர் மாப்பிள்ளை வீட்டார்

பெண் வீட்டாரை இதே கேள்வியைக் கேட்பர். அதற்கு அவர்கள் மிதலா ரெட்டிகள் எனப் பதிலிறுப்பர்.

2. பலிசர்:- தெலுங்கு பேசும் வணிகர்களுள் பெரும்பான்மையானவர்கள் இவர்களே. பலிசர்களில் பலர் இன்று பயிர்த் தொழிலிலும் ஈடுபட்டுள்ளனர். இப்பிரிவினருள் பலர் தங்கள் சாதியினைக் காபு எனப் பதிந்திருப்பதற்கு இதுவே காரணம். காபு என்னும் தெலுங்குச் சொல் பயிரிடும் தொழில் மேற்கொண்டுள்ள உழவினைக் குறிக்கப் பொதுவாக வழங்கப்படும் சொல்லும் ஆகும்.

3. பூமாஞ்சி:- (நல்ல நிலம்)

4. தேசூர்:- தேசூர் என்ற இடத்தில் இவர்கள் முதலில் வாழ்ந்து வந்தவர்களாதல் வேண்டும். தேக என்ற உடலைக் குறிக்கும் சொல்லும் சூர என்ற வீரத்தைக் குறிக்கும் சொல்லும் இணைந்து இந்தப் பிரிவினர் வீரத்தால் பெயர் பெற்றவர்கள் என்பதனைக் குறிக்க இப்பெயர் வழங்கப்படுவதாகச் சிலர் கூறுவர்.

5. கண்டிக்கோட்டை:- இப்பிரிவினர் மதுரை திருநெல்வேலி மாவட்டங்களிலேயே காணப்படுகின்றனர். ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்களில் உள்ள ஓர் இடமான கண்டிக்கோட்டையிலிருந்து தெற்கு நோக்கி இடம் பெயர்ந்தவர்கள் இவர்கள்.

6. காசுலர்:- கண்ணாடி வளையல் செய்பவர்களான இவர்கள் பலிசர் பிரிவின் ஓர் உட்பிரிவினர். இவர்களிடையே நாக (நாகம்), தாபேலு (ஆமை) என்ற இரு பிரிவுகள் இருப்பதாகக் கூறப்படுகிறது. இவர்கள் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் சில இடங்களில் முத்திரை அணிகின்றனர்.

7. கம்மபுரி:- சிலவிடங்களில் தங்களைக் காபுகளாகக் கூறிக் கொள்ளும் கம்மர்களாதல் வேண்டும். சென்னை நகரில் தங்கியுள்ள கம்மர் சிலர் தங்களைக் காபு அல்லது ரெட்டி என அழைத்துக் கொள்கின்றனர்.

8. மொரசர்:- வக்கலிகர்களின் ஓர் உட்பிரிவு. விரல் கொடுக்கும் காபுக்கள் என வழங்கப்படும் இவர்களிடையே உள்ள வழக்கப்படி ஒரு குடும்பத்தில் பேரன் பிறந்தால் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த தாத்தா (அதாவது பிறந்த பேரனின் தாத்தா) வினுடைய தலைமகனின் மனைவி தன் மூன்றாம் நான்காம் விரல்களின் கடைசி இரண்டு கட்டைகளைப் பைரவர் கோயிலில் வெட்டிப் பலி தரவேண்டும்.

9. நெரட்டி:- நெர்வதி, நெரடு என்றும் இப்பிரிவினை வழங்குவர். இப்பிரிவினர் கர்நூல் மாவட்டத்திலும் ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்களிலும் பெரும் எண்ணிக்கையில் காணப்படுகின்றனர்.

10. ஒரகண்டி:- இப்பிரிவினர் முன்பு உப்பளங்களில் பணி புரிந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. இது பிரதாப ருத்திரன் தலைநகரான வாரங்கல் என்ற பெயரின் சிதைந்த வடிவாதல் வேண்டும்.

11. பாகநாடி:- பிராக்நாடு எனப்படும் இது கிழக்கே உள்ள பகுதியிலிருந்து வந்தவர்கள் என்பதனைக் குறிக்கும்.

12. பள்ளெ:- தெலுங்கு நாட்டில் சென்று தங்கி வாழும் பள்ளிகள் சிலர் தங்களைப் பள்ளெ காபுலு என அழைத்துக் கொள்வதோடு தாங்கள் பள்ளியருடையதான ஜம்புமகரிஷி கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் எனவும் கூறிக் கொள்கின்றனர். இவர்கள் காபுகளுடன் மண உறவு செய்து கொள்வதில்லை. எனினும் அவர்களோடு உடன் உண்கின்றனர்.

13. பண்ட:- பயிர் எனப் பொருள்படுவது. இப்பிரிவினரே காபுகளுள் மிகுதியானவர்கள்.

14. பெதகண்டி:- பெத்தகல்லு என்ற இடத்தின் பெயரில் அமைந்த பிரிவு இது எனச் சிலர் கூறுவர். மறறவர்கள் வேறு பக்கம் திரும்புதல் எனப் பொருள்படும் 'பெத' என்ற சொல்லும் கண் எனப் பொருள்படும். 'கம்மி' என்ற சொல்லும் இணைந்து தன்னோடு வந்து பேசுபவனை நேரே பார்க்காமல்

பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொள்பவன் என்ற பொருள் படுவது எனக் கூறுவர். முரண்டு பிடிப்பவன் எனப் பொருள் படுவது இது எனவும் கூறுவர். (வளைந்து பணியாதவன் என்ற பொருளில் பெருங் கழுத்தன் என்ற வழக்குத் தோன்றி இருக்கலாம்) பெதகண்டிகள் ஆணவம் மிகுந்தவர்கள் எனக் கூறுவர்.

பரமகல் ஆவணங்களில்* பின்வரும் வழக்கு வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது:-"ஒரு சமயம் இப்பிரிவினைச்(பெதகண்டி) சேர்ந்தவர்களுடைய குரு ஓர் ஊரினை நெருங்கி அதன் அருகேயுள்ள ஒரு தோப்பில் தங்கியவராகத் தன் வருகையைத் தன் பிரிவினைச் சார்ந்தவர்களுக்கு அறிவிக்கும்படி தாசரியை அனுப்பி வைத்தார். அப்பிரிவினைச் சேர்ந்த ஒருவர் இல்லத்தில் சென்று குருவின் வருகை பற்றித் தாசரி அறிவித்தான். வீட்டுத் தலைவன் அந்த அறிவிப்பைக் காதில் போட்டுக் கொள்ளாததோடு குருவிடமிருந்து தப்ப வீட்டின் புறக்கடை வழியாக வெளியே ஓடினான். வீட்டின் புழக்கடை வாயில் தெலுங்கில் பெரடு என வழங்கப்படும். எதிர்பாராத வகையில் குரு தங்கியுள்ள தோப்புக்கே வந்து சேர்ந்துவிட்ட அவன் தன் குருவுக்கு உரிய மரியாதையைச் செலுத்தும்படி ஆகி விட்டது. அவர் அவனைத் தாசரி வந்து (வீட்டில் அவனை) பார்த்தானா என்று கேட்டார். அதற்கு அவன் அன்று முழுதும் தான் வீட்டிற்கு வெளியே வேலையாகப் போயிருந்ததாகப் பொய் கூறினான். அவர் உடனே தாசரியை அழைத்துவரச்சொல்லி அவனிடம் வீட்டுத் தலைவன் வீட்டில் இல்லாதபோது உடனே திரும்பி வராமல் காலம் தாழ்த்தியது ஏன் எனக் கேட்டார். தாசரி தான் அங்கே சென்றபோது வீட்டிற்கு உரியவன் வீட்டில் இருந்ததாகவும், தன்னைக் கண்டவுடன் அவன் புறக்கடை வாயில் வழியே ஓட்டம் பிடித்ததாகவும் கூறினான். அவன் கூறுவது உண்மையென உணர்ந்த குரு அவ்வாறு ஏமாற்றி ஓடியவனைப் பின்வாசல் வழியே ஓடியவன் என்ற பொருளில் பெரட்டிக்

---

* பிரிவு III, நிலமக்கள், அரசு அச்சகம் சென்னை, 1907. (Section, III, Inhabitants, Madras Government Press, 1907.)

கொண்டவரு எனப் பட்டப்பெயரிட்டு அழைத்துத் (அது தற்பொழுது சிதைந்த வடிவனதாக 'பெர்தகண்டவாரு' என வழங்குகின்றது) தான் இனி அவனைக் காண வரப் போவதில்லை என்றும் அவனுக்கும் அவன் சந்ததியினருக்கும் அப்போதிருந்து குரு யாருமில்லை என்றும் கூறிவிட்டார்."

15. போகாநாடு:- போகா=கமுகு (*Areca Catechu*)

16. வெலநாடி:- வெளநாடு என்பதன் திரிபு. வெளியாராக வந்த காபுகள் எனப் பொருள்படும்.

17. எர்லம்:- "இப்பிரிவினர் மற்ற எல்லாப் பிரிவினரை விடவும் தனித்த இயல்புடைய பிராமணக் கலப்பினத்தவர். எர்லம்மா என்ற ஒரு பிராமணச் சிறுமிக்கு அவளுடைய பெற்றோர் குழந்தைப் பருவத்தில் திருமணம் செய்து வைக்க இயலாது போன காரணத்தால் அவள் பிராமணர் சாதி வழக்கப்படி சாதியிலிருந்து வெளியேற்றப்பட்டாள். ஒரு காபு அவள் மீது பரிதாபப்பட்டு அவளை ஏற்றுக்கொள்ள, அவன் வாயிலாக அவள் பல குழந்தைகளைப் பெற்றாள். அவ்வாறு பிறந்தவர்களின் வழித்தோன்றல்களே எர்லம் காபுகள். இவ்வாறு அந்தப் பிராமணச் சிறுமி மீது இரக்கப்பட்டு அவளை ஏற்றுக்கொண்டவன் ஒரு பெஸ்தன் எனவும் சிலர் கூறுவர். எர்லம்மாவிற்கு அவளுடைய சாதியாரும் பெற்றோரும் கொடுமை இழைத்ததன் காரணமாக அவள் சந்ததியினர் அனைவரும் பிராமணர்களை மிக வெறுப்பதோடு உயர்ந்தவர்கள் எனக் கூறிக் கொள்ளும் மற்ற சாதியாரையும் தாழ்வாகவே மதிப்பர். தனித்தே வாழும் இயல்புடைய எர்லம் பிரிவினர் மற்ற சாதியாரோடு உடன் உண்ண மறுப்பதோடு சுண்ணாம்பு வேண்டும் என்றாலும்கூட அதனையும் தங்கள் சாதியாரிடம் இருந்தே பெறும் பழக்கம் உடையவர்களாக உள்ளனர். பிராமணர்களோ சூத்திரர்களிடமிருந்து கூடச் சுண்ணாம்பு பெற்றுக் கொள்வர். தீட்டினைப் போக்க அதில் கொஞ்சம் தயிர் கலந்து கொள்வது அவர்கள் வழக்கம். எர்லம் காபுகள் தங்கள் திருமணத்தை நடத்தி வைக்கவும் வேறு சடங்குகள் தொடர்பாகவும் பிராமணர்களையோ பிற பிரிவினைச்

சேர்ந்த பூசாரிகளையோ அமர்த்திக் கொள்வதில்லை. திருமணச் சடங்கின்போது ஓமம் வளர்ப்பதையோ விக்னேஷ்வரரை வழிபடுவதையோ இவர்கள் மேற்கொள்வதில்லை. நல்ல நாளும் நேரமும் பார்த்து ஒரு சுமங்கலியினைக்கொண்டு மணப் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டச் செய்தபின் விருந்துண்டு மகிழ்வர்'' எனத் திரு ஸ்டுவர்ட் எழுதியுள்ளார்.

பண்ட காபுகள் அகமணக்கட்டுப்பாடு உடைய பெரம ரெட்டி அல்லது முதுர ரெட்டி (பழைய காபு என்ற பொருளில்), காடம ரெட்டி அல்லது லெத காபு (இளைய பிரிவினர் என்ற பொருளில்) என இரு தேசுக்களாகப் பிரிந்துள்ளனர். கோதாவரி ஆற்றின் அருகே கிழக்கு மலைத்தொடரைச் சார்ந்த பள்ளத்தாக்குகளில் கொண்ட (குன்று) காபு என்ற பிரிவினர் பயிர்த்தொழிலிலும் மர வணிகத்திலும் ஈடுபட்டிருப்பதாக மறைத்திரு ஜெ.கெய்ன் குறிப்பிட்டுள்ளார். (பார்க்க: கொண்ட தொர.) ஆகுல (வெற்றிலை விற்போர்.) 1901 கணக்கெடுப்பில் தங்களைக் காபுகளின் உட்பிரிவினர் எனப் பதிந்து கொண் டுள்ளனர்.

1891 கணக்கெடுப்பு அறிக்கையில் காபு (பயிர்த்தொழில் புரிபவர்கள் என்ற பொருளில்) என்பது சக்கிலியர், தொம்மரர், கடபர், சவரர், தேலியர் ஆகிய சாதிகளின் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. மங்களர் சாதியின் உட்பிரிவாகவும் இது இடம் பெற்றுள்ளது. தெலுங்கு நாட்டைச் சேர்ந்த மராட்டியப் பயிர்த் தொழிலாளர் சிலர் ஆரே காபு என அழைக்கப்படு கின்றனர். கொண்ட தொரையர் கொண்ட காபுகள் எனவும் வழங்கப்படுகின்றனர். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் காபு என்பதற்குச் சமமான தமிழ்ப் பெயராகப் பண்டு என்பதும் ஒரியப் பெயராகக் காம்பொ என்பதும் தரப்பட்டுள்ளது.

ரெட்டி என்பதே காபுகளுக்குரிய வழக்கமான பட்டப் பெயர். தெலுங்கு நாட்டில் ஊர் மணியகாரர் எந்தச் சாதியைச் சேர்ந்தவராயினும் அவரை அழைப்பதற்குரிய பெயராகவும் இது வழங்குகின்றது. லிங்க பலிசர், தெலுங்கு வடுகர் அல்லது

தமிழ்நாட்டைச் சேர்ந்த வடுகர், வெலமர், ஏனாதியர் ஆகிய சாதிகளுக்கு உரிய உட்பிரிவாகவும் ரெட்டி என்பது உள்ளது. உழவர்களாகப் பணிபுரியும் கவரைகளுக்கு உரிய பெயராகவும் பள்ளியரின் உட்பிரிவில் ஒன்றான கள்ளங்கிகளின் பட்டப் பெயராகவும், சாதர்களின் பட்டப்பெயராகவும் ரெட்டி என்பது கொடுக்கப்பட்டுள்ளது. சம்புணி ரெட்டி என்ற பெயரை மீன் பிடித்தலில் ஈடுபட்டுள்ள பள்ளியர் சிலர் மேற் கொண்டுள்ளனர்.

காபுகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலப் பெயர் களுக்கு மாதிரியாகப் பின்வருவன அமைகின்றன:-

| | |
|---|---|
| அவுல (பசு) | முங்காரு (மகளிர்பாவாடை) |
| அல்ல (தானியம்) | மேகலா (வெள்ளாடு) |
| பண்டி (வண்டி) | காணுகல (புங்கு) |
| பரெல்லு (எருமை) | நாகலி (கலப்பை) |
| தண்டு (படை) | தங்கேரு (ஆவாரை) |
| கொர்ரெ (மறி) | உடுமல |
| குடிசெ (குடிசை) | வரிகெ (தினை) |
| கோடிய (கோழி) | எட்டுலு (எருதுகள்) |
| குண்டக (பரம்புக்கட்டை) | வேனுக (யானை) |

காஞ்சிவரத்தில் பண்ட ரெட்டிகள் பிரிவினரிடையே குல மரபுச் சின்னங்களைக் குறிப்பதாகக் குலப் பிரிவுகள் சில உள்ளன. அவற்றுள் மாதிரிக்கு சில வருமாறு:-

இப்பி (இலுப்பை) — இப்பிரிவினர் இந்த மரத்தையும் இது தரும் பொருள்களையும் பயன்படுத்து வதில்லை.

மகிழி (தாழை) — இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் மற்றவர்களைப் போல் தாழை மடலைத் தலையில் சூடுவதில்லை. தாழை நாரால் மூங்கில் படல் முடையப்பட் டிருந்தது என்ற காரணத்தால் இப்

பிரிவினைச் சேர்ந்த ஒருவன் அதனை வாங்க மறுத்துள்ளான் என்ற விவரம் தெரியவருகிறது.

மஞ்சம் (கட்டில்) — இப்பிரிவினர் கட்டிலில் படுத்து உறங்குவதைத் தவிர்க்கின்றனர்.

அரிகல (வரகு) — இப்பிரிவினர் இந்தத் தானியத்தைப் பயன்படுத்துவதில்லை.

சிந்தஜின்சலு (புளியங்கொட்டை) — இப்பிரிவினர் இக்கொட்டையினைத் தொடுவதில்லை.

புச்சா (தர்பூசணி) — இப்பிரிவினர் இந்தப் பழத்தை உண்பதில்லை.

பிஞ்சிகுண்ட வாண்டுலு என்ற இரவலர் பிரிவினர் காபுகளிடமிருந்தும், கோல்லர்களிடமிருந்தும் மட்டுமே பெரும்பாலும் இரக்கும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர். இந்த இரவலர்களே காபுக்கள் கோல்லர், கம்மர் ஆகிய சாதிகளுக்குரிய குலங்களுக்கும் கோத்திரங்களுக்கும் பெயரினைப் படைப்பவர்கள்.

காபுக்களின் தோற்றம் பற்றிப் பின்வரும் வழக்கு வரலாறு கூறப்பட்டு வருகிறது. பிரதாபருத்திரன் ஆட்சிக் காலத்தில் பெல்தி ரெட்டி என்பவனுடைய மனைவி கடுந்தவம் புரிந்து சூரியனிடமிருந்து பளபளப்பான கம்மல் ஒன்றினைப் பெற்றாள். அரசன் தன்னுடைய மனைவிக்கு அதனைத் தர வேண்டும் என விரும்பியதால் அவனுடைய அமைச்சன் ஒருவன் அதனைத் திருடிச் சென்றுவிட்டான். பெல்தி ரெட்டியின் மனைவி தன் பிள்ளைகளிடம் அதனை மீட்டு வருமாறு பணித்தாள். அவளுடைய மூத்த மகன் இத்திருட்டு அரசனோடு தொடர்புடையது ஆகையால் அது பற்றி எந்த நடவடிக்கையிலும் ஈடுபட முடியாது என மறுத்துவிட்டான். அவளுடைய இரண்டாவது மகனும் அதனைச் செய்ய மறுத்ததோடு கெட்ட வார்த்தை

களையும் பயன்படுத்தினான். அவளுடைய மூன்றாவது மகன் அதனை மீட்டுத் தருவதாக உறுதி கூறியதைக் கேள்விப்பட்ட அவளுடைய பிள்ளைகளில் ஒருவன் ஓடிவிட்டான். இறுதியில் அந்தக் கம்மல் அவளுடைய கடைசிப் பிள்ளையால் மீட்கப் பட்டது. பண்ட காபுகள் அவளுடைய முதல் மகனின் வழி வந்தவர்கள் எனவும், பாகனாடியர் இரண்டாவது மகனின் வழிவந்தவர் எனவும், கம்மர் கம்மலை மீட்ட மகனின் வழி வந்தவர் எனவும் கூறப்படுகிறது.

காபுகள் முதலில் அயோத்தியில் வாழ்ந்து வந்ததாகக் கூறப்படுகின்றது. பரதன் ஆட்சிக் காலத்தின்போது பில்லல மாரி பெல்தி ரெட்டி என்பவனும், அவனுடைய பிள்ளைகளும் விளைந்த தானியம் முழுவதையும் தங்களுக்கு உரியதாக வைததுக்கொண்டு அரசனுக்கு வைக்கோலை மட்டும் தந்து வந்தனர். இராமன் ஆட்சிப் பொறுப்பை ஏற்றவுடன் இவர்கள் ஏமாற்றி வந்ததைக் கண்டுபிடித்தான். இதற்குத் தண்டனையாக அவன் அக் காபுகளைத் தசரதனுடைய சிராத்தத்திற்குப் பூசணிக்காய் தரவேண்டும் எனப் பணித் தான். அவர்கள் உடனே அக் கொடியினைப் பயிரிட்டனர். எனினும் தசரதன் சிரார்த்தச் சடங்கு நிகழ்வதற்கு முன்பாகவே அனுமான் அக்கொடிகளை எல்லாம் பிடுங்கி எறிந்துவிட்டதால் அவர்களால் சிரார்த்திற்குப் பூசணிக்காய் தர இயலவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் பூசணியின் எடைக்குச் சமமாகப் பொன் தருவதாகக் கூறினர். அவர்கள் தங்களிடம் இருந்த பொன் அத்தனையையும் கொண்டு வந்து தராசில் வைத்தும் அது பூசணியின் எடைக்குச் சமமாக இல்லை. எடை குறை வினை ஈடு செய்யும் வகையில் காபுகள் வீட்டுப் பெண்கள் தங்கள் தாலித் தங்கத்தையும் தராசில் வைத்தனர். அந்த நாள் தொடங்கி மோட்டாதி, பெதகண்டி ஆகிய பிரிவினைச் சேர்ந்த பெண்கள் மஞ்சளில் தோய்த்த நூலினையே தாலிக்குப் பதிலாக அணிந்து வருகின்றனர். இதே போன்ற ஒரு கதை வழக்கு மைசூரைச் சேர்ந்த வக்கலிகர் (பயிரிடுவோர்) பற்றியும் வழக்கில் உள்ளது. அந்தக் கதைப்படி அவர்கள் வீட்டுப், பெண்கள் தாலியினை அணியாமல் விட்டுவிடுவதற்குப் பதிலாக

அவர்கள் பூசனி பயிரிடும் வழக்கினை விட்டுவிட்டதாகக் கூறப்படுகிறது. பெல்தி ரெட்டியின் இந்த ஏமாற்று வெளிப்பட்டவுடன் அவன் தன் மனைவியர் பதின்மூன்று பேர்களை அயோத்தியிலேயே விட்டுவிட்டு ஒரு மனைவியுடனும் எழுபத்தியேழு குழந்தைகளுடனும் அயோத்தியை விட்டு நீங் கும்படி ஆயிற்று. அவர்களுடைய பயணத்தின்போது தன்னுள் இறங்கியவர்களைக் கல்லாக்கும் சிலாநதியினை அவர்கள் கடக்க வேண்டி வந்தது. அவர்கள் அந்த ஆற்று நீரில் இறங் கினால் அது அவர்களைக் கல்லாக்கிவிடும். எனவே அவர்கள் தோணகொண்ட என்ற இடத்திற்குச் சென்று கங்கை அம்மனை வழிபட்டபின் அந்த அம்மன் சிலையின் தலையினைத் துண்டித்து ஆற்றங்கரைக்குக் கொண்டுவந்தனர். அப்போது பண்டைய எகிப்து மன்னர்களின் காலத்தில் செங்கடல் பிரிந்து வழிவிட்டதைப் போல அந்த ஆறும் பிரிந்து அவர்களுக்கு வழி விட அவர்கள் ஆற்றிடையே தரையில் நடந்து எதிர்க்கரையினை அடைந்தனர். இந்த நிகழ்ச்சியின் நினைவாகக் காபுகள் இன்றும் தங்கள் திருமண நிகழ்ச்சியின்போது கங்கையை வழி படுகின்றனர். அந்த ஆற்றைக் கடந்த பின் அப்பயணிகள் மல்லிகார்ச்சுனர் கோயிலை வந்தடைந்து ஜங்கம்களுக்குக் கோயில் பணிகளில் உதவியபடி இருந்து வந்தனர். சிறிது காலம் சென்ற பின் ஜங்கம்கள் கோயில் பொறுப்பினைக் காபுகளிடம் விட்டுவிட்டுச் சில நாள்கள் வெளியூர் சென்றிருந்தனர். அவர்கள் திரும்பி வந்தபோது கோயில் பொறுப்பினைத் திரும்ப அவர் களிடம் ஒப்படைக்கக் காபுக்கள் மறுத்துவிட்டனர். அப்பொழுது அவர்களுள் யார் நாகலோகம் சென்று நாக மல்லிகையைக் கொண்டு வருகின்றார்களோ அவர்களே கோயிலின் உண்மை யான உரிமையாளர்கள் என முடிவு செய்யப்பட்டது. கூடு விட்டு கூடு பாயும் கலையில் கைவந்தவர்களான ஜங்கம்கள் தங்கள் ஊன் உடலை மண்ணில் கிடத்திவிட்டு ஆவிகளாக மலரைத் தேடிச் சென்றனர். இதனை நல்வாய்ப்பாகப் பயன் படுத்திக்கொண்டு காபுகள் ஜங்கமங்களுடைய உடலை எரித்து விட்டனர். அவர்களுடைய ஆவிகள் திரும்பியபோது அவை புகுவதற்குரிய உடல் இல்லையாயிற்று. இதனால் கோபமுற்ற அக்கோயிலின் தெய்வம் ஜங்கமங்களைக் காக்கை

களாக மாற்றியது. அவை காபுகளைத் தாக்கத் தொடங்கின. காபுகள் அங்கிருந்து பிரதாபருத்திரன் நாட்டிற்கு ஓட்டம் பிடித்தனர். அந்த அரசன் சக்தியினை வழிபடுகின்றவனா தலால் காகங்கள் அவன் நாட்டினை அடைந்த காபுகளைத் துன்புறுத்தவில்லை. அவர்கள் அங்கேயே தங்கிப் பயிர்த் தொழிலில் ஈடுபட்டனர். விளைவில் பத்தில் ஒன்பது பங்கினை மன்னனுக்குச் செலுத்தியபின் காபுகள் ஒரு சிறிதே தங்களுக் கென வைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அப்பொழுது பெல்தி ரெட்டியின் மனைவி கருவுற்றவளாக இருந்தாள். அவள் தன் பிள்ளைகளைப் பிறக்கப் போகும் தன்னுடைய மகனுக்கு என்ன கொடுக்கப் போகின்றீர்கள் எனக் கேட்டாள். அவர்கள் அனைவரும் தங்கள் வருவாயில் ஒரு பாதியைத் தருவதாக வாக்களித்தனர். அவளுக்குப் பிறந்த பிள்ளை வளர்ந்து கல்வி அறிவுடையவனாகவும் கவிஞனாகவும் திகழ்ந்தான். ஒரு நாள் அவன் தன் சகோதரர்கள் பணிபுரிந்து கொண்டிருக்கும் வயலுக்குத் தண்ணீர் எடுத்துச் சென்றான். தண்ணீர் இருந்த பாத்திரம் மிகச் சிறியதாக இருந்தது. அத்தண்ணீர் அவர்கள் அனைவருக்கும் போதுமானதாக இல்லை. அவன் கலைமகளை நோக்கி வாழ்த்தி வேண்டியபோது அப்பாத்திரம் எப்பொழு தும் நீர் நிரம்பியதாக இருந்தது. மாலை நெருங்கும் சமயம் அன்று பகலில் அறுவடை செய்த தானியத்தில் அரசனுக்கு உரிய பங்கை ஒதுக்க வேண்டி அதனைக் களத்தில் குவித்தனர். உடன்பிறந்தவர்களான அவர்களிடையே சச்சரவு மூண்டதால் அரசன் பங்குக்கு ஒரு சிறிதளவே ஒதுக்க வேண்டியதாயிற்று. தனக்குத் தர வேண்டிய பங்கினை உரியபடி காபுகள் தனக்குச் சேர்ப்பிக்காததால் கோபமுற்ற அரசன் பெல்தி ரெட்டியை இழிவிற்கு உள்ளாக்க ஏற்ற சமயத்தை எதிர்பார்த்தபடி இருந் தான். இதனை நிறைவேற்ற அந்த அரசன் பெல்தி ரெட்டியின் மனைவியினுடைய பணியாளனாகச் சேர்ந்து விடுவதில் வெற்றி பெற்றுவிட்ட ஒரு ஜங்கமினுடைய உதவியை நாடினான். சிறிது காலத்திற்குப்பின் அப்பணியாளன் அவள் தூங்கும்போது கழன்று விழுந்த அவளுடைய கம்மலை எடுத்துவந்து பிரதாப ருத்திரனிடம் கொடுத்தான். அவன் அந்தக் கம்மலுக்கு உரிய வளைத் தான் அடைவதற்கு உரிய ஒரு முன் ஏற்பாடாக

அவளுடைய கம்மலைத் தான் பெற்றிருப்பதாக யாவரும் அறியும்படி அறிவித்தான். பெல்தி ரெட்டியின் மூத்த மகன் அந்த மன்னனோடு போரிட்டு எப்படியோ அந்தக் கம்மலைத் திரும்ப மீட்டு வந்தான். அதற்காக அவன் அந்த அரசனோடு போரிடுகையில் தன் இளைய சகோதரனை முதுகில் சுமந்த படியே போரிட்டான். அவ்வாறு தீரத்தோடு கம்மலுக்காகப் போரிட்டவன் மரபில் வந்தவர்களே கம்மர்கள். ஓடி ஒளிந்த பெல்தி ரெட்டியின் பிள்ளைகளின் வழிவந்தவர்கள் வெலமர். காபுகள் ஓடி ஒளியாமலும் போராட்டத்தில் பங்கு பெறாம லும் இருந்தவர்களின் வழியில் வந்தவர்கள்.

முதன்முதல் பூப்படையும் சிறுமி பதினாறு நாள்கள் தீட் டுக்கு உரியவளாகக் கருதப்படுகிறாள் என எனக்குத் தெரிய வருகின்றது. அப்போது ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலை யிலும் அவளுக்குக் கொஞ்சம் நல்லெண்ணையைக் குடிக்கத் தரு வர். அதனால் அதிகம் வயிற்றுப்போக்கு ஏற்படுமானால் அவ ளுக்கு எருமை நெய்யினைத் தந்து அதனைக் கட்டுப்படுத்துவர். ஒருநாள் விட்டு ஒருநாள் அவள் தலைக்குத் தண்ணீர் விடுவர். அப்போது அவள் அணிந்திருக்கும் ஆடைகள் பழையனவா யினும் புதியனவாயினும் வண்ணாத்திக்கு உரியனவாகும். அப்பொழுது முதல் நாள் பாலும் பருப்பும் இட்டுச் சோறு தருவர். மறுநாளிலிருந்து பணியாரம் முதலிய எல்லாவற்றையும் அவள் உண்ணலாம்.

தென் ஆர்க்காடு, சேலம் மாவட்டங்களைச் சேர்ந்த பண்ட ரெட்டிகள் பிராமணீய நெறிப்பட்ட திருமணச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். காபுகளான தெலுங்கு நாட்டவர் மணச் சடங்கு பின்வருமாறு நடைபெறுகின்றது. பிரதானம் எனப் படும் மண உறுதி நாளன்று மணமகன் வீட்டைச் சேர்ந்தவர்கள் ஒரு மேற்கட்டியின் கீழ் இன்னிசை முழங்கவும் சுமங்கலிகள் வெற்றிலை, தேங்காய், பேரீச்சை, வாழைப்பழம், மஞ்சள் ஆகி யனவற்றைத் தட்டில் ஏந்தி வரவும் மணமகள் இல்லம் நோக்கிச் செல்வர். அவர்கள் மணமகள் இல்லத்தின் வாயிலை நெருங்கிய வுடன் மணமகள் ஒரு மணைப் பலகையில் அமர்வாள். பிரா மணப் புரோகிதன் ஒருவன் மஞ்சளைக் குழைத்துக் கணபதி

யின் உருவம் செய்து வைக்க அவள் அதனை வழிபடுவாள். மகளிர் கொண்டுவரும் தட்டுகள் அவள் முன் வைக்கப்படும். அவளுக்கு ஒரு புதிய சேலை வழங்கப்படும். அவள் அதனை உடுத்தியபின் நெருங்கிய உறவினள் மூன்று கை பாக்கு, சில வெற்றிலைகள் மஞ்சள் துணியில் முடியப்பட்ட பெண்ணுக்கான பரிசப்பணம், அணிகள் ஆகியவற்றைத் தர அவள் அவற்றைப் பெற்றுத் தன் மடியில் இட்டுக் கொள்வாள். மணமக்களின் பெற்றோர் அதன்பின் வழக்கமாகக் கூறிக் கொள்ளும் "பெண் உன்னுடையவள், பணம் என்னுடையது" "பணம் உன்னுடையது, பெண் என்னுடையவள்" என்ற சொற்களைக் கூறியபடி வெற்றிலை மாற்றிக் கொள்வர். மண நாளன்று அதிகாலையில் மணமகளைச் சேர்ந்தவர்கள் ஒரு புரோகிதனையும் வண்ணானையும் அழைத்துக்கொண்டு மணமகளை அவள் வீட்டிலிருந்து அழைத்துவரச் செல்வர். அதன்பின் பால்கம்பம் நடப்படும். தெலுங்கு நாட்டில் மலைப்பாலை (*Minusops hexandra*) மரக்கொம்பையும், தமிழ்நாட்டில் ஒதிய (*Odina Wodier*) மரக் கொம்பையும் பால்கம்பமாக நடுவர். மணச் சடங்குகள் முடிவுற்றபின் இவ்வாறு நடப்படும் பால்கம்பம் வீட்டின் புழைக்கடையில்நடப்படும். அது வேர் பிடித்து வளரத் தொடங்குமானால் அது மணமக்கள் வாழ்க்கை சிறப்புற அமையும் என்பதற்கான நிமித்தமாகக் கொள்ளப்படும். காபுக்கள் சிலர் கொஞ்சம் சோற்றையும் நல்லெண்ணையையும் எடுத்துக் கொண்டு மேற்கட்டியின் கீழ் வண்ணான் வீட்டிற்கு அவளிடமிருந்து தோரணச் சட்டத்தையும் கங்கையின் சிலையையும் வாங்கி வரச் செலவர். மூங்கில் பிளாச்சுக்களால் கட்டப்பட்டுப் பருத்தி நூல் சுற்றி அமைக்கப்பட்டதே தோரணச் சட்டம். வண்ணானிடம் உடன் கொண்டு போன சோற்றைக் கொடுப்பதோடு கொஞ்சம் அரிசியையும் துணியில் கொட்டுவர். அவற்றைப் பெற்றுக் கொண்ட அவன் தீப்பந்தத்தின் உதவியின்றித் தோரணத்தையும் கங்கையின் சிலையையும் தேடி எடுக்க முடியாது எனக் கூறி நல்லெண்ணெய் ஊற்றும்படி கேட்பான். அதனைக் கொடுத்தவுடன் அவன் தோரணத்தையும் கங்கையம்மன் சிலையையும் சுமந்தபடி அவர்களோடு மணம் நிகழும் வீட்டுக்கு வருவான். அவர்கள அந்த வீட்டின் வாயிலை நெருங்கியவுடன்

மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த நீருல் சோற்றினையிட்டுக் கங்கை அம்மனுக்கு ஆரத்தி எடுப்பர். அதன்பின் வண்ணானிடம் தோரணத்தைப் பந்தலில் அல்லது கூரையில் கட்டும்படி கூறுவர். அதற்காக அவன் கொஞ்சம் நெல்லினைத் தரையில் கொட்டும்படி கேட்பான். அதனைத் தரையில் குவியலாகக் கொட்டியபின் அதன் மீது நின்று அவன் தோரணத்தைக் கட்டுவான். பின்னர் அவர்கள் பொற்கொல்லன் இல்லத்திற்கும் குயவன் இல்லத்திற்கும் செல்வர். பொற்கொல்லனிடமிருந்து தாலியும் குயவனிடமிருந்து, அங்கிருந்து எடுத்துச் செல்லும்முன் நூல் சுற்றப்பட்ட பதின்மூன்று பானைகளையும் கொண்டு வருவர். பிராமணப் புரோகிதர் முதலில் ஒரு பானையில் நூல் சுற்றியவுடன் காபுகள் மற்றப் பானைகளுக்கும் நூல் சுற்றுவர். அவற்றைக் கொண்டு வந்து கங்கை அம்மன் சிலை வைத்துள்ள அறையில் வைப்பர். தாலி மணமகன் உறவினருள் மணமான ஒருத்தியின் கழுத்தில் கட்டப்படும். மணமக்களின் உடையின் முனைகள் முடிச்சிடப்பட்டு அருகருகே அமர்த்தப்படுவர். நாவிதன் ஒரு கிண்ணத்தில் தண்ணீர் கொண்டு வருவான். ஒரு தட்டில் மஞ்சள் தோய்க்கப்பட்ட அரிசியினை நிரப்பித் தரையில் வைப்பர். அடுத்து ஆணும் பெண்ணுமாகப் பலர் அங்கு வந்து மஞ்சள் அரிசி தூவி மணமக்களை வாழ்த்திய பின், அவர்கள் முன்னே செப்பு அல்லது வெள்ளிக் காசினைச் சுற்றியபின் அதனை நாவிதன் வைத்திருக்கும் தண்ணீர்க் கிண்ணத்தில் இடுவர். நாவிதன் அதன்பின் மணமகளுடைய கைகால் விரல்களின் நகங்களைக் களைவான். மணமகள் பாதங்களின் விரல் நகங்களைக் கத்தியால் மட்டும் தொடுவான். அடுத்து எண்ணெயும் பாசிப் பயற்றின் மாவும் பூசும் நலங்கு நடத்தி மணமக்களைக் குளிக்கச் செய்வர். மணமகன் குளித்தபின் மணக்கோலத்திற்குரிய சிறப்பான ஆடைகளைப் புனைந்து கோவிலுக்குச் செல்வான். அவன் வீட்டைவீட்டுப் புறப்படும் சமயம் மாதிகன் ஒருவன் ஒரு சோடி செருப்புக்களைத் தருவான். அதனைப் போட்டுக்கொண்டு மணமகன் கோயிலுக்குச் செல்வான். மாதிகனுக்கு இதற்காக ஒரு கூடையில் பதினொரு இலைகளில் சோறு வைத்து வழங்கப்படும். கோயிலில் வழிபாட்டினை முடித்தபின் மணமகனோடு செல்லும் பட்ராசு மணமகன்

நெற்றியில் பாசிங்கத்தை அணிவிப்பான். அப்போதிருந்து பட்ராசு மணமகனைப் பிரியாமல் அவனோடு கூடவே அவன் உதவியாளனாக இருக்கக் கடமைப்பட்டவன். மணமகன் நெற்றியில் சமயச் சின்னமான நாமம் தீட்டுதல் முதலான பணிகளைச் செய்பவன் அவனே. இதேபோன்று கோயிலுக்கு நேர்ந்து விடப்பட்டவளான 'போகம்' எனப்படும் பொதுமகள் மண மகளுக்கு உதவியாக அவளுடன் இருப்பாள். "பட்ராசுக்கள் வட பகுதியினைச் சேர்ந்த சாதியார். அவர்களைக் கி. பி. 1295 முதல் 1323 வரை வாரங்கல்லில் இருந்து அரசாண்ட பிரதாப ருத்ரனே தெற்கே அழைந்து வந்தவன். அந்த அரசின் வீழ்ச்சிக்குப் பின் இவர்கள் ரெட்டி மற்றும் வெலம சாதியினைச் சேர்ந்த குறுநிலத் தலைவர்களின் அவையில் குலப்புகழ் பாடும் இசைவாணர்களாக ஆக நேர்ந்துவிட்டது" எனத் திரு ஸ்டுவர்ட் எழுதியுள்ளார். கோயிலிலிருந்து மணமகனும் அவனைச் சேர்ந்தவர்களும் மணப்பந்தலுக்குத் திரும்புவர். அங்கே கண்ணேறு போக்கச் சோறும் மஞ்சள்நீரும் மணமகனுக்கு ஆரத்தி எடுத்த பின்னர் வீட்டினுள் செல்வான். வீட்டுவாசற்படியில் அவன் மைத்துனன் அவன் பாதங்களைக் கழுவியபின் அவனிடமிருந்து கொஞ்சம் பணம் அல்லது ஒரு பசுவினைப் பெறும்வரை அவனுக்கு வழிவிடாது வாயிற்படியிலேயே அமர்ந்திருப்பான். மணமகன் மணமேடையில் ஏறியபின் மணமகள் அங்கு அழைத்து வரப் பட்டு அவனுக்கு எதிரே தொங்கவிடப்பட்டிருக்கும் திரைக்கு இப்பக்கமாக நிறுத்தப்படுவாள். விநாயகர் வழிபாடு நிகழ்த்தப் பட்ட பின் கையில் காப்புநாண் அணிவிக்கப்படும். அப்போது மணமகன் தனது வலப் பாதத்தை மணமகள் இடப் பாதத்தின் மீது வைத்திருப்பான். மணமானவள் கழுத்தில் முன்பு கட்டப் பட்ட தாலி அவிழ்க்கப்பட்டுக் கூடியுள்ளவர்கள் வாழ்த்தும் படியாகச் சுற்றி எடுத்துச் செல்லப்பட்டபின் மணமகன் மண மகள் கழுத்தில் அதனை அணிவிப்பான். மணமகளை அவளுடைய தாய்மாமன் தூக்கிக் கொள்ள மணமக்கள் ஒருவர் மீது ஒருவர் அரிசியினைத் தூவிக் கொள்வர். அதன்பின் திரை நீக்கப் பட்டு அவர்கள் உடையின் முனைகள் முடியப்பட்டு ஒருவர் அருகே ஒருவர் அமர்வர். கூடியுள்ளவர்கள் அவர்கள் மீது அரிசி தூவி வாழ்த்துவர். அருந்ததி பார்த்தபின் மணமக்கள் தண்ணீர்

நிறைந்துள்ள பாத்திரத்தில் மோதிரத்தையும், கிண்டியையும் தேடி எடுக்கும் சடங்கோடு அன்றைய மணச் சடங்குகள் முடிவுறும். இரண்டாம் நாள், விருந்தும் மீண்டும் நலங்குச் சடங்கும் நிகழும். அதற்கும் மறுநாள் மணமகனும் அவனைச் சேர்ந்தவர்களும் மணமகள் வீட்டார் செயல் ஒன்றில் ஏதேனும் குறை கண்டவர்களைப் போலப் பாவனை செய்தவர்களாகக் கோபித்துச் செல்ல மணமகள் வீட்டார் பரிசுகளோடு அவர்கள் பின்சென்று சமாதானம் செய்து அழைத்து வருவர். அன்று மாலைநேரம் நெருங்கும் சமயம் நாகவல்லி எனப்படும் தேவதாக்களுக்கான படையல் இடப்படும். மணமகன், மணமகள், பட்ராசு, போகம் ஆகிய நால்வரும் மேடையில் அமர்வர். பிராமணப் புரோகிதர் மஞ்சள் பொடியால் பிடிக்கப்பட்ட கூர் உருளை வடிவிலான விநாயகரை ஒரு தட்டில் வைத்து அதற்கு முதலில் வழிபாடு நடத்துவார். அதன்பின் அரிசி பரப்பப்பட்ட ஒரு தட்டில் ஒரு சொம்பில் தண்ணீரை வைத்து அதன் வாயின் மீது தேங்காயைக் கொண்டு மூடுவார். அவ்வாறு அமைக்கப்பட்ட கலசத்தைத் தேவதாக்களாகப் பாவித்து வழிபாடு செய்வர். "சிவபெருமான் மணமக்களை வாழ்த்தட்டும்!" "இந்திரன் மணமக்களை வாழ்த்தட்டும்!" என்பது போல எல்லாத் தேவதைகளையும் அந்தப் பிராமணன் அழைப்பான். மணமகனின் நெருங்கிய உறவினன் ஒருவன் புரோகிதரின் பக்கத்தில் நிறைய வெற்றிலை பாக்கோடு அமர்ந்தவனாகப் புரோகிதர் ஒவ்வொரு தேவதையின் பெயரைச் சொல்லிய உடனேயும் கொஞ்சம் வெற்றிலை பாக்கினைத் தட்டிலிடுவான்.அவை புரோகிதருக்கு உரியன.இதன் காரணமாகப் புரோகிதர் ஒரே தேவதையின் பெயரை மூன்று நான்கு முறை சொல்வார். அந்தக் காபு அப்பொழுது அந்தப் புரோகிதரின் பேராசையினை விளையாட்டாகச் சுட்டிக் காட்டியவனாகத் தொடர்ந்து வெற்றிலை பாக்கினைத் தட்டில் போட மறுப்பான். கூடியுள்ளவர்கள் இதனைக் கேட்டுச் சிரிப்பர். சடங்கு முடிந்த பின், மணமகனின் நெருங்கிய உறவினர்கள் அவன் முன் இரண்டு பித்தளைத் தட்டினை ஏந்தியபடி தங்கள் கையினைக் குறுக்கே நீட்டியவர்களாக நிற்பர். அத்தட்டுக்களின் மீது சிறிது பால் ஊற்றப்படும். அதன்பின் தகுதியறிந்து வரிசைப்படி கூடியுள்ளவர்

களுக்கு வெற்றிலை பாக்கு, பழம் ஆகியன வழங்குவர். முதலில் குலதெய்வத்திற்கு வெற்றிலை பாக்கு வைத்தபின், அடுத்துக் குடும்பப் புரோகிதருக்கு வழங்குவர். மூன்றாவதாகப் பிராமணப் புரோகிதர் அதனைப் பெறுவார். பாகனாடி பிரிவினைச் சேர்ந்த காபு ஒருவன் வந்திருப்பானாயின் பிராமணனுக்கு அடுத்தபடியாக, மற்றக் காபு கம்மர்களுக்கு முன் வெற்றிலை பாக்குப் பெறும் தகுதியுடையவனாக அவனே மதிக்கப்படுவான். அவ்வாறு வெற்றிலை பாக்கினை வழங்குமுன் மணமகன் அவற்றைத் தொடுவதும், போகம் மணமகள் கையினைப் பிடித்து அதன்மேல் வைப்பதும் வழக்கமாகும். பண்ட காபுக்களின் திருமணத்தில் கங்கையம்மன் சிலையினை ஒரு வெள்ளாடு, ஒரு காவடி (மூங்கிலில் அரிசிச் சிப்பம், பணியாரங்கள், வெற்றிலை பாக்கு ஆகியன சேர்த்துக் கட்டப்பட்டிருப்பது) ஆகியவற்றுடன் ஒரு குளத்திற்கோ கோயிலுக்கோ ஊர்வலமாக எடுத்துச் செல்வர். வண்ணான் பெண் வேடந் தாங்கியவனாக உடையணிந்து அந்த ஊர்வலத்தின்முன் ஆடிப்பாடியபடி செல்வான். மூன்று கற்றை வைககோலால் அமைக்கப்பட்ட முக்கோண வடிவமாகத் தோற்றம் தரும் குடிசையினுள் அந்தச் சிலையினை வைத்துக் காவடியில் உடன்கொண்டு வந்த பொருள்களை அதற்கு முன் பரப்புவர். அரிசிக் குவியலின் மீது பிசைந்த மாவினை விளக்குப் போல அமைத்து வைத்துத் திரியிட்டு, நெய்யூற்றி மாவிளக்கு ஏற்றுவர். உடன்கொண்டு சென்ற ஆட்டின் காது ஒன்றினை அறுத்து அப்படையலின் அருகே அதனைக் கொண்டுவந்து காட்டுவர். அதன்பின் விளக்கை அணைத்துவிட்டு அனைவரும் ஆரவாரமின்றி இல்லம் திரும்புவர். வண்ணான் கங்கையம்மன் சிலையினைத் தன் வீட்டுக்கு எடுத்துச் செல்லும் பொறுப்பினை ஏற்றுக் கொள்வான். திருமணச் சடங்குகள் ஐந்து நாள்கள் நீட்டிப்பதாயின் கங்கையம்மன் சிலையினைத் திரும்ப எடுத்துச் செல்லும் சடங்கு நான்காம் நாளும், பாவனையாக உழவு ஓட்டும் சடங்கு ஐந்தாம் நாளும் நிகழும். மணமக்கள் கையிலிருந்து காப்புநாண் அவிழ்க்கப்படும நிகழ்ச்சியோடு திருமண நிகழ்ச்சிகள் முடிவுறும். தமிழ் நாட்டினைச் சேர்ந்த பண்டரெட்டிகள் மணச் சடங்கில் வண்



காபு மணமக்கள்

ணான் திருமண நாளுக்கு இரண்டு மூன்று நாள்கள் முன்ன தாகவே கங்கையம்மன் சிலையினை ஒவ்வொரு ரெட்டியின் வீட்டிற்கும் ஊர்வலமாக எடுத்துச் செல்வதோடு, அவர்களிட மிருந்து பணமும் அன்பளிப்பாகப் பெறுவான். பின் அந்தச் சிலை திருமணம் நடைபெறும் வீட்டுத் திண்ணையில் வைக்கப் பட்டு மணச் சடங்குகள் முடிவுறும்வரை நாள்தோறும் வழிபடப் படும். "திருநெல்வேலியினைச் சேர்ந்த ரெட்டிகளிடையே பதி னாறு, இருபது வயதான பெண்கள், ஐந்தாறு வயதான சிறுவர் களுக்கு மணமுடிக்கப்படும் நிகழ்ச்சி அடிக்கடி நடைபெறு கின்றது. அத்தகைய மணத்திற்குப் பின் அவள் தன் தாய்வழி உறவினன் ஒருவனுடன்–பெரும்பாலும் தாய்மாமனுடன்– வாழ் கின்றாள். தான் மணந்துகொண்ட சிறுவனின் தந்தையோடு அவள் உடலுறவு கொண்டவளாக வாழ்வதும் உண்டு. இத் தகைய உறவுகளின் வழிப்பிறக்கும் குழந்தைகள் அந்தச் சிறு வனுக்குப் பிறந்த குழந்தைகளாகவே உரிமை பெறுகின்றன. அவன் வளர்ந்து ஆண் மகனாகும்போது தன் மனைவி வயது முதிர்ந்து குழந்தை பெறும் பருவத்தைக் கடந்தவளாக இருப் பதைக் காண்கிறான். எனவே அவன் வேறொரு சிறுவனுக்கு மனைவியாக உள்ள ஒருத்தியோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு அவள் வாயிலாகப் பிள்ளைகளுக்குத் தந்தையா கின்றான" என முனைவர் ஜெ. ஸோர்ட் எழுதுகிறார். இந்தப் பழக்கம் ரெட்டிகள் தாங்கள் சென்று தங்கிய பகுதியில் வாழும் மறவர், கள்ளர், அகமுடையார் ஆகிய மற்றச் சாதியாரைப் பார்த்து மேற்கொண்ட பழக்கம் ஆதல் வேண்டும். திருநெல் வேலியைச் சார்ந்த அயோத்தியா ரெட்டிகளைப் பற்றி எழுதும் திரு ஸ்டுவர்ட் கூறுவதாவது:– "இவர்கள் தாலி, தங்க அணிகள் ஏதும் கோக்கப்படாத மஞ்சளின் தோய்க்கப்பட்ட பருத்தி நூலேயாகும். இவர்களிடையே தாலியும் சேலையும் வாங்கச் சென்ற ஒருவன் பிறகு திரும்பவில்லை என்பதனை விளக்கும் பழமொழி ஒன்றும் நிலவுகின்றது." இந்தப் பழமொழி தொடர் பாக வழங்கும் வழக்கு வரலாறு வருமாறு:– பல ஆண்டுகளுக்கு முன்பு ரெட்டிகளின் சாதித் தலைவன் ஒருவனுக்குத் திருமணம் நிகழ இருந்தது. அவன் ஒரு பொற்கொல்லனை அழைத்து மிகச் சிறந்ததொரு தாலியினைச் செய்யும்படியாகக் கூறி அதற்கான

தொகையையும் முன்பணமாகக் கொடுத்துவிட்டான். அந்தக் கொல்லன் ஒரு குடிகாரனாகையால் தாலியைச் செய்வதில் கருத்தற்றவனாக இருந்தான். மணநாளும் வந்துற்றது. என்றாலும் தாலி வந்து சேர்ந்தபாடில்லை. ரெட்டிகளின் தலைவனான மணமகன் ஒரு துணியிலிருந்து சில நூல்களைப் பிரித்தெடுத்து அதனைத் திரித்துக் கயிறாக்கி மணமகள் கழுத்தில் கட்டினான். பின்னர் அதுவே அச்சாதியாரிடையே வழக்கமாகி விட்டது.*

1891 மக்கள் கணக்கெடுப்பு அறிக்கையில் ஒருத்தி உடன் பிறந்தவர்களான பலரைக் கணவர்களாக மணக்கும் முறை பண்ட காபுகளிடையே இருந்ததாகத் தனக்குத் தகவல் கூறப் பட்டுள்ளதாகத் திரு ஸ்டுவர்ட் கூறியுள்ளார். எனினும் இக் கூற்றினை ஆராயாது அப்படியே ஏற்றுக் கொள்வதற்கில்லை; இத்தகைய வழக்கம் இருந்ததற்கான சான்றுகள் ஏதும் எனக்குக் கிடைக்கவில்லை. ரெட்டி ஏனாதியர்களைப் பண்ட ரெட்டிகள் தங்கள் வீட்டு வேலைக்காரர்களாக வைத்திருக்கின்றனர். ரெட்டி ஏனாதி சாதிப் பெண் ஒருத்தியின் கணவன் இறந்துவிட்டாலோ அவன் அவளைக் கைவிட்டாலோ மணமுறிவு செய்து விட்டாலோ அவள் தன் கணவன் உடன்பிறந்தவனை மணந்து கொள்ளலாம். கணவனைப் பிரிந்தவளை அல்லது மணமுறிவு பெற்றவளை மணந்து கொள்பவனோடு உடன்பிறந்தவர்கள் மன வேறுபாடு கொள்ளாது ஒற்றுமையாகவே இருப்பர்.

இந்தியச் சட்ட அறிக்கைகளில்† பெல்லாரி, கர்நூல் மாவட்டங்களைச் சேர்ந்த மோடாடிக் காபுகளிடையேயும், நெல்லூரைச் சேர்ந்த பெத்த காபுகளிடையேயும் இல்லடொம் (இல்லத்துக்காரன் எனப்படும் இவன் ஆண் குழந்தைகள் இல்லாத ஒரு மாமனாரால் மகனாகத் தத்து எடுத்துக் கொள்ளப்பட்ட மருமகன்.) எனப்படும் மருமகனை மகனாக

---

* ஜெ. எப். கியர்னா – கல்யாணச் சடங்கு. (J. F. Kearna. Kalyana-shatanku.)

† சென்னைத் தொகுதி, IV, 1882; VI, 1883. (Madras Series, IV, 1882; VI, 1883.)

ஏற்றுக் கொள்ளும் பழக்கம் நிலவுகின்றது. தனக்குப் பிள்ளை இல்லாதவன் இல்லடொம் என மருமகனை இவ்வாறு தத்து எடுத்துக் கொள்ளும்போது அவன் ஒன்றுக்கு மேற்பட்ட பெண்களுக்குத் தந்தையாக இருக்கலாம் அல்லது அவனுக்கு ஆண் குழந்தைகள் இல்லாமலோ இனி அப்படிப் பிறக்கலாம் என்ற நம்பிக்கை இல்லாமலோ இருக்கலாம். உடமை உரிமையைப் பொறுத்தவரையில் இந்த மருமகன் மகனுக்குரிய உரிமைகளைப் பெறுவதோடு பின்னர் அவனுடைய மாமனாருக்கு ஆண்குழந்தைகள் பிறக்க நேரிடினும் அவர்களோடு தானும் சம பங்கு பெறுவதற்கு உரியவன்.

''பட்டிகொண்டா, இராமல்லகோட்டை வட்டங்களைச் சேர்ந்த பகநாடு காபுகள் கைம்பெண் ஒருத்தி சாதியைச் சேர்ந்த மற்றொருவனை இரண்டாவது கணவனாக மணந்து கொள்ள அனுமதிக்கின்றனர். அவ்வாறு மணம் புரிந்து கொள்பவள் தாலி, வளையல் முதலான சுமங்கலிக்குரிய அணிகளை அணிந்துகொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. எனினும் அவளும் அவள் கணவனும் சாதியைச் சேர்ந்த மற்றவர்களோடு சமமாகக் கலந்து பழக அனுமதிக்கபபடுகின்றனர். இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் தந்தையின் உடமையில் முறையான திருமணத்தில் பிறந்த குழந்தைகளைப் போலவே பங்கு பெறுவதற்கு உரியவர். ஆயினும், அவர்கள் இது போன்ற விதவை மணம் வழிப் பிறந்தவர்களோடேயே மண உறவு கொள்ளும்படி ஆகின்றது. எனினும் முறையாக மணம் செய்து கொண்டவர்களுக்குப் பிறந்தவர்களை இவர்கள் மணந்து கொள்ளத் தடையேதும் இல்லை. லிங்க பலிசர்களிடையே நிலவுவதைப் போலவே விதவையர் மறுமணம் புரிந்து கொள்ள வழங்கப்பட்டுள்ள இந்த உரிமையானது தவறான வழிகளில் பயன்படுத்தப் படுவது வருந்தத்தக்க ஒன்றாகும். கருவுற்றவர்களாக உள்ள கைம்பெண்களும் அடிக்கடி இத்தகைய மணம் புரிந்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். எனவே கைம்பெண்கள் தங்கள் சாதியைச் சேர்ந்த ஆண்களோடு அவர்களைப் பின்னர் கணவனாக மணந்து கொள்ளலாம் என்ற நம்பிக்கையிலோ

வேறொருவனை மணந்து கொள்ள வாய்ப்பு உண்டு என்ற நம்பிக்கையிலோ தாங்கள் கருவுறுவதைப் பற்றிய அச்சம் அற்றவர்களாகத் தகாத ஒழுக்கத்தில் ஈடுபடுகின்றனர். பல சமயங்களில் இத்தகைய கூடா ஒழுக்கத்தால் சாதி விலக்கம் பெறுவதற்குரிய கைம்பெண்கள் அவ்வாறு சாதி விலக்கம் பெறாமல் இருப்பதற்காக வேண்டிச் சாதியைச் சேர்ந்த ஆண்கள் விலை பேசி அவர்களுக்குக் கணவர்களாக ஏற்பாடு செய்யப்படுகின்றார்கள். அவ்வாறு கணவனாக வருபவன் இரகசியமாகச் செய்து கொண்ட உடன்பாட்டின்படி சில நாள்கள் கணவனாக இருந்த பின் பிரிந்து சென்று விடுகின்றான்'' என 1886-இல் வெளியான கர்நூல் மாவட்டக் கையேடு தெரிவிக்கின்றது. இங்குக் கூறப்பட்ட கைம்பெண்கள் மறுமண உரிமையைத் தவறான நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் பழக்கம் நாட்டகத்தனவான சிற்றூர்களில் ஒரு சிலரிடையே காணப்பட்டாலும் நகர்ப் பகுதி சார்ந்த ஊர்களில் காணப்படுவது போலப் பெருவழக்காக இல்லை. கர்நூல் மாவட்டக் கையேட்டில் பெதகண்டிப் பிரிவுக் காபு சாதிப் பெண்கள் தாலி அணிவதோ மார்பை மறைக்க ரவிக்கை போட்டுக் கொள்வதோ வழக்கம் இல்லை எனவும் கூறப்பட்டுள்ளது. அனந்தப்பூர் மாவட்டத்தில் பெல்லாரி மாவட்டத்தில் இருப்பதைப் போல இறுக்கமான ரவிக்கைகள் பெருவழக்கில் இல்லை என்பதோடு அங்குக் காபு, ஈதிகர் சாதிகளின் சில உட்பிரிவுகளைச் சேர்ந்த பெண்கள் முதல் குழந்தையைப் பெற்றெடுத்தபின் ரவிக்கை அணிவதில்லை எனவும் அனந்தப்பூர் மாவட்ட விவரக் குறிப்பிலிருந்து அறிகின்றோம்.

தெலுங்கு நாட்டைச் சேர்ந்த காபுகள் இறந்தவர்களை அடக்கம் செய்யும் சடங்குகள் கம்மர், பலிசர் சாதியினரின் சடங்குகளை ஒத்தனவாகவே உள்ளன. தமிழ்நாட்டைச் சேர்ந்த பண்ட ரெட்டிகள் தமிழ்நாட்டுச் சாதியினரிடையே நடைமுறையில் உள்ள வழக்கங்களைப் பின்பற்றுகின்றனர். சாவுச் செய்தியினைப் பறையனான தோட்டியே சென்று அறிவிக்கின்றான். இறந்துபோனவரின் மகன் விளக்கு வைக்கப்பட்ட ஒரு படியினை நாவிதனிடமிருந்து பெற்றுப் பிணத்தை மும்முறை சுற்றி

வருகின்றான். சுடுகாட்டில் இறந்தவரின் மகனுக்குப் பதிலாக நாவிதனே பானையில் தண்ணீர் சுமந்தவனாக இறந்தவரின் மகன் பானையில் துளையிட்டுக் கொண்டு பின்னே வரப் பிணத்தை மும்முறை சுற்றுகின்றான். அவ்வாறு துளையிடப் படும் பானையிலிருந்து ஒழுகும் நீர் பிணத்தின் மீது தெளிக்கப் படுகின்றது. பின்னர் நாவிதன் பானையினைச் சில்லுகளாக உடைக்கின்றான். அப்பானை இவ்வாறு சிறு துண்டுகளாக உடைக்கப்படாவிடின் அதில் தண்ணீர் சேர்ந்து நிற்க ஏதுவா கும். அத் தண்ணீரைக் குடிக்கும் பறவைகள் குழந்தைகளின் தலைக்கு மேலே பறக்கும்போது அந்தக் குழந்தைகள் 'பட்சி தோஷம்' காரணமாக நோய்வாய்ப்படுவர். பிணத்தை எரித்த மறுநாள் ஒரு பணிசவன் அல்லது நாவிதன் நெருப்பினை அணைத்து எலும்புகளைப் பொறுக்குவான். வண்ணான் பூசைக்கு வேண்டிய பொருள்கள் அடங்கிய கூடையைக் கொண்டு வருவான். பூசை செய்து முடித்த பின் சாம்பலின் மீது ஒரு தும்பைச் செடியினை வைப்பர். எலும்புகளை ஒரு புதுப்பானையில் எடுத்துச் சென்று ஆற்றில் விடுவர். அல்லது அஞ்சல் கட்டாகக் காசிக்கு அனுப்பி அங்குள்ள முகவர் அதனைக் கங்கையில் விடும்படி ஏற்பாடு செய்வர்.

காபுகள் சைவம், வைணவம் ஆகிய இரு சமயங்களையும் பின்பற்றுகின்றனர். தாலம்மா, நாகரபம்மா, புட்லம்மா, அங்கம்மா, முனீசுவரன், போறெரம்மா, தேசம்மா போன்ற பல தெய்வங்களை அவர்கள் வழிபடுகின்றனர். முனீசுவரனுக் கும் தேசம்மாவிற்கும் பொங்கலிடுவர். பொலெரம்மாவிற்கு எருமைகளைப் பலியிடுவர். காபுகளில் சிலர் மாதிகர்களுடைய தெய்வமான மாதங்கியைக்கூட வழிபடுகின்றனர். தீட்டுப் போக்கும் நிகழ்ச்சிகளில் மதாங்கி என அழைக்கப்படும் மாதிகப் பசவி ஒருத்தியை அழைத்து, வீட்டிலும் வீட்டில் வாழ்வோர் மீதும் அவளைக் கொண்டு கள்ளினைத் தெளிக்கவும் உமிழவும் செய்வர்.

பெல்லாரி மாவட்டத்தில் நிகழும் பயிர்த்தொழில் தொடர்

பான சடங்குகள் பற்றிய ஒரு குறிப்பின் சுருக்கம்* வருமாறு:- "புரட்டாசி மாதத்தின் முதல் முழுமதி நாளின்போது மழைத் தெய்வத்தினைத் திருப்திப்படுத்த ஜொகுமார விருந்து எனப் படும் ஒரு நிகழ்ச்சியைப் பயிர்த்தொழிலாளர்கள் நடத்து கின்றனர். கப்பேரர் சாதியின் கௌரிமக்களு உட்பிரி வினரான பாரிகர் பெண்கள் தங்கள் தலையில் வேப்பிலையும் பலவகைப் பூக்களும் சாம்பலும் இடப்பட்ட கூடையினைத் தாங்கியபடி தாங்கள் வாழும் நகரம் அல்லது சிற்றூர் ஆகியன வற்றின் தெருக்களின் வழியிலே பயிர்த்தொழிலாளர் இல்லங் களில் பிச்சை வாங்கிக் கொண்டு அவர்களுக்குத் தங்கள் கூடை யிலிருந்து வேப்பிலை, மலர்கள், சாம்பல் ஆகியனவற்றைக் கொடுத்தபடி செல்வர். இவ்வாறு அவர்கள் கொடுத்துச் சென்ற வற்றைக் காபுகள் வயலுக்குக் கொண்டு சென்று சோழக் கஞ்சி காய்ச்சி அதனோடு வேப்பிலை, மலர்கள், சாம்பல் ஆகியன வற்றைக் கலந்து அக்கஞ்சியினை வயல்களில் தெளிப்பர். அதன் பின் காபுகள் குயவன் சூளைக்குச் சென்று சாம்பல் கொண்டு வந்து அதனைக் கொண்டு ஒரு மனித உருவம் சமைப்பர். அந்த உருவம் வயலில் அனைவரும் காணும்படியாக மேடான ஓரிடத் தில் வைக்கப்படும். இதுவே 'ஜொகுமார' எனப்படும் மழைக் கான தெய்வம். உரிய பருவத்தில் மழை பெய்விக்கும் ஆற்றல் இத்தெய்வத்திற்கு இருப்பதாக நம்புகின்றனர். இந்த உருவம் சிலபோது அளவில் பெரியதாக இருக்கும்; சிலபோது அளவில் சிறியதாக இருக்கும். இன்னொரு வகையான ஜொகுமார வழி பாடு முட்டம் எனப்படும். அந்த வழிபாட்டுக்குக் கரியைக் கொண்டு பரும்போக்காக ஒரு மனித உருவத்தை அதிகாலையில் மக்கள் நடமாட்டம் மிகுந்த சந்திகளிலும் தெருக்களிலும் வரைந்து வைப்பர். இதனை வரையும் பாரிகர்களுக்குச் சிறிது தொகையோ தானியமோ அன்பளிப்பாக வழங்குவர். இந்த உருவம் ஜொகுமார என அழைக்கப்படுவதோடு இதனை இழிவுபடுத்தும் வகையில் மக்கள் இதன் மீது மிதித்தபடி நடப்பார்களாயின் இது மழையினைக்

---

* சென்னை மெயில் நாளிதழ், நவம்பர், 1905. (Madras Mail, Nov. 1905.)

கொண்டுவரும் எனவும் நம்புகின்றனர். இந்த மாவட்டத்தில் மற்றுமொரு வகையான ஜொகுமார வழிபாடு வழக்கில் உள்ளது. மழை பொய்க்கும்போது காபு சாதிப் பெண்கள் சிறிய உருவில் பிறந்த மேனியாக ஒரு மனித உருவத்தினைச் செய்து அதனைப் போலியானதொரு பல்லக்கில் வைத்து ஆபாசமான பாடல்களைப் பாடியபடி வீடுவீடாகச் சென்று பிச்சை எடுப்பர். மூன்று நாள்கள் இவ்வாறாகச் செய்தபின் அந்த உருவத்தை ஊர் ஓரத்தில் உள்ளதொரு வயலில் போட்டு விடுவர். பின்னர் மாலர்கள் இந்த ஜொகுமார உருவத்தை எடுத்துக்கொண்டு தங்கள் பங்கிற்கு உரிய சடங்காக வீடு தோறும் ஆபாசமான பாடல்களைப் பாடியபடி மூன்று நான்கு நாள்கள் பிச்சையெடுத்தபின் அந்த உருவத்தை ஒரு காட்டில் எறிவர். இத்தகைய ஜொகுமார வழிபாடும் மிகுந்த மழை யினைப் பெய்விக்கும் ஆற்றலுடையது என நம்புகின்றனர். காபு சாதிப் பெண்களிடையே மற்றுமொரு மூட நம்பிக்கை நிலவுகின்றது. மழை பொய்க்கும்போது காபு சாதிப் பெண்கள் ஒரு தவளையினைப் பிடித்து, மூங்கிலால் பின்னப்பட்ட ஒரு புது முறத்தில் அதனை உயிரோடு கட்டி, அந்த முறத்தில் தவளை பார்ப்பவர்களுக்குத் தெரியும்படியாகச் சில வேப்பிலை களைப் போட்டு வைத்து அதனை வீடுவீடாகத் "தவளையம்மா குளிக்க வேண்டும். மழை தெய்வமே அவளுக்காகவேனும் கொஞ்சம் தண்ணீர் தா" எனப் பாடியபடி எடுத்துச் செல்வர். தவளைகளுக்குக் கூட ஒரு சொட்டுத் தண்ணீர் இல்லாதபடி யாக வறட்சி மிகுந்துவிட்டது என்பதனை அவர்கள் தங்க ளுடைய இச்செயலால் புலப்படுத்துகின்றனர். காபு சாதிப் பெண்கள் வீட்டு வாசலில் நின்று இந்தப் பாட்டினைப் பாடும் போது வீட்டைச் சேர்ந்த குடும்பத் தலைவி கொஞ்சம் தண்ணீர் கொண்டுவந்து முறத்தில் உள்ள தவளை மீது கொட்டுவதோடு பாடிவந்தவர்களுக்குப் பிச்சையும் இடுவாள். வீட்டுத் தலைவிய ரான அப்பெண்கள் தங்களுடைய இச்செயல் விரைவில் நல்ல மழையைப் பெய்விக்கும் என நம்புகின்றனர்."

காபுகள் சமூகத்தில் பயிர்த்தொழில் தொடர்பான நிகழ்ச் சிகளைத் தவிர மற்ற செயல்களில் பெண்கள் முக்கிய பங்கு

பெறுகின்றனர். இதற்குக் காரணமாக வழங்கும் கதையில் காபுகள் அயோத்தியிலிருந்து வெளியேறி வந்தபோது தங்களுடன் பெண்கள் பலரையும் அழைத்து வரவில்லையென்றும் அவர்கள் தங்களுக்கு மனைவியரை வழங்கும்படி தெய்வங்களை நோக்கி வேண்டியதாகவும் தெய்வங்கள் பாண்டவர்களுடைய முறை யற்ற உறவு காரணமாகப் பிறந்த பெண்களை மணந்து கொள்ளும்படி இவர்களிடம் கூறியதாகவும் அப்பெண்கள் குடும்பத்தில் தங்கள் உரிமை மேலோங்கி இருக்க வேண்டும் எனக் கேட்டதோடு நெல்குற்றுதல், பாத்திரங்கள் தேய்த்தல், தண்ணீர் எடுத்து வருதல் ஆகிய குற்றேவல்களைத் தாங்கள் செய்ய இயலாது எனக் கூறியதாகவும் அதன்படியே கோல்லர் களும் கம்மலர்களும் அப்பணிகளுக்காகக் காபுகளின் குடும் பப் பணியாளர்களாக அமர்த்தப்பட்டதாகவும் கூறப்பட்டு வருகின்றது. தமிழ்நாட்டில் பள்ளியர் காபுகளின் இல்லங் களில் குற்றேவல் செய்ய அமர்த்தப்படுகின்றனர். மாலர்களும், மாதிகர்களும் எத்தகைய தடையுமின்றிக் காபுகளின் இல்லங் களில் நுழைந்து நெற்குற்றினாலும், சமையல் அறையினுள்ளோ தெய்வங்கள் வைக்கப்பட்டுள்ள அறையினுள்ளோ புக அவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை.

சில காபுகளின் வீடுகளில் குருவிகளுக்கு உணவாக நெற் கதிர்க் கற்றைகள் தொங்கவிடப்பட்டிருப்பதைக் காணலாம். இவர்கள் குருவிகளை மதித்துப் போற்றுகின்றனர். அவை தத்தித் தத்திக் குதிப்பது விலங்கு மாட்டப்பட்ட ஒருவன் நடப்பதை ஒத்திருப்பதாகக் கருதுவர். காபுகள் ஒரு காலத்தில் விலங்கிடப்பட்டவர்களாக இருந்தனர் எனவும், குருவிகள் அவர்களை விடுவித்து உரிமை நல்கிய பின் அவை அந்த விலங்கு களை ஏற்றுக்கொண்டதாகவும் ஒரு கதை வழங்குகின்றது.

விவசாயத் துறையினைச் சார்ந்த திரு சி.கே.சுப்பராவ், "தெலுங்கு நாட்டிலிருந்து தெற்கே குடிபெயர்ந்து வந்த ரெட்டிகளும் மற்றவர்களும், தமிழ்நாட்டின் வளம் மிகுந்த கரிசல் மண் நிலங்களின் பெரும்பகுதியினைத் தங்கள் உடமை ஆக்கிக் கொண்டுள்ளனர். தெலுங்கு பேசும் பயிர்த்தொழி

லாளர்களுக்கும் கரிசல் மண்ணுக்கும் இடையே ஒரு விசித்திர மான உறவு காணப்படுகிறது. தமிழ்நாட்டில் கோயமுத்தூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங் களில் கரிசல் மண் நில உரிமையாளர்களைப் பற்றிய புள்ளி விவரம் திரட்டப்படுமானால் தொண்ணூறு விழுக்காடு வடுகர் உடமையாக - அதாவது வடக்கேயிருந்து வந்து குடியேறியவர் களின் வழித் தோன்றல்களின் உடமையாக - இருக்கக் காண லாம். வடுகர்களுக்குக் கரிசல் மண் நிலத்தின் மீதுள்ள விருப் பினைக் கேலி செய்யும் தமிழர்கள், கடவுள் அவர்களுக்கு வானுலக வாழ்க்கையை வழங்க முன் வந்தபோது அவர்கள் தயங்கியவர்களாக அங்கே கரிசல் பூமி உண்டோ எனக் கேட்ட தாகக் கூறிக் கேலிச் செய்வர்'' என ஒரு குறிப்பில்* கூறியுள் ளார்.

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த பொங்கல அல்லது போகநாடியர், மற்றும் பண்ட ரெட்டிகள் பற்றிய ஒரு குறிப்பில் திரு எப். ஆர். ஹெமிங்வே பின்வருமாறு கூறுகின் றார்:- ''பொங்கலரெட்டி அல்லது போக நாக ரெட்டி எனப் படுபவர்களும் பண்ட ரெட்டிகளும் தெலுங்கையே பேசுகின்ற னர். எனினும் இவ்விரு பிரிவினரும் தங்கள் பழக்க வழக்கங் களில் மிகுந்த வேறுபாடு உடையவர்களாக உள்ளனர். இம் மாவட்டத்தில் வெவ்வேறு பகுதிகளில் வாழும் இவர்கள் தங்க ளுக்குள் மணஉறவு கொள்வதோ ஒருவர் வீட்டில் மற்றவர் உண்பதோ இல்லை. ரெட்டிகள் மற்றச் சூத்திரர் சாதியாரோடு ஒன்றாக இருந்து உண்பதில்லை. மரக்கறி உணவுப் பழக்கம் உள்ள வேளாளர்கள் வீட்டில் மட்டும் இவர்கள் தனியே இருந்து உண்பர். பெரும்பாலும் பயிர்த்தொழிலை மேற் கொண்டுள்ள இவர்கள் முனபு குற்றச் செயல்களில் ஈடுபட்ட வர்களாகப் பழிக்கு ஆட்பட்டிருந்ததோடு சிலர் திருட்டுப் பொருள்களை வாங்கிக் கொள்வதிலும் ஈடுபட்டிருந்ததாகக் கூறப்படுகிறது. பிற சாதியார்களுக்கு இருப்பதைப் போலவே இவர்களுக்குப் பவனி நாயக்கர்கள் எனப்படும் சாதியைச்

* மெயில் நாளிதழ், 1905. (Madras Mail, 1905.)

சேர்ந்த இரவலர்கள் உள்ளனர். அவர்கள் வேறு சாதியாரிடம் சென்று இரப்பதில்லை. இவர்கள் தங்கள் குலதெய்வத்தை வணங்கும்போது அந்த இரவலர்கள் உடன் வந்திருக்க வேண்டியது கட்டாயம் ஆகும். சக்கிலியர்களும் இவர்களோடு சார்ந்து வாழ்ந்து வருகின்றனர். பண்ட உட்பிரிவினர் திருமணங்களில் சக்கிலியர் முக்கிய பங்கு பெறுகின்றனர். முன்பு மண உறவு கொள்வதற்குரிய குடும்பத்தின் தகுதி பற்றி அறிந்து வர திருமணம் நிச்சயிக்கும் முன்பு ஒரு சக்கிலியனையே அனுப்பி வைக்கும் பழக்கம் இருந்து வந்துள்ளது. திருமணத்தில் அவனுக்கு முதல் வெற்றிலை பாக்கு வழங்கிச் சிறப்புச் செய்யும் பழக்கமும் இருந்தது. இப்பொழுது சக்கிலியன் மணமகன் வீட்டார் பெண் கேட்கச் செல்லும்பொழுது அவர்களுக்கு முன்பாகக் கூடையில் பழத்தை எடுத்துக் கொண்டுபோய் அவர்கள் வருகையைப் பெண் வீட்டாருக்கு அறிவிக்கும் பணியினையே மேற்கொள்கின்றான். பெண்கள் தனியே பயணம் மேற்கொள்ளும்போது துணைக்குச் சக்கிலியனை அனுப்பி வைக்கும் பழக்கமும் இவர்களிடையே உள்ளது. ரெட்டிகளின் குல தெய்வம் எல்லம்மா. அவளுடைய கோயில் பெரம்பலூர் அருகே உள்ள ஈசனாய் என்ற ஊரில் உள்ளது. பண்டர், பொங்கலர் ஆகிய பிரிவினரும் அவளைப் போற்றி வழிபடுகின்றனர். பொங்கலர் அவ் வழிபாட்டில் வெள்ளாட்டுக் குட்டியின் குருதியினைக் குடிக்கும் வெறுக்கத்தக்க சடங்கினையும் மேற்கொள்கின்றனர். பண்டர்கள் ரெங்காயி அம்மன், போலயம்மன் ஆகிய தெய்வங்களையும் தனித்தான சடங்குகளை நிகழ்த்தி வழிபடுகின்றனர். இச் சடங்குகளில் பெண்களே சிறப்பாகப் பங்குபெறுகின்றனர். பொங்கலினை அடுத்து வரும் இரவுகளில் ஒன்றில் இந்தத் தெய்வங்களுக்குச் சிறப்பு வழிபாடு செய்யக் குழுமும் இவர்கள் மேற்கொள்ளும் சடங்குகளில் தங்கள் உடம்பினைப் பிறந்த மேனியாகத் தெய்வத்திற்குக் காட்டுவதும் ஒன்றாகும். கணேசரைச் சிறப்பிக்க வேளாளர் சாதிப் பெண்கள் நடத்தும் செவ்வைப் பிள்ளையார் சடங்கோடு இதனை ஒப்பிடலாம். (பார்க்க: வேளாளர்.) சாவுச் சடங்குகளின்போது இரு பிரிவினரைச் சேர்ந்த ரெட்டிகளும் பூணூல் அணிந்து கொள்கின்றனர். இரு பிரிவினரும் கைம்பெண்கள் மறுமணம்,

மணமுறிவு ஆகியனவற்றை அனுமதிப்பதில்லை. இந்த இரு பிரிவினைச் சேர்ந்த பெண்களையும் அவர்கள் தோற்றத்தைக் கொண்டே எளிதில் வேறுபடுத்தி அறிந்து கொள்ளலாம். பண்ட ரெட்டிப் பெண்கள் கம்மல் எனப்படும் காதணியினை அணிவதோடு கூடச் சாதாரணக் கற்கள் பதித்த பட்டையான மூக்கு வளையத்தையும் அணிகின்றனர். கழுத்தில் தொங்கும் தங்கக் கம்பியில் தாலியும் பொட்டும் கோக்கப்பட்டிருக்கும். பொங்கலர் பிரிவுப் பெண்களைவிட இவர்கள் நல்ல நிறம் வாய்க்கப்பெற்றவர்கள். பண்ட பிரிவுப் பெண்கள் மிகுந்த உரிமை பெற்றவர்களாக உள்ளனர். நாட்டிய மகளிர் குலத்தில் தோன்றியவர்களாக இவர்கள் கருதப்படுவதே இதற்குக் காரண மாகக் கூறப்படுகிறது. மற்ற எல்லாச் சாதிப் பெண்களை விடவும் தங்கள் கணவன்மாரை ஆட்டிப் படைப்பதில் இவர்கள் கெட்டிக்காரர்களாக உள்ளனர். தேவடியா ரெட்டிகள் எனவும் இவர்கள் அடிக்கடி அழைக்கப்படுகின்றனர். வடக்குப் பகுதியில் வாழும் ரெட்டிகள் இப் பிரிவினைச் சேர்ந்த ஆண்களை மதிக் கின்றனர் எனினும் அத்தகைய சிறப்பினை இப்பிரிவினைச் சார்ந்த பெண்களுக்குக் காட்டுவதில்லை. இவர்கள் கற்பு ஒழுக்க நெறியிலும் உறுதி உடையவர்களாக இல்லை எனக் கூறப்படுவ தோடு அவ்வாறு கற்பு நெறியில் வழுவி ஒழுகுபவர்களை இவர் கள் கணவன்மார் எளிதில் மன்னித்துவிடுகின்றனர். பொங்கலர் களும் தங்கள் மனைவியர் ஒழுக்கநெறியில் நெகிழ்ச்சி காட்டு பவர்களாக இருந்தாலும், ஒழுக்கந் தவறும் கன்னியரையும் கைம்பெண்களையும் அவர்களின் ஒழுக்கக் குறைபாட்டுக்குக் காரணமானவர்களையும் கண்டிப்புடன் சாதி விலக்குச் செய் கின்றனர். எனினும் பண்ட பிரிவு ஆண்களும், பெண்களும் ஒருவருக்கு ஒருவர் மிகுந்த மரியாதை காட்டும் பழக்கம் உடைய வர்களாக உள்ளனர். இது மற்றச் சாதியாரிடையே காணப் படாத அரிய பழக்கமாகும். ஆணும் பெண்ணும் தங்களுக் கிடையே எத்தனை வயது வேறுபாடு உடையவர்களாயினும் ஒருவரைக் கண்டவுடன் மற்றவர் எழுந்து வணக்கம் சொல்வர். ஒரு கன்னியோ கைம்பெண்ணோ தவறுவாளாயின் அதற்காக வீட்டினைத் தூய்மைப்படுத்தித் தீட்டுப் போக்கும் சடங்கு விரிவான முறையில் மேற்கொள்ளப்படுகின்றது. தொட்டியன்,

கொலக்காரன் (வேட்டைக்காரன்), ஊர்த் தேவதையின் பூசாரி, சக்கிலியன், பவனி நாயக்கன் ஆகியோர் இச் சடங்கில் பங்கு பெற வேண்டும் என்ற விதி முன்பு இருந்தது. தற்போது தொட்டியன் வந்து பங்கு பெற வேண்டும் என வற்புறுத்தப் படுவதில்லை. கொலக்காரனும் பவனி நாயக்கனும் கொஞ்சம் காமாட்சி புல்லினைச் (*Andropogon Schoenanthus*) சுட்டு அதன் சாம்பலை மூன்று சட்டிகளில் உள்ள தண்ணீரில் இடுவர். தொட்டியன் பிறகு மஞ்சளில் பிள்ளையாரை எழுந்தருளிவித்து வழிபட்டபின், அந்த மஞ்சளைப் பானைகளில உள்ள நீரில் இடுவான். தீட்டுக் குற்றத்திற்கு உள்ளான குடும்பத்தினர் அதன் பின் வட்டமாக அமர்வர். சக்கிலியன் ஒருவெள்ளாட்டுக் குட்டியை அவர்களைச் சுற்றி இழுத்துச் செல்வான். பவனி நாயக்கன் அவன்பின் செல்வான். இருவருமாக அந்த ஆட்டுக் குட்டியின் கழுத்தை அறுத்து அதன் தலையைப் புதைப்பர். தவறான ஒழுக்கத்தில் ஈடுபட்ட குடும்பத்தைச் சேர்ந்த உறுப்பினர்கள் ஆட்டுத் தலை புதைக்கப்பட்டுள்ள அந்த இடத்தின் மீது மிதித் துச் செல்வர். சட்டிகளில் உள்ள சாம்பலும் மஞ்சளும் கலக்கப் பட்ட நீர் அவர்கள் மேலே ஊற்றப்படும். இச்சடங்கு ஊராளி கள் நடத்தும் ஒரு சடங்கினை ஒத்ததாகும்.

பண்டரெட்டிகளிடையே, சாதிக்கான பஞ்சாயத்துச் சபை இல்லை. பொங்கலர்கள் மட்டும் கம்பளக்காரன்கள், கொட்டுக் காரன்கள் எனப்படும் சாதிக் கட்டுப்பாட்டினை மேற்பார்க் கும் அலுவலர்களின் அதிகாரத்திற்கு உட்பட்டவர்களாக உள்ளனர்."

காபுக்கள் தொடர்பாக வழங்கும் பழமொழிகளுள் சில வருமாறு:-

1. காபுவே அனைவரையும் காப்பவன்.

2. காபுவின் கஷ்டங்கள் கடவுளுக்குத்தான் தெரியும்.

3. சோறு கிடைக்காமல் கூடக் காபு ஒருவன் சாக வேண்டி வரும்.

4. மகளுக்கும் மருமகளுக்கும் வேறுபாட்டினை காபு அறியான். (இருவரும் வயலில் பாடுபட்டே ஆக வேண்டும்.)

5. காபுவின் சாவுக்குக் கர்ணம்தான் காரணம்.

6. காபு கோட்டைக்குப் போகமாட்டான் (அரசரைப் பார்க்கச் செல்லமாட்டான்) காபு கோர்ட்டுக்குப் போகமாட்டான் எனவும் இன்று இப் பழமொழி வழங்குகின்றது.

7. காபு தூங்கியபடியே உழும்போது திருடன் மாட்டின் தலைக் கயிற்றினைக் கொண்டுபோய்விட்டான்.

8. காபுவின் கஷ்ட காலம் வந்தது; பஞ்சமும் கூடவே வந்தது.

9. மண்ணை வெட்டித் தன் வயிற்றை நிரப்புபவர்கள் எல்லோம் ரெட்டிகளே.

10. பழக்கமில்லாத ரெட்டி பல்லக்கில் ஏறினால் அந்தப் பல்லக்கு அப்படியும் இப்படியும் ஆடும்.

11. குதிரையில் முன்பின் ஏறி அறியாத ரெட்டி குதிரையில் ஏறி வால் பக்கம் பார்த்து அமர்ந்த கதையாக.

12. ரெட்டி தன் நாய்க்குக் குதிரைக்கு வைக்கும் தீனியை வைத்துவிட்டு அவனே குலைத்துக் கொண்டுள்ளான்.

**காரதி – Kāradhi**

மாரிஹொலையர்களைச் சிலபோது இப்பெயரால் அழைப்பர்.

**கரடி - Karadi (bear)**

தொட்டியர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**காரைக்காத்தார் - Karaikkāt**

காரைக்காத்த, காரைக்காத்தார், · கார்காத்தார் என்பன

மழைக்காகக் காத்திருந்த எனப் பொருள்தருவன. மற்றொரு விளக்கத்தின்படி மேகங்களைக் காத்துப் புரந்தவர் எனவும் பொருள் கூறுவர். இது புறமணக்கட்டுப்பாடு உடைய வேளாளர் சாதியின் ஓர் உட்பிரிவு ஆகும். காஞ்சிவரத்திலிருந்து மலைப் பகுதிகளுக்கு வந்து குடியேறிய சில தமிழ் மலையாளிகள் கணக்கெடுப்பின்போது கார்காத்த வேளாளர் எனப் பதிந்துள்ளனர்.

**கரைத்துறை வேளாளர் – Karaiturai (seacoast) Vellāla**

பட்டனவர்களில் சிலர் சூடிக் கொள்ளும் பெயர்.

**கரையாளன் – Karaiyālan (ruler of the coast)**

இடையர், மறவர் ஆகிய சாதியார் தரித்துக் கொள்ளும் பட்டப்பெயர்.

**கரையான் – Karaiyān**

கடற்கரையில் வாழும் தமிழ்நாட்டு மீனவர்களுக்கு உரிய ஒரு பெயர். பள்ளியரின் மீன்பிடிக்கும் பிரிவினர் பள்ளிக் கரையாளர் என அழைக்கப்படுகின்றனர். (பார்க்க: பட்டனவர்.)

**காராளர் – Kārālan**

1891 கணக்கெடுப்பு அறிக்கையில் காராளர் (மேகத்தை ஆள்பவர்கள்) சேலம், தென் ஆர்க்காடு மாவட்ட மலைப் பகுதிகளில் வேட்டையாடியும் பயிர்த்தொழிலில் ஈடுபட்டும் வாழ்பவர்களாகப் பதியப்பட்டுள்ளது. 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் மலபாரில் வேளாளருக்கு உரிய மற்றுமொரு பெயராகவும் மலையாளிகளுக்கு உரிய பெயராகவும் பதியப்பட்டுள்ளது. 1901 கணக்கெடுப்பில் சேலம் மாவட்டம் சேர்வராயன் மலையினைச் சேர்ந்த மலையாளிகள் தங்களை வேளாளர் எனவும் காராளர் எனவும் பதிந்துள்ளனர். காராளர்களெனத் தங்களைப் பதிந்துள்ளவர்கள் தந்துள்ள உட்பிரிவுகளின் பெயர்களான கொல்லி, பச்சை, பெரிய, பெரியண்ணன் என்பன இவர்களை மலையாளிகளோடு தொடர்புபடுத்துகின்றன. (பார்க்க: மலையாளிகள்.)

**கரெபாகு – Karepāku**

கரெபாகு அல்லது கருவேப்பிலை என்ற பெயர் சமைய லுக்கு உதவும் கருவேப்பிலையைக் (*Murraya Koenigii*) கூவி விற்கும் குறவர்களுக்கு உரிய பெயர்.

**கரிச்சா – Karichcha**

1901 திருவாங்கூர் கணக்கெடுப்பில் நாயர்களின் ஓர் உட் பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

**கரிம்பரபன்னாய – Karimbarabannaya (sugarcane sept)**

கேலசிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம்.

**கரிம்பாலன் – Karimpālan**

கரிம்பாலர் மலபாரில் வேட்டையாடியும் பயிர்த்தொழிலில் ஈடுபட்டும் வாழ்ந்து வரும் குறைந்த எண்ணிக்கையரான காடு வாழ் பழங்குடிகள். "இவர்கள் இடம்விட்டு இடம் பெயர்ந்து (புனம்) பயிர்த்தொழிலில் ஈடுபடுவதோடு மரம் வெட்டியும், காட்டு மிளகினைச் சேகரித்தும் வாழ்க்கை நடத்துகின்றனர். 'கேமல் ஹெம்ப்'க்கு வடபால் மலையடிவாரங்களில் இவர்கள் காணப்படுகின்றனர். குடுமி வைத்துக் கொள்ளும் இவர்கள் மருமக்கள் தாய சொத்துரிமை முறையினைக் கடைப்பிடிக்கின் றனர். எனினும் தாலிகட்டுச் சடங்கு நடத்தும் பழக்கம் இவர் களிடையே இல்லை. காய்ச்சலுக்குக் காரணமான குருவிளிப் பேயினை ஓட்டும் ஆற்றலினை இவர்கள் பெற்றுள்ளதாக நம்பப்படுகிறது."*

**கரிய – Kariya**

குடுபிகளின் ஓர் உட்பிரிவு.

---

* மலபார் மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Malabar District.)

**கரகடபன்னாயர் – Karkadabannaya (scorpion sept)**

பண்டர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். தேள் குலம் எனப் பொருள்படும்.

**கார்காத்தார் – Karkatta**

காரைக்காத்த வேளாளருக்கு உரிய மற்றுமொரு பெயர்.

**கர்ண – Karna**

கோல்லர்களின் ஓர் உட்பிரிவு. மாலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயரும் ஆகும்.

**கர்ணபட்டு – Karnabattu**

கர்ணபட்டுகள், கர்ணபட்டர் என வழங்கப்படும் இவர்கள் பெரும்பாலும் கோதாவரி மாவட்டத்தில் காணப்படும் தெலுங்கு பேசும் நெசவாளர் ஆவர். கோதாவரி மாவட்டத்தை இன்று சேர்ந்ததாக உள்ள இவர்கள் வாழும் பகுதியினை முன் காலத்தில் ஓர் அரசன் ஆண்டு வந்தான். சில அரக்கர்கள் அவன் நாட்டில் புகுந்து உணவிற்காக நாளும் சிலரைக் கவர்ந்து சென்றதால் அவன் மிகுந்த கவலைக்கு உள்ளானவனாக இருந்தான். அந்த அரக்கர்கள் தொல்லையினின்றும் காக்கும்படி அந்த அரசன் சிவபெருமானிடம் முறையிட்டான். அவன் தன்னிடம் கொண்ட பக்தியினால் மனம் நெகிழ்ந்த சிவன் தன் காதிலிருந்து ஒன்பது பேரைப் படைத்து அவர்களிடம் அந்த அரக்கர்களைக் கொன்று வரும்படி பணித்தார். அவர்களும் அதனை செய்து முடித்தனர். அவர்கள் வழித்தோன்றல்களே கர்ணபட்டர் (காதிலிருந்து வந்த வீரர்கள்). கர்ணபட்டர் சைவம் அல்லது லிங்காயத சமய நெறியினை மேற்கொள்கின்றனர். ஒரு சிறுமி பருவம் அடையின் அவள் பதினான்கு நாள்கள் தீட்டுப் பட்டவளாகக் கருதப்படுகிறாள். பருவம் அடையும் முன் மணம் செய்வித்தலே இவர்களது வழக்கம். பிராமணப் புரோகிதர் மணச் சடங்குகளை நடத்துவார். லிங்காயதர்களைப் போலவே இவர்களும் இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில்

வைத்துப் புதைக்கின்றனர். சாலே சாதியினைப் போன்ற கட்டமைப்பும் ஒவ்வொரு இடத்திலும் குலம்பெத்த அல்லது சாதி பெத்த எனப்படும் சாதித் தலைவனையும் பெற்று உள்ளனர். இவன் சாலேக்களின் சாதித் தலைவனான சேனாதிபதியினை ஒத்த உரிமைகள் பெற்றவன். முரட்டுத் துணியினை இவர்கள் நெய்கின்றனர். அது பட்டு சாலே, சீலெ சாலேக்களால் நெய்யப் படும் துணிகளைக் காட்டிலும் தரம் குறைந்தனவாக உள்ளன.

கர்ணபட்டர்கள் பற்றித் திரு எப்.ஆர் ஹெமிங்வே தந்துள்ள குறிப்புகள் வருமாறு:- "கர்ணபட்டர்கள் தாழ்ந்த சாதியா ராயினும் கைம்பெண்கள் மறுமணத்தை இவர்கள் அனுமதிப்ப தில்லை. 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் இவர்கள் இறைச்சி உண்பதில்லை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது சரியான தகவ லன்று என்பது கர்ணபட்டர்களிடையே நேரில் கேட்ட போது தெரிய வந்தது. பன்றிக் கறியினைக் கூட உண்பதாக இவர்கள் ஒப்புக் கொண்டனர். சோமேசுவரரே இவர்கள் குல தெய்வம். தை மாத அமாவாசையின்போது அவரை வழிபட இவர்கள் அனைவரும் கூடுவர். அக் கடவுளின் உருவத்தை சேற்று மண்ணைப் பிசைந்து அமைப்பர். பூசாரி அவ்வுருவத் தின் மேல் மலர்களை வாரி இறைத்தபின் தன் இரு கைகளை யும் நீட்டியவனாக அந்த மலர்களில் ஒன்று தன் கையில் விழும் வரை அந்த உருவத்தின் முன் மௌனமாக அமர்ந்திருப்பான்.

கர்ணபட்டர்களுக்குத் தனித்த பட்டப்பெயர்கள் ஏதும் இல்லை. அச்சாதியைச் சேர்ந்த பெரியவர்கள் அய்யா அல்லது அண்ணா என்பதனைத் தங்கள் பெயரின் பினனிணைப்பாகச் சேர்த்துக் கொள்கின்றனர்.

### கர்ண சாலே – Karna Sāle

தமிழ்நாட்டில் மதுரை, தஞ்சை மாவட்டங்களில் சேணியன் என அழைக்கப்படும் தெலுங்கு பேசும் நெசவாளர்களே கர்ண சாலேக்கள். தங்கள் தோற்றம் பற்றிய கதை வரலாறு எதனை யும் இவர்கள் கூறிக் கொள்வதில்லை. எனினும் இவர்களின் பெயரில் உள்ள கர்ண என்பது இவர்களைக் கர்ணபட்டர்களின்

தோற்றம் பற்றிய கதையோடு தொடர்புபடுத்துவதாக உள்ளது. இவர்களிடையே சைவர், வைணவர் ஆகிய இரு நெறி சார்ந் தோரும் உள்ளனர். இல்லபத்தினி குலத்தைச் சேர்ந்த குடும்பத் தினர் அனைவரும் வைணவர்களே. இவர்களிடையே காசி என்ற ஒரே ஒரு கோத்திரம் மட்டுமே உள்ளதாகக் கூறப்படு கிறது. புறமணக் கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் பல உள்ளன. அவற்றுள் சில வருமாறு:–

1. வஸ்தரால(துணி)
2. தாட்ல(கயிறு)
3. கொடவிளி (அறுவாள்)
4. தொட்டி (முற்றம்)
5. தாடிச் செட்டு (பனைமரம்)
6. திப்ப (குப்பைக் குவியல்)
7. ருட்ராச்சலர் (ருத்திராக்சம்)
8. மந்தை (ஊரைச்சேர்ந்த இடம்)

செட்டி எனப்படும் சாதித் தலைவனுடைய தலைமைப் பொறுப்பு சிலவிடங்களில் பரம்பரை உரிமை உடையதாக உள்ளது. அவனுக்குப் பெத்தகாபு, நெலசெட்டி என்ற இரண்டு உதவியாளர்கள் உளர். நெல செட்டி மாதந்தோறும் தேர்ந் தெடுக்கப்படுவதால் மாதத்தினைக் குறிக்கும் நெல என்ற சொல் அவன் பதவியோடு இணைந்து வழங்குகின்றது. கர்ண சாலேக்களின் மணச் சடங்குகள் பெரிதும் பத்ம சாலேக்களின் மணச் சடங்குகளை ஒத்தவை. எனினும் பூணூல் அணிவிக்கும் உபநயனமோ காசியாத்திரைச் சடங்கோ இவர்கள் மண நிகழ்ச்சிகளில் இடம்பெறுவதில்லை. பன்னிரண்டு பானை களை வைத்து மணநிகழ்ச்சியின்போது வழிபடுவர். பானை நீரில் மோதிரம் தேடும் சடங்கை இவர்க்ள் நிகழ்த்துவதில்லை.

தெலுங்குச் சாதியினைச் சேர்ந்த சிறுமிகள் பூப்படையும் போது அவர்கள் தங்குவதற்காகக் கட்டப்படும் குடிசைகளில் எட்டி மரத்தின் (*Strychnos Nux-vomica*) இலைக் கொத்துக் களை இடுவதைப் போலவே இவர்களும் இடுகின்றனர். ஒருத்தி பூப்படைந்த மூன்றாம் அல்லது ஐந்தாம் நாள் அவளுடைய உறவினர்கள் ஒரு மேற்கட்டியின் கீழ் அவள் வீட்டிற்கு வெல்லப் பாகில் தோய்த்த அரிசியினை எடுத்து வருவர். இந்த அரிசி ததிப்பியம் (நனைந்த அரிசி) என அழைக்கப்படும்.

அதனைக் குவித்து வைத்து ஆரத்தி எடுத்தபின் கூடியுள்ளவர் களுக்கு வெற்றிலை பாக்குடன் வழங்குவர்.

இறந்தவர்களைத் தேர் கட்டி இடுகாட்டுக்குக் கொண்டு சென்று லிங்காயதர்களைப் போலவே உட்கார்ந்த நிலையில் வைத்துப் புதைப்பர். ஜங்கம்கள் சாவுச் சடங்குகளை நிகழ்த் துவர்.

இவர்கள் குல தெய்வம் சோமேசுவரர். கர்ண சாலேக்கள் சிலர் லிங்கம் அணிகின்றனர். ஆயினும் இவர்கள் அதனை எப்பொழுதும் அணிந்து கொண்டிராமல் வீட்டில் வைத்திருந்து உணவு கொள்ளும்போதும் முக்கியமான நிகழ்ச்சிகளின்போதும் மட்டுமே அணிகின்றனர். இந்தச் சமூகத்தின் லிங்காயதப் பிரி வினரைப் பற்றித் திரு எச்.எ. ஸ்டுவர்ட் பின்வருமாறு எழுதுகின் றார்:- ''லிங்காயதரர்கள் தங்கள் எல்லாப் பழக்க வழக்கங்களி லும் லிங்க பலிசரை ஒத்தவர்களாக உள்ளனர். இவர்கள் 'சூட கம்' என வழங்கப்படும் தீட்டினை மேற்கொண்டவர்களாக அது ஏற்படும்போது குளித்து அதனைப் போக்கும் பழக்கத்தில் மட்டும் லிங்க பலிசரோடு மாறுபட்டவர்களாக உள்ளனர். லிங்க பலிசர் அனைவர் இல்லங்களிலும் இவர்கள் எத்தகைய வேறுபாடும் பாராட்டாது உணவு கொள்வர். எனினும் லிங்க பலிசர் இவர்களோடு இருந்து உணவு உண்பதில்லை. பிராமணர்களை எவ்விதத்திலும் சமயத் தலைமை பூண்டவர்க ளாக ஏற்றுக் கொள்ள மறுக்கும் இவர்கள் லிங்க பலிசர், ஜங்கம் அல்லது பண்டாரத்தைப் புரோகிதராகக் கொள்கின்றனர். தொழில் முறையில் இவர்கள் கைகோளர்களிலிருந்து வேறுபட் டவர்களாகப் பட்டு நெசவினை மேற்கொள்கின்றனர். கைகோளர் பட்டு நெசவினை மேற்கொளவதில்லை.'' பத்ம சாலேக்களைப் போல கர்ண சாலேக்களும் முரட்டு பருத்தித் துணிகளையே நெய்கின்றனர்.

**கர்ணம் – Karnam**

பார்க்க : கொரொணொ. (See:Korono.)

**கர்ணம் - Karnam (accountant)**

கம்மர்களின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கணக்கன் எனப் பொருள்படும.

**கர்நாடக- Karnataka**

ஹண்டிசிக்கர், உப்பரர் ஆகிய சாதிகளின் உட்பிரிவு ஒன்றுக்கு வழங்கும் இடத்தொடர்பான பெயர். கன்னடம் பேசும் மாதவர், ஸ்மார்த்தர் பிராமணப் பிரிவினருக்கும் இப்பெயர் உரியது. இது மராட்டியப் 'பகுதியிலிருந்து வந்தேறியவர்களான தேசஸ்த பிராமணர்களிலிருந்து கன்னடப் பிராமணர்களை வேறுபடுத்தும் பெயராகும்.

**காரொ பணிக்கர் - Kāro Panikkar**

மலபாரில் கோயில் பணி புரியும் ஒரு வகுப்பாருக்கு உரிய பெயர். "வேட்டக்கொருமகனும் (வேட்டைக்காரத் தெய்வம்) கிரியட்டில் நாயர் சாதிப் பெண்ணொருத்தியும் உறவு கொண்டதன் காரணமாகத் தோன்றியவர் காரொ பணிக்கர். நிமித்தம் கூறும் வெளிச்சப்பாடாகக் கோயில்களில் இவர்கள் பணிபுரிகின்றனர். இவர்கள் தெய்வத்தின் வழி வந்தவராதலின் இப் பணியில் அமர்த்தப்பட்டுள்ளனர்."*

**கர்ப்பூரச் செட்டி - Karpūra Chetti**

உப்பிலியர்களுக்கு உரிய மற்றுமொரு பெயர். இவர்கள் கர்ப்பூரம் செய்கின்றனர்.

**கர்த்தா - Kartā**

முகவர் அல்லது செயற்படுத்துபவர் எனப் பொருள்படும் இது நாயர், சாமந்தர் ஆகியோருக்குரிய சிறப்பு பெயரடையாகும். நாயர்களிடையேயும் மேற்குக் கடற்கரை சார்ந்த

---

* மலபார் மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Malabar district.)

பிற சாதியாரிடையேயும் இறந்தவர்களுக்குக் கொள்ளி யிடும் துக்கம் கொண்டாடுபவர்களுள் முதல்வனாக உள்ள வனை இப்பெயரால் குறிப்பர். கணக்கெடுப்பின்போது தங்க ளைக் கர்த்தாக்கள் எனப் பதிந்து கொள்ளும் பலிசர்கள் தங்களை மதுரையிலும், தஞ்சாவூரிலும் நாயக்க மன்னர்கள் சார்பில் ஆளுநர்களாக இருந்தவர்களின் வழித் தோன்றல்கள் எனக் கூறிக் கொள்கின்றனர்.

**கறுக்குப்பட்டையர் – Karukku – pattayar (those of the sharp sword)**

சாணாரின் ஓர் உட்பிரிவு. 1891 கணக்கெடுப்பில் கறுக்கு மட்டை (ரம்ப முனையுடைய பனையோலை மட்டை) என்ற பிரிவு பதியப்பட்டுள்ளது. சாணார் சிலர் கறுக்கு மட்டை வேளாளர் என்ற பெயரை மேற்கொண்டுள்ளனர் எனக் கூறப் படுகிறது.

**கருமலை – Karumala (black mountain)**

காணிக்காரரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கருமான் – Karuman**

கம்மாளரின் ஓர் உட்பிரிவு. இவர்கள் இரும்பு அடிப்பவர்கள்.

**கரும்புறத்தாள் - Karumpuraththal**

காப்பிலியர் சாதியார் மேற்கொண்டுள்ள மற்றுமொரு பெயர்.

**கரும்புறத்தான் – Karumpuraththan**

"கரும்புறத்தான் என்ற சொல் கரு - அறுத்தார் என்பதன் திரிந்த வடிவமாகும். இதன் பொருள் குலத்தினை வேரறுத்தவர் என்பதாம். இச்சாதியார் தஞ்சாவூரில் உள்ள கோட்டையில் எதிரிகள் நுழைய வஞ்சகமாக வழி செய்து தந்து அதனால் அரச னும் அவன் குடும்பத்தினரும் வேரோடு அழிந்தொழிய வழி செய்த கோட்டையின் காவலர்களான சோழ வேளாளரின் வழி வந்தவர்கள் ஆகையால் இவ்வாறு அழைக்கப்படுகின்றனர். வின்சுலோ கரும்புறம் என்பது பனைமரத்தைக் குறிக்கும்

எனக் கூறுகின்றார்.* இதன்† அடிப்படையில் கரும்புறத்தான் என்பது பனைமரம் ஏறும் கள் இறக்கும் தொழிலாளிக்கு உரியதாகும். கணக்கெடுப்புப் பட்டியல்களில் இப்பெயர் கரும்புறன் என்றே பதியப்பட்டுள்ளது. இச் சொற்பொருள் விளக்கம் சரியானதாயின் இச்சாதியர் தொடக்கத்தில் சாணாராகவோ, ஈழவர்களாகவோ இருந்திருத்தல் வேண்டும். இச்சாதியார் தஞ்சாவூரில் உள்ள திருவிடைமருதூர் என்ற ஊரிலிருந்து மதுரை மாவட்டத்தின் வடகிழக்குப் பகுதிகளில் வந்து குடியேறியவர்களாகக் கருதப்படுகின்றனர். மதுரையில் முதலில் இவர்கள் வந்து தங்கிய ஊர்களின் அடிப்படையில் இச்சாதியில் ஏழு உட்சாதிகள் உள்ளன. இவர்கள் இளமகன்களைப் போலத் தங்கள் சடங்குகளை நிகழ்த்துகின்றனர். பள்ளி என்பது இச்சாதியாருக்கு உரிய பட்டப் பெயராகும்.

**கருத்த - Karutta (dark - coloured)**

*1891* சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் இது இடையரின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. கரிசல் மண் நிலத்தைச் சேர்ந்தவர்கள் என்ற பொருளில் இவர்கள் கருத்தகாடு எனவும் தங்களைப் பதிந்து கொண்டுள்ளனர்.

**கருவ ஹட்டி - Karuva Hatti**

ஹட்டிகளுள் துப்புரவுப் பணி மேற்கொண்டுள்ள பிரிவினருக்கான ஒரு பெயர்.

**கருவன் - Karuvan**

கருமான் என்பதன் சிதைந்த வடிவம்.

**கருவேலம் - Karuvēlam**

*1901* திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் நாயர்களின் ஓர் உட்பிரிவாகப் பதியப்பட்டுள்ளது.

---

* *தமிழ் - ஆங்கில அகராதி, 1862.*

† இச்சொல் பிங்கல நிகண்டில் இப்பொருளதாகத் தரப்பட்டுள்ளது. இது கறுக்கு ரம்ப முனையுடைய பனைமட்டைக்கு உரிய தமிழ்ப் பெயராகும்.

**கசயி - Kasayi (butcher)**

முகமதியர்களுக்குரிய தொழில் தொடர்பான பெயர்.

**காசி - Kāsi (Benares)**

மேதரர், கர்ண சாலே ஆகிய சாதிகளுக்குரிய ஒரு கோத்திரம்.

**காசி - Kāsi**

கல் வேலை செய்யும் கம்சாலர் பிரிவுத் தச்சருக்குரிய பெயர்.

**கத்தூரி - Kasturi (musk)**

படகர், கம்மர், ஒக்கிலியர், வக்கலிகர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலங்களின் பெயர். இந்தியக் கத்தூரி இமயமலை சார்ந்த கத்தூரி மானி *(Moschus moschiferus)* லிருந்து கிடைக்கிறது.

**கசுபர் – Kasuba (workmen)**

நீலகிரியைச் சேர்ந்த இருளர்களின் ஒரு பிரிவினருக்கு உரிய பெயர். இப்பிரிவினர் காட்டு வாழ்க்கையைத் துறந்து மலைத் தோட்டங்களுக்கோ பிறவிடங்களுக்கோ பணியில் சென்று சேர்ந்தவர்கள்.

**காசுக்காரர் - Kāsukkar**

காசு என்பதிலிருந்து வந்ததான இப்பெயர் செட்டிகளின் ஓர் உட்பிரிவுக்கு உரியது.

**காசுலர் – Kāsula (copper coins)**

பத்ம சாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**காசியபர் - Kasyapa**

பட்ராசுகள், காட்ரியர், தொண்டியர் ஆகியோர் மேற

கொண்டுள்ள ஒரு பிராமண கோத்திரம். புகழ்மிக்க ஏழு முனிவர்களுள் காசியபரும் ஒருவர். இவர் பரசுராமனின் குரு ஆவார்.

**கடகம் - Katakam (crab)**

கோமட்டிகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கடல் அரையன் - Katal Arayan**

பார்க்க : வாளன். (see : Vālan.)

**கட்டாரி - Katāri (dagger : Katār)**

கோல்லர், முத்ராசர், எருகலர் ஆகிய சாதிகளின் புறமணக் கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். "கட்டாரி எனப்படும் கூர்வாள்" பட்டையான கூரிய கத்தியையும் குறுக்குத் தண்டால் இணைக்கப்பட்ட இரு பக்கப் பிடிகளையும் கொண்டது. கை குறுக்குத் தண்டினைப் பற்ற இருபக்கப் பிடிகள் மணிக்கட்டை ஒட்டியனவாக இருக்கும்."*

**கடசன் - Katasna**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கடசர்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- "இவர்கள் திருநெல்வேலி மாவட்டத்தில் கூடை முடைவதிலும் சுண்ணாம்புக் காளவாய் இடுவதிலும் ஈடுபட்டுள்ள எண்ணிக்கையில் குறைந்த சாதியார். பட்டங்கட்டி, நீட்டரசன் என்ற இரண்டு அகமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகளைக் கொண்ட சாதி இது. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். இறந்தவர்களைப் புதைக்கின்றனர். வேட்டுவர் சாதியை விடச் சமூகப் படிநிலையில் இவர்கள் மேம்பட்டவர்களாக உள்ளனர். சாணார் தயாரித்தும் உணவினை உண்டால் தீட்டுக்கு உள்ளாக வேண்டிவரும் என இவர்கள் கருதுகின்றனர். இந்துக்களின

* . ஹாப்சன் ஜாப்சன் - ஏலும் பர்னலும். (Yale and Burnell-Hobson Jobson.)

கோயில்களுக்குள் நுழைய இவர்கள் அனுமதிக்கப்படுவதில்லை. கெட்டதேவதைகளை இவர்கள் வழிபடுகின்றனர். இவர்களுக்கு எனத் தனியே வண்ணாரும் நாவிதரும் உள்ளனர். இவை யெல்லாம் இவர்கள் சாதியில் தாழ்ந்தவர்கள் என்பதன் அடை யாளங்களாம். பட்டம்கட்டி என்பது இவர்களுக்கு உரிய பட்டப் பெயர். கொட்டன் என்பதனையும் பட்டப்பெயராகப் பயன் படுத்துகின்றனர்.

**காத்தவராயர் - Kāththavarāya**

வண்ணாருக்கு உரிய மற்றும் ஒரு பெயர். தெய்வமாக்கப் பட்ட காளியின் மகன். வண்ணார் இத்தெய்வத்தையே தங்கள் குல முதல்வராகக் கூறுவர்.

**கத்தே - Kaththē (donkey)**

கழுதை எனப் பொருள்படும் இது மாதிகர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

**கத்தி - Kaththi (knife)**

தேவாங்கர், மாதிகர் சாதியின் புறமணக்கட்டுப்பாடுடைய குலத்தின் பெயர்.

**கத்திரி – Kaththiri (scissors)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கடபர்களின் ஓர் உட்பிரிவு.

**கத்திரிவாண்டுலு - Kaththiravāndlu (scissors people)**

குற்ற வதப்பாரான இவர்களைப் பற்றித் திரு எப். எஸ். முல்லலெ பின்வருமாறு எழுதியுள்ளார்:- "சட்டைப் பையில் கையிட்டுத் திருடும் தொழிலை மேற்கொண்டுள்ள கூட்டத் தாருக்கு நெல்லூர் பகுதியில் வழங்கும் பெயராகும் இது. திருவிழாக்களுக்கும் சந்தைகளுக்கும் கூட்டமான புகை வண்டி நிலையங்களுக்கும் அடிக்கடி சென்று கத்தி, கத்தரிக்கோல் ஆகியன விற்பதில் இவர்கள் ஈடுபடுவதால் இவ்வாறு அழைக்

கப்படுகின்றனர். சமயம் வாய்க்கும்போது அவைகளைப் பயன் படுத்திக் கழுத்தணிகளைக் கத்தரித்தல், பைகளைக் கிழித்தல் ஆகியனவற்றைச் செய்வர். கள்ளத்தனத்திற்குப் பெயர்போன இவர்களுள் பலர் வாயில் சிறிய கத்தரிக்கோலினை அடக்கிய வர்களாக இருக்கக் காணலாம். பல விசித்திரமான வடிவமைப் புடைய அடிபுதையரணங்களை அணிந்திருப்பர். அவை கத்தரிக் கோல்களைப் பதுக்கி வைக்க வசதியானவையாகப் பயன்படுத் தப்படுகின்றன. கத்திக்குப் பதிலாகப் பயன்படுத்த உடைந்த கண்ணாடித் துண்டுகளையும் இவர்கள் வாயில் அடக்கியபடி இருப்பர். வட ஆர்க்காடு மாவட்டத்திலும் கடப்பை மாவட்டத் தின் சில பகுதிகளிலும் தொங்க தாசரி எனவும் கடப்பை, பெல் லாரி கர்நூல் மாவட்டங்களில் கோல்ல வொட்டர், தொங்க வொட்டர், முகெரி கலர் எனவும் கிருட்டிணா, கோதாவரி மாவட்டங்களில் பசுபுகள் எனவும் தென் மாவட்டங்களில் அழகிரி, ஈன அல்லது தோகை மலைக் குறவர் எனவும் பல்வேறு பகுதிகளில் பல்வேறு பெயர்களால் இவர்கள் அழைக்கப்படு கின்றனர். கிழக்குக் கரையோரப் புகைவண்டித் தட அமைப்புக் குப்பின் இந்த வகுப்பைச் சேர்ந்த திருடர்கள் வடக்கே மிதினாப்பூர் வரை பிடிபட்டுள்ளனர். ஆண், பெண் இரு பாலாரும் குழந்தைப் பருவத்திலேயே இசிவு நோயின் தாக்கு தலிலிருந்து காத்துக் கொள்ளத் தற்காப்பாகப் புரு ங்களின் கடையிலும் புருவ இடையிலும் சூடு போடப்பட்டிருப்பது இவர்களை எளிதில் அடையாளம் கண்டுகொள்ள பெரிதும் உதவுகின்றது.

இவர்களைப் பற்றிய பின்வரும் தகவல்களுக்குக் காவல் துறையினைச் சேர்ந்த ஓர் அலுவலருக்குக் கடப்பாடுடையேன்:- "இவர்கள் ஓர் குறிப்பிட்ட வகை அடிபுதையரணத்தைப் பயன்படுத்துகின்றார்களா என்பது பற்றி எனக்குத் தெரியாது. உழவர்களும் தாழ்ந்த வகுப்பாரும் பொதுவாகப் பயன்படுத்து வதைப் போன்ற செருப்புகளையே இவர்களும் பயன்படுத்து கின்றனர். இவற்றை இவர்கள் திருடிக் கொள்கின்றனர் பிச்சை எடுபபவர்கள் போலப் பகல் நேரத்தில் வீடு வீடாகச் செல்லும் இவர்கள் இச் செருப்புக்களைக் கைப்பற்றிச் செல்

கின்றனர். இரவில் மற்ற பொருள்களைத் திருடிச் செல்லும் போது இவற்றையும் திருடிச் செல்வர். இச் செருப்புகள் மாவட்டம்தோறும் வேறுவேறு அமைப்புடையனவாகத் தைக் கப்படுகின்றன. பல வேறிடங்களில் திருடப்படுவதால் கதிரர் அணிந்திருக்கும் செருப்புகள் பல்வேறு மாதிரியாக இருக்கின்றன. இவர்கள் தங்களுக்கெனத் தனித்த மாதிரியில் அடிபுதை யரணங்களைச் செய்து கொள்வதில்லை. இவர்கள் அவற்றைத் தங்களுக்கெனச் செய்து கொள்வதுகூட இல்லை. பெரும்பாலும் இவர்கள் அடிபுதையரணங்களை அணிவதில்லை. வெறுங் காலுடனேயே இவர்கள் விரைந்து ஓடவும் நடக்கவும் வல்லவர் களாக உள்ளனர். காடுகள் வழியே செல்லும்போது அடி புதையரணங்களைப் பயன்படுத்தும் இவர்கள் நாட்டுப்புறத் திற்கு வந்ததும் அவைகளைத் தங்கள் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவரிடம் ஒப்படைத்துவிடுகின்றனர். யாரேனும் இவர்களைப் பிடிக்கத் துரத்திச் சென்றால் இவர்கள் அவற்றைக் கழற்றி வீசியெறிந்தவர்களாக ஓட்டம் பிடிப்பர். 1899-இல் நாங்கள் ஒருவனை நெடுஞ்சாலையில் கைது செய்தபோது அவனிடம் ஐந்தாறு அளவுகளில் வேறுவேறு வடிவினவான ஐந்தாறு இணை அடிபுதையரணங்கள் இருந்தன. அத்தனை இணைகள் அவனிடம் எப்படி வந்தன என்பதற்கு அவனால் சரியான விளக்கம் தர முடியவில்லை. அவனிடம் இருந்த அதிகப்படி யான இணைகளுக்கு உரிய அவன் கூட்டாளிகளில் சிலர் அருகில் இருந்த காடுகளில் அப்போது ஒளிந்திருந்தனர் என்பது எனக்குப் பின்னரே தெரிய வந்தது.

“முகத்தில் கத்திரர் மட்டும் முத்திரை அடையாளங்களைப் பெற்றிருக்கவில்லை. நாடோடி இனத்தவர்களில் பெரும்பாலோர் இத்தகைய முத்திரை உடையவர்களாகவே உள்ளனர். கூட்ட மாக இவர்கள் இடம் விட்டு இடம் பெயர்ந்து பயணம் மேற் கொள்வதால் காலநிலை வேறுபாட்டின் காரணமாகக் குழந்தை களுக்குச் சில சமயங்களில் “சண்டுகட்டுலு” அல்லது “பலகுரு குர” என்ற நோய் வருகின்றது. பிறந்த ஆறாம் மாதத்திலிருந்து ஐந்து ஆண்டு முடியும்வரை குழந்தைகள் இத்தகைய நோயி னுக்கு ஆளாகின்றனர். பல் முளைக்கும்போது குழந்தைகளிடம்

தோன்றும் அறிகுறிகளே இந்த நோய் தாக்கும்போதும்அவர் களிடம் ஏற்படுகின்றது. இந்த நோயினால் தாக்கப்படும் குழந்தைகளுக்கே புருவ மத்தியிலும் கண்ணின் கடையிலும் சிலபோது வயிற்றிலும் சூடு போடுவர். புருவ மையத்திலும் கண்ணின் கடையிலும் இடப்படும் சூடுகள் வட்ட வடிவின வாகவும் வயிற்றில் இடப்படும் சூடு நீண்ட கோடாகவும் இருக்கும். நீண்ட மஞ்சளின் ஒரு முனையினைச் சூடாக்கி வட்ட வடிவமான சூட்டினை இடுவர். கறுப்புத் துணியினை பென்சில் போலச் சுருட்டி நெருப்பில் காட்டிச் சூடிடுவதும் உண்டு. வயிற்றின் நீண்ட கோட்டினை ஊசியினைக் காய்ச்சி இழுத்து இடுவர். சாதி இந்துக்கள் சிலரும் தங்கள் குழந்தைகளுக்கு இதுபோலச் சூடிடுகின்றனர்.''

கத்திரர் சாதிப் பெண்கள் பிச்சை எடுக்கும்போது தலையில் அணிந்து கொள்ளும் சுருள் வடிவமாகப் புனையப்பட்ட நெட்டி யாலான தலையணி ஒன்றின் மாதிரியினைத் தந்து உதவியமைக் காக நான் திரு பி.பி.தாமஸ் அவர்களுக்குக் கடப்பாடுடை யேன். இச்சாதி ஆண்களும் பெண்களும் எப்பொழுதும் தங்க ளோடு உடன்கொண்டு செல்லும் மறைவான உட்பைகள் பல தைக்கப்பட்டுள்ள துணிப்பையினைத் தந்து உதவியவரும் அவரே. மறைவாகப் பல உட்பைகள் தைக்கப்பட்டுள்ள இப் பைகளிலே இவர்கள் தங்கள் தொழிலுக்குப் பயன்படுத்தும் சிறிய கத்தி முதலியவைகளை ஒளித்து வைத்திருப்பர்.

''ரயில் திருடர்களின் வரலாறு'' என்ற தன்னுடைய நூலில் திரு பாப்பா ராவ் நாயுடு பையில் கைபோட்டுத் திருடும் கெட்டிக்காரரர் பற்றி எழுதியுள்ளதாவது:-''இவர்களுள் பலரும் 'சதாவுகள்' எனப்படும் அடிபுதையரணத்தை அணிகின்றனர். திருடிய பொருள்கள் மிகச் சிறியனவாயின் உடனே அவற்றை 'சதாவுகளுள்' போட்டுவிடுவர். வடிவ அமைப்பில் அவை அத் தகைய பொருள்களை மறைக்க வசதியானவையாக உள்ளன. இத்தகைய சதாவுகளை அணிந்துள்ள பையில் கையிடும் கள்வர் மீது சந்தேகப்பட நேர்ந்தால் முதலில் அவர்கள் சதாவுகளை யும் அடுத்து வாய் முதலிய உடல் உறுப்புகளையும் சோதனை யிட வேண்டும்.''

**கத்துலர் - Kaththula (sword)**

ஏனாதியர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**காதிகெ - Kātige (collyrium)**

அஞ்சன மை எனப் பொருள்படும் இது குர்ணிகளின் ஒரு கோத்திரம்.

**காதிகலர் - Kātikala (collyrium)**

அஞ்சன மை எனப் பொருள்படும் இது தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கத்திகெ - Katike**

தெலுங்கு நாட்டில் இறைச்சிக் கடைக்காரர்களான கத்திகெயர் பற்றிக் கர்நூல் மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளதாவது:- "இவர்களுள் சிலர் சுல்தானி இறைச்சிக் கடைக்காரர் என அழைக்கப்படுகின்றனர். கர்நூல் நவாபினால் கட்டாயமாகச் சுன்னத்துச் செய்விக்கப்பட்டவர்களான இவர்கள் இந்துக்கள் முகமதியர் ஆகிய இரு சாராருக்குமான பழக்க வழக்கங்களை மேற்கொண்டுள்ளனர்." கர்நூலிலிருந்து என்னோடு கடிதத் தொடர்பு கொள்ளும் ஒருவர் கர்நூலைச் சேர்ந்த இறைச்சிக் கடைக்காரர்கள் மூன்று பிரிவினராக உள்ளனர் எனத் தெரிவித்துள்ளார். அவர்களுள் ஒரு பிரிவினர் மாட்டிறைச்சி விற்பவர்கள். மற்ற இரு பிரிவினரும் ஆட்டிறைச்சி விற்பவர்கள். மாட்டிறைச்சி விற்பவர்கள் காயி காசயி எனப்படும் முகமதியர்கள். பின்னர் கூறப்பட்ட ஆட்டிறைச்சி விற்பவர்கள் சுன்னத்துச் செய்யப்பட்ட சுல்தானியர், சுன்னத்துச் செய்யப்படாத சுராசுகள் ஆகிய இரு பிரிவினராக உள்ளனர். இவ்விரு பிரிவினரும் இரண்டு உடன்பிறந்தவர்களின் வழிவந்தவர்களாகக் கூறிக் கொள்கின்றனர். இவர்களைப் பற்றி வழங்கும் வழக்கு வரலாறு பின்வருமாறு:- பிஸ்மல்லா கூறாமல் இந்துக்கள் வெட்டி விற்கும் ஆட்டிறைச்சியினை உண்பதில் திப்பு சுல்தானுக்கு உடன்பாடில்லை. எனவே அவன் ஆட்டிறைச்சி விற்பவர்களான அந்த இரு உடன் பிறந்தவர்களையும் தன்

அவைக்கு வரும்படி ஆணையிட்டான். குடும்பத்தின் தலைவன் என்ற முறையில் அவர்களுள் மூத்தவன் அவைக்குச் செல்லவே அவன் வலுக்கட்டாயமாகச் சுன்னத்துச் செய்யப்பட்டான. இதனைக் கேள்விப்பட்ட இளையவன் தலைமறைவாகிவிட்டான். எனவே மூத்தவனின் வழிவந்தவர்கள் முகமதியர்களாகவும் இளையவர்களின் வழிவந்தவர்கள் இந்துக்களாகவும் கருதப் படுகின்றனர். மூத்தவன் வலுக்கட்டாயமாக முகமதிய னாக்கப்பட்ட காரணத்தால் அவனும் அவன் வழிவந்தவர் களும் முகமதியர்களுக்கான பழக்க வழக்கங்கள் அனைத்தை யும் அப்படியே மேற்கொள்வதில்லை. அண்மைக்காலம் வரை அவர்கள் தாடியைக் கூட வளர விட்டதில்லை. தற்பொழுது இவர்கள் பள்ளிவாசலுக்குச் செல்வதோடு முகமதியர்கள் போல ஆடை அணிந்து தலையினை மழித்துக் கொண்டு தாடி வளர்த்தாலும் உண்மையான முகமதியர்களோடு மணஉறவு கொள்வதில்லை. உடன்பிறந்தோர் இருவருள் இளையவன் வழியில் வந்தவர்கள் இன்றும் தங்களை ஆரி கத்திகள் (மராட்டி இறைச்சிக் கடைக்காரர்) என்று அழைத்துக் கொள்வதோடு இந்து சமயத்தை மேற்கொண்டவர் களாக இந்துக்களின் பழக்க வழக்கங்களைப் பின்பற்றி வருகின்றனர். இவர்கள் முகமதியர்களோடோ சுல்தானியர் களோடோ உடன் உண்பதில்லை என்றாலும் இவர்கள் செய்யும் தொழில் காரணமாகவும் சுல்தானியர்களோடு இவர்களுக்கு உள்ள நெருக்கம் காரணமாகவும் இந் துக்கள் இவர்களை ஒதுக்கியே வைக்கின்றனர். கர்நூல் மாவட்டத்திலுள்ள நந்தியாவில் இந்துக்களின் பழக்கவழக்கங் களை மட்டுமே மேற்கொண்டுள்ள மராட்டிய இறைச்சிக் கடைக் காரர்கள் முகமதியர் பெயர்களைக் கொண்டவர்களாக உள்ள னர் என எனக்குத் தெரிவித்துள்ளனர். பதவி இழந்தவரான கர்நூல் நவாப்பான குலாம் ரசூல்கானின் தந்தையின் காலத் திற்கு முன் இறைச்சி வணிகம் முழுதும் மராத்திய இறைச்சிக் கடைக்காரர்களாலேயே நடத்தப்பட்டு வந்ததாகச் சர்வெல் வட்டாட்சி அலுவலர் எனக்குத் தெரிவித்தார். இவர்களுள் சிலர் மாவட்டக் கையேட்டில் குறித்துள்ளபடி கட்டாய மாகச் சுன்னத்துச் செய்யப்பட்டுச் சுல்தானிய இறைச்சிக் கடைக்காரர் என்று தனியே ஒரு சாதியாராக்கப்பட்டனர்.

சுல்தானிய இறைச்சிக் கடைக்காரர்களிடையே பக்ரா (ஆட்டி றைச்சி), கெய் காசி (மாட்டிறைச்சி) என்ற இரு பிரிவினர் உள் ளனர். இதே போலப் பெல்லாரி மாவட்டத்திலும் கட்டாயமாக முகமதியராக மதம் மாற்றப்பட்டவர்களைப் பற்றிய கதைகள் வழக்கில் உள்ளன. அங்குக் காசாயிகள் மதம் மாற்றப்பட்ட இந்துக்களே. முகமதியர்களான இவர்கள் இந்துக்களைப்போல உடை அணிவதோடு இந்துக்களுக்குரிய பின்னிணைப்பினைக் கொண்ட பெயர்களையும் (ஹுசைனப்பா என்பது போல) கொண்டவர்களாக உள்ளனர்.

1907-இல் சென்னையில் நிகழ்ந்த இறைச்சிக் கடைக்காரர் கள் வேலைநிறுத்தம் தொடர்பாகச் சென்னை மாநில ஆளுநர் அவர்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு விண்ணப்பத்தின் சுருக்கத் தினை இறைச்சிக் கடைக்காரர்கள் தொடர்புடைய இவ்விடத் தில் தருவது பொருத்தமாக இருக்கும் என நினைக்கிறேன். "சென்னை நகரத்தில வாழ்பவர்களாகிய நாங்கள் நகரில் இறைச்சிக் கடைக்காரர்கள் மேற்கொண்டுள்ள வேலை நிறுத் தம் காரணமாகப் படும் இன்னல்களை மேன்மை தங்கிய உங் களுடைய கவனத்திற்குக் கொண்டு வர விரும்புகின்றோம். பிராமணரல்லாத இந்துக்கள், முகமதியர்கள், இந்தியக் கிறித்த வர்கள், பார்சிகள், யூரேசியர்கள், ஐரோப்பியர் ஆகியோரு டைய முக்கிய உணவாகிய ஆட்டிறைச்சி கிடைக்காத காரணத் தால் வழக்கமாக உண்ணும் உணவு கிடைக்கவில்லையே என்ற மனக்குறையும் பலரின் உடல் நலம் காக்க அடிப்படைத் தேவையான உணவுகிடைக்காத காரணத்தால் உடல் நலம் கெட்டுத் தாங்கள் இதுவரை ஆட்படாமலிருந்த நோயினுக்கு ஆட்படும் நிலை ஏற்பட்டுவிடுமோ என்ற கவலையும் அடைந்த வர்களாக உள்ளோம் என்பதனைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றோம்."

**கடொரவுதொ - Katorauto**

ஒரிய சமீன்தார்களின் அந்தப்புரத்தில் உள்ள காமக் கிழத் தியருக்குப் பிறந்தவர்களுக்குரிய பெயர். இவர்கள் தங்களைச் சத்திரியர் எனக் கூறிக்கொள்கின்றனர்.

**கட்டை - Katta**

கட்டை அல்லது கத்தெ எனக் கூறப்படும் இது ஆற்றங் கரை, குளக்கரை, வரப்பு எனப் பொருள்படுவது. தேவாங்கர், குர்ணிகள் ஆகிய சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலமாகப் பதியப்பட்டுள்ளது.

**கட்டெலு - Kattelu (sticks or faggots)**

போயர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கட்டிர - Kattira**

கடபர் சாதியின் ஓர் உட்பிரிவு.

**காட்டு - Kāttu**

பார்க்க - காடு. (See ; Kadu.)

**கட்டிக்கொடுக்கின்ற சாதி - Kattukudugirajāti**

ஆணும் பெண்ணும் பேருக்கு மணம் செய்துகொண்டு ஒன்றாக வாழ அனுமதிக்கின்ற சாதி எனப் பொருள்படுவது. சேலத்தைச் சேர்ந்த துருவாளர் (வேடர்) சாதிக்குரிய பெய ராகச் சேலம் மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ளது. இவர்களிடையே தற்காலிக ஏற்பாட்டோடு கணவன் மனைவிய ராக் ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழ அனுமதிக்கின்ற பழக்கம் இருப்பதால் இவர்கள் இப்பெயர் பெற்றனர்.

**காட்டுக் காபாரி - Kāttu Kāpari (dweller in the forest)**

வில்லியன்கள் அல்லது இருளர்களுக்கு உரிய பெயராகக் கூறப்படுவது. இதற்குச் சமமான காட்டுக் காபு என்பது ஜோகி களுக்கு உரிய பெயர்.

**காட்டு மராத்தி - Kāttu Marāthi**

குருவிகாரன்களுக்குரிய மற்றுமொரு பெயர்.

**கௌதிகிரார் - Kaudikiāru**

கௌதிகிரார் அல்லது கவுதிகாரர் என்பது குருபர்களுக்குரிய பட்டப்பெயராகும்.

**காவடி - Kāvadi**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கபடி என்பது தெலுங்கு பேசும் விறகு வெட்டுபவர்களுக்கான பெயராகத் தரப்பட்டுள்ளது. காவடி என்பது திருப்பதியில் உள்ளபெருமாள் சாமிக்குக் காவடியில் படையல்களைச் சுமந்து செல்லும் குறவர்களின் பிரிவினருக்கு உரிய பெயராகும். காவடி அல்லது காவடிக என்பது பானையில் தயிரைத் தலையில் வைத்துச் சுமந்தவர்களாகச் சென்னைக்குக் கொண்டு சென்று விற்கும் கன்னடியன்களுக்கும் உரிய பெயராகும்.

**காவல்காரர் – Kāvalgar (watchman)**

கணக்கெடுப்புக்களின்போது அம்பலக்காரர்களின் ஓர் உட்பிரிவாகவும் நத்தமான், மலையமான், சுதர்மான் ஆகியோருக்குரிய பட்டப்பெயராகவும் பதியப்பட்டுள்ளது. இதற்குச் சமயான காவலி என்பது கம்மர்களின் ஓர் உட்பிரிவு. காவலியர் எனப்படும் காவல்காரர்கள் தெலுங்கு நாட்டைச் சேர்ந்த லிங்காயத போயர்களாவர் எனக் கூறப்படுகிறது. தெலுங்கு முத்துராசாக்களும் காவல்காரர் என அழைக்கப்படுகின்றனர். தென் மாவட்டங்களில் உள்ள ஊர்க்காவல்முறை மறவர்கள் பற்றிய தலைப்பில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**கவுண்டன் - Kavandan**

*1901* கணக்கெடுப்பு அறிக்கையில் தொள்ளாயிரத்திற்கு மேற்பட்டவர்கள் தங்களைக் கவுண்டன் எனப் பதிந்து கொண்டுள்ளனர். இது கொங்கு வேளாளருக்கு உரிய பட்டப் பெயர். அனுப்பர், காப்பிலியர், பள்ளி, செம்படவன், ஊராளி, வேட்டுவன் போன்ற பிற சாதியாரும் இப்பட்டபெயரை வைத்துக் கொள்கின்றனர். கன்னட மொழியினருடைய கௌட, கௌண்ட என்பதற்குச் சமமான தமிழ்ப் பெயராகும்.

**கௌண்டின்ய - Kaundinya (a sage)**

ராசுகள், பட்ராசுகள் மேற்கொண்டுள்ள பிராமணர்களுக் குரிய குலம்.

**கவண் - Kavane (sling)**

கங்காதிகார ஹொலையர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலம்.

**கவரை - Kavarai**

கவரை தமிழ்நாட்டில் வந்து தங்கி வாழும் தெலுங்கு வணிகரான பலிசருக்கு உரிய பெயர். இப்பெயர் மகாபாரதத்தில் கூறப்பட்டுள்ள குருவின் சந்ததியினரான கவுரவர் அல்லது கௌரவர் என்பதன் திரிந்த வடிவமாகும் என்பர். சிவனின் மனைவியான கௌரியின் புதல்வர்களே கௌரவாலு என்று பெயர் பெற்றனர் என்றும் கூறுவர். இப் பெயரின் தோற்றம் பற்றியதான வேறு விளக்கங்கள் வருமாறு:–

அ) தாழ்ச்சியுற்ற ஆரியர் என்ற பொருளில் கவர்யுகு என்ற வடசொல்லின் திரிந்த வடிவம்.

ஆ) கலத்தல் எனப் பொருள்படும் கவர் என்ற வட சொல்லில் இருந்து அல்லது பின்னலிடப்பட்ட எனப் பொருள்படுவதான கவரக என்ற வடசொல்லிருந்து இப்பெயர் அமைந்திருக்கலாம். பரத்தையராகத் தொழில் நடத்தும் தெலுங்குப் பெண்கள் பலரும் இப் பிரிவினராதல் பற்றி இவ்வாறு விளக்கம் தரப்படுகிறது.

இ) கவரை அல்லது கவரர் எனற பெயர் கால்நடைகளை வாங்குவோர், விற்போர் என்ற பொருள் அடிப்படை யிலும் வந்ததாகலாம்.

கவரைகள் தங்களைப் பலிசர் என அழைத்துக் கொள்கின் றனர். பலி நெருப்பிலிருந்தும் குதித்து வந்தவர் எனப் பொருள் படுவது பலிசர் என்ற சொல். பிற தெலுங்குச் சாதியாரைப் போலவே இவர்களிடையேயும் துப்பாக்கி, ஜெட்டி (மல்லர்), பகடாளர் (பவளக்காரர்), பண்டி (வண்டி), சீமநெலி என்பது போன்ற பல புறமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் உள்ளன.

திருநெல்வேலி மர்வட்டத்தில் உள்ள ஸ்ரீவில்லிபுத்தூரில் வாழும் கவரைகள் கடலூரில் உள்ள மஞ்சக்குப்பத்திலிருந்து

துரைகிருட்டிணம்மா நாயுடு என்பாரோடு அங்கு வந்து குடியேறிய சில குடும்பங்களின் வழிவந்தவர்கள் எனக் கருதுகின்றனர். திருமலைநாயக்கன் ஆட்சிக்காலத்தில் மஞ்சக்குப்பத்தில் ராமராசு என்பவன் இருந்து ஆட்சி செலுத்திவந்தான். அவனுக்கு ஐந்து பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் இளையவனான துரைகிருட்டிணம்ம அலைந்து திரிவதில் ஆர்வம் மிக்கவன். ஒருமுறை அவன் தன் அன்னையிடம் கொஞ்சம் பணம் பெற்றுக் கொண்டு திருச்சிராப்பள்ளி சென்று அங்கே கடைத்தெருவில் அமர்ந்திருக்கும்போது யானை ஒன்று மதம் பிடித்து ஓடி வந்தது. துரைகிருட்டிணம்ம அதன் மதத்தினை அடக்கிப் பணிய வைத்தான். அதனைக் கேள்வியுற்ற விசயரங்க சொக்கநாதன் அமைச்சர்களையும், ஏவலர்களையும் அனுப்பி அவனை அரண்மனைக்கு அழைத்து வந்து அவனோடு உரையாடிக் கொண்டிருக்கும்போது திருநெல்வேலியில் உள்ள சில பாளையக்காரர்கள் வரி கொடுக்க மறுக்கின்றனர் என்ற செய்தி வந்தது. துரைகிருட்டிணம்ம தான் அங்கே சென்று அவர்களைப் பணிய வைப்பதாக முன் வந்தான். அப்பணிக்காக ஸ்ரீவில்லி புத்தூரைக் கடந்து செல்லும்போது பாழடைந்த ஒரு கிருட்டிணன் கோயிலைக் கடக்க நேரிட்டது. பாளையத்தாரைப் பணிய வைக்கும் தன் முயற்சியில் வெற்றி கிடைத்தால் அந்தக் கிருட்டிணன் கோயிலைப் புதுப்பிப்பதாக அவன் மனத்தில் வேண்டிக்கொண்டான். அவன் திருநெல்வேலியை அடைந்த போது பாளையத்தார் எத்தகைய எதிர்ப்பும் காட்டாமல் வரியினைச் செலுத்திவிடவே துரைகிருட்டிணம்ம வில்லிபுத்தூரை அடைந்து அங்கேயே தங்கிவிட்டான்.

இவர்களுடைய திருமணச் சடங்குகள் தெலுங்குச் சாதியாருடைய திருமணச் சடங்குகளைப் பின்பற்றி அமைந்துள்ளன. சிமனெலி குலத்தைச் சேர்ந்தவர்கள் தங்களைக் கிருட்டிணம்மாவின் நேர் சந்ததியினர் எனக் கருதுவதோடு திருமணத்தின் போது இரண்டு சிறப்பான சடங்குகள் மேற்கொள்கின்றனர். அவற்றுள் ஒன்று கிருட்டிணம்ம பேரண்டாளு எனப்படும். அதில் சத்திரியச் சடங்குக்கு முன்னாக மணமகனும் மணமகளும் கோயிலுக்குச் செல்லும்போது தங்கள் தலையில் பானை

களைச் (குரிகெலு) சுமந்து செல்வர். கிருட்டிணம்ம பேராண்டலு என்னும் சடங்கு முகூர்த்த நாளுக்கு முன் தினம் நடத்தப்படுகிறது. அது திருமணமான சுமங்கலியான கிருட்டிணம்மாவின் ஆவியினை வழிபடுவதாகும் அப்போது சுமங்கலி ஒருத்திக்குப் புதிய சேலை ஒன்றினை வெற்றிலை பாக்கு, காணிக்கை ஆகியவற்றொடு வழங்குவதோடு மற்றவர்களுக்கு முன்பு அவர்களுக்கு உணவளிப்பர். இது கிட்டத்தட்ட சிரார்த்த சடங்கினை ஒத்த சடங்கே. ஓமம் வளர்ப்பதும் மந்திரம் சொல்வதும் ஆகியன மட்டும் இதில் இடம்பெறுவதில்லை. ஓமம் வளர்த்தலும் மந்திரம் சொல்வதும் பிராமணர்களாலும் தங்கள் சடங்குகளை நடத்துவிக்கப் பிராமணர்களை அமர்த்தும் சில சாதியார்களாலும் மேற்கொள்ளப்படுகிறது. இதன் அடிப்படைத் தத்துவம் இறந்துபோன சுமங்கலியான மகளிரின் ஆவியினைத் திருப்திப்படுத்தலேயாம். ஒரு குடும்பத்தில் அவ்வாறு ஒருத்தி சுமங்கலியாக இறப்பாளாயின் அக்குடும்பத்தில் நடைபெறும் நல நிகழ்ச்சிகளைத் தொடங்குவதற்கு முன்பெல்லாம் சுமங்கலிப் பிரார்த்தனை நடத்தப்பட வேண்டும். சமய நம்பிக்கையுள்ள மகளிர் இச் சடங்கினை நடத்தத் தவறினால் அச் சுமங்கலி அக் குடும்பத்திற்கு ஏதேனும் கேடு செய்யலாம் என நம்புகின்றனர். மணமகன் இடையில் உள்ள கச்சையில் வாள் சொருகும் பழக்கம் மெல்ல மறைந்து வருகின்றது.

மதுரை மாவட்டக் கையேட்டில் மதுரை மாவட்டக் கவரர்கள் பற்றிக் கூறப்பட்டுள்ளதாவது:- ''இம்மாவட்டத்தில் ஓரிரு இடங்களில் மட்டும் கிடைக்கும் தனிச் சிறப்பு வாய்ந்த மண்ணினைக் கொண்டு வளையல்கள் செய்து விற்பதே இவர்களுள் பெரும்பாலோர் மேற்கொண்டுள்ள தொழில். இத் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்கள் தங்களைச் செட்டிகள் எனக் கூறிக் கொள்கின்றனர். நெசவு, சாயம் போடுதல், வண்ணம் தீட்டுதல் போன்ற பிற தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்கள் தங்களை நாயக்கன் என அழைத்துக்கொள்கின்றனர். மற்ற நாயக்கன்களிடையே உள்ளதைப் போலவே இவர்களிடையேயும் பூணூல் அணியும் பழக்கம் உள்ளது. வெள்ளெக்குறிச்சியில் தற்போது உறையும் நாயக்க அரசர்களின் வழித்தோன்றல்கள் பூணூல்

அணியும் இப் பழக்கம் உடையவர்களாயில்லை. புனிதம் கெட்ட வர்களாக இழிந்த நிலைக்குத் தாங்கள் தள்ளப்பட்டுவிட்ட தால் தற்பொழுது தாங்கள் புனிதச் சின்னமான அதனை அணி வதில்லை என அவர்கள் அதற்குக் காரணம் கூறுகின்றனர்."

தஞ்சாவூர் மாவட்டக் கையேட்டில் தஞ்சாவூர் மாவட்டத் தைச் சேர்ந்த கவரர் பற்றிக் கூறியுள்ளதாவது:- "இவர்களில் பெரும்பாலோர் நாயக் என்ற பட்டப்பெயர் தரிக்கின்றனர். வணிகத்தில் ஈடுபட்டுள்ளவர்கள், அவர்களுள்ளும் குறிப்பாகக் கண்ணாடி வளையல் விற்பவர்கள், தங்களைச் செட்டிகள் என அழைத்துக் கொள்கின்றனர். பயிர்த்தொழிலில் ஈடுபட்டவர் களாக உள்ளவர்கள் ரெட்டிகள் எனக் கூறிக் கொள்கின்றனர். பிள்ளை, முதலி, செட்டி என்ற பட்டங்களைப் போல நாயக் என்ற பட்டப்பெயரே இவர்களிடையே செல்வாக்கு உடைய தாக உள்ளது. கூலி வகுப்பாரான பள்ளியர் அரசின் பணியில் அமர்ந்தவுடனும் ஆட்டிடையர் செல்வ வளம் பெற்றவர்களாக வாழ்க்கை வளம் எய்திய பின்னும் கவரருக்கு உரிய இப்பட்டத் தைத் தரித்துக் கொண்டு வைணவர்களுக்கு உரியதான நாமத்தை நெற்றியில் தரித்துத் தங்களைக் கவரர் எனக் கூறிக் கொள்கின்றனர். எனினும் இவர்களுக்குத் தெலுங்கு பேச வராது. அது மட்டுமன்றி இவர்கள் தங்கள் முன்னோர் தெலுங்கு நாட்டில் எப்பகுதியைச் சேர்ந்தவர் என்பதையும் கூற அறியார்.

கவரர்களுள் மிகப் பெரும்பான்மையானவர்கள் காசுலர் எனத் தெலுங்கர் வழங்கும் வளையல் என்ற உட்பிரிவினைச் சேர்ந்தவர்களாக உள்ளன்ர்.

**காவுதியர் - Kāvuthiyan**

மலபார் மாவட்ட விவரக்குறிப்பில் காவுதியர் பற்றிப் பின் வருமாறு கூறப்பட்டுள்ளது:- "தீயர் மற்றும் பிற தாழ்ந்த சாதியைச் சேர்ந்தவர்களுக்கு இவர்கள் நாவிதர்களாகப் பணி யாற்றுகின்றனர். சிலபோது குருப்பு என்ற பட்டப்பெயரும் இவர்களுக்கு உரியதாக வழங்குகின்றது. இவர்கள் குடும்பத்தைச்

சேர்ந்த பெண்கள் மகப்பேறு பார்க்கும் மருத்துவச்சி களாகத் தொழில் செய்கின்றனர். இவர்கள் எந்தச் சாதியைச் சேர்ந்தவர்களுக்குப் பணிபுரிகின்றார்களோ அந்தச் சாதியின் பட்டப்பெயரைப் பின்னிணைப்பாக உள்ள பல உட்பிரிவுகள் இவர்களிடையே உள்ளன. தச்சக்காவுதியன் அல்லது தச்சக் குருப்பு, கணிசக்காவுதியன் என்ற பிரிவினர் முறையே ஆசாரி களுக்கும் கணிசருக்கும் தொழில் செய்பவர்களாவர். ஈழவருக் குத் தொழில் செய்பவர்கள் அடுத்தோர், வட்டியர், ஈழவ காவு தியர் என அழைக்கப்படுகின்றனர். இப் பிரிவுகளெல்லாம் ஒரு பெரிய நாவிதர் சாதிப் பிரிவிலிருந்து பிரிந்த தனிச் சாதிகளா அல்லது அவர்கள் பணிசெய்யும் சாதியினைச் சேர்ந்தனவாக அமைந்த உட்பிரிவுகளா என்பதனை முடிவு செய்ய இயலாத வர்களாக உள்ளோம். முறையான காவுதியர் தீயர்களுக்கே உரிய நாவிதர்களாக இருப்பதே இவ்வாறு முடிவு செய்ய இயலாதிருப்பதற்கான காரணம் ஆகும். நாவியன் எனப்படும் வெளுத்தர்களின் காவுதியர் பிரிவினரும், முக்குவர்களின் காவு தியர் பிரிவினரும் காவுதியர் சாதியுள் தாழ்ந்த பிரிவினராகவே கருதப்படுகின்றனர். இவர்களுள்ளும் முக்குவர்களின் காவுதியர் தாழ்ந்தவர் என்பது பெரும்பான்மையோர் கொண்டுள்ள கருத் தாகும். வடபகுதிகளைச் சேர்ந்த காவுதியர் மருமக்கள் தாய உரிமை முறையினை மேற்கொண்டவர்களாக இருக்கத் தச்ச மற்றும் கணிச காவுதியர்கள் மக்கள் தாய உரிமை முறை யினையே பேணுகின்றனர்.

**காயலான் - Kayalān**

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள காயல்பட்டினத்தில் வாழும் மரைக்காயர்களோடு நெருங்கிய தொடர்புடைய தமிழ் பேசும் முகமதியர்களே காயலான்கள். இவர்களுள் பலர் சென்னையில் தங்கிக் கண்ணாடிப் பாசிமணி, சோழி, திருப் பதிப் பொம்மைகள், வேறு பொம்மைகள் முதலியன விற்கும் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். சிலர் தாழ்ந்த சாதியாருக்கு வட்டிக்குப் பணம் தரும் தொழில் செய்கின்றனர். மற்றவர் கள் துணி, பித்தளைப் பாத்திரங்கள் முதலியவற்றைக் கடனுக்கும் கைமேல் காசுக்கும் ஊர் ஊராகச்சென்று விற்று

வருகின்றனர். இவர்கள் சிலபோது ஆறு மாசத்துக் கடன்காரர் என அழைக்கப்படுகின்றனர். இவர்களிடம் பெறப்படும் பொருள்களுக்குத் தொகை செலுத்த ஆறு மாதக் காலக்கெடுவு தரப்படுவதாலேயே இவர்கள் இவ்வாறு அழைக்கப்படுகின் றனர். காயல்பட்டினத்தில் காயலான்கள் தங்கள் மாமனார் வீட்டிலேயே தங்கி வாழவேண்டும் எனக் கூறப்படுகின்றது. இது தொடர்பாகப் பின்வரும் கதை வழங்கி வருகின்றது. அந்தப் பேரூரின் தலைவன் தன் மகளைப் பக்கத்து ஊரைச் சேர்ந்த ஒருவனுக்கு மணம் செய்து வைத்தான். ஒருநாள் மாலை அவள் ஊரருகே இருந்த குளத்திற்கு நீரெடுத்து வரச் சென்று திரும்பும்போது ஒரு நாகத்தினை மிதித்து விட்டாள். நாகத் தினை மிதித்திருக்கும் அவள் காலினை மேலே எடுத்து அடுத்த அடி வைத்தால் அவளை நாகம் தீண்டிவிடும் என்பதால் மறுநாள் காலையில் அவள் தந்தை வந்து அவளைக் காணும் வரை அவள் தலையில் தண்ணீர் குடத்துடன் அந்த இடத்தை விட்டு நகராமல் நிற்கவேண்டியதாயிற்று. அவன் பாம்பினைத் தன்னிடமிருந்த கிட்டியாலும் கத்தியாலும் கொன்றபின் அவ ளைத் தன்னுடன் தன் வீட்டிற்கு வரும்படி அழைத்தான். அவள் அதற்கு உடன்படாது நேரே கணவன் இல்லம் சென்றாள். பின்னர் அங்கிருந்து அவளுடைய தந்தையின் இல்லம் சென் றாள். ஒரு முனையானது பிணைத்துக் கட்டப்பட்ட இரண்டு குச்சிகளாலான வருத்தும் கருவியே கிட்டி. இவற்றின் இடையே விரல்களை வைத்து எலுமிச்சம் பழச்சாறு பிழிவதைப் போல விரல்களை அழுத்திப் பின்னோக்கி வளைத்து அவ்வாறு வருத் தத்திற்கு உள்ளாகின்றவர் வருத்தம் தாங்காது குற்றத்தை ஒப்புக் கொண்டு உண்மையைக் கக்குமாறு வருத்துவர்.

**காயஸ்தர் - Kāyasth**

வங்காளத்தைச் சேர்ந்த எழுத்தர் சாதியைச் சேர்ந்தவர் காயஸ்தர். (பார்க்க: ரிஸ்லெயின் வங்களாப் பழங்குடிகள் என்ற நூல்.)

**கயெர்தன்னாய - Kayerthannāya (*strychnos Nux-vomica*)**

பண்டர், சிவாலி பிராமணர் ஆகிய சாதிகளின் புறமணக்.

கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். எட்டி மரம் எனப் பொருள்படுவது.

காயில – Kayila (unripe fruit)

ஓர்குண்ட காபு சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர்.

கைமல் – Keimal (kei, hand, as an emblem of power)

நாயர்களின் ஓர் உட்பிரிவு.

கேள – Kāla

வித்தைகாட்டுவதும் நாடோடி மருத்துவம் செய்வதுமான தொழிலில் ஈடுபட்டுள்ள ஓரியர் சாதி. எண்ணிக்கையில் குறைந்தவர்களாகவே உள்ள இச்சாதியினைச் சேர்ந்த பெண்களில் பலரும் தொம்மரர் சாதிப் பெண்களைப் போலவே பரத்தையராக உள்ளனர். நாட்டியம் என்றோ வேடிக்கை விளையாட்டு என்றோ பொருள்படும் கேளி என்ற சொல்லிலிருந்து வந்தது இச்சாதியின் பெயர்.

கெலசியர் - Kelasi

தென் கன்னட மாவட்டத்தைச் சேர்ந்த நாவிதர்களான கெலசியர் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் துளுவ நாட்டு நாவிதர் பற்றிய குறிப்பினை எழுதியுள்ள திரு எம். பாப்பாராவிற்குக் கடப்பாடுடையேன்.* இச்சாதியின் பெயர் தொழில் புரிதல் எனப் பொருள் தரும் கெலச என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். பெல்லாரி, தார்வார் பகுதிகளைச் சேர்ந்த கன்னடம் பேசும் நாவிதர்களும் இதே போன்று கடினமாகத் தொழிலைச் செய்பவர்கள் என்று பொருள்படும்படியாகத் தங்களைக் கஷ்ட மாதோவரு என அழைத்துக் கொள்ளகின்றனர்.

---

* *சென்னை கிறித்துவக கல்லூரி ஆண்டிதழ், 1894.* (Madras Christ. Moll.Mag, 1894.)

72:3-23,

தென் கன்னடத்தைச் சேர்ந்த நாவிதர்களிடையே பல சாதிப் பிரிவுகளும் உட்பிரிவுகளும் உள்ளன. இவை அவர்கள் பேசும் மொழியின் அடிப்படையிலோ, பணிபுரிகின்ற சாதியின் அடிப்படையிலோ அமைந்துள்ளன. இவ்வகையில் அங்குக் காணப்படும் நாவிதர் சாதிகள் வருமாறு:-

1. துளுகெலசி (மயிர் வினைஞர் எனப்படும் குட்சிதாயி).
2. கொங்கணிகெலசி (மகாலோ எனப்படும் இவர்கள் வடக்கே இருந்து வந்தேறியவர்கள்).
3. இந்துஸ்தானி கெலசி (இவர்கள் ஹசாம்கள் எனப் படுவர்).
4. லிங்காயத கெலசி (பை வைத்திருப்பவன் எனப் பொருள்படும் ஹடப்பைக்காரன்).
5. மாப்பிள்ளா எனப்படும் வச நாவிதர்.
6. காவுதியன் எனப்படும் மலையாளி நாவிதன்.

இவர்களோடு, மங்களூரில் பாடியிறங்கி இருந்த படை வீரர்கள் தங்களோடு அழைத்து வந்த தமிழ், தெலுங்குப் பகுதி களைச் சேர்ந்த நாவிதர்களும் கன்னட மாவட்டங்களில் காணப்படுகின்றனர். துளுவ நாட்டில் துளு நாவிதர்களே எண் ணிக்கையில் மிகுதியானவர்களாக உள்ளனர். இவர்களிடையே பனை ஏறுபவர்களுக்குப் பணிசெய்யும் மத்தெலெ என்ற பிரி வினர் உள்ளனர். இவர்கள் மற்ற உயர்ந்த சாதியாருக்குப் பணி செய்யும் பண்டாரி பிரிவினரை விடத் தாழ்ந்தவர்களாகக் கரு தப்படுகின்றனர். (பில்லவர்களுக்குப் பணிசெய்யும் நாவிதர்கள் பரேல் மதியாள் அல்லது பரேல் மதிவாள என அழைக்கப்படு கின்றனர்.) உயர்ந்த பிரிவினருக்கு உரியவனான ஒரு நாவிதன் தாழ்ந்த சாதியைச் சேர்ந்த ஒருவனுக்குப் பணி செய்வானாயின் அவன் தன் சாதித் தகுதியில் தாழ்ந்தவனாகின்றான். உரிய தண்டத் தொகையினைச் செலுத்தியோ வேறு வழிமுறை களிலோ தன் தவறுக்கு அவன் பரிகாரம் தேடிக் கொண்ட பின் னரே மீண்டும் தன் பழைய தகுதியினை அடைய முடியும். இப்

பகுதியில் பறையருக்கெனத் தனியே நாவிதர் இல்லை. எனவே அவர்கள் தங்களுக்குள்ளாகவே ஒருவருக்கொருவர் மற்றவர்கள் தலையில் தங்கள் மழித்தல் திறமையைக் காட்டுவர். மாப்பிள்ளா நாவிதர்கள் மற்ற மாப்பிளாக்களோடு சமமானவர்களாக நடத்தப்படுவதில்லை.

பண்டர், குயவர், இசைவாணர், நெசவாளர், செக்கான் ஆகியவர்களோடு தானும் சமமானவன் என்று நாவிதன் தன்னை உயர்த்திக் கூறிக் கொள்ள ஆசைபடுவதில்லை. எனினும் அவன் மீனவர்களையும் பல்லக்குச் சுமப்பவர்களையும் விடத் தான் சாதியில் உயர்ந்தவன் என்பதில் உறுதியுடையனவாக உள்ளான். பல்லக்குச் சுமப்பவர்கள் இதுபோல அவர்களைச் சாதியில் தாழ்ந்தவர்கள் எனக் கூறுவதை உடன்படுவதில்லை. திருமண ஊர்வலங்களில் பெரிய குடையினைத் தூக்கிச் செல்வதும் சமயம் தொடர்பான ஊர்வலங்களில் தெய்வத்தைத் தோளில் சுமப்பதுமான கதி தங்களுக்கு ஏற்பட்டதன் காரணத்தை அவர்கள் விளக்குவர். தங்களுக்குப் போட்டியாளர்களான நாவிதர்கள் ஒரு செயலைச் செய்வதாகவும் அதனால் வரும் பழிப்பினைத் துளசிச் செடியின் வேரின் அருகே உள்ள மண்ணை எடுத்துத் தலையில் தேய்த்துக் குளித்தே போக்கிக் கொள்ளக் கூடியவர்களாக உள்ளனர் எனவும் கூறுவர். நாவிதர்கள், சூத்திரர்கள் பலருக்கும் புரோகிதம் பார்க்கும் செயலைச் செய்ய வேண்டியவர்களாக உள்ளனர் என்பதனைக் கொண்டு அவர்கள் பழிப்புக்கு ஆளாகும் செயல்களில் ஈடுபடுவதனை நியாயப்படுத்தலாம். நாவிதர்களைவிட உயர்ந்தவர்கள் எனக் கூறிக்கொள்ளும் சாதியார் மேற்கொள்ளும் இரண்டு சடங்குகளில் இவர்கள் பங்கு பெற வேண்டியவர்களாக உள்ளனர். நாவிதர்களைவிட உயர்ந்தவர்களான சூத்திர சாதிக் குழந்தைகளுக்குப் பெயர் சூட்டும் சடங்கின்போது துளு நாவிதன் பெயர் சூட்டப்படும் குழந்தையின் இடுப்பினைச் சுற்றி ஒரு நூல்னைக் கட்ட வேண்டும். (தற்பொழுது இவ்வாறு நூல் கட்டும் சடங்கிற்கு உரிய கட்டணத்தை மட்டும் ஒரு பண்டாரி பெற்றுக் கொள்கின்றான். எனினும் அவ்வாறு நூல் கட்டும் செயலை அவன் நிகழ்த்துவதில்லை.) உயர்ந்த சாதியினைச் சேர்ந்த சூத்திரன் ஒருவன்

இறக்கும்போது சுடுகாட்டிற்குக் கொள்ளியிடுவதற்கான நெருப்பினை எடுத்துச் செல்பவன் நாவிதனே. சுடுகாட்டில் இறந்து போனவனுடைய உறவினர்களே சிதைக்கு நெருப்பிடுகின்றனர். சாவுச் சடங்கின்போது வீட்டின் தீட்டினைப் போக்குதல் போன்ற சில சடங்குகளிலும் அவன் உதவி செய்ய வேண்டியவனாக உள்ளான்.

(சாம்பலில் எலும்புகளைத் தேடி எடுத்தல், சாம்பலைக் குவித்தல், பிணத்தைச் சுட்ட இடத்தைத் துப்புரவு செய்தல் ஆகியன கெலசியனுடைய கடமைகளாம். மொர்லியர், பண்டர் கட்டியர், வொதரியர் ஆகிய சாதியாருக்கு அவன் இப்பணிகளைச் செய்கின்றான். கொங்கணத்துப் பெண்கள், பண்டாரி, கெலசி சாதியாரை மிக வெறுப்பதோடு கரிமுஞ்சி, பேய்ப்பயல், கைம்பெண்களை உண்டாக்குபவன் என்பது போன்ற இழி சொற்களைக் கூறி ஏசவும் செய்கின்றனர்.)

தென் கன்னடத்து நாவிதன் தன் மூதாதையின் தோற்றம் பற்றிப் பலப்பல கதைகளைப் படைத்து மொழிகின்றான். நாவிதன் என்ற ஒரு சாதி படைக்கப்படாததான சமயத்தில சிவன் திருமணம் செய்து கொள்ளாதவனாகப் பக்தி நெறிப் பட்டுக் கற்றைச் சடைமுடியாகத் தன் தலை முடியினை வளர விட்டுக் கொண்டிருந்தான். அவன் மணம் செய்து கொள்ள முடிவு செய்த சமயத்தில மலை அரசன் மகளான மணமகள் தாடி மீசையோடு கூடிய தன் முகத்தோற்றத்தினை விரும்ப மாட்டாள் என நினைததான். இச்சமயத்திலேயே சிவனை அழகுத் தோற்றமுள்ள மணமகனாக்க வேண்டியும் மணநிகழ்ச்சியை நடத்தும் பிராமணனாக இருக்கவும் நாவிதன் படைக்கப்பட்டான். மற்றொரு கதைவழக்குப்படி கந்தர்வ குலத்தைச் சார்ந்த பெண்ணொருத்தியினைச் சினங்கொண்ட பிரமன் கடலில் தூக்கிப் போட்டுப் பாறையாகும்படி சபித்தான். அவளுடைய பணிவான கெஞ்சுதலுக்கு மனம் இரங்கிய பிரமன், பரசுராமன் அப்பாறையின்மீது கால் வைக்கும்போது மீண்டும் அவள் மனித உருப்பெறுவாள் எனச் சாபவிமோசனம் தந்தான். மேற்குக் கடல் நீரினைப் பின்னோக்கிச் செல்லுமாறு செலுத்தி

மேற்குக் கடற்கரையினைப் பரசுராமன் உண்டாக்கியபோது மீண்டும் மனித உருப்பெற்ற அவள் தன் நன்றியினை மிகக் கனிவோடு பரசுராமனுக்குச் செலுத்தினாள். அதனால் மனம் மகிழ்ந்த பிராமண குல வீரரான பரசுராமன் அவளிடம் வேண்டிய வரத்தினைக் கேட்கும்படி பணித்தான். அவள் கல்லாகக் கிடந்த தன்னை மனித உருவாக்கிய பிராமணனான பரசுராமன் பெருமையினை வருங்காலத்தினர் என்றும் நினைவில் கொள்ளும்படியான ஒரு மகனைப் பெறும்பேறு தனக்கு வேண்டும் எனக் கேட்டுக் கொண்டாள். அவள் அவ்வாறே சிறந்த மக்களைப் பெறுவாள் எனப் பரசுராமன் வரம் அருளினான். எனினும் அவளுக்குப் பிறக்கும் மக்கள் பரசுராமனைப் போல பிராமணர்களாக இல்லாவிட்டாலும் பிராமணர் செய்யும் செயல்களுக்கு ஒப்பான செயல்களை அவர்கள் செய்வர் என அவ்வரம் வழங்கப்பட்டபோது கூறப்பட்டது. அதன்படி நாவிதர்கள் சூத்திரர்களுக்குப் புரோகிதச் செயலைச் செய்வதோடு பிராமணர்கள் ஆன்மாவினைத் தூய்மைப்படுத்துவது போல உடலைத் தூய்மைப்படுத்தும் பணியினையும் மேற்கொண்டவர்களாக உள்ளனர். நாவிதன் கத்தியினைப் பயன்படுத்துவதால் ஏற்படும் தீட்டினைச் சேற்றினையும் நீரினையும் கொண்டே போக்கிக் கொள்ள முடியும். நாவிதர்களின் மரபினைத் தோற்றுவித்தவளாகிய பெண் தண்ணீரிலிருந்து வெளிப்போந்த பாறையாக இருந்தவள் ஆகையாலேதான் சேறும் நீரும் அத்தீட்டினைப் போக்குவன எனக் கொள்ளப்படுகின்றது.

நாவிதன் மேற்கொண்டுள்ள தொழில் அவனுக்குப் போதுமான வருமானத்தைத் தரக் கூடியதாக இல்லை. அவனுக்கு ஓய்வு நேரம் மிகுதியாக இருப்பதால் அவன் தன் குடும்பத்தைச் சேர்ந்த பெண்களின் உதவியோடு பயிர்த்தொழிலில் ஈடுபடுகின்றான். நகரங்களில் வாழும் நாவிதர்களுக்குப் பயிர் நிலங்கள் இல்லை. அவர்கள் மாதம் ஐந்து முதல் ஏழு ரூபாய் வரை வருமானம் பெறுகின்றனர். ஊர்ப் புறங்களைச் சேர்ந்த நாவிதர் பட்டணத்தவர்களைப் போல நாள் முழுதும் கத்தியைத் தீட்டியவர்களாக இருக்க வாய்ப்பில்லையாகையால்

குத்தகைதாரர்களாக நிலத்தில் பயிரிடுகின்றனர். நாவிதன் என்றும் பட்டினியாக இரான் என்பது பரசுராமன் தந்த வரங்களுள் ஒன்று.

குடும்பத்தில் ஒரு குழந்தை பிறந்தால் குடும்பத்தைச் சேர்ந்த ஓர் ஆண் அதன் இடுப்பில் ஒரு நூலினைக் கட்டுவதோடு அதற்குப் பெயரும் வைக்க வேண்டும். குழந்தைக்கு வைக்கப் படும் பெயர் அது பிறந்த நாளோடு தொடர்புடையதாக இருக்கும். ஞாயிறன்று ஓர் ஆண் குழந்தை பிறந்தால் அது அய்த்தா (சூரியன்) எனவும் பெண் குழந்தை பிறந்தால் அய்த்தி எனவும் பெயரிடப்படும். திங்களன்று பிறப்பவர் சோமி, அல்லது சோமு எனவும் செவ்வாயன்று பிறப்பது அங்கார அல்லது அங்காரி எனவும், புதனன்று பிறப்பது புதார அல்லது புதாரி எனவும் பெயரிடப்படுவர். பறையர்களிடையே புதனன்று பிறக்கும் குழந்தைகள் முதார அல்லது முதாரு எனப் பெயர் பெறுவர். வியாழனன்று பிறக்கும் குழந்தைகள் குருவ அல்லது குருவு எனவும், வெள்ளிக்கிழமையில் பிறப்பவை துக்ர அல்லது சுக்ரு (சுக்ரன்) எனவும் சனிக்கிழமை அன்று பிறப்பவை தனிய அல்லது தனியரு எனவும் பெயரிடப்படுவர். லக்கண (லட்சுமணன்), கிருட்டிண, சுப்ப, கொரபுளு (கொரகப் பெண்) என்பன மிகுதியும் வழக்கில் உள்ள பிற பெயர்களாம். வசதி யுள்ளவர்கள் பிராமணனிடம் சென்று குழந்தை குடும்பத்திற்கு நலத்தைத் தருமா அல்லது தீங்கினைத் தருமா எனக் கேட் டறிவர். அது பிறந்த வேளை கேட்டினைத் தருவதாக அமையின் குலதெய்வத்திற்கோ நவக்கிரகங்களுக்கோ, ஊர்த் தேவ தைக்கோ வழிபாடு நிகழ்த்தும்படி அறிவுறுத்தப்படுவர். குழந்தையை முதன் முதல் தொட்டிலில் இட்டு ஆட்டும்போது தாலாட்டுப்பாடும் பழக்கத்தை இவர்கள் மேற்கொள்வதில்லை. அவ்வாறு முதன்முதல் தொட்டிலில் குழந்தையை வைத்து ஆட்டும்போது மகிழ்ச்சியுள்ளவர்களாகத் தாலாட்டுப் பாடி னால் அதனால் பொறாமை கொண்ட தீங்கியற்றும் ஆவிகள் அந்த மகிழ்ச்சியைக் கெடுக்கப் பார்க்கும் என நம்புகின்றனர்.

சிறுவர்களுக்குப் பத்து வயதிலிருந்து பதினான்கு வயதுக்

குள்ளாக இவர்கள் தங்கள் குலத்தொழிலைக் கற்றுத்தரத் தொடங்குகின்றனர். ஆறிலிருந்து எட்டு வயதிற்குள்ளாகப் பள்ளிக்குப் படிக்கச் செல்பவர்கள் ஒரு சிலரே. இது போன்ற சமயங்களில் ஊர்த்தெய்வத்திற்குத் தேங்காய், பழம் படைத்து வழிபாடு செய்வர்.

இளைஞர்கள் திருமணம் பதினாலு வயதிலிருந்து இருபத்தைந்து வயதுக்குள்ளாக நடைபெறுகின்றது. சிறுமிகள் பூப்படையும் முன்பு அல்லது பூப்படைந்த பின்பு மணம் செய்விக்கப்படுகின்றனர். பெற்றோரே வாழ்க்கைத் துணையினைத் தேடி மணம் புரிவிக்கின்றனர். இளைஞர்கள் சிலபோது அவர்கள் விருப்பம்போல் துணையினைத் தேடிக் கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். எனினும் அவர்கள் விருப்பத்திற்குப் பெற்றோர் உடன்பாட்டினைப் பெறுதல் வேண்டும். கூட்டுக் குடும்பங்களில் இதுபோல் மூத்தோர் உடன்பாடு பெறுதல் இன்றியமையாததாகும். மணமகன் மணமகளுக்குப் பரிசப் பணமாக இருபதிலிருந்து ஐம்பது ரூபாய் வரை செலுத்த வேண்டும். சிலபோது நூறு ரூபாய் வரை செலுத்த வேண்டியும் இருக்கும். உடல் ஊனமுள்ள பெண்களுக்குப் பரிசப் பணம் ஏதும் தரப்படுவதில்லை. அதற்கு மாறாக அத்தகையவர்களை மணக்க முன்வர அவர்கள் மணமகனுக்குக் கொஞ்சம் தொகை தர வேண்டியிருக்கும். கைம்பெண்கள் மறுமணம் அனுமதிக்கப்படுவதோடு கைம்பெண்களாகிவிடும் சிறு வயதினர் மறுமணம் புரிந்துகொள்ள ஊக்குவிக்கவும்படுகின்றனர். ஒரு மணம் செல்லத்தக்கதாக இருக்க இன்றியமையாத அடிப்படை மணமக்கள் வேறு வேறு பலி (குலம்) யினைச் சேர்ந்தவர்களாக இருத்தலாகும். இத்தகைய பலிகளுக்கு எடுத்துக்காட்டுக்கள் வருமாறு:- பங்காரு (பொன்), சாலிய (நெசவாளர்), உப்ப (உப்பு), கொம்பர (பாக்கு மட்டைத் தொப்பி), கரிம்பர (கரும்பு). மணமக்கள் பொருத்தம் அறியவோ மண வாழ்க்கையின் வருங்காலம் பற்றித் தெரிந்து கொள்ளவோ சாதகப் பொருத்தம் பார்க்கும் வழக்கம் இவர்களிடையே இல்லை. எனினும் மணத்திற்கான நல்ல நாளையும் நேரத்தையும் பிராமணனிடம் சென்று விண்மீன்களின் நிலையினைக் கொண்டு கணித்துக்

கூறும்படி கேட்டறிவர். மணமகன் இல்லத்திலே மணநிகழ்ச்சி நிகழும். அது மூன்று நாள்கள் வரை நீடிக்கும். மண நிகழ்ச்சி மணமகன் இல்லத்தில் நடைபெறுவது ஒருத்தியைக் கவர்ந்து வந்து மணத்தல் அல்லது பெற்றோரிடம் பெண்ணை இரந்து பெற்று வருதல் என்ற ஆதிகால மனிதரின் பழக்க முறையொடு பட்டதாக இருத்தலோடு மணமகனை வீட்டுக்கு அழைத்து மணமகளை அவனுக்குக் கொடையாக வழங்கும் இன்றைய பிராமணர்களின் மணமுறையோடு மாறுபட்டதாகவும் உள்ளது. பந்தல் இடப்பட்டு அதில் பல உருவங்களால் (மண்டல) அலங்கரிக்கப்பட்டுள்ள மேடையில் மணநிகழ்ச்சி நடைபெறும். மணமக்களை மணையில் அமரச் செய்து அவர்கள் மீது அரிசி யினைத் தூவுவர். அதன்பின் ஒரு நாவிதன் மணமகன் முகத் தினை மழிப்பான். நெற்றி மயிர்க்கற்றை மேல் நோக்கிய வளைவு கொண்டதாக கூரிய முனையமைப்புடையதாக மழிக்கப் படும். மணமகள் முகத்தில் உள்ள கறை நீக்குதல் என்ற சடங்குப் படி அவன் மணமகள் கன்னங்களையும் கத்தியால் தொடுவான். இச்சடங்கு பற்றிய விளக்கம் தெளிவானதாக இல்லை எனினும் நாவிதர்கள் இதனைப் புனிதப் படுத்தும் சடங்காகக் கருது கினறனர். மணத்தின்போது மணமகள் பூப்படையாதவளாக இருப்பாளாயின் இச்சடங்கு சாந்தி கல்யாணம் நடத்தும்போது நிகழ்த்தப்படும். அவள் பூப்படைந்தவளாக இருப்பாளாயின் நாவிதன் அவள் கன்னத்தைக் கத்தியால் தொடுவதோடு அவள் இல்லம் சென்று அவள் மீது வெற்றிலையால் கொஞ்சம் தண்ணீ ரைத் தொட்டுத் தெளிப்பதோடு அவளை மணமகன் இல்லத் தில் சமைப்பதற்குரிய சட்டியினையும் தொடும்படி செய்வான். மணமகன் இல்லத்தில், கூடியுள்ள உறவினர்கள், குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள், சாதித் தலைவன் ஆகியோர் முன்னிலை யில் மணமக்கள் கைகளை ஒன்றாகக் கோக்கும்படி செய்து மணத்தை உறுதி செய்வதைக் குறிக்கும் வகையில் அக் கைகளின் மீது தண்ணீரை (தாரை) வார்ப்பர். அடுத்து மணமக்கள் தங்கள் வலக் கரங்களை இணைத்த பின் மணமகன் மணமகளை அவளுடைய வருங்கால இல்லத்திற்கு அழைத்துச் செல்வான்.

வீட்டில் சாவு நிகழ்ந்தவுடன் நாவிதன் ஒருவன் அழைக்கப்

படுவான். பிணத்தின் மீது நீர் தெளிக்கும் அவன், இறந்தது ஆணாக இருப்பின் அதன் முகத்தினைக் கத்தியால் தொடுவான். தான் செய்யும் ஒவ்வொரு சடங்கினையும் பிராமணன் தர்ப்பையைத் தொட்டுச் செய்வதனைப் போலவே நாவிதனும் தான் நிகழ்த்தும் சடங்குகளைக் கத்தியினைத் தொடர்புபடுத்தியே நிகழ்த்துவான். செல்வர்கள் பிணத்தை எரிப்பர். வசதியற்றவர்கள் புதைப்பர். தொற்று நோயால் இறப்பவர்கள் அனைவரையும் புதைக்கவே செய்வர். பிணத்தைச் சுடுகாட்டுக்கோ புதைக்கும் காட்டுக்கோ எடுத்துச் செல்லும் முன் பிணத்தின் மீது தலை முதல் கால்வரை மூடப்பட்டுள்ள ஒற்றைத் துணியினைத் தவிர மற்றத் துணிகள் அகற்றப்பட்டு அவை சிதையினை ஏற்பாடு செய்த அல்லது புதைகுழியினைத் தோண்டிய பறையன்களுக்குக் கொடுக்கப்படும். சுடுகாட்டிலிருந்து திரும்பும் முன் துக்கம் மேற்கொண்டவர்கள் கொட்டாங்குச்சியில் நான்கு விளக்குகளை ஏற்றி அவற்றைச் சுடுகாட்டில் எரியும்படி விட்டு வருவர். வீட்டிற்கு திரும்பிய பின் துக்கங்கொண்டாடுபவர்களுள் முதன்மையானவர் குருகாரன் அல்லது சாதித் தலைவனிடம் சாவுச் சடங்குகள் அனைத்தையும் தான் முறையாக மேற்கொண்டு செய்யப் போவதனைக் குறிக்கும் வகையில் அதற்கு ஈடாக ஒரு நகையையோ மதிப்பு வாய்ந்த வேறேதேனும் ஒன்றையோ ஒப்படைப்பான். இதனைச் சாவொட்டிதிபுணை என்பர். குருகாரன் கூடியுள்ள உறவினர்கள், நண்பர்கள் முன்னிலையில் உரிய சடங்குகளைப் பிணை வைக்கப்பட்ட அப்பொருளைத் தேவையேற்படின் விற்றேனும் சாவுச் சடங்குகளை உரிய வகையில் நிகழ்த்த வேண்டும் என அறிவுறுத்தியவனாக அதனை உரியவனிடம் திரும்பத் தருவான். பதினொன்றாம் நாளே துக்கம் மேற்கொள்வதற்குரிய முக்கிய நாளாகும். அன்று சாதித் தலைவனும், சாதிப் பெரியவர்களும் இறந்து போனவனுடைய நண்பர்களும் உறவினர்களும் வந்து கூடுதல் இன்றியமையாததாகும். இறநதவர் உயிர் துறந்த இடத்திலோ அது இயலாதாயின் அதற்கு அருகிலோ அலங்கரிக்கப்பட்ட சதுரமான மேடை அமைத்து அதனை மஞ்சள் நீரில் தோய்த்த துணியால் மூடுவர். மேடைக்கு அடியே உள்ள தரையில் பல உருவங்களை வரைந்து அதன்மீது மலர்

களையும் பச்சிலைகளையும் தூவி வைப்பர். துக்கம் மேற்கொண்டுள்ளவர்கள் மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த சோற்றினைக் கையில் அள்ளி அவ்விடத்தில் இட்டுத் தங்கள் உறவு முறைக்கு ஏற்ப 'ஓ! பெரியப்பா! முரியோ என நான் அழுகின்றேன்' என்றோ 'ஓ! அப்பா! முரியோ என நான் அழுகின்றேன்' என்றோ கூறுவர். இச்சடங்கு இறந்தவருக்காகப் புலம்பல் எனப் பொருள்படும் 'முரியோ கொர்ப்புணி' எனப்படும். வசதியுள்ள குடும்பத்தார் இச் சடங்கின்போது பூத ஆட்டத்திற்கும் ஏற்பாடு செய்வர். பன்னிரண்டாம் நாள் காகத்திற்குச் சோறிடுவர். இறந்தவரின் ஆவி பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் உடம்பில் சென்று சேர்கின்றன என்ற தொன்மையான நம்பிக்கையின் அடிப்படையில் இவ்வாறு அவற்றிற்கு இடப்படும் சோறு அந்த ஆவிகளைச் சென்று சேர்ந்து அவற்றைத் திருப்தியுறச் செய்வதாக நம்புகின்றனர். பதின்மூன்றாம் நாள் இரவில் உறவினர்கள் ஒன்று கூடி ஓர் இலையில் சோற்றினைப் படைத்துக் கைகூப்பியவர்களாக இறந்தவரின் ஆவி மூதாதையருடைய ஆவியோடு சென்று அமைதி பெறட்டும் என வழிபடுவர். அஜெல் எனப்படும் நீத்தார் நினைவு ஆண்டு நிறைவின்போது படைக்கப்பட்ட தளிர்களின் மேல் இடப்பட்ட இரண்டு இலைகளில் சோறு படைத்துத் தீப தூபம் காட்டி வழிபடுவர். இது சோம திபுணா எனப்படும்.

நாவிதர்களின் குடும்பங்களுக்கு உரிய தெய்வம் உடுபியில் உள்ள கண்ணனாவான். உடுபி கண்ணனை வழிபடும் சந்நியாசியே இவர்கள் வழிபடும் குலகுரு. நாவிதர்களின் சாதி, சமயம் தொடர்பாக ஊர்ச் சபையார் வழங்கும் தீர்ப்பினை மாற்ற இந்தக் குலகுருவிடம் மட்டுமே மேல் முறையீடு செய்து கொள்ளலாம். நாவிதன் மனதினை ஓயாது குடைந்தபடி அச்சுறுத்திக் கொண்டிருப்பதும் அவன் எப்போதும் கோபத்தைப் போக்க வழிபாடு புரிவதும் ஊர்த் தேவதைகளும், மூதாதையர்களின் ஆவிகளுமேயாம். ஒரு குழந்தை நோயுறின் அவன் உடனே பிராமணனான வருவது கண்டுரைப்பவனை அணுகி, யாருக்கு இழைத்த பிழைப்பால் குழந்தை நோயுற்றது என்பதனை அறிய முயற்சிப்பான். அவனுடைய பசு மாடு

வைக்கோல் தின்னவில்லையானால் எந்தந் தேவதைக்குச் சேவலைப் பலியிட வேண்டும் எனக் கேட்பான். மழை பொய்த்தாலோ பயிர் பழுதுபட்டாலோ உடனே அவன் அருகில் உள்ள கோயிலுக்குத் தேங்காய், பழம், கமுகம்பாளை, ஆகியவற்றைப் படைக்க எடுத்துச் செல்வான். அவன் கொடிய நோய்க்கு ஆட்படின் வீடு வீடாகப் பிச்சையெடுத்து அதன் வழிக்கிடைத்த தொகையைத் திருப்பதியில் உண்டியலில் சேர்ப்பதாக வேண்டிக் கொள்வான். வீட்டில் ஓர் உண்டியலை வைத்திருக்கும் அவன் தனக்குத் தொல்லைகள் வரும்போதெல்லாம் அதில் வேண்டுதலுக்கான காசினைப் போட்டு இறுதியில் அதில் சேர்ந்துள்ள தொகையினைத் திருப்பதிக்கு அனுப்பி வைப்பான்.

சமூகத்தின் நடைமுறைகளைப் பெரியவர்கள் அடங்கிய ஒரு குழு மேற்பார்க்கின்றது. ஒவ்வொரு கிராமத்திற்கும் அல்லது சில வீடுகளை உள்ளடக்கிய குழுவுக்கும் பரம்பரை உரிமையுடன் பதவியில் இருக்கும் குருகாரன் எனப்படும் சாதித் தலைவன் இருப்பான். அவனுக்கு முக்திசரர்கள் எனப்படுவோர் நால்வர் உதவியாளர்களாக இருப்பர். இந்த ஐவரில் யாரேனும் ஒருவரிடம் ஒரு குற்றச்சாட்டுக் கூறப்படுமானால் அவன் அதனைக் குற்றம் தொடர்பாகக் கேட்டறிய வேண்டியவர்களுக்குத் தெரிவித்து ஏதேனும் ஒரு வீட்டில் வழக்கினைக் கேட்டறிய ஏற்பாடு செய்வான். வழக்குப் பற்றி இந்த ஐவரும் மாறுபட்ட கருத்துத் தெரிவிப்பார்களாயின் பெரும்பான்மையோருடைய தீர்ப்பே இறுதி முடிவாகக் கொள்ளப்படும். வழக்கு இவர்களால் முடிவு காண இயலாததாக இருக்குமாயின் அதனை மற்றொரு ஊர்ச் சபையாரிடம் அனுப்பி வைப்பர். அவர்களும் வழக்குப் பற்றிய முடிவு கூற இயலவில்லையாயின் வழக்கு உடுபி கோயிலில் உள்ள சாமியிடம் அனுப்பி வைக்கப்படும். சாதிக்கு எதிரான நடத்தையில் ஈடுபடுபவர்களைச் சபையார் விசாரித்துத் தண்டம் விதிப்பர். இச் செயல் சாதியின் கட்டுப்பாட்டினைக் காப்பதோடு சாதியின் நலத்திற்கு எதிராகச் செயல்படுபவர்களின் மீதும் தன் ஆணையைச் செலுத்துகின்றது. குழல் ஊதும் ஒருவன் திருமண ஊர்வலத்தில் குழலூதி வர மறுப்பானாயின் அவனுக்கு நாவிதர் எவரும் முகம்

மழிக்கக் கூடாது எனச் சபையார் ஆணையிடுவர். சொத்துரிமை தொடர்பான வழக்குகளில் முன்பு இச்சபையார் தீர்ப்பு வழங்கி வந்தனர். தற்பொழுது இவர்கள் அவ் வழக்குகளில் கூறும் தீர்ப்புக் கட்டுப்படுத்தக் கூடியதாகக் கருதப்படு வதில்லை. ஆகையால் நியாயம் வேண்டுபவர்கள் வழக்கு மன்றங்களையே நாடிச் செல்கின்றனர்.

குற்றம் இழைக்கப்பட்டவர்களுக்கு ஈடுசெய்யும் வகையில் சிறு குற்றங்களுக்குக் குற்றம் புரிந்தவருக்குத் தண்டத் தொகை விதிப்பர். சமுகத்தைப் பாதிக்கும் குற்றங்களைச் செய்பவர் களுக்குத் தண்டம் விதிப்பதோடு அவர்களைச் சாதிவிலக்கும் செய்வர். வழக்கு விசாரணையில் கலந்து கொள்ள மறுக்கும் குற்றவாளிகள் சபையினை அவமதித்ததற்காகச் சாதிவிலக்குச் செய்யப்படுவர். அவ்வாறு சாதிவிலக்குச் செய்யப்படுபவர்கள் மீண்டும் சாதியில் சேர உரிய தண்டத்தொகையினைச் செலுத்த வேண்டும். அத்தொகை உடுபியில் உள்ள கோயில் நிதிக்கு அனுப்பி வைக்கப்படும். அக்கோயிலில் உள்ள சுவாமி தொகையினை ஏற்றுக் கொண்டு குற்றம் இழைத்தவனை மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளலாம் என ஆணை வழங்குவார். சாதித் தலைவனே தண்டத்தொகையினைப் பெற்றுச் சுவாமிக்கு அனுப்பி வைப்பவன். அவன் இத்தொகை யில் கையாடல் ஏதும் செய்வானாகில் பதின்மர் எனப்படும் சாதியார் அவன் குற்றத்திற்கு உரிய தண்டனையைப் பெற நடவடிக்கை எடுப்பர். மணம்புரிந்து கொண்டவர்களின் கூடா ஒழுக்கம், கீழ்ச்சாதியாருக்கு முகம் மழித்தல் போன்ற குற்றங் களுக்குத் தண்டத்தொகை விதிக்கப்படும். அத்தொகை சுவாமிக்கு அனுப்பி வைக்கப்பட்டுக் குற்றம் புரிந்தவர்களுக்குத் தீட்டு நீக்கம் பெற்றுத் தரப்படும். சென்ற சில ஆண்டுகளாக ஊர்ச் சபையாரின் அதிகாரம் குறைந்து கொண்டிருக்கக் காண் கிறோம். தற்போது இவர்கள் அதிகார வரம்புக்கு உட்பட்ட வழக்குகள் மிகச் சிலவாகக் குறைந்துவிட்டன.

மேற்குக் கடற்கரையினைச் சேர்ந்த மற்றச் சாதியார் களைப் போலவே துளு நாவிதர்களும் அளிய சந்தான தாய

உரிமை முறையினைக் (மகள் வழிச் செல்லும் சொத்துரிமை முறை) கடைப்பிடிக்கின்றனர். இந்த மரபும் வேறு சில வழக்கு களும் தென் கன்னடத்தைச் சேர்ந்த சில சாதியார்கள் மீது பூதாலப் பாண்டியன் என்பவனால் புகுத்தப்பட்டன என்ற தொரு வழக்கு நிலவுகின்றது. பாண்டிய நாட்டைச் சேர்ந்த தேவ பாண்டியன் என்ற வணிகன் ஒரு சமயம் சில புதிய கலங் களைச் செய்து கடலில்விட முற்பட்டபோது குண்டோதரன் என்ற பூதம் அவனிடம் ஓர் உயிரைப் பலி தரும்படி வேண்டியது. அவன் தன் மனைவியிடம் அவளுடைய ஏழு பிள்ளைகளுள் ஒருவனை அதற்காகத் தரும்படி கேட்டான். அதற்கு உடன் படாத அவள் தன் பிள்ளைகளோடு பிறந்தகம் சென்று விட்டாள். அச்சமயம் அவ் வணிகனின் உடன்பிறந்தவள் தன் பிள்ளையினை அதற்காகத் தர முன் வந்தாள். அப்பிள்ளை யின் தோற்றப் பொலிவில் மனம் மகிழ்ந்த குண்டோதரன் அவனுக்கு உயிர்ப்பிச்சை அளித்ததோடு அவனைத் துளு நாட்டுப் பகுதிக்கு அரசனாகவும் ஆக்கினான். அவ்வாறு அரச னாக்கப்பட்ட அவன் பூதாலப் பாண்டியன் என அழைக்கப் பட்டதோடு குண்டோதரன் கட்டளையை ஏற்று மக்கள் அளிய சந்தான முறையினை மேற்கொள்ள வேண்டும் என்ற ஆணை யையும் பிறப்பித்தான்.

காலப்போக்கிற்கு ஏற்ப நாவிதனும் தன் நடைமுறைகளை மாற்றிக் கொண்டுள்ளான். தற்போது அவன் கிராமத்துக் கொல்லன் வடிக்கும் மரப்பிடி இடப்பட்ட மடக்க முடியாத பழைய மாதிரியான கத்தியினைப் பயன்படுத்துவதில்லை. அதற்குப் பதிலாக ராசகூரிக் (ரேசர் என்பதன் திரிந்த வடிவம்) கத்தியினைப் பயன்படுத்துகின்றான். தான் தொழில் மேற் கொள்ளும்போது தீட்டுப்படுவதாகக் கருதும் அவன் ஒரு நாளைய பணியினை முடித்து வீடு திரும்பிய பின், குளித்துத் துவைத்த ஆடைகளை அணிகின்றான்.

**கென் - Ken**

கென் சிவப்பு எனவும் கெஞ்ச என்பது சிவப்பு எறும்பு எனவும் பொருள்படுவன. இவை இரண்டும் குர்ணிகளின் கோத்திரங்களாகப் பதியப்பட்டுள்ளன.

**கென்னர் – Kenna**

தோடரின் ஒரு பிரிவின் பெயர்.

**கேப்புமாறி – Kēpumāri**

"வேறு மாவட்டங்களிலிருந்து தென் ஆர்க்காடு மாவட்டத்தில் வந்து குடியேறி அம்மாவட்டத்தின் குற்றங்களில் ஈடுபட்டுள்ளவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தியுள்ளவர்களுள் கேப்புமாறி வகுப்பாரும் அடங்குவர். செங்கல்பட்டு மாவட்டத்திலுள்ள திருவள்ளூரே இவர்கள் தலைமையிடமாக உள்ளது. எனினும் பரங்கிப்பேட்டைக்கு அருகேயுள்ள மாரியாங்குப்பத்திலும் பிரெஞ்சுப் பகுதியில் உள்ள குனிசம்பேட டையிலும் இவர்கள் குடியிருப்புகள் உள்ளன. தொங்க தாசரிகளைப் போலவே புகைவண்டிகள், திருவிழாக் கூட்டங்கள் ஆகியவற்றில் திருட்டில் ஈடுபடும் இவர்கள் தங்கள் மதிப்பு வாய்ந்த தோற்றம் காரணமாகவும், மேம்பட்ட பழக்க வழக்கங்கள் காரணமாகவும், மற்றவர்கள் இவர்களை ஏமாற்றுப் பேர்வழிகள் என ஐயுறாதபடி நடந்துகொள்கின்றனர். வீட்டில் தெலுங்கையே பேசும் இவர்கள் தங்களை அழகிரி கேப்பு மாறிகள் என அழைத்துக் கொள்கின்றனர். இந்த இரு சொற்களுள் இரண்டாவதான சொல்லின் பொருள் விளங்காததாகவே உள்ளது. முதல் சொல்லான அழகிரி என்பது மதுரைக்கு வடக்கே பன்னிரண்டாவது மைலில் மலை அடிவாரத்தில் உள்ள புனிதப் பயண இடத்தில் உள்ள கள்ளரின் குலதெய்வமான அழகரைக் குறிப்பதாகலாம். அங்குள்ள தெய்வத்திற்கு இவர்களும் இவர்களையொத்த குற்றச் செயலில் ஈடுபடும் பிற சாதியாரும் தாங்கள் தகாத வழியில் ஈட்டிய பொருளின் ஒரு பகுதியினைக் காணிக்கையாகச் செலுத்துகின்றனர்" எனக் கேப்பு மாறிகள் பற்றித் தென் ஆர்க்காடு மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது. இவர்கள் குற்ற நடவடிக்கைகளில் ஈடுபடும் முறை பற்றிய விளக்கத்தினைத் திரு எப். எஸ். முல்லலெயினுடைய "சென்னை மாநிலக் குற்றவியல் வகுப்பார் பற்றிய குறிப்புகள்" என்ற நூலில் கேப்புமாறி என்ற தலைப்பின் கீழ்க் காணலாம்.

**கேரளம் - Kerala**

"கோகர்ணம் தொடங்கிக் கன்னியாகுமரி வரையான திருவாங்கூர், கொச்சி, மலபார், தென் கன்னடம் ஆகிய பகுதி களை உள்ளடக்கியதாக உள்ள மேற்குக் கடற்கரைப் பகுதி" எனக் கேரளத்திற்குத் திரு விக்ரம் விளக்கம் தந்துள்ளார்.*

**கேரே - Kāre (tank)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். குளம் எனப் பொருள்படுவது.

**கேசரி - Kēsari (lion)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். சிங்கம் எனப் பொருள்படும்.

**கேதகி - Kēthaki** ***(Pandanus farcicularis)***

ஸ்தானிகர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கெத்ரி - Kethri**

*பார்க்க: கத்ரி* **(See: Kathri)**

**கேவுடொ - Kēvuto**

"கேவுடொகள் கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த மீனவர் கள். வங்காளத்தைச் சேர்ந்த மீனவர் சாதியான கைபர்டர் களின் வழிவந்தவர்கள் இவர்கள் எனக் கூறப்படுகிறது. ஆறு, கால்வாய், ஏரி ஆகியவற்றில் மீன் பிடிப்பதோடுகூடச் கட்டு மரங்கள், படகுகள் ஆகியன விடும் தொழிலிலும் இவர்கள் ஈடுபடுகின்றனர். சிலர் வணிகர்களாக உள்ளனர். உரிய பிராமணர்களும் பைராகிகளுமே இவர்களுக்குப் புரோகிதம் செய்கின்றனர். குழந்தை பிறந்த ஐந்தாம் நாள் தொடங்கி இருபத்தியொன்றாம் நாள் வரை உரிய (Uriya) பிராமணர்கள் இவர்கள் இல்லத்தில் பாகவதம் படிப்பர். அதன் இறுதி நாளன்று குழந்தைகளுக்குப் பெயரிடுகின்றனர். வீட்டைவிட்டு

---

* மலபார் சட்டமும் பழக்க வழக்கமும். (Mr.Wigram - Malabar Law and Custom.)

வெளியே போக நேரும்போதெல்லாம் மணமான பெண்களும் கைம்பெண்களும் முகத்திரை இட்டுக் கொள்கின்றனர்'' என இவர்களைப் பற்றி 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பதியப்பட்டுள்ளது.

கேவுடொகள் சமுகப் படிநிலையில் தாழ்ந்தவர்களாயினும் தீட்டு உண்டாக்கும் சாதியாராகக் கருதப்படுவதில்லை. பின் வரும் அகமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகளை இவர்கள் மேற்கொண்டவர்களாக உள்ளனர்:- பேட்டியா, பில்வ, ஜோங்க, கொட்டிய, கொபர்ட்டோ அல்லது தாச, லியாரி, சௌதிடிய, தோசா. இவற்றுள் தோசர் பயிர்த்தொழிலாளர் லியாரியர் அரிசிப் பொரி தயாரிப்பவர்கள், சௌதிடியர் வறுத்த தானியங்கலைத் தயாரிப்பதில் ஈடுபட்டுள்ளவர்கள். மேற்கொண்டுள்ள தொழில் மாற்றம் காரணமாக லியாரியரும் சௌதிடியரும் கிட்டத்தட்டத் தனிச் சாதியாராகிவிட்டனர். சிலர் இவர்களுக்கும் கேவுடொக்களுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லையெனக் கூறுவர். தெலுங்கர் சௌதிடியரை நெய்யாரு என அழைப்பர். பர்லகிமெதியில் கேவுடொக்கள் மட்டுமே குடியிருக்கும் தெரு ஒன்று இருப்பதாக நான் கேள்விபட்டேன். அத் தெருவில் வாழ்வோர் தங்களை நெய்யாலு சாதியார் எனக் கூறிக் கொள்கின்றனர்.

கேவுடொகளின் கோத்திரங்களுள் நாகம், பாகொ (புலி), கொசிபொ (ஆமை) என்பன குறிப்பிடத்தக்கன. இவர்களிடையே புறமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகளும் உள்ளன. கொகுதிய (மணி), நொளினி எனப் பெயர் உடைய்யனவும் அப்பிரிவுகளின் பெயர்களுள் உள்ளன. பெகரொ, சிட்டொ, தொரெ, சல்லி, பெஜ்ஜொ, பைகோ என்பன இவர்களுக்கு உரிய பட்டப் பெயர்கள்.

இவர்கள் மணச் சடங்கு இரவில் நிகழும். மணமகளின் தந்தை ஒரு தங்கக் கொண்டி (பாசிமணி) யினை மணமகன் கழுத்தில் கட்டுவான். கேவுடொகள் தசராசரையும், கங்கா தேவியையும் வழிபடுகின்றனர். கங்காதேவி வழிபாடு தசரா

விழாவின்போது நிகழும். சில இடங்களில் அத் தேவதைக்குக் கோழியும் ஆடும் பலியிடுகின்றனர். சில்க ஏரியினைச் சுற்றி யுள்ள பகுதிகளில் ஆட்டினைப் பலியிடாமல் அதனை உரிமை யோடு காளிகாதேவி மலையில் மேயும்படி திரிய விடுகின்றனர். இவ்வாறு கங்கா தேவிக்காக வேண்டி விடப்படும் விலங்குகள் இறந்தபின் அழுகி நாறாது அப்படியே உலர்ந்து காய்ந்து விடும் என்ற நம்பிக்கையும் நிலவுகின்றது.

விசாகப்பட்டினம் முகவர் பகுதிகளில் கேவுடொகள் மாய மந்திரங்களிலும், ஆவிகளோடு தொடர்பு கொண்டு சோதிடம் கூறுவதிலும் கைதேர்ந்தவர்களாக உள்ளனர் எனக் கூறப்படு கிறது.

**காதி – Kbadi**

தெல்லிகளின் ஓர் உட்பிரிவு.

**காதியர் – Khadiya**

பேய் ஏறப்பட்டவன் எனப் பொருள்படும் காடியல என்ற சொல்லிலிருந்து வந்த பெயர் எனக் கூறப்படுகிறது. திருவாங் கூரைச் சேர்ந்த குடுமியர் இதனைப் பழித்துரைக்க உரிய சொல்லாகப் பயன்படுத்துகின்றனர்.

**கச்சாயம் - Kajjaya (cake)**

வக்கலிகர் சாதியின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். இனிப்புப் பணியாரம் எனப் பொருள்படுவது.

**கார்வி - Kharvi**

“பம்பாய் மாநிலத்திலிருந்து தென் கன்னடத்தில் வந்து குடிபுகுந்துள்ள மராத்திய மீனவர்கள் கார்வியர். கார்வி என்ற பெயர் உப்பு எனப் பொருள்படும் ‘க்சார்’ என்ற வட சொல்லின் சிதைந்த வடிவம் எனக் கூறப்படுகிறது. இவர்கள் கடின உழைப்பாளிகள் எனினும் மிகுந்த செலவாளிகள். மது வகைகளுக்குக் குறிப்பாகக் கள்ளுக்கு அடிமைகள். கடலில் மீன் பிடிக்கும் இவர்கள் நன்கு படகு வலிப்பர். வீட்டு வேலைக்

காரர்களாகவும், நாட்கூலிகளாகவும் கூடப் பணி புரிவர். ஹவிக் பிராமணர்களைத் திருமணம் முதலியவற்றை நடத்தி வைக்க அமர்த்தும் இவர்களுக்குச் சிருங்கேரி மடத்தின் தலைவரே குருவாக உள்ளார்'' எனத் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் கார்விகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

கொங்கணி பேசும் மீனவர்களான கார்விகள் தென் கன்னட மாவட்டத்தில் குண்டப்பூர் வட்டத்தில் காணப்படுகின்றனர். மீன் பிடிப்பதில் ஈடுபடாதவர்கள் எப்பொழுதும் பூணூல் அணிந்தவர்களாக உள்ளனர். மீன் பிடிப்பவர்கள் சிரவண பூர்ணமி ஆகிய ஆவணி மாதத்து முழுமதி நாள் தொடங்கி ஏழு நாள்கள் மட்டும் பூணூல் அணிந்து பின்னர் அதனை அகற்றிவிடுவர். அஜய் மாஸ்தி, நாகு மாஸ்தி ஆகிய தேவதைகளைச் சிறப்பாக இவர்கள் வழிபடுகின்றனர். மக்கள் சந்தான தாய உரிமை முறையைப் பின்பற்றும் (தந்தையின் உடமைகள் மகனுக்கு உரியவாதல்) இவர்கள் சாதித் தலைவன் சாரங்க அல்லது படேல் என அழைக்கப்படுகின்றான். இவ்விரு பெயர்களையும் சாதித் தலைவர்களின் குடும்பத்தினர் பட்டப் பெயராகவும் தரிக்கின்றனர். சாதித் தலைவனின் உதவியாளன் தன்னை நாயக் அல்லது நாயக்கர் என்று அழைத்துக் கொள்வான்.

திருமணச் சடங்குகளை நிகழ்த்தச் சிவாலி பிராமணர்களை அல்லது குட பிராமணர்களை இவர்கள் அமர்த்துகின்றனர். தாரே முறையிலான (பார்க்க:பண்டர்.) மணச் சடங்கினையே இவர்கள் மேற்கொள்கின்றனர். எனினும் இவர்கள் மணச் சடங்குகளுள் குறிப்பிடத்தக்க சில மாறுதல்களும் உள்ளன. மணமகள் மணப்பந்தலை அடைவதற்குச் சற்று முன்பாக ஐந்து பெண்கள் அவளை அலங்கரித்து அவள் கழுத்தில் தாரே மணி எனப்படும் தங்கமணியினையும் கறுப்புப் பாசிமணிகளையும் கட்டுவர். மணப்பந்தலில் மணமகனுக்கு எதிரே மணமகள் ஒரு திரைக்கு அப்பால் நிற்பாள். மணமக்கள் துளசி மாலையினை மாற்றிக் கொண்டபின் அத்திரை அகற்றப்படும். மணச்சடங்குகள் தொடங்குமுன் மணமக்கள் நெற்றியில்

பாசிங்கம் எனப்படும் நெற்றிப் பட்டயம் அணிவிக்கப்படும். அதனை அவர்கள் ஐந்து நாள்கள் அணிந்தவர்களாக இருப்பர்.

இறந்தவர்களை எரித்துச் சாம்பலை ஆற்றில் விடுவதே பெருவழக்காகும். சமயநெறிப் பட்டவர்கள் அச் சாம்பலைக் கோகர்ணத்திற்கு எடுத்துச் சென்று அவ்விடத்தில் அதனை ஆற்றில் விடுவர். பதினொன்றாம் நாள் தீட்டு நீக்கும் சடங்கு நிகழ்த்தியபின் பிராமணர்களுக்குத் தானம் வழங்குவர். அதற்கு மறுநாள் இறந்தவன் ஆவிக்காக இரு இலைகளில் சோறு படைப்பர். அந்த இலைகளில் ஒன்றினை ஆற்றில் விடுவர். மற்றதைப் பசு அல்லது எருதுக்கு உண்ணத் தருவர்.

**காசர் - Khāsa**

"இச்சாதியார் சமீன்தார்களுக்கும் பெருஞ்செல்வர்களுக்கும் ஏவல் கூவல் பணிபுரிபவர்கள். இவர்களுள் பலர் அச் சமீன் தார்களுக்கு முறையற்ற உறவின் வழிப் பிறந்தவர்கள்" என மறைத்திரு ஜெ. கெயின் குறித்துள்ளார்.* காசர் என்பது ஆடபாபாவுக்கு உரிய மற்றுமொரு பெயரும் ஆகும்.

**காஸ்கி - Khāsgi**

சண்டூர் அரசில் வாழும் செல்வர்களான மராட்டியக் குடும்பத்தினருக்கான பெயர்.

**காட்ரி - Khatri**

"பட்டு நெசவாளர்களான காட்ரிகள் தங்கள் பழக்க வழக்கங்களிலும் பேசும் மொழியிலும் பட்வேகரரைப் பெரிதும் ஒத்தவாகளாக உள்ளனர் எனினும் இவர்கள் அவர்களோடு மண உறவு கொள்வதில்லை. என்றாலும் இரு பிரிவினரும் ஒன்றாக இருந்து உண்பர். தங்களைச் சத்திரியர் எனக் கூறிக்கொள்ளும் இவர்கள் அதற்கு ஆதாரமாக ரேணுகா புராணத்தை மேற்கோள் காட்டுவர். பரசுராமன் சத்திரிய குலத்தவர்களைக்

---

* இந்தியத் தொல்லியல் இதழ், VIII, 1879. (Ind. Ant., VIII, 1879.)

கொன்று அழித்தபோது வளர்ந்த குழந்தைகளை உடையவர்களான ஐந்து ·பெண்கள் தப்பிச் சென்று காளி கோயிலில் ஒளிந்து கொண்டனர். தங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களான பின் அவர்கள் காளியிடம் பிழைப்புக்கு வழிகாட்டும்படி வேண்டிக் கொண்டனர். அவர்கள் வேண்டுதலுக்கு மனம் இரங்கிய காளி அவர்களுக்குத் தறிகளைத் தந்ததோடு நெசவு செய்யவும் சாயம் போடவும் கற்றுத் தந்தாள். அந்த ஐவரின் வழி வந்தவர்களாகக் கூறிக் கொள்ளும் காட்ரிகள் அந்த ஐவரும் அன்று மேற்கொண்ட தொழிலையே தொடர்ந்து செய்கின்றனர்" எனத் திரு லூயிஸ் இவர்களைப் பற்றிக் கூறியுள்ளார்.*

காஞ்சிவரத்தில் பட்டுநூல், பட்டுநூல் கயிறு, சாயப் பொருள்கள் ஆகியவற்றின் வணிகத்தில் ஈடுபட்டவர்களாக உள்ள காட்ரியர் பற்றிய விவரங்கள் வருமாறு:- இவர்களுள் சிலர் மனிதர் முடியினைப் பெண்கள் பயன்படுத்தும் சவுரியாக்கி விற்கின்றனர். இவர்களுக்குப் பட்டு நெசவோடு உள்ள தொடர்பினை வைத்து மற்றச் சாதியார் இவர்களைப் பட்டுநூல்காரர் என அழைககின்றனர். உண்மையில் பட்டுநூல்காரர் எனப் படுவோர் காட்ரியரால் கோஷ்டர் என அழைக்கப்படுபவர்களே. காட்ரியர் பூச ராச சத்திரியர் என்பதனையே தங்கள் சாதிக்கு உரிய பெயராகக் கூறிக் கொள்கின்றனர். சிலர் தாங்கள் கார்தத வீர்ய அர்ச்சுனன் வழியில் வந்தவர்கள் எனக் கூறிக்கொள்கின்றனர். பரசுராமனின் தாயாரான ரேணுகாம்பா இவர்கள் குலதெய்வம். ஆண்டுதோறும் தை மாதத்தில் அத் தெய்வத்திற்குப் பொங்கலிட்டு ஆட்டினையும் பலியிடுகின்றனர். இவர்களிடையே சூலேகார், பொவர், முடுகல், சோனப்ப, பொசகிரி என்பன போன்ற புறமணக் கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள உள்ளன. சிலர் பாட் அல்லது பாட்ராசு கௌதம, காசியப, வசிட்ட, பாரத்வாச போன்ற பிராமணர்களுக்குரிய கோத்திரங்களைத் தங்கள் கோத்திரங்களாகக் கொண்டுள்ளனர். பாட் என்ற இவர்கள் சாதிக்கே உரிய இரவலன் உள்ளான. எப்போதாவது இரத்தலை மேற்கொண்டுவரும்

*மைசூர், குடகு மாநில விவரக் குறிப்பு. (Mysore and Coorg Gazetteer.)

அவன் காட்ரிகளின் குடும்பங்களின் வம்சாவளியினைப் பற்றிய விவரங்களை அறிந்தவன். தான் உணவு கொள்ள விரும்பும் வீட்டில் ஒரு கம்பத்தில் முன்கூட்டியே கொடி ஒன்றினை ஏற்றி வைப்பான். அந்த வீட்டில் உணவு உண்ட பின், அவன் அந்த வீட்டிற்கு முன்பு வந்து போனபிறகு அந்த வீட்டில் நிகழ்ந்துள்ள பிறப்பு, இறப்பு ஆகியனபற்றிக் கேட்டுத் தெரிந்து கொள்வான்.

பெண்கள் பூப்படைவதற்கு முன்போ, பூப்படைந்த பின்போ மணம் செய்விக்கப் படுகின்றனர். குழந்தைகளாக இருக்கும் போது அவர்களுக்குத் திருமணம் செய்விப்பதே தற்போது நாகரிகமானதாகக் கருதப்படுகிறது. கைம்பெண்கள் மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். மணமுறிவு செய்து கொண்ட மகளிர் அவர்களுடைய கணவனாக இருந்தவன் உயிரோடு இருக்கும்வரை மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. ஒருவன் தன் உடன்பிறந்தவன் அல்லது பங்காளியினுடைய விதவையாகிவிட்ட மனைவியினை மணந்துகொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. தாய் மாமன் மகளை மணந்து கொள்ளும் மேநரிகம் இவர்களிடையே அனுமதிக்கப்படுவதில்லை. சான்றாகச் சூலேகார் குலத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் பெண்களைப் பொவர் குலத்துக்கு மணம் செய்து கொடுத்தபின் அக்குலத்திலிருந்து தங்கள் பிள்ளைகளுக்குப் பெண்கள் எடுக்கக் கூடாது. இந்த விதிக்குச் சில தலைமுறைகளுக்குப் பின் விலக்கு அளிக்கப்பட்டுப் பாட்களின் உடன்பாடு பெற்று இந்த இரு குலத்தவர்களும் தங்களுக்குள் மண உறவு கொள்ளலாம். இவர்கள் மணச் சடங்குகள் ஏழு நாள்கள் வரை நீடிக்கின்றன. முதல் நாள் அன்று ஏழு கூழாங் கற்களை ஒரு வாழையிலையில் வரிசையாக வைத்து வழிபடப் படும் பார்கொதேவ் என்ற தெய்வ வழிபாடு, பழங்களைப் படைப்பதோடு ஆட்டினையும் பலியிட்டு நிகழ்த்தப்படுகின்றது. பலியிடப்படும் ஆட்டின் வெட்டப்பட்ட கழுத்திலிருந்து வழியும் குருதியினைச் சமைத்த சோறு இருக்கும் பாத்திரத்தில் பிடித்து, அந்தச் சோற்றினில் ஏழு உருண்டைகளைப் பிடித்து, ஏழு கூழாங்கற்கள் முன் தெய்வங்களுக்குப் படைப்பர்.

அன்று மாலை அந்தச் சோற்று உருண்டைகளில் சிலவற்றை மணம் நடைபெறும் இடத்தின் நான்கு மூலைகளிலும் பேய் பிசாசுகள் நெருங்காமல் இருக்க வீசுவர். இரண்டாம் நாள் வீட்டினைத் தூய்மைப்படுத்தி வெள்ளையடித்துப் பசுஞ்சாணத் தால் மெழுகுவர். மணநிகழ்ச்சிகள் முடிவுறும்வரை ஊன் உண்பது தவிர்க்கப்படுகின்றது. மூன்றாம் நாள் மணப்பந்தல் இட்டுப் பால்கம்பம் நட்டுப் பின் இறந்துபோன சவாஸ்னெ எனப்படும் பெண் மூதாதையர்களை வழிபடுவர். மணமான ஏழு பெண்களைத் தேர்ந்தெடுத்து மஞ்சள் நீரில் தோய்க்கப் பட்ட வெள்ளை ரவிக்கைகளை அவர்களுக்கு அன்பளிப்பாக வழங்குவர். குளித்து வரும் அவர்களுக்கு வயிறார உணவளிப் பர். விருந்துக்கு முன்னதாக மணமகன் அன்னையும் சில சமயங்களில் மணமகள் அன்னையும் ஒரு கிணற்றுக்கோ ஆற்றுக்கோ குளத்திற்கோ ஒரு தட்டில் புதுச் சேலையை வைத்து அதன் மீது ஒரு பெண்ணின் உருவம் பதிக்கப்பட்ட வெள்ளித் தட்டை வைத்து அவற்றைத் தலையில் வைத்துச் சுமந்தபடி செல்வர். அதேபோன்ற அமைப்புடைய ஒரு புதிய வெள்ளித் தட்டினைப் பொற்கொல்லன் அங்குக் கொண்டு வரு வான். அந்த இரண்டு தட்டுகளையும் அங்கு வைத்து வழிபட்ட பின் வீட்டுக்கு எடுத்துச் சென்று அவற்றை ஒரு பெட்டியில் வைப்பர். மணமகனும் அவனைச் சேர்ந்தவர்களும் தங்கள் சாதியார் வாழும் தெருக்கள் வழியே ஊர்வலமாகச் செல்வர். அவர்கள் மணமகன் வீட்டை அடைந்தவுடன் மணமகளின் தாயார் வெளியே வந்து கண்ணேறுபட்ட தீட்டுப் போக ஆரத்தி எடுத்து மணமகன் கண்களைத் தண்ணீரால் கழுவிய பின் அவனுக்கு வெற்றிலையையும் பால் நிரம்பிய ஒரு சொம் பையும் அளிப்பாள். அதன்பின் மணமகளை மணமகன் இல்லம் அழைத்துச் செல்வர். அங்கு அவளை மணையில் அமர்த்திச் சரி அல்லது கண்டி எனப்படும் தங்கத்தாலான அல்லது வெள்ளியாலான அணியினை அவள் கழுத்தில் அணிவிப்பர். அவளுக்கு அங்கு மேலும் ஒரு புதிய சேலை வழங்கப்படும். பிராமணப் புரோகிதர் மணம் செய்துகொள்ள உள்ளவர்களின் பெயரையும் மணநாளையும் இரண்டு பனை ஓலைகளிலோ தாள்களிலோ எழுதி அவற்றை மணமக்களின் தந்தையரிடம்

தருவார். அன்றைய நிகழ்ச்சிகள் கொண்டல பூசையோடு முடிவுறும். அதற்குத் தரையில் மஞ்சள், சிவப்பு, வெள்ளைப் பொடிகளைக் கொண்டு 'முக்கு' உருவம் வரைவர். அதன் நடுவே ஒரு பித்தளைப் பாத்திரமும் நான்கு மூலைகளிலும் நான்கு மண்சட்டிகளும் வைக்கப்படும். பெரிய கைத்தாளங்களின் முழக்கத்திற்கிடையே சில பாடல்கள் ஓதப்படும். நான்காம் நாள் மணமக்கள் குளித்தபின் மணமகனுக்குப் பூணூல் அணி விப்பர். அதன்பின் அவர்கள் முன்னோர்களைக் குறிப்பதான வெள்ளித் தட்டுகள் வைக்கப்பட்டுள்ள இடத்திற்கு முக்காடு இட்டபடி சென்று அத்தட்டுகளின் அருகே பாலையும், சமைத்த சோற்றையும் வைத்துத் திரும்புவர். வீட்டிற்குத் திரும்பும்போது திட்டிக் கண்களின் தீட்டினைப் போக்க வீட்டு வாசற்படி அருகே பிணைத்து வைக்கப்பட்டுள்ள ஓர் இணை மண் தட்டுகளின் மீது வலப் பாதத்தை வைத்து மிதித்துச் செல்வர். மணமக்களின் அன்னை மணமகனுக்குக் கொஞ்சம் பாலும் பிட்டும் தருவாள். அதனை உண்ட பின் மணமகன் தெருக்களில் ஊர்வலமாகச் செல்வான். அதனையடுத்து மீண்டும் கண்ணேறு பட்டதனைப் போக்குவதற்கான சடங்கு மணமகள் வீட்டின் முன் நிகழ்த்தப் படும். அதன்பின் அவன் மணப் பந்தலை அடைவான். அங்கு அவன் மாமனார் அவன் பாதங்களைக் கழுவியபின் கையில் ஒரு வாழைப்பழத்தினைத்தருவார்.அதன்மீது அவன்மாமியார்கொஞ் சம் பாலினை ஊற்றுவாள். பின்னர் மணமக்கள் வீட்டினுள் செல்வர். அங்கே மணமகன் மணமகள் கழுத்தில் தாலியினைக் கட்டுவான். தாலி கட்டும்போது மணமக்களிடையே ஒரு திரை தொங்கவிடப்படும் எனினும் அதன் கீழ்முனை மேலே நோக்கிச் சுருட்டப்பட்டிருக்கும். திரைச்சீலை விலக்கப்பட்டபின் மண மக்கள் ஒருவர் எதிரே மற்றவர் தங்கள் நெற்றியில் உள்ள பாசிங்கம் இணையும்படியாக அமர்வர். உறவினர்கள் அவர்கள் தலை மீது அரிசி தூவுவர். பிராமணன் அவர்களிடம் கங் கணத்தைத் தர அவர்கள் அதனைத் தங்கள் கையில் கட்டிக் கொள்வர். பெரும்பாலான சாதியாருள் இந்தக் கங்கணம் கட்டும் சடங்கு மணநிகழ்ச்சிகளில் தொடக்கத்திலேயே நிகழும். ஐந்தாம் நாள் பந்தலில் ஒரு பலகையின் மீது ஏழு பாக்குகளை வரிசையாக வைத்து மணமக்கள் ஏழுமுறை அதனை வலம்

வருவர். ஒவ்வொருமுறை வலம் வந்து முடித்தவுடனும் மணமகன் மணமகளின் வலப் பாதத்தைத் தூக்கி அந்தப் பாக்குகளில் ஒன்றினை உதைத்துத் தள்ளும்படி செய்வான். ஒவ்வொரு திருமணத்திற்கும் சாதித் தலைவனுக்கு ரூ.12-5-0 கட்டணமாகச் செலுத்த வேண்டும். இவ்வாறு திரட்டப்படும் தொகையினைச் சமூகம் முழுவதற்கும் உரிய பொதுவான விழாக்களுக்காகச் செலவிடுவர். இத் தொகை செலுத்தப்படவில்லையாயின் மணமக்கள் பாக்கு வைத்துள்ள பலகையினை ஏழாம் முறை சுற்றி வர அனுமதிக்கப்படுவதில்லை. ஆறாம் நாள் மணமகள் தன் குடும்பத்தினரிடமிருந்து அன்பளிப்புகளைப் பெறுவாள். இரவில் ஊர்வலம் நிகழும். மண நிகழ்ச்சிகளின் இறுதி நாளன்று மணமகளின் அன்னை அவளை அவளுடைய மாமியாரிடம் "நான் உன்னிடம் ஒரு முலாம் பழத்தையும் கத்தியையும் கொடுக்கிறேன். அவற்றை உன் விருப்பம் போல் எது வேண்டுமாயினும் செய்து கொள்" எனக் கூறி ஒப்படைப்பாள். மணமகளை அவள் மாமியார் வீட்டினுள் அழைத்துச் சென்று அரிசி வைத்துள்ள சில பானைகளைக் காட்டுவாள். மணமகள் அவை நிறைந்திருப்பதாகக் கூறியபடி அவற்றினுள் தன் வலக்கையினை நுழைப்பாள். பின்னர் அவள் மாமியார் அவளுக்கு ஒரு மோதிரத்தை வழங்குவாள். தங்கள் புதிய உறவின் அடையாளமாக அவர்கள் இருவரும் ஒன்றாக உணவு உண்பர்.

காட்ரிகள் இறந்தவர்களை எரிக்கின்றனர். மணம் முடிக்கப்பட்ட ஒருவன் இறந்தால் அவன் பிணத்தைப் பல்லக்கில் வைத்து அவன் மனைவி பின் தொடர்ந்து வரச் சுடுகாட்டிற்குத் தூக்கிச் செல்வர். சிதையின் அருகே பிணம் இறக்கி வைக்கப்படும். இறந்தவனின் மனைவி தன் நகைகளையும் கண்ணாடி வளையல்களையும் பிணத்தின் மார்பின் மீது வைப்பாள். பிணத்தை இறந்தவனுடைய மருமகன் தூக்கிச் செல்லவேண்டும் என்பதே விதி. பிணத்தினைத் தூக்கிச் செல்ல உரிமையுடையவர்களை இறந்து போனவனின் மூத்த மகன் அவர்கள் தோளில் சாம்பலால் அடையாளம் இட்டு நியமிப்பான். சாவுக்கு மூன்றாம் நாள் பால் ஊற்றும் சடங்கு நடைபெறும். கோதுமை

மாவினில் தேனும் பாலும் விட்டுப் பிசைந்து மூன்று உருண்டைகள் பிடித்து இறந்தவன் உயிர்விட்ட இடம், சுடுகாட்டில் பிணத்தை இறக்கி வைத்த இடம், பிணத்தை எரித்த இடம் ஆகியவற்றில் அவற்றில் ஒவ்வொன்றை வைத்து அவற்றின் மீது பாலும் வார்ப்பர். கருமாந்திரம் எனப்படும் இறுதிச் சாவுச் சடங்கு ஏழாம் நாள் அல்லது பத்தாம் நாள் நிகழ்த்தப்படும். அதுவரை ஊன் உண்டலை விலக்கி வைப்பர்.

காட்ரிகளின் சாதித் தலைவன் கிராமணி எனப்படுவான். அவனை மாதம் ஒரு முறை தேர்ந்தெடுப்பர். அவனுக்கு வஞ்சா என்ற உதவியாளன் இருப்பான். இவனை ஆண்டுக்கு ஒருமுறை நியமிப்பர்.

சைவர்களான காட்ரிகள் பூணூல் அணிகின்றனர். மராத்தி மொழி பேசும் இவர்கள் பல கிராம தேவதைகளையும் வழிபடுகின்றனர். சா என்பது இவர்கள் சாதிக்கு உரிய பட்டப் பெயர். (எ.டு) தர்ம சா.

"கெத்ரீகள் செயப்பூரின் சமீன்தாரின் குடும்பத்தைச் சேர்ந்த சாதியினர். இச்சாதி பதினாறு பிரிவுகளைக் கொண்டதாக உள்ளது. இவர்கள் பையெட்ட எனப்படும் பூணூல் அணிகின்றனர். இவ்வாறு பூணூல் அணியும் உரிமையினைச் சமீன்தார் முன்பு பன்னிரண்டு ரூபாய்க்கு விற்று வந்துள்ளார். பறையர்கள் இந்த உரிமையைப் பெற இயலாது என விலக்கப்பட்டனர்" என விசாகப்பட்டினம் கையேட்டில் கெத்ரீகள் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

செயப்பூர் முகவர் பகுதியைச் சேர்ந்த பயிர்த்தொழிலாளரான காட்ரிகள் தெற்கத்திய நெசவாளர்களான காட்ரிகளிலும் முழுதும் வேறுபட்டவர்கள் எனத் திரு சி. ஹயவதன ராவ் எனக்குத் தெரிவித்துள்ளார். இவர்கள் சூர்ய, பாக் (புலி), கொச்சிமொ (ஆமை), நாக் (நாகம்) என நான்கு குலங்களாகப் பிரிவு பட்டுள்ளனர். சிறுமியர் பூப்படையும் முன்பே மணம் செய்விக்கப்படுகின்றனர். வழக்கமான தேசாரிக்குப் பதிலாக இவர்களுக்கு ஒரியப் பிராமணர் மணச் சடங்குகளின் போது

புரோகிதம் செய்கின்றனர். முகவர் பகுதியைச் சேர்ந்த பிற சாதியாரைப் போல மணமகளின் விலையின் ஒரு பகுதியாக ஜொவொல்ல தொங்க எனப்படும் பரிசத்திற்கான 'மதோ' எனப்படும் சாராயத்தைத் தருவதில்லை. அரிசி, ஆடு, ஆடைகள் முதலியவற்றை மட்டுமே இவர்கள் தருகின்றனர். மணச் சடங்குகள் மணமகள் இல்லத்திலேயே நடைபெறும். இந்தக் காட்ரிகள் மணச் சடங்கின் போதே முதன்முதல் பூணூல் அணிகின்றனர். அதன்பின் அவ்வப்போது அதனை மாற்றிக் கொண்டு வாழ்நாள் முழுவதும் அணிந்து வருவர். நல்ல நிறம் வாய்க்கப் பெற்றுள்ள இவர்கள் ஒரிய மொழி பேசுகின்றனர். இவர்கள் வழக்கமாகச் சூட்டிக்கொள்ளும் பட்டப்பெயர் பாட்ரொ.

**கின்புதி – Khinbudi (bear)**

கரடிஎனப்பொருள்படும்இது ரோணர்களின் ஒரு குலம்.

**கொடாலொ – Khodālo**

பார்க்க பாவுரி. (See : Bavuri.)

**கொடிகாரொ – Khodikāro**

பண்டிதர்களுக்கான ஒரு பெயர். கொடி என்பது கல்லெனப் பொருள்படும். சோதிடம் கணிக்கும் பொழுது கல்லினைக் கொண்டு தரையில் எழுதிக் கணக்கிடும் பழக்கம் காரணமாக இவர்கள் இப்பெயர் பெற்றனர்.

**கொதூரர் - Khodūra**

வளையல் எனப் பொருள்படும் கொது என்ற சொல்லிலிருந்து இப்பெயர் வந்துள்ளது. தாழ்ந்த சாதியாரான ஒடியர் அணிந்து கொள்வதற்குரிய பித்தளை, வெண்கல வளையல்கள், மோதிரங்கள் ஆகியனவற்றைத் தயாரிப்பவர்கள் கொதூரர். இவர்கள் சாதித் தலைவன் நககொசாகு எனப்படுவான். சாதித் தலைவனின் கீழ் 'தொயி நககொ' எனவும் 'பேகரர்' எனவும் வழங்கப்படும் உதவிச் சாதித் தலைவர்கள் உள்ளனர்.

நான்காம் நிலையில் 'அகொபொதின' என்ற உதவியாளனும் உளன். சாதிப் பஞ்சாயத்தாரால் சாதிவிலக்குச் செய்யப்பட்டு மீண்டும் சாதியில் சேர்ந்து கொள்ள அனுமதிக்கப்படுபவர்கஉள அவ்வாறு அனுமதிக்கும் சடங்காக உடன் உண்ணும் பணியினை மேற்கொள்வதே இந்த அகொபொதின உதவியாளனுக்குரிய தனிப்பட்ட பணியாகும். பஞ்சாயத்துச் சபையார் சேனாபதி, மகாபத்ரொ, சுபுத்தி போன்ற பட்டப் பெயர்களைத் தரித்துக் கொள்ள விரும்புபவர்களுக்கு அவற்றை விற்று அதற்குக் கிடைக்கும் தொகையினைப் பூரி, பிரதாப்பூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களுக்கு அனுப்பி வைப்பர். இச்சாதியார் முதலில் ஒரிசாவில் வாழ்ந்தவர்கள் எனவும் பூரி மகாராசா புருசோத்தம தேவருடன் இவர்கள் கஞ்சம் பகுதிக்கு வந்தவர்கள் எனவும் கூறப்படுகிறது. இவர்கள் பழக்க வழக்கங்கள் பெரிதும் பத்ரோயிகள் பழக்க வழக்கங்களை ஒத்தவை'' எனத் திரு பிரான்சிஸ் கூறியுள்ளார்.* சாதித் தலைமையில் நான்காவதான நிலையில் உள்ளவன் பதவிப பெயர் முதல் இலைக்காரன் (பந்தியில் முதன் முதல் அமரும் உரிமை யுள்ளவன்.) எனப் பொருள்படும் 'அகொபொடிரிய' என்றிருக்க வேண்டும் என எனக்குத் தெரிவிக்கப்பட்டது.

**கொய்ரர் – Khoria**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் இவர்கள் தாழ்ந்த சாதியினரான ஒரியப் பயிர்த்தொழிலாளர் எனப் பதியப்பட்டுள்ளனர்.

**கோஜ – Khāja**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பம்பாயிலிருந்து வந்தேறிய முகமதிய வணிகர்களைச் சார்ந்த பதினொரு கோஜர்கள் இருப்பதாகப் பதியப்பட்டுள்ளது.

தென்னிந்தியாவைச் சேர்ந்த கோஜர்கள் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு முனைவர் ஜெ. ஸோர்ட் அவர்களுக்கு

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. (Madras Census Report, 1901.)

நான் கடப்பாடுடையேன்.* "கோஜர்கள், எனப்படும் அலிகள் தென்னிந்தியாவில் மிகுதியான எண்ணிக்கையில் காணப்படவில்லை. செல்வர்களான முகமதியர்கள் இல்லங்களிலேயே இவர்களைக் காணலாம். அத்தகைய செல்வர்களின் அந்தப்புரத்தின் வாயில்களில் இவர்கள் அமர்த்தப்பட்டிருப்பர். கோஜர்களுள் கொஜரர், ஹிஜரர் என்ற இரு பிரிவுகள் உள்ளன. சிலபோது இந்துக்களுள், சூத்திரர்களும் பிராமணர்களும் தாங்களே விரும்பி விதையகற்றும் சடங்கினைச் சமய நெறிப்பட்டவர்களாக மேற்கொள்கின்றனர். மற்றவர்கள் இயற்கையிலேயே தாங்கள் ஆண்மையில்லாதவர்களாக இருப்பதை உணர்ந்து மறுபிறவியிலும் அத்தகைய குறைக்கு ஆட்படாமல் இருக்க வேண்டி இந்த அறுவையினை மேற்கொள்கின்றனர். விதையகற்றும் இந்த அறுவை அதற்கென்று உரிய நாவிதர்களால் மேற்கொள்ளப்படுகிறது. சிலபோது திறமை வாய்ந்த அலிகள் சிலரே கீழே விளக்கப்பட்டுள்ளபடி இந்த அறுவையினைச் செய்கின்றனர். அறுவைக்கு ஆட்படுபவருக்கு முன்பே அபினியைத் தந்து மயக்கமூட்டிக் கவிழ்த்து வைக்கப்பட்டுள்ள புதிய மண் பானையின் மீது அமரச் செய்வர். அறுவை செய்பவர் ஆண் குறியினை இடக் கையால் பறறிக் கொண்டு அவர் உதவியாளரை நடுவில் வெட்டு வாயினையுடைய மூங்கில் பிளாச்சினை ஆண்குறியின அடிப்பாகத்தில் தந்து தாங்கிக் கொள்ளச் செய்து கூர்மையான கத்தியினை மூங்கில் பிளாச்சினை ஒட்டியவாறு செலுத்தி ஆண்குறி, விரைகள்,விரைப்பை, ஆகிய அனைத்தையும் ஒரே அறுப்பில் அறுத்துவிடுவார். அதனால் ஏற்படும் பெரிய புண்ணில் குருதி கொட்டுவதை நிறுத்தக் கொதிக்கும் நல்லெண்ணையினை ஊற்றி வெதுவெதுப்பான எண்ணையில் ஊற வைத்த பஞ்சினை வைத்துப் புண்ணினைக் கட்டுவர். புண் ஆறுவதற்காக நாள்தோறும் இவ்வாறு வெதுவெதுப்பான எண்ணையில் தோய்த்த பஞ்சினைப் புதிதாக வைத்துக் கட்டுவர். அறுவைச் சிகிச்சைக்கு ஆட்பட்டவரைப் புண் ஆறும்வரை படுக்கையிலேயே மல்லாந்த நிலையில் கிடத்தி வைத்திருந்து

---

* மனித இன ஆய்வியல் கழக இதழ், II, 1873. (Journ. Anthrops. Inst. II, 1873.)

கஞ்சி, பால் போன்ற எளிய உணவினைத் தந்து வருவர். அறுவையின்போது அதற்கு ஆட்படுபவரை 'தின்' என மும்முறை முகமதிடம் அவர் கொண்ட நம்பிக்கை வெளிப்படும்படியாகக் கூவச் செய்வர்.

இவ்விரு பிரிவினருள்ளும் கொஜரர்களே செயற்கையான அலிகளாக ஆக்கப்படுபவர்கள். மாறாக ஹிஜரர் இயற்கையிலேயே ஆண்மை இழந்தவர்களாக உள்ளவர்கள். சில ஆண்டுகளுக்கு முன்பு வேலூரிலுள்ள ராயல் மகால் சிறையில் வைக்கப்பட்டிருந்த திப்பு சுல்தானின் மனைவியர், சந்ததியினர், பிற வகையில் தொடர்புடைய பெண்கள் ஆகியோருக்கு மூன்று கொஜரர்களே தலைமைக் காவலர்களாக இருந்துள்ளனர் பிறப்பால் முகமதியர்களான இத்தகைய கொஜரர்கள் மிகவும் மதிக்கப்படுவதோடு நம்பிக்கைக்கு உரிய பதவிகளிலும் அமர்த்தப்படுகின்றனர். அந்தப்புரங்களில் உள்ள அடிமைப் பெண்கள் இவர்களை நிர்வாணமாக்கி இவர்களுடைய இயலாமையை எள்ளி நகையாடும் வழக்கம் உள்ளவர்களாக உள்ளனர் என அடிக்கடி கதைகள் கூறுகின்றனர். முன்பு கர்நாடக நவாப்பாக இருந்தவரிடம் இரண்டு கோஜர்கள் பணியில் இருந்தனர். இவர்கள் இருவரும் ஆப்பிரிக்கர்கள். நவாப் இறந்தபின் அரசு அவர்களுள் ஒருவனுக்கு மாதம் பதினைந்து ரூபாய் ஓய்வு ஊதியமாக அனுமதித்துள்ளது.

"ஹிஜரர்கள் எனப்படும் இயல்பாகவே அலியாக உள்ள இரண்டாம் பிரிவினர் அலிகள் என்ற உறுதியான வரையறைக்கு உட்படாதவர்கள். ஆயினும் இவர்கள் ஆண்மை இழந்தவர்களே. இவர்களுள் சிலர் பிறவியிலே இக்குறையுடையவர்கள். சிலரைக் குழந்தைப்பருவந்தொட்டு அணிவிக்கும் உடை பேச்சு, நடத்தை ஆகியவற்றால் ஆண்மையற்றவர்கள் என்ற மனப்பான்மை கொள்ளும்படியாக ஆக்கிவிடுகின்றனர். சிலர் வளர்ந்தபின் பிழைப்புக்காக வேண்டி இந்தக் கோலம் கொள்கின்றனர். ஹிஜரர்களுள் பெரும்பாலோர் முகமதியர்களே. இவர்கள் தலைமுடியினைப் பெண்களைப் போல எண்ணெயிட்டுச் சீவிப் பின்னால் தொங்கவிட்டுக் கொள்வர். சோளி அணியும் இவர்கள் சேலை அல்லது பாவாடை உடுத்தி

மூக்கு, காது, கால், கை விரல்கள் ஆகியவற்றில் அணிகளை மிகுதியும் அணிவர். பாடவும் தோற்கருவிகளை இசைக்கவும் பழகும் இவர்கள் பேரலியான பேச்சு, நடத்தை ஆகியனவற்றை யும் வளர்த்துக் கொள்வர். சுமார் ஆறு ஏழு பேர் ஒன்றாகக் கூடிக் கடைவீதிகளில் ஆடிப்பாடி மக்களிடம் அன்பளிப் புக்களை எதிர்பார்ப்பர். (சண்டூரில் இத்தகைய ஒரு குழுவினை நான் கண்டேன். நான் அவர்களை நிழற்படம் எடுக்க விரும்பு வதாகக் கூறியவுடன் அவர்கள் அப்பகுதியினை விட்டு வேறு இடங்களை நாடிச் சென்றுவிட்டனர்.) பிச்சையிடக் கேட்டுத் தொடர்ந்து நச்சரிப்பதோடுகூட வெட்கமின்றிக் கீழ்த்தரமான தும் ஆபாசமானதும் இழித்துக் கூறுவதுமான பாடல்களைப் பாடிக் கடைக்காரர்களை ஏதேனும் தரும்படி வற்புறுத்திப் பெறுவர். அவ்வாறு கடைக்காரர் ஏதும் தரவில்லையாயின் நெருப்பு மூட்டி அதில் மிளகாயினையிட்டு மற்றவர்களுக்குக் காரல்களையும் அதன் காரணமாக இருமல் முதலியவற்றையும் வருமபடி செய்வர். இந்தத் தொல்லையிலிருந்து விடுபட்டால் போதும் என்று கடைவீதியில் உள்ள கடைக்காரர்கள் ஏதேனும் கொடுத்து இவர்களை அனுப்பி வைப்பர். பகலில் இதுபோலச் செயல்பட்டுத் திரியும் இவர்கள் இரவு வந்தவுடன் காசு பெற்றுக் கொண்டு சில முகமதியர்களுடன் காமக் களியாட்டங்களில் ஈடுபட்டவர்களாக நாட்டுச் சாராயம், கஞ்சா முதலிய போதைப் பொருள்களில் மூழ்கிக் கிடப்பர். கஞ்சா புகைக்கும் பழக்கமும் இவர்களிடம் உண்டு. ஹிஜரர்கள் தென்னிந்தியா வில் உள்ள பேரூர்கள் பலவற்றிலும – முகமதியர்கள் பெரும் பான்மையினராக உள்ள ஊர்களில் – காணப்படுகின்றனர்.

ஐதராபாத் பகுதியில் விதையினை அறுத்தல் அறுவை பதினாறு வயதளவில் நிகழ்த்தப்படுகின்றது. மூன்றரை அடி ஆழமுள்ள ஒரு குழிவெட்டி. அதில் சாம்பலை நிரப்புவர். அறு வைக்குப் பின் அதனைச் செய்து கொண்டவர் இந்த சாம்பல் குழியில் சம்மணமிட்டு மூன்று நாள்கள் அமர்ந்திருக்க வேண்டும். அறுவை செய்து கொள்பவர்களுக்கு மயக்க மருந்து தந்தபின் கோஜர் பிரிவினைச் சேர்ந்த பீர் அறுவையினைச் செய்வார்.

விசாகப்பட்டினத்தில் நடைபெறும் கடபர்களின் ஆண்டுத் திருவிழாவில் ஊர்த் தேவதைகளின் கோயில்களில் கோயில்களுக்கு வெளியே உள்ள ஊஞ்சலில் முட்கள் பதிக்கப்பட்டிருக்கும் எனவும் கோயில் பூசாரியோ பூசாரிச்சியோ எத்தகைய தொல்லைக்கும் ஆட்படாமல் இதில் அமர்ந்து ஆடுவர் எனவும் பூசாரி ஆணாக இருப்பின் அலியாக ஆக்கப்படுவாரெனவும் அலிகள் இல்லாத ஊராக இருப்பின் பெண்களே இச்சடங்கினை மேற்கொள்வர் எனவும் திரு ஜி. டி. பாடிசன் எனக்குத் தெரிவித்தார்.

சென்னை நகரில் வாழும் சில அலிகளை நேரில் நான் பேட்டி கண்டு பெற்ற விவரங்கள் வருமாறு:-

முப்பது வயதான இந்து அலி:- இவன் ஆண் உறுப்புக்கள் ஓரளவே வளர்ச்சியுற்றிருந்தன. இவன் பிறப்பிலேயே அலி. பெண்களைப் போலவே பேசவும் நடக்கவும் செய்கின்றான். பெட்டிக் கடை வைத்திருக்கும் இவன் பணியார வகைகளை விற்கின்றான். இரவில் வேறு நான்கு அலிகளோடு சேர்ந்து ஆடிப்பாடும் இவன் பத்தணா முதல் ஒரு ரூபாய் வரை சம்பாதிக்கின்றான். சென்னையில் ஆடிப்பாடிப் பிழைக்கும் அலிகள் ஏறத்தாழ முப்பது பேர் உள்ளனர். பெட்டிக்கடை வைத்தும் வீட்டுவேலைக்காரர்களாகப் பணியாற்றியும் மற்றவர்கள் பிழைப்பு நடத்துகின்றனர்.

இந்துக்களாக உள்ள அலிகளைப் பற்றி நன்கு அறிந்த ஒருவர் ஒரு குடும்பத்தில் பிறப்பு உறுப்புகள் நன்கு வளர்ச்சியுறாத குழந்தைகள் பிறப்பார்களாயின் அது அக் குடும்பத்தவர்களை மிகுந்த மனக்கவலைக்கு உள்ளாக்குவதாக அமைந்துவிடுகின்றது எனக் கூறினார். மிகுந்த கூச்சம் கொள்ளும் இயல்புடையவனாக வளரும் அவன் தன் தோழர்களின் கேலிக்கும் ஆளாகின்றான். அத்தகைய சிறுவர்கள் வீட்டைவிட்டு ஓடிப்போய் அலிகளின் கூட்டத்தோடு சேர்ந்து கொள்கின்றனர். அவர்களுக்கு ஆடிப்பாடக் கற்றுத் தரப்படுகிறது. இயல்புக்கு மாறான நடத்தைகளில் இவர்கள் ஈடுபடுகின்றனர். நாட்டிய மங்கையர்களால் இவர்கள் ஆள்களைப் பிடித்துவர

அமர்த்தப்படுகின்றனர். இதற்காக வேண்டி இவர்கள் நாட்டிய மகளிரைப் போல உடையுடுத்தித் தெருக்களில் திரிவர். கணக்கெடுப்பின்போது இவர்கள் தங்களை ஆடிப்பாடிப் பிழைக்கும் ஆண்கள் எனப் பதிந்து கொள்கின்றனர்.

**கோண்ட் - Khond**

பார்க்க: கொண்ட் - **See : Kondh.**

**கோண்கர் - Khongar**

பார்க்க: கங்கரர் - **See: Kangara.**

**கீச்சகாரர் - Kīchagāra**

கன்னடம் பேசும் இவர்கள் எண்ணிக்கையில் மிகக் குறைந்தவர்கள். கூடைகள் முடைந்தும், பிச்சை எடுத்தும் பிழைப்பு நடத்தும் இவர்களின் சாதிப் பெயர் பிச்சை எடுக்கும்போது இவர்களிடும் கீச்முச்சென்ற இடையறாத கூச்சலின் காரணமாக அமைந்ததாகும்.

**கிடாரன் - Kidāran (copper boiler)**

மலையாளிகளான கைவினைஞர்களுக்குரிய ஒரு பெயர்.

**கிழக்குத் தெரு - Kilakku Teru (east street)**

கள்ளர்களின் ஓர் பிரிவினர்.

**கிள்ளவர் - Killavar**

தொட்டியன்களின் ஓர் உட்பிரிவு.

**கிள்ளேகியாட்டர் - Killēkyāta**

தெலுங்கு, கன்னடப் பகுதிகளில் ஊர்ப்புற மக்களைத் தங்கள் பாவைக் கூத்தால் மகிழ்விக்கும் மராத்தி பேசுபவர்களே கிள்ளேகியாட்டர். “இவர்கள் ஊர் ஊராகச் சென்று மக்கள் நல்லாதரவு கிடைக்கும் இடங்களிலெல்லாம் பாவைக்

கூத்து நிகழ்த்துவர். பார்க்க வரும் மக்களிடமிருந்து அன்பளிப்பினைக் காசாகவோ விளக்குக்கான எண்ணெயாகவோ பெறுவர்."* திரு. எஸ். எம். நடேச சாஸ்திரி இவர்களைப் பற்றிக் கூறியுள்ளதாவது:- ஊர்மக்கள் முன்னிலையில் சமயத் தொடர்புடைய நாடகங்களை நடத்திக் காட்டுவதே இவர்கள் தொழில். (இதனாலேயே கோமாளி என்ற பொருள்பட இச்சாதியார் பெயர் பெற்றுள்ளனர்.) கறுப்புக் கம்பளியே இவர்கள் திரைச் சீலை. கோயில் மண்டபமோ சாவடியோ கூரையில்லாத திண்ணையோ தான் இவர்களுடைய மேடை. இரவு நேரத்திலேயே இவர்கள் கூத்து நடத்துவர். நன்றாகப் பதப்படுத்தப்பட்டு உலர்த்திய மான் தோலில் வரைந்த வண்ண உருவங்களை இவர்கள் எப்பொழுதும் தங்களோடு எடுத்துச் செல்வர். மனித அல்லது விலங்குகளின் உருவங்களைப் புலப்படுத்தும் அத்தகைய தோலில் தீட்டிய படங்களின் பல பகுதிகள் ஒன்றோடு ஒன்று மெல்லிய இரும்புக் கம்பிகளால் இணைக்கப்பட்டு அந்தப் படங்களின் உருவங்கள் மூங்கில் குச்சிகளின் உதவியால் ஆட்டப்பட்டுப் பார்ப்பவர்களுக்குப் பல நிகழ்ச்சிகளையும் பல்வேறு உணர்ச்சிகளையும் அந்தப் பாவைகளில் தோற்றுவித்துக் காட்டுவர். உணர்ச்சி பாவங்களுக்கு ஏற்ப உடன் இசையும் இசைப்பர். இவர்கள் வைத்திருக்கும் படங்கள் பல வண்ணங்களில் அழகுற வரையப் பட்டவை. கூத்நாட்ட இராமாயணம், மகா பாரதம் போன்றவற்றிலிருந்தே இவர்கள் கதைகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்கின்றனர். அவற்றை இவர்கள் இராவணயகதா என்றும், பாண்டவகதா என்றும் வழங்குவர்."† இவர்கள் இறந்தவர்களை உட்கார்ந்த நிலையில் புதைப்பர்.

இச்சாதிப் பெண்கள் சிலர் பச்சை குத்தும் தொழிலை மேற்கொண்டுள்ளனர்.

**கிமெதி - Kimedi**

பர்லகிமெதியில் வாழும் கொரொணர்களுக்கு அப்பகுதியில் வழங்கும் பெயர்.

---

* அனந்தப்பூர் மாவட்ட விவரக்குறிப்பு. (Gazetteer of Anantapur district.)

† இந்தியன் ரெவியூ, VII, 1906. (Indian Review, VII, 1906.)

**கிந்தல் - Kindal (basket-maker)**

சவரர்களின் ஓர் உட்பிரிவு. கூடை முடைபவர்கள்

**கிண்கில - Kinkila (the koel or cuckoo)**

குர்ணிகளின் ஒரு கோத்திரம். இங்கு குறிப்பிடப்பட்டுள்ள கோகிலம் எனப்படும் குயில் வேனில் பருவத்தில் இடைவிடாது கூ-இல், கூ-இல் எனப் பாடியபடி இருக்கும் பறவையாகும்.

**கிந்தலி - Kinthali**

தெலுங்குக் காலிங்கியரின் ஓர் உட்பிரிவு.

**கீர - Kīra (parrot)**

கிளி எனப் பொருள்படும் இது கடபர்களின் ஒரு குலம். சொண்டிகளின் ஓர் உட்பிரிவின் பெயராகவும் இது உள்ளது.

**கீரைக்காரன் - Kiraikaran**

கீரை பயிரிடும் தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களைக் குறிக்கும் தொழில் தொடர்பான பெயர். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் கோயமுத்தூரில் அகமுடையார் சாதியாரே கீரைக் காரர்களாகக் குறிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் மைசூரிலுள்ள கெம்படியிலிருந்து கோயமுத்தூருக்கு வந்து குடியேறிய கன்னடியர்களான கெம்படி ஒக்கிலியர்களே கோயமுத்தூரில் கீரைக்காரர் என அழைக்கப்படுகின்றனர் என எனக்குத் தெரிவிக்கப்பட்டது. இவர்களுள் பெரும்பாலோர் கீரையும் பிற காய்கறிகளும் பயிரிட்டு விற்கின்றனர். சிலர் கடைகள் வைத்தும் மீன் பிடித்தும் பிழைப்பு நடத்துகின்றனர். மண உறவுக்கான இவர்களுடைய குலப் பிரிவுகள் மசாணி, வீர மசிட்டி, ஜோகி என்பன போலக் கிராம தேவதைகளின் பெயரில் அமைநதவை.

**கிராடர் - Kirāta (hunter)**

பேடர், ஏகாரியர் போன்ற வகுப்பார் தங்களை அழைத்துக்

கொள்ளும் ஒரு பெயர். வேட்டையாடுபவர்கள் எனப் பொருள் படும்.

**கிர்காணிகர் – Kirgāniga**

கிர்காணிகர் அல்லது கிருகாணிகர் என்பது மரச் செக்கில் எண்ணெய் ஆட்டும் காணிகர் உட்பிரிவினருக்கான பெயர்.

**கிரியம் – Kiriyam**

நாயர்களின் ஓர் உட்பிரிவு. இல்லம், குலம் ஆகியவற்றுக் கான மலையாளப் பெயராகவும் இது உள்ளது.

**கிரியட்டில் – Kiriyattil**

நாயர்களின் ஓர் உட்பிரிவு.

**கிழக்கத்தி – Kizhakathi**

*1891* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் பறையரின் ஓர் உட்பிரிவாகத் தரப்பட்டுள்ளது. இச் சொல் கிழக்குத் திசையில் உள்ள நாட்டுப் பகுதியைச் சேர்ந்தவன் எனப் பொருள்படும். வட, தென் ஆர்க்காடு மாவட்டங்களைச் சேர்ந்த பறையர் சென்னை நகரைச் சேர்ந்த பறையரை இப் பெயரால் அழைப்பர்.

**கோலகர் – Koalaka (arrow)**

ஜாடபுகளின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம் அம்பு எனப் பொருள்படும்.

**கொப்பிரியர் – Kobbiriya**

தோம்புகளின் ஓர் உட்பிரிவு.

**கொசட்டபன்னயர் – Kochattabannaya**

கொஜ்ஜரன்னயர் எனவும் வழங்கப்படும் இது பண்டர் களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். பலா எனப் பொருள்படுவது.

**கொசிமொ - Kochimo (tortoise)**

ஒரிய கௌடொ, பொசந்தியர், பொட்டாடர், கொண்ட தொரை, மட்டிய ஓமனட்டிய ஆகிய சாதிகளின் குலங்களுக்குரிய பெயர். ஆமை எனப் பொருள்படும்.

**கொசுவாளன் - Kochavālan**

1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் உள்ளாடன்களுக்குரிய ஒரு பெயராகப் பதியப்பட்டுள்ளது.

**குடைகட்டி - Kodaketti**

பாணன்களின் ஓர் உட்பிரிவு.

**கொடவிலி - Kodavili (sickle)**

கர்ணசாலேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். அரிவாள் எனப் பொருள்படும்.

**கொடெகள் கட்டகாரர் - Kodekal Hata-kāraru (cloth-weavers)**

தேவாங்கர்களின் ஓர் உட்பிரிவு.

**கோடி - Kodi (cock)**

சேவல் எனப் பொருள்படும் இது காபுகளின் புறமணக் கட்டுப்பாடு உடைய ஒரு குலம். தோரிக என்பது ஜாடபுகளின் ஒரு குலப் பெயராக உள்ளது. இக் குலத்தினர் தோரிக கோடி எனப்படும் கோழிகளைப் போற்றுபவர்கள். கோடி கண்டலர் (கோழிக்கண்ணர்) என்பது போயர்களின் ஒரு குலப் பிரிவு.

**கொடிக்கால் - Kodikkāl**

கொடிக்கால், கொடிக்கார், கொடிக்கால்காரன் என்பன வெற்றிலைக் கொடிக்கால் போடும் வேளாளரின் ஓர் உட்பிரிவினருக்கும், அதே தொழிலில் ஈடுபட்டிருக்கும் லப்பை முகமதியர்களுக்கும் உரிய பெயர்களாம். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் இதனைத் தங்கள் சாதிப் பெயராகப் பதிந்துள்ளவர்கள்

தங்கள் தாய்மொழி தமிழ் எனவும் தங்களுக்குரிய பட்டப் பெயர் நாயக்கன் எனவும் பதிந்துள்ளனர். இவர்கள் பள்ளியரோடு சேர்த்து இணைக்கப்பட்டுள்ளனர். கொடிக்கால் என்பது கொடிகளைத் தாங்கிச் செல்லும் சாணார் உட்பிரிவினருக்குரிய பெயராகவும் உள்ளது. மற்றச் சாதியார் இதனை வெற்றிலைக் கொடிக்கால் போடும் சாணாருக்கு உரியதாகக் கொள்வர். கொடிக்கால் பிள்ளைமார் என்ற பெயர் சேனைக் குடையார் சாதிக்குரிய மற்றுமொரு பெயர். இது வெற்றிலைக் கொடிக்கால் பயிரிடும் பிள்ளைமாரைக் குறிக்கும்.

**கொடியாள் – Kodiyāl**

குடுபிகளின் ஓர் உட்பிரிவு.

**கோத்ல - Kōdla (fowl)**

கோத்ல தசாகலர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயராகப் பதியப்பட்டுள்ளது. கொத்ல பொச்சு (கோழிகளின் இறகு) என்பது காபுகளின் புறமணக் கட்டுப்பாடுடைய ஒரு குலம்.

**கோடு - Kōdu**

கோண்ட் என்ற பெயரின் மற்றொரு வடிவம். கொண்ட ராசுக்களின் ஓர் உட்பிரிவுக்கு உரிய பெயருமாகும்.

**கொகோரு - Kohōro**

ககர் எனபதன் மற்றுமொரு வடிவம்.

**கொய் - Koi**

பார்க்க: கோய (See : Kōya)

**கொய்பர்டொ – Koibarto**

கேவுட்டொக்களின் ஓர் உட்பிரிவு.

**கோயில் பண்டலர் – Koil Pandala (keeper of the royal treasury)**

திருவாங்கூரில் உள்ள சத்தியர்களின் ஓர் பிரிவு.

## கோயில் தம்புரான் - Koil Tampurān

1901 திருவாங்கூர் மக்கள் கணக்கெடுப்பு அறிக்கையிலிருந்து பின்வரும் செய்திகள் தொகுத்துத் தரப்படுகின்றன. திருவாங்கூருககும் கொச்சிக்கும் வடக்கேயுள்ள மலபாரின் மத்தியப் பகுதியிலிருந்து குடிபெயர்ந்து வந்தவர்களான சில சத்தியர் குடும்பங்களின் வழித் தோன்றல்களாக உள்ள சிறு குழுவினர் கோயில்* தம்புரான்கள். இவர்கள் கோயில் பண்டலர் என்றும் அழைக்கப்படுகின்றனர். பழைய ஆவணங்களில் இவர்களைக் குறிக்கக் கோயில் அதிகாரிகள் என்ற வழக்கு இடம் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. தொன்மையான வழக்கு கோயில் தம்புரான்களைச் சேரமான் பெருமாளோடு தொடர்புடையவர்கள் எனக் கூறுவதோடு இவர்கள் ஆதியில் பெய்ப்பூரில் வாழ்ந்தவர்கள் எனவும் கூறும். மலையாளம் ஆண்டு 300-அளவில் இப் பிரிவினைச் சேர்ந்த ஆண்கள் சிலர் திருவாங்கூரில் வந்து தங்கும்படி அழைக்கப்பட்டனர். அன்று வேணாட்டுச் சுவரூபம் என வழங்கப்பட்ட திருவாங்கூர் அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்களுடன் இவர்கள் திருமண உறவும் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். அரச குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் தங்கி வாழும் அட்டிங்கல்லிலிருந்து ஆறு மைல் தொலைவில் உள்ள கிளிமானூரில் இவர்களுக்காக இல்லங்களும கட்டடப்பட்டன. மலையாளம் ஆண்டு 963 – இல் திப்பு சுல்தான் படையெடுப்பால் கொடுமைக்கு உள்ளான மூன்று ஆண்களும் ஐந்து பெண்களுமாக எண்மர் திருவாங்கூருக்கு அடைக்கலம் கேட்டு வந்தனர். அரசர் ராம வர்மா இவர்களை அன்புடன் வரவேற்றுத் தளவாய் ராமய்யனால் வெல்லப்பட்ட தெக்கும்கூர் அரசரின் அரண்மனையினை இவர்களுக்குத் தந்தார். செங்கணச்சேரியில் உள்ள அந்த இடம் இன்றும் நீராழிக் கொட்டாரம் என்ற பெயரில் இருந்து வருகின்றது. மலையாளம் ஆண்டு 975-இல் இவ்வாறு வநத பெண்கள் ஐவருள், ஒருத்தி மாவேலிக்கரை வட்டத்திலுள்ள கண்டியூருக்கு அருகே உள்ள கீர்த்திபுரத்துக்குச்

---

* கோயில் என்பது அரண்மனை என்ற பொருளில் இடம் பெறுகின்றது (மொ.ர்)

சென்று குடியேறிப் பின் அங்கிருந்து அதே மாவட்டத்தில் உள்ள கிராமத்தில் சென்று குடியமர்ந்தாள். மற்றொருத்தி கோட்டயம் வட்டத்திலுள்ள பள்ளம் சென்று தங்கினாள். இன்னொருத்தி திருவல்லாவில் உள்ள பாலியக்கரைக்குச் சென்று சேர்ந்தாள். நான்காவதான ஒருத்திக்குக் குழந்தைகள் இல்லையாதலால் இந்த ஐவருள் இளையவளான ஒருத்தியோடு செங்கணச்சேரியிலேயே தங்கிவிட்டாள். மலையாளம் ஆண்டு 985-இலிருந்து 990-வரை திருவாங்கூரின் அரசியாக ஆட்சிப் பொறுப்பிலிருந்த ராணி லட்சுமிபாயினை மணந்து கொண்டவரான ராச ராச வர்மா கோயில் தம்புரான் செங்கணச்சேரியிலேயே தங்கிவிட்ட பெண்ணின் மூத்த மகனாவார். அங்குத் தற்பொழுது இவர்கள் வாழ்ந்து வரும் இல்லம் கோயில் தம்புரானின் அரச குடும்பத்துத் துணைவியாரின் பெயரால்லட்சுமிபுரம் கொட்டாரம் என அழைக்கப்படுகிறது. ராச ராச வர்மாவின் உடன்பிறந்தவள் மூன்று பெண்களையும் இரண்டு ஆண்களையும் பெற்றெடுத்தாள். இவர்களுள் மூத்த மகளும் பிள்ளைகளும் 1040-இல் கார்த்திகப்பள்ளிக்குச்சென்று குடியேறிய பின் அங்கிருந்து 1046-இல் ஹரிபாடில் உள்ள அனந்தபுரத்தில் சென்று தங்கினர். 1040-இல் இரண்டாவது மகளும் அவள் குழந்தையும் திருவல்லாவிலுள்ள செம்போரல் சென்று தங்கினர். மூன்றாவது மகள் தொடர்ந்து செங்கணச்சேரியிலேயே இருந்துவந்தாள். இவ்வாறாகக் கிளிமானூர், செங்கணச்சேரி, அனந்தபுரம், பள்ளம், செம்போரல், கிராமம், பாலியக்கரை என்ற பெயருடைய ஏழு கோயில் தம்புராக்கள் குடும்பங்கள் தோன்றின. மலையாளம் ஆண்டு 1040 (கி. பி. 1856) க்குப் பின் மேலும் மூன்று குடும்பங்கள் செறுகோல், காராம்ம, வடக்கேமதம் ஆகிய ஊர்களுக்கு வட மலபாரிலிருந்து வந்து தங்கின.

கோயில் தம்புரான்கள் அனைவரும் குருதி உறவுடைய ஒரே குலத்தவராகக் கருதப்படுகின்றனர். பிராமணர்களுள் தாயாதிகள் பிறப்பு இறப்புத் தீட்டினை மேற்கொள்வதைப் போலவே இவர்களும் தங்களுக்குள் தீட்டினை மேற்கொள்கின்றனர். தாய்வழிச் சொத்துரிமையினைப் பேணும் பழக்கத்தை

இவர்கள் மேற்கொண்டுள்ளனர். உணவுப் பழக்கங்களில் நம்பூத்ரிகளைப் பின்பற்றும் இவர்கள் சமயச் சடங்குகளும் நம் பூத்ரிகளுடையவற்றைப் போன்றவையே. நம்பூத்ரி வைதிகர் களே இவர்கள் சாதியின் நடவடிக்கைகளை மேற்பார்ப்ப வர்கள்.

பிராமணர்கள் சமஸ்காரங்களான காடகர்ம, நாமகர்ணம், அன்னபிராசனம் முதலியனவே இவர்கள் மேற்கொள்ளும் சடங்குகள். பெயர் சூட்டும்போது குடும்பத்தில் மூத்த பிள் ளைக்கு எப்பொழும் ராச ராச வர்மா எனப் பெயரிடுதலே வழக்கம். பதினாறு வயதாகும்போது உபநயனச் சடங்கு நடத்தப்படுகின்றது. உபநயனத்தன்று காலையில் மயிர் மழித்த லாகிய சவுளம் சடங்கு நடத்தப்படும். பிராமணர்களிடையே தந்தை தன் மகனுக்கு இச் சடங்கினைச் செய்வது போல இவர்களிடையே நம்பூத்ரி பிராமணனே குரு என்ற முறையில் இச் சடங்கினைச் செய்கின்றான். பின்னர் மயிர் மழித்தலை முடிக்கும் பொறுப்பு மாரானிடம் விடப்படுகிறது. புரோகிதர், சிறுவனுக்குப் பூணூல் அணிவித்து தீ வளர்த்து அதன் முன்னி லையில் காயத்ரி மந்திரத்தை உபதேசிக்கிறார். பிராமணர்க ளைப் போலவே கோயில் தம்புரான்களும் காலை, நண்பகல், மாலை என நாளும் மும்முறை இந்த மந்திரத்தைச் சொல்ல வேண்டுமெனினும் இவர்கள் ஒவ்வொரு வேளையும் இதனைப் பத்து முறை மட்டுமே கூற வேண்டும். சடங்கின் நான்காம் நாள் சிறுவனுக்குப் புரோகிதர் சில வேத வாழ்த்துக்களைச் சொல்லித் தருவார். நம்பூத்ரிகள் சமய ஆர்வத்துடன் பிரமச் சரிய பிராமண நெறியினைப் பின்பற்றுவதுபோல இவர்கள் கண்டிப்புடன் பிரமச்சரியத்தைப் பின்பற்றுவதில்லை. சமா வர்த்தன எனப்படும் மாணாக்கன் ஆக்கும் நிலை பற்றிய சடங்கு பதினைந்தாம் நாள் நிகழ்த்தப்படுகிறது. அதன்பின் காசிக்குச் செல்லுவதான சடங்கு நிகழ்த்தப்படும். பிராமணர் களிடையே நடப்பதைப் போலவே அந்தச் சிறுவனுக்கு மாமனா ராக வர உள்ளவர் அவனைத் தடுத்து அழைத்துத் தன் மகளை வாழ்த்தி, அவளோடு கிரகஸ்தத்தில் நிலைக்குமாறு வேண்டு வார். நம்பூத்ரி புரோகிதர் அப்போது குறுக்கிட்டு அச்சிறுவனுக்

கிரகஸ்தனுடைய கடமைகளை அறிவுறுத்துவதோடு அவன் சமூகப் பொறுப்பினை உணர்த்தும் வகையில் அவனுக்கு ஒரு வாளினையும் அளிப்பார்.

கோயில் தம்புரான்களின் திருமண நிகழ்ச்சிகள் தனித்த தன்மையுடையன அல்ல. தீக்ச விரிப்பு எனபபடும் ஒரு நிகழ்ச்சி வேண்டுமாயின் குறிப்பிடத்தக்கதாகலாம். மணச் சடங்குகள் நிகழும் நான்கு நாள்களும் வெள்ளைத் துணி ஒன்றின்மீது கம்பளம் விரிக்கப்பட்டுளள ஒரு தனித்த அறையில் மணமகள் இருத்தப்படுவாள். அங்கு இரவு பகலாக விளக்கு ஒன்று எரிந்த படி இருக்கும். சடங்கில் மணமகனாக இருப்பவன் ஓர் ஆர்ய பட்டராகவோ நம்பூத்ரியாகவோ இருப்பர். தற்போது நம்பூத்ரிகளே பெரிதும் இப்பொறுப்பினை ஏற்கின்றனர். இத்திருமணம் வெறும் சடங்குத் திருமணமே. இந்த மணத்தின்போது மணமகனாக இருப்பவன் வாழ்க்கையிலும் துணைவனாக இருக்க வேண்டுமென்ற கட்டாயம் ஏதும் இல்லை. அவன் இறப்பானாகில் இவள் தாலியினை அறுத்துக் கொண்ட அமங்கலியாகச் சமூக நல நிகழ்ச்சிகளில் ஒதுங்கி இருக்க வேண்டியவளாகின்றாள். இறந்தவர்களுக்காகச் செய்யப்படும் சிரார்த்தத்தில் தம்புராட்டி தனக்குத் தாலி கட்டிய கணவனுடன் கிழக்கு நோக்கியவளாக அமர்ந்து கருமங்களைச் செய்வாள். தாலிகட்டிய கணவனை இழந்த ஒருத்தி எமனுடைய திசையாகிய தெற்குத் திசையினைப் பார்தது அமர்ந்து கருமத்தைச் செய்ய வேண்டும்.

அண்மையில் உயிர் நீத்த ஓவியரான திரு ரவிவர்மா கிளிமானூரைச் சேர்ந்த கோயில் தம்புரானாவார். அரசு தொல்லைக்கு உள்ளான சமயங்களில் இவருடைய முன்னோர்கள் அரசுக்கு ஆற்றிய படைப்பணியினைக் கருதிப் பெரிய கிராமமான கிளிமானூர் அவர்களுக்கு மானியமாக வழங்கப்பட்டது.*

---

* பார்க்க : ரவி வர்மா, இந்திய ஓவியர், இந்தியன் பிரஸ், அலகாபாத். (See : Ravi Varma, the Indian Artist. Indian Press, Allahabad.)

**கோக்ல - Kōkala (woman's cloth)**

கோல்லர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். பெண்களின் உடை எனப் பொருள்படும்.

**கொக்கரர் - Kokkara**

திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் நாயர் களின் ஓர் உட்பிரிவு எனப் பதியப்பட்டுள்ளது.

**கொக்குண்டிய - Kokkundia**

பார்க்க : குக்குண்டி. (See : Kukkundi.)

**கோல - Kōla (ear of corn)**

மேதரரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம்.

**கோலாரி - Kōlāri**

பார்க்க : கோலாயன். (See : Kōlayān.)

**கொலாலு - Kolālo (arrack seller)**

சொண்டியருக்கான மற்றுமொரு பெயர்.

**கொலட குடியர் - Kolata Gudia**

பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ள குடியருக்கான ஒரு பெயர்.

**கோலாயன் - Kōlayān**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் இச் சாதியினர் பற்றிப் பதியப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:– "இச் சாதியினர் தென் கன்னட மாவட்டத்தின் காசர்கோடு வட்டத்திலும் மலபாரின் வடக்குப் பகுதியிலுமே சிறப்பாகக் காணப்படுகின்றனர். தென் மலபாரில் இச்சாதி ஊராளி என அழைக்கப்படுகின்றது. இச் சாதியாரின் பரம்பரைத் தொழில் பசுக்களை மேய்த்தலே. சில இந்துக் கோயில்களுக்குப் பாலும் நெய்யும கொடுக்கும் உரிமையைத் தாங்கள் பெற்றிருப்பதாக

இவர்கள் கூறுகின்றனர். இன்று இச் சாதியினைச் சேர்ந்தவர்களில் பெரும்பாலோர் கொத்தன்களாக உள்ளனர். ஆயன் அல்லது கோலாயன், மாரியன் அல்லது எருமான் என்ற பெயர்களுடைய இரு அகமணக்கட்டுப்பாடு உடைய குலப்பிரிவுகள் இச்சாதியில் உள்ளன." அதே குறிப்பில் எருமான் என்ற தலைப்பின் கீழ்த் தரப்பட்டுள செய்திகள் வருமாறு:- "இச்சாதியைச் சேர்ந்தவர் எருமைகளை ஓட்டிச் சென்று மேய்ப்பவர்களும் எருமை வளர்ப்பவர்களும் ஆவர். இன்றும் அவர்கள் தென் கன்னடத்தைச் சேர்ந்த காசர்கோடு வட்டத்தில் தங்கள் பரம்பரைத் தொழிலைச் செய்து வருகின்றனர். வட மலபாரில் இவர்கள் கொத்தன்களாகவும் செங்கல் கட்டிட வேலை பார்ப்போராகவும் பணி செய்கின்றனர்." கோயில்கள் தொடர்பான கட்டிடப் பணிகளைக் கோலாயன்களே செய்து வருகின்றனர்.

கோலாயன் என்ற சொல் கொல்ல, ஆயன் என்ற இரு சொற்கள் இணைந்து அமைந்து மாடு மேய்ப்பவர் என்ற பொருளைத் தருவது எனக் கூறுவர். எனினும் கொல்ல என்ற தெலுங்குச் சொல் மலையாள நாட்டில் வழக்கில் இல்லை என்பதனைக் கருத்தில் கொள்ள வேண்டும்.

கோலாயன், எருமான் ஆகிய பிரிவினர் தங்களுக்குள் மண உறவு வைத்துக் கொள்வதில்லை. இந்த இரு பிரிவினைச் சேர்ந்த பெண்களும் நாயர்களுடன் சம்பந்தம் வைத்துக் கொள்கின்றனர். அதன்வழிப் பிறக்கும் பிள்ளைகள் கோலாயன் பெற்றோருக்குப் பிறந்த பிள்ளைகளைவிடத் தாழ்ந்தவர்களாகவே கருதப்படுகின்றனர். அவர்கள் கோயில்களில் பூசை செய்ய அனுமதிக்கப்படுவதில்லை. கோலாயன் சாதிப் பூசாரிகள் மூத்தவன் அல்லது பொதுவன் என அழைக்கப்படுகின்றனர். அரசர்களே இவர்களை இப்பொறுப்புக்கு வழக்கமாகத் தேர்ந்தெடுக்கின்றனர்.

கோலாயன் சாதிச் சிறுமிகளுக்குப் பூப்படையும் முன்பே மங்கலம் எனப்படும் தாலிக்கட்டுச் சடங்கு நிகழ்த்தப்படுகின்றது. கணிசன் குறித்துத் தரும் நல்ல நாளில் அச் சிறுமியினை வீட்டின் நடு அறையில் ஒரு மணைப்பலகையில் அமர்த்தி

அவள் அருகே நான்கு விளக்குகளை ஏற்றி வைப்பர். அவளுடைய தந்தை அவள் தலைமீது அரிசியும் பூவும் தூவிய பின் அவள் கழுத்தில் தாலியினைக் கட்டுவான். அந்தச் சிறுமி யும் வேறு நான்கு சிறுமிகளும் நான்கு பெண்களும் வீட்டின் அந்த நடு அறையிலேயே உணவு கொள்வர். மறுநாள் வாதியன் எனப்படும் பூசாரி நெல், இளநீர், வெற்றிலை பாக்கு ஆகிய வற்றை அப்பெண்ணின் முன் படைப்பான். பூசாரியின் குடும்பத் தைச் சேர்ந்த ஆண்களும் பெண்களும் அன்று காலையிலும் மாலையிலும் அச்சிறுமியின் முன் அரிசி, இளநீர் ஆகியவற்றை ஆரத்தியாகச் சுற்றுவர். இறுதியாக அன்று இரவு நெருங்கும் சமயம் வாதியன் வீட்டைச் சேர்ந்த ஒருத்தி "கொலச்சி, கொலச்சி, கொலச்சி" என மும்முறை உரக்கக் கூவியபடி அரிசியினையும் மற்ற பொருள்களையும் ஆரத்தியாகச் சுற்று வாள். அதன்பின் அச்சிறுமி வீட்டின் நடு அறையிலிருந்து வெளியே செல்ல அனுமதிக்கப்படுகிறாள்.

முதன்முறையாகப் பூப்படையும் ஒருத்தி மூன்று நாள்கள் தீட்டுக்குரியவளாவாள். முதல்நாள் மாற்று எனப்படும் துணி யினை வண்ணாத்தி அவளுக்கு உடுக்கக் கொடுப்பாள். நான் காம் நாள் மலையன் சாதிப் பெண்ணொருத்தி அவளுக்கு அத்தகைய துணியைத் தருவாள்.

இவர்கள் இறந்தவர்களை எரிப்பதே பெருவழக்கு. பன்னி ரண்டாம் நாள் சடங்கு நிகழ்த்தும்வரை நாள்தோறும் இறந்தவரின் ஆவிக்கு வீட்டுக்கு வெளியே அமைக்கப்படும் மேடையில் உறவினர்கள் உணவு படைப்பர். ஐந்தாம் நாள் இறந் தவரின் பங்காளிகள் மீது வாதியன் நீர் தெளித்து அவர்களைத் தீட்டிலிருந்து விடுவிப்பான். பன்னிரண்டாம் நாள் வாதியன் இறந்தவன் உயிர்துறந்த இடத்தில் விபூதியினால் ஓர் உருவம் வரைவான். அதன் அருகே சோறு, காய்கறி ஆகியன படைக்கப் படும். கொள்ளியிட்டவன் அவற்றை இறந்தவனுக்குப் படைத்த பின் தன் மேல் துண்டில் அவற்றைக் கட்டி எடுத்தபடி வீட்டுக்கு வெளியே சென்று அங்கு உணவு படைப்பதற்காக அமைக்கப் பட்ட மேடையினை, அவனுடைய ஒரு கையினை வாதியனும் மற்றொரு கையினை உறவினர்களும் பிடித்துத் தாங்கிக் கொள்ள

கால்களால் உதைத்துத் தள்ளுவான். அவன்கரங்களை அவர்கள் அவ்வாறே தாங்கியபடி இருக்கக் குளத்திற்கோ ஆற்றுக்கோ சென்று குளிப்பான்.

**கோலி - Kōli**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "கோலிகள், தென் கன்னடத்தில் காணப்படும் பம்பாயைச் சேர்ந்த மீனவர்களும் படகு வலிப்பர்களும் ஆவர். கஞ்சம் மாவட்டத்தில் காணப்படும் தாழ்ந்த சாதியினைச் சேர்ந்த வங்காளத்து நெசவாளர்களும் ஆவார்" எனக் கூறப்பட்டுள்ளது. கஞ்சத்தில் உள்ள கோலியரைப் பற்றிக் கேட்டறிந்ததில் தெலுங்கர்களாக ஒரிய மொழி பேசும் இவர்கள் முரட்டுத் துணி நெய்பவர்களாகவும் வியாபாரிகளாகவும் பயிர்த்தொழிலாளராகவும் ஒரிய நாட்டில் தங்கி வாழ்வதாகத் தெரியவருகின்றது. இவர்கள் பேகர போன்ற ஒரியர் பட்டங்களைத் தரிக்கின்றனர். சைவர்களான இவர்கள் தாகுராணி போன்ற கிராம தேவதைகளை வழிபடுகின்றனர். இவர்களில் யாரும் பரமார்த்த வைணவ நெறியினுக்குச் சமய மாற்றம் பெறவில்லை. இவர்கள் சாதிச் சபை, பூப்புச் சடங்கு, சாவுச் சடங்கு ஆகியன ஒரியர் நடைமுறையினைப் பின்பற்றி அமைவன. எனினும் மணச் சடங்குகள் ஒரிய, தெலுங்கு நடைமுறைகளின் கலப்புடையனவாக நிகழ்கின்றன. இவ்வகையில் தெலுங்கர்களைப் போலப் பிரச மரத்தால் (*Streblus asper*) பால்கம்பம் நட்டு அதன் அருகே ஒன்பது வகைத் தானியங்களைப் படைக்கின்றனர். மணமகன் மணமகள் கழுத்தில் தாலி அணிவிக்கின்றான். ஒரியர்களுக்கு உரிய ஹஸ்த கொந்தி என்ற முறையில் மணமக்கள் கரங்கள் இணைக்கப்படுகின்றன.

**கோலியன் - Kōlian**

*1901* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில், "முதலில் பறையர் சாதியினைச் சேர்ந்தவர்களாக இருந்து இன்று பறையர்களோடு உடன் உண்ணுவதையும் மண உறவு கொள்வதையும் கைவிட்டு விட்ட நெசவாளர் சாதியர்" எனக் கோலியர்களைப் பற்றித் தொகுத்துக் கூறப்பட்டுள்ளது.

தஞ்சாவூர், மதுரை மாவட்டங்களில் பெரும் எண்ணிக்கையில் காணப்படும் இவர்கள் பல நாடுகளாகவும் குப்பங்களாகவும் பிரிவுபட்டுள்ளனர். பட்டுக்கோட்டையைச் சேர்ந்த கோலியர் அம்பு நாட்டைச் சேர்ந்தவர்களாக ஐந்து குப்பங்களாக உட்பிரிவுபட்டிருப்பதை எடுத்துக்காட்டாகக் கூறலாம். இச்சாதியார் பலரும் முரட்டுக் காடா நெசவில் ஈடுபட்டவர்களாக இருக்க, சிலர் பயிர்த்தொழிலாளராகவும் பணிபுரிகின்றனர். சில பறையன்கள் சாம்பன் (சிவன்) என்பதனைத் தங்கள் பட்டப்பெயராகக் கொண்டிருப்பதை நோக்க ஈசன் (கடவுள்) என்பது கோலியருக்கு உரிய பட்டப் பெயரெனப் புலனாகின்றது. திருமணத்தின்போது இப்பட்டப் பெயரை இணைத்தே இவர்கள் பெயர் கூறப்பட வேண்டும். பொன்னன் என்ற பெயருடைய ஒருவன் அவன் மணநிகழ்ச்சியின்போது ஈச பொன்னன் என அழைக்கப்படுவான்.

பூப்படையும் சிறுமியருக்கு நடத்தப்படும் சடங்கில் பதினாறாம் நாள் அவள் குளிக்கும்போது தோதகத்தி (*Dalbergia* sp.) மிளாறினால் ஆன ஒரு வளையத்தை ஒரு நாவிதன் தலையிலிருந்து பாதம் வரை மும்முறை அது அவள் உடல்மீது படாதவாறு மேலும் கீழுமாகக் கொண்டு செல்வது குறிப்பிடத்தக்க ஒரு சடங்காகும்.

இவர்களிடையே சின்னக் கல்யாணம், பெரிய கல்யாணம் என இருவகை மணமுறைகள் உள்ளன. அதிகம் பொருட்செலவு செய்ய இயலாதவர்கள் முன்னைய மணமுறையை மேற்கொள்கின்றனர். மணமகனின் உடன்பிறந்தவளை ஒரு நல்ல நாளில் மணமகள் வீட்டுக்கு அனுப்பி வைப்பர். அங்கு அவள் மணமகள் கழுத்தில் தாலி அணிவித்த பின் அவளை மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்வாள். இவ்வாறு மணம் செய்விக்கப்பட்ட பெண்கள் தங்கள் குழந்தைகளின் திருமணத்தில் கலந்து கொள்ளுதல் கூடாது. அந்தப் பெண்களே சடங்கு நிகழ்ச்சிகளை நடத்துபவர்களாக அமைந்தாலன்றி, அவர்களை மலர்களாலும் மாலைகளாலும் அலங்கரிக்கவும் மாட்டார்கள். வழக்கமாகக் குழந்தையின் திருமணத்திற்கு ஒரிரு நாள் முன்னே நடைபெறும் இந்தத் திருமணத்தில் கண

வனும் மனைவியும் மணைப்பலகைகளில் அமர்ந்தபின்பு அவர்களை அலங்கரித்து ஆரத்தி எடுத்தபின் கணவன் மனைவியின் கழுத்தில் தாலியினைக் கட்டுவான்.

பெரிய கல்யாணத்தில் மணமகன் குதிரையின் மேலமர்ந்து மணமகள் இல்லம் செல்வான். அங்கு அவனை மணமகளின் உடன்பிறந்தவன் தானும் குதிரையில் அமர்ந்தவனாக வந்து எதிர்கொள்வான். அவர்கள் மாலை மாற்றிக் கொண்டபின் மணப்பந்தலை நோக்கிச் செல்வர். மணமகன் மணமகள் தந்தையிடமிருந்து ஒரு தேங்காயைப் பெறுவான். மணமகள் ஒரு கட்டிலில் அமர்ந்திருக்க மணமகன் அந்தத் தேங்காயை அவளிடம் தந்தபின் அவளுடைய கழுத்தில் தாலியினைக் கட்டுவான். அதன்பின் அவர்கள் மாலை மாற்றிக் கொண்டு விரல்களைக் கோத்துக் கொள்வர். இவை அனைத்தும் விரைந்தே நடைபெற்றாக வேண்டும். ஒரு வழக்கு மொழிப்படி மணமகன் தான் ஏறியிருக்கும் குதிரையிலிருந்து இறங்காமலேயே மணமகள் கழுத்தில் தாலி கட்ட வேண்டும் என்பது விதி. தாலி கட்டும் முன் மணமக்கள் தலையிலிருந்து கால் வழியாகப் பருத்தி நூலாலான வளையத்தை அது அவர்கள் மீது படாதபடி செலுத்தும் சடங்கிற்கு உள்ளாக வேண்டும். அதன்பின் மணமக்களின் மணிக்கட்டில் கங்கணம் அணிவிக்கப்படும். பந்தலினுள் பால்கம்பம் நட்டு மணத்திற்கான பானைகளை அதனருகே அடுக்குவர். மணமகனும் மணமகளும் அவற்றின் முன் விழுந்து வணங்குவர். அதன்பின் அவர்கள் தாய் மாமன்மார்களையும் பெற்றோரையும் உறவினர்களையும் கும்பிடுவர். இறுதியில் இசைக் கலைஞர்களுக்கும் கும்பிடு போடுவர். அன்றைய சடங்குகள் விருந்தோடு முடிவுறும். விருந்துக்குப் பின் வீட்டுக்குள்ளாகவே கையலம்புவர். அதன்பின் ஆறு நாள்கள் மணமகளும் மணமகனும் மாறிமாறி இருவர் இல்லங்களுக்கும் சென்றபடி இருப்பர். ஏழாம் நாள் அவர்கள் மணிக்கட்டில் உள்ள கங்கணம் அவிழ்க்கப்பட்டபின் பால்கம்பமும் அதனருகே உள்ள பானைகளும் அகற்றப்படும். திருமணத்தின்போதும் மற்ற சுப நிகழ்ச்சிகளின்போதும் வண்ண நீரில் சிவப்பு மஞ்சோரி (*Bauhinia variegata*) யின் இலைகளை இட்டு ஆரத்தி எடுப்பர்.

சடங்கு நிகழ்ச்சிகளின்போதும் வழிபாட்டின்போதும் கோலியன்கள் சைவ சமயச் சின்னமான விபூதியினைத் தரித்துக் கொள்வர். ஐயனார், பட்டவன சுவாமி, பொதியம்மன் ஆகியன இவர்கள் வணங்கும் பிற தெய்வங்கள்.

இவர்கள் இறந்தவர்களை எரிக்கின்றனர். இறந்தவரின் உடலைக் கைவிரல்களையும் கால்விரல்களையும் இணைத்துக் கட்டியபின் உட்கார்ந்த நிலையில் வைப்பர். சுடுகாட்டுக்குச் செல்லும் வழியில் விதவை ஒருத்தி பிணத்தைச் சுற்றி வந்தபின் நீருள்ள ஒரு பானையினை உடைப்பாள். பிணத்தை எரித்த மறுநாள் எரித்த பிணத்தின் எலும்புகளைப் பொறுக்கி ஒரு மனித உருவின் வடிவில் அடுக்கி அதற்கு சோற்றினைப் படைப்பர். சாவுச் சடங்கின் இறுதி நிகழ்ச்சியான கருமாந்திரம் பதினாறாம் நாளன்று நிகழ்த்தப்படும். சமைத்த சோற்றினைப் பெருந்திரளாகக் குவித்து அதன் அருகே காய்கறிகள், இறைச்சி ஆகியவற்றையும் இட்டு இறந்தவரின் உறவினர்கள் கண்ணீர் விட்டழுதபடி அதனைச் சுற்றிவருவர்.

**கொல்லத்துக்காரர் - Kollakar**

இந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் கிட்டத்தட்ட எழுநூறு பேர் கொச்சியில் உள்ளனர். இவர்கள் திருவாங்கூர் மாநிலத்திலுள்ள கொல்லத்திலிருந்து ஓரிரு நூற்றாண்டுகளுக்கு முன் கொச்சிக்கு வந்தவர்கள் எனக் கூறப்படுகிறது. இவர்களுள் பெரும்பாலோர் கப்பல்களில் கூலிகளாகப் பணிபுரிகின்றனர். சிலர் மீனவர்களாகத் தொழில் செய்கின்றனர். இந்த வகுப்பாருள் ஏழ்மை நிறைந்த குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் கயிறு திரித்தல், மீன் விற்றல் ஆகிய தொழில்களைச் செய்து பிழைக்கின்றனர். மற்றவர்கள் சரிகை வேலை செய்கின்றனர். இவர்களுள் சிலர் அரசுப்பணியாளராகவும் உள்ளனர். 1907-இல் இவ் வகுப்பைச் சேர்ந்த இருவர் சென்னைப் பல்கலைக் கழக மெட்ரிகுலேசன் தேர்வில் வெற்றி பெற்றுள்ளனர். ரோமன் கத்தோலிக்க சமயத்தைச் சேர்ந்த இவர்களைப் போர்த்துகீசியரே கிறித்துவர்களாக மதம் மாற்றியவர்கள். இவர்கள் தங்களுக்குள் மட்டுமே மண உறவு மேற்கொள்கின்றனர்.

கள்ளிக்கோட்டை, கண்ணனூர், மாகி, தலைச்சேரி ஆகிய ஊர் களிலும் கொல்லத்துக்காரர் காணப்படுகின்றனர். அங்கெல்லாம் இவர்கள் மீன்பிடித்தல், கயிறு திரித்தல், மீன்பிடி வலைகள் தயாரித்தல் ஆகிய தொழில்களை மேற்கொண்டுள்ளனர். தலைச் சேரியில் ஒரு சிலர் தச்சர்களாகவும், தையல்காரர்களாகவும், பெட்டிக்கடைக்காரர்களாகவும் பணி மேற்கொண்டுள்ளனர்.

## கொல்ல குருப்பு - Kolla Kurup

மலபாரைச் சேர்ந்த கொல்ல குருப்புகள் மலபார் மாவட்ட விவரத் தொகுப்பில் கம்மாளர் சாதியின் உட்பிரிவினைச் சேர்ந்தவர்கள் எனவும் கம்மாளர் சாதியோடு இணைந்த சாதி யினைச் சேர்ந்தவர்கள் எனவும் விளக்கபபட்டுள்ளனர். "மேலோட்டமாகப் பார்க்கும்பொழுது ஒன்றுக்கொன்று சிறிதும் தொடர்பில்லாதனவாகத் தோன்றும் உடலுக்கு எண்ணெய் தேய்த்து நீவுதலும், மலபார் படைவீரர்களுக் கெனவே உரிய தோல் கேடயங்களைத் தயாரித்தலும் ஆகிய இரு தொழில்களை இவர்கள் மேற்கொண்டுள்ளதாகத் தோன்றும். எனினும் இவ்விரு தொழில்களும் உடற்பயிற்சி யினைக் கற்றுத் தரும் களரிகளின் அன்றாடப் பயிற்சி முறை களோடு தொடர்புடையவை. அத்தகைய களரிகளோடு தொடர் புடைய இச்சாதியார் அதனாலேயே பொருத்தமாக அமைந்த குருப்பு என்ற பட்டப்பெயரையும் உடையவர்களாக உள்ளனர்." கொல்ல குருப்புகளிடையே மணமுறிவு உறுதிப்படுத்தப்படப் பின்வரும் சடங்கு ஓர் அடையாளமாக நிகழ்த்தப்படுகிறது. "கணவனும் மனைவியினுடைய உடன்பிறந்தவனும பெண்ணின் பிறந்த வீட்டில் ஏற்றப்பட்ட ஒரு விளக்குக்குக் கிழக்கு மேற்குப் பக்கமாக நிற்பர். கணவன் தன் வேட்டியிலிருந்து ஒரு நூலை எடுத்து அந்த விளக்கருகே சென்று 'இதோ உன் உடன்பிறந்த வளின அச்சாரம்' எனக் கூறியபடி அதனை அறுப்பான்."

## கொல்லன் - Kollan

மலையாளம் கம்மாளருள் இரும்பில் கொல்லு வேலை செய்பவர்கள். "மலபாரைச் சேர்ந்த இவர்களிடையே மற்ற மலபார் கைவினைஞர்களை விடவும் உடன்பிறந்தவர்கள் பலர் ஒருத்தியை மனைவியாகக் கொள்ளும் பழக்கம் மிகுதியும் பெரு

வழக்காக உள்ளது. தீக்கொல்லன், பெருங்கொல்லன், தீப்பெருங் கொல்லன், இரும்புக் கொல்லன் என இவர்கள் பிரிவுபட்டுள் ளனர். கடைச்சல் கொல்லன், தோல் கொல்லன் என்ற பிரிவுகளும் உள்ளன. தொழில் காரணமாகப் பின்னவை இரண்டும் தாழ்ந்த பிரிவுகளாகக் கருதப்படுகின்றன.

கொல்லர் - Kollar

தொட்டியன் சாதியின் ஒரு பிரிவினர். இப் பிரிவினுக்குரிய முழுப்பெயர் எரகொல்லவாரு அல்லது எரகொல்ல தொட்டியர் என்பதாம். கொல்லர் என்பது கோல்லர் என்பதன் சிதைந்த தமிழ் வடிவம், தொட்டியர்கள் தாங்கள் முதலில் கோல்லர் சாதியினைச் சேர்ந்தவர்களாக இருந்ததாகக் கூறிக் கொள் கின்றனர்.

கொள்ளி - Kolli (fire-brand)

நெருப்புக் கொள்ளி எனப் பொருள்படும் இது காட்டுக் குறும்பர்களின் ஓர் உட்பிரிவு ஆகும்.

கொல்லி - Kolli (a hill range, the Kollimalais)

மலையாளிகளின் ஓர் உட்பிரிவு.

கோமாளி - Komali (baffoon)

ஒட்டேக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர்.

கோமணாண்டி - Kōmanāndi

கோவணம் தவிர உடம்பில் வேறு எந்த உடையும் தரித்துக் கொள்ளாமல் திரியும் ஆண்டிகளின் உட்பிரிவினருக்கான பெயர்.

கொமாரொ - Komāro

ஒரிய கொல்லர்களுக்கான பெயர். (பார்க்க: பதோயி.)

கோமட்டி - Kōmati

சென்னை மாநிலத்தில் வணிகத்தை மேற்கொண்டுள்ள சாதியார்களுள் பெரும்பான்மையினராக உள்ள கோமட்டிகள் கிட்டத்தட்ட மாநிலத்தின் எல்லா மாவட்டங்களிலும் காணப்

படுகின்றனர். மைசூர் மாநிலம், பம்பாய் மாநிலம், பேரார், மத்திய மாநிலங்கள் ஆகிய பகுதிகளிலும் வடமேற்கே பரோடா வரை கூடவும் இவர்களைக் காணலாம். சமயநெறி, சமூகப் பழக்க வழக்கங்கள் ஆகியவை தொடர்பான சிறு சிறு நிகழ்ச்சி களில் கூட இவர்களிடையே பெரிய அளவில் வேறுபாடுகள் காணப்படுவதற்குக் காரணம் இவர்கள் இவ்வாறு பரந்துபட் டவர்களாக வாழ்வதேயாம்.

கோமட்டி என்ற பெயருக்குப் பலவகையில் விளக்கங்கள் தரப்படுகினறன. கொ, மதி என்ற சொற்கள் இணைந்து குள்ள நரித் தந்திரம் வாய்ந்தவர்கள் என்ற பொருளில் இச்சொல் வழங்குவதாகச் சிலர் விளக்கம் செய்வர். இது வணிகத்தில் கோமட்டிகள் கையாளும் தந்திரத்தையும் அதன் காரணமாக இவர்கள் தங்கள் வாடிக்கையாளரின் மனக்கசப்புக்கு உள்ளான வர்களாக இருப்பதனையும் குறிப்பதாகும். கோமட்டியின் இரகசியம் எனப் பொருள்படும் 'கோமட்டி குட்டு' என்ற தொடர் அனைவரும் அறிந்த் ஒன்றே. மற்றவர்கள் இதனைக் கௌ , மதி எனப் பிரித்து வைசியருக்கு விதிக்கப்பட்ட நெறிமுறைப்படி பசுவைப் பாதுகாப்பவர் எனப் பொருள் கூறுவர். கோ , மதி என்பதனைப் பசுப் புத்திக்காரர்கள் எனவும் சிலர் பொருள் விளக்கம் செய்வர். கோமட்டிகளின் புனித நூலான கன்யகா புராணத்தின் புதிய பதிப்பில் இவ்வாறே விளக்கம் செய்யப் பட்டுள்ளது. அந்த நூலில் கூறியுள்ளபடி கோமட்டிகள் கடுந் தவம் இயற்றியதால் விண். உலகில் வந்து வாழும்படியாக அழைக்கப்பட்டனர். மண்ணுலகில் அவர்கள் தொடர்ந்து இல்லாது போனது பல பெரிய குழப்பங்களுக்கு இடமளிக்கவே விட்டுணு அவர்களை மனித இனத்தின் நலங்கருதி மண்ணுலகம் திரும்பும்படியாகப் பணித்தார். அவர்களோ அதற்கு உடன்பட மறுத்தனர். அதன்பின் விட்டுணு சிவனிடம் சென்று அவர்களை மண்ணுலகம் செல்லத் தூண்டும்படி கேட்டுக் கொண்டார். சிவன் ஒரு பசுவினைக் கொணர்ந்து கோமட்டிகள் அனைவரை யும் அதன் வலக் காதுக்குள் சென்று புகும்படி ஆணையிட்டார். அங்குச் சென்ற அவர்கள் அழகிய கூட கோபுரங்களோடு கூடிய நகரங்களையும் பெரிய அளவில் அமைந்த கோயில் களையும் மனத்தை மகிழச் செய்யும் சோலைகளையும் கண்டு

அவ்விடத்தில் சென்று தங்கி வாழ அனுமதி வேண்டினர். சிவன் அதற்கு உடன்படவே அவர்கள் விரைந்து அந்தப் புதிய இடம் நோக்கிச் செல்லத் தொடங்கினர். உடனே பெரும் நெருப்புத் தோன்றி அவர்களைச் சுற்றி வளைத்துக் கொண்டது. அஞ்சி நடுங்கிய அவர்கள் தங்களை அத் துன்பத்திலிருந்து மீட்கும்படி சிவனை நோக்கிக் கூக்குரலிட்டனர். அவர்கள் மண்ணுலகம் செல்ல உடன்பட்டால் அவர்களை அத் துன்பத்திலிருந்து காப்பதாகச் சிவன் கூறவே அவர்களும் அதற்கு உடன்பட்டனர். அவர்கள் நெருப்பால் சூழப்பட்டவுடன் எதிர்பாராத தொல்லைக்கு உள்ளாகும் பசு எப்படி அஞ்சி நடுங்குமோ அதுபோல அஞ்சி நடுங்கியதால் அவர்களுக்குச் சிவன் கோமாட்டி என்ற பெயரைத் தந்தான். மேற்கூறிய கதை வழக்குப்படி கோ-மடி என்பதற்கு பசுவிலிருந்து எழுந்து வந்தவர்கள் என்ற விளக்கமும் தரப்படுகின்றன. ஒரு பசு கருவுற்ற ஒருத்தியைக் கொம்பினால் குத்திக் கொன்றபோது அந்த மாட்டுக் கொட்டகையில் இவர்களின் முன்னோர்கள் ஒன்றாகக் கூடியமையால் இவர்களுக்கு இப்பெயர் வந்தது எனவும் கூறுவர். வஞ்சக எண்ணம் உடையவர் என்ற பொருள்கொள்ளக் கோமட்டி என்ற சொல் இலக்கணப்படி இடந்தராது. முதலில் கோமட்டிகள் கோதாவரி நதிக்கரையில் பெரும் எண்ணிக்கையில் வாழ்ந்தனர். இன்றும் அப்பகுதியில் கோமட்டிகள் மிகுதியாகக் காணப்படுகின்றனர். கோதாவரியினை அப் பகுதியில் கௌமதி என்றும் கௌமடி என்றும் வழங்குகின்றனர். கௌமதி என்ற வடசொல் தெலுங்கில் கோமடி எனச் சிதைந்துள்ளது.

கோமட்டிகள் எங்கே வாழ்ந்தாலும் தெலுங்கினையே பேசுவதோடு தங்கள் தாய்மொழி மீது மிகுந்த பற்றுடையவர்களாகவும் உள்ளனர். 'தெலுங்கு எளிமையானது, தமிழ் கடுமையானது' என்ற பொருள்படும்படியான "தெலுங்கு தேட அரவம் அத்துவானம்" என்ற பழமொழியும் இவர்களிடையே வழங்குகினறது. "திராவிட மொழிகளுள் தெலுங்கே இனிமையும் மிகுந்த இசை நயமும் உடையது. தேன் போன்ற இன்னோசையுடைய இது மிகத் தாழ்ந்த பாமரர் வாயிலிருந்து வெளிப்படும் போதுங்கூட ஒலிஇயைபு நயம் வாய்ந்ததாக ஒலிக்கின்றது. இதனைக் கீழ்த்திசை இத்தாலிய மொழி என வழங்குதல்

இவ்வகையில் பொருத்தமானதே" எனத் திரு ஹென்றி மாரிஸ் எழுதியுள்ளார். தங்கள் தாய்மொழி ஒழிந்த பிற மொழிகளைக் கற்றுக் கொள்வதிலும் கோமட்டிகள் திறமையுடையவர்கள். தமிழ், கன்னடம் ஆகியன வழங்கும் மாவட்டங்களில் இவர்கள் அம் மொழிகளில் பேசக் கூடிய ஆற்றல் உடையவர்களாக விளங்குவதோடு பம்பாயில் உள்ளவர்கள் மராத்தியும் பேச வல்லவர்களாக உள்ளனர். கஞ்சம், விசாகப்பட்டினம் முகவர் பகுதிகளில் வாழும் கோமட்டிகள் கோண்ட், சவர ஆகிய மொழிகளைத் திறம்படப் பேசுகின்றனர்.

வணிகச் சாதியாரான கோமட்டிகள் தங்களுக்கென ரகசியமான ஒரு மொழி வழக்கினை மேற்கொண்டவர்களாக உள்ளனர். நாடெங்கும் அது ஒரே மாதிரியாக வழங்கப்பட்டு வருகின்றது. பின்வரும் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளபடி ஒரு காசிலிருந்து ஆயிரம் ரூபாய் வரை எந்தத் தொகையையும் அந்த ரகசிய மொழியில் குறிப்பிட முடியும் என்பதனைத் தெளியலாம். அம் மொழிகளில் ரூபாய் தேளுப்பு என்ற சொல்லால் சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம். தேளுபு என்பது வெள்ளை எனப் பொருள்படும். தமிழ் வணிகச் சாதியார் சிலர் இதனை ஒட்டி ரூபாயினை வெள்ளை என வழங்குகின்றனர்.

**1. காசுப் பட்டியல்**

| | | |
|---|---|---|
| நகிலி படு | 1 | காசு |
| கெடு படு | 2 | ,, |
| கேவு நகிலிபடு | 3 | ,, |
| ரயெம்படு | 4 | ,, |
| ராயம் நகிலிபடு | 5 | ,, |

**2. அணாப் பட்டியல்**

| | | |
|---|---|---|
| தாபி கமனாலு | $\frac{1}{4}$ | அணா |
| நகிலி அணா | $\frac{1}{2}$ | ,, |
| கேவ் அணா | 1 | ,, |
| கேவி நகிலி அணா | $1\frac{1}{2}$ | ,, |
| ராயம் அணாலு | 2 | ,, |
| உட்டுலம் அணாலு | 3 | ,, |
| உட்டுல்ம் நகலி அணாலு | $3\frac{1}{2}$ | ,, |
| குங்கிடு அணாலு | 4 | ,, |
| சூலலு அணாலு | 12 | ,, |

சூலுலு என்ற சொல் சிவபெருமான் கையில் உள்ள திரிசூலத்தைக் குறிப்பதாகும். சில சமயங்களில் இது மூன்று அணாக்களைக் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

3. ரூபாய் பட்டியல்

| | | ரு | | | ரு. |
|---|---|---|---|---|---|
| தாபி | தேளுபு | ¼ | மூலம் | காலாலு | 50 |
| நகிலி | ,, | ½ | தீபணம் | ,, | 60 |
| கே | ,, | 1 | மாரம் | ,, | 70 |
| ராயம் | ,, | 2 | தாமம் | ,, | 80 |
| உத்துலம் | ,, | 3 | நவரம் | ,, | 90 |
| நகிலி | ,, | 3½ | கேசவலு | ,, | 100 |
| பணம் | ,, | 4 | ராயம் | ,, | 200 |
| மூலம் | ,, | 5 | உட்டுலம் | சவலு | 300 |
| தீபம் | ,, | 6 | பணம் | ,, | 400 |
| மாரம் | ,, | 7 | மூலம் | ,, | 500 |
| தாமம் | ,, | 8 | தீபணம் | ,, | 600 |
| நவரம் | ,, | 9 | மாரம் | ,, | 700 |
| காலம் | ,, | 10 | தாமம் | ,, | 800 |
| ராயம் | காலாலு | 20 | நவரம் | ,, | 900 |
| உத்துலம் | ,, | 30 | காலம் | ,, | 1000 |
| பணம் | ,, | 40 | | | |

4. வராகன் (பகோட) பட்டியல்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கே | மகரம் | 1 | தீபணம் | மகரம் | 6 |
| ராயவ் | ,, | 2 | மாரம் | ,, | 7 |
| உட்டுலம் | ,, | 3 | தாமம் | ,, | 9 |
| பணம் | ,, | 4 | நவரம் | ,, | 8 |
| மூலம் | ,, | 5 | காலம் | ,, | 10 |

'நீ 'கால'த்தில் தொடங்கினால் அது 'மூலத்'தில் முடியும் என்பது பொதுவாக வழக்கில் உள்ள ஒரு பழமொழி. ஒரு பொருளைப் பத்து வராகன் என்று விலை சொன்னால் அதனை ஐந்து வராகனுக்கு விற்கலாம் என்பதே இதன் கருத்தாகும். ஒரு கோமட்டி மற்றொருவனிடம் 'தோடு' அல்லது 'தோட்ரா' என்று கூறினால் கேட்கும் விலைக்குக் கொடு என்பது பொருளாகும். விலைக்குக் கேட்பவன் கோமட்

டியாக இருந்து அவனிடம் மற்றொரு கோமட்டி 'தோட்கொ' எனக் கூறினால் விற்பவன் சொல்லும் விலைக்கு வாங்கி விடு என்பது பொருளாகும்.

கோமட்டிகள் சாதி நல்ல கட்டுப்பாட்டுக்குட்பட்டதான அமைப்புடையதாகும். அவர்கள் குடியிருப்பு இருக்கும் இடங்களில் எல்லாம் பெத்த செட்டி என்ற சாதித் தலைவன் இருப்பான். கலிங்கத்துப் பகுதிக் கோமட்டிகளிடையே இவன் பூரி செட்டி அல்லது சேனாபதி என வழங்கப்படுவான். கலிங்கத்துக் கோமட்டிகளிடையே பல ஊர்களுக்கு உரிய தலைவனாகக் குல ராசு அல்லது வைசிய ராசு என்ற தலைவனும் உளன். சாதித் தொடர்பான வழக்குகளில் தண்டத்தொகை விதிக்கவும் சாதிவிலக்கம் செய்யவும் மற்ற நிகழ்ச்சிகளுக்கும் சாதியைச் சேர்ந்தவர்களை ஒன்று கூட்டும் கடமை மும்மடி செட்டியினுடையதே. இவர்களுக்குப் பாஸ்கராச்சாரிய என்ற குல குருவும் உள்ளார். இவர் சமூக வழக்குகளில் தலையிடாது ஆன்மீக நெறியாளராகவே பணியாற்றுகின்றார். கோமட்டிகள் வழக்கு மன்றங்களை வேறு வழியில்லை என்ற நிலையிலேயே நாடிச் செல்வர். மற்றச் சாதியைச் சேர்ந்தவர்கள் கூடத் தங்களிடையே உள்ள வழக்குகளைத் தீர்த்துக்கொள்ள இவர்களை நாடி வருவர். இவர்கள் வழக்குகளுக்குக் கூறும் முடிவுகள் அறிவொடுபட்டன என்பதனை ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். இதுவே மற்றவர்கள் இவர்கள் பால் கொண்டுள்ள நம்பிக்கைக்குச் சான்றாக அமைகின்றது.

கவரர், கலிங்கர் என்ற இரு பெரும் பிரிவுகள் கோமட்டிகள் சாதியில் உள்ளன. கவரர் வடக்கே விசயநகரம் வரை வாழக் காணலாம். அதற்கும் அப்பால் உள்ளவர்கள் கலிங்கரே. கவரர் அல்லது கௌரவர் எனப்படும் பிரிவினர் அவ்வாறு அழைக்கப்படுவதற்குக் காரணம் குலதெய்வமான கன்யகம்மாவினைப் பின் தொடர்ந்து நெருப்புக் குண்டத்தில் இறங்கி நடந்து சாதிக் கௌரவத்தைக் காப்பாற்றியவர்கள் என்பதாலேயேயாம். சிவனின் மனைவியான கௌரியின் மறு அவதாரமான கன்யகம்மாவினை இவர்கள் வழிபடுவதால் இப்பெயர்

பெற்றனர் எனவும் கூறுவர். விசயநகரத்திலிருந்து ஒரிசா வரை பரந்துபட்டுள்ள கலிங்க நாட்டில் (அல்லது கிலிங்) வாழ்பவர்களே கலிங்கக் கோமட்டிகள். விசயநகரத்திற்கு அருகே உள்ள ராமதீர்த்தம் என்ற புண்ணிய நகருக்குத் தெற்கே வந்து தங்கி வாழக் கலிங்கப் பிரிவினர் அனுமதிக்கப் படுவதில்லை. 1794-இல் கடும்போர் நிகழ்ந்து அதன்பின் பாழ் பட்டதான பிம்லிபுரத்திற்கு அருகே உள்ள பத்மனாபம் குன்றி னைச் சார்ந்தே கலிங்கப் பிரிவினரின் முன்னோர் வாழ்ந்தனர். அப்போரில் ஏற்பட்ட இழப்பிற்குப் பின் அது நலம் தருவதல் லாததோர் இடமாகக் கருதப்பட்டது. அப்போதிருந்து அந்தக் குன்றானது கண்ணுக்குப் புலனாகும் தொலைவு வரையான நிலப் பரப்பிலிருந்து கோமட்டிகள் ஒதுங்கி வாழத் தொடங்கி னர். வடக்கே செல்லும்போது முதன்முதல் சிப்புருபள்ளியி லேயே கோமட்டிகளைக் காணலாம். மேலும் வடக்கு நோக்கிச் செல்ல எண்ணிக்கையில் மிகுதியானவர்களைக் காணலாம். கலிங்கக் கோமட்டிகள் தங்களையும் கவரர் கோமுட்டிகள் என்றே கருதுகின்றனர்.

முதலில் வாழ்ந்து வந்த இடத்திலிருந்து குடிபெயர வேண்டி வந்தமையால் தாங்கள் தனிப் பிரிவினராக ஆகிவிட்டதாகக் கலிங்கக் கோமட்டிகள் கருதுகின்றனர். ஊன் உண்பதாகிய தங்கள் பழக்கம் இரு பிரிவினரிடையே உள்ள இடைவெளியினை மேலும் விரிவாக்கிவிட்டதாகக் கலிங்கர் கூறுகின்றனர்.

கலிங்கர் தனித்த ஒரு வரையறைக்குட்பட்ட பிரிவினராக இருக்கக் கவரர் மேலும் மேலும் பல உட்பிரிவினராகப் பிரிவு பட்டுவிட்டனர். கவரரின் உட்பிரிவுகள் வாழும் நிலப்பகுதி, மேற்கொண்டுள்ள தொழில், சார்ந்துள்ள சமயம் ஆகியவற்றுள் ஏதாவது ஒன்றின்பாற்பட்டதாக இருக்கும். இவ் வகையில் இவர்களிடையே பெனுகொண்டா கோமட்டி, வேங்கி நாட்டுக் கோமட்டி எனற பிரிவுகள் அமைந்துள்ளன. இவர்களுள் முன்னவர் கோதாவரி மாவட்டத்தில் உள்ள பெனுகொண்டா வைச் சேர்ந்தவர்கள்; பின்னவர் கிருட்டிணா மாவட்டம் என்று தற்போது வழங்கும் வேங்கிப் பகுதியினைச் சேர்ந்தவர்கள்.

திரிணிகர் அல்லது திரைவர்ணிகரில் (மூன்றாம் சாதி மக்கள்) பெரும்பாலோர் வைணவர்கள். சென்னை நகரில் உள்ள கோமட்டிகளில் பெரும்பாலோர் இப்பிரிவினரே. லிங்கத்ரி கோமட்டிகள் விசாகப்பட்டினம், கோதாவரி, குண்டூர், கிருட்டிணா மாவட்டங்களிலேயே பெரும்பான்மையராக உள்ளனர். இவர்கள் தங்கத்தால் அல்லது வெள்ளியாலான சம்புடத்தில் லிங்கத்தை வைத்து அணிந்திருப்பர். இப்பிரிவுகளோடு கூடச் சைவ, வைணவ, மாத்வ கோமட்டிகள் என்ற பிரிவுகளும் உள்ளன. மாத்வ கோமட்டிகள் பெல்லாரி மாவட்டத்திலேயே பெரும் எண்ணிக்கையினராக உள்ளனர். தொழில் அடிப்படையில் அமைந்த உட்பிரிவுகளுள் நூணே (எண்ணெய்), நேதி (நெய்), தூதி (பருத்தி), உப்பு (உப்பு), கோணே (கோணிப்பை) கந்தல் (கந்தல் துணி) போன்ற பிரிவுகள் குறிப்பிடத்தக்கன. இவற்றுடன் கோமட்டிகளின் குல தெய்வமான கன்யகம்மா தேவியோடு தொன்மையான தொடர்புடையனவான சில பிரிவுகளும் உள்ளன. கன்யகம்மா தேவியோடு நெருப்புக் குண்டத்தில் இறங்கிய பிரிவினர், அவ்வாறு இறங்காது நின்ற பிரிவினர் என இரு பிரிவுகள் உள்ளன. முன்னவர் வேகினர் எனவும் பின்னவர் பேரி எனவும் பெயர் பெற்றுள்ளனர். பேரி என்பது அஞ்சி ஓட்டம் பிடித்தவர்கள் எனப் பொருள்படுவதான போதாரி என்பதன் சிதைந்த வடிவம் எனக் கூறுவர். கவரர் பிரிவைச் சேர்ந்த கோமட்டிகள் அனைவரும் நெருப்புக் குண்டத்தில் இறங்கியவர்களின் வழிவந்தவர்கள். பெல்லாரி மாவட்டத்திலுள்ள சண்டூர் சிற்றரசினைச் சேர்ந்த கோமட்டிகளுள் பெரும்பாலோர் கல்லனகலாத்தவர் பிரிவினைச் சேர்ந்தவர்கள். சாதியைச் சேர்ந்த பெரியவர்கள் நெருப்புக் குண்டத்தில் இறங்கலாமா வேண்டாமா என விவாதித்துக் கொண்டிருந்த போது இவர்கள் பெனுகொண்டாவில் உள்ள கன்யகம்மா கோவிலின வெளிப்புறத்தில் அமைந்துள்ள கல்மண்டபத்தில் சென்று அமர்ந்திருந்தவர்களின் வழிவந்தவர்கள்.

உட்பிரிவுகள பலவும் தங்களுக்குள் கொண்டுள்ள உறவுகள் மிகுந்த வேறுபாடுகளின அடிப்படையில் அமைந்துள்ளன.

மேலோட்டமாகப் பார்த்தால் கவரர்களும் கலிங்கர்களும் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை என்பது புலனாகும். இவ்வாறு இவர்கள் மணஉறவு கொள்ளாதிருப்பதற்கான காரணங்கள் பல சாதி வரலாறு கூறும் புராணப்படி முன்னவர்கள் குலதெய்வத்திற்கான உயிர்த் தியாகம் செய்தவர்கள்; பின்னவர்கள் அவ்வாறு செய்யாதவர்கள். மேலும் முன்னவர் ஊன் உண்ணல், மது அருந்துதல் ஆகிய பழக்கங்களை விலக்கியவர்கள். பின்னவர் அப் பழக்கங்களைக் கைக்கொள்கின்றனர். லிங்கதாரிகளும், சைவர்களும் தங்களுக்குள் மண உறவு கொள்கின்றனர். சைவர்களும் மாத்வர்களும் கூட அதே போலத் தங்களுக்குள் மண உறவு கொள்கின்றனர். கவரர்களும் திரிவர்ணிகளும் தங்களுக்குள் அவ்வப்போது மண உறவு கொண்டாலும் அத்தகைய உறவுகள் பாராட்டி ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. திரிவர்ணிகர்கள் கலிங்கரைப் போலவே ஊன் உண்ணும் பழக்கம் உடையவர்கள். தொழில் அடிப்படையில் அமைந்த உட்பிரிவினர் தங்களுக்குள் மண உறவு கொள்வதோ ஒன்றாக இருந்து உண்பதோ இல்லை. சமூகப் படிநிலையில் கவரர்கள் மிக உயர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர். பேரிகள் தாழ்ந்த படிநிலையில் வைத்து எண்ணப்படுகின்றனர்.

மேற்கூறப்பட்ட உட்பிரிவுகள் கண்டிப்பான புறமணக் கட்டுப்பாட்டினை மேற்கொள்ளும் பல குலப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இவை குலமரபுச் சின்ன நம்பிக்கையின் அடிப்படையில் அமைநதவை என்பதனை அந்த நம்பிக்கைளுள் எஞ்சியுள்ளவை உறுதிப்படுத்துகின்றன. எல்லா உட்பிரிவுகளுள்ளும் இத்தகைய குலப் பிரிவுகள் பலவாக உள்ளன. நூற்றிருபது குலப் பெயர்கள் இதுவரை தொகுக்கப்பட்டுள்ளன. கன்யகம்மாவோடு தீக்குண்டத்தில் இறங்கிய குடும்பங்களின் எண்ணிக்கையினை நூற்றிரண்டு என வரையறைப் படுத்த நீண்ட காலமாக முயறசி செய்து வருகின்றனர். இங்கு அனைத்துக் குலங்களின் பெயர்களையும் தருவது படிப்பவர்களுக்குச் சோர்வு தரும் ஆகையால் ஒரு சில குலங்களின் பெயர்கள் மட்டும் அவற்றினுக்கு உரிய குலமரபுச் சின்னங்களோடு தேர்ந்தெடுத்துத் தரப்படுகின்றன.

| குலப்பெயர் | | குலமரபுச் சின்னம் |
|---|---|---|
| **அ. தாவரங்கள்** | | |
| முனிகுல | — | அகசி (அகத்தி) |
| அமலக அல்லது உசிரி | — | அமலக (நெல்லி) |
| அனுபா அல்லது அனுபால | — | அனுபல (மொச்சை) |
| துளசி அல்லது துளசிஸ்ட | — | துளசி (துளசி) |
| சிண்ட, சிண்டய, ஸ்ரசிண்ட | — | சிண்ட (புளி) |
| வக்கல | — | வக்கலு (பாக்கு) |
| புச்சா | — | புச்சா (பேய்க்குமட்டி) |
| கமலா | — | பத்மா (தாமரை) |
| அரண்ட | — | அரட்டி (வாழை) |
| தோடகுல | — | தோடர (கீரை) |
| உதகுல | — | உத்தரேணி (நாயுருவி) |
| மண்டு | — | மாமதிகாய (மா) |
| திக்சம் | — | திராட்சைபண்டு |
| வெண்கோல | — | வங்காய (கத்திரி) |
| சவுன | — | சாமந்தி (சாமந்தி) |
| **ஆ. விலங்குகள்** | | |
| கோசில, சத்ய கோசில, உத்தம கோசில | — | பசு |
| அஸ்தி | — | யானை |
| எனுப | — | எருமை |
| கோண்ட | — | குதிரை |
| அனந்த | — | நாகம் |
| பிரமத அல்லது பிரமர | — | வண்டு |
| **இ. தேவதைகள்** | | |
| அர்க்க அல்லது சூர்யா | — | சூரியன் |
| சந்திர, சந்திர சிஸ்ட, சுசந்திர அல்லது வண்ணவம்சம் | — | சந்திரன் |

குலமரபுச் சின்னங்கள் கோத்திரம் எனவும் வம்சம் எனவும் குலம் எனவும் பெயர் பெற்றுள்ளன எனக் கூறவேண்டும். இவற்றுள் கோத்திரங்கள் பிராமணர்கள் கோத்திரங்களைப் பார்த்து அப்படியே அமைத்துக் கொள்ளப்பட்டவை. வம்சம் முகவர் பகுதியினைச் சார்ந்த கஞ்சம், விசாகப்பட்டினம், கோதாவரி மாவட்டங்களில் காணப்படும் மூங்கிலினை ஒத்தது. வமசம மூங்கில் எனப் பொருள்படும். இந்த வம்சங்களில் உள்ள குடும்பங்கள் மூங்கிலின் கிளைகளைப் போல எண்ணிறந்தனவாக உளளமையின் இக் குலப் பிரிவுக்கு வம்சம் எனப பெயரமைத்தனர். குலம் எனபது கூட்டம் அல்லது குடும்பம் எனப் பொருள்படுவது. குலமரபுச் சின்னங்களை அப்பெயரில் அமைந்த குலத்தினர் போற்றி வணங்குவதோடு அதுபற்றி அவர்கள் எநத ஒளிவு மறைவும் மேற்கொள்வதில்லை. தாவரங்கள் தொடர்புடைய குலமரபுச் சின்னங்களைத் தீட்டுடையனவாகக் கண்டிப்புடன் விலக்கி வைக்காமல் ஒருவன் பயனபடுத்துவானாகில், அவன் தொடர்ந்து புழு பூச்சிகளாக ஏழு பிறவிகள் எடுக்க வேண்டியிருக்கும் எனக் கூறப்பட்டுள்ளது. இதற்கு ஒரு விதிவிலக்கும் அமைத்துள்ளனர். விலக்கப்பட வேண்டிய தாவரத்திலிருந்து கிடைக்கும் பொருள்களை ஒருவன் உண்ண விரும்பினால் புனித நகரமான காயாவிற்கு ஆண்டுதோறும் பயணம் மேற்கொண்டு அங்கு இந்துக்களுக்கான பலிச் சடங்கினை அந்தக் குலமரபுச் சின்னத்தோடு தொடர்புடைய மூதாதையர்களுக்கு நடத்திய பின் உண்ணலாம.

வேதத்தில் புருஷ சூக்தத்தில் கூறப்பட்ட வைசியர்கள் தாங்களே என அண்மைக் காலமாகக் கோமட்டிகள் கூறி வருகின்றனர். அதற்கேற்ப குலமரபுச் சின்னங்கள் பிராமணர்களுடைய பல கோத்திரங்களின கீழும் வகுத்து அமைக்கப்பட்டு அக் கோத்திரங்களுக்குரிய பிரவரர்கள் ஏத்தப்படுகின்றனர். இந்த அடிப்படையில் முனிகுலமும் மற்ற நான்கு கோத்திரங்களும் மத்கலவ முனிவரின் கோத்திரமாக அமைக்கப்பட்டு அதற்கு உரிய பிரவரர் அந்த ஐந்து குலங்களுக்கும் உரியதாக்கப்பட்டுள்ளனர். இதே போல் வக்கல குலமும் மற்றொரு

குலமும் வவ்ய முனிவரின் கீழ் அமைக்கப்பட்டுள்ளன. கோண்ட குலம் கௌபக முனிவரின் கீழ் அமைக்கப்பட்டுள்ளது. அரடி, அரிசிஸ்ட ஆகிய குலங்களும் வேறு சிலவும் அத்ரி முனிவரின் கீழ் அமைக்கப்பட்டுள்ளன. அனுப குலம் அகத்திய முனிவரின் கீழ் அமைக்கப்பட்டுள்ளது. இப்படியாக இக் குலங்கள் வகுத்து அமைக்கப்பட்டுள்ளன. குலத்தின் குலமரபுப் பெயர்கள் கன்ய கம்மாவினால் தரப்பட்ட ரகசியமான (சங்கேத நாமங்கள்) பெயர்களாம். அவளுக்காகத் தியாகம் செய்தவர்களை மற்றவர் களிலிருந்து வேறுபடுத்தி அறிய இவ்வாறு குலமரபுச் சின்னங் கள் ரகசியமாகத் தரப்பட்டுள்ளன. சாதியைச் சேர்ந்த எல்லா உட்பிரிவுகளும் இந்தக் குலப் பெயர்களைத் தங்களுக் குள் பொதுப்படக் கொண்டுள்ளன.

சென்னை மாநிலத்தின் வட பகுதிகளில் இந்தக் குலங்கள் மேலும் பல இல்லங்களாகப் (இல்லப் பெயர் கொண்டனவாக) பிரிக்கப்பட்டுள்ளன. அத்தகைய இல்லப் பெயர்கள் அக் குடும் பங்களின் மூதாதையருக்கு உரியனவாகவோ அக் குடும்பங்கள் குடிபெயர்ந்து வருமுன் வாழ்ந்து வந்த இடங்களைக் குறிப்பன வாகவோ அமைந்திருக்கும்.

மேநரிகம் வ்ழக்கப்படி ஒரு கோமட்டி தன் தாய்மாமன் மகளை மணக்க உரிமை கொண்டாடலாம்.. இந்த வழக்கம் எவ்வளவு கண்டிப்புடன் இவர்களால் மேற்கொள்ளப்படுகின் றது என்பதனை இவர்கள் சாதிக்கு உரிய புனித நூலான கன்யகா புராணம் உறுதிப்படுத்துகின்றது. வானுலகிலிருந்து இறங்கி வந்த கோமட்டிகள் பதினெட்டு நகரங்களில் (அஷ்ட தச புரங்கள்) குடியேறினர். அந்நகரங்கள் சிவனுடைய ஆணைப் படி விசுவகர்மாவினால் சமைக்கப்பட்டவை. இந்த நகரங்கள் கிழக்கில் கோதாவரி ஆற்றையும் தெற்கில் கடலையும் மேற்கில் கோஷ்டணியையும் வடக்கில் கங்கையுயையும் எல்லையாகக் கொண்ட அறுபத்து நான்கு யோசனை பரப்பளவுடைய பெரு நிலப் பரப்பில் அமைந்துள்ளன எனக் கூறப்படுகின்றது. அவற் றுள் பெனுகொண்டா நகரம் இன்றைய கோதாவரி மாவட் டத்தின் தலைநகரமாக உள்ளது. அந்நகரத்திலேயே நகரீசுவரர்

சாமிக்கும் (சிவனுக்குரியது) சனார்த்தன சாமிக்கும் (விட்டுணு வுக்குரியது) உரிய கோயில்கள் இடம் பெற்றுள்ளன. அந்த நகரின் பெரிய செட்டி குசும சிரேஷ்டி; அவன் மனைவி குசமாம் பாள். அவன் புத்திரகாமேட்டி யாகம் செய்து ஒரு மகனையும் ஒரு மகளையும் பெற்றெடுத்தான். அவன் மகன் விருபாட்சன்; அவன் மகள் வாசவாம்பிக. (வாசவகன்யா, கன்யகம்மா, கன் யக பரமேசுவரி என்றும் இவள் பெயர் வழங்கும்) அந்தச் சிறுமி பேரழகுடையவளாக இருந்தாள். ராசமகேந்திரியி லிருந்து ஆட்சி செய்த சந்திர வம்சத்தைச் சேர்ந்த விசயர்களின் மகனான விட்ணுவர்த்தனன் தன் நாட்டுப் பகுதிகளில் உல்லா சப் பயணம் மேற்கொண்டவனாகப் பெணுகொண்டாப் பகுதி யினைத் தனக்குக் கப்பம் ஏதும் செலுத்தாதவர்களாகச் செட்டி குலத்து அரசர்கள் ஆள்கின்றனர் எனக் கேள்விப்பட்டு அவன் அங்கு வந்து தங்கினான். தங்கள் குல இளைஞர்கள் வழி அவன் வந்து தங்கியுள்ளதைக் கேள்விப்பட்ட செட்டி குலப் பெரியவர்கள், குசும செட்டியின் தலைமையில் சென்று அவனை வரவேற்று நகரின் தெருக்கள் வழியே ஊர்வலமாக அழைத்துச் சென்றனர். அந்த நகரத்தைச் சேர்ந்த பெண்கள் அவனுக்கு ஆரத்தி எடுத்தனர். அவர்களுடன் இருந்த வாசவாம்பிகா வைக் கண்ட அந்த அரசன் உடனே அவள் மீது காதல் கொண்டவனானான். அவன் அவளுடைய தந்தையிடம் அவ ளைத் தனக்கு மணம் முடித்துக் கொடுத்து அதற்கு ஈடாகத் தன் நாட்டில் பாதியினைப் பரிசாகப் பெற்றுக் கொள்ளும்படி கூறினான். குசுமசிரேஷ்டன் அத்தகைய மணத்தினைச் சாத்தி ரங்கள் அனுமதிப்பதில்லை எனக் கூறி மறுத்தான். அரசன் தன் அமைச்சர்கள் வாயிலாகத் தான் அவனுடைய நகரத் தைச் சூறையாடுவதோடு அவனை அவனுடைய செல்வங்க ளோடு சிறைப்பிடித்துக்கொண்டு, அவன் மகளையும் தூக்கிச் சென்று மணந்துகொள்ளப் போவதாகச் செய்தி அனுப்பி அச் சுறுத்தினான். செட்டிகளின் தலைவனும் அவனைச் சேர்ந்த வர்களும் அது பற்றிச் சிந்திக்கக் காலக்கெடு கேட்டு விடை பெற்றுத் திரும்பினர். பின்னர் சாதித் தலைவன் சாதியைச் சேர்ந்தவர்களின் கூட்டத்தைக் கூட்டினான். அதில் அந்தச் சிறுமியை அரசனுக்கு மணம் முடித்துத் தரப் போவதாக

ஒப்புக்கு உறுதி அளித்து அவனுக்கு ஒரு விருந்து கொடுத்துச் சில மாதங்களுக்குப் பின் பெனுகொண்டாவிற்கு மணம் செய்து கொள்ள வரும்படி கூறி அனுப்பி வைப்பது என முடிவு செய்தனர். இதற்கிடையே நகரைச் சேர்ந்த இளைஞர்கள் கூடி அரசனுக்கு விருந்து கொடுக்கக் கூடாது என முடிவு செய்தனர். அவர்கள் தங்கள் முடிவினைப் பெரியவர்களிடம் தெரிவித்ததோடு அரசனை அத்தகைய விருந்தின்றி நகரைவிட்டு வெளியேற்றும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டனர். அவர்கள் அரசனிடம் அச் சிறுமியை அவனுக்குத் தாங்கள் மணம் முடித்து வைக்கவில்லையாயின் தங்கள் உயிரை விட்டுவிடப் போவதாகக் கூறி அவனை விருந்தின்றியே திரும்பிப் போகும்படி செய்தனர். இதனால் திருப்தியுற்ற அரசன் தன் தலைநகருக்குத் திரும்பினான். குசும செட்டி பதினெட்டுப் பேரூர்களையும் சேர்ந்த சாதியார்களை ஒன்று கூட்டினான். அக் கூட்டத்தில் பற்பல கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. அச் சிறுமியினை அந்த அரசனுக்கு மணம் செய்விக்கக் கூடாதென்பதும், அவன் அவளை மணக்க வருவானாயின் அவனைத் துரத்த வேண்டும் என்பதும் ஒரு சாரார் கருத்து. அச் சிறுமியை அரசனுக்கு மண முடித்துக் கொடுப்பதே தங்களை அழிவிலிருந்து காத்துக் கொள்ளும் வழி என்பது மற்றுமொரு கருத்து. மற்றும் சிலர் அச் சிறுமியை ஒளித்து வைத்து அவளுக்குப் பதிலாக வேறொருத்தியை அரசனுக்கு மணமுடிக்கலாம் எனவும் அல்லது அமைச்சர்களுக்குக் கையூட்டுக் கொடுத்து அரசனுடைய இந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளும்படி தூண்டலாம் எனவும் கூறினர். இத்திட்டங்களுள் இறுதியில் கூறிய திட்டத்தை மேற்கொள்வது என முடிவு செய்து அதனை நிறைவேற்றப் பேச்சுவார்த்தை நடத்தச் சில பெரியவர்கள் ராசமகேந்திரத்திற்கு அனுப்பப்பட்டனர். அவர்கள் அங்குச் சென்று முதலில் அச் சிறுமியை அரசனுக்கு மணமுடித்துத் தரத் தாங்கள் ஒப்புக்கொண்டது அரசனுடைய கோபத்திற்கு ஆளாக வேண்டி வருமே என்ற அச்சத்தினாலேயே என்றும், மேநரிக மரபுக்குட் புறம்பாகத் தாங்கள் அச்சிறுமியினை அரசனுக்கு மணம் செய்விக்க இயலாது என்றும் எடுத்துக் கூறினர். இதனால் சினங்கொண்ட மன்னன் படை வீரர்களைப் பதினெட்டுப்

பேரூர்களுக்கும் சென்று உடனே அவற்றை முற்றுகை இட்டு, அதில் வாழ்பவர்களைச் சிறையில் தள்ளி அச் சிறுமியினைப் பல்லக்கில் வைத்து அழைத்துவரும்படி ஆணையிட்டான். இதனைக் கேட்ட தூது சென்றவர்கள் அமைச்சர்களுக்கு நிறையக் கையூட்டுத் தந்து படைவீரர்களைத் தங்கள் பேரூரின் மீது அனுப்ப வேண்டாம் எனக் கெஞ்சி கேட்டுக் கொண்டனர். எனினும் அமைச்சர்கள் வேண்டுகோளுக்கும் மன்னன் செவிசாய்க்கவில்லை. படைகள் பெனுகொண்ட நோக்கிப் புறப்பட்டன. தூதுவர்கள் திரும்பி வந்து காரியம் கைகூடவில்லை என்பதனை வருத்தத்துடன் தெரிவித்தனர். சாதியின் குருவாகிய பாஸ்கராச்சாரியாரின் வேண்டுகோளின் படி மீண்டும் சாதியைச் சேர்ந்தவர்களின் கூட்டம் கூட்டப்பட்டு அதில் சாதியின் மரபான மேநரிகத்தை தொடர்ந்து கடைப் பிடிக்க விரும்புபவர்கள் குண்டம் வெட்டி நெருப்பு மூட்டி அதில் விழுந்து சாக முன் வருவதாக முடிவு செய்தனர். பெரும் பாலோர் இம் முடிவின்படி நடக்க அஞ்சி ஓடிவிட்டனர். நெருப்புக் குண்டத்தில் வீழ்ந்து உயிர்த் தியாகம் செய்ய முன் வந்த 102 கோத்திரங்களைச் சேர்ந்தவர்களும் ஒன்றுகூடி குசும சிரேஷ்டியிடம் சென்று அப்பொழுது ஏழு வயதினளாக இருந்த அவளுடைய மகளையும் தங்களோடு நெருப்புக் குண்டத்தில் விழுந்து உயிர்விட முன்வரும்படி அறிவுறுத்த வேண்டினர். இதற்கு உடன்பட்ட அவள் பரமசிவனின் மனைவியான தன்னுடைய உண்மை உருவத்தில் பரமேசுவரியாக அவர்களுக் குக் காட்சி தந்தாள். இதனை அறிந்த பின் செட்டிகளின தலைவன் தன் சாதியாரிடம் அவளது உடன்பாட்டினைத் தெரி வித்தான். அவர்கள் அந்த அரசன் தங்கள் நகருக்கு வந்து சேருமுன் நகரின் மேற்குப் பக்கத்தில் 103 நெருப்புக் குண்டங் கள் அமைக்கும்படி அவனிடம் கேட்டுக் கொண்டனர். அவ் வாறே குழிகள் தோண்டப்பட்டு நான்கு மூலைகளும் தோரணங் களாலும் வாழை மரங்களாலும் அவை அலங்கரிக்கப்பட்டன. அதன் பின் 102 கோத்திரங்களின் தலைவர்களும் தங்கள் மனைவியருடன் நகரேசுவரசாமி கோவிலின் வாயிலில் வந்து கூடினர். அங்கே வாசவாம்பிகா உருவகமாக் தெய்வத்திற்குத் திருமணம் செய்விக்கப்பட்டதாகக் கருதப்பட்டது. கோத்திரத

தலைவர்கள் அதன்பின் வீர கங்கணம் அணிந்து ஊர்வலமாக வாசவாம்பிகாவுடன் நெருப்புக் குண்டங்களை நோக்கிச் சென்றனர். அங்கு அவர்கள் தங்கள் குழந்தைகளுக்குப் பின்வரும் அறிவுரைகளைக் கூறினர். 'வோலி' எனப்படும் பரிசப் பணத்தை இனிப் பெண்களைத் திருமணம் செய்து தரும்போது வாங்குதல் கூடாது. பெண்களிடம் ரகசியம் ஏதும் சொல்லக் கூடாது. கர்ணம், ஆட்சித் தலைவர், கடவுள் நம்பிக்கையற்றோர், பழிப்புக்கு ஆளானோர் ஆகியவர்களை வீட்டினுள் சேர்த்துக் கொள்ளுதல் கூடாது. பெண்ணின் அத்தை மகன்கள் கறுப்பு நிறத்தவராக, அழகற்றவராக, ஒரு கண் குருடுபட்டவராக, அறிவற்ற மூடராக, கெட்ட பழக்க வழக்கங்களை உடையவர்களாக இருந்தாலும் பெண்ணை அவர்களுக்கே மணம் முடித்துத் தர வேண்டும். அவர்கள் சாதகம் பொருந்தவில்லையாயினும் அதனைப் பொருட்படுத்த வேண்டியதில்லை. சகுனம் தட்டினாலும் அதனைக் கருத்தில் கொள்ளாமல் மணம் செய்விக்கலாம். இவ்வாறு செய்யத் தவறுவீர்களாயின் உங்கள் செல்வத்தை நீங்கள் இழக்க வேண்டிவரும். உங்கள் குடும்பங்களைக் கேடு சூழும். சாதியாருக்குச் சாதியின் கடமைகளிலிருந்து வழுவுபவர்களைச் சாதியினை விட்டு விலக்கி ஊரெல்லைக்கு வெளியே அனுப்ப அதிகாரம் வழங்கப்படுகிறது. அவர்கள் பின்னர் தங்கள் குற்றத்திற்கு வருத்தம் தெரிவிப்பார்களாயின் அவர்களை ஆறு மாதங்களுக்குப் பின் காசிக்கு அனுப்பி வைத்துக் கங்கையில் மூழ்கச் செய்து, பின்னர் தங்கள் இல்லத்தில் நுழைய அனுமதிக்கலாம். காசியில் அவர்கள் தங்கள் தவறுக்கு வாய்விட்டு மன்னிப்புக் கேட்பதோடு ஒரு நாள் முழுதும் விரதம் இருந்து, பிராமணர்களுக்கு அன்னதானம் செய்வதோடு முந்நூறு பசுக்களையும் கொடுத்து இரவில் மகாபாரதக் கதையினையும் கேட்டுப் பரிகாரம் தேடிக் கொள்ள உரியவர்கள். அதற்கு மறுநாள் அவர்கள் மறுபடியும் விரதம் இருந்து பிராமணர்களுக்கு அன்னதானம் செய்வதோடு இருநூறு பசுக்களையும் கொடுத்து இரவில் இராமாயணக் கதையினைக் கேட்க வேண்டும். மூன்றாம் நாள் அவர்கள் மீண்டும் விரதம் மேற்கொண்டு நூறு பசுக்களைத் தானம் செய்து இரவில் பாகவதம் கேட்க வேண்டும். நான்காம் நாள் மீண்டும் பிராமணர்களுக்கு

அன்னதானம் செய்து பெனுகொண்டாவிலுள்ள நகரேசுவர சாமியினை வழிபட்டு மேநரிகு விதியினை மீறிய பாவத்தைப் போக்கிக் கொள்ளக் கடமைப்பட்டவர்கள். இவ்வாறு அத்தை மகனுக்குத் தன் மகளை மணம் செய்து வைக்காமல் இருப்பது சாதிக் குற்றமாக இருப்பினும் அந்த அத்தை மகன் இரு கண் களும் பார்வையற்றவனாகவோ செவிடனாகவோ புத்தி தெளி வற்றவனாகவோ தீராத நோயுடையவனாகவோ அலியா கவோ திருடனாகவோ முழுமுடனாகவோ தொழுநோயா ளனாகவோ குள்ளனாகவோ கெட்ட ஒழுக்கமுடையவனா கவோ கிழவனாகவோ பெண்ணைவிட வயதுகுறைந்த சிறு வனாகவோ இருந்தால் மேநரிக வழக்கப்படி அவர்கள் தங்கள் மகளை அவர்களுடைய அத்தை மகனுக்குக் கட்டிவைக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. மண நிகழ்ச்சிகளின் போது ராசமகேந்திரத்திற்குத் தூதுவராகச் சென்ற குடும் பங்களின் பரம்பரையில் வந்தவர்களும், அரசனுக்குப் போக்குக் காட்டி விருந்து தராமலேயே அவனைத் திருப்பி அனுப்பிய இளைஞர்களின் பரம்பரையில் வந்தவர்களும் சிறப்பு செய்யப் படுவதற்குரியவர்கள். மேற்கண்ட அறிவுரைகளை வழங்கிய பின் கோத்திரத் தலைவர்கள் பிராமணர்களுக்குத் தானங்களை வழங்கி வாசவாம்பிகையினை நெருப்புக் குண்டத்தில் இறங்கும் படி வேண்டினர். அவளும் தன்னுடைய உண்மை வடிவமான பரமேசுவரியின் கோலத்தில் நெருப்புக் குண்டத்தில் விழுமுன் தன்னோடு விழ வந்துள்ளவர்களை வாழ்த்தியதோடு, அச் செயலுக்கு அஞ்சியோடியவர்களைச் சாதியுங்கெட்டுப் பேரு மின்றிப் போவார்கள் எனச் சபித்தாள். விஷ்ணு வர்த்தன மன்னன் பெனுகொண்டாவில் வந்து நுழைந்ததும் அவன் தலை உடலிலிருந்து அற்றுவிழும் எனச் சாபமும் தந்தாள். இறுதியாக அவள் பிரமனிடம் அச்சாதியில் அழகிய பெண் களைப் படைக்க வேண்டாம் எனவும் அச்சாதியில் வருங்காலத் தில் குள்ள உருவமும் கோணல் வாயும் குட்டைக் கால்களும் அகன்ற காதுகளும் வளைந்த கைகளும் சிவந்த கூந்தலும் குழி விழுந்த கண்களும் பிதுங்கிய விழிகளும் பைத்தியப் பார் வையும் தடித்த மூக்கும் அகன்ற மூக்குப் புழையும் மயிரடர்ந்த உடலும் கறுத்த தோலும் நீண்ட பற்களும் உடைய பெண்களே

பிறக்க வேண்டும் எனவும் வேண்டிக் கொண்டாள். அதன் பின் அவள் தனக்கென அமைந்த நெருப்புக் குண்டத்தில் பாய 102 கோத்திரத் தலைவர்களும் தங்கள் மனைவியருடன் அவரவர்களுக்குரிய தீக்குண்டத்தில் பாய்ந்து அனைவரும் சாம்பலாயினர். மறுநாள் காலை விஷ்ணுவர்த்தனன் ராசமகேந்திரத்திலிருந்து பெனுகொண்டாவிற்குத் தன் பயணத்தைத் தொடங்கினான். பிராமணர்கள் தீங்கு நிகழ்வதற்கான நிமித்தங்கள் தோன்றுவதாகக் கூறினர். அவன் வாழ்நாள் முடிவுறும் என அசரீரி கூறியது. கெட்ட தேவதை ஒன்று அவன் வழியில் குறுக்கிட்டது. குருதி மழை கொட்டியது. வீரர்கள் இடிதாக்குண்டனர். வரும் தீங்கினை உணர்த்தும் கெட்ட நிமித்தங்கள் பல தோன்றின. பெனுகொண்டாவினை அடைந்த விஷ்ணுவர்த்தனனிடம் கோமட்டி சாதியினரும் வாசவாம்பிகாவும் நெருப்புக் குண்டத்தில் வீழ்ந்து இறந்த செய்தி தெரிவிக்கப்பட்டது. இச் செய்தி கேட்டு அதிர்ச்சியுற்ற அவன் தனது யானையிலிருந்தும் விழுந்து தலை வேறு உடல் வேறானதுடன் அவன் உடல் ஆயிரம் துண்டங்களாகவும் ஆனது. உருக்குலைந்த அந்த உடலினை ராசமகேந்திரம் எடுத்துச் சென்றனர். அவனுடைய மகன் ராச நரேந்திரன் அதனை எரியூட்டினான். அதன் பின் அவன் பெனுகொண்டாவில் வாழ்ந்தவர்களுக்கு ஆறுதல் கூறி குசும செட்டியின் மகன் விருபாட்சனை நகரங்களுக்குரிய பெத்த செட்டியாக நியமித்தான். 102 குடும்பத்தவர்களும் இறந்தவர்களுக்கான ஈமச் சடங்குகளைச் செய்ததோடு காசி, இராமேசுவரம் ஆகிய இடங்களுக்கும் பயணம் மேற்கொண்டு திரும்பிப் பெனுகொண்டாவில் வாசவாம்பிகாவைச் சிறப்பிக்க ஒரு கோயிலையும் கட்டி, அதில் அவள் நினைவாகச் சிலையமைத்து அதனை வழிபட்டுவரலாயினர்.

புராணத்திலிருந்து எடுத்து மேலே கூறப்பட்ட கதையின் பல்வேறு வடிவங்கள் தென்னிந்தியா முழுவதும் கோமட்டிகள் வாழும் பகுதிகளில் பெருவழக்கினவாக உள்ளன. அவ்வடிவங்களுள் ஒன்றினை மேற்றிராணியார் வைட்ஹெட் அவர்கள் பின்வருமாறு எடுத்துக் கூறியுள்ளார்:-* "தங்களை

---

* சென்னை அருங்காட்சியக மடல், V, 3, 1907. (Bishop Whitehead - Madras Museum Bull., V. 3. 1907.)

வைசியர் எனக் கூறிக்கொள்ளும் கோமட்டிகளுக்கும் மிலேச்சர் களுக்கும் இடையே முன்பு பெரும் பகையிருந்ததாகக் கதைப் படி தெரிய வருகின்றது. இப் போரில் கோமட்டிகள் தோல்வி யுற்று வீழ்ச்சியுறும் நிலையினை அடைந்தபோது அவர்கள் சிவனின் மனைவியாகிய பார்வதியிடம் தங்களுக்கு வந்து உத வும்படி முறையிட்டனர். அச்சமயம் பார்வதி கோமட்டிகள் சாதியில் மிக அழகிய ஒரு சிறுமியாகப் பிறக்கும்படி நேரிட்டி ருந்தது. மிலேச்சர்கள் அவளைத் தங்களுள் ஒருவனுக்கு மண முடித்துத் தரவேண்டும் எனக் கேட்க, அதற்குக் கோமட்டிகள் உடன்படவிலலை. இதனால் இவ்விரு சாராருக்குமிடையே கடும்போர் மூண்டது. சிவன் அவர்களுள் ஒருவனாக இப் போது அவதரித்திருந்தமையால் கோமட்டிகள் அப்போரில் பெரும் வெற்றி பெற்றதோடு தங்கள் பகைவர்களை முற்றும் வேரறுத்தனர். இந்த வெற்றிக்குப்பின் கோமட்டிகள் தங்களி டையே அவதரித்துள்ள சிறுமியின் கற்பு நலன் பற்றி ஐயுற்ற வர்களாக அவளை நெருப்பில் பாய்ந்து தூய்மைப்படுத்திக் கொள்ளும்படி வற்புறுத்தினர். அவ்வாறு நெருப்பில் பாய்ந்த அவள் அப்படியே தீயில் மறைந்து போனவளாகித் தன் உண்மை உருவினைத் தாங்கி வானுலகில் சிவனருகே சென்று அமர்ந்தாள். அவள் இறுதியாகக் கோமட்டிகளிடம் அவர்களுடைய குலம் தழைக்க வேண்டுமானால் அவர்கள் தன்னை வழிபட வேண் டும் எனக் கூறிச் சென்றாள்.

புராணக் கதையில் சுட்டப்பட்டுள்ள விஷ்ணுவர்த்தன மன்னன் எந்த மன்னன் என்பதனைக் கண்டறிதல் இயலாது. கீழைச் சாளுக்கியர் வரலாற்றில் பதினொரு மன்னர்கள் அப் பெயருக்கு உரியவர்களாக உள்ளனர். ராசமகேந்திரியினைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட விசயார்க்கன் என்ற மன்ன னின் மகனான விஷ்ணுவர்த்தனையே புராணம் சுட்டுகின்றது. அதே புராணக் கூற்றுப்படி அந்த விஷ்ணுவர்த்தனன் மகன் ராச ராச நரேந்திரன் ஆவான். மெக்கென்சி கையெழுத்துச் சுவடிகளில் கண்டுள்ளபடி ராசமகேந்திரி விசயாதித்ய மகேந்திர என்ற பெயருடைய மனனனால் தோற்றுவிக்கப்பட்ட நகரம் ஆகும். முனைவர் பிளீட் அவர்களின் கருத்துப்படி கி. பி. 891

முதல் 925 வரை அரசாண்ட ஆறாம் விஷ்ணுவர்த்தனனே முதன்முதல் அந்த நகரில் தங்கி அதற்கு அப்பெயரிட்டவனாதல் வேண்டும். அதனாலேயே அவன் தன்னை ராசமகேந்திரன் என அழைத்துக் கொண்டான். கி. பி. 945 முதல் 970 வரை ஆண்ட இரண்டாம் அம்மாவும் அதே பட்டப்பெயரை உடைய வன். அவனை அடுத்துக் கி. பி. 970 முதல் 973 வரை ஆண்ட வன் அவனது இளவல் தனர்ணயன். அதன்பின் சோழர்களிடம் சாளுக்கிய நாடு முப்பதாண்டுக் காலம் அகப்பட்டுக் கிடந்தபின் தனர்ணயனின் மூத்த மகனான சக்திவர்மன் ஆட்சிக்கு வரு கின்றான். கன்யகா புராணத்தில் கூறப்பட்டுள்ளதை நாம் அப் படியே ஏற்றுக் கொள்வோமானால் இந்தச் சக்தி வர்மனே அப்புராணம் கூறும் விசயர்கள் எனக் கொள்ள வேண்டியவர்க ளாகின்றோம். கல்வெட்டுக்களின்படி சக்திவர்மனை அடுத்து ஆட்சிக்கு வந்தவன் விமலாதித்யன். இவனே புராணம் கூறும் விஷ்ணுவர்த்தனன் எனக் கொள்ள வேண்டியவர்களாகின் றோம். விமலாதித்யன் மகன் எட்டாம் விஷ்ணுவர்த்தனன் எனப் பட்டம் தரித்திருந்தவனான முதலாம் ராச ராசனா வான். தெலுங்கு நாட்டில் வழக்கில் உள்ளதாக மகாபாரத மொழி பெயர்ப்பினை அதன் ஆசிரியரான நன்னய பட்டர் சமர்ப்பித்த பெருமைக்குரியவன் எனக் கருதப்படும் ராச ராச நரேந்திரன் இவனே. இவனே புராணம் கூறும் ராச ராச நரேந்திரன் ஆதலும் கூடும். அவ்வாறாயின் புராணத்தில் கூறப் பட்டுள்ள முக்கிய நிகழ்ச்சிகள் கி. பி. பதினொன்றாம் நூற்றாண் டின் முதற் காலக்கட்டத்தில் நிகழ்ந்தனவாகக் கொள்ள வேண் டும். அந்த நிகழ்ச்சிகள் நடந்த இடங்கள் இவைதாம் என இன்றும் பெனுகொண்டா நகரில் குறிப்பிட்ட சில இடங்களைக் காட்டுகின்றனர். இன்று வனம்பள்ளி என்று வழங்கி வரும் கிராமம்தான் அன்று விஷ்ணுவர்த்தனன் வந்து தங்கிய சோலை எனக் கூறுகின்றனர். 63/3 மற்றும் 63/4 'காலை' எண்களைக் கொண்ட நிலங்களில் இன்று தூர்ந்து போய்விட்ட நகர சமுத்திரம ஏரிக்கு வடபால் கன்யகம்மாவிற்கான தீக்குண்டம் தோண்டப்பட்டதென்றும், மற்ற 102 தீக்குண்டங்களும் அந்த ஏரிக்கரையினைச் சுற்றியமைந்துள்ள வயல்களில் தோண்டப் பட்டனவென்றும் கூறுவர். கன்யகம்மா உயிர் துறந்த நெருப்புக்

குண்டத்தில் அவள் உயிர் துறந்த நாளுக்கு மறுநாள் காலை சாம்பலுக்கிடையே அவளுடைய உருவத்தையொத்ததான பொற் சிலை ஒன்று கண்டெடுக்கப்பட்டதாக உள்ளூர்க்காரர்கள் நம் புகின்றனர். அச்சிலை அவள் மணந்து கொண்ட நகரேசுவர் உருவத்தினருகே கொண்டுவைக்கப்பட்டது. நெடுநாள்களுக் குப்பின் அப்பொற்சிலை அங்கிருந்து அகற்றப்பட்டு அதற்குப் பதிலாகக் கற்சிலை ஒன்று வைக்கப்பட்டது. இவ்வாறு மாற்றம் செய்யப்பட்டமைக்குக் காரணம் அந்த ஊரைச் சேர்ந்த ஒருவர் கனவில் கன்யகம்மா தோன்றி அவ்வாறு செய்யப் பணித்தமையாலேயேயாகும்.

நகரேசுவர் கோயிலின் திருச்சுற்றில் பதிக்கப்பட்டுள்ள கற்பலகைகளிலும் பிற விடங்களிலும் பல கல்வெட்டுக்கள் உள்ளன. ஒரு கல்வெட்டு மதிற்சுவரில் உள்ள நுழைவாயிலின் உட்புறம் உள்ளது. அதன் தொடக்கப் பகுதி நகரேசுவர சாமியின் வரமும் பரிசில்களும் தரும் கருணைத் திறனைப் போற்றிப் புகழ்வதோடு பெனுகொண்டா விசுவகர்மாவினால் சமைக்கப்பட்டுச் சிவனால் கோமட்டிகள் தங்கி வாழத் தரப் பட்ட பதினெட்டு நகரங்களுள் ஒன்று என்றும் கூறுகின்றது. இந்தக் கல்வெட்டு கஜபதி மரபு அரசன் ஒருவனால் எரித்துச் சாம்பலாக்கப்பட்ட பெனுகொண்டா நகரினைக் **கோமட்டி** கள் சாதியினைச் சேர்ந்த கொதலிங்க என்பவன் எவ்வாறு மீண்டும் புதுப்பித்தான் என்பதனை விளக்க வெட்டுவிக்கப் பட்டதாகும். அதில் கோமட்டியான கொதலிங்கனின் குலமரபு வழியும் கொடுக்கப்பட்டுள்ளது. அவன் நகரேசுவரசுவாமியின், கோயிலுக்காகக் குளங்கள், கிணறுகள், தோட்டங்கள் ஆகியன அமைத்ததோடு அக்கோயில் தெய்வத்தின் நாட்பூசை திருவிழா ஆகியன நடைபெறமும்முடி,நினகேபூடி,வாரணாசி,காலகவேறு, மதம்பூடி என்ற பெனுகொண்ட நகர எல்லையில் அமைந்த கிராமங்களை இறையிலியாக விட்டுள்ளான். கி. பி. 1488-க்கு முற்பட்டது எனக் கூற இயலாவிடினும் அந்த ஆண்டு முதல் அக்கோயில் கோமட்டிகளின் சிறப்பு வழிபாட்டுக்கு உரியதா யிருந்துள்ளது என்பதனையும் புராணத்தில் கூறப்பட்டுள்ள பல செய்திகளோடு தொடர்புடையனவாயிருந்துள்ளது என்..

தனையும் பல கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. அரசுக் கல்வெட்டாய்வாளரான ராவ் பகதூர் வி. வெங்கய்யா அவர்கள் கோதாவரி மாவட்டத்தில் உள்ள ராமச்சந்திராபுரம் வட்டத்தைச் சேர்ந்தனவாக முனைவர் ஈ. கியுல்ட்ச் வெளியிட்டுள்ள பட்டயங்களில்* கோமட்டிகள் பற்றிய குறிப்புகள் காணப்படுவதாகக் கூறியுள்ளார். முனைவர் கியுல்ட்ச் கூற்றுப் படி அந்த ஆணைகள் கி. பி. 1086 அளவில் பிறப்பிக்கப்பட்டன வாதல் வேண்டும். தெலிகி குடும்பத்தைச் சேர்ந்த சில வணிகர்களுக்கு அவர்கள் சந்ததியினருக்கும் வழங்கப்பட்ட சில சிறப்புச் சலுகைகள் பற்றி அந்தப் பட்டயங்கள் கூறுகின்றன.

தெலுங்கில் பாரதத்தைக் கூட்டாகப் பாடிய திக்கனாவினுடைய மாணவரான மாரண என்ற புலவர் தெலுங்கில் பாடிய மார்க்கண்டேய புராணத்தினைக் கொண்டு நோக்கும் போது கி. பி. பதினான்காம் நூற்றாண்டின் இறுதியிலேயே கன்யகம்மா புராணம் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தது என்பது புலனாகின்றது. அந்தப் புராணத்தில் கன்யகம்மா புராணத்தில் கூறப்பட்டுள்ள கதையோடு பெரிதும் ஒத்தமைகின்ற பின்வரும் கதை இடம்பெற்றுள்ளது. விருட்சத என்ற அரசன் வேட்டைக்குச் சென்றபோது ஒரு பசுவினைக் காட்டெருமை எனத் தவறாகக் கருதிக் கொன்றுவிட்டான். இதனால் அவன் அந்தப் பசுவினுக்குப் பொறுப்பாக இருந்த ஒரு முனிவரின் மகனான பாப்கரவ்ய என்பவனால் சபிக்கப்பட்டு அநங்ககாரன் என்ற பெயருடைய சூத்திரனாயினான். அவனுக்கு ஏழு பிள்ளைகள் இருந்தனர். அவர்களுள் ஒருவன் மகன் நாபாகன். அவன் ஒரு கோமட்டிச் சிறுமியின் மேல் காதல் கொண்டு அவளைத் தனக்கு மணம் செய்து வைக்கும்படி அவளுடைய பெற்றோரிடம் சென்று வேண்டினான். அதற்கு அந்த கோமட்டிகள் கன்யகம்மா புராணத்தில் குசும சிரேஷ்டியும் அவன் நண்பர்களும் விஷ்ணுவர்த்தனன் அமைச்சர்களிடம் உரைத்ததைப் போலவே பதில் உரைக்கின்

* இந்தியக் கல்வெட்டுகள் தொகுதி 6, 1900 – 1901. (Epigraphia Indica, VI, 1900 - 1901.)

றனர். அந்தப் பதில் மார்க்கண்டேய புராணத்தில் ஏழாம் காண்டத்தில் 223-ஆம் பாடலில் இடம் பெற்றிருக்கக் காண லாம். அந்தப் பகுதிலேயே கோமட்டி என்ற சொல் முதன் முதல் இலக்கியத்தில் வழங்கக் காண்கிறோம். அவர் கூறிய பதிலின் கருத்து வருமாறு:- "ஓ! அரசே! நீங்களோ அண்ட முழுவதையும் ஆள்கின்றவர். நாங்கள் தொண்டு செய்து வாழும் ஏழைக் கோமட்டிகள். அப்படியிருக்க நமக்கிடையே எப்படி மண உறவு நிகழ முடியும்?" அந்த அரசனை அவனு டைய தந்தையும் பிராமணர்களும் கோமட்டியின் மகளை மணக்கும் எண்ணத்தைக் கைவிடும்படி கூறினர். ஆனால் அவன் அவர்கள் அறிவுரைக்குச் செவி சாய்க்கவில்லை. அச் சிறுமியைத் தூக்கிச் சென்று இராட்சச மணமுறையில் வலுக் கட்டாயமாக அவன் மணம் புரிந்து கொண்டான். இதனால் மனு நீதிப்படி அவன கோமட்டி ஆயினான். அதன்பின் அவன் தவம் புரிந்து மீண்டும் சத்திரியன் ஆனான். வடமொழி மார்க் கண்டேய புராணத்தில் காணப்படாததான இந்த வரலாறு கன்யகம்மா புராணத்தில் கூறப்பட்டுள்ள வரலாற்றை ஆதார மாகக் கொண்டது எனத் துணிந்து கூறலாம்.

கன்யகா புராணத்தில் கூறப்பட்டுள்ள முக்கிய நிகழ்ச்சிகள் ஏற்றுக் கொள்ளக் கூடிய தகுதிக்கு உரியன என்பதனைத் தெளிவுபடுத்தக்கூடிய மூன்று அடிப்படைக் காரணங்கள் உள் ளன. கோமட்டிகளினுடைய திருமணச் சடங்குகளுள் விஷ்ணு வர்த்தனன் கண்களில் மண்ணைத்தூவி அவனை ஏமாற்றித் திருப்பி அனுப்பிய நிகழ்ச்சிகளின் சில கூறுகள் இடம் பெறு கின்றன. பின்னர் விளக்கப்படவுள்ள பால நகரம் சிறுவர்க ளுக்குச் செய்யப்படும் மரியாதை அதிலொன்றாம். கோமட்டிகள் அல்லலுக்கு உள்ளாகி இருந்ததான அந்தக் காலக்கட்டத்தில் அவர்களுக்கு உதவி புரிந்த சில சாதியினர் இன்று கோமட்டி களிடம் மட்டுமே பிச்சை எடுக்கின்றனர். இவர்கள் மைலாரி யரும் வீரமுஷ்யருமாவர். இவர்களுள் மைலாரிகள் கன்யகம் மாவின் சிலை ஒன்றினைத் தலையில் சுமந்தபடி அவள் கதை யினைப் பாடியபடி கிராமங்களில் சுற்றித் திரிந்து பிச்சை எடுக் கின்றனர். வீரமுஷ்டிகள் மல்லர்கள். இவர்கள் கோமட்டிகளோடு

செய்து கொண்ட உடன்பாட்டின்படி இரண்டாம் முறை விஷ்ணு வர்த்தனன பெனுகொண்டா மீது படையெடுத்து வந்தபோது கோமட்டிகள் திக்குண்டத்தில் பாயும்வரை தங்களுடைய வீர விளையாட்டுக்களைக் காட்டி அவனைத் தடுத்து வைத்திருந்த வர்கள் புக்க கோமட்டிகள். முதலில் புக்கர் கோமட்டிகளாக இருந்தவர்கள்தான் எனக் கூறப்படுகிறது. கன்யகம்மாவோடு நெருப்புக் குண்டத்தில் விழாமல் தங்களால் தயாரிக்கப்பட்ட புக்கதூள், குங்குமப்பூ, குங்குமம் ஆகியவற்றை அவளுக்குத் தந்த னர். அவள் அவர்களை நன்றியுடைய கோமட்டிகளிலிருந்து பிரிந்து அவர்கள் தனக்குத் தந்த பொருள்களை விற்கும் தொழிலை மேற்கொண்டு வாழ வேண்டும் எனப் பணித்தாள். கலிங்கக் கோமட்டிகளும் தங்களோடு இணைந்த ஜக்கல வாண்டுலு எனப்படும் சாதியினை உடையவராயுள்ளனர். இவர்களுக்கும் கவர கோமட்டி இரவலர்களுக்கும் தொடர் பேதும் இல்லை. மூன்றாவதாகப் பிற சாதியாரான தென் ஆர்க்காட்டினைச் சேர்ந்த சமணர், தொட்டியர், காப்பிலியர், பேரிச் செட்டிகள் ஆகிய சாதியைச் சேர்ந்த வர்களைக் கன்யகா புராணத்தில் கூறியபடி அரசர்கள் கொடுந் தண்டனைக்கு உள்ளாக்கியதைப் பார்க்கும்போது இத்தகைய தொரு பழக்கம் நாடெங்கிலும் பெரு வழக்கினதாக இருந்திருக் கின்றது என்பது புலனாகும். கோமட்டிகள் மேநரிகத்தின்படி நடக்க வேண்டி, அரசனுடைய விருப்பத்திலிருந்தும் தப்ப மேற் கொண்ட நடவடிக்கைகளை ஒத்ததான நிகழ்ச்சிகளை விவரிக் கும் இலட்சும்மபட எனும் கதைப்பாடல் இன்றும் வட சர்க்கார் மாவட்டங்களில் பாடப்பட்டு வருகின்றது. தன் உடன்பிறந்த வள் மகனுக்குத் தன்னுடைய மகளை மணம் செய்விக்க உடன் படாதவளான தன் மனைவியினைக் கொன்றவனுடைய வர லாறு அக்கதைப் பாடலில் நிகழ்ச்சிச் சித்திரங்களாக் விவரிக்கப் பட்டுள்ளன. இன்றும் இந்த வழக்கு கோமட்டிகளிடையே மட்டுமல்லாமல் மேநரிகத்தைக் கடைபிடிக்கும் பிற சாதியா ரிடையேயும் மிகுந்த செல்வாக்குப் பெற்றதாகவே உள்ளது. தன் மகளை உடன்பிறந்தவள் மகனுக்கு மணம் செய்விக்க மறுக்கும் ஒருவனைச் சமூகத்தை சேர்ந்தவர்கள் மதிப்பதில்லை. இயல்பா கத் தன் போக்கில் வளரும் ஒரு மரக் கொம்பினை இழுத்து வளைத்துப் போக்கு மாற்றினால் அது வாடிக் காய்ந்து விடுவது

போல இம் மரபுக்கு மாறாக மணம் செய்விக்கப்படுபவர்கள் அவர்கள் குடும்ப நலம் செழிக்காது அழிந்துபடுவர் என விளக்கம் தருகின்றனர். 1839-இல் சென்னை உச்ச நீதி மன்றத்தின் முன்பு ஒருவன், தன் மாமன், அவன் மகளை முறைப்படி தனக்கு மணம் செய்விக்காமல் வேறொருவனுக்கு மணம் முடித்துத் தந்துள்ளான் என வழக்குத் தொடர்ந்துள்ளான் என ஆசிய இதழ் (Asiatic Journal) தெரிவிக்கின்றது. நடுவர்கள் இந்த வழக்கினை வழக்கு மன்றத்திற்கு வெளியே தீர்த்துக் கொள்வதே நலம் எனக் கருத்துத் தெரிவித்துள்ளனர். ஆயினும் வழக்கில் தொடர்புடையவர்கள் முரண்பட்ட நிலைகளை மேற்கொண்டதால் வழக்கினை வழக்கு மன்றமே நடத்தி அவர்களைத் திருப்திப் படுத்த வேண்டியதாயிற்று. வழக்கின் முடிவு என்னவாயிற்று என்பதனைத் தேடி அறிய இயலவில்லை.

கோமட்டிகள் நெடுங்காலமாக மாதிகர்களோடு பலவகைகளில் தொடர்புடையவர்களாக இருந்து வருவதாகக் குறை கூறப்படுகின்றது. "கோமட்டிகள் இத் தொடர்புண்மையை அடியோடு மறுப்பதில்லை. மாதிகர் கோமட்டிகள் ஆதரவில் இருநது வருவதோடு தங்களுக்குத் தொல்லைகள் ஏற்படும்போது கோமட்டிகள் உதவியினை நாடுவதும் அவர்களிடமிருந்து கடன்களும் பிற உதவிகளும் பெற்று வருவதும் உண்மையே. விஷ்ணு வர்த்தனனோ அவனை அடுத்துப் பட்டத்திற்கு வந்த ராச ராச நரேந்திரனோ கோமட்டிகளைக் கொடுந் தண்டனைக்கு உள்ளாக்கியபோது கோமட்டிகள் மாதிகர்களிடம் தஞ்சம புகுந்து தபப நேர்ந்ததே இத்தகைய தொடர்பு தோன்றக காரணம் எனச் சில கோமட்டிகள் விளக்கம் தருகின்றனர். அவ்வாறு தஞ்சம் புகுந்த கோமட்டிகளை மாதிகர் தங்களிடையே சேர்த்துக் கொண்டு மறைத்தும் வைத்தனர். முன்பு இத்தகைய இரக்கம காட்டிய நற்பண்புககு நன்றி பாராட்டும் வகையிலே தான் இன்று கோமட்டிகள் மாதிகர்களுக்குச் சலுகைகள் காட்டுகின்றனர். பிற சாதியினர் கோமட்டிகளுக்கு இட்டு வழங்கும் பட்டப்பெயரான மத்தியான நேரத்து மாதிகர் என்பதனைக் கோமட்டிகள் ஏற்றுக் கொள்வதிலலை. இவ்வாறு வழங்கப்படக் காரணமான பினவரும கதையினைக் கோமட்டிகள் கூறுவர்.

நெடுங்காலத்திற்கு முன் ஒரு கோமட்டி எருமை மாடு ஒன்றினைக் கொன்று தின்றான். அவ்வாறு அவன் கொன்று தின்ற எருமை மாடு ஒரு மாமுனிவரின் மனைவியாவாள். அந்த முனிவர் தியானத்தில் ஆழ்ந்திருக்கும் சமயம் தன் பாதுகாப்பினைக் கருதி அவள் தன்னை அவ்வாறு எருமையாக மாற்றிக் கொண்டிருந்தாள். இதனை அறிந்த முனிவர் அச்சாதியினை இனிமேல் என்றும் அச்சாதியார் மத்தியான மாதிகர்களாக ஆவார்களாக எனச் சாபமிட்டார்" எனத் திரு எப்.ஆர். ஹெமிங்வே கூறியுள்ளார். கோமட்டிகளுக்கும் மாதிகர்களுக்கும் இடையே உள்ள உறவு முதலில் கம்மாளர், அம்பட்டர் போன்ற சாதியார் பறையர், வெட்டியான் போன்ற சாதியர் களோடு கொண்டிருந்த உறவினை ஒத்தாயிருந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் இதனைப் பற்றிக் கற்பனை நலம் வாய்க்கப் பெற்ற சிலர், இதற்கான விளக்கம் காண முயன்று இத்தகைய கதைகளைப் புனைந்திருக்கலாம். இப்படிப்பட்ட கதைகளில் ஒன்று கோமட்டிகளைச் சாதாரண பிராமணன் ஒருவனுக்கும் அழகிய மாதிகர் சாதிப் பெண்ணுக்கும் பிறந்தவனின் வழி வந்தவர்கள் எனக் கூறுகின்றது. இவ்வாறு பிராமணனுக்கும் மாதிகர் பெண்ணுக்கும் பிறந்த பிள்ளைகள், அந்தப் பிராமணன் போக்குவரத்து மிகுந்த காட்டில் வைத்திருந்த மிட்டாய்க் கடையில் அவன் இல்லாத நேரங்களில் வியாபாரத்தைக் கவனிக்கும்போது இனிப்புப் பண்டங்கள் உள்ள தட்டுக் களைக் கையினால் தொட்டுத் தீட்டு உண்டாக்காத வகையில் ஒரு கோலினால் தொட்டுக் காட்டி அவற்றின் விலையினைக் கூறி வந்தனர். இதன் காரணமாகவே கோலால் முட்டிக் காட்டுபவர்கள் என்று பொருள்படும் கோல்முட்டி என்ற பெயர் இச்சாதிக்கு அமைந்ததாகக் கூறுவர். அப்பெயர் காலப் போக்கில் கோமுட்டி என மருவியது. மற்றொரு கதை வழக்கு அந்த மாதிகர் பெண் தன் முதல் பிள்ளையைக் கருவுற்றிருக்கும் போது அவளை ஒரு பசு கொம்பால் குத்திக் கிழித்துவிட அவள் மாட்டுக் கொட்டகையில் அப்பிள்ளையினைப் பெற்றெடுத்தாள். கோ-பசு,முட்டி-முட்டப்பவள் எனவே அவளுடைய பிள்ளைகள் கோமுட்டிகள் என அழைக்கப்படலாயினர் எனக் கூறும். மதுரை மாவட்டத்தில் தொட்டியன் சாதியினைச் சேர்ந்தவர்கள்,

தொட்டியன் சாதிச் சிறுமியர் பூப்படையுங்கால் அவர்களுடைய தீட்டினைப் போக்கச் சக்கிலியர் செய்யும் பணி உதவிக்கு ஈடாகச் சக்கிலியர் குடும்பத்தில் நடைபெறும் திருமணங்களுக்கான செலவுகளை ஏற்றுக் கொள்வதைப் போல முன்பு கோமட்டிகள் தங்கி வாழும் ஊரோடு இணைந்தவர்களாக இருக்கும் மாதிகர்களின் குடும்பங்களில் நிகழும் திருமணச்செலவுகளைக் கோமட்டிகள் ஏற்று வந்துள்ளனர். பின்னர், சில இடங்களில் இந்த வழக்கம் இரண்டுமாதிகர்களின் திருமணச் செலவை மட்டும் ஏற்கும் வழக்கமாக மாறியது.* பின்னர், அதனையும் கைவிட்டுக் கோமட்டிகள் மாதிகர்களைத் தங்கள் திருமணங்களுக்கு அழைக்கும் வழக்கத்தை மேற்கொண்டனர். பதினெட்டாம் நூற்றாண்டில் சென்னை நகரில் கோமட்டிகளின் மண நிகழ்ச்சியில் சத்தமானம் எனப்படும் மாங்கல்யத்தை மணமகள் கழுத்தில் கட்டும்முன் வயதான ஒரு மாதிகன் வாழ்த்தித் தரும் வழக்கு இருந்ததாகத் தெரிகின்றது. மேலும் மணச் சடங்கிற்காக வளர்க்கப்படும் ஓமத்திற்காகத் தீ மூட்டப் பயன்படுத்தும் புனித நெருப்பினை முதலில் ஒரு மாதிகனிடம் தந்து பின்னர் திரும்பப் பெறும் வழக்கமும் இருந்ததாகத் தெரிகின்றது.

வட ஆர்க்காடு மாவட்டத்தில் மேற்கூறிய வழக்கங்களினுடையவும் வேறு இது போன்ற வழக்குகளினுடையவும் அடையாளங்கள் இன்றும் இருந்து வருவதால் மாதிகர்கள் கோமட்டிகள் மீது உரிமை கொண்டாடுவதில் ஓரளவு உண்மை இருப்பது தெளிவாகும். அத்தகைய உரிமை என்ன என்பது தெளிவாகப் புலனாகவில்லை. எனினும் கோமட்டிகளின் திருமணம் ஒன்று மாதிகனுக்குத் திருப்தி தரவில்லையானால் அவன் அந்தத் திருமணத்தினை நிகழ இயலாதபடி தடுத்து விடலாம். மணம் நிகழவுள்ள வீட்டிற்கு அவன் வந்து மணப்பந்தலில் கட்டப்பட்டிருக்கும் வாழை மரங்களின் அடிமரங்களை வெட்டி எடுத்துக் கொண்டு சென்றுவிடுவான். இதே போலக் கம்மாளர்கள், வெட்டியான்களான பறையர்களைத் தங்கள் திருமணத்

---

* மறைத்திரு ஜெ. கெயின், இந்தியத் தொல்லியல், VIII, 1879. (Rev. J. Cain, Ind. Ant., VIII, 1879.)

திற்கு அழைக்காதுவிட்டால் பறையர்கள் மணப்பந்தலில் கட்டப்பட்டிருக்கும் வாழை மரங்களின் அடிமரங்களை வெட்டி எடுத்துக்கொண்டு போய்விடுவர். இவ்வாறு வாழை மரங்களை வெட்டும் உரிமை இவர்களுக்கு மணம் நிகழ்கின்ற பந்தல் அமைந்துள்ள பூமியின் மீதுள்ள உரிமையின் அடிப்படையில் அமைந்ததாகும். வாழையின் அடிமரத்தை வெட்டுவதானது நிலத்தின் மீது நிற்க அவை அனுமதிக்கப்படவில்லை என்பதனைக் காட்டுவதாகும். இவ்வாறு மாதிகர்களுக்கும் வெட்டியான்களுக்கும் அழைப்பு அனுப்பும் வழக்கம் தாழ்ந்த சாதியாரான அவர்கள் ஒரு காலத்தில் நிலத்தின்மீது உரிமையுடையவர்களாக இருந்தனர் என்பதைக் கோமட்டிகளும் கம்மாளர்களும் ஏற்று உடன்படுவதைக் காட்டுவதாகும். மைசூர் குழுவினில் இடம் பெற்று இருந்த சர் வால்டெர் எலியட்டும் மேஜர் ஜெ. எஸ். எப். மெக்கென்சியும் கோமட்டிகள் தங்கள் திருமணத்திற்கு மாதிகர்களை வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கும் வழக்கம் உண்டு என 1869-இலும் 1879-இலும் முறையே எழுதியுள்ளனர்.* முனைவர் ஒப்பெர்ட் அவர்களும் இந்த வழக்கம் பற்றிக் கூறியுள்ளார்.‡ சமூகப் படிநிலையில் உயர்ந்தவர்களாக ஆனவுடன் கோமட்டிகள் இவ்வாறு அழைப்பு விடுப்பதைத் தந்திரமாகத் தவிர்க்க முற்படலாயினர். மைசூரில் உள்ள கோமட்டிகள் தங்கள் திருமணத்திற்கு மாதிகர்களைஅழைக்கப் பெரும்பாலும் அவர்கள் இல்லாத நேரமாக பார்த்து அவர்களின் வீட்டின் புறக்கடைக்குச் சென்று இரும்பாலான தானியம் அளக்கும் படியினுள் பின்வருமாறு அழைப்பினைத் தாழ்ந்த குரலில் கூறுவர். "சின்னவர்கள் (கோமட்டிகள்) வீட்டில் ஒரு திருமணம் நடக்க உள்ளது. அதற்குப் பெரியவர்கள் (மாதிகர்) வீட்டினைச் சேர்ந்தவர்கள் வர வேண்டும்." இப்படிச் சத்தமில்லாமல் ரகசியமாக வந்து அழைப்பதை மாதிகர்கள் தங்களை இழிவுபடுத்துவதாகக் கருதுகின்றனர்.

---

* மொழிபெயர்ப்பு, இனவியல் கழகம் லண்டன், *1869*. (Trans. Ethnolog. Soc. London, 1869).
இந்தியத் தொல்லியல், VIII, *1879*. (Ind. Ant. VIII, 1879.)

† பாரத்வர்ஷத்துப் பழங்குடிகள் (Original Inhabitants Bhāratha-varsha.)

அவ்வாறு அழைப்பு விடுக்க வருபவர்களைக் காண நேரிட்டால் மாதிகர்கள் அவர்களைப் பிடித்து அடித்து உதைத்து அனுப்பி வைப்பர். கோமட்டிகள் மாதிகர்களுக்குச் செய்யும் இந்த அழைப்பினைத் தவிர்ப்பதற்காகச் செய்யப்படும் ஒரு தந்திரம் பற்றி 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது:- ''தற்பொழுது கோமட்டிகள் மாதிகர் களுக்கு வெற்றிலை பாக்கு வைத்து அழைக்கும் அழைப்பினைத் தவிர்க்க மணம் நிகழ்வுள்ள வீட்டார், மணத்திற்கு ஒரு சில நாள்கள் முன்பு தங்கள் செருப்புகளைச் செப்பனிட்டுக் கட்ட மாதிகர்களிடம் அனுப்பி வைப்பர். அதற்கான கட்டணத்தை மணநாள் வரை அவர்களுக்குத் தராமல் தள்ளிப்போட்டு மண நாளன்று வெற்றிலை பாக்கில் அவர்களுக்குச் சேர வேண்டிய தொகையினை வைத்துத் தந்துவிடுவர்.'' மற்றொரு தகவலின்படி இதற்காக மணம் நிகழவுள்ள வீட்டினைச் சேர்ந்த கோமட்டி தனது செருப்பின் காது வாரினை அறுத்துவிட்டுக்கொண்டு அதனைப் பழுது பார்க்கக் கடமைப்பட்டவனாக உள்ள மாதிகனைக் கூப்பிட்டு அனுப்புவான். மாதிகன் எத்தகைய எதிர்ப்பும் காட்டாமல் அப்பணியினைச் செய்து முடிப்பான். அதற்கு அவனுக்கு வழக்கமாகத் தரும் கூலியைவிட அதிக மாகவே வெற்றிலை பாக்கு, பூ ஆகியனவற்றோடு வைத்துத் தந்து விடுவர். மாதிகன் அந்த வெற்றிலை பாக்கினைப் பெற்றுக் கொண்டவுடன் கோமட்டி அவனிடம் உனக்கு இதில் சம்மதம் தானே என்ற பொருள்பட, ''சரிண்டா, சரிண்டா?'' எனக் கேட்பான். அதற்கு மாதிகன் கிடைத்தது என்னும் பொருள்பட ''சரிண்டி, சரிண்டி'' என விடையுறுப்பான். மாதிகன் இவ்வாறு சரிதான் எனத் தன் உடன்பாட்டினைத் தெரிவிக்கும்வரை மண மகள் கழுத்தில் தாலியினைக் கட்டுதல் இயலாது எனக் கூறப் படுகிறது. பெல்லாரி மாவட்டத்தில் மாதிகர்களுக்குரிய அழைப் பினை விடுக்கும் கோமட்டிகள் இரவில் அவர்கள் வீட்டின் புறக்கடையில் வெற்றிலை பாக்கினை வைத்து வருவர். கோதாவரி மாவட்டத்தில் திருமணத்திற்கு முன் கோமட்டிகள் மாதிகர்களிடம் பனையோலைப் பெட்டி வேண்டும் எனக் கேட்பர். அவர்கள் அப் பெட்டிகளைச் செய்து கொண்டு வந்து தரும்போது அவர்களுக்கு வெற்றிலை பாக்கினைத் தந்து

விடுவர் எனத் திரு ஹெமிங்வே கூறுகின்றார். மற்றொரு விவரக் குறிப்பின்படி கோமட்டிகள் சிலர் திருமணத்திற்குச் சற்றே முன்பு மாதிகர்களின் வீட்டின் புறக்கடையில் மாட்டுக் கொட்டகைக்கு அருகே வெற்றிலை பாக்கோடு சில பைசாக் களையும் வைத்துவிட்டு வந்துவிடுவர் எனத் தெரிகின்றது. சில கோமட்டிகள் சக்கிலியர் தோல் தொழிலுக்குப் பயன் படுத்தும் கருவிகளை வெள்ளியில் செய்து வழிபாடுக்காக வைத்துக் கொண்டுள்ளனர் என்றும் கூறப்படுகின்றது. கோமட்டி கள் சிலர் தங்கள் வீட்டில் திருமணச் சடங்குகள் முடிந்தபின் வீட்டின் பின்புறம் நள்ளிரவில் தங்கள் சாதியாரின் முன்னிலை யில் ஒரு மாதுளை மரத்தின் அடியில் அமர்ந்து சக்கிலியர் செய்யும் பணியினைச் செய்வதுபோலப் பாவனை செய்வர் எனவும் விவரம் தரப்பட்டுள்ளது. இது குலாச்சாரம், குலதர்மம் அல்லது கோத்திரபூசை என வழங்கப்படுகிறது. மாவினால் ஒரு பசுவின் உருவம் செய்து அதன் வயிற்றினுள் மஞ்சள், எலுமிச்சை, தண்ணீர் ஆகியவற்றின் கலவையான 'ஊகளி' யினை இடுவர். இக் கலவை குருதியினைக் குறிப்பதாகக் கொள்ளப்படுகிறது. அந்தப் பசுவின் உருவினை முறைப்படி வழிபட்ட பின், சக்கிலியர் பயன்படுத்தும் கருவிகளையொத்த கருவிகளைக் கொண்டு மாவினாலான அதனை வெட்டுவர். அதன் உறுப்புகள் அதனைப் பெறும் உரிமையுடையவர்களான கோமட்டிகளின் குடும்பங்களுக்கு ரகசியமாக அனுப்பி வைக்கப்படும். இதன்படி கோமளவாரு கொம்புப் பகுதியினைப் பெறுவர். கொண்டுலர் கழுத்துப் பகுதியினைப் பெறுவர். கரக பாலர் முன்னங்கால்களையும் நெற்றிப் பொட்டுக்களையும் பெறுவர். தொண்டியர் திமிலினைப் பெறுவர். தண்டர் பற் களைப் பெறுவர். வெளி கொல்லுவர் கால் குளம்புகளைப் பெறுவர். இதுபோல ஒவ்வொரு குலப் பிரிவினருக்கும் அவர் களுக்குரிய உறுப்புகள் அனுப்பப்படும். 1879-இல் மைசூரில் இத்தகைய சடங்கு நிகழ்ச்சி இச்சாதியாரால் நிகழ்த்தப்பட்டது உண்மையென மேஜர் மெக்கென்சி உறுதிபடக் கூறுகின்றார். சென்னை மாநிலத்தின் பல்வேறு பகுதிகளிலும் இது நிகழ்த்தப் பட்டதாகப் பதியப்பட்டுள்ளது. இச் சடங்கு தொடர்பாக வழங்கப்படும் மாவினை நேபாசாணி முட்டை அல்லது நேபா

சாணி உருண்டை என வழங்குவர். ஏழுநாள் அளவில் நடைபெறும் திருமணங்களில், ஐந்தாம் நாள் இரவிலும், ஐந்து நாள் அளவில் நடைபெறும் திருமணங்களில் மூன்றாம் நாள் இரவிலும் இன்றும் சென்னை நகரில் இச் சடங்கினை நடத்துகின்றனர். திருமணம் ஒருநாள் நிகழ்ச்சியாயின் இச்சடங்கு பகல் நேரத்திலேயே நடத்தி முடிக்கப்படுகின்றது. இச்சடங்கு நடத்தப்படும் முறையின் விவரம் வருமாறு:- ஒரு பித்தளைப் பாத்திரத்தின் மீது தேங்காயினை வைத்துக் கலசமாகக் கருதப்படும் அதன் இரு பக்கங்களிலும் மணமகன் வீட்டாரும் மணமகள் வீட்டாரும் பிரிந்து நிற்பர். அந்தக் கலசம் அலங்கரிக்கப்படுவதோடு அதன் மீது வைக்கப்பட்டுள்ள தேங்காய் ஒரு பெண்ணின் முகமாகப் பாவிக்கப்பட்டுக் கண்கள், மூக்கு, வாய் முதலியன நீலச் சாயத்தாலும் மஞ்சளாலும் வரையப்பட்டு நகைகள், மலர்கள் முதலியவற்றால் அலங்கரிக்கப்படும். மணமகள் வீட்டைச் சேர்ந்த இளைஞன் ஒருவன் அங்குக் கூடியுள்ளவர்களின் காலினைத் தொட்டு வணங்குவான். அதன்பின் மாவினால் பசுவினைச் செய்து அதனை வெட்டிக் கூடியுள்ள அனைவருக்கும் வழங்குவர். அந்தப் பாத்திரத்தின் முன் தேங்காய் உடைத்துக் கர்ப்பூர ஆரத்தி காட்டுவர். வெட்டப்படும் பசுவின் உறுப்பினைப் பெறுபவர்கள் தாங்கள் பெறும் பசுவின் உறுப்புகளுக்குரிய பெயரினையே தங்களுடைய குடும்பப் பெயராகக் கோதாவரி மாவட்டத்தில் பெற்றுள்ளனர் எனத் திரு முகமது இப்ராகிம் கூறுகின்றார். பகலில் எருமை மாடாகவும் இரவில் அழகிய பெண்ணாகவும் ஒரு பக்திமானான பிராமணனுடைய செல்வாக்கால் மாறிவிடும் ஆற்றல் வாய்ந்த ஒருத்தி எருமை மாடாக இருந்தபோது சில கோமட்டிகள் கொன்றதாக ஒரு கதை வழங்குகின்றது என அவரே மேலும் கூறியுள்ளார். இவர்கள் செய்த இந்தப் பாவத்திற்குப் பரிகாரமாகக் கோமட்டிகளை அந்த விலங்கின் பல உறுப்புகளையும் தங்கள் பெயராகக் கொள்ளும்படி அந்தப் பிராமணன் ஆணையிட்டான். மேலும் அவர்கள் அந்த விலங்கைக் கொன்றதால் மாதிகர்களைவிடத் தாழ்ந்தவர்களாக ஆகிவிட்டதால் அவர்கள் மாதிகர்களுக்கு மரியாதை காட்டி வரவேண்டும் எனவும் பணிக்கப்பட்டனர். கர்நூல் மாவட்டத்தில் உள்ள கும்பம் வட்டத்தில்,

மாவினால் பசுவிற்குப் பதிலாக ஒரு எருமையினை இச் சடங்கிற்காகச் செய்கின்றனர். அதே மாவட்டத்தில் உள்ள மர்கபூர் வட்டத்தில் சேற்று மண்ணால் இரண்டு யானைகளைச் செய்து அவற்றின் அருகே மணமகனும் மணமகளும் அமர்வர். அதன்பின் அவர்களுக்குத் துணிமணிகளும், நகைகளும் அன் பளிப்பாக வழங்கப்படும். மணச் சடங்கை நடத்தும் புரோகிதர் அந்த யானைகளுக்கு வழிபாடு நடத்துவார். அதன்பின் மணமக் கள் அவற்றினைச் சுற்றி வலம் வருவர்.

கோமட்டிகளுக்கும் மாதிகர்களுக்கும் உள்ள தொடர்பைத் தெளிவுபடுத்தும் மேலும் இரண்டு குறிப்புகளை மேஜர் மெக்கென்சி குறிப்பிடுகின்றார். "ஹோலித் திருவிழாவின் போது நடைபெறும் காமன் திருவிழாவில் இறுதியில் காமனை எரிக்க நெருப்பினை மாதிகரிடமிருந்தே பெறுகின்றனர். இதற்கான நெருப்பினைத் தர மாதிகர்கள் மறுப்பதில்லை. இதற்காக அவர் களுக்கு ஒரு தொகையும் தரப்படுகின்றது என நான் அறிகின் றேன்" என அவர் குறிப்பிட்டுள்ளார். இது ஒரு வட்டாரத்திற்கு மட்டும் உரிய பழக்கம் எனத் தெரிகின்றது. சென்னை மாநிலத் தில் வேறு பகுதிகளில் இத்தகைய பழக்கம் இருப்பதற்கான அடையாளங்கள் ஏதுமில்லை. இவ்விரு பிரிவினரிடையே உள்ள தொடர்பு பற்றிய மற்றொரு குறிப்பு மாதிகர்களின் தெய் வமான மாதங்கியும், கோமட்டிகளின் தெய்வமான கன்யகம் மாவும் ஒருவரே என்ற கருத்தாகும். இது பற்றி மேஜர் மெக்கென்சி எழுதுவதாவது:- "வேறு வேறு வகுப்பினைச் சேர்ந்த கோமட்டிகளுக்கும் மாதிகர்களுக்கும் எத்தகைய தொடர்பும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. கோமட்டிகள் பத்துப் பணப் பிரிவினைச் சேர்ந்தவர் களாக இருக்க மாதிகர்கள் ஒன்பது பணப்பிரிவினைச் சேர்ந்தவர்களாக உள்ளனர்.* இத் தொடர்புக்கு ஆதார மாக எடுத்துக் காட்டப்படுகின்ற இன்னொரு காரணமும் உள்ளது. கோமட்டிகளின் சாதித் தெய்வமான கன்யகம்மா

---

* பணப் பிரிவுகள் என இங்கு சுட்டப்படுவது தென்னிந்திய சாதியாரிடையே காணப்படும் வலங்கை இடங்கைப் பிரிவுகளைச் சுட்டுகின்றன.

வேறு சாதியினைச் சேர்ந்த ஒரு இளவரசனை மணந்து கொள் வதற்குப் பதிலாகத் தன்னைத் தானே மாய்த்துக் கொண் டவள். இவளை வழக்கமாக நீர் நிறைந்த ஒரு பாத்திரத்தில் எழுந்தருளச் செய்து திருமணச் சடங்குகள் தொடங்கும் முன் வழிபடுவர். கோயிலிலிருந்து ஊர்வலமாகக் கலசத்தில் எழுந் தருளச் செய்து எடுத்து வரப்படும் அவளை வீட்டில் ஒரு சிறப் பான இடத்தில் வைத்து வழிபாடு நிகழ்த்துவர். மாதிகர் கன் னிகாவினைத் தங்களுக்கு உரிய தெய்வமெனக் கூறுவதோடு மாதங்கி என்ற பெயரில் தாங்கள் அவளை வழிபட்டு வருவதா கவும் கோமட்டிகள் தங்கள் தெய்வத்தைத் தூக்கிச் செல்கின் றனர் எனவும் தங்கள் எதிர்ப்பைத் தெரிவிப்பர்." கோமட்டிகள் மாதங்கிக்கும் கன்யகம்மாவுக்கும் எத்தகைய தொடர்பும் இல் லையென அடித்துக் கூறுவர். அவை இரண்டும் தனித்த வேறு வேறு தெய்வங்களாகவே தோன்றுகின்றன.

கோமட்டிகள் குழந்தை மணத்தையே மேற்கொள்கின்ற னர். பிராமணப் புரோகிதனே கோமட்டிகளின் மணச் சடங் குகளை நடத்தி வைப்பவன். ஒவ்வொரு புரோகிதனுக்கும் எனக் குறிப்பிட்ட சில குடும்பங்கள் உரிமையுடையனவாக உள்ளன. புரோகிதனுடைய பிள்ளைகள் பிற உடமைகளைப் போலவே இந்தக் குடும்பங்களையும் தங்களுக்குள் பங்கு வைத்துக் கொள்கின்றனர். பல மனைவியரை மணக்கலாம் எனினும் முதல் மனைவிக்குக் குழந்தைப்பேறு இல்லையென் றால் தான் இரண்டாவது திருமணத்தினை முதல் மனைவியின் உடன்பாட்டின் பேரில் செய்து கொள்ளலாம். அது போன்ற சமயங்களில் முதல் மனைவியர் இரண்டாவது திருமணத்திற் குப் பின் தங்களுக்கும் குழந்தைபேறு வாய்க்கும் என்ற நம் பிக்கையில் அதற்கு அனுமதி வழங்குகின்றனர். பழைய மரபுப் படியான புராணோக்தம் என்ற திருமணமுறையும் வேதோக்தம் என்ற பிராமணர்களின் வேத வழக்குப்படியான திருமணமுறை யும் என இருவகைத் திருமண முறைகள் இவர்களிடையே வழக்கில் உள்ளன. சென்னை நகரில் திருமணச் சடங்கின் முதல் நாளன்று மணமக்கள் எண்ணெய் தேய்த்துக் குளிப்பர். மணமகனுக்குப் பூணூல் அணிவிக்கும் உபநயனச் சடங்கு நிகழ்த்

தப்படும். அதன் பின் அவன் காசி யாத்திரை போவதாகப் பாசாங்கு செய்வான். அவனை மணமகள் வீட்டார் தடுத்துத் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் செல்ல அங்கு அவன் ஓமத்தீ முன்பு மணமகள் கழுத்தில் தாலியினைக் கட்டுவான். இரண்டாம் நாளும் ஓமத்தீ வளர்க்கப்படுவதோடு சாதியினைச் சேர்ந்தவர்களுக்கு விருந்து அளிக்கப்படும். மூன்றாம் நாள் கோததிர பூசை நிகழ்த்துவர். நான்காம் நாள் மீண்டும் ஓமத் தீ வளர்க்கப்படும். அதற்கு அடுத்தநாள் மணமக்கள் ஊஞ்சலில் ஆடுவர். அப்போது மணமகனுக்குக் கட்டணம் எனப்படும் பரிசுகள் வழங்கப்படும். மணமகளுக்கு உரிய விலையாக 'வோளி' எனப்படும் பரிசப்பணம் ஏதும் பெற்றுக் கொள்ளப் படுவ்தில்லை. சென்னை நகருக்கு வெளியே உள்ள இடங்களில் புராணோக்த முறையிலேயே பெரும்பாலும் திருமணங்கள் நிகழ்த்தப்படுகின்றன. முதல் நாள் மூதாதையர்களுக்கு வழிபாடு நிகழ்த்துவர். இரண்டாம் நாள அஷ்டவர்க்க வழிபாடு எனப்படும் இந்து சமயத்திற்குரிய எட்டு தேவதைகளை மணமக்கள் வழிபடும் சடங்கு நிகழ்த்தப்படும். அன்றே மணப் பந்தலும் இடுவர். மூன்றாம் நாள் தாலி கட்டும் சடங்கு நிகழும். சில சமயங்களில் மணமகனுக்குப் பதிலாகப் புரோகிதனே தாலி கட்டுவதும் உண்டு. நான்காம் நாள் அந்த ஊரைச் சேர்ந்த பிராமணர்களுக்குச் சிறப்புச் செய்வர். ஐந்தாம் நாள் பெரும்பாலான இடங்களில் கன்யகா பரமேசுவரி அம்மனைச் சிறப்பிக்கத் திருவிழா எடுப்பர். மணமகனின் தாயாரும் மணமகளின் தாயாரும் குளத்திற்கோ ஆற்றுக்கோ சென்று செப்புக் குடத்தில் தண்ணீர் எடுத்து அதனை ஊர்வலமாகக் கொண்டுவருவர். அந்தக் குடங்களை அவற்றுக்கெனவே அமைக்கப்பட்ட பந்தலில் வைத்து மலர்கள், நீலச் சாயப் பொடி, மஞ்சள் ஆகியன தூவி வழிபாடு நிகழ்த்துவர். இறுதியில் அவற்றின் முன் தேங்காய் உடைக்கப்படும். அதற்கு மறுநாளோ திருமணச் சடங்குகள் அன்றே முடியுமானால் அனறேயோ பாலநகரம் சிறுவர்களைச் சிறப்பிக்கும் விழா எடுப்பர். இந்தப் பாலநகரம் சிறுவர்கள் பெனுகொண்டாவில் கோமட்டிகள் விஷ்ணுவர்த்தனனால் தொல்லைக்கு உள்ளானபோது அவர்களுக்கு உதவியவர்களின் பிரதிநிதிகளாகக் கருதப்படுபவர்கள். ஐந்து சிறுவர்களை

யும் ஐந்து சிறுமிகளையும் குளிக்கச் செய்து நகைகள் பூட்டி அலங்கரித்து உள்ளூர் கோயிலுக்கு ஊர்வலமாக அழைத்துச் சென்ற பின் அங்கிருந்து அவர்களை மணமகள் இல்லத் திற்கு அழைத்துப் போய் விருந்திடுவர். அதற்கு மறுநாள் தொட்டுலு பூசை எனப்படும் சடங்கு நிகழ்த்தப்படும். ஒரு பொம்மையினை இரு கழிகளில் தொங்கும் தொட்டிலில் வைத்து ஆட்டுவர். மணமகன் தான் வியாபாரத்திற்காகப் புறப்பட இருப்பதாகக் கூறி அந்தப் பொம்மைக் குழந்தையை மணமகளிடம் தருவான். மணமகள் தனக்குச் சமையல் கட்டில் வேலை இருப்பதாகக் கூறி அதனைத் திரும்பவும் அவனிடமே தருவாள். அதற்கு மறுநாள் மணமக்கள் ஊர்வலமாக அழைத் துச் செல்லப்படுவர். பெல்லாரி மாவட்டத்தில் சுர்கி சடங்கிற் காக மணநிகழ்ச்சிகள் மேலும் ஒரு நாள் நீட்டிக்கப்படும். அன்று மணமகனும் மணமகளும் குளித்துவிட்டு உள்ளூர் கோயிலுக்குச் சென்று திரும்புவர். அதன் பின் ஐந்து சிறுமிகள் குளித்து வந்து மணப்பந்தலில் உள்ள ஐந்து பந்தல் கால்களுக்கு வழிபாடு நிகழ்த்துவர். அதன் பின் மணமக்களின் கையில் கட்டப்பட் டுள்ள கங்கணங்கள் அவிழ்க்கப்படும்.

கஞ்சம் மாவட்டத்தின் வடபகுதியில் வாழும் தங்கள் தாய் மொழியினை மறந்து விட்ட கலிங்கக் கோமட்டிகள் மணச் சடங்குகளை நடத்தி வைக்கப் பெரிதும் ஒரியப் பிராமணர் களையே நம்பி இருப்பதால் அவர்களுடைய திருமணச் சடங்கு கள் ஒரியர் வழக்கத்தை ஒட்டியனவாக அமைகின்றன. எனினும் பொட்டு எனப்படும் சத்தமானம் மட்டும் தெலுங்கர் தாலி யினை ஒத்தனவாக அமையும்.

கோமட்டிகளின் எந்தப் பிரிவினரும் கைம்பெண்களின் மறுமணத்தினை அனுமதிப்பதில்லை. இவ்விதியினை அவர்கள் உறுதியுடன் பின்பற்றுகின்றனர். சைவர்களான கோமட்டி களின் விதவைகள் மட்டுமே தலையினை மழித்துக் கொள்வ தோடு, அணிகளையும் துறக்கின்றனர். இவர்கள் வெற்றிலை பாக்கும் போடுவதில்லை. சென்னை மாநிலத்தின் தென் பகுதி களில் சிறுமியாக இருக்கும் ஒருத்தி விதவையானால் அவளுடைய

மாங்கல்யம் அகற்றப்படுவதில்லை. மேலும் அவள் பருவம் அடையும் வரை தலைமுடியினை மழிப்பதும் இல்லை. வைணவப் பிரிவினைச் சேர்ந்த கைம்பெண்கள் எந்நிலையிலும் தலைமுடியினை மழித்துக் கொள்வதில்லை. கணவனும் மனைவியும் சேர்ந்து வாழ்ந்து வருகையில் கணவன் இறப்பானாகில் அவனுக்கும் உயிரோடிருக்கும் அவன் மனைவிக்கும் இடையே இந்தச் சாதியார் நடத்தி வைக்கும் ஒருவகைத் திருமணம் பற்றித் திரு ஹச்சின்சன் பின்வருமாறு எழுதுகின்றார்:-* "ஒருத்தியின் கணவன் இறந்துவிட்ட தகவல் அண்டை அயலாருக்குத் தெரிவிக்கப்படுகிறது, ஒரு குருவோ பூசாரியோ வரவழைக்கப் பட்டு இந்தச் சடங்கு நடத்தப்படுகிறது. ஒருமுறை அத்தகைய சடங்கினை நான் நேரில் கண்டபோது நிகழ்த்தப்பட்ட நிகழ்ச்சிகள் வருமாறு. இறந்தவனுடைய உடலை வீட்டின் வெளிமுற்றத்தில் மணமகனைப் போல ஒப்பனை செய்து உட்கார்ந்த நிலையில் வைப்பர். அவன் முகத்திலும் கைகளிலும் மஞ்சள் பூசப்படும், அவனுடைய மனைவியும் மணப்பெண் போல் உடை உடுத்து முகத்திற்கு மஞ்சள் முதலியன பூசித் தன்னை அலங்கரித்துக் கொண்டு அந்தப் பிணத்தின் எதிரே அமர்ந்து பொருளற்றனவாக, மெல்லிய குரலில் அதனோடு பேசுவாள், பின்னர் கொப்பரைத் தேங்காய்த் துண்டுகளை மென்று பிணத்தின் முகத்தில் துப்புவாள். இது பெரும்பாலும் அன்று பொழுது சாயும்வரை தொடர்ந்து நிகழ்ந்தபடி இருக்கும். அதன்பின் பிணத்தைத் தலையோடு குளிப்பாட்டிப் பட்டுத் துணியினைத் தலையில் சுற்றி, முகத்தில் குங்குமம் பூசி வாயில் வெற்றிலையைத் திணிப்பர். அப்போது அவள் தன்னை அவன் மணந்து கொண்டதாகக் கருதுவாள். அதன்பின் பிணத்தின் ஊர்வலம் புறப்படும்." இச் சடங்கு வட சர்க்கார் பகுதியினைச்சேர்ந்த வீர சைவர்களான லிங்காயத கோமட்டிகளோடு தொடர்புடையதாகும்.

வடசர்க்கார் பகுதிகளிலும், ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்

* பல நாடுகளிலும் திருமண முறைகள் – 1897. (Hutchinson-Marriage Customs in Many Lands 1897.)

களின் சிலபகுதிகளிலும் வேதோக்த முறையிலான திருமணச் சடங்குகளே தற்பொழுது வழக்கில் உள்ளன. இவ்வழக்கம் மைசூரின் தென் மாவட்டங்களுக்கும் பரவி வருகின்றது. மேலும் கோமட்டிகள் பெரும்பாலான தங்கள் சடங்குகளை வேதோக்த முறையிலேயே மேற்கொள்கின்றனர். இது பிற்காலத்தில் புகுத்தப்பட்ட புதிய வழக்கம் எனச் சாதியினைச் சேர்ந்த பழமை நெறியில் ஊறிய சிலர் கூறுகின்றனர். ஆனால் அதனைப் பின்பற்றுபவர்கள் வைசியர்களான தங்களுக்கு இதனை இந்து சாத்திரங்கள் அனுமதிக்கின்றன எனக் கூறுகின்றனர். அண்மையில் சில ஆண்டுக் காலமாக மேலே இரண்டாவதாகக் கூறப்பட்ட கோட்பாடு சாதியினைச் சேர்ந்த முக்கிய உறுப்பினர்களின் எழுத்தாலும் செல்வாக்காலும் வேகம் பெற்றுப் பரவி வருகின்றது. அவர்கள் தங்களுக்கு மாறுபட்ட கருத்துடையவர்களோடு அறிக்கைகள் விடுத்துப் போராடி வருகின்றனர். இந்த, இக் கருத்து வேறுபாட்டினை விரிவாக விளக்குதல் இயலாது. எனினும் கருத்து வேறுபாட்டிற்கான பின்வரும் அடைப்படைக் காரணங்களை மட்டும் எடுத்துரைக்கின்றேன். கலியுகத்தில் உண்மையில் வைசியர் எனப்படும் பிரிவினரே இல்லை என ஒரு சாரார் மறுக்கின்றனர். வணிகம் செய்வதால் கோமட்டிகள் வைசியர் என்ற தகுதிக்கு உடையவர்களாகக் கருதப்பட்டாலும் பிராமணர்களுக்கே தனி உரிமையாக உள்ள வேத வழிப்பட்ட சடங்குகளை இவர்கள் மேற்கொள்ள முடியாது. அப்படி அவர்கள் வேத வ்ழிப்பட்ட நெறி முறைகளை ஒரு காலத்தில் கடைப்பிடித்து வந்திருந்தாலும் கன்யகம்மா இறந்தபோது அச்சாதி பிரிவுபட்டபின் அவர்கள் அதனைத் தொடர்ந்து மேற்கொள்ள உரிமை இழந்தவர்களாகின்றனர். மேற்கண்ட கருத்துக்களுக்கு மறுப்புக் கூறுபவர்களின் கருத்துக்கள் வருமாறு:- கோமட்டிகள் துவிஜர் எனப்படும் இரு பிறப்பாளராகையால் அவர்களும் வேத வழிப்பட்ட சடங்குகளை மேற்கொள்ள உரிமை உடையவர்களே. கன்னியகம்மாவினைத் தொடர்ந்து நெருப்புக் குண்டத்தில் இறங்காத பிரிவினர் மட்டுமே அந்த உரிமையை இழக்கின்றனரேயன்றி அவளைத் தொடர்ந்து நெருப்புக் குண்டத்தில் இறங்கிய 102 கோத்திரத்தாரும் அந்த உரிமைக்குத் தொடர்ந்து

உரிமைஉடையவர்களே.இந்தக் கருத்து வேறுபாடு நெடுங்கால மாக இருந்து வருவதோடு ஒரு நூற்றாண்டுக்கு முன்பே தீர்ப்பு வழங்கும்படி பிரிட்டனின் அரசப் பேரவைக்கு இதனை வழக் காகக் கொண்டு சென்றுள்ளனர். கோமட்டிகளுக்குத் தங்கள் சுப, அசுப சடங்குகளை வேத நெறிப்படி நடத்தும் உரிமை யுண்டா என்பதனை 1817-இல் மசூலிப்பட்டினத்தைச் சேர்ந்த பிராமணர்கள் வழக்கு மன்றத்திற்குக் கொண்டு சென்றபோது அதன்மீது தீர்ப்பும் வழங்கப்பட்டுள்ளது.* பிராமணர்களுக்கும் கோமட்டிகளுக்கும் இடையே நெடுங்காலமாகத் தொடர்ந்து இது பற்றிய பூசல் நடந்தபடி உள்ளது. மசூலிப்பட்டினத்துக் குற்றவியல் நடுவர் கோமட்டிகளை அவர்களுடைய சடங்குகளில் ஒன்றினை நடத்துவதற்குரிய உரிமையினை உடமை உரிமை வழக்கு மன்றத்தில் நிலைநாட்டிய பிறகே நடத்துதல் வேண்டும் என ஆணை பிறப்பித்தார். இதன் பின் வழக்கு மன்றத்தில் மேல் முறையீடு செய்து கொள்பவர்கள் வேதத்தில் விதித்துள்ள விதிகளின்படி தாங்கள் தங்கள் சடங்குகளை நடத்துவதில் எதிர்வாதிகள் குறுக்கிடுவதாகவும், வேதங்களில் விதித்துள்ள படி தாங்கள் தங்கள் சடங்குகளை நடத்திக் கொள்ள அனுமதி வழங்க வேண்டும் எனவும் கேட்டுக் கொண் டனர். எதிர்வாதிகள் கோமட்டிகளுக்கு அவ்வாறு சடங்குகளை நடத்திக் கொள்ள உரிமை இல்லை என மறுத்ததோடு அவர் கள் வேத விதிப்படியான சடங்குகளைச் செய்து வந்தனர் என்பதனையும் மறுத்தனர். அவர்கள் குற்றவியல் நடுவரின் தலையீட்டினை வரவேற்றதோடு பின்வருமாறு தங்கள் கட்சி யினை எடுத்துரைத்தனர். "இரண்டாயிரம் ஆண்டுகளாகவே கோமட்டிகள் சூத்திரர்களின் பழக்கவழக்கங்களையே மேற் கொண்டு வருகின்றனர். அவர்களுள் சிலர் பைரி கோமட்டி களாக ஆகிவிட்டதோடு சிலர் புக்கா சாதி முதலிய சாதியினராகவும் மாறிவிட்டனர். எஞ்சிய நூற்றிரண்டு கோத்திரங்களைச் சேர்ந்தவர்கள் பொய்யான கோத்திரங் களைப் படைத்துக்கொண்டு தங்களை நகரக் கோமட்டிகள்

---

* மூர் - இந்திய மேல் முறையீட்டு வழக்குகள், தொகுதி III, 359-82.
(Moore- Indian Appeal Cases, Vol.III, 359-82.)

என்று கூறிக்கொள்கின்றனர். கன்னியகா புராணம் என்னும் நூலை இட்டுக்கட்டி எழுதிக்கொண்டதோடு பாசுகர பண்டித வாரு என்பரைத் தங்கள் குரு எனக் கூறிக்கொண்டு அந்நூலில் விதித்துள்ளபடி முறைப்படியல்லாத வகைகளில் உபநயனம் முதலான சடங்குகளையும் செய்து கொள்கின்றனர். மற்ற எல்லாச் சாதியார் நடைமுறைக்கும் மாறாகத் திருமணங்களை ஏழுநாள்வரை நீட்டிப்பதோடு, பொரோலு கம்பம் நடவும், மாவினால் உருண்டைகள் செய்து அதனைத் தாங்கள் இட்டுக்கட்டியுள்ள பொய்யான கோத்திரங்களோடு பங்கிட்டுக் கொள்ளவும் செய்கின்றனர். அரிவாணை எனப்படும் குடத்தில் நீர் கொண்டு வரும் சடங்கினை நள்ளிரவில் நடத்துகின்றனர். குழந்தைகள் பிறப்பது தொடர்பான சடங்குகளைப் பத்து நாள்கள் அளவு நீட்டிக்கின்றனர். இவ்வாறாக வாதிகளின் முன்னோரும் பிற வணிகரும், வாதிகளும் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளாக நடத்திக் கொண்டு வருகின்றனர்.'' வாதிகளோ அவர்களுள் ஒரு சிலரோ இப்பொழுது தங்களுக்கு உரியன எனக் கொண்டாடும் உரிமைகளை நிலைநாட்டிக் கொள்வதில் வெற்றி பெறாதவர்களாகவே இருந்துள்ளனர். எனவே அவர்களுடைய இப்போதைய குற்றச்சாட்டு வாதிகள் குறுக்கீட்டினாலும் தடை ஆணை பிறப்பிக்க வேண்டி முறையிட்டுக் கொண்டதாலும் அவர்களுக்கு ஏற்பட்டதான இழப்புக்கு ஈடு கேட்பது சரியான வாதத்தின் அடிப்படையில் கேட்கப்பட்டதாக அமையவில்லை. வாதிகள் தங்கள் பதிலில் எதிர் வழக்காடிகளின் கூற்றுக்களையும் வாதங்களையும் மறுக்காமல் வேத முறைப்படி சடங்குகளை செய்து கொள்ளத் தங்களுக்கு உரிமை உண்டு என்பதனை மட்டுமே வற்புறுத்தினர். இருதரப்பு வாதங்களும் வழக்கு மன்றத்தில் முடிவு எடுக்கப்பட வேண்டிய பிரச்சினை என்ன என்பதனைத் தெளிவு படுத்தாத காரணத்தாலும் அதனை நிலை நாட்ட அவர்கள் காட்டும் சான்றுகள் எவை என்பதனைச் சுட்டிக் காட்டாமையாலும் வழக்கு மன்றத்திலேயே நேரிடையாக இரு தரப்பாரிடமும் அதுபற்றிக் கேட்டு அறியப்பட்டது. வாதிகள் தங்கள் வீட்டில் நடக்கும் எல்லாச் சுப அசுபச் சடங்குகளையும் பிராமணர்களை வைத்து வேதங்களை ஓதிச் செய்து கொள்ளத் தங்களுக்குச் சாத்திரங்கள் இடமளிக்கின்றன எனக்

கூறினர். இதன் மீது நீதிபதி எதிர்வழக்காடுபவர்களின் விவரங் களையும் சட்ட அடிப்படையிலான கருதுகோளான வாதங்க ளையும், வழக்கு மன்றத்துப் பண்டிதரின் கருத்துக்களோடு கூடக் கேட்டறிந்து வாதிகள் தங்கள் சடங்குகளைப் பிராமணர்களை வைத்து நடத்திக் கொள்ளலாம் எனத் தீர்ப்பு வழங்கினார். வடபகுதிக்குரிய வட்ட நீதி மன்றத்தில் மேல் முறையீடு செய்து கொண்டதில், அது மாவட்ட நீதிமன்றத்தைச் சாட்சியங்களைக் கேட்டறியுமாறு கூறியதோடு மாவட்ட நீதி மன்றம் கேட்டறிந்த சாட்சியங்கள் பற்றிப் பண்டிதர்களின் கருத்துக்களைக் கேட்ட றிந்து மாவட்ட நீதி மன்றம் வழங்கிய தீர்ப்பினையே உறுதி செய்தது எனினும் வழக்குச் செலவுகளை வாதிகள் தரத் தேவை யில்லையெனக் கூறியது. கருத்தறிய வழக்கு மன்றம் நாடிய பண்டிதர்கள் வடக்கு, நடு, தெற்கு வட்டாரங்களுக்குரிய வட்டார வழக்கு மன்றங்களுக்கானவர்களாவர். "பிராமணர் கள் வேதத்துக்குரிய அதே மொழியில் வைசியர்களுக்கான சடங்குகளைச் செய்ய வேண்டும் என்ற கட்டாயமில்லை" என் பதில் அவர்கள் அனைவரும் ஒருமித்த கருத்துடையவர்களாக இருந்தனர். அவர்களுள் மூவர் தற்போது வைசியர் அல்லது கோமட்டிகள் சாதியிலிருந்து தாழ்ந்து போனவர்களும், மற்ற வர்களும் கடைப்பிடித்து வருகின்ற புராணத்தில் விதித்துள்ள படியான (புரோணோக்தம மரபுப்படி) முறையிலேயே கோமட் டிகள் தங்கள் சடங்குகளைச் செய்து வரவேண்டும் என நடுவர் கள் ஆணை பிறப்பிக்க வேண்டுமெனத் தாங்கள் கருதுவதா கவும் மேலும் கூறியுள்ளனர். இதன் மீதான மேல் முறையீட்டின் மீது சுட்டெர் திவானி அதவ்லட், "கொடுக்கப்பட்ட சான்று களை நன்கு சீர்தூக்கிப் பார்த்தும், நான்கு வட்டார வழக்கு மன்றங்களைச் சேர்ந்த சட்ட ஆலோசகர்களின் நடுநிலையான ஒன்றுபட்ட கருத்துக்களைக் கேட்டறிந்தும்" கீழ் நீதிமன்றங் களின் தீர்ப்பின் மீதான முடிவுகளைப் பற்றிய தன் கருத்துக் களை வழங்குவதை நிறுத்தி வைத்திருந்தார். இதன் மீது அரசவை சார்ந்த நடுவர் மன்றத்துக்கு (**Privy council**) மேல் முறையீடு செய்து கொள்ளப்பட்டது. லார்டு பரொக்கம் தன்னு டைய தீர்ப்பில், "வாதிகள் தாங்கள் சான்றுடன் மெய்ப்பிக்கக் கூடிய வகையில் எதிர் வழக்காடுபவர்கள் தங்களுக்கு எத்தகைய

தீங்குண்டாக்கும் நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை எனக் கருதுவதாலும் எதிர் வழக்காடுபவர்கள் மீதான இந்த வழக்கில் தங்களுக்கு ஏற்பட்ட இழப்புக்கு ஈடு கேட்க உள்ள உரிமையினை நிலை நாட்டாததினாலும் சில சமயச் சடங்கு களை மேற்கொள்வதில் உள்ள உரிமை பற்றிய கருத்தினைத் தவிர இங்கு முடிவு செய்யப்பட வேண்டிய பிரச்சினைகள் வேறெதுவுமில்லை. இந்த வழக்கில் இதனை முடிவு செய்யும் அதிகாரம் வழக்கு மன்றங்களுக்கு உண்டா என்பது பற்றி (இதுபற்றித் தங்கள் தீர்ப்பில் வழக்கு மன்ற நடுவர்கள் எக் கருத்தும் கூறாது தங்களைத் தற்காத்துக் கொண்டுள்ளனர்.) முடிவு கூறுவதற்கான சான்றுகள் எதனையும் வாதிகள் காட்ட வில்லை. ஆகையால் இந்த வழக்கில் கீழ்நீதி மன்றங்கள் வழங்கிய முடிவுகளைச் செல்லாதவை என ஆக்குவதோடு குற்றச்சாட்டுத் தள்ளப்படுகிறது.(சுட்டெர் நீதி மன்றத்தின் தீர்ப் பினை செல்லாது என ஆக்கியது வழக்கினைத் தள்ளுபடி செய்ததாகவே ஆகும்.) எனினும் இது வழக்கினுக்கான செலவு களைத் தராது வழக்கினைத் தள்ளியதாக ஆகாது. மேல் வழக் காடிகள் தங்களுக்குரியதாக இருப்பதாகவோ இல்லாததாக வோ கருதுவதான உரிமைகளை வேறு எந்த வழக்குகளுக்கும் பொருந்துவதாக இத்தீர்ப்பு அமையாது. அத்தகைய பிரச்சினை கள் அந்த வழக்குகளை எடுத்துக் கொள்ளப்படும் போதே கேட்டுத் தீர்க்கப்பட வேண்டியவை'' எனக் கூறியுள்ளார்.

கோமட்டிகள் பூணூல் அணிவதோடு காயத்ரி மந்திரத் தையும் பிற புனித மந்திரங்களையும் சொல்கின்றனர். பெல்லாரி மாவட்டத்தில் உள்ள ஆதோனியில் இவர்களுள் பலர் மாலை நேரம் நெருங்குவதற்கு முன் குளித்துத் தங்கள் தீட்டினைப போக்கிக் கொள்ள நேரமில்லாது போகும் ஆதலால் பிற்பகல் நேரத்தில் நான் அவர்கள் உடல் அளவுகளை எடுக்க உடன்பட வில்லை. தெலுங்கு அகராதிகளில் கோமட்டி என்ற சொல் லுக்குத் தரப்பட்டுள்ள பிற விளக்கங்கள் மூதுவகுலமனாரு (மூன்றாவது சாதியினைச் சேர்ந்தவர்கள்), வைசியாலு, நல்ல னய்ய தொடபிட்டலு (விட்டுணுவின் தொடையிலிருந்து பிறந்த பிள்ளைகள்) என்பனவாம். முன்பு கூறியபடி கோமட்டிகளுள்

விபூதி அணியும் சாதாரண சைவர்களும் வெள்ளிப் பேழையில் லிங்கம் அணியும் வீர சைவர்களும் உள்ளனர். இராமானுசர் வைணவத்தைப் பின்பற்றுவோரும் உளர். கலிங்கப் பிரிவினருள் சைதன்யருடைய வைணவ நெறிப் பிரிவைப் பின்பற்றுபவர் களும், மாத்வ பிராமணர்களைப் போலச் சமயச் சின்னம் தரிப் பவர்களும் உளர். திரை வர்ணிகள் வைணவர்களுள் தனிப் பட்ட சிறப்புப் பிரிவினர். இவர்கள் மற்றவர்களைவிட வைணவப் பிராமணர்கள் சமயநெறியினை மிகுதியும் ஒட்டி ஒழுகுபவர்கள். இவர்களும் இவர்கள் வீட்டுப் பெண்களும் பிராமணர்களைப் போல உடையுடுப்பதோடு ஆண்கள் மீசை யினையும் மழித்துக் கொள்கின்றனர். சைவர்களையும் லிங் காயதர்களையும் போலன்றி இவர்கள் மீன், ஊன் ஆகியவற்றை உண்பதோடு மதுவகைகளையும் பருகும் பழக்கமுடையவர்கள். இவர்கள் ஸ்தானிகர்கள் இல்லங்களில் உண்பர். ஆனால் மற்றக் கோமட்டிகள் பிராமணர் இல்லங்களைத் தவிர மற்றவர்கள் இல்லங்களில் உண்பதில்லை. வெலமர், பலிசர், கம்மாளர், அம் பட்டர், வண்ணார் ஆகியோரும் வேறு பல சாதியினரும் கோமட்டிகள் வீட்டில் தண்ணீர் குடிக்கவோ, உணவு கொள்ள வோ மாட்டார்கள் என்பதனையும் இங்கே கூறியாக வேண்டும். எனினும் இப் பழக்கம் கோமட்டிகள் நெய் அல்லது எண்ணெ யில் சுட்டுத் தங்கள் பெட்டிக்கடைகளில் வைத்து விற்கும் பணியாரங்களை அவர்கள் வாங்கித் தின்னத் தடையாக இருப்பதில்லை.

மைசூர் மாநிலத்தில் உள்ள குப்பியில் கோமட்டிகளுக்கும் பணசிகர்களுக்கும் இடையே கோமட்டிகள் தங்கள் தெய்வமான கன்யகம்மாவிற்கான கோயில் கட்டிக் கொள்வது தொடர்பாக நிகழ்ந்த பூசலைப்பற்றிப் பத் தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே புச்சனன் குறிப்பிட்டுள்ளார்.* மைசூரின் முதலமைச்சரான பூர்ணய்யா அந்த நகரின் குறுக்கே ஒரு சுவர் எழுப்பி இரு பிரிவின ரையும் பிரித்து வைத்தார். கோமட்டிகள் எல்லாப் பிரிவினரும் கூடி வாழ்வதே வழக்கம் என்றும் தங்களுடைய சாதியாரை

---

* மைசூர், கன்னடம், மலபார் வழியாகப் பயணம்.

மட்டும் தனித்துப் பிரித்து வாழும்படி கட்டாயப்படுத்துவது தங்கள் உரிமையில் தலையிடுவதாகும் எனவும் முறையிட்டனர். கோமட்டிகளின் சாதித் தலைவன் குதிரையில் ஏறியவனாக ஊர்வலமாகக் குடைபிடித்தபடி அந்த நகரினுள் நுழைந்தான். இவ்வாறு அவன் தான் தலைவன் என உரிமை கொண்டாடியவனாகச் செல்வதை பணசிகர்கள் தங்களை அவமதிப்புக்கு உள்ளாக்குவதாகக் கருதினர். புச்சனன் அந்த நகருக்குச் சென்ற சமயம் இந்தப் பூசல் உச்சக் கட்டத்தை அடைந்ததாக இருந்ததோடு அந்த நகர்ப் பகுதியினை மக்கள் நடமாட்டம் அற்றதாகச் செய்ய ஒரு கழுதையினைக் கொன்று போடுவதாகத் திட்டமிருப்பதான வதந்தியும் நிலவியது. இது தொடர்பாகப் புச்சனன் எழுதியிருப்பதாவது:- "கர்நாடகத்தில் கட்டாயத்தின் பேரிலன்றி இன்னொரு இரவினை எந்த இந்துவும் கழிக்க முன்வர மாட்டான். இந்தப் பூசலில் எதிர்க்கட்சியினைச் சேர்ந்தவர்களும் கூடத் தங்கள் தன்மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள அங்கிருந்து ஓடவே நினைக்கின்றனர். இவ்வாறு வாழும் இடத்தைவிட்டுக் குடிபெயர்ந்து ஓடும் வழக்கம் ஒன்றே இந்தியர்கள் தாங்கள் தன்னிச்சையான அடக்கி ஒடுக்குதலுக்கு ஆளாகும்போதும் ஒரு சாதியாரின் உரிமைகளில் அரசு குறுக்கிடும்போதும் அல்லது குறுக்கிடுவதாக அச்சாதியார் கருதும் போதும் மேற்கொள்ளும் வழக்கமாகும். இதனை அவர்கள் வேறுவகையான அடக்குமுறைகளுக்கு எதிராகப் பயன்படுத்துவதில்லை."

முன்பு வலங்கை, இடங்கைப் பிரிவினருக்கு இடையே நிகழ்ந்து வந்த பூசல்களில் கோமட்டிகளின் பங்கினைப் பற்றி இங்குச் சுருக்கமாக் குறிப்பிடலாம் எனக் கருதுகின்றேன். கோமட்டிகள் உள்ளிட்ட சில சாதியினர் வலங்கைப் பிரிவினையும், மற்றவர்கள் இடங்கைப் பிரிவினையும் சேர்ந்தவர்கள். இடங்கைப் பிரிவினைச் சேர்ந்தவர்கள் வலங்கைப் பிரிவினைச் சேர்ந்தவர்களின் திருமண ஊர்வலங்களும் பிற ஊர்வலங்களும் தங்கள் தெருக்களின் வழியே செல்ல அனுமதிப்பதில்லை. வலங்கைப் பிரிவினரும் இதே போன்று இடங்கைப் பிரிவினர் மீது காழ்ப்பு உணர்ச்சி கொண்டவர்களாகவே இருந்து வந்துள்ளனர். பதினேழாம் நூற்றாண்டளவிலேயே முதன்முதல்

சென்னை நகரில் வந்து குடியேறியவர்களுள் ஒரு சாதியாரான கோமட்டிகள் கி.பி. 1652-இல் அரோன் பேக்கர் மாநில ஆளுநராக இருந்தபோதும், கி.பி. 1707-இல் வில்லியம் பிட் ஆளுநராக இருந்த போதும் இருமுறை இத்தகைய பூசல்களில் சம்பந்தப்பட்டுள்ளனர் என்பதற்கான ஆவணச் சான்றுகள் உள்ளன.* ஒரு பிரிவினைச் சேர்ந்த சாதியாரின் திருமண ஊர்வலம் மற்றொரு பிரிவினைச் சேர்ந்த சாதியாரின் தெரு வழியே செல்ல வேண்டி வந்த சமயத்தில் பிட் இரண்டு பிரிவுகளிலிருந்தும் பன்னிரண்டு சாதித் தலைவர்களை வரும்படி ஆணை அனுப்பி, அவர்கள் அனைவரையும் அவர்களிடையேயான பூசல் தீரும்வரை ஒரே அறையில் வைத்துப் பூட்டி விட்டார். அதன் காரணமாக அவர்களிடையேயான பூசல் விரைவில் தீர்ந்தது. அதன்படி வலங்கைப் பிரிவினர் தற்பொழுது பெத்தநாய்க்கன் பேட்டை என வழங்கும் நகரின் மேற்குப் பகுதியிலும், இடங்கைப் பிரிவினர் முத்தியாலுபேட்டை என வழங்கும் கிழக்குப் பகுதியிலும் குடியேறுவது என முடிவாயிற்று. இந்த உடன்பாட்டின் காரணமாக கோமட்டிகளைச் சென்னை நகரின் மேற்குப் பகுதியிலேயே பெரிதும் காண முடிகின்றது.

நாடெங்கும் கோமட்டிகள் கன்னிகா பரமேசுவரியைப் பக்தியோடு வழிபடுவதோடு பெரும்பாலான இடங்களில் அவளுக்காகக் கோயில்களும் அமைத்துள்ளனர். அனந்தப்பூர் மாவட்டத்தில் தட்பட்ரியில் 1904-இல் கட்டப்பட்டதான கோயிலினைப் பற்றிய விவரங்கள் ஆர்வத்தைத் தூண்டுவன. இதற்காக அந்தப பகுதியினைச் சேர்ந்த கோமட்டிகள் தங்களுக்கிடையே வேண்டிய பொருளைத் திரட்டினர். கோயிலுக்கான நகல் திட்டம் பழமையானது. அதன் கட்டுமானத்தில் வளைவு மாடங்களும் இடம் பெற்றுள்ளன. கோயிலில் அமைக்கப்பட்டுள்ள கற்சிலைகள் வடிவமைப்பிலும் நய இழைப்பிலும் மிகச்சிறப்புடையவை. விசயநகரப் பேரரசின் காலந்தொட்டு

---

* டல்பாய் வீலர், அன்றைய சென்னை நகரம், II, 49-89. (See: Tolboys Wheeler, Madras in Olden Times, II, 49, 89.)

அவ்விடத்திலிருந்து வரும் இரண்டு கோயில்களின் மாதிரியினை அடிப்படையாகக் கொண்டே இக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. பெனுகொண்டா, விசாகப்பட்டினத்திலுள்ள விசயநகரம், கஞ்சத்திலுள்ள பெர்கம்பூர் ஆகிய இடங்களில் உள்ள கோயில்களும் குறிப்பிடத்தக்கன. கோதாவரி, குண்டூர், கிருட்டிணா மாவட்டங்களைச் சேர்ந்த குற்றம் புரிந்த கோமட்டிகளிடமிருந்து வசூலிக்கப்படும் தண்டத்தொகை இன்றுவரை பெனுகொண்டாவில் உள்ள கோயிலுக்கே அனுப்பப்பட்டு வருகின்றது. கன்யகா பரமேசுவரியோடு வேறு பல தேவதைகளையும் கோமட்டிகள் வழிபடுகின்றனர். விசாகப்பட்டினத்தில் வாழ்பவர்கள் துறைமுகத்தைச் சார்ந்து அமைந்துள்ள மலையில் உள்ள தர்க்காவில் புதைக்கப்பட்டுள்ள முகமதியத் துறவியின்பால் ஈடுபாடு கொண்டவர்களாகத் தங்கள் பரந்த மனப்பான்மையை வெளிப்படுத்திக் கொள்கின்றனர். ஒவ்வொரு கலமும் துறைமுகத்தினுள் நுழையும் போதும் துறைமுகத்தைவிட்டு வெளியே செல்லும்போதும் கொடியினை இறக்கி, ஏற்றி அவருக்கு அஞ்சலி செலுத்துகின்றன. வங்காள விரிகுடாவில் உள்ள தீய ஆவிகளை இவர் தன் சக்தியால் ஆட்டுவிக்க வல்லவர் எனக் கருதப்படுகின்றது. தங்கள் கலம் எத்தகைய இடர்ப்பாட்டுக்கும் உள்ளாகாமல் பயணத்தை முடித்துத் திரும்பியவுடன் இந்துக்களான கல உரிமையாளர்கள் வெள்ளியாலான தோணியினை இவருடைய கோயிலில் காணிக்கையாகச் செலுத்துகின்றனர். ஒரு தோணியின் உரிமையாளரான ஒரு கோமட்டிக்கும், மதிப்பு வாய்ந்த வணிகச் சரக்கு ஏற்றப்பட்டிருந்த அதன் கலநாயகனான முகமதியனுக்கும் இடையே நிகழ்ந்ததான ஒரு வழக்கு எங்கள் நினைவுக்கு வருகின்றது. அரகன் துறைமுகத்துக்கு அப்பால் புயலில் கலம் அகப்பட்டுக் கொண்டபோது அந்தத் தர்க்காவிற்குப் பணமுடிப்பினைக் காணிக்கை செலுத்துவதாக வேண்டிக் கொண்ட கல நாயகன் அதன்படியே அக்கலம் அத்துறையினை வந்து சேர்ந்தவுடன் காணிக்கை செலுத்தினான் இத் தொகையினையும் மற்ற கட்டணங்களோடு கல உரிமையாளர் தரக் கடமைப் பட்டவரெனக் கூறினான். வழக்குத் தொடுத்த வாதி அவன் வேண்டுதல் செய்தபடி காணிக்கை செலுத்தவில்லை எனக் கூறினார். எனினும் வயதான அந்தப்

பக்கிரோடு அவன் புயலின்போது செய்துகொண்ட உடன்பாட்டினுக்கு அவர் கீழ்ப்படிய வேண்டியதாயிற்று.'' இன்று கோமட்டிகள் படகுச் சொந்தக்காரர்களாக இல்லாவிட்டாலும் கூடத் தங்கள் உடமை உரிமை வழக்குகளில் வெற்றி பெறவும், தீங்குகளிலிருந்து மீளவும் அந்தத் துறவிக்குச் சிறப்புச் செய்கின்றனர்.

கோமட்டிகள் தங்கள் சடங்குகளை நிகழ்த்தப் பிராமணர்களை அமர்த்துவதோடு ஒரு பிராமணனைத் தங்கள் குருவாகவும் கொண்டுள்ளனர். அவருக்குப் பாசுகர ஆச்சார்யா என்பது எப்போதும் வழங்கும் பெயராகும். இப்பெயர் பதினாறாம் நூற்றாண்டில் பெனுகொண்டாவில் வாழ்ந்து வடமொழி கன்யகா புராணத்தைத் தெலுங்கில் மொழி பெயர்த்தவருக்கு உரியதாக இருந்த பெயராகும். கோமட்டிகளின் அன்றாட நடைமுறைகள் பற்றிய நெறிகளை வகுத்ததோடு 102 கோத்திரங்களைச் சேர்ந்தவர்களைத் தனக்குக் கட்டுப்பட்டவர்களாகவும் இவர் செய்தார். பெனுகொண்டாவில் உள்ள நகரேசுவரசுவாமி கோயில் அர்ச்சகரான கொட்ட அப்பய்ய என்பவரிடம் உள்ள செப்புப் பட்டயத்தின் படி ஒன்று மெக்கென்சி கையெழுத்துச் சுவடிகளின் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. வைசியர்களின் 102 கோத்திரங்களின் குருவான பாசுகர ஆச்சாரியாருக்கு வழங்கப்பட்ட (ஆண்டு புலனாகாத) பட்டயமாகும் அது. அதன் படி ஒவ்வொரு குடும்பத்தினரும் ஒவ்வொரு திருமணத்தின் போதும் அரை ரூபாயும், ஆண்டு ஒன்றுக்குக் கால் ரூபாயும் அவருக்குச் செலுத்துவதாக ஒப்புதல் தந்துள்ளனர். அத்தகைய வரியினை அவருக்குப் பின் பட்டத்திற்கு வந்தவர்களும் இன்று வரை பெற்றுவருகின்றனர். பிரமனுடைய அவதாரமாகக் கருதப்படும் முதல் பாசுகர ஆச்சாரியாரைப் போலவே இவர்களும் துறவினை மேற்கொள்ளாது இல்லறத்தார்களாக இருந்து வருகின்றனர். நாட்டின் பல பகுதிகளிலும் ஒரே சமயத்தில் பலர் பாசுகர ஆச்சாரியார் என்ற பதவியில் இருந்து வருகின்றனர். பெனுகொண்டாவில் ஒருவரும் அதற்கு அருகிலேயே உள்ள ஹொசுபெட்டில் இன்னொருவரும் இருந்து வருவதை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். இவர்கள் அவ்வப்போது முரசு, வெள்ளி முத்திரைத் தண்டு, கச்சை கட்டிய ஏவலர்

ஆகிய பதவிச் சின்னங்களோடு பயணம் மேற்கொள்வர். மக்கள் இவரைச் சிறப்புகள் செய்து வரவேற்பர். சாதியாரிடையேயான பூசல்களைத் தீர்த்து வைப்பதோடு, தண்டத்தொகையும் விதிப்பர். தங்கள் மடத்தின் நடைமுறைச் செலவுகளுக்காகச் சாதி யாரிடையே தொகையையும் வசூலிப்பார். அம் மடங்கள் வரியிலி நிலங்களின் வருமானத்தைக் கொண்டு இயங்கி வருவனவாம்.

குழந்தைகள், லிங்காயதர் தவிர மற்றக் கோமட்டிகள் இறக்கும்போது எரிக்கப்படுகின்றனர். லிங்காயத கோமட்டி கள் மற்ற லிங்காயதர்களைப் போல இறந்தவர்களை உட் கார்ந்த நிலையிலேயே வைத்துப் புதைக்கின்றனர். கவரர்களின் சாவுச் சடங்குகள் பெரிதும் பிராமணர்கள் சாவுச் சடங்குகளை ஒத்தவை. சாவுத் திட்டினைப் பதினாறு நாள்கள் மேற்கொள் ளும் இவர்கள் அச்சமயம் இனிப்புக்களை உண்பதில்லை.

வணிகர்களாகவும் மளிகைக் கடைக்காரர்களாகவும் வட் டிக்கடைக்காரர்களாகவும் கோமட்டிகள் பெரிதும் தொழில் மேற் கொண்டவர்களாக உள்ளனர். சென்னை நகரில் இறக்குமதி யாகும் பொருள்களை விற்பவர்களில் இவர்களே முன்னணி யினர். சைனாபசாரில் பச்சையப்பன் கல்லூரிக்கும் பப்கம் பிராட்வேயுக்கும் இடையே அமைந்துள்ள கடைகள் அனைத்தும் கிட்டத்தட்ட இவர்களுக்கே உரியனவாக உள்ளன. கோமட்டி கள் பலர் துணிக்கடைகள் வைத்தும் உள்ளனர். திரைவாணிகர் பிரிவினைச் சேர்ந்தவர்கள் அனைவருமே கிட்டத்தட்ட கண் ணாடிப் பொருள்களின் வணிகத்தில் ஈடுபட்டுள்ளனர். வட சர்க்கார் பகுதிகளில் சிலர் அபினி, கஞ்சா ஆகியவற்றின் சில்லரை வணிகத்தில் ஈடுபட்டவர்களாக் உள்ளனர். கஞ்சம், விசாகப்பட்டினம், கோதாவரி மாவட்டங்களில் இவர்கள் மலை வாழ் பழங்குடிகளுக்கும் சமவெளியில் உள்ளவர்களுக்கும் இடையே நடுத்தரகர்களாக உள்ளனர். கோமட்டிகளில் பெரும் பாலோர் எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாக இருப்பது அவர் கள் தொழில் முறைக்கு உதவக் கூடியதாக உள்ளது. கூர்த்த நுண்ணறிவு, சுறுசுறுப்பு, சிக்கனம் ஆகியவற்றினுக்குப் பெயர் பெற்ற இவர்கள் செல்வ வளமும் வாய்க்கப் பெற்றவர்கள். ஒரு

கோமட்டி வணிகத்தில் பேரிழப்புக்கு உள்ளாவானாயின் அவன் சாதியினைச் சேர்ந்தவர்கள் அவன் மீண்டும் தலைதூக்க உதவுவர். பொதுவாகச் சாதியினர் அனைவரும் இணைந்து, அறச் செயல்களை மேற்கொள்வதற்கு இவர்கள் முன் மாதிரியினராகக் கூறத் தக்கவர்கள். கன்யகா பரமேசுவரியின் கோயில்கள் அனைத்தும் அறநிலையங்களாகவே உள்ளன எனலாம். சென்னை நகரில் கன்யகா பரமேசுவரி அறக்கட்டளை மற்ற அறச் செயல்களோடு பெண்களின் கல்வி வளர்ச்சிக்கும் தொண்டாற்றி வருகின்றது. 1905-இல் கோமட்டிகள் தென்னிந்திய வைசியர் சங்கம் என்ற அமைப்பினை "வைசியர் பிரிவினரின் அறிவாற்றல், ஒழுக்க மேம்பாடு, சமய நம்பிக்கை, சமூக நலம் ஆகியனவற்றை மேம்படுத்தும் நோக்கத்தோடு" ஏற்படுத்தியுள்ளனர். இச்சங்கம் தன் நோக்கத்தை நிறைவேற்றும் வகையில் தகுதி வாய்ந்த மாணவர்களுக்கு அவர்கள் ஆங்கிலம் மற்றும் இந்திய மொழிகளைக் கற்க உதவித் தொகைகளை வழங்குதல், சாதியினைச் சேர்ந்த ஆதரவற்றவர்களுக்கு அனாதை இல்லங்கள் ஆகியன அமைத்தல் போன்ற திட்டங்களை மேற்கொண்டுள்ளது. இச் சங்கத்தின் நடவடிக்கைகளைச் சாதியின் பெரிய புள்ளிகளான வணிகர்கள், வழக்குரைஞர்கள், ஒப்பந்தப் பணி மேற்கொள்வோர் ஆகியோரைக் கொண்ட ஒரு செயற்குழு நடைமுறைப்படுத்தி வருகின்றது.

கோமட்டிகளின் செல்வ வளம், சமயத்திற்கேற்ப செயல்படும் திறன், சிக்கனம் ஆகியன பற்றிப் பல மொழிகளிலும் கதைகள் வழங்கி வருகின்றன.* எண்ணிக்கையில் மிகுந்தவையாக உள்ள அவற்றுள்ளிருந்து சிலவற்றைத் தேர்ந்தெடுத்து இங்குத் தருகின்றேன்.

### விட்டுணுவும் குருட்டுக் கோமட்டியும்

குருட்டுக் கோமட்டி ஒருவன் தனக்குப் பார்வை கிடைக்க

---

* பார்க்க: கோமட்டிகளின் நகைத் திறனும் மதிநலனும் பற்றிய கதைகள். சி. ஹயவதனராவ், சென்னை, 1907. (See: Tales of Komati Wit and Wisdom. C. Hayavadana Rao, Madras, 1907.)

வேண்டுமென விட்டுணுவை நோக்கித் தவம் செய்தான். இறுதியில் விட்டுணு அவன் முன் தோன்றி உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் எனக் கூறினார். ''ஓ! இறைவா, நான் எனது மாளிகையின் ஏழாவது மாடியிலிருந்து என் பேரப் பிள்ளைகள் தங்கத் தட்டிலிருந்து பணியாரம் தின்றவர்களாகத் தெருவில் விளையாடுவதைப் பார்க்க வரம் தர வேண்டும்'' என அவன் பதிலிறுத்தான்.

அந்தக் குருடன் தனக்குச் செல்வம், சந்ததி, பார்வை ஆகிய மூன்றினையும் ஒரே வரத்தில் பெற்றுக் கொண்ட திறமைக்கு மொச்சி இறைவனும் அவனுடைய விருப்பங்கள் நிறைவேற வரம் அருளினான்.

### கோமட்டியும் திருடனும்

வயதான கோமட்டி ஒருவன் நள்ளிரவில் தன் வீட்டுத் தோட்டத்து மாதுளை மரததடியில் திருடன் ஒருவன் பதுங்கியிருப்பதைப் பார்த்து முக்காலியைக் கொண்டுவா எனத் தன் மனைவியினை நோக்கி உரக்கக் கட்டளை இட்டான். முக்காலி வந்ததும் திருடனுக்கு முன்னால் அதனைப் போட்டு அமர்ந்தவனாக வெந்நீர் கொண்டுவா என அவளை நோக்கிக் கத்தினான். அவன் மனைவி அதனைக் கொண்டு வந்தவுடன் பல்வலியால் வேதனைப் படுபவனைப் போலப் பாவனை செய்தவனாக வெந்நீரைக் கொப்பளித்து அந்தத்திருடன் மீது தொடர்ந்து அவன வியப்பில் ஆழ்ந்தவனாக இருக்கும்படியாக விடியும் மட்டும் உமிழ்ந்து கொண்டிருந்தான். விடிந்தவுடன் அண்டை அயலாரை அழைத்துத் திருடனைப் பிடித்துக் காவலர்களிடம் ஒப்படைத்தான்.

### கோமட்டியும் அவன் பணியாரங்களும்

வாரச் சந்தையில் விற்பதற்காக ஒரு கோமட்டி தட்டில் பணியாரங்கவை எடுத்துச் செல்லும்போது பாதி வழியில் சில திருடர்கள் அவனை நன்றாக உதைத்து அவன் பணியாரங்களைப் பறித்துச் சென்றனர். வெறுந் தட்டோடு சோர்ந்தவ

னாக வீட்டுக்குத் திரும்பும் அந்தக் கோமட்டியைச் சந்தைக்குப் பணியாரங்கள் கொண்டு செல்லும் இன்னொரு கோமட்டி சந்தித்தான். அவன் சந்தையில் பணியாரங்கள் எப்படி விலை போகின்றன என இவனிடம் கேட்டான். அதற்கு அவன், "சந்தை வரை எதற்குப் போக வேண்டும்? பாதி வழியிலேயே மக்கள் வந்து உனது பணியாரங்களைப் பறித்துக் கொண்டு போய்விடுவார்கள்," எனப் பதில் கூறினான். இதன் உட்பொருளை அறிந்து கொள்ளாத அவன் தொடர்ந்து பயணம் செய்து முன்னவனைப் போலத் திருடர்களிடம் நன்கு உதை பட்டுத் திரும்பினான்.

### கோமட்டியும் தேளும்

ஒருநாள் கோமட்டிகள் கூட்டமாகக் கோயிலுக்குச் சென்றனர். அவர்களுள் ஒருவன் கோயில் வாசலில் இருக்கும் விநாயகர் சிலையின் கொப்பூழ் துளையில் விரலை வைக்க அதனுள்ளிருந்த தேள் அவனைக் கொட்டியது. அந்த விரலை மூக்கருகில் கொண்டு வைத்துக் கொண்ட அவன், "எப்படிப்பட்ட நறுமணம். இதுபோல் நான் முன்பு அனுபவித்ததே இல்லை" எனக் கூறினான். இதனைக் கேட்ட இன்னொரு கோமட்டியும் தன் விரலை அங்கே வைத்து அதே போலக் கொட்டுப் பட்ட பின் முன்னவனைப் போலவே நடித்தான். இப்படியாக எல்லோரும் தேளால் கொட்டப்பட்டபின் ஒருவருக்கு ஒருவர் ஆறுதல் கூறிக் கொண்டனர்.

### கோமட்டியும் பால் மீதான வரியும்

முன்னொரு காலத்தில் பேரரசன் ஒருவன் பாலின் விற்பனை மீது வரிபோட அதனால் அனைவரும் மிகுத்த மன வெறுப்புக்கு உள்ளாயினர். பசுமாடுகள் வைத்திருந்த கோமட்டி ஒருவன் அந்த வரி தனக்குப் பெருந்தொல்லையாக இருப்பதாகக் கருதினான். அனைவரும் அமைச்சருக்கு முதலில் கையூட்டுத் தந்துவிட்டுக் கூட்டமாக மன்னனிடம் சென்று அந்த வரிப் பளுவினால் தங்களுக்கு ஏற்பட்டுள்ள தொல்லைகளைப் பற்றி எடுத்துரைத்தனர். அரசன் பாலில் அவர்களுக்கு எவ்வளவு இலாபம் கிடைக்கின்றது எனக் கேட்டான். அவர்கள் அனை

வரும் ஒரே குரலில் "ஒரு பைசாவுக்கு ஒரு பைசா தான் கிடைக்கிறது" எனக் கூறினர். அரசனும் அவர்களுக்கு ஒரு பைசாத்தான் கிடைக்கிறது என நினைத்து அதற்காக அவர் களுக்கு தொல்லைகள் தரக் கூடாது என எண்ணியவனாக உடனே அந்த வரியை விலக்குவதாக ஆணையிட்டான்.

### கோமட்டியும் பாண்டிய மன்னனும்

முன்னொரு காலத்தில் பாண்டிய மன்னன் ஒருவன் தன் அரண்மனையில் உபயோகப்படுத்துவதற்காக வெள்ளியால் பெரியதொரு அண்டாவினைச் செய்தான. அந்தப் புதிய வெள்ளி அண்டாவில் முதன்முதல் சாதாரண பொருளை வைக்காமல் மங்கலமான பொருளை வைக்க வேண்டும் என்ற எண்ணங் கொண்ட அவன் தன் அமைச்சரிடம் ஒவ்வொரு வீட்டாரும் ஒரு சொம்பு பாலினை அந்த வெள்ளிப் பாத்திரத்தில் கொண்டு வந்து கொட்ட வேண்டுமெனப் பறை அறைந்து அறிவிக்கும்படி கூறினான். இதனைக் கேட்ட ஒவ்வொரு கோமட்டியும் அரசர் பெரிய அண்டா நிறையப் பால் ஊற்றுமபடி ஆணையிட்டிருப் பதால் தான் மட்டும் ஒரு சொம்பு தண்ணீர் ஊற்றுவதால் அது வெளியே தெரியப் போவதில்லை என முடிவு செய்தவர் களாக ஒரு சொம்பு தண்ணீரைக் கொண்டு வநது கொட்டினர். இது பற்றி அவர்கள் ஒருவருக்கு ஒருவர் மூச்சுவிட்டுக் கொள்ள வில்லை. கோமட்டிப் பிரிவைச் சேர்ந்தவர்களே முதலில் பாலினை ஊற்ற அரண்மனைக்குச் செல்ல வேண்டியதாக அமைந்துவிட்டது. அவர்கள் மறற சாதிக்காரர்கள் வந்து பாலினை ஊற்றிப் போயிருப்பர் என நினைத்தனர். கண்ணேறு பட்டுவிடக் கூடாது என்பதற்காக அந்த வெள்ளி அண்டா ஒரு திரைக்குப் பின்னால் வைக்கப்பட்டிருந்தது. கோமட்டிகள் ஒருவர் பின் ஒருவராகப் போய்வர அனுமதிக்கப்பட்டனர். வேக மாகத் தங்கள் வேலையினை முடித்தபடி வெற்றிகரமாக ஏமாற்றுச் செய்ததனை எண்ணி மனத்துக்குள்ளாகவே மகிழந்த வர்களாக அவர்கள திரும்பினர். இப்படியாக அந்தப் பாத் திரத்தில் வெறுந்தண்ணீர் மட்டுமே இருந்தது. இந்தச் சமயத்தில் பாத்திரத்தின் உள்ளே இருப்பதை முதன்முதல் பார்க்கும்

பெருமையினை அடைய அரசன் அங்கே வந்து அந்தப் பாத்திரத்தினுள்ளே வெறும் தண்ணீரைப் பார்த்து அதிர்ச்சியடைந்தான். அமைச்சர்களிடம் கோமட்டிகளைக் கடுமையாகத் தண்டிக்கும்படி அவன் ஆணையிட்டான். புத்தி கூர்மையுள்ள கோமட்டிகள் உடனே அரசனிடம் ஓடிவந்து, "கருணை மிகுந்த அரசர் பெருமானே! நீங்கள் இப்படி எங்கள் மீது கொண்டுள்ள கோபத்தைவிட்டு நாங்கள் சொல்வதைச் சற்றே செவிமடுக்க வேண்டும். நாங்கள் உங்களுடைய புதிய அரிய பாத்திரம் எத்தனைச் சொம்பு கொள்ளும் என்ற அளவைத் தெரிந்து கொள்வதற்காகவே ஆளுக்கு ஒரு சொம்பு தண்ணீர் கொண்டு வந்து ஊற்றினோம். இப்பொழுது அதன் அளவு எங்களுக்குத் தெரிந்துவிட்டதால் அதனை நிறைக்கத் தேவையான அளவு பாலை உடனடியாகக் கொண்டு வந்து ஊற்றப் போகிறோம்" எனக் கூறினர். இதனைக் கேட்ட அரசன் மன மகிழ்ந்தவனாக அவர்களை அனுப்பி வைத்தான்.

ஒரு குதிரை யாருடையது என்பதில் ஒரு முகமதியனுக்கும் ஓர் இந்துவிற்கும் இடையே சச்சரவு மூண்டபோது அதன் அடையாளம் பற்றிச் சான்று கூற அழைக்கப்பட்ட ஒரு கோமட்டி 'முன்னால் பார்த்தால் சாயபு குதிரை மாதிரி தெரிகிறது, பின்னால் பார்த்தால் முதலியார் குதிரை மாதிரி தெரிகிறது' எனச் சாதுரியமாகச் சான்று கூறியதாக ஒரு கதை வழங்கி வருகின்றது. ஒரு நடுவர் மற்றொரு வழக்கில் இருவரிடையே ஏற்பட்ட சண்டைபற்றி ஒரு கோமட்டியிடம் அவனுக்குத் தெரிந்ததைக் கூறும்படி கேட்டபோது அவன், அவர்கள் இருவரும் எதிரும் புதிருமாக நின்று கோபமாக உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்ததாகவும் அப்போது ஒரு புயல் வீசவே புழுதி எழுந்தபோது தான் கண்ணை மூடிக் கொண்டதாகவும் அடித்துக் கொள்ளும் ஓசை மட்டும் தன் காதில் விழுந்ததாகவும் யார் யாரை அடித்தார்கள் என்பது தனக்குத் தெரியாதென்றும் சாட்சியமளித்தான் எனவும் ஒரு கதை வழங்குகின்றது.

கோமட்டிகள் பற்றி வழங்கும் பழமொழிகளுள் பின்வருவன குறிப்பிடத்தக்கன:-

1. பட்டாலே பார்ப்பானுக்குத் தெரியும்; கெட்டால் தான் கோமட்டிக்குத் தெரியும்.

2. உப்பு இருக்கா என்று கேட்டால் பப்பு இருக்குன்னு சொல்வான் கோமட்டி.

3. கோமட்டி வீடு பற்றி எரிந்தது போல. (மிகுந்த இழப்பு ஏற்படுவது பற்றி வழங்கும் பழமொழி.)

4. இரண்டு கோமட்டிகள் ஏரிக்கு அந்தப் பக்கம் குசு குசு எனப் பேசினால் அவர்கள் பேசுவது இந்தப் பக்கம் தெளிவாகக் கேட்கும். (கோமட்டிகளின் கர கரப்பான குரல்பற்றி வழங்குவது.)

நாடக அரங்குகளில் மேடையில் கோமட்டியின் பாத்திரம் ஏற்றுள்ளவன் வரும்போது பார்வையாளர்கள் மிகவும் ரசிப்பர். அப்பாத்திரம் ஏற்பவன் கட்டை குட்டையாகக் கர கரப்பான குரல் உடையவனாக இருப்பான்.

'கழுமரத்துக்குத் தக்க கோமட்டி' என்ற பழமொழி வழக்கு ஒன்றும் உள்ளது. உடற்பயிற்சி இல்லாத காரணத்தாலும், நாள் முழுக்க உட்கார்ந்தே கழிப்பதாலும் கோமட்டி உடல் பருத்தவனாக இருப்பான். எனவே கழுமரத்துக்குத் தக்க கனம் உடையவன் எனக் கருதி அவனைக் கழுவில் ஏற்றிவிட்டனர். மறைத்திரு எச். ஜென்சன் அவர்கள் விளக்கப்படி* இந்த நிகழ்ச்சி அறியாயபுரி என்ற ஊரில் நடைபெற்றதாகும். ஒருவன் அவன் செய்த குற்றத்திற்காகக் கழுவில் ஏற்றப்பட வேண்டியவனாக இருந்தான். அவன் பருத்த உடல் உடையவனான ஒரு கோமட்டியினைக் காட்டிக் கழுவிற்கு ஏற்ற கனத்த உடலை உடையவன் அவன்தான் எனக் கூறிக் கழுவேற்றப்படுவதிலிருந்து தப்பித்துக் கொண்டான். இந்தப் பழமொழி ஒருவன் செய்த குற்றத்திற்காகத் தண்டனை அனுபவிக்கும் மற்றவனைக் குறிக்க இன்றும் வழக்கில் உள்ளது.

* வகைப்படுத்தப்பட்ட தமிழ்ப் பழமொழிகள், 1897. (Classified collection of Tamil Proverbs, 1897.) See: also C. Hayavadana Rao. op. cit. and Ind. Ant., XX, 78, 1891.

கோமட்டிகளைத் தானியா சாதி எனக் கேலியாகக் குறிப்பிடுவர். கொத்தமல்லியினை விதைக்கு முன் நசுக்கி உடைத்தே விதைப்பர். அதுபோலக் கோமட்டிகளையும் வன்முறை நெறியினை மேற்கொண்டே வழிக்குக் கொண்டுவர முடியும் என்ற கருத்துப்பட வழங்குவது இப் பழமொழி.

செட்டி என்பதே கோமட்டிகளுக்கு உரிய பட்டப்பெயர். இது மதிப்பு மிக்கவன் எனப் பொருள்படுவதான 'சிரேஷ்டி' என்பதன் சுருக்கம் என்பர். இவர்களுள் சிலர் அய்யர் என்ற பட்டப்பெயரையும் தற்போது தரித்துக்கொள்கின்றனர்.

**கொம்பரர் - Kombara**

பாக்கு மரத்தின் மட்டையின் புறத்தோட்டினால் செய்யப்பட்ட தொப்பி எனப் பொருள்படும் சொல். இது கெலசியரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்தின் பெயர். இத் தொப்பிகள் தென் கன்னடத்தைச் சேர்ந்த ஹொலையர், கொரகர் போன்ற பல சாதியினராலும் அணியப்படுகின்றன.

**கொம்பு - Kombu (stick)**

குருபர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். குச்சி எனப் பொருள்படுவது.

**கொம்மர் - Komma**

ஊது கொம்பு எனப் பொருள்படும் இது கம்மர், மாலர் சாதியாரின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலமாகப் பதியப்பட்டுள்ளது. கொம்மூலர் என்பது திருவிழாக்கள், சாவுச் சடங்குகள் ஆகியவற்றில் கொம்பூதும் தொழிலை மேற்கொண்டுள்ள மாலர், மாதிகர் பணிசவன் ஆகிய சாதியைச் சேர்ந்தவர்களுக்குரிய தொழில் தொடர்பான பட்டப் பெயராகவும் உள்ளது.

**கொம்மி - Kommi**

கோல்லர்களின் ஒரு கோத்திரம். இக் கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள கொம்மி மர விறகினைப் பயன்படுத்துவதில்லை.

**கொம்பலர் - Kompala (houses)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய குலத்தின் பெயர். வீடுகள் என்னும் பொருளது.

**கோனான் - Kōnān**

கோனான், கோனார் என்பன இடையர்களின் பட்டப் பெயர். கோல்லர் சிலர் தங்களைக் கோனான்று என அழைத் துக் கொள்கின்றனர்.

**கோணங்கி - Kōnangi (buffoon)**

தேவாங்கர்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலம். கோமாளி எனப் பொருள்படும்.

**கொண்ட - Konda (mountain)**

தேவாங்கர், மேதரர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப் பாடு உடைய குலத்தின் பெயர். கொண்ட தொரர் என்பதற் குரிய மற்றுமொரு பெயருமாகும்.

**கொண்ட தொரர் - Konda Dora**

கொண்ட தொரர் விசாகப்பட்டினம் மாவட்டத்திலேயே பெரிதும் காணப்படுகின்ற மலைப்பகுதிகளில் பயிர்த்தொழில் செய்வோர். இவர்களைப்பற்றி 1871 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் சர்ஜன் - மேஜர் டபிள்யூ. ஆர். கார்னிஷ் பின்வருமாறு எழுதுகின்றார்:- "கிழக்குத் தொடர்ச்சி மலைப் பள்ளத்தாக்குகளில் காணப்படும் ஆற்றலும் ஆளுமை யும் மண்ணை மதித்து உழைக்கும் பண்பும் வாய்ந்த பொரொசர் (Parja Or Poroja) களுக்கு முற்றிலும் மாறுபட்ட இயல்பை உடையவர்களாக அவர்கள் வாழும் பகுதியினை அடுத்து மலைச்சரிவுகளில் வாழும் பழங்குடிகளே கொண்ட தொரர். இவர்கள் கொண்ட தொரர், கொண்ட காபுகள், ஒசர் என்றும் அழைக்கப்படுகின்றனர். ஒரு புறம் உரிய (Uriya) மொழியும் மறுபுறம் தெலுங்கு மொழியும் செலுத்தியுள்ள செல்வாக்கினை ஒதுக்கி நீககியபின் இவர்களுடைய மொழியினைப்பற்றித்

தெளிய முற்படுவோமாயின், அது பொரசர் மொழியிலிருந்தும் கோண்ட் மொழியிலிருந்தும் பிறந்தது என்பது புலனாகும். நிலத்தின் மீது தங்களுக்கு உரிய உரிமைகள் அனைத்தையும் இவர்கள் இழந்துவிட்டதாகவே தோன்றுகின்றது. அந்த உரிமைகள் தற்போது வடபகுதிப் பழங்குடிகளின் உரிமைகளை ஒத்தனவாக உள்ளன. இவர்கள் பின்னர் வந்து குடியமர்ந்தவர்களின் தயவில் பிழைக்க வேண்டியவர்களாக உள்ளனர். இவர்கள் தங்களைக் கொண்ட தொரர் என அழைத்துக் கொண்டாலும் இவர்களுக்கு மேல் தட்டுவாசிகளான பகடர், இவர்களைக் கொண்ட் காபுகள் என்றே அழைக்கின்றனர். தெலுங்கு பேசும் மேல் தட்டு வாசிகள் யாரும் இல்லாத ஊர்களில் வாழ்பவர்கள் தொரர் எனப்படுகின்றனர். அவ்வாறன்றித் தெலுங்கு பேசும் ஒருவன் ஊரின் தலைமைப் பொறுப்பினை ஏற்றிருக்கும் ஊரில் இவர்கள் வாழ்வார்களாயின் நிலத்தொடு பிணைக்கப்பட்டவர்களான பயிர்த் தொழிலாளர் என்றோ காபுகள் என்றோ அழைக்கப்படுகின்றனர். மண்ணின் மைந்தர்களான இவர்கள் மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில் தாழ்ந்த படிநிலையில் இருப்பதற்கான காரணம் இப்பகுதியில் வந்து குடியேறி அதனைத் தங்கள் உடமை ஆக்கிக் கொண்ட தெலுங்கர்களின் செல்வாக்கே எனலாம். இவர்களோடு குருதி உறவு உடையவர்களான, இவர்கள் வாழும் பகுதிக்கு அப்பால் வடக்கே வாழும் பழங்குடிகளைவிட இவர்கள் மிகுதியும் அடிமைப்படுத்தப் பட்டிருப்பதற்குத் தெலுங்கர்களின் குடியேற்றம் உரியர்களின் குடியேற்றத்தைவிட நெடுங்காலத்திற்கு முன்பே நிகழ்ந்துவிட்டதுதான் காரணம் எனலாம். தெலுங்கர் மாவட்டங்களுக்கு இம்மலைப் பகுதிகளைவிட அண்மையனவாக இருக்கின்றன. இப்பகுதிகளில் தெலுங்கர் வந்து குடியேறினார்கள் என்பதனைவிட இப் பகுதிகளை வென்று அவர்கள் அடிப்படுத்தினார்கள் என்றும் கூறலாம். இது எவ்வாறு நிகழ்ந்திருப்பினும் இதன் விளைவுகள் மிகவும் வருந்தத்தக்கன. தெலுங்கு பேசுபவர்களால் கைப்பற்றிக் கொள்ளப்பட்டுள்ளதான பாசி பெண்டா, மலை மாடுகுலுலு, கொண்டகம்பேறு ஆகியவற்றின் சில பகுதிகள் உரியர்களின் மேற்பார்வையின் கீழ் உள்ள உள்நாட்டுப் பகுதிகளைவிடப் பயிர்த்தொழில் வளத்தில் மிகவும் பின் தங்கியனவாக உள்ளன.

1891 - ஆம் ஆண்டுக்கான கணக்கெடுப்பு அறிக்கையில் திரு எச். எ. ஸ்டுவர்ட், ''இவர்கள் அனைவரும் தெலுங்கினையே பேசுவதோடு அதனையே தங்கள் தாய்மொழி எனவும் பதிந்துள்ளனர். பலர் தாய்மொழி என்பதனைப் பதிவதற்குரிய நிரலில் தங்கள் சாதிப் பெயரைப் பதிந்துள்ளனர். கொண்ட தொரர் பேசும் கிளை மொழியிலிருந்து தொகுக்கப்பட்டது எனக் கூறப்படும் சொற்பட்டியல் ஒன்று பின்னர் எனக்குக் கிடைத்தது. அப்பட்டியல் சரியானதாயின் இவர்கள் பேசும் மொழி கோண்ட் மொழியின் ஒரு கிளைமொழியாகும்'' என எழுதியுள்ளார். சமீன்தாரி உட்பிரிவு ஒன்றினைச் சேர்ந்த துர்க்கி பெட்ரோ எனப்படும் முட்டுக்களின் தலைவன் திரு ஜி.எப்.பாடீசனிடம் கொண்ட தொரர்களும் கோண்ட்களும் ஒருவரே எனத் தெரிவித்துள்ளான். 1901-ஆம் ஆண்டிற்கான கணக்கெடுப்பு அறிக்கையில் திரு டபிள்யூ. பிரான்சிஸ், ''கொண்ட தொரர் பெருமளவில் தெலுங்கினைப் பேசத் தொடங்கிவிட்ட கோண்ட்களின் ஒரு பிரிவினரெனத் தெரிகிறது. தெலுங்கர்களின் பழக்க வழக்கங்கள் சிலவற்றையும் மேற்கொண்டுவிட்ட இவர்கள் ஆவிகளின் வழிபாட்டு நெறியிலிருந்து இந்து சமய நெறிக்கு மாறிக் கொண்டுள்ளனர். தங்களை இந்துக்கள் எனக் கூறிக்கொள்ளும் இவர்கள் பாண்டவர்களையும், தலுபுலம்மா என்ற தேவதையினையும் வழிபடுகின்றனர். மதுவகைகளைக் குடிக்கும் பழக்கம் உள்ள இவர்கள் பன்றி இறைச்சி, ஆட்டு இறைச்சி முதலியவற்றை உண்பதோடு காபுகளின் இல்லங்களிலும் உண்பர்'' எனக் கூறியுள்ளார். கணக்கெடுப்பின்போது பாண்டவகுலம் என்பது கொண்ட தொரரின் பட்டப்பெயர்களுள் ஒன்றாகப் பதியப்பட்டுள்ளது.

பின்வரும் குறிப்பினுக்கு நான் திரு சி. ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன். கொண்ட தொரரிடையே பெரிய கொண்டலு, சின்னக் கொண்டலு என்ற இரு உட்பிரிவுகள் தனித்த இயல்புகள் உடையனவாக உள்ளன. இவர்களுள் முன்னவர் தங்கள் பழைய உரிமைகளைப் பெரிதும் தொடர்ந்து பேணி வருபவர்களாக இருக்கப் பின்னவர்கள் தெலுங்கின செல்வாக்குக்கு ஆட்பட்டவர்களாக உள்ளனர். பகடர் சாதி

யினரோடு தொடர்புடையவர்களாகவாழும் சின்னக்கொண்டலு தெலுங்கர்களினுடைய இல்லப் பெயர்களைப் புறமணக்கட்டுப் பாடு உடைய குலப்பெயர்களாகக் கொண்டிருக்கப் பெத்த கொண்டலு பிரிவினர் பிற மலைவாழ் பழங்குடிகளுக்குரியன வாக உள்ள நாகம், புலி, ஆமை போன்ற குல மரபுச் சின்னங் களின் அடிப்படையில் பிரிவுகளை உடையவர்களாக உள்ளனர். சின்னக்கொண்டலு குலப் பிரிவினரிடையே ஒருவன் தன் அத்தை மகளை மணக்கும் மேநரிக வழக்கம் கடைப்பிடிக்கப்படுவதோடு உடன்பிறந்த அக்காளின் மகளையும் மணந்து கொள்ளும் வழக்கமும் பின்பற்றப்படுகிறது. சின்னக் கொண்டலு பிரிவைச் சேர்ந்த பெண்கள் நாட்டகப் பெண்களைப் போலக் கண்ணாடி வளையல்களையும் பாசிமணிகளையும் அணிகின் றனர். சின்னக் கொண்டலு பிரிவினைச் சேர்ந்த ஆண்கள் குற்றேவல் புரிபவர்களாகவும் அரசுப் பணியாளர்களாகவும் பணியாற்றப் பெரிய கொண்டலு பிரிவினர் பயிர்த்தொழிலில் ஈடுபட்டவர்களாக உள்ளனர். முன்னவர்கள் நாட்டகத்து மக்க ளைப் போல லிங்கண்ணா, கங்கம்மா என்பது போன்ற பெயர் களை உடையவர்களாக இருக்கப் பின்னவர்கள் அவரவர் பிறந்த வாரத்தின் நாள்களுக்கு உரிய பெயரினையே (புத்ர, சுக்ர என்பது போல) தங்களுக்கு உரிய பெயராகக் கொண்டுள்ளனர்.

சின்னக் கொண்டலு பிரிவில் சிறுமியர் பூப்படையும் முன்போ பூப்படைந்த பின்போ மணம் செய்விக்கப்படுகின்ற னர். மண உறவு உறுதி செய்யப்பட்டவுடன் மணமகளின் பெற் றோர் ‘வோலி’ எனப்படும் பரிசப்பணம் ரூபாய் நான்கும் ஒரு சேலையும் பெறுவர். சுக்ர முஷ்டி எனப்படும் கணியன் குறித்துத் தரும் ஒரு நல்ல நாளில் மணமகள் மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லப்படுவாள். அங்கு மணமக்கள் மஞ்சள் நீரில் குளித்தபின் அவர்களின் மாமனார்கள் அளித்த புத்தாடை களைப் புனைந்து கையில் கங்கணமும் அணிவர். அன்றோ அதற்கு மறுநாள் காலையிலோ சுக்கிர முஷ்டி குறித்துத் தந்தி ருக்கும் நேரத்தில் மணமகன் சாதிப் பெரியவர்கள் வழிகாட்ட மணமகள் கழுத்தில் சத்தமானம் எனப்படும் தாலியை அணி

விப்பான். அதற்கு மறுநாள் கையில் உள்ள கங்கணத்தை அவிழ்த்த பின் புதிதாக மணந்து கொண்டவர்கள் குளிப்பர்.

சின்னக் கொண்டலு பிரிவினரிடையே உள்ளதைப்போலவே பெத்த கொண்டலுகளிடையேயும் சிறுமிகள் பூப்படையும் முன்போ பூப்படைந்த பின்போ மணம் செய்விக்கப்படுகின்றனர். ஒருவன் ஒருத்தியை மணம் செய்துகொள்ள முடிவு செய்தவுடன் அவனுடைய தந்தை மூன்று குடம் சாராயத்தை அந்தப் பெண்ணின் வீட்டிற்கு எடுத்துச் செல்வான். அதனை அந்தப் பெண்ணின் தந்தை ஏற்றுக் கொண்டால், அவன் தன் மகளை மணம் முடித்துத் தர உடன்படுகின்றான் என்பது பொருள். அதன்பின் மணமகளுக்கு உரிய விலையான ஐந்து ரூபாய் அவனுக்குத் தரப்படும். மணமகன் வீட்டார் மணமகள் வீட்டாருக்கு மூன்று விருந்துகள் தரவேண்டும். ஒவ்வொரு விருந்துக்கும் ஒரு பன்றி அடிக்கப்பட வேண்டும். அதன்பின் மணமகள் மணமகன் வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுவாள். மணமகள் பூப்படைந்தவளாக இருப்பின் மணமகன் வீட்டோடேயே இருத்தப்பட்டு விடுவாள். பூப்படையாதவளாயின் தந்தையின் இல்லத்திற்குத் திரும்ப வந்து பூப்படைந்த பின் மீண்டும் மணமகன் இல்லம் சென்று சேர்வாள். அப்பொழுது மீண்டும் பன்றி அடித்து விருந்து செய்வர்.

இரு பிரிவினரும் கைம்பெண்கள் மறுமணத்தை அனுமதிக்கின்றனர். பெத்த கொண்டலு பிரிவினரிடையே கைம்பெண்ணாகிவிட்ட அண்ணன் மனைவியைத் தம்பி மணந்து கொள்ளலாம். இரு பிரிவினரிடையேயும் மணமுறிவு அனுமதிக்கப்படுகின்றது. சின்னக் கொண்டலு பிரிவில் ஒருவன் மணமுறிவு செய்துகொண்ட ஒருத்தியை மணந்துகொள்ளும்போது அவளுடைய முதல் கணவனுக்கு இருபத்தினான்கு ரூபாய் செலுத்த வேண்டும். அத் தொகையில் ஒரு பாதியினை அந்த வட்டாரத்தில் உள்ள சாதியைச் சேர்ந்தவர்கள் வழக்கில் இருந்துவரும் விகித அளவில் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வர்.

இரு பிரிவினரும் இறந்தவர்களை எரிக்கவே செய்கின்றனர். பெத்த கொண்டலு பிரிவினர் சாவுச் சடங்கின் மூன்றாம் நாள் பன்றியை அடித்து விருந்திடுவதோடு சாராயமும் தாரளமாக

வழங்குவர். சின்னக் கொண்டலு பிரிவினர் நாட்டவர்களைப் போலவே சின்ன ரோசுச் சடங்கினை நிகழ்த்துகின்றனர்.

பகடர் நிலக் கிழார்களின் கீழ் பயிரிடும் பண்ணைக்காரர்களாக உள்ள சின்னக் கொண்டலுகள் அண்ணா, அய்யா என்ற பட்டப் பெயர்களைத் தரிக்கின்றனர். மற்றவர்கள் தொர என்பதனையே தங்கள் பட்டப்பெயராகக் கொள்கின்றனர். பெத்த கொண்டலு பிரிவினருக்கான பட்டப்பெயரேதும் இல்லை.

விசாகப்பட்டினம் மாவட்டத்தில் உள்ள கொரவனிவலச கிராமத்தில் 1900 – ஆம் ஆண்டில் காரணம் கூறமுடியாத சூழலில் பின்வரும் ஒரு கலகம் நடந்தது. "அந்த ஊரைச் சேர்ந்த கொரமல்லய்ய என்ற கொண்டதொர ஒருவன் தான் தெய்வீக அருள் பெற்றுள்ளதாக நடித்து முகவர் பகுதியின் பல பகுதிகளைச் சேர்ந்த நாலாயிரம் ஐயாயிரம் மக்களை மெல்ல மெல்லத் தன்னைப் பின்பற்றுபவர்களாக ஆக்கிக் கொண்டான். அவன் மேற்கொண்ட செயல்கள் முதலில் எத்தகைய தொல்லையையும் தராததாக இருந்தன. ஏப்ரல் மாத வாக்கில் அவன் தான் பாண்டவர்களில் ஐவரில் ஒருவரின் அவதாரம் எனவும் தனது குழந்தை கண்ணன் அவதாரம் எனவும் கூறியதோடு தான் ஆங்கிலேயரை இந்த நாட்டை விட்டு விரட்டிவிட்டுத் தானே ஆட்சியினை ஏற்கப் போவதாகவும், அதற்கு முதற்படியாகத் தன்னைப் பின் பற்றுபவர்கள் மூங்கில் கழிகளைப் படைக்கலனாகக் கையில் ஏந்தினால், தான் அவற்றைத் தன் மந்திர சக்தியால் துப்பாக்கிகளாக மாற்றிவிடப் போவதாகவும், அதே சமயம் ஆட்சியாளர்களின் ஆயுதங்களைத் தண்ணீராகக் கரைத்துவிடபபோவதாகவும் கூறினான். மூங்கில் கழிகள் வெட்டப்பட்டு மேம்போக்காகத் துப்பாக்கி அமைப்பு உடையனவாகச் செதுக்கப்பட்டன. இதற்கிடையே சுவாமிகள் என அழைக்கப்படும் மரியாதைக் குரியவனாக உயர்ந்துவிட்ட மல்லையா மூங்கில் துப்பாக்கிகளைக் கையில் ஏந்தியவர்களான தன்னுடைய பக்தர்களுக்கும் தன்னைப் பின்பற்றுப்வர்களுக்கும் பயிற்சி அளித்தான். இக்குழுவினர் அதன்பின் தாங்கள் பாச்சிபெண்டாவைக் கொள்ளை

யிடப் போவதாக அறிவித்தனர். மே மாதம் முதல் தேதியன்று அப் பகுதியின் நிலைமையைக் கண்டறிய வந்த இரு காவலர்களை வெறியர்கள் தாக்கி அடித்துக் கொன்றனர். கொலையுண்ட காவலர்களின் உடலை மீட்க முற்பட்ட உள்ளூர் காவற் படையினர் சுவாமியின் பக்தர்களின் அச்சுறுத்தலின் காரணமாக அம் முயற்சியினைக் கைவிட்டனர். விசாகப்பட்டினம், பார்வதிப்பூர், செயப்பூர் ஆகிய இடங்களிலிருந்து நெருக்கடிக் கால காவற்படைப் பிரிவினரை உடன் அழைத்துக் கொண்டவராக மாவட்ட குற்றவியல் நடுவர் தானே அங்கு நேரில் சென்று மே மாதம் 7 – ஆம் நாள் அதிகாலையில் சுவாமியையும் அவருடைய இயக்கத் தலைவர்களையும் கைது செய்ய முற்பட்டார். கூட்டத்தினர் காவலர்களின் செயலைத் தடுக்க முற்பட்டதால் காவலர்கள் துப்பாக்கிச் சூடு நிகழ்த்தும் கட்டாயத்திற்கு உள்ளாயினர். கலகக்காரர்களில் பதினொரு பேர் உயிரிழந்தனர். சிலர் காயமுற்றனர். தப்பி ஓடியவர்கள் தவிர மற்றவர்கள் கைது செய்யப்பட்டனர். அவர்களுள் அறுபது பேர் மீது கலகத்தில் ஈடுபட்டதான வழக்குத் தொடரப்பட்டது. சுவாமி உள்ளிட்ட மூவர் காவலர்களைக் கொன்றதாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட்டனர். இவர்களுள் சுவாமி வழக்கு நடக்கும்போதே சிறையில் உயிர் துறந்தான். எஞ்சிய இருவரும் தூக்கிலிடப்பட்டனர். கண்ணனின் அவதாரம் எனக் கருதப்பட்டு வந்த சுவாமியின் குழந்தையும் இறந்து விட்டது. அதன்பின் கலவரம் முழுவதும் உடனே அடங்கி விட்டது.

கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த கொண்ட காபுகள் பற்றியும் கொண்ட ரெட்டிகள் பற்றியும் கோதாவரி மாவட்ட விவரக் குறிப்பில் திரு எப். ஆர். ஹெமிங்வே பினவருமாறு எழுதுகின்றார்:- "மலையகத்து ரெட்டிகள் எனப்படும் கொண்ட ரெட்டிகள் கோயர்களின் பழக்கவழக்கங்களை ஒத்த சில பழக்க வழக்கங்களை மேற்கொண்டுள்ள காட்டின மக்களின் சாதியினைச் சேர்ந்தவர்கள். பண்படாத தெலுங்கு மொழிச் சொற்களை இவர்கள் முழுவதுமாக உச்சரிப்பதில்லையாகையால் இவர்கள் பேச்சினைப் புரிந்துகொள்வது கடினம.

இவர்களுள் சிலர் கோயர் மொழி பேசுவதாகவும் கூறப்படு கிறது. இவர்கள் கோயர்களைவிட உடல்வாகில் மெலிந்த வர்கள். இவர்கள் கிராமங்களும் அளவில் சிறியனவே. இவர் கள் கோயர்களின் இல்லங்களில் உண்பதில்லை. பாண்டவ ரெட்டிகள், ராஜா ரெட்டிகள், சூரிய வம்ச ரெட்டிகள் என மதிப்புக்குரிய பட்டப்பெயர்களைத் தரித்துக் கொள்ளும் இவர் கள் சாதாரணக் கொண்ட ரெட்டி என்ற பட்டப்பெயரை விரும்புவதில்லை. இவர்களிடையே அகமணக்கட்டுப்பாடு உடைய குலப் பிரிவுகள் உள்ளன. தோற்றத்தில் கோயர்களை ஒத்தவர்களான இவர்கள் அவர்களைவிட எளிய வாழ்க்கை முறையினை மேற்கொண்டிருப்பதோடு மடமை நிரம்பியவர் களாகவும் உள்ளனர். முன்பு குற்றச் செயல்களில் ஈடுபாடு கொண்டிருந்த இனத்தவர்கள் இவர்கள். இடம்விட்டு இடம் மாறிப் பயிரிட்டு வாழ்க்கை நடத்தும் இவர்கள் மாட்டிறைச் சியினையும் பன்றி இறைச்சியினையும் உண்பதில்லை. சைவம், வைணவம் ஆகிய இருவகைச் சமயநெறிகளையும் மேற் கொள்ளும் இவர்கள் சிலபோது சாவுச்சடங்குகளை நடத்தப் பிராமணப் புரோகிதர்களையும் அமர்த்துகின்றனரெனினும் பாண்டவர்கள், மலைப்பகுதிக்கு உரிய ராச்ச எனப்படும் ஆவிகள், முன்னோர்கள், சுமங்கலிகளாக உயிர் நீத்த பெண்கள், முத்தியாலம்மா, அவள் உடன் பிறந்த போடுராசு, சாரலம்மா, உணமலம்மா ஆகிய தெய்வங்களையும் வழிபடுகின்றனர். இறுதி யில் கூறப்பட்ட மூன்று தெய்வங்களை எல்லா ஊர்களிலும் காணலாம். கால்நடைகளைக் காக்கும் தொட்டிகங்கா தேவதை கால்நடைகளை மேய்ச்சலுக்காகக் காடுகளுக்கு ஓட்டும்போது வழிப்படப்படுகின்றது. பரகங்கா எனவும் வழங்கப்படும் இத் தெய்வம் நாட்டகத்தைச் சேர்ந்த மரிடம்மாவையும் கோயர் களின் முத்தியாலம்மாவினையும் ஒத்ததாக காலரா, வயிற்றுப் போக்கு ஆகியவற்றுக்கு உரிய தெய்வமாகவும் கருதப்படு கின்றது. ரேகபள்ளிக்குக் கிழக்கே எட்டுமைல் தொலைவில் உள்ள பெதகொண்டாவில் உள்ள சாரலம்மாவின் கோயிலுக்கு இவர்கள் புனிதப்பயணம் மேற்கொள்கின்றனர். பைசன்ஹில் என வழங்கப்படும் பாபிகொண்டாவில் ஏழெட்டு ஆண்டு களுக்கு ஒருமுறை பாண்டவர் சகோதரர்களின் நினைவாகக்

கொண்டாடப் பெறும் திருவிழாக்களிலும் இவர்கள் பங்கு கொள்கின்றனர். அதற்காகவென்றே சிறப்புறக் கொழுக்க வைக்கப்பட்ட பன்றி பலியிடப்பட்டு உண்ணப்படும். இந்த ரெட்டிகள் கோயர்களைப் போலவே அறுவடைத் திருவிழா வினையும் கொண்டாடுகின்றனர். மூட நம்பிக்கைகளில் உறுதி யான நம்பிக்கை கொண்டவர்களான இவர்கள், மாய மந்திரங் களிலும் நம்பிக்கை உடையவர்களாக உள்ளனர். நோயுறும் போது மாய மந்திரங்களில் தேர்ந்தவர்களை அழைக்கத் தவறு வதில்லை. இவர்களுடைய கிராமங்கள் கோயர்களின் கிராமங் களைப் போலவே குழு அமைப்பினவாகப் பிரிக்கப்பட்டிருப்ப தோடு இவற்றின் தலைவர்கள் தொர, மூட்டதார், வர்ணபெத்த, குலபெத்ரடு என்பது போன்ற பெயர்களால் அழைக்கப்படு கின்றனர். கிராமங்களின் தலைவர்கள் பெட்டதார் என அழைக் கப்படுகின்றார். பெண்களைத் தூக்கி வந்து மணந்துகொள் ளும் மணங்களும் இவர்களிடையே சிலபோது நிகழ்கின்றன. ஒரு மண உடன்பாட்டிற்குப் பெற்றோர் ஒப்புதல் தர விரும்ப வில்லையாயின் மணம் பேசவரும் நேரத்தில் அவர்கள் வீட்டி லிராமல் வெளியேறி விடுவதோடு மணம் பேச வந்தவர்கள் திரும்பச் சென்றபின் அவர்களுக்கு ஒரு கட்டுப் பழைய சோற் றினை அவர்கள் பின்னே அனுப்பி வைப்பர். குழந்தைகள் இறந்தால் இவர்கள் புதைப்பர். வைணவ நெறியினைச் சேர்ந்த ரெட்டிகள் பெரியவர்கள் இறந்தால் எரிக்கின்றனர். சைவ நெறி சார்ந்தவர்கள் புதைக்கின்றனர். வைணவர்களுக்குச் சாதானிகளும் சைவர்களுக்கு ஜங்கம்களும் புரோகிதர்களாகப் பணியாற்றுகின்றனர். ஈம விறகினுக்குத் தீயிடுபவன் குடும்பத் தில் மூத்த ஆண் மகன் ஆவான். சாவுச் சடங்கின் ஐந்தாம் நாள் விருந்து நடத்துகின்றனர். இறந்தவர்கள் மீண்டும் தங்கள் குடும்பத்தில் வந்து பிறப்பதாக இவர்கள் நம்புகின்றனர்.

### கொண்டைகட்டி - Kondaikatti

வேளாளர்களின் ஓர் உட்பிரிவினுக்கு உரிய பெயர். தலை முடியினை முழுதுமாகச் சேர்த்து உச்சந்தலையில் கொண்டை யாக முடிபவர்கள் என்பது பொருள். இப் பழக்கம் வழக்கமாக

மழிக்கப்பட்ட தலைக்குப் பின்புறம் போடப்படும் குடுமிக்கும் மாறுபட்டது.

**கொண்டைட் - Kondaita**

தொழுவர் சாதியின் உட்பிரிவினர்.

**கொண்டையம்கோட்டை - Kondaiyamkottai**

மறவரின் ஓர் உட்பிரிவு.

**கொண்டலர் - Kondalar**

1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பில் வேளாளரின் ஓர் உட்சாதியாகப் பதியப்பட்டுள்ளது. கொண்டலம் பெண்ணின் கூந்தல் எனவும் ஒருவகை நாட்டியம் எனவும் பொருள்படும். இப்பெயர் தேவதாசிச் சாதியினரால் பதியப்பட்டதாகலாம். தேவதாசிச் சாதியினர் சமூகப் படிநிலையில் மெல்ல மெல்ல உயர்ந்தவர்களாக வேளாளர் சாதியினரால் இணைத்துக் கொள்ளப்பட்டவர்களாக மாறி வருகின்றனர். சரியாகப் பொருள் விளங்காததான கொண்டலி என்ற சாதி வட ஆர்க்காடு மாவட்டத்தில் பயிர்த்தொழிலில் ஈடுபட்டுள்ளவர் களாலும் பயிர்த்தொழிலில் ஈடுபடும் கூலிகளாலும் பதியப் பட்டுள்ளதாகும்.

**கோண்ட் - Kondh**

1902-ஆம் ஆண்டுக்கான கஞ்சம் முகவர் பகுதிக்கான ஆட்சி அறிக்கையில் திரு சி.பி. கட்டெரெல் கோண்ட் என்பது இந்திய மொழிச் சொல்லினை அப்படியே ஆங்கிலப் படுத்திய மொழிபெயர்ப்பு ஆகும் என்றும், KONDH என்ற சொல்லினை அத்தகைய எழுத்து வடிவில் ஆங்கிலத்தில் அப்படியே வைத்துக் கொள்ள உணர்வு நிலையிலோ சொல்லாக்க நிலையிலோ தனக் குத் தக்க காரணம் எதுவும் புலனாகவில்லை எனவும் கூறி யுள்ளார்.

"கோண்ட்கள் கஞ்சம் மாவட்டத்தில் மலை சார்ந்த பகுதி களிலும் விசாகப்பட்டினம் மாவட்டத்தின் சில பகுதிகளிலும் காணப்படுவதோடு வங்காளம், மத்திய மாநிலம் ஆகியவற்றி லும் காணப்படுகின்றனர். இவர்கள் தங்களைக் கூயி என

அழைத்துக் கொள்கின்றனர். இப்பெயர் கோதாவரி முகவர் பகுதிக்கும் செயப்பூர் சாமீனுக்கும் தெற்கே உள்ள பகுதிகளுக்கும் உரிய பெயரோடு ஒத்ததாகும். தெலுங்கர்கள் இவர்களைக் கோடுவாண்டுலு என அழைக்கின்றனர். கோண்ட் என்ற சொல்லின் தோற்றம் பற்றி உறுதியாக எதுவும் கூற இயலாதெனினும், குன்று எனப் பொருள்படும் கொண்ட என்ற தெலுங்குச் சொல்லே அதன் மூலமாகலாம் என்று மாக்பெர்சன் சரியான முடிவுக்கு வந்துள்ளார் என்றே நான் கருதுகின்றேன். விசாகப்பட்டினம் மாவட்டத்தில் காணப்படும் கொண்ட தொர கொண்ட காபு என்ற பழங்குடிகளையும், கோடுவாண்டுலு என்றே பெரிதும் வழங்குகின்றனர். இப்பெயர்கள் எல்லாம் மலை எனப் பொருள்படும் கோ அல்லது கூ என்ற வேர்ச் சொல்லிலிருந்து பிறந்தனவாம். 58 உட்பிரிவுகள் கோண்ட்களினிடையே உள்ளதாகப் பதியப்பட்டுள்ளது. இப்பட்டியலில் வேறு சாதியாரின் பெயர்களும் இடம் பெற்றுள்ளன. இதனால் மலைப் பகுதியைச் சார்ந்தவர்கள் எனப் பொருள்படுவதான பெயரையுடைய கொண்டவாண்டுலு, கொண்டலு, கோடுவாண்டுலு முதலியவர்களிலிருந்து கோண்ட் பழங்குடி இனத்தவர்களைப் பிரித்து அறிதல் இயலாததாகி விடுகின்றது. இப்பெயர்கள் மலைப்பகுதிகளில் வாழும் பழங்குடிகள் அனைவருக்கும் பொதுவானதாக வழங்குகின்றன. எடுத்துக்காட்டாக 12,164 பாணொக்கள் தங்களைக் கோண்ட்கள் எனப் பதிந்திருப்பதனைக் கூறலாம்" என 1891 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது.

கூய், கந்தீ, அல்லது கோண்ட் என வழங்கும் மொழியினைப் பற்றிய குறிப்பில் திரு ஜி.எ. கிரியெர்சன் கூறியுள்ளதாவது*:- "கோண்ட்கள் அல்லது கண்ட்கள் ஒரிசா மாநிலத்திலும் அதனைச் சார்ந்து அமைந்துள்ள மாவட்டங்களிலும் வாழும் மலைவாழ் பழங்குடிகள். இவர்களைக் கோண்ட்கள் என அழைப்பதே பெருவழக்கு. ஒரியர்கள் இவர்களைக் கண்ட்கள்

---

* இந்திய மொழிகளின் கணக்கீடு, IV, 1906. (Linguistic Survey of India, IV, 1906.)

என அழைக்கின்றனர். தெலுங்கர்கள் தோண்ட்கள் அல்லது கோட்கள் என அழைக்கின்றனர். தங்களைக் கூய்கள் எனக் கூறிக் கொள்ளும் இவர்கள் மொழியையும் அதற்கேற்பக் கூயி எனப் பெயரிடப்படுவதே பொருத்தமானதாகும். கூய் என்ற சொல் கோண்டுகள் தங்களைக் குறிக்க வழங்கும் பல சொற்களில் ஒன்றான கோயி என்பதனோடு தொடர்புடையதாகலாம். கோண்ட்களின் கிளை மொழியான கோயி கூயிலிருந்து மிகவும் வேறுபட்டதாகும். கோண்ட்கள் ஒரியர் வாழும் நிலப் பகுதிக்கிடையே ஒரியர்களிடையே வாழ்ந்து வருகின்றனர். சென்னை மாநிலத்தில் கஞ்சம், விசாகப்பட்டினம் மாவட்டங்களைப் பிரிக்கும் மலைப்பகுதிகளே இவர்கள் வாழ்விடமாக உள்ளது. வடக்கே அது ஒரிசாவோடு இணைந்த குறுநிலங்களான போக் தசபல்ல, நயகார்க் ஆகியவற்றின் வழியே மகாநதியினைக் கடந்து அங்குல், கோண்ட் மலைகள் வரை தொடர்ந்து நீண்டு செல்கின்றது. இது மேலும் மத்திய மாகாணத்தில் பரந்து பட்டதாகக் காலகண்டியின் வடபகுதியினையும் பாட்னாவின் தென் எல்லையினையும் தொட்டு நீள்கின்றது. கூயிகள் நாற்புறமும் ஒரியர்களால் சூழப்பட்டுள்ளனர். தெற்கே இவர்கள் வாழ்விடம் தெலுங்குப் பகுதியின் எல்லையோடு தொடர்புடையதாக நீள்கின்றது. இவர்கள் மொழி இப்பெரும் பரப்பில் இடத்திற்கு இடம் வேறுபட்டதாக உள்ளது. மொழி வேறுபாட்டினை மிகுதிப்படுத்திக் கூற இயலாதெனினும் ஒரு பகுதியினைச் சேர்ந்த ஒருவன் மற்றொரு பகுதியில் பேசப்படும் கூயி மொழியினை எளிதில் புரிந்து கொள்ளுதல் இயலாது. கும்சூரிலும் அதனைச் சார்ந்த வங்காள மாநிலப் பகுதிகளிலும் பேசப்படும் கிழக்கத்திய கிளைமொழி, சின்னகிமெதியில் பேசப்படும் மேற்கத்திய கிளைமொழி என இரண்டு கிளைமொழிகள் குறிப்பிடத்தக்கவை. வடக்கே கூயி அதன் எல்லைப் பகுதிகளில் வழங்கும் ஆரியமொழி வழக்கின் செல்வாக்கிற்கு உட்பட்டதாக உள்ளது. பாட்னா மாநிலத்திலிருந்து அனுப்பப்பட்ட ஒரு மாதிரி 'சாஸ்டிஸ்' கர்கிக் கலப்பு ஓரளவு பெற்றதாக ஒரிய எழுத்துக்களில் எழுதப்பட்டிருந்தது. 1891 கணக்கெடுப்பில் பதியப்பட்டுள்ள கோண்ட்களின் எண்ணிக்கை 6,27, 388 ஆகும். ஆனால் கோண்ட் மொழி பேசுபவர்களாகப்

பதிந்துள்ளவர்கள் இதனினும் குறைந்த எண்ணிக்கையினரே. இதற்குக் காரணம் கோண்ட்கள் பலரும் தங்கள் தாய்மொழியினைப் பேசும் வழக்கினைத் துறந்து விட்டதேயாகும்.''

''கோண்ட்களின் பண்புகளும் அவர்களுடைய மொழியினைப் போலவே மிகவும் வேறுபாடுடையனவாக உள்ளன. சமவெளியில் வாழும் மக்களோடு தொடர்புகொள்ள வாய்ப்பு உள்ளவர்களின் பண்பு மற்ற பகுதிகளில் வாழ்பவர்களின் பண்பினைப் போல பாராட்டக் கூடியதாக இல்லை. எளிய வாழ்க்கை முறையை மேற்கொண்ட உழைப்பும் தன்மானமும் உடைய அஞ்சா நெஞ்சினரான இவர்கள் நடத்தையில் நேர்மையும், தங்கள் நம்பிக்கைகளில் உண்மையான பற்றும் தங்கள் நிலவுடைமையில் பெருமையும் தங்கள் உரிமைகளில் விட்டுக் கொடுக்காத மனப்பான்மையும் கொண்டவர்கள். லினெபத கோண்ட்கள் உரியர்களைப் போன்ற பழக்க வழக்கங்களை மேற்கொண்டவர்களாக இருப்பதோடு பன்றி இறைச்சியினையும் உண்பதில்லை. காட்டுப் பன்றியின் இறைச்சி இதற்கு விதிவிலக்காகும். கோண்ட்களின் கிராமங்கள் உரியர்களின் கிராமங்களை ஒத்தவை. வீடுகளின் சுவர்கள் மண்ணால் அமைந்தவை. மலைய கோண்ட்களிடையே வேறிடங்களில் இத்தகைய அமைப்பினைக் காண முடியாது. பிற இடங்களில் காண முடியாததான தோட்டங்களின் ஒழுங்கான அமைப்பினையும் இவர்களிடையே காணலாம். இந்தக் காய்கறித் தோட்டங்களில் விளைவனவற்றை உரியர்களிடையே விற்க இவர்களுக்கு வாய்ப்பு உள்ளதும் இதற்கு ஒரு காரணமாகலாம். 1902 – இல் லினெபத முட்டாவில் தோலபெகரே.எனப்படும் கோண்ட்களின் ஆட்சித் தலைவரும், மொளிகொக்கோவும் கூப்பிட்ட குரலுக்குக் காத்திருக்கும் உரியரினப் (Uriyar) பைக்களோடு தங்கள் ஆட்சியின் செல்வாக்கினைப் புலப்படுத்தியபடி இருந்தனர். சில இடங்களில் மதிபபுவாய்ந்த நிலப்பகுதிகள் சொண்டிகளுக்கும் சமவெளியினைச் சார்நத கோண்ட்களுக்குப் பணம் கடன் கொடுத்தவர்களான சௌகார்களுக்கும் உரியனவாகிவிட்டன. அந்தப் பணத்தில் பெரும்பகுதி கோண்ட்களால் குடிக்கவே செலவிடப்

பட்டு விட நிலத்தை கடனுக்குப் பதிலாக உரிமையாக்க் வேண்டிவர்களாக அவர்கள் ஆகிவிட்டனர். கோம்சூர் மாலிய பகுதி தவிர எஞ்சிய பகுதிகளில் கோண்ட்கள் நெல்லினைப் பரந்துபட்ட அளவில் பயிரிடுவதில்லை. பிற பகுதிகளில் உரியர் களே நெல் பயிரிட்டு வருகின்றனர். பயிர்த்தொழிலில் கோண்ட்கள் தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்துவதில்லை. இதனால் கோம்சூர் மாலிய பகுதியினைத் தவிர எஞ்சிய பகுதிகளில் கோண்ட்கள் வெளியே விலைக்கு விற்கக் கூடிய பணப்பயிரைச் செய்யாது, தங்கள் விவசாய விளைபொருள்கள் ஏதும் விற்பனைக்கு என மிச்சம் அற்றவர்களாகப் பற்றாமையில் மூழ்கியவர்களாக உள்ளனர். கிமெதியில் கோம்சூரினைப் பின் பற்றத் தொடங்கியவர்களாக முன்னேற்றம் கண்டுவருகின்றனர். உரியர் மற்றும்சொண்டிகள் ஆகியோர் பிடியிலிருந்து இவர்களை மீட்க நடவடிக்கை எடுக்கப்படுமானால் இவர்கள் வாழ்க்கை வளம் பெருகும் என உறுதிபடக் கூறலாம். சொண்டிகளும் உரியர்களும் நஞ்சை நிலங்களைத் தங்கள் உரிமையாககிக் கொண்டு கோண்ட்களைப் பயிர்த்தொழிலாளர் என்ற நிலையி லேயே பணிக்கு வைத்துக் கொண்டுள்ளனர்.

"பதினைந்து ஆண்டுகளுக்கு முன்புவரை கஞ்சம் மலைப் பகுதிகளைச் சார்ந்த கோண்ட்களைக் கூலி வேலைக்கு அமர்த் திக்கொள்ளுதல் என்பது இயலாது. மாவட்ட அதிகாரிகளின் சிறு மூட்டை முடிச்சைக் கூடச் சுமந்து வர இவர்கள் உடன்பட மாட்டார்கள். சுற்றுப் பயணத்தின்போது தங்கு வதற்கான கூடாரங்கள், பயணத்தின்போது உடன்கொண்டு செல்லும் மூட்டை முடிச்சுகள் ஆகியனவற்றைச் சுமந்துவர அந்த அதிகாரிகளுக்காக யானைகள் ஏற்பாடு செய்யப்பட்டி ருந்தன. இந்தப் போக்கில் மாற்றம் ஏற்பட்டுச் சென்ற பத்து ஆண்டுகளில் கோண்ட்கள் இன்று எத்தகைய மறுப்புமின்றிப் பணிகளை மேற்கொள்கின்றனர். சென்ற சில ஆண்டுகளாகக் கோண்ட்கள் முதன்முதலாக அசாமிலுள்ள தேயிலைத் தோட் டங்களில் வேலை பார்க்கக் குடிபெயர்ந்து சென்றுள்ளனர். இவ்வாறு சென்றுள்ளவர்களின் எண்ணிக்கையினைத் துல்லிய மாகக் கணக்கிட்டுக் கூற இயலாதெனினும், அதைப் பற்றி முழு

விவரமும் அறிந்தவர்கள் அந்த எண்ணிக்கை 3,000 ஆகலாம் என மதிப்பிடுகின்றனர். அரசு ஆணை வழி இவ்வாறு குடி பெயர்ந்து செல்லுதல் தற்போது தடுக்கப்பட்டுள்ளது. கோண்ட்கள் தாங்களே விரும்பி முழு மனத்துடன் இவ்வாறு குடி பெயர்ந்து செல்வதில்லை. இவர்கள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். இத்தகைய அழைப்புக்கு மறுப்பு ஏதும் கூறாது இவர்கள் உடன்பட்டு செல்வதுதான் விளங்காததாக உள்ளது'' எனத் திரு பல்செட் 1902- இல் எழுதியுள்ளார்.* 1901 – ஆம் ஆண்டு பிறப்பிக்கப்பட்ட அரசு ஆணை,† 1901 - ஆம் ஆண்டு அசாம் தொழில் மற்றும் குடிபெயர்ந்து வருவோர் சட்டத்தின் மூன்றாம் பிரிவின்படி வழங்கப்பட்டுள்ள அதிகாரத்தின்படி ஆளுநர் தலைவரின் அவையின் முன் அனுமதியுடன் மாநில ஆளுநர் அவையின் தலைவரான ஆளுநர் இந்தியாவினைச் சேர்ந்த குடிமகன் எவனும் கஞ்சம் மாவட்டத்தின் பகுதிகளாக அட்டவணைப்படுத்தப்பட்டுள்ள மாவட்டங்களிலிருந்து அசாமின் தொழில் மாவட்டங்களுக்கென எவரையும் வேலைக்காக என்று ஆள் எடுப்பதோ அமர்த்துவதோ செல்லும்படி தூண்டுவதோ அதற்கு உதவுவதோ கூடாது எனத் தடை செய்யப்படுகின்றது'' என அறிவிக்கின்றது.

பொண்டகொல் முகவர் பகுதியில் காடுகளின் பாதுகாப்புக்குக் கோண்ட்களின் பணியினைப் பயன்படுத்திக் கொள்ளலாம் என 1908 கஞ்சம் மாவட்ட ஆட்சியாளர் தந்த சில திட்டங்களைச் சென்னை மாநில அரசு ஒப்புக் கொண்டுள்ளது. அத் திட்டங்களின் சுருக்க வரைவு வருமாறு:–‡ பொண்டகொலில் தடுத்து நிறுத்தப்பட வேண்டியவற்றுள் சிறப்பானது 'பொடு' பயிரிடு முறையாகும். இத்தகைய பயிரிடும் முறை மலைச் சிகரப் பகுதிகளிலும் மலையின் மேற்சரிவுகளும்

---

* மனிதன், மார்ச் 1902 (Man, March 1902.)

† அ. ஆ.எண். 1020, பொதுத்துறை, 8.10.1901. (G. O. No. 1020, Public 8th Oct. 1901.)

‡ அ. ஆ. எண் 3005, வருவாய்த்துறை, 3.11.1908. (G.O.No. 3005, Revenue 3rd Nov. 1908.)

பாழ்படக் காரணமாக இருக்கின்றது. கஞ்சம் மாவட்ட நீர்ப்பாசனத்திற்கு மூலமாக உள்ள ருசிகுல்யா ஆற்றின் தலைப் பகுதிகளின் நீர்வளத்தினைக் காக்க இப் பகுதிகளில் காடுகள் அழிந்து அவை பொட்டல் நிலமாக மாறாமல் காக்க வேண்டியது இன்றியமையாதது. கோடை காலத்தில் பொண்டகோலில் காட்டுத் தீ அடிக்கடி மூளவும் இந்தப் 'பொடி'ப் பயிரிடுகையே காரணமாகின்றது. மாவட்ட வன அலுவலர் கோண்ட்களைக் கண்டு பேசியதில் சமவெளியிலும் பள்ளத்தாக்கிலும் இவர்களுக்கு நிலமும் கால்நடைகளும் வழங்கப்படுமானால் இவர்கள் 'பொடு' பயிரிடுகையினைக் கைவிட முன்வருவதாகத் தெரிகிறது. இந்த உரிமையினை இவர்கள் விட்டுத்தர இவர்களுக்கு எருமைகளை வழங்கலாம். பயிர்த்தொழில் பணியில்லாததான ஓய்வான மாதங்களில் இவர்களுக்கு வேலைவாய்ப்பினை ஏற்படுத்தித் தருவது அடுத்து மேற்கொள்ளப்படத் தக்கது. இது தை முதல் ஆடி வரை உள்ள பருவமாகும். நல்ல காலமாக இப்பருவம் காடுகளுக்குத் தீயிடும் பருவமாக அமைந்து விடுகின்றது. எனவே இப் பருவத்தில் காட்டு எல்லைகளை நிலைப்படுத்துதல், தீயிடப்படவேண்டிய பகுதிகளுக்கு எல்லை வகுத்தல், சாலைகள் அமைத்தல், ஆய்வு மேற்செல்பவர்கள் தங்க உரிய கொட்டகைகளை அமைத்தல் எனக் கோண்ட்களை ஈடுபடுத்தப் பலதரப்பட்ட பணிகளை மேற்கொள்ளலாம். இவர்களுக்கு இத்தகைய பணிகளுக்கு எவ்வகையில் ஊதியம் தருதல் என்ற பிரச்சினை ஒன்று எழும். ஒதுக்குப்புறமாக உள்ள நாட்டின் இப் பகுதியில் இவர்களுக்குப் பணம் பெரும்பயன் தரப்போவதில்லை. அவ்வாறு பணமாகப் பெற்றாலும் இவர்கள் 'சுரதா'விற்குச் சென்று குடித்துக் களிக்கவே அதனைச் செலவிடுவர். துணிமணியாகவும் உணவு தான்யங்களாகவும் இவர்களுக்கு ஊதியத்தைத் தருவது நன்மை பயக்கும். இதற்காக அரசுத் துறையில் கடைகளை ஏற்படுத்தி, முறையாகக் கணக்குகளை வைத்துக்கொண்டு, கர்நூல் மாவட்டத்தில் செஞ்சுகளிடையே நடைமுறைப்படுத்தப்பட்டு வருகின்ற ஊதியம் தரும முறையினை இங்கும் நடைப்படுத்துதல் இன்றியமையாததாகும்.

பெர்கம்பூர் அருகே உள்ள மலைகளில் வாழும் கோண்ட்

களின் வாழ்வில் ஏற்பட்டுள்ள மாற்றங்களைக் குறித்து வேதனை யோடு கருத்து வெளியிடும் திரு எஸ். பி. ரைஸ் அவர்கள் பின்வருமாறு எழுதுகின்றார்:-* "இங்கே இவர்கள் தனித்து உரிமையுடையவர்களாக வாழ்ந்தாலும் இவர்கள் ஏழ்மையில் மூழ்கிக் கடைநிலைப்பட்டவர்களாகவே உள்ளனர். ஒரு காலத்தில் இவர்கள் வண்ண நிறங்களில் மிகுந்த ஆர்வம் காட்டினர். கோண்ட்கள் இனத்தவரான ஆண்களும் பெண்களும் சிவப்பு வண்ணங்களில் கோடுகளும் வடிவமைப்புகளும் கொண்ட ஆடைகளையே அணிந்து வந்தனர். வண்ணங்களிடத்து இவர்கள் கொண்டிருந்த வாஞ்சை என்னவாயிற்று? நீலமும் சிவப்புமான தொங்கு வால்களைக் கொண்ட நீண்ட இடை ஆடைகளைக் கைவிட்டு இன்று ஆடையென்றுகூடப் பெயர் கூறத் தகுதியில்லாத கந்தல்களை ஆண்கள் இடையிலே சுற்றித் திரிகின்றனர். முன்பு தங்களை மலர்களால் அலங்கரித்துக் கொள்வதில் பெண்கள் மிகுந்த மகிழ்ச்சியடைந்து வந்ததோடு திறந்த தங்கள் மார்பகங்களின் மீது குலுங்கும் வெள்ளியாலான அணிகளில் பெருமிதமுற்றவர்களாக இருந்தனர். இவர்களை அலங்கரித்த அந்தப் புல்லெல்லாம் எங்குற்றது? இடையில் மட்டும் உடை உடுத்தவர்களாகச் சுற்றித் திரிந்த இவர்களது கபடமற்ற பண்பு என்னவாயிற்று? உயரிய நாகரிகம் என்ற வாடையில் அவை கருகிப் பட்டுப்போய்விட்டன. மலைவாழ் கோண்ட்கள் மிக மதிப்புடைய அரிய அணியாகப் போற்றிப் பேணும் கடமானின் எலும்புகளாலான கொண்டை ஊசிகள் வழக்கிழந்துவிட்டன. மலைவாழ் பழங்குடிகளின் தனிப் பெருமைக்கு உரியதான மலர் அலங்காரங்களும், தலை அலங்காரங்களும் மறைந்துவிட்டன. சோர்ந்த உள்ளத்தவர்களாகப் புத்தார்வ எழுச்சியற்று இன்று கோண்ட்கள் அலைந்து திரிகின்றனர். இவர்கள் இயங்கும்போது இன்று நம் செவிகளில் விழுவதெல்லாம் இவர்களின் கரங்களைப் பிணைத்திருக்கும் கடன் விலங்குகளின் கலகல ஒலியே. எனினும் கோண்ட் மகிழ்ச்சியோடு திருப்தி

---

* தென்னிந்தியர்கள் வாழ்க்கை பற்றி அவ்வப்போது எழுதிய கட்டுரைகள் 1901. (Occasional Essays on Native South Indian Life 1901.)

யுற்றவனாகவே உள்ளான்.''மேலே குறிப்பிடப்பட்ட கொண்டை ஊசி கடமானின் எலும்புகளைக் கொண்டு தயாரிக்கப்படுவது. அதனைக் கோண்ட் பழங்குடி ஆண்கள் தங்கள் கொண்டையில் குத்திக்கொள்வர். முள்ளம்பன்றியின் முள்ளைச் சிலபோது இவர்கள் கொண்டை ஊசியாகப் பயன்படுத்துகின்றனர்.

கஞ்சம் பகுதியினைச் சேர்ந்த கோண்ட்கள் பற்றித் திரு சி. எப். மக்கார்டியெ சுருக்கமாகச் சுவைப்படப் பின்வருமாறு எழுதியுள்ளார்:-* ''ஒரியர்களின் வழக்கமான உணவு அரிசியே. அறுவடையே அடுத்து வரும் இரண்டு மூன்று மாதங்களிலும் கோண்ட்களும் அரிசியினையே உணவாகக் கொள்கின்றனர், பிப்ரவரி மாதத்தில் இவர்கள் மலையில் விளையும் மொச்சை யினைச் சேகரித்து அதனோடு உலர்ந்த இலுப்பை, மாங்காய், மாங்கொட்டை ஆகியவற்றைச் சேர்த்து நல்ல மாவாக அரைத்து வைத்துக்கொண்டு அதனோடு காட்டில் கிடைக்கும் கிழங்குகளையும் பயன்படுத்தியவர்களாகக் கோடைக்காலத்தை ஓட்டி விடுகின்றனர். தென் மேற்குப் பருவமழை பெய்யத் தொடங்கியவுடன் புஞ்சைப் பயிர்களான வரகு, தினை, மலை நெல், இந்தியச் சோளம் ஆகியவற்றை விதைக்கின்றனர். இவை ஆகஸ்ட்மாதத்தில் அறுவடைக்குத் தயாரானவுடன் உணவுப் பொருள்கள் தட்டுப்பாடினறிக் கிடைக்கத் தொடங்குகின்றன. கோடைக்காலத்தைப் பொதுவாக இவர்கள் பசி மிகுந்த காலம் என்ற பொருளில்'சுக்கி காலோ' என்கின்றனர். இப் பருவத்தில் தான் மக்கள் ஒட்டி உலர்ந்த வயிற்றினை உடையவர்களாகக் காணப்படுவர். கோண்ட்கள் பயிரிடும் விளைபொருள்களுள் மஞ்சளே மிகுந்த மதிப்பு வாய்ந்தது. இது விளைந்து அறு வடைக்கு வர இரண்டாண்டுகள் ஆகும். ஆதலால் இதனைப் பயிரிட மிகுதியும் உழைக்க வேண்டியுள்ளது. பயிர் இளமை யாக இருக்கும்போது சூரிய வெப்பத்திலிருந்து காக்க நிழலிட வேண்டும். பின்னர் கிழங்கினைத் தோண்டவும் வேக வைக் கவும், விற்பனைக்கு ஏற்ப உலர்த்தவும் மிகுதியும் உழைத்தாக வேண்டும். சமவெளிப் பகுதிகளில் புகையிலையைப் பெருமளவில்

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை – 1881. (Madras Census Report, 1881.)

பயிரிடுகின்றனர். வீட்டுப் புறக்கடைத் தோட்டங்களிலும் மற்ற இடங்களில் பயிரிடுவதைப் போலவே புகையிலை பயிரிடு கின்றனர். கோண்ட்கள் புகை ஊதுபவர்களாகையால் இதனைப் பயிரிடுவதிலும் மிகுந்த கவனம் செலுத்துகின்றனர். கடுக்காய், டாசம் பட்டு, பட்டுப் புழுக் கூடு, கெட்டிப் பிசின் ஆகிய காடுபடு பொருள்களைத் திரட்டும் இவர்கள் அவற்றை பாணொக்களிடம் சிறிய அளவில் பிற பொருள்களுக்குப் பொதுவாக உப்புக்குப் பண்டமாற்றுச் செய்து கொள்கின் றனர். (செங்குத்தான பாறைகளிலும், நெடிதுயர்ந்த மரங்களி லும் ஏறுவதில் திறமை வாய்ந்தவர்களான கோண்ட்களும், பெணியர்களும் தேனும் தேன் மெழுகும் சேகரிக்கின்றனர் எனக் கூறப்படுகிறது. கோண்ட்கள் பின்வரும் உரியப் பெயர்களையுடைய நான்கு தேனீ வகைகளிடையே வேறுபாடு கண்டறிந்துள்ளதாகத் தெரிய வருகின்றது.* அ) பாகமொகு- பெரிய தேனீ (Apis dorsata), ஆ) சட்டபுரி மொகு - ஏழு அடுக குகளாகக் கூடு கட்டும் தேனீ, (Apis indica) இ) பிச்சின மொகு - விசிறி வடிவானான கூட்டினைக் கட்டும் தேனீ, ஈ) நிகிடி மொகு - சின்னஞ்சிறு தேனீ. நீர்ப்பாசன வசதியுடைய பள்ளத்தாக்குகளிலும் தாழ்ந்த பகுதிகளிலும் நன்செய் பயி ராக நெல் பயிரிடுகின்றனர். இயற்கையில் கிடைக்கும் ஈரம் வீணாகாது காக்க வரப்புக்கள் அமைப்பதில் இவர்கள் மிகுந்த நுட்பமும் முயற்சியும் காட்டுகின்றனர். சமதளமாக நிலத் தினையாக்க கோண்ட்கள் ஒரு மரக்கட்டையினைப் பயன்படுத் துகின்றனர். ஓர் இணை எருமை மாடுகளையும் இந்தக் கட் டையினையும் பயன்படுத்தி மிக விரைவாக நிகழ்த்துவதற்கு அரியது எனத் தோன்றும் மேடும் பள்ளமுமான காட்டுப் பகுதியினை இவர்கள் வியக்கத்தக்க வகையில் சமதளமாகச் செய்துவிடுகின்றனர். புஞ்சை நிலத்தில் பயிரிடுகையில் 'குமேரி' காடழித்தல் முறையினையே பெரிதும் பின்பற்றுகின்றனர். இம் முறையில் வளமும் செழிப்புமான காட்டுப் பகுதியினை எரித்து அழித்துப் பயிரிட்டபின் மூன்று ஆண்டுகள் முதல் முப்பது

---

* அக்ரிகல்சரல் லெட்ஜர் சீரிஸ், கல்கத்தா, எண் 7, 1904. (Agrical. Ledger Series, Culcutta, No.7, 1904.)

ஆண்டுகள் வரை கூட அந்த நிலப் பகுதியினை வெறும் தரிசாக விட்டுவிடுவர். மக்கள் தொகையின் நெருக்கத்தினைப் பொருத்துத் தரிசாகக் கிடக்கும் கால இடைவெளியின் அளவு அமையும். குடிய கோண்ட்களே இத்தகைய 'குமேரி' பயிரிடு முறையில் ஈடுபட்டுக் காடுகளை அழிப்பதான குற்றத்தினைச் செய்பவர்கள். நிலத்தை முறையாக உழுது பயிரிடத் தேவையான கலப்பை, கால்நடைகள் ஆகியன இல்லாதிருத்தலே இவர்கள் இந்த முறையினைப் பின்பற்றுவதற்குரிய காரணமாகும். மிக அரிதாகச் சிறிய அளவில் நெல் பயிரிடும்போது கைகளாலும் கால்களாலுமே இவர்கள் நிலத்தைப் பண்படுத்துகின்றனர். இம்முறைப்படி ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உட்பட அனைவரும் நீர் பாய்ச்சப்பட்ட சேற்று வயலினை அது விதைக்க ஏற்ற பக்குவத்தை அடையும்வரை கூடி மிதித்துத் திருத்துவர்.

"கோண்ட்கள் குழந்தைகளாக இருக்கும்போது தலைமுடியினை நீள வளர்ப்பர். வாலிபப் பருவத்தில் அதனைச் சேர்த்துக் குடுமியாக முடிவர். தலைப்பாகையினை அரிதாகவே அணிகின்றனர். இடையினைச் சுற்றிக் குறுகிய நீண்ட துணியினை உடுப்பர். அதனுடைய வண்ணக் கட்டங்களோடு கூடிய முனைகள் இரண்டும் முன்னும் பின்னும் தொங்கும். காலநிலை குளிராக இருக்கும் பருவங்களில் கெட்டியான வேட்டியால் உடலைப் போர்ததுக் கொள்வர். கோண்ட்களின் போர் உடை பல பகுதிகளைக் கொண்டது. மார்பில் தோலாலான ஒரு கவசத்தை அணியும் இவர்கள், பார்ப்பவர்கள் மனத்தில் மலைப்பு ஊட்டுவதான காட்டெருமையின் கொம்புகளும், மயில் தோகைகளும் பொருத்தி அமைக்கப்பட்ட சிவப்பு வண்ணத் தொங்கட்டானை முதுகில் அணிந்திருப்பர். கோண்ட் பெண்கள் முழங்கால் வரை தொங்கும் சிவப்பு வண்ண அல்லது பல வண்ணப் பாவாடையினை அணிகின்றனர். உடலின் மேற் பகுதியினை மறைக்கும் வகையில் அவர்கள் ஆடை ஏதும் அணிவதில்லை. பானோ பெண்கள் பொதுவாக உடலின் மேற்பகுதியினை மறைக்க ஆடை ஒன்றினை அணிகின்றனர். கோண்ட் பழங்குடிப் பெண்கள் அனைவருமே முகத்தில் பச்சை குத்திக் கொள்கின்றனர். (பெண்கள் பத்து வயதடையும் சமயம்

காது குத்தும் சடங்கோடு கூட முகத்தில் பச்சை குத்துவதும் நிகழ்த்தப்படுகின்றது. பயிரிடுகையில் மண்ணைக் கொத்தப் பயன்படுத்தப்படும் கருவிகள், மீசை, தாடி முதலியன பச்சை குத்தும்போது தீட்டப்படும் உருவங்களாகும்.) பாசிமணிகளாலான அணிகளையும், பித்தளை வளையல்களையும் இவர்கள் அணிந்தாலும், மூட்டுக்கு மூட்டு அவை அமைப்பில் வேறுபடுவனவாக உள்ளன. கோம்சூர் மலையகங்களின் சிலபகுதிகளில் கண்ணாடிப் பாசிமணிகளையும், பித்தளைப் பாசிமணிகளையும் மணமான பெண்கள் மட்டுமே அணிய அனுமதிக்கப்படுகின்றனர். கன்னியர் புல்லால் பின்னப்பட்ட அணிகளால் மட்டுமே தங்களை அலங்கரித்துக் கொள்ளலாம். வாழ்வரசிகளான பெண்கள் பல வடிவமைப்புக்களையுடைய பத்துப் பன்னிரண்டு காதணிகளை அணிகின்றனர். பல பகுதிகளில் சிறுமியர் மண நாள்வரை காதுத் துளைகளில் ஈர்க்குக் குச்சிகளை மட்டுமே அணிந்திருந்து பின்னர் மணத்தின்போது அவற்றுக்குப் பதிலாகப் பித்தளையாலான வளையல்களை இட்டுக் கொள்கின்றனர். நாட்டிய நிகழ்ச்சிகளில் கலகலவென ஒலித்து இசைக்கும் காற் சிலம்புகள் இன்றியமையாதன. பொன்னாலோ வெள்ளியாலோ ஆன மூக்குத்திகளை இவர்கள் அனைவரும் அணிகின்றனர் எனலாம். (கஞ்சம் மலையகங்களைச் சேர்ந்த கோண்ட்கள் பற்றித் தரப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு.* "தங்கள் தலைமுடியினை அலங்கரித்துக்கொள்வதிலேயே இவர்கள் மிகுந்த ஆர்வம் காட்டுகின்றனர். மிகுந்த கருத்துடன் தலைமுடியினை வளர்க்கும் இவர்கள் அதனை எண்ணெய் பூசிச் சீவி நெகிழ்வான பெரிய கொண்டையாக இட்டுக் கொள்கின்றனர். அது அவிழ்ந்து விடாதபடி கலைமான்களின் எலும்பாலான பல வகையான கொண்டை ஊசிகளையும், வண்ணச் சீப்புக்களையும், பல அலங்கார வடிவமைப்புகள் கொண்ட வெண்கலக் கொண்டை ஊசிகளையும, அதில் குத்திப் பொதிந்து கொள்கின்றனர். அதன்பின் அக்கூந்தல் முடிச்சினை இடப் புறத்துக் கண் புருவத்தின் மேல் வைத்துப் பொதிகின்றனர். அதில் இவன் தன் மனத்துக்குப் பிடித்த வகையில் பனங்காடை, கொக்கு,

---

* மெயில நாளிதழ், 1894. (Madras Mail, 1894.)

நாரை முதலிய பறவைகளின் இறகுகளையோ வண்ணக்கவர்ச்சி மிக்க மயிலிறகுகளையோ சொருகிக் கொள்கின்றான். அந்த இறகுகளுள் இரண்டு முன்னே அசைந்தாடப் பல பின்னால் தொங்கியபடி இருக்கும். இவனுடைய எளிய வாழ்க்கையில் இந்தக் கொண்டை முடிச்சு இவனுக்குப் பையாகவும் ஊசி களைக் குத்தி வைக்கும் குமிழாகவும் பயன்படுகின்றது. இத னுள்ளேயே இவன், தன் கத்தி, பாதி புகைக்கப்பட்ட சால் இலையினில் புகையிலை வைத்து சுருட்டிய சுருட்டு, ஓர் இலையில் மடித்து முள்ளால் குத்திச் சுருட்டிக் கட்டப்பட்ட மூக்குப்பொடி ஆகியனவற்றைத் திணித்துக் கொள்கின்றான். இவன் தன் இடையில் நீலம், சிவப்பு ஆகிய வண்ணங்களில் புதுமையாகக் கரையமைக்கப்பட்ட உள்ளூரில் நெய்யப்பட்ட வெண்மையான துணியினையே உடுத்துகினறான். தோளில் எப்போதும் இவ னோடு இணைப்பிரியாததாக இருக்கும் தாங்கியினைச் (ஒரு வகைக் கோடரி) சுமந்து செல்வான். அதில் பித்தளை வளை யங்களால் அலங்கரிக்கப்பட்ட மரப்பிடி போட்ட பலவித வடி வினவான கத்திகளும் இருக்கும். சில இடங்களில் இவன் வில்லும் அம்பும் சுமந்து செல்லக் காணலாம். வளைக்கப்பட்ட மூங்கிலாலான வில், நார் கொண்டு நாண் அமைக்கப்பட்டு அதன் கைப்பிடிகள் மயிலின் வெண்தோகைகளால் அலங்கரிக் கப்பட்டிருக்கும்.

கோண்ட்கள் வேட்டையில் மிகுந்த விருப்பம் உடையவர் கள். கோடைக்காலமே வேட்டைக்கேற்ற பருவம். ஒரு கட மானோ காட்டெருமையோ இந்தப் பருவத்தில் அம்பினால் காயப்படும்போது தப்பிப் பிழைத்தல் அரிது. இவர்கள் அவ் வாறு தங்களால் காயப்படுத்தப்பட்ட விலங்குகளைத் தொலை வையும் உடலுக்கு ஏற்படும் களைப்பையும் பற்றிக் கவலைப் படாது வேட்டை நாய்களைப் போல இறுதிவரை பின் தொடர்வர். வில், அம்பு, தாங்கி என்ற வேட்டைக்குரிய ஆயுதங்களை இவர்கள் ஏந்திச் செல்வர். தாங்கி என்பது நல்ல வெட்டுக்காயம் ஏற்படுத்தக் கூடிய கனமற்ற கோடரி யாகும். கோண்ட் பழங்குடிப் பெண்கள் மது அருந்து வதில்லை. ஆண்களில் பெரும்பாலோர் அப்பழக்கத்தில் ஊறியவர்கள். சாகோ மரம் (Solopo: *Caryota urens*)

மலரும் கோடைப் பருவத்தில் இவர்கள் மதுவில் அதிக நாட்டம் கொள்வர். காடுகளில் வளமான மரங்களின் நிழலில் கொட்டகை அமைத்துக்கொண்டு தொடர்ந்து பல நாள்கள் குடித்துக் களித்தவர்களாகப் பொழுதைக் கழிப்பது இவர்கள் வழக்கம். மதுவகைகளுக்காக மரங்களில் ஏறிக் கள்ளிறக்கும்போது இப் பருவத்தில் மரங்களில் இருந்து விழுந்து பலர் இறக்க நேரிடுகின்றது. விருந்துகளும் பலிப் பூசைகளுமே அளவுக்கு மீறிக் குடிக்கக் காரணமாகும் நிகழ்ச்சிகள். பலிப்பூசைகளின் போது மட்டின்றிக் குடித்து மகிழும் இவர்கள் இலுப்பைப் பூவிலிருந்து வடிக்கப்பட்ட சாராயத்தையோ அரிசி அல்லது கொபெரியிலிருந்து வடிக்கப்பட்ட சாராயத்தையோ அச் சமயங்களில் குடித்து மகிழ்வர். மணம் முடிக்கப்பட்டவுடன் கோண்ட் பெண்கள் கணவனுடன் ஒழுக்கத்துடன் வாழ்க்கை நடத்தத் தொடங்கிவிடுகின்றார்கள். எனினும் இளைஞர்களான ஆண்களும் கன்னியரும் பெருமளவில் கூடா ஒழுக்கத்தினராக முறையற்ற உடலுறவில் ஈடுபடுகின்றனர். கோடைப் பருவத் தொடக்கத்தில் மீன் பிடிக்கவும் இலுப்பைக் காய்களைச் சேகரிக்கவும் காட்டுப் பழங்களைப் பொறுக்கி வரவும் குழுக்கள் அமைத்துக் கொண்டு தொழிற்படும்போதே இத்தகைய கூடா ஒழுக்க உடலுறவுகள் மிகுதியும் நிகழ வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன. அதே சமயம் இவர்கள் மான உணர்வும் மிகுந்தவர்களாக உள்ளனர் என்பதனை ஒப்புக் கொள்ள வேண்டும். காதல் வலையில் கட்டுண்ட இருவருக்கிடையே உள்ள தகாத உறவு கண்டு பிடிக்கப்பட்டு அதனை மற்றவர்கள் அறிய நேரும் போது அவர்கள் இருவரும் தற்கொலை செய்து கொள்வதும் அடிக்கடி நிகழ்வதுண்டு.

"சால மரக்கட்டைகளைக் கோடரியால் செதுக்கியபின் வீட்டுக்கான கட்டுமான மரமாக அவைகளை அமைத்து, அவற்றின் மீது கரையான் அரிக்க இயலாத புல்லைக் கொண்டு கூரை வேய்ந்து கோண்ட்களும் பாணோக்களும் தங்கள் இல்லங்களை அமைத்துக் கொள்கின்றனர். மூங்கில் வளர்ந்துள்ள காட்டுப் பகுதிகளில் சால் மரத்திற்குப் பதிலாக மூங்கில்களைப் பயன்படுத்துகின்றனர். கோண்ட்களின் இல்லங்கள் தரமான

வையாக இருப்பினும் அவற்றின் கூரை முகடு எட்டடி உயரத்திற்கு மேற்பட்டதாக எப்போதும் அமைவதில்லை. இறவாரம் தரையிலிருந்து நான்கடி உயரத்திற்கு உட்பட்டதாகவே இருக்கும். பருவ மழை பெய்யும்போது வீசும் கடுங்காற்றில் குடியிருப்புக்கள் சாய்ந்துவிடாமல் காப்பதற்காகவே இத்தகைய தாழ்ந்த குடியிருப்புக்களை இவர்கள் அமைக்கின்றனர்.

"கோண்ட்கள், பாணோக்கள், உரியர்கள் ஆகியோரிடையே மண உறவுகள் நிகழ்வது ஏற்றுக் கொள்ளப்படுவதில்லையாயினும் பாணோக்கள் கோண்ட் பழங்குடிப் பெண்களைத் தங்களுடன் வந்து வாழும்படி ஆசைகாட்டி அழைத்துச் செல்வதான நிகழ்ச்சிகள் நிகழவே செய்கின்றன. மணமான கோண்ட் பெண்ணுடன் பாணோ ஒருவன் தகாத உறவு கொள்வானாயின் அவன் அந்தப் பெண்ணை மீண்டும் தன்னோடு வாழ ஏற்றுக்கொள்ளும் அவள் கணவனுக்கு ஒரு 'பரன்ஞ்சோ' அல்லது ஓர் எருமையோ ஈடாகத் தருவதோடு அதனோடு கூட ஒரு பன்றி, ஓர் ஆடு, ஒரு கூடை நெல், ஒரு ரூபாய், ஒரு காவடிக்கான பானைகள் ஆகியவற்றையும் கொடுத்தல் வேண்டும். அத்தகைய தவறினை ஒரு கோண்ட் இழைப்பானாயின் அவன் ஒரு எருமையினை மட்டும் தண்டமாகச் செலுத்தினால் போதுமானது. அதனை ஊரார் அனைவரும் கொன்று விருந்து சமைத்து உண்ணப் பயன்படுத்துவர். இது போன்ற சமயங்களில் அவளுடைய கணவன் அவளை மீண்டும் ஏற்றுக் கொள்வதோடு, அவளை மீண்டும் சேர்த்துக் கொள்ளும்போது அவள் கருவுற்றிருந்தாலும் அதனைப் பொருட்படுத்துவதில்லை. இத்தகைய நிகழ்ச்சிகள் அடிக்கடி நிகழவே செய்கின்றன. கணவன் தானாகவே முன் வந்து மனைவியினை மணமுறிவு செய்வது மிக அரிதாகவே நிகழ்கின்றது. ஆனால் மனைவி கணவனிடமிருந்து மணமுறிவு பெற்று வேறொருவனை நாடிச்செல்லும்நிகழ்ச்சிகள் இல்லாமல் இல்லை. இத்தகைய நிகழ்ச்சிகள் நிகழுமாயின் அவளுடைய தந்தை கொண்டிகள் எனத் தன் மகளுக்கு அன்பளிப்பாக மணமகனிடமிருந்து மணத்தின்போது பெற்றவைகளைத் திருப்பித் தரக் கடமைப்பட்டவனாவான்."

விசாகப்பட்டினம் மாவட்ட முகவர் பகுதி சார்ந்த பழங் குடிகளைப் பற்றிய ஒரு குறிப்பில் திரு டபிள்யூ. பிரான்சிஸ் பின்வருமாறு எழுதுகின்றார்:-* "இப்பகுதிகளில் காணப்படும் பழங்குடிகளுள் எண்ணிக்கையில் மிகுந்தவர்கள் கோண்ட்களே. இவர்கள் சுமார் 1,50, 000 பேர் என்ற பேரளவுடைய எண் ணிக்கையினராக உள்ளனர். இவர்களுள் பெரும்பான்மையோர் கஞ்சம் மாவட்டத்தில் பெரும்பான்மையினராக உள்ள விவரங் கள் பெரிதும் தொகுக்கப்பட்டுள்ள காடுவாழ் பழங்குடியினரான கோண்ட்கள் அல்லர். மாறாக இவர்கள் இந்தக் காட்டினப் பழங்குடிகளின் வழிவந்து, தலைமுறைக்குத் தலைமுறை நாகரிக உலகத்தோடுகொண்ட தொடர்புகள் காரணமாக நாகரிக வளர்ச்சியில் பல படிநிலைகள் முன்னேறியவர்கள். விசாகப்பட்டினத்தில் காணப்படும் உண்மையான பிஸம் கடக் வட்டத்திற்கு வடக்கே வாழும் பழங்குடி இனத்தவரான தொங்கிரிய (காட்டு) கோண்ட்களே. தேஸ்ய கோண்ட்கள் இவர்களுக்குத் தென் மேற்காக உள்ள பகுதியில் நீம்கிரியினைச் சுற்றி வாழ்பவர்கள். குட்டிய (மலை) கோண்ட்கள் குணுப்பூர் வட்டத்தின் வடகிழக்குப் பகுதியில் வாழ்பவர்கள். குட்டிய கோண்ட் பிரிவு ஆண்கள் பெரிய வெள்ளிப் பாசிமணிகளா லான சங்கிலிகளையும், பருத்த பித்தளைக் கடுக்கன்களையும் அணிகின்றனர். உடை உடுப்பதில் இவர்கள் மற்ற மலைவாழ் இனத்தவர்களையே பின்பற்றுகின்றனர். இப்பிரிவினைச் சேர்ந்த பெண்கள் சிறப்பான நிகழ்ச்சிகளின்போது ஒருவகைத் தலைப் பாகை அணியும் வழக்கம் உடையவர்களாயினும் இடுப்புக்கு மேல் மார்பகங்களைக் கிட்டத்தட்ட மறைக்கும் பெரிய பாசி மணி மாலைகளை மட்டுமே அணிகின்றனர். முன்னங்கைகளில் ஒரு பாதியினை நிறைக்கும்படி கனமான பித்தளை வளையல் களையும் அணிகின்றனர். தங்கடி பச முறை எனப்படும் மண மாகாத கன்னியர் உறங்குவதற்கெனத் தனிக்குடிசை அமைக்கும் வழக்கினை இவர்கள் அதிக ஆடம்பரம் இன்றிப் பின்பற்றி வருகின்றனர். தாங்கள் நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள

---

* விசாகப்பட்டின மாவட்ட விவரக்குறிப்பு. (Gezetteer of Vizagapatnam district.)

இளைஞர்களை மணப்பது பற்றி இப் பெண்கள் தங்கள் பெற்றோருக்கு உணர்த்தப் போதுமான வாய்ப்புகள் உள்ளன. இறந்தவர்களின் ஆவி (சிறப்பாகப் புலியினால் கொல்லப்பட்டவர்களின் ஆவி) திரும்பவும் வந்து உயிர் வாழ்பவர்களைத் துன்புறுத்தாதிருக்க தனிச் சடங்குகளை நிகழ்த்துகின்றனர். குலமரபுச் சின்னங்களின் அடிப்படையிலான குலப் பிரிவுகள் தவிர இவர்களிடையே வேறு உட்பிரிவுகள் இல்லை.* நாகரிக முற்றவரான ஆண், பெண் கோண்ட்களின ஆடைகள் சாதாரணமானவையும் புதுமை ஏதும் அற்றவையுமாகும். நாகரிகம் பெற்ற இந்தக் கோண்ட்கள் தங்கள் பழங்குடிக்கு உரிய ஜாதர தேவதை முதல் இந்து சமயத்தைச் சார்ந்த தெய்வங்கள் வரை எல்லாத் தெய்வங்களையும் வழிபடுகின்றனர். தங்கள் மூதாதையர்கள் பின்பற்றி வந்த மணம், சாவு தொடர்பான பழங்காலப் பழக்க வழக்கங்கள் முதல் சமவெளியில் வாழும் தெலுங்கர்கள் மேற்கொள்ளும் பழக்க வழக்கங்கள் வரை எல்லாப் பழக்க வழக்கங்களையும் பின்பற்றுகின்றனர். கோண்ட்களின் நல்ல கோண்ட் மொழி முதல் கொச்சையான கோண்ட், திரிந்த தெலுங்கு வரையான கிளைமொழிகளை இவர்கள் பேசுகின்றனர். குலமரபுச் சின்னங்களின் அடிப்படையிலான தங்கள் குலப் பெயர்கள் சமவெளியில் மக்கள் பின்பற்றும் இல்லப் பெயர்களாகத் திரிந்து சிறப்புக் குன்ற இடம் தந்து விட்டனர்."

பழங்காலத்தில் காசி, மெண்தொர, பொல்டி, பொலொ என்ற பெயர்கள் கொண்ட நான்கு கோண்ட்கள் பித்தளைப் பானை அளவு பெரிய கண்களையும், கோடரி போன்ற பற்களையும் யானையின் காது போன்ற காதுகளையும் உடையவர்களாகத் தங்கள் மூதாதையான மண்டிய பாட்ரொவினை போடில் உள்ள ஜொரசிங்கியிலிருந்து அழைத்து வந்து அவனுக்கும் அவன் குழந்தைகளுக்கும் மகசிங்கியிலும், குர்டிலி பரக்கும் மாவிலுமுள்ள பெடொகொடொ, பள்ளிகுட, புசங்கிய

* கோண்ட்களிடையே காணப்படும் குலமரபுச் சின்னங்கள் பற்றியதொரு சுவையான குறிப்புத் திரு ஜெ. இ. பிரெண்ட்பெரைரா அவர்களால் வெளியிடப்பட்டுள்ளது. பார்க்க: வங்காள ஆசியக் கழக இதழ், LXXIII 1905. (Journal cf Asiatic Society of Bengal LXXIII, 1905.)

ஆகிய பகுதிகளின் உரிமையினை அவர்கள் சச்சரவுகளைத் தீர்த்து வைக்கும் பொறுப்பும் உரிமைகளுக்கு உதவும் பொறுப்பும் தங்களுடையது என்ற அடிப்படையில் தந்த தாக ஒரு வழக்கு நிலவுகின்றது. கோண்ட்களின் தோற்றம் பற்றிய பின்வரும் வழக்கியல் வரலாற்றினைத் திரு எ.பி. செயராம் முதலியார் தருகின்றார். ஒரு காலத்தில் இந்த மண் உலகம் முழுதும் ஈரமாக இருந்தது. இந்த உலகில் கரபூதி, தர்தபூதி என்ற பெயர் கொண்ட இரண்டே இரண்டு பெண்கள் மட்டும் இருந்தனர். அவ்ர்கள் இருவருக்கும் ஒவ்வொரு ஆண் குழந்தை இருந்தது. கசரோடி, சிங்கரோடி என்பன அக்குழந்தைகளின் பெயர்கள். இவர்கள் அனைவருமே பூமியின் உள்ளிருந்து வந்தவர்கள். இவர்களோடு நங்ககொச்ச, பதொகொச்ச என்ற இரண்டு சிறுசெடிகளும் தோன்றின. அவற்றையே இவர்கள் உயிர்வாழ உணவாகக் கொண்டிருந்தனர். ஒருநாள், கரபூதி சமைக்க இந்தச் செடிகளை வெட்டிக் கொண்டிருக்கும்போது எதிர்பாராது அவள் தனது இடக்கையின் சுண்டு விரலினை வெட்டிக் கொண்டாள். அதிலிருந்து குருதி தரையில் கொட்டியது. நனைந்த ஈர மண்ணின் மீது அக்குருதி விழுந்தவுடன் அந்த மண் உலர்ந்து இறுகியது. அவள் அதன் பின் உணவினைச் சமைத்து அதில் கொஞ்சத்தைத் தன் மகனுக்கு அளித்தாள். அவன், அவளிடம் அன்று உணவு வழக்கத்தைவிடச் சுவையாக இருப்பது ஏன் எனக் கேட்டான். அதற்கு அவள் அன்று இரவு தனக்குக் கனவு வரலாம் என்றும் அதில் அதற்கான காரணம் தெரிந்தால் கூறுவதாகவும் பதிலிறுத்தாள். மறுநாள் காலையில் அவள் அவனிடம் தனது அறிவுரைப்படி அவன் செயல்பட்டால் இந்த உலகத்தில் வளமான வாழ்க்கை பெறலாம் என்று கூறியதோடு அவன் தன்னிடம் தாய் என்று கொஞ்சமும் கருணை காட்டாது முதுகில் உள்ள தசையினை வெட்டி எடுத்துப் பல துண்டங்களாக்கிப் பூமியில் குழிகள் தோண்டிப் புதைத்து அக்குழிகளைக் கற்களால் மூடிவிட வேண்டும் என்றும் கூறினாள். இதனை அவள் மகன் செய்து முடித்த பின் அவள் உடலின் எஞ்சிய பகுதி எரிக்கப்பட்டது. ஈரமாக இருந்த மண் உலர்ந்து இறுகியது. அதில் பலவகை விலங்குகளும் மரங்களும் தோன்றின. ஒரு கௌதாரி தன் கால்களால்

பூமியினைக் கிளறப் பூமியிலிருந்து ராகி, சோளம், துவரை, நெல் ஆகியன முளைத்து வெளிவந்தன. அந்த இரண்டு சகோதரர்களும் தங்கள் தாயினைப் பலியிட்டதால்தான் பூமித்தாய் இத்தனை வளங்களையும் நிறையத் தந்துள்ளாள் எனவே இனி ஆண்டுக்கு ஒரு முறை உடன்பிறந்தவர்களையோ மற்றும் யாரையேனுமோ பலிதர வேண்டும் எனப் பேசி முடிவு செய்தனர். போரபணோ என்ற தெய்வம் தன் மனைவியுடனும் குழந்தைகளுடனும் தர்தபூதியிடமும் அந்த இரண்டு இளைஞர்களிடமும் வந்தது. இந்த இரண்டு இளைஞர்களுக்கும் போரபணோவின் பெண்கள் மணம் செய்விக்கப்பட்டனர். அவர்கள் குழந்தைகளைப் பெற்றனர். அந்தக் குழந்தைகளை அவற்றின் தாத்தாவான போரபணோவும் அவற்றின் பெற்றோரும் தங்களுக்குள் சமமாகப் பங்கிட்டுக் கொண்டனர். தர்தபூதி இவ்வாறு குழந்தைகளைப் பங்கிட்டுக் கொள்வதால் போரபணோவின் மகன் காசரோடி, சிங்கரோடியின் குழந்தைகளுக்கு மம்மோ முறை ஆக வேண்டிவரும் எனக்கூறி இப்பிரிவினையை உடன்படவில்லை. பிறக்கும் குழந்தை பெண்ணாயின் அவள் மணம் செய்து கொள்ளும் போது அவள் தான் மம்மோவிற்கு ஒரு ரூபாய் தர வேண்டும். போரபணோவின் மகள் பெற்றெடுப்பது ஆணாயின் அவன் வளர்ந்தபின் அவன் வேட்டையாடும் விலங்கின் தலையினை மம்மோவிற்குத் (போரபணோவின் மகனுக்கு) தரவேண்டும் எனவும் ஏற்பாடு செய்யப்பட்டது. போரபணோ ஒரு வீட்டைக் கட்டினான். காசரோடியும், சிங்கரோடியும் இரண்டு வீடுகளைக் கட்டினர். அப்போது கரபூதி கனவில் தோன்றிக் காசரோடியிடமும் சிங்கரோடியிடமும் அவர்கள் இன்னொரு மனித உயிரினைப் பலியாகக் கொடுத்தால் நிலம் நல்ல வளமுள்ளதாக ஆவதோடு அவர்கள் கால் நடைகளும் பலவாகப் பெருகும் எனக் கூறினாள். அவ்வாறு பலியிட ஏற்ற மனிதன் இல்லாத காரணத்தால் அவர்கள் ஒரு குரங்கினைப் பலியிட்டனர், அதன்பின் கரபூதி மீண்டும் கனவில் தோன்றித் தான் மாற்றாகத் தரப்பட்ட குரங்குப் பலியினால் திருப்தியுறவில்லை என்றும் அவர்கள் ஒரு மனிதனைப் பலியிட்டு ஆக வேண்டும் என்றும் கூறினாள். அந்த இரு ஆண்களும் தங்கள் எட்டுக் குழந்தைக

ளோடும் பன்னிரண்டு ஆண்டுகள் அலைந்து அவ்வாறு பலி யிடப்படுவதற்கு உரியவனைத் தேடினர். அதன் முடிவில் அவர்கள் ஓர் ஏழையினை எதிர்ப்பட்டனர். அவனுக்கு நான்கு வயதில் ஒரு குழந்தை இருந்தான். அவர்கள் அந்த ஏழைக்கும் அவன் மனைவிக்கும் குழந்தைகளுக்கும் ஓராண்டு காலம் உணவு, உறையுள், உடை ஆகியனவற்றை வழங்கினர். அதன் பின் அவர்கள் தாங்கள் செய்த உதவிக்குக் கைமாறாக அந்த ஏழையின் குழந்தையினைப் பலிகொடுக்கத் தர வேண்டும் எனக் கேட்டனர். அதற்கு அந்தக் குழந்தையின் தந்தையும் உடன்பட்டான். அந்தக் குழந்தை ஓடிவிடாமல் இருக்கக் கால் களிலும் கைகளிலும் விலங்கிட்டு நன்கு ஊட்டி வளர்க்கப்பட் டான். பலிச் சடங்குக்காகத் தானியத்திலிருந்து மதுவினை வடித்ததோடு உச்சியில் கொடி ஒன்றினைத் தாங்கிய மூங்கிலும் தரையில் நடப்பட்டது. மறுநாள் அவ்வாறு நடப்பட்ட கம் பத்தின் அருகே பன்றி ஒன்று பலியிடப்பட்டு விருந்தும் நிகழ்த் தப்பட்டது. அதற்கு மறுநாள் அந்தச் சிறுவன் ஒரு கம்பத்தில் பிணைக்கப்படுவானென்றும் அதற்கும் அடுத்தநாள் அவன் பலியிடப்படுவான் எனவும் அறிவிக்கப்பட்டது. பலியிடப் படும் நாளுக்கு முதல் நாள் இரவில் ஜன்னி (பூசாரி) ஒரு நாணலை எடுத்து அதனைத் தரையில் பல இடங்களில் சொரு கிப் பார்த்தான். அது எட்டு அங்குல ஆழம் வரை சென்ற இடத்தில் தெய்வங்களான தத்பாணோதேவனும் தசபாணோ தேவியும் இருப்பதாக நம்பினான். அந்த இடத்தைச் சுற்றி ஏழு மரக்கட்டைகளைக் குறுக்கும் நெடுக்குமாக நிறுத்தி அந்த அமைப்பின் நடுவே ஒரு முட்டை வைக்கப்பட்டது. பல பகுதி களிலிருந்தும் கோண்ட்கள் அங்கே வந்து கூடிக் குடித்துக் களிப்பதில் ஈடுபட்டனர். அந்தச் சிறுவனை அவர்கள் எள்ளி நகையாடியதோடு அவன் தங்களுக்கு விற்கப்பட்டு விட்டதாக வும் அவனுடைய கவலையால் அவன் பெற்றோரே வருத்தத் திற்கு உள்ளாவர் எனவும் மக்களின் நலனுக்காக அவனை அவர்கள் பலியிடப் போவதாகவும் கூறினர். அவனைத் தெய் வங்கள் உறைவதாகக் கருதப்பட்ட இடத்திற்கு இட்டுச் சென்று கயிற்றால் கட்டிய பின் கோண்ட்கள் அவனை இறுகப் பிணைத் தனர். அந்த மரக் கழிகளால் அமைக்கப்பட்ட மேடையின்மீது

அவனைக் குப்புறப் படுக்கச் செய்து இறுகப் பிடித்தபின் அவன் முதுகு, கை, கால்கள் ஆகியவற்றிலிருந்து தசைத் துண் டங்களை வெட்டி எடுத்துக் கோண்ட்கள் தாங்கள் வழிபாடு நடத்துகின்ற இடங்களில் புதைத்தனர். குடிநீர் கிணற்றின் அருகேயும், ஊரெல்லையினைச் சுற்றியும் சில துண்டங்கள் புதைக்கப்பட்டன. எஞ்சிய உடலின் பகுதியினைச் சிதையில் வைத்து இரண்டு மரத் துண்டுகளைக் கடைந்து பற்றவைத்த நெருப்பினை அதில் மூட்டி அதற்கு எரியூட்டினர். அதற்கும் மறு நாள் ஓர் எருமையினைப் பலியிட்டு விருந்து நடத்தினர். அதற் கும் மறுநாள் நடப்பட்ட மூங்கில் கம்பத்தினை அகற்றி ஊருக்கு வெளியே கொண்டு சென்றபின் தெய்வத்திற்குக் கோழியும் முட்டைகளும் படைத்தனர். மனிதப் பலிக்குப் பதிலாக எருமை யினைப் பலி கொடுக்கும் வழக்கம் மேற்கொள்ளப்பட்டு விட்ட பிறகு இன்றுங்கூட ஜன்னியினால் பின்வரும் கருத்துரை ஓதப்படு கின்றது:– "ஓ ஆண் அடிமையே வருவாய்.பெண் அடிமையே வரு வாய். நீ என்ன சொல்கின்றாய்? நீ உரக்கக் கத்துவது எதனால்? நீ ஹட்டியினால் விலங்கிடப்பட்டுக் கொண்டுவரப்பட்டுள் ளாய். உன்னை அழைத்துத் தொம்பன் விலங்கிட்டுள்ளான். நீ என்னுடைய குழந்தையாக இருந்தாலும் என்னால் உனக்கு எதுவும் செய்ய இயலாது. நீ ஒரு பானை சோற்றுக்கு விற்கப் பட்டவன்."

சென்னை அருங்காட்சியகத்தின் மனித இனவியல் ஆய்வுப் பகுதி சில ஆண்டுகளுக்கு முன் கஞ்சத்தைச் சேர்ந்த பலிகுடு விலிருந்து மெரியா மனிதப் பலி தருவதற்கென்று அமைக்கப் பட்ட கம்பம் ஒன்றினைப் பெற்றது. கரையானால் துளைக்கப் பட்டு வெறுங்குடுவை போலாகிவிட்ட அது போன்ற கம்பம் ஒன்றே ஒன்றுதான் தற்போது இருப்பதாக நான் நம்புகின் றேன். காவல்துறையின் துணைக் கண்காணிப்பாளரான கர்னல் பிக்கன்சு அவர்களால் கொண்டுவரப்பட்ட அது தனிக் காவல் படையினர் பயிற்சி பெறும் களத்தில் தரையில் நட்டு வைக்கப்பட்டிருந்தது. 1906–இல் வேல்சு இளவரசருக்கும் இள வரசிக்கும் முன்னர் தங்கள் நடனத்தை நிகழ்த்த அழைத்து வரப்பட்ட குழுவினைச் சேர்ந்த அனுபவம் மிக்க கோண்ட்கள் தங்கள் பழைய காட்டுமிராண்டி வழக்கத்தின் சின்னமாக



மெரியா பலிச் சடங்குக் கம்பம்

உள்ள அந்த மரக் கம்பத்தினைக் கண்டு மிகவும் வியப்புக்கு உள்ளாயினர்.

"நல்ல விளைவுக்காக முறையாக மனிதப் பலியிடப்படு வதற்குச் சான்றாகக் கோண்ட்கள் பலியினைக் கூறலாம். நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இந்த வழக்கத்தினை ஒடுக்கி நிறுத்துவதில் ஈடுபட்ட ஆங்கிலேய அதிகாரிகள் தரும் விவரங்களிலிருந்தே நாம் இந்த மனிதப் பலி பற்றித் தெரிந்து கொள்ள முடிகின்றது. இந்தப் பலியானது தரி பெண்ணு அல்லது பெர பெண்ணு எனப்படும் மண்மகளைத் திருப்திப் படுத்தத் தரப்படுவது. இவ்வாறு பலி தருவதால் நிலத்திலிருந்து நல்ல விளைவு கிடைக்கும் என்றும் மக்கள் நோய்களிலிருந்தும் விபத்துக்களிலிருந்தும் காக்கப்படுவர் என்றும் நம்புகின்றனர். மஞ்சளினைப் பயிரிட்டு விளைவிக்க இத்தகைய பலி அவசியம் தரப்பட வேண்டும் எனக் கோண்ட்கள் கூறுவர். மனித இரத் தம் பூமியில் சிந்தப்படவில்லையானால் அதில் பயிரிடப்படும் மஞ்சளுக்கு நல்ல ஆழ்ந்த சிவப்பு வண்ணம் ஏறாது என அவர்கள் கூறுகின்றனர். மெரியா பலிக்கு ஆட்படுபவன் விலை கொடுத்து வாங்கப்பட்டாலே அவனைப் பூமித் தேவதை ஏற்றுக் கொள்வாள். அல்லது அவன் முன்பே பலியாகத் தரப்பட்ட வனுடைய மகனாகவோ அல்லது அவனுடைய தந்தையாலோ அவனை வளர்ப்பவராலோ பலிக்காக எனக் குழந்தைப் பரு வத்திலேயே நேர்ந்து விடப்பட்டவனாகவோ இருக்க வேண்டும்" எனத் திரு பிரேசர் எழுதுகின்றார்.*

1837-இல் திரு ரஸ்ஸல் தன் அதிகாரத்தின் கீழிருந்த மாவட்டங்களைப் பற்றிய அறிக்கையில் பின்வருமாறு எழுது கின்றார்.† "காட்டுமிராண்டித்தனமான மனிதப் பலி தொடர் பான சடங்குகள் என்ற பெயரில் மக்களின் உயிரைப் போக்கும் முறைகள் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு வகையாக நடை பெறுகின்றன. கோம்சூர் மாலையகங்களில் இப்பலி ஆண்டு தோறும் நிலத்தெய்வமான தாதா பெண்ணுக்கு மயிலின் மாதிரி உருவின் கீழ் நல்ல பருவமழையினையும் சிறந்த விளைச்சலையும்

* The Golden Bough, 1900.

† ஆவணங்களிலிருந்தான தொகுப்புகள் – இந்திய அரசு, எண், ஐந்து. மனிதப்பலிகளும் குழந்தைக் கொலைகளும், 1854.

பெறுவதற்காகத் தரப்படுகின்றது. இந்தச் சடங்குகளின் பொறுப்பினைச் சில முட்டாக்கள் ஏற்றுக் கொள்கின்றன அல்லது அதன் பொறுப்பினைச் சுற்றுமுறையில் ஆண்டுக்கு ஒரு முட்டா நிகழ்த்துகின்றது (முட்டா ஒரு வட்டாரத்தைச் சேர்ந்த சில குடியிருப்புக்களைக் கொண்ட தொகுதியாகும்) அவ்வப் போது தரப்படும் இந்தப் பலிகளேயன்றிச் சில தனிப்பட்ட முட்டாக்களும் தனிப்பட்ட ஆள்களும் கூடத் தங்களுக்கு நிகழ உள்ள பேரிடர், நோய், கால்நடைகளுக்கு வரும் நோய் ஆகிய வற்றிலிருந்து காத்துக்கொள்ள இப்பலியினை நிகழ்த்துவதுண்டு. நன்கு வளர்ந்த ஆண்களே பலியிடத் தகுந்தவர்களாகக் கருதப் படுகிறார்கள். இத்தகைய பலியாள்களுக்கு அதிக விலை தர வேண்டியிருப்பதே இவர்களுக்கான மதிப்புக்குரிய காரணம். குழந்தைகளை விலைக்கு வாங்கிப் பல ஆண்டுகள் குடும்பத்தில் வளர்த்துப் பின்னர் சூழ்நிலையின் தேவை ஏற்படும்போது அக் குடும்பத்தினர் அவனைக் கொடுமையான பலிக்கு உள் ளாக்குவர். இவ்வாறு பலிக்கு ஆளாகின்றவர்களை அன்பு டனேயே நடத்துகின்றனர். அவர்கள் வயதில் குறைந்தவர் களாயிருப்பின் அவர்கள் அன்றாட நடைமுறையில் எத்தகைய கட்டுப்பாடுமின்றியே நடமாட விடப்படுவர். பெரியவர்களாக வளர்ந்து விட்டவர்கள் தங்கள் தலைவிதியினைப் புரிந்து கொண்டவர்களாக இருக்கும் காரணத்தால் அவர்களை விலங் கிட்டே காத்து வருவர். எங்களால் இந்த அவலத்திலிருந்தும் மீட்கப்பட்டவர்களுள் பெரும்பாலோர் பெற்றோர்களாலோ நெருங்கிய உறவினர்களாலோ விற்கப்பட்டவர்களே. இவ்வாறு பலிக்காக விற்கப்படுவது பொதுவாக எங்கும் காணப்படும் ஒரு வழக்கமாகும். வளர்ந்த இளைஞர்கள் இந்த மனிதர்களை விற்கும் வணிகத்தில் ஈடுபட்டுள்ள கயவர்களால் கடத்திச் செல்லப்பட்டு விற்கப்படுகின்றனர். பலிக்கு ஆளாகின்றவனை விலை கொடுத்து வாங்கியே பலியிடவேண்டும் என்பது விதி குற்றவாளிகளையோ போரில் சிறைப்பிடிக்கப்பட்ட கைதி களோ பலிக்குத் தகுதியானவர்களாகக் கருதப்படுவதில்லை. பலி ஆள்களுக்கான விலையினைப் பித்தளைப் பாத்திரங்கள், கால்நடை, தானியம் எனப் பலவாறாகச் செலுத்துகின்றனர். ஜானி எனப்படும் பலிச் சடங்கை நடத்தும் பூசாரி எச் சாதியைச்

சேர்ந்தவனாகவும் இருக்கலாம். எனினும் அவன் சிலைக்கு மலர்கள் தீப தூபங்கள் ஆகியவற்றைப் பூசை போடும்போது ஏழு வயதுக்கும் குறைந்த தும்ப எனப்படும் கோண்ட் பழங் குடியினைச் சேர்ந்த குழந்தையினைக் கொண்டே பூசையினை நிகழ்த்த வேண்டும். இந்தப் பணியினை மேற்கொள்ளும் குழந்தைக்கு ஊராரின் பொதுச்செலவிலேயே உணவும் உடை யும் வழங்குவதோடு அக் குழந்தையினை வேறு யாரோடும் சேர்ந்து உண்ணவோ புனிதமற்ற செயல்களில் ஈடுபடவோ அனுமதிப்பதில்லை. பலிக்கு ஒரு மாதத்திற்கு முன்பே விருந்தும் களியாட்டமும் மாலைகளால் அலங்கரிக்கப்பட்ட மெரியா பலி ஆளினைச் சுற்றி நடனம் ஆடுதலும் தொடங்கிவிடும். அந்தக் காட்டு மிராண்டித்தனமான சடங்கு நடத்தப்படும நாளுக்கு முந்திய நாள் பலியாகப் போகின்றவனுக்கு நிறையக் கள்ளி னைத் தந்து போதையூட்டி உட்கார வைத்துவிடுவர். அல்லது தேவை ஏற்படின் அவனை மயிலின் மாதிரி உருவம் அமைக்கப் பட்ட கம்பத்தோடு பிணைத்தும் வைப்பர். கூடியுள்ள பெருந் திரளானவர்கள் இசைக்கு ஏற்பச் சுற்றி வந்து ஆடியவர்களாக மண்மகளைப் பார்த்து, 'ஓ! பூமித் தெய்வமே! நாங்கள் உனக் குப் பலி தருகின்றோம். எங்களுக்கு நல்ல விளைச்சலையும் பருவ மழையினையும், உடல் நலத்தையும் தா' எனக் கூறுவர். அதன் பின் அவர்கள் பலியாக உள்ளவனைப் பார்த்து, 'நாங்கள் உன்னை விலை கொடுத்து வாங்கினோம். உன்னைச் சும்மா பிடித்து இழுத்து வந்துவிடவில்லை. இப்பொழுது நாங்கள் வழக்கப்படி உன்னைப் பலியிடுகின்றோம். எங்கள் மீது பாவம் ஏதுமில்லை' எனக்கூறுவர். அதற்கும் மறுநாள் பலியாக உள்ளவனை மீண்டும்போதை ஊட்டி அவன் உடலில் எண்ணெய் பூசுவர். கூடியுள்ளவர்கள் அனைவரும் எண்ணெய் பூசப்பட்டுள்ள அவன் உடல் உறுப்பினைத் தொட்டு அந்த எண்ணெயினைத் தங்கள் நெற்றியில் பூசிக்கொள்வர். இசை முழங்க அனைவரும் ஊர்வலமாக ஊரையும் அதன் எல்லை யையும் பலியாகின்றவனையும் மயில் தோகைகளால் அலங்கரிக் கப்பட்ட ஒரு கம்பத்தைச் சுமந்தவர்களாகச் சுற்றி வருவர் மூன்று கற்களின் வடிவினதான பித்தளை மயிலின் உருவம் புதைக்கப்பட்டிருக்கும் ஜக்காரி பெண்ணோ எனப்படும் ஊர்த்

தேவதை அருகேயே எப்பொழுதும் வைக்கப்பட்டிருக்கும் பலிக் கம்பத்தை அடைந்தவுடன் அவர்கள் ஒரு பன்றியினைக் கொன்று அதன் குருதியினை அதற்காகவென்றே தோண்டி வைக்கப்பட்டுள்ள குழியில் சென்று நிறையும்படி விடுவர். முன்பே போதையூட்டும் முயற்சியில் வெற்றி பெற்றிருக்க நேரின்மயங்கிய நிலையினை அடைந்தவனாக உள்ள பலி ஆளினைப் பிடித்து அவன் முகம் அந்தக் குருதிச் சேற்றில் அமிழும்படியாகக் குப்புறத்தள்ளி இசை முழக்கத்தின் பேரிரைச்சலினிடையே அவனை மூச்சுத் திணறும்படி செய்வர். அதன்பின் ஜானி பூசாரி அவன் உடம்பிலிருந்து ஒரு தசைத் துண்டினை வெட்டி அதனை மயிலின் மாதிரி உருவமும் ஊர்த் தேவதையும் வைக்கப்பட்டுள்ள இடத்தினருகே புதைப் பான். மற்றவர்களும் அதேபோல அவன் உடலிலிருந்து தசைத் துண்டங்களை வெட்டி அதனைத் தங்கள் தங்கள் ஊர்களுக்கு எடுத்துச் சென்று உரிய சடங்குகளுக்குப் பின் ஊர்த்தேவதை யின் அருகே ஒரு பகுதியினையும் எஞ்சியதை ஊர் எல்லை களிலும் புதைப்பர். பலி ஆளின் முகமும் தலையும் வெட்டுப் படாததாகவே இருக்கும். தசை நீக்கப்பட்ட எலும்புகளை அந்தத் தலையோடும் சேர்த்துப் பலியிடத்திற்கு அருகிலேயே குழியில் புதைப்பர். இந்த அருவருக்கத்தக்கதான சடங்கு நடந்து முடிந்த பின் ஒரு எருமைக் கன்று அங்கு நடப்பட்டுள்ள கம்பத்தின் முன் கொண்டு வரப்படும். அதன் முன்னங்கால் களை வெட்டிய பின் அதனை மறுநாள் வரை அங்கேயே விட்டிருப்பர். மறுநாள் பெண்கள் ஆண்கள் போல உடை அணிந்து ஆயுதங்கள் தாங்கியவர்களாக அந்த இடத்திற்கு வந்து குடித்துக் களித்து ஆடிய பின் அந்த எருமைக் கன்றினைக் கொன்று உண்பர். பூசாரியான ஜாணி அரிசியோடு பன்றி அல்லது எருமைக் கன்றினைக் காணிக்கையாகப் பெற்று விடை பெறுவான்.''

அதே ஆண்டில் விசாகப்பட்டினம் மாவட்ட ஆட்சியரான திரு அர்புத்னாட் பின்வரும் அறிக்கையினைத் தந்துள்ளார். ''மலைவாழ் பழங்குடிகளான கோண்ட்களிடையே சொடிய கோண்ட்கள், ஜதப்பு கோண்ட்கள் என்ற இரு பிரிவினர்

இருப்பதாகத் தெரிகின்றது. இவர்களுள் சொடிய கோண்ட்களே ஜென்கெரி எனப்படும் தெய்வத்திற்கு நல்ல விளைச்சலைப் பெறவேண்டி மனிதர்களைப் பலி கொடுப்பவர்கள். பொங்கல் விருந்ினுக்கு முன்னதாக வரும் ஞாயிற்றுக் கிழமையிலேயே பொதுவாக இச் சடங்கு நிகழ்த்தப்படும். பலி ஆளினை வன் முறையில் தூக்கிச் செல்வதற்குப் பதிலாக விலைகொடுத்தே வாங்குகின்றனர். ஒவ்வொரு பலி ஆளுக்கும் இவ்வளவு எனக் குறிப்பிட்டதொரு விலை மதிப்பு உண்டு. எருதுகள், எருமைக் கடா, பசு, ஆடு, துணி, பட்டாடை, பித்தளைப் பாத்திரம், பெரியதட்டு, வாழைப்பழச் சீப்பு முதலிய நாற்பது பொருள் களை அத்தகைய பலி ஆள்களுக்கு உரிய விலையாகத் தருவர். பலியாவதற்குரியவனைத் தெய்வத்திற்கு முன்னர் தூக்கிச் சென்று அவன் தலையில் மஞ்சள் தோய்த்த அரிசியினைத் தூவுவர். இதற்குக் காரணம் இச்சடங்கிற்குப் பின் அவனைக் காவலின்றி உரிமையோடு திரியவிட்டாலும் அவன் தப்பியோட முயற்சிக்கமாட்டான் என்பதேயாகும். பலிக்காக ஒருவனை விலைக்குப் பெற்ற போதிருந்து அவனைப் பலியிட்டு முடிக்கும் வரை அவனைப் போதை மயக்கத்திலேயே வைத்திருக்கின்றனர் எனத் தெரிய வருகின்றது. ஊரில் உரிமையோடு அலைந்து திரிய அனுமதிக்கப்படும் அவன் தன் விருப்பம்போல் வேண்டி யதை உண்ணவும் குடிக்கவும் அனுமதிக்கப்படுகின்றான். அவன் தான் எதிர்ப்படும் எந்தப் பெண்ணோடு வேண்டுமாயினும் உடல் உறவும் கொள்ளலாம். பலி நாளன்று காலையில் போதை யில் மயங்கிய நிலயில் உள்ள அவன் தெய்வத்தின் முன் தூக்கிச் செல்லப்படுவான். பலி தரும் ஊரினைச் சேர்ந்த ஒரு வனே பூசாரியாகப் பணியாற்றுவான். பலி ஆளின் வயிற்றில் சிறு துளையிட்டு அதிலிருந்து வழியும் குருதியினைத் தெய்வ உருவத்தின்மீது பூசுவான். அதன்பின் அக்கம் பக்கத்து ஊரார் கூட்டம் அவன் மீது பாய்ந்து அவனைத் துண்டங்களாக வெட்டு வர். அவன் உடம்பிலிருந்து ஒரு துண்டுத் தசையினைப் பெற முடிந்த புண்ணியம் செய்தவர்கள் அதனைக் கொண்டு சென்று தங்கள் ஊர்த் தெய்வத்திற்குப் படைப்பர்.

சென்னை அருங்காட்சியகத்தில் பாதுகாக்கப்பட்டுள்ள

கம்பத்தில் பலியிடும் முறையினை விளக்கி கர்னல் காம்பெல் பின்வருமாறு எழுதுகின்றார்.* "சின்னகிமெதியில் பெரும்பாலும் பொதுவாக வழக்கமாகப் பலியின்போது மேற்கொள்ளப்படும் நெறிமுறைப்படி மரத்துண்டில் ஒரு யானையின் தலையினைப் பரும்படியாகச் செதுக்கி அதனைப் பருமனான ஒரு கம்பத்தின் உச்சியில் சுழலும்படியாகப் பொருத்தி வைப்பர். வழக்கமான சடங்குகளுக்குப் பின் பலியிடுவதற்குரியவனை அந்த யானைத் தலையின் தும்பிக்கையோடு பிணைப்பர். கூடியிருக்கும் கோண்ட்களின் கூக்குரலுக்கும் ஆரவாரத்திற்கும் இடையே அந்த யானைத் தலை வேகமாகச் சுழற்றப்படும். ஜாணி பூசாரியால் உரிய சமிஞ்கை செய்யப்பட்டவுடன் கூட்டத்தினர் மெரியா பலி ஆள்மீது தங்கள் கத்தியுடன் பாய்ந்து விழுந்து கத்தி ஒல மிடும் அந்த பலியாளின் தசையினை அவனுடலில் உயிர் உள்ள வரை அறுத்து எடுப்பர். பின் அவன் உடலின் கட்டுக்களைப் பிரித்து கீழே வீழ்த்தி எஞ்சியுள்ள எலும்புகளை எரிப்பர். அத்துடன் பலிச் சடங்கு முடிவுறும். நான் முந்தைய பலிச் சடங்குகளில் பயன்படுத்தப்பட்ட பதினான்கு யானைத் தலைகளின் மாதிரி உருவங்களைக் கணக்கிட்டேன் அவை அனைத்தும் முந்தைய பலிச் சடங்குகளின்போது பயன்படுத்தப்பட்டவை. நான் என்னுடைய கூடாரத்தோடு இணைக்கப்பட்ட சுமை தூக்கும் யானையினைக் கொண்டு கூடியுள்ள கோண்ட்களின் முன்னிலையில் நான் அந்த யானைத் தலைகளின் உருவங்களைக் கீழே தள்ளுமாறு செய்து அவர்கள் போற்றி வழிபடும் அந்த யானை உருவங்களுக்கு உண்மையான யானையினை எதிர்த்துத் தாக்கும் ஆற்றல் ஏதும் இல்லை என்பதனை மெய்ப்பித்து அவர்கள் மனத்தில் ஆழ வேரூன்றியிருந்த மடமையில் ஊறிய மூடநம்பிக்கையினை அகற்ற முற்பட்டேன்." மற்றொரு அறிக்கையில் கர்னல் காம்பெல் பலியிடப்படுபவன் எவ்வாறு வயல்களிடையே இழுத்துச் செல்லப்பட்டான் என்பதனையும் பாதி போதை மயக்கத்திலிருந்து கோண்ட்கள் அவனைச் சுற்றிக்

---

* கொண்டிஸ்தான் காடுவாழ் பழங்குடிகளிடையே பணியாற்றிய எனது அனுபவங்களின் விளக்கங்கள். (Personal Narrative of Service among the Wild Tribes of Khondistan,)

கூக்குரலிட்டு ஆர்ப்பாட்டம் செய்தவர்களாக அவன் மீது தங்கள் கத்தியோடு பாய்ந்து அவன் எலும்புகளிலிருந்து துண்டு துண்டாகத் தசைகளைத் தலையும் குடலும் நீங்கலாக இரத்த இழப்பால் அவன் இறக்கும்வரை எப்படி வெட்டியெடுத்தனர் என்பதனையும் விவரித்துள்ளார். அவன் இறந்தபின் அவனது எஞ்சிய உடலின் பாகங்கள் எரிக்கப்பட்டு அந்தச் சாம்பல் புதிதாக விளைந்த தானியத்தோடு அதில் பூச்சிகள் விழாமல் இருக்கக் கலக்கப்பட்டதாகவும் கூறியுள்ளார். செயப்பூர் பகுதிக்கே உரியதான கோண்ட்களின் மற்றொரு பலியினை அவரே பின்வருமாறு விளக்குகின்றார். "இச் சடங்கு மூன்று மனிதர்களைப் பலியிடுவதோடு தொடங்கப்படுகின்றது. சூரியனுக்கான இப் பலிகளில் ஊரின் கிழக்குத் திக்கில் ஒன்றும் மேற்குத் திக்கில் ஒன்றும் ஊர் நடுவே ஒன்றுமாக வழக்கமான மெரியா காட்டுமிராண்டிப் பண்புகள் உடையவனாக நிகழ்த்தப்படும். ஆறடி நீளமுள்ள பருமனான ஒரு கழி உறுதியாகப் பூமியில் நடப்படும். அதன் உச்சியில் பலியிடப்படுபவனை அவனுடைய நீண்ட தலைமயிரினைக் கொண்டு பிணைப்பர். நான்கு உதவியாளர்கள் நீண்டு தொங்கும் அவன் கால்களையும் கைகளையும் தாங்கிக் கொள்ள அவன் முகம் தரையினை நோக்கியிருக்க, உடலானது படுகிடையாகப் புதைகுழியின்மீது தொங்கும். சடங்கினை நடத்தும் ஜுன்னா பூசாரி அவனுக்கு வலப் பக்கமாக நின்று கொண்டு இடையிடையே தன் பலிக்குரிய கத்தியால் கிறீச்சிடும் பலியிடப்படுபவன் கழுத்தைக் கீறிய படி பின்வரும் வாழ்த்துக்களைக் கூறுவான். 'ஓ! வல்லமை வாய்ந்த மணிக் சொரா! இது உனது விழா நாளாகும். பலி கோண்ட்களுக்கு மெரியா, அரசர்களுக்கு ஜுன்னா. இந்தப் பலியின் காரணமாக நீ அரசர்களுக்கு அரசுகளையும் துப்பாக்கிகளையும் வாள்களையும் தந்துள்ளாய். நாங்கள் தரும் இந்தப் பலியினை நீ உண்ண வேண்டும். நாங்கள் எங்கள் போர்க் கோடரிகளை வாள்களாக மாற்றும்படி வேண்டுகிறோம். எங்கள் வில்களையும் அம்புகளையும் துப்பாக்கி மருந்தாகவும், பீரங்கிக் குண்டுகளாகவும் மாற்றும்படி கேட்கிறோம். வேறு பழங்குடிகளோடு நாங்கள் சச்சரவிட நேர்ந்தால் எங்களுக்கு வெற்றியினைக் கொடு. எங்கள் அரசர்களினதும் அவர்கள்

அதிகாரிகளினதும் கொடுமையிலிருந்து காப்பாற்று.' அதன் பின் பலியிடப்படுபவனைப் பார்த்து, 'நாங்கள் வளம் பெற வேண்டி உன்னை எங்கள் தெய்வமான மாணிக் சொராவிற்குப் பலி தருகின்றோம். அவர் உடனே உன்னை உண்டு விடு வார். நாங்கள் உன்னை குத்திக் கொல்வதைப் பற்றிக் கவலையுறாதே. நாங்கள் உன்னை அறுபது ரூபாய்கொடுத்து வாங்கியபோது உன் பெற்றோர் நாங்கள் உன்னைப் பலியிட வாங்குகின்றோம் என்பதனை அறிவர். இதனால் வரும் பாவம் உங்கள் பெற்றோருடையதே. நாங்கள் உனக்கு இறுதிச் சடங்குகளைச் செய்வோம்' எனக் கூறுவார். பலியாக உள்ள வன் அதன்பின் வெட்டப்பட்டு அவன் உடல் குழியில் எறியப் படும். அவன் தலை காட்டு விலங்குகள் வந்து தின்னும்வரை அந்தக் கம்பத்திலேயே தொங்கும். கத்தி மூன்று பலிகள் முடியும்வரை அந்தக் கம்பத்திலேயே கொத்தி வைக்கப்பட்டுப் பின்னர் உரிய சடங்குகளோடு அப்புறப்படுத்தப்படும். காப்டன் மாக் விக்கர் இயஜிதெசொக்கள், பலிச் சடங்குகள் பற்றிய விவரக் குறிப்பில் பலி நாளன்று பலிக்குரிய மெரியாவினைக் கோண்ட்கள் சூழ்ந்துகொண்டு அவர்கள் இதற்காகவென்றே சந்தையில் வாங்கி அணிந்துள்ள தடித்த இரும்பு வளையல் களால் அவன் தலையில் மோதுவர் எனக் கூறியுள்ளார். இந்த இரக்கமற்ற தாக்குதலால் மெரியாவின் உயிர் போகவில்லை யாயின், ஒரு பிளந்த மூங்கிலைக் கழுத்தில் பொருத்தி அவன் கழுத்தை நெரித்துக் கொல்வர். அதன்பின் அவன் முதுகிலிருந்து தசைத் துண்டங்கள் வெட்டி எடுக்கப்படும். அவற்றைப் பெறும் அனைவரும் அதனைத் தங்கள் வயலில் வந்து பாயும் ஓடைக்குக் கொண்டு சென்று, அதனை அங்கே ஒரு கழியில் தொங்கவிடுவர். எஞ்சியுள்ள மெரியாவின் குதறப்பட்ட உடல் புதைத்து ஏழு நாள்களுக்குப் பின் அவனுக்கான இறுதிச் சடங்குகளை நிகழ்த்துவதோடு ஆண்டுக்கு ஒருமுறையும் அச் சடங்கினைத் திரும்பவும் நடத்துவர்."

பர மூட்டாவைச் சேர்ந்த கோண்ட்கள், மனிதரைப் பலி கொடுக்கும் சடங்கில் தாங்கள் மேற்கொள்கின்ற எல்லா தெய்வச் சடங்குகளுடனும் தங்கள் தெய்வத்திற்கு எருமை, குரங்கு, ஆடு

முதலியவற்றைப் பலிகொடுக்க அனுமதித்தால், தாங்கள் மனிதப் பலி தருதலைக் கைவிட்டுவிடுவதாக உறுதி கூறினர். அதே சமயம் தாங்கள் அவ்வாறு விலங்குகளைப் பலி தரும் சடங்குகளின்போது தங்கள் தெய்வத்திடம் அரசும் குறிப்பாகச் சில அரசு அதிகாரிகளுமே தாங்கள் மனிதப் பலியினைக் கைவிடக் காரணம் எனக் குறை கூறிக் கொள்ளவும் உரிமை வேண்டும் எனக் கேட்டனர்.

கஞ்சம் மலையகங்களில் மனிதப்பலி இறுதியாக 1852–இல் நிகழ்ந்துள்ளது. அந்த நிகழ்ச்சியினை நேரில் கண்ட கோண்ட்கள் இன்னும உயிரோடுள்ளனர். பலிக்காக என ஒதுக்கி வைக்கப்பட்டுப் பின்னர் அரசினால் மீட்கப்பட்டவர்களின் சந்ததியினர் 25 பேர் 1901 கணக்கெடுப்பில் தங்களை மெரியாக்கள் என்றே பதிந்து கொண்டுள்ளனர். தற்போது கோண்ட்கள் மனிதருக்குப் பதிலாக எருமைகளைப் பலியிடுகின்றனர். அது உயிரோடு இருக்கும்போதே அதன் தசைத் துண்டங்களை அரிந்து எடுத்து அதனைத் தங்கள் ஊருக்குக் கொண்டுசென்று நல்ல விளைச்சலைப் பெற நிலத்தில் புதைக்கின்றனர். இத்தகைய பலிகளின்போது விபத்துகள் நிகழாமல் இல்லை. கொடுமைக்கு உள்ளாகும் எருமை இறக்குமுன் அதனை வெட்டித் துன்புறுத்துபவர்களுள் ஓரிருவரைக் கொல்வதும் நிகழ்கின்றது.1899–இல் பலிகுடா என்ற ஊரில் எருமை பலிகொடுப்பவரைக் கொன்றது இம்மாதிரிதான். அதற்கு முந்திய ஆண்டு பலி ஊனினைக் கொண்டு செல்பவனைப் பக்கத்து ஊரார் வழிமறித்ததில் ஏற்பட்ட கைகலப்பில் இருவர் கொல்லப்பட்டனர்.

விசாகப்பட்டினம் செயப்பூரில் ஒவ்வொரு ஆண்டும் தசராவின்போது நல்ல வளமான செம்மறி ஆட்டுக்கடாவினைக் குளிப்பாட்டித் தலையினை மழித்து அதில் கண்களுக்கிடையே வெள்ளைப் பொட்டும், மூக்குவரை நாமமும் தீட்டி ஒரு மனிதனுக்கு உடை உடுப்பதுபோல வெள்ளைத் துணிகொண்டு அதனைப் போர்த்துவர். பின்னர் அதனை உட்கார்ந்த நிலையில் இருக்கும்படி கட்டிப் போட்டு ஒரு பிராமணப் பூசாரியினைக் கொண்டு சில பூசைகளைச் செய்வர். இறுதியில் அதன்

தலை வெட்டப்படும். மனிதருக்குப் பதிலாக விலங்குகளைப் பலியிடுவது பற்றிய சமயத் தொடர்பான வழக்கு வரலாறுகள் பல நிலவுகின்றன். பிஜினியாவிற்குப் பதிலாக ஒரு பெண் மானும், ஐசக்குக்குப் பதிலாக ஒரு செம்மறியாட்டுக் கிடாயும் இவ்வாறு மாற்றுப் பலி விலங்குகளாகின்றன.

மெரியா முகவர் பகுதியினைச் சேர்ந்த அதிகாரிகள் செயப்பூர் அரசர் தன் தந்தை இறந்தபின் 1860–61-இல் பட்டங் கட்டிக்கொள்ளும்போது செயப்பூரிலுள்ள துர்க்கைக்குப் பதின் மூன்று வயதான ஒரு சிறுமியினைப் பலியிட்டதாக நம்பத் தகுந்த ஆதாரங்கள் உள்ளன எனக் கூறியுள்ளனர். விசாகப்பட்டி னம் மாவட்டக் கையேட்டில் (1907) பின்வருமாறு கூறப்பட் டுள்ளது:–“பலிக்குரிய மெரியா ஆட்களுக்குப் பதிலாக இப்போது வெள்ளாடுகளும், எருமைகளுமே பலியிடப்படுகின்றன. உயர்ந்த நிலையில் உள்ள மனிதனைப் பலி தருவதில் உள்ள நம்பிக்கை முழுவதுமாக மறைந்துவிடாது அவ்வப்போது தலை தூக் கவே செய்கின்றது. இந்த மாவட்டத்தில் 1879-80–இல் ரம்பாக் கலகம் நடைபெற்ற சமயத்தில் கலகப் பகுதியில் மனிதர்களைப் பலி தந்த பல நிகழ்ச்சிகள் நடந்துள்ளன. அம்பதாலாவிற்கு அருகேயுள்ள பிசாம் கடக்கில் 1880-இல் மெரியா மனிதப் பலிச் சடங்கினைச் செய்ய முயன்ற குற்றத்திற்காக இருவர் தண்டனை பெற்றனர். 1883-இல் ஊருக்குப் புதியவனும், பிச்சைக்காரனும் ஆன ஒருவன் அதிகாலையில் செயப்பூரிலுள்ளகோயிலில் கொலை செய்யப்பட்டுக் கிடந்தது கண்டுபிடிக்கப்பட்டது. சந்தர்ப்ப சாட்சியங்கள் அவன் மெரியா பலிக்கு உள்ளாக்கப்பட்டுள் ளான் என்பதனைப் புலப்படுத்தின. 1886-ஆம் ஆண்டில் கூட வழக்கமான விசாரணையின்போது மெரியா பலிக்காகப் பஸ்த ரில் ஆள்களைக் கடத்திச் செல்லும் வழக்கம் இருப்பது தெரிய வந்துள்ளது.” மிக அண்மையில் 1902-இல் கஞ்சம் மாவட்டக் குற்றவியல் நடுவருக்கு மனிதப் பலி ஒன்றினை நடத்த அனு மதி வேண்டி விண்ணப்பம் தரப்பட்டுள்ளது. கோண்ட்களின் நாட்டுப் பாடலில் அவர்களுடைய கைவிட்டுவிட்ட மனிதப் பலி பற்றிய பசுமையான நினைவுகள் இடம் பெற்றுள்ளதைக்

காணலாம். இந்தப் பாடலின் மொழிபெயர்ப்புக்கு நான் திரு ஜெ. இ. பிரெண்ட் - பெரைராவிற்குக் கடப்பாடுடையேன்.*

"காம்பெல் சாகேப் வரும்போது நாடு இருளும் பனியும் மூடியதாக இருந்தது. பைக்குகளை அனுப்பி இந்தப் பகுதி ஆட்களைப் பிடித்து வரச்செய்தபோது அவர்கள் மெரியா பலியாள்களைப் பிடித்து வந்தனர்.

மெரியா பலியாள்களைப் பிடித்துக்கொண்டு போனபின் அவர்கள் அந்தப் பாவத்திற்குத் திட்டமிட்டவர்களைப் பிடித்துப்போயினர்.

கைவிலங்குகளையும், கால் விலங்குகளையும் பார்த்தபின் மக்கள் அச்சம் கொண்டனர். கொலையும் பலியும் ஓய்ந்தன.

அதன்பின் நாடு அழகுடையதாக விளங்கியது. மாக்பெர்சன் (மெக்கொடெல) சாகேப் வந்து சேர்ந்தார்.

மலைகளிலும் பாறைகளிலும் பொய்யர்களாகத் திரிந்த புலிகளையும் கரடிகளையும் அவர் அடியோடு ஒழித்து மக்களுக்கு அறிவு புகட்டினார்.

ஒரு மாதத்திற்குப் பின் அவர் பங்களாக்களையும் பள்ளிகளையும் கட்டினார். அவர் மக்களை எழுதப்படிக்கக் கற்றுக்கொள்ளச் செய்ததோடு சட்டத்தையும் அறிந்து கொள்ளச் செய்தார்.

மக்கள் படிக்கக் கற்றதோடு அறிவுடையவர்களாகி வெள்ளியும் பொன்னும் பெற்று எல்லோரும் செல்வ ராயினர்."

கஞ்சம் மலையகங்களிலுள்ள குர்டிலி முட்டாவில் மனிதரைப் பலியிடும் வழக்கம் இல்லை. முதற்பலியின்போது ஒரு கோணல் கத்தி பயன்படுத்தப்பட்டதாகவும், அதனால் பலி முறையாக நிகழவில்லை என்றும் எனவே பலிப் பழக்கத்தைக் கைவிட்டனர் என இதற்குக் காரணம் கூறுவர். கர்னல் காம்பெல்

* ஆசியக் கழக இதழ், வங்காளம், 1898. (Journal of Asiat. Soc., Bengal, 1898.)

குர்டிலி பாட்ரொக்களில் ஒருவன் (கிராமத் தலைவர்களில் ஒருவன்) மனிதாபிமானத்துடன், மனிதப் பலி தரப்பட்டால் தான் முட்டாவினைவிட்டு வெளியேறிவிடப் போவதாக அச் சுறுத்தியதால் அப்பகுதியில் மனிதப் பலிப் பழக்கம் இல்லாது போயிற்று என்பதான ஒரு வழக்கும் மக்களிடையே நிலவுவ தாகக் குறிப்பிட்டுள்ளார்.

கஞ்சம் மலையகங்களில் 1894 - இல் நிகழ்த்தப்பட்ட மாற்றுப்பலி பற்றிப் பின்வரும். விளக்கச் சித்திரம் தெளிவாக விவரிக்கின்றது. "எதிர்பாராத வகையில் சுமார் ஐம்பதடி நீளமுடைய மிக நீண்ட மூங்கிலினைத்தூக்கி வரும் கோண்ட்களை நாங்கள் எதிர்பட்டோம். அதில் ஒரு மூங்கில் சட்டத்தின் மீது சிவப்பு மற்றும் வெள்ளைத் துணி களாலான பலூனைப் போன்றதான பருத்த உருவம் பொருத் தப்பட்டிருந்தது. பன்றியின் உலர்ந்த இறைச்சித் துண்டங்களை அதனோடு இணைத்து அந்த உருவம் முழுவதனையும் காற்றில் அசைந்து ஆடும் மயிலிறகுகளால் அலங்கரித்திருந்தனர். அத னோடு அதனைவிட நீளம் குறைந்ததான பல இரும்பு மணிகள் பொருத்தப்பட்ட மூங்கிலினையும் உடன் எடுத்துச் சென்றனர். அந்தக் கோண்ட்கள் அந்த உருவங்களை அருகிலிருந்த காட்டுத் தெய்வத்தின் முன் வைத்து வழிபாடு நிகழ்த்தியபின் துட்டிக யம் என்ற மெரியா பலி தருவதற்குரிய இடமான சிறிய கிரா மத்தை நோக்கி விரைந்தனர். அரை மைல் தூரம் நடந்த பின் நாங்கள் அடர்ந்த மரங்களால் சூழப்பட்டிருந்த அந்தச் சிற்றூ ரினை அடைந்தோம். அதன் நடுவே வியப்புக்குரிய வகையில் வரிவரியான கோடுகள் கொண்டதாகச் செதுக்கப்பட்ட மரத்தாலியன்ற தூணில் பலிக்குரியதான உடல்முழுதும் எண்ணெய் பூசப்பட்டுப் பளபளத்துக் கொண்டிருக்கும் எருமை கட்டப்பட்டிருப்பதைக் கண்டோம். சிவப்பும் வெள்ளையுமான துணியினையும் மயிலிறகு அலங்காரத்தையும் உச்சியில் பொருத்தப்பட்டிருக்கும் பன்றி இறைச்சித் துண்டு களையும் உடைய மிகநீண்டதான மூங்கிலினை ஊரின் நடுவில் நட்டனர். ஊரில் வழக்கத்திற்கு மாறாக நிலவிய அமைதி நெடுநேரம் நீடிக்கவில்லை. எதிர்பாராது அலை அலையான குலவை ஒலி எங்கும் பரந்து ஒலிக்கத் தொடங்கியது.

மாலியர் முரசுகளுடனும் எருமைக் கொம்புக் குழல் முழக்கத்துடனும் கோண்ட்களின் கூட்டமொன்று வெறிகொண்டதாக ஆடியபடி பக்கத்து ஊரிலிருந்து மலைச் சரிவின் வழியே வந்தது. அவர்கள் நேரே அந்த எருமையிடம் சென்று அங்கு முன்பே கூடியிருந்த உள்ளூராருடன் சேர்ந்து அந்த எருமையினைச் சுற்றிச் சுற்றி ஆடினர். அவர்களுள் ஒவ்வொருவனும் ஏதேனும் ஒரு மரத்தின் பச்சிலைகளோடு கூடிய சில கொம்புகளையும் ஒரு கூரிய கத்தியினையும் தாங்கியினையும் (சிறு கோடரி) வைத்திருந்ததோடு கொண்டாட்டத் திருநாளுக்குரிய ஆடை புனைந்து, தலைமுடியினைச் சீவி முன் நெற்றியின் மீது கொண்டையாக முடிந்து, அதில் அசைந்தாடும் பல வண்ண இறகுகளைச் சொருகி அலங்கரித்துக்கொண்டிருந்தனர். அவர்கள் அனைவரும் குடிவெறியில் மயங்கிய நிலையில் இருந்தனர். அப்போது வேறுபல ஊர்களிலிருந்தும் மக்கள் கூட்டங் கூட்டமாகப் பச்சிலைக் கொத்துக்களையும் கூரிய கத்திகளையும் தாங்கியவர்களாகக் கூச்சலிட்டபடி வந்து சேர்ந்தபடியிருந்தனர். ஒவ்வொரு குழுவினையும் அவர்கள் ஊரினைச் சேர்ந்த மொலிகொ எனப்படும் தலைவன் தலைமை தாங்கி அழைத்து வந்தான். கூட்டம் பெருகப் பெருக ஆட்டத்தின் வேகமும் மிகுந்ததோடு அதில் ஒருவகை ஆத்திரமும் தென்பட்டது. பலியாவதற்குரிய அப்பாவியான அந்த எருமையினைச் சுற்றிச் சுற்றியே அவர்கள் ஆட்டம் நிகழ்ந்தது. தங்கள் ஊரினைச் சேர்ந்த ஆட்டக்காரர்களான ஆண்களின் பின்னால் சற்று விலகியவர்களாகத் தொடர்ந்து வந்த பெண்கள் அந்த ஆட்டத்தில் பங்கேதும் பெறாமல் அமைதியாக ஒதுங்கியே நின்றனர். நல்ல உடற்கட்டுடையவர்களான கோதி எண்ணெயிட்டு முடிக்கப்பட்ட கூந்தலோடு கூடிய அப் பெண்கள் அங்கு நிகழ்வனவற்றைப் பளபளக்கும் கூரிய கருவிழிகளால் பார்த்தபடி அமைதியாக அங்கு நின்றிருந்தனர். இரண்டு நாள்களாகத் தீவனமும் தண்ணீருமின்றி அங்கு கட்டிப் போடப்பட்டு அதுவரை அமைதியாக நின்றிருந்த எருமை ஆர்ப்பாட்டத்தால் வெறி கொண்டதாகத் தாம்பு கயிற்றினை இழுத்து நெகிழ்த்துக்கொண்டு கூட்டத்தினிடையே மோதிப் பாய்ந்து நாட்டியமாடுபவர்களை முட்டித் தள்ளியது. ஒருவன் மூக்கில் தாக்குண்டு குருதி

கொட்டலானான். ஆட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்த கோண்ட்கள் இதனைக் கண்டு கொள்ளும் மனநிலை அற்றவர் களாக ஆட்டத்தில் தங்களை மறந்து வெறிகொண்ட அந்த எருமையினைச் சுற்றி ஊது கொம்புகளை அதன் காதில் வைத்து ஊதியபடியும் முரசை முழக்கியபடியும் ஆடியவர்களாக அவ்வப்போது அந்த எருமைக்குத் தின்னத் தாங்கள் கை யோடு கொண்டு வந்திருந்த பணியாரங்களை ஊட்டியபடியும் அப்பணியாரங்களை அந்தக் கம்பத்தின் மீது பலியாகப் படைத்தபடியும் இருந்தனர். அவர்கள் இவ்வாறு வெறி கொண்டு ஆட்டத்தில் ஈடுபட்டிருந்தபோது எங்களுக்கு அவர் களின் விசித்திரமான பழக்கவழக்கங்களைக் குறிப்பெடுத்துக் கொள்ளப் போதிய அவகாசம் கிடைத்தது. அவர்களுள் ஒருவன் எப்படியோ காவலர் தரிப்பதற்குரிய நீல நிற மேல் கோட்டு ஒன்றினைப் பெற்று அதன் உட்புறத்தை வெளிப்புறமாகத் திருப்பி அணிந்துகொண்டு கூடாரத்தில்விரிப்பதற்கான கம்பளத் துண்டுகளைத் தன் இடுப்பில் ஆட்டத்திற்கான பாவடை போலத் தொங்க விட்டுக் கொண்டிருந்தான். எருமையினைச் சுற்றி ஆடுபவர்களுள் அவனே நல்ல வேகமுடன் சமையலறைக் கத்தியினை வீசிச் சுழற்றிப் பம்பரம் போலச் சுழன்று ஆடியவன். மற்றொருவன் உடலில் கிட்டத்தட்ட எதுவுமே இல்லை எனச் சொல்லும்படியாக ஆடை அணிந்திருப்பினும் உடல முழுக்க வெள்ளையும் கருப்புமான புள்ளிகளைக் குத்திக் கொண்டு தலையலங்காரத்தில் தன் முழுத் திறமையினையும் காட்டியிருந் தான். தலையில் பல கெசம் நீளமுள்ள துணியினைச் சுற்றிக் கட்டி அந்தத் தலைப்பாகையின் முனையினை முதுகுப் பக்கம் தொங்க விட்டு அதில் சேவல் இறகுகளைச் சொருகி அலங்கரித் திருந்தான். கோபுரம்போல அமைந்த இந்தத் தலைப்பாகை யின் மீது, வெளளை ரிப்பன்கள் உச்சியில் பிணக்கப்பட்டதும் துருபிடித்ததும், பல துளைகளையுடையதுமான ஒரு பழைய குடையினை அசைத்து ஆட்டியபடி ஆட்டத்தில் ஈடுபட்டிருந் தான். மற்றவர்கள் தங்கள் தலைப்பாகையில் எருமைக் கொம்பு களையும் புளளிமானின் கொம்பு அமைப்பினை ஒத்ததாகச் செய்யப்பட்ட செயற்கைக் கொம்புகளையும் சொருகிக் கொண்டிருந்தனர். நீண்டு, கறுத்து, சுருண்டு வளர்ந்திருந்த

அவர்கள் தலைமுடி இந்தத் தலையலங்காரத்திற்குள்ளேயிருந்து புறப்பட்டுத் தொங்கிய காட்சியானது அவர்களுக்கு விசித்திர மானதொரு தோற்றப் பொலிவினைத் தந்தது. எருமையினைச் சுற்றி ஆடும் ஆட்டம் சுமார் இரண்டு மணிநேரம் விழாச் சடங்குகளைச் செய்து முடிப்பதற்குரிய பாட்ரொ வரும்வரை நீட்டித்தது. தலைவர்களுக்குரிய நியதிப்படி அவன் காலங் கடந்தே வந்தான். சோர்ந்து நலியும் அவர்களுடைய இசைக் கேற்ற ஆடல் திறனை ஊக்குவிக்க அவ்வப்போது அவர்கள் இதுபோன்ற நிகழ்ச்சிகளின்போது பயன்படுத்துவதற்கெனக் குக்குரி தானிய மணிகளிலிருந்து தயாரிக்கப்படும் ஒருவகை மதுவினைத் தாராளமாகவே குடித்தனர். இறுதியாக நெடுநேர மாக எதிர்பார்த்த பாட்ரொவும் வழக்கமான இயற்கையாகவும் செயற்கையாகவும் நிகழும் ஆர்ப்பாட்டங்களுக்கிடையேயும் காதினைச் செவிடுபடுக்கும் பேரிரைச்சலுக்கிடையேயும், பச்சை இலைகள் கொண்ட கிளையோடு கூடிய கிளைகளின் அசைவு களுக்கிடையேயும் வந்து சேர்ந்தான். இச் சமயத்தில் அவனுடைய பரிவாரத்தைச் சேர்ந்த சுமார் நூறு பேர் அவனுக்கு முன்னர் ஆடியவர்களாகச் செல்ல, அவன் அவர்களுக்குப் பின்னே இறுதி யில் நடந்தே வந்தார். அந்த ஊர்வலத்தின் முன்னே வயதான மெலிந்த கிழவி ஒருத்தி தன் தோளில் இரும்பு வளையத்தில் பொருத்தப்பட்ட பசுத்தோல் இறுக்கிக் கட்டப்பட்ட மாலிய முரசினைத் தாங்கியவளாக நடந்து வந்தாள். அந்த முரசினை அவளுக்குப் பின்னால் நடந்து வரும் ஒரு கோண்ட் உலர்ந்த தோல் வாரினால் மொத்தி முழக்கியபடி வந்தான். அவர்களின் தலைவனான பாட்ரொ மிக விரிவாகச் செய்யப்பட்ட அலங்காரத்தோடுகூடிய தன்னுடைய கால் உடைந்த மட்டக் குதிரையினைச் சாயம் போன சிவப்பு நிற முரசு முழக்குபவனுக் குரிய கோட்டினை மட்டுமே அணிந்த இளைஞன் ஒருவன் அவன் பின்னால் நடத்தி வர அவன் சோர்ந்து நலிந்தவனாக நடந்துவந்தான். பட்ரொ நாட்டியம் ஆடுபவர்கள் அருகே வசதியாக ஒரு மரக்கட்டையில் அமர்ந்து கொண்டவுடன் அங்கு நிகழும் நிகழ்ச்சிகளின் போக்கில் மாற்றம் புலப்பட்டது. இது வரை அந்த மட எருமையினைச் சுற்றிச் சுறறி கத்தியவர்களாக வெறிகொண்டு ஆடியவர்கள் தங்கள் ஆட்டத்தினை நிறுத்திய

பின் சோர்ந்து நலிந்துபோனதான அந்த எருமையின் கழுத்தின் மீதும் உடலின் மீதும் சாய்ந்து அதனைத் தழுவியவர்களாக மெல்லிய தொடர்ந்த அடிக்குரலில் நான் மேம்போக்காக மொழிபெயர்த்துத் தந்துள்ள பின்வரும் பாடலினைப் பாடினார்கள். இந்தப் பாடலினைச் சிறு மாற்றங்களுடன் இவர்கள் முன்பு மனிதர்களைப் பலிகொடுக்கும்போதும் பாடி வந்தனர் என்ற வழக்கு நிலவிவருகின்றது.

குற்றம் எங்களுடையதில்லை எருமையே!
உன்னை இப்படிப் பலியிட நேர்ந்ததற்கு காரணம்
எங்கள் முன்னோர்கள் கட்டிக் காத்து வந்த
பழமையான புரிந்து கொள்ளமுடியாத நம்பிக்கையே.

நாங்கள் உனக்கு ஒரு விலை தந்துள்ளோம்.
உனது மதிப்பு அறிந்து உனக்கு விலை தந்துள்ளோம்.
எங்கள் நிலங்களை வறட்சியின் வாயிலிருந்து மீட்க
நாங்கள் தரும் இந்தப் பலி எங்களுக்கு எப்படிப் பழியாகும்?

பஞ்சம் எங்கள் வயிற்றில் அடித்து விட்டது.
எங்கள் வயல்கள் வறண்டு உலர்ந்து விட்டன.
சாவு எல்லா வாசல் வழியேயும் தலையை நுழைக்கின்றது.
சோற்றுக்காக எங்கள் குழந்தைகள் ஏங்கி அழுகின்றன.

தடிப் பெண்ணோ தன் முகத்தைத் திரையிட்டபடி
எனக்கு வழிபாடு ஆற்றுங்கள் எனக் கூவுகிறாள்.
இறைச்சியும் இரத்தமும் வேண்டும் என்கிறாள்
அவன் தானே விரும்பிப் பலிக்கு உடன்பட வேண்டும்.

எங்கே அந்தப் பலி இரத்தம் தரையில் விழுகின்றதோ,
அது வயலோ கட்டாந்தரையோ மலையோ எதுவாயினும்
அங்கே தானியங்கள் தாராளமாக எங்கும் விளையும்.
நீங்கள் உங்கள் வயிறார அதனை உண்ணலாம் என்கிறாள்

எனவே, ஓ! எருமையே! நீ மனம் மகிழ்வாயாக.
விரும்பி உன்னை நீயே பலியாக்கிக் கொள்.
விரைவில் தடியின் பசுமையான வயல்களில் என்றும்
நீ தென்றலில் அசைந்தாடியபடி பயிராய் வாழ்வாய்.

கோண்ட்கள் இந்தப் பலிப்பாட்டினைச் சிறிது நேரம் திரும்பத் திரும்பப் பாடிய பின் அந்த எருமையினை அது கட்டப்பட்டிருக்கும் செதுக்கப்பட்ட தூணிலிருந்து அவிழ்த்துப் பாடி ஆடிக் கூச்சலிட்டபடி, இன்னிசைக் கருவிகள் முழங்க, சுமார் நூறடி தூரத்தில் உள்ள பலி தரும் தோப்பிற்கு ஓட்டிச் சென்று அதனை ஒரு கம்பத்தில் கட்டினர். அதில் அதனை உறு தியாகக் கட்டிப் போட்டவுடன் கோண்ட்கள் அனைவரும் தங்கள் அலங்கார ஆடைகளைக் களைந்து அங்கே கூடிக் காத்து நிற்கும் பெண்களிடம் அவற்றைத் தந்த பின்பு பூசாரி ஜன்னியின் ஆணை பிறந்தவுடன் அந்த எருமையினைத் தாக்க கூரிய கத்தியினைத் தங்கள் கையில் உயர்த்தியவர்களாக நிற்பர். மற்றவர்களிலிருந்தும் புறத்தோற்றத்தில் எவ்வகையிலும் வேறு படாதவனான ஜன்னி அந்த எருமையின் முகத்தில் சிறு கோடாலியினால் ஒரு தட்டுத் தட்டுவான். அதனைத் தொடர்ந்து ஏட்டில் எழுத இயலாத நிகழ்ச்சிகள் நிகழும். கோண்ட்கள் அனைவரும் ஒருசேர அந்த எருமை மீது பாய்ந்து மிகக் குறு கிய நேரத்தில் தங்கள் கத்தியால் அதனைச் சின்னஞ்சிறு துண்டு களாகக் குதறி எடுத்துவிடுவர். அந்த எருமையின் தலையும் எலும்புகளும் குடலும் தவிர அவ்விடத்தில் வேறெதுவும் எஞ்சி இருக்காது. அந்த எருமை அவர்களின் கருணையினால் உடன டியாக இறந்துவிடுகின்றது. அந்த எருமை மீது அவர்கள் பாய்ந்து சில மணித்துளிகளுக்குள்ளாகவே ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டவர்களாக அவர்கள் அந்த எருமையின் இறைச்சி, தோல் ஆகியவற்றில் ஒரு சிறிதும் மிச்சமில்லாதபடி வெட்டி எடுத்துக் கொள்வர். அந்த எருமையிலிருந்து ஒரு துண்டு இறைச்சி கிடைத்தவுடன் அதனைப பெற்றவன் அதனை எடுத்துக் கொண்டு தன் வயலை நோக்கி விரைநது ஓடுவான். பழைய வழக்கின்படி அவன் அந்த இறைச்சியினைப் பொழுது

விழுமுன் புதைத்தாக வேண்டும். சிலருடைய வயல்களை அடைய நெடுந்தொலைவு செல்ல வேண்டியிருப்பதால் அவர்கள் மிக விரைந்து ஓட வேண்டியிருக்கும். அவ்வாறு ஆண்கள் ஓடத் தொடங்கியவுடன் அங்கு ஒரு வியப்புக்குரிய நிகழ்ச்சி நிகழும். அங்கு கூடி நிற்கும் பெண்கள் ஓடும் ஆண்களின்மீது மண்ணாங்கட்டிகளை வீசி எறிவர். சிலர் குறி தவறாதவர்களாக இதில் சாதனை புரிவர். அந்தத் தோப்பில் எருமையின் எஞ்சிய எலும்புகளுக்குக் காவல் இருப்பவர்களைத் தவிர மற்றவர்கள் கலைந்து செல்வர். அந்த எலும்புகளை அதனைக் கட்டியிருந்த மரத்தூண் அடியில் கொண்டு சேர்த்து நெருப்பிட்டு எரிப்பர்.''

கோண்ட்களிடையே நிலவும் குழந்தைகளைக் கொலை செய்யும் வழக்கம் பற்றி அடுத்து நான் எடுத்துரைக்கிறேன். விசாகப் பட்டினம் மாவட்டக் கையேட்டில் செயப்பூர் பகுதிகளில் பெண் குழந்தைகள் பெருமளவில் கொலைக்கு உள்ளாகின்றன எனக் கூறப்பட்டுள்ளது. அப்பகுதியில் உள்ள ஒரு வட்டத்தில் இந்த வழக்கின் காரணமாகச் செயப்பூர் அரசர் மிகுந்த பொருளீட்டு வதாகக் கூறப்படுகிறது. ஒரு பெண் குழந்தையினைத் தாயின் உடந்தையுடன் கொலை செய்ய, அது பிறந்தவுடன் முதலில் ஒரு தாசரியினை அடைந்து அதன் தலைவிதி பற்றிக் கேட்பர். தாசரி அதனைக் கொன்றுவிடலாம் எனக் கூறுவானாயின் அதன் பெற்றோர் அதனைக் கொல்லும் உரிமையினைத் தரும் அதிகாரம் பெற்றவனான அந்த வட்டத்து அமீனுக்கு ஒரு தொகையினை செலுத்த வேண்டும். இந்த உரிமையினை அரசருக்கு ஆண்டுக்கு முந்நூறு ரூபாய் செலுத்தி ஏலத்தில் பெறும் அமீன் அதற்கும் மேல் சேரும் தொகையினைத் தன் லாபமாக வைத்துக் கொள்கின்றான். முன்பு கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த கோண்ட்களிடையே இக் குழந்தைக் கொலை பெருவழக்காய் இருந்து வந்துள்ளது. 1841-இல் மெரியாப் பலியையும், குழந்தைக் கொலையையும் ஒடுக்க லார்ட் எல்பின்ஸ்டன் தந்த திட்டத்தை நிறைவேற்ற அணுக்க முதன்மையர் மாக்பெர்சன் அனுப்பப்பட்டுள்ளார். இத்தகைய குழந்தைக் கொலைக்கு கோண்ட்களிடம் நிலவும் பின்வரும் நம்பிக்கைகளே காரணம் எனக் கூறப்படுகின்றது. 1) ஒரு பெண்ணால் உலகம் முழுதுமே பெருந்துன்புறும் என்பது

கடவுளின் ஆணை. 2) பெண் குழந்தைகளைக் கொல்வதால் அது ஆண் குழந்தைகள் பிறக்க வழி வகுக்கின்றது. 3) பெண்கள் தொல்லை கொடுப்பவர்கள் ஆகையால் அவர்களை இந்த உலகில் வைத்திருப்பதை விட இங்கிருந்து வெளியேற்றி விடுதல் நல்லது. 4) வறுமையின் காரணமாகப் பெண்களுக்கு மணத்திற்கான பங்கினைத் தருவது கடினமாகையால் பெண்களை வளர்ப்பதற்கு இவர்களிடையே எதிர்ப்பு நிலவுகின்றது. இது பற்றிய மாக்பெர்சனின் புகழ்பெற்ற அறிக்கையிலிருந்து* பின்வரும் பகுதிகள் எடுத்துத் தரப்படுகின்றன. "பெண் குழந்தைகளைக் கொலைக்கு உள்ளாக்கும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளவர்களான கோண்ட்கள் வாழும் பகுதியின் பரப்பளவு 2,400 சதுர மைல்களாகும். இப்பகுதியில் வாழும் மக்கள்தொகை 60,000. இப்பகுதியில் ஆண்டுதோறும் கொல்லப்படும் குழந்தைகளின் எண்ணிக்கை 1,200முதல்1,500 ஆகும்.இவ்வாறு குழந்தைகளைக் கொல்லும் வழக்கத்தை மேற்கொண்டுள்ள பழங்குடிகள் மனிதரைப் பலி கொடுக்கும் கோண்ட் பழங்குடிப் பிரிவினரிலும் வேறுபட்ட பிரிவினர். இவ்வாறு குழந்தைகளைக் கொல்லும் பழக்கம் இவர்களிடையே நினைவுக்கு எட்டாத காலந்தொட்டு வழக்கில் இருந்து வருகின்றது. இந்த வழக்கத்தின் தோற்றத்திற்கும் தொடர்ந்த கடைப்பிடிப்புக்கும் சமய நம்பிக்கைகள் ஒரு பகுதி காரணமாயினும் கோண்ட்களின் பழக்க வழக்கங்கள் பலவும் இந்தப் பழக்கத்தோடு தொடர்புடையனவாக உள்ளன. தேவ தேவனாகிய சூரியன் உலகில் அனைத்தையும் நல்லனவாகவே படைத்தான் எனவும் பின்னர் மணமகளான தேவதை தீயனவற்றை அவற்றோடும் அறிமுகப்படுத்தினாள் எனவும் இந்த இரண்டு ஆற்றல்களும் அப்போதிருந்து ஒன்றுடன் ஒன்று முரண்பட்டன்வாக இயங்குகின்றன என்றும் கோண்ட்கள் நம்புகின்றனர். மனிதர்களைப் பலிகொடுக்கும் பழக்கத்தை மேற்கொள்ளாதவர்களான கோண்ட்கள் சூரியனை வழி

* இந்திய அரசு ஆவணங்களிலிருந்தான தொகுப்புகள் (உள்துறை), V, 1845. (Selections from the Records of the Govt. of India (Home Dept, V., 1845.)

பாட்டுக்கு உரிய பெருந்தெய்வமாகக் கொண்டாடுகின்றனரே யன்றி மணமகளை மதித்துப் போற்றுவதில்லை. மனிதப் பலி தரும் பிரிவினர் மண்மகளைப் போற்றி வழிபடுவது இன்றி யமையாதது எனக் கருதுகின்றனர். பெண் குழந்தைகளைக் கொல்லும் பழக்கத்தை மேற்கொண்டுள்ள பழங்குடிப் பிரிவினர் தேவனான சூரியன் பெண் பண்புகளை இந்த உலகில் படைத்த காரணத்தால் ஏற்பட்ட வருந்தத்தக்க நிலை யினை மாற்ற தங்கள் சமூகத்தினுக்கு வரும் தீமையினைக் கட்டுப்பாட்டினுள் வைக்கும் அளவினுக்கு மட்டும் பெண்களை வளர்க்கும்படி ஆண்களுக்குக் கட்டளையிட்டுள்ளான் எனக் கருதுகின்றனர். இந்தக் கோட்பாட்டின்படி அடிப்படையிலேயே முதன்முதல் பெண் குழந்தைகளைக் கொல்லும் வழக்குத் தோன்றியது. மேலும், இறந்தவர்களின் ஆன்மா மீண்டும் அது முதன்முதல் பிறந்த அதே குடும்பத்தில் வந்து உயிர் பெறு கின்றது எனக் கோண்ட்கள் நம்புகின்றனர். அவ்வாறு பிறக்கும் குழந்தையின் ஆன்மாவினை அந்தக் குடும்பத்திற்கு உரியதாக ஏற்றுக்கொள்ளும் நிகழ்ச்சி அவ்வாறு பிறந்த குழந்தைக்கு ஏழாம் நாள் பெயர் சூட்டும் சடங்கினை நிகழ்த்திய பின்னரே முற்றுப்பெறுகின்றது எனவும் கோண்ட்கள் நம்புகின்றனர். இதன்படி பிறந்த ஒரு பெண் குழந்தையின் ஆன்மாவினைப் பெயர் சூட்டி ஏற்றுக் கொள்ளும் சடங்கினை நிகழ்த்து முன் கொன்று விடுவதானது அந்தக் குடும்பத்தில் அந்தப் பெண் ஆன்மா வந்து பிறக்கும் வாய்ப்பினை அகற்றி விடுவதோடு கூடத் தொடர்ந்து அந்தக் குடும்பத்தில் ஒரு பெண் ஆன்மா பிறக்கும் வாய்ப்பையும் குறைத்துவிடுகின்றது. கோண்ட்கள் அனைவரும் தங்களுக்கு ஆண் குழந்தைகளே பிறக்க வேண்டும் என்ற ஆர்வம் மிக்கவர்களாக இருப்பதால் அதற்கு இவ்வாறு பெண் குழந்தைகளைக் கொல்லும் பழக்கம் ஒரு தூண்டுதலாக அமைகின்றது.'' தன்னுடைய இயக்கம் தொடர்பாகப் பயணம் மேற்கொண்ட மாக்பெர்சன், நூறு வீடுகள் வரை உள்ளதான கிராமங்கள் பலவற்றில் ஒரு பெண் குழந்தை கூட இல்லாதிருந் துள்ள நிலையினைத் தான் கண்டதாகக் கூறியுள்ளார். இதே போல 1855-இல் காப்டன் பிரெயி பரொ பொரி கோண்ட் கிராமங்களில் ஒரு பெண் குழந்தையைக்கூடக் காண இயவில்லை என்று கூறியுள்ளார்.

காடுவாழ் பழங்குடிகளிடையே ஆண் பெண் உறவுகள் பெண்களை வலிந்து கைப்பற்றிக் கொண்டு சென்றே மேற்கொள்ளப் படுகின்றன. இவ்வாறு ஒருவன் தான் விரும்பும் பெண்ணை வலிந்து கைப்பற்றுதல் படிப்படியாக நட்பு முறையில் கொண்டு செல்வதாகப் பரிணாம வளர்ச்சி பெற்று, ஒருவன் தன் குலத்திற்குப் புறத்தவளான ஒருத்தியையே அடைய வேண்டும் என்ற புறமணக்கட்டுப்பாடுடைய மணமுறையாக வளர்ந்து, மண உறவுகளில் முன்போலப் பெண்களை வன்முறையில் கவர்ந்து அடைவது பழமையின் அடிப்படையில் அமைந்த வெறும் சடங்காக மட்டும் நிலைத்துள்ளது. இத்தகைய வளர்ச்சிக்குச் சிறந்த சான்றாக கோண்ட்கள் மணமுறை திகழ்கின்றது. இதுபற்றிக் கஞ்சம் மாவட்டக் கையேட்டின் ஆசிரியர் கூறுவது வருமாறு:— "தங்கள் குழந்தைகளின் மணத்தினைப் பெற்றோரே ஏற்பாடு செய்கின்றனர். மணமகள் விலைக்கு வாங்கப்படுவதற்குரிய ஒரு பொருள்போல மதிக்கப்படுவதோடு கூட அவளுக்கு விலையாகக் கொண்டிகள் தரப்படுகின்றன. ஒரு கொண்டி எனப்படுவது ஓர் எருமை, ஒரு பன்றி, ஒரு பித்தளைப் பாத்திரம் ஆகிய இவற்றுள் எதுவாகவும் இருக்கலாம். சான்றாக நூறு கொண்டிகள் தரப்படவேண்டும் என்றால் அது பத்து எருமைகள், பத்து எருதுகள், பத்துக் கோணிப்பை தான்யங்கள், பத்து இணை பித்தளைப் பாத்திரங்கள், இருபது மறியாடுகள், பத்துப் பன்றிகள், முப்பது கோழிகள் கொண்டனவாக இருக்கலாம். மணமகன் தந்தை மணமகள் தந்தைக்கு வழக்கமாக தரும் விலை பத்துக் கொண்டிலிருந்து இருபது கொண்டி வரை இருக்கும். ஒரு கோண்ட் தன் மனைவியினைத் தன்னுடைய முட்டா (கிராமம்) விற்கு வெளியே இருக்கும் பெண்களிலிருந்தே தேர்ந்தெடுக்கின்றான். மணமகளை மணமகன் வீட்டிற்கு அழைத்துச் செல்வதற்காகக் குறிக்கப்பட்ட நாளில் மணமகள் காதுகளில் உள்ள ஈர்க்குக் குச்சிகள் அகற்றப்பட்டுப் பித்தளை வளையங்கள் அணிவிக்கப்படும். மணமகளை ஒரு சிவப்பு நிறத் துப்பட்டியில் போர்த்தி அவளுடைய மாமன் அவளைத் தோளில் சுமந்தவனாக அவளுடைய கணவன் கிராமத்தில் கொண்டுவிடுவான். அவளோடு கூட அவள் ஊரினைச் சேர்ந்த இளம் பெண்களும் உடன் செல்வர். ஊர்வலத்தோடு

இசை முழங்கியபடி செல்லும். ஊர்வலத்தின் பின்னால் மண மகனுக்காகப் பித்தளையாலான குதிரைகள் போன்ற விளை யாட்டுப் பொருள்களைக் கொண்டு செல்வர். மணமகள் தந்தை மணமகனுக்குப் பரிசாக வழங்கும் துணிமணிகள் பித்தளை ஊசிகள் ஆகியனவற்றையும் உடன் எடுத்துச் செல்வர். மண மகன் ஊரின் எல்லையில் சாலையில் மணமகள் கூட்டத்தாரை, மணமகனும் அவன் கிராமத்தைச் சேர்ந்த இளைஞர்களும் தங்கள் தலைகளையும் உடல்களையும் துப்பட்டிகளும் துணி களும் கொண்டு போர்த்தியவர்களாக நின்று வரவேற்பர். அவர்கள் அனைவரும் தங்கள் கரங்களில் சிறிய மூங்கில் குச்சிகளாலான கட்டுக்களை வைத்திருப்பர். மணமகள் ஊரி னைச் சேர்ந்த பெண்கள் அந்த இளைஞர்களை எதிர்ப்பட்ட வுடன் குச்சிகளாலும், கற்களாலும், மண்ணாங்கட்டிகளா லும் அவர்களைத் தாக்கத் தொடங்குவர். அந்த இளைஞர்கள் கையிலுள்ள மூங்கில் குச்சிக் கட்டுக்களால் தங்களைக் காத்துக் கொள்வர். மணமகன் ஊரைச் சென்று சேரும் வரை இவர்களி டையே இத்தகைய சண்டை நிகழ்ந்தபடி இருக்கும். இவ்வாறு கல்வீசும் சண்டை ஓயும் சமயத்தில் மணமகனுடைய மாமன் மணமகளைப்பற்றிப் பறித்து மணமகன் இல்லத்திற்குக் கொண்டு சேர்ப்பான். இவர்களிடையே நடைபெறும் சண்டை களைக் குழந்தைகளிடையேயான விளையாட்டு என ஒதுக்கி விட இயலாது. சிலபோது இதனால் ஆண்கள் பெருங் காயங் களுக்கு உள்ளாவதும் உண்டு. அதன்பின் மணமகன் இல்லத்தில் அவர்கள் வசதிக்குத் தக்கபடி அனைவருக்கும் நல்ல விருந்தளிப் பர். மணமகள் மணமகன் இல்லம் வந்து சேர்ந்த நாளுக்கு மறுநாள் எருமையும் பன்றியும் அடித்து விருந்து வைப்பர். மணமகளோடு துணை வந்த பெண்கள் தங்கள் இல்லம் திரும் பும் இரண்டாம் நாள் அன்று அவர்களுக்கு ஓர் எருமைக் கடா வினையோ வேறு ஏதேனும் மதிப்புக் குறைந்த பரிசினையோ கொடுத்து அனுப்புவர். மூன்றாம் நாள் அந்த ஊரைச் சேர்ந்த கோண்ட்கள் அனைவரும் ஆடிப்பாடி வேடிக்கையாகப் பொழுது போக்குவர். நான்காம் நாள் மணமகன் இல்லத்தில் அனை வரும் மீண்டும் கூடுவர். அப்போது மணமக்களை ஒரு கட்டி லில் அமர்த்தி மணமகனின் உடன்பிறந்தவன் வீட்டின் கூரையி

னைச் சுட்டிக் காட்டியவனாக, "இந்தப் பெண் எங்கள் குடும் பத்தில் ஒருத்தியாக வாழும்வரை, அவள் குழந்தைகள் ஆண் களைப் போலவும் புலிகளைப் போலவும் தீரமிக்கவர்களாக இருப்பர். இவள் ஒழுக்கங் கெட்டவளாக நடப்பாளாகில் இவள் குழந்தைகள் பாம்புகளாகவும் குரங்குகளாகவும் மாறிச் சாவ தோடு சாகடிக்கவும்படுவர்" எனக் கூறுவான். 1842–இல் கோண்ட்கள் பற்றித் தன்னுடைய அறிக்கையில் மாக்பெர்சன் கூறுவதாவது. "மணமகள் இல்லத்தில் இவர்கள் ஒரு விருந் தினை நடத்துகின்றனர். இரவு நெடுநேரம்வரை மணமக்களை அப்போது அவர்கள் மாமன்மார் தோளில் சுமந்தவர்களாக ஆடுவர். திடீரென அவர்கள் தங்கள் சுமையினை மாற்றிக் கொள்வர். மணமகனின் மாமன் மணமகளைத் தூக்கியபடி மறைந்துவிடுவான். கூடியுள்ளோர் உடனே இரு கட்சியினராகப் பிரிவர். மணமகள் கட்சியினைச் சேர்ந்தவர்கள் மணமகளைக் கடத்தியதற்காக மணமகன் கூட்டத்தினரை சிறை பிடிக்க முயற்சிப்பர். இந்தப் போலிச் சண்டையில் ஆண்கள், பெண்கள், குழந்தைகள் ஆகிய அனைவரும் பங்கு பெறுவர். ஒருவன் தன் முதுகில் செஞ்சிவப்புத் துணியில் மூடி மறைக்கப்பட்ட ஒரு சுமையினைத் தூக்கியபடி செல்வதை நான் கண்டேன். இருபது முப்பது இளைஞர்கள் அவனைச் சூழ்ந்தவர்களாக அவனைத் தாக்கும் பெண்களின் கூட்டத்திலிருந்து அவனுக்குப் பாது காப்பு வழங்கினர். அந்த ஆள் அப்பொழுதுதான் மணம் புரிந்து கொண்ட மணமகன் என்பதும் அவன் தோளில் இருந்த சுமை அவன் தன் ஊருக்குக் கொண்டு செல்லும் அவனுடைய வருங்கால மனைவி என்பதும் புரிந்தது. அவளுடைய இளமைப் பருவத்துத் தோழிகள் அவனிடமிருந்து அவளை மீட்க அவன் தன் ஊரெல்லையை அடையும்வரை அவன் மீது கற்களை வீசி யும் மூங்கில் கழிகள் கொண்டு தாக்கியும் வழக்கப்படி முயற்சிப் பர். மணமகள் மணமகனால் வெற்றிகரமாகக் கவர்ந்து செல் லப்பட்டதால் அதன்பின் அவள் தோழிகள் சிரித்து ஆரவாரம் செய்து மகிழ்ந்தவர்களாக மணமகன் ஊரைச் சேர்ந்தவர்களால் துரத்தப்பட்டுப் போன வேகத்தோடு தங்கள் ஊருக்குத் திரும்பி ஓடி வருவர்." கும்சூர் வட்டாரத்தைச் சேர்ந்த கோண்ட்களி டையே மணமகன், மணமகள் ஆகியோருடைய உறவினர்களும்

நண்பர்களும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் கூடிய பின் மணமகள் குழுவினைச் சேர்ந்த பெண்கள் மணமகளை வந்து அழைத்துப் போகும்படி குரல் கொடுப்பர். அஃதன்பின் இரு வீட்டினைச சேர்ந்த பெண்களும் கற்களாலும், முள்ளோடு கூடிய குச்சி களாலும் ஒருவரோடு ஒருவர் போலியாகச் சண்டையிட்டுக் கொள்வர். இந்தக் கலவரத்தினிடையே தாக்குதலுக்குள்ளான மணமகன் வீட்டினைச் சேர்ந்தவர் மணமகளையும் அவளோடு கூட அங்குக் கொண்டு வந்து சேர்க்கப்பட்டுள்ள தட்டுமுட்டுச் சாமான்களையும் தூக்கிச் செல்வர்.* மற்றொரு தகவலின்படி மணமகள் மணமகன் வீட்டில் சென்று நுழைந்தவுடன் அவ ளுடைய இரண்டு கரங்களிலும் ஒவ்வொன்றும் இருபது முதல் முப்பது பவுண்டு எடையுள்ள இரண்டு பித்தளை வளையல் அணிவிக்கப்படுவாள். இதனை விலங்கிடப் பெறுவாள் என் பதே பொருத்தமானது. இந்த அவதிக்கு ஆட்படும் அப்பாவிப் பெண் தன் கையில் பெரும் சுமைகளைத் தாங்கிக் கொள்ளும் பொருட்டுத் தன் கரங்களைத் தோளின்மீது வைத்துக் கொள் வாள். இவ்வாறு வளையிடப்படுவது அவள் தன்னுடைய பிறந்த வீட்டிற்கு ஓடிப் போகாமல் தடுத்து வைப்பதற்காகவே ஆகும். மூன்றாம் நாள் வளையல்கள் அகற்றப்படும். அதற்குள் அப்பெண் தனக்கு நேர்ந்த கதியானது விதிப்படியானது என மனத்தினைத் தேற்றிக் கொண்டிருப்பாள் என்ற நம்பிக்கையி லேயே அந்த வளையல்களை மீண்டும் அகற்றிவிடுகின்றனர். இவ்வாறு திருமணத்தின்போது அணிவிக்கப்படும் வளையல்கள் மலைப்பகுதியில் செய்யப்படுகின்றன. அவற்றின்மேல் குறுக்கும் நெடுக்குமான வளைவான கோடுகள் செதுக்கப்பட்டிருக்கும். குடும்பத்தின் சொத்தாக வழிவழியாகப் பேணப்பட்டு வரும் இவ்வளையல்கள் ஒரு திருமணம் முடிந்தவுடன் குடும்பத்தில் நிகழும் அடுத்த திருமணத்திற்கெனப் பாதுகாக்கப்படுகின்றது. கோண்ட்களிடையே நிகழும் மணம் பற்றிக் கிடைத்த

---

* ஜெ. எ. ஆர். ஸ்டீவன்சன், இலக்கிய அறிவியல் இதழ், சென்னை VI, 1837. (J. A. R. Stevensen, Madras Jour. Lit, Science, VI, 1837).

அண்மைக் காலத் தகவலின்படி* வயதான முதியவள் ஒருத்தி விரைந்து ஓடிவந்து மணமகளைக் கைப்பற்றி அவளைத் தன் தோளில் சுமந்தபடி தூக்கிச் செல்வாள். ஓர் ஆடவன் கூட்டத்திலிருந்து முன்னே வந்து மணமகனைப் பிடித்து அவனைத் தன் தோளில் தூக்கிக் கொள்வான். மணமக்களைச் சுமக்கும் மனிதக் குதிரைகள் உண்மைக் குதிரைகளைப் போலவே கனைத்தும் துள்ளிக் குதித்தும ஆர்ப்பாட்டம் செய்த பின் இறுதியில் ஊரெல்லையினை நோக்கி விரைவர், மணமகளின் தோழிகள் மணமக்களைத் துரத்திச் செல்வதற்கான அறிகுறியாகும் இது. அவர்கள் மணமக்களின்மேல் மண்ணாங் கட்டி, கற்கள், சேறு, சாணி, அரிசி ஆகியனவற்றை வீசுவர். இத்தகைய போலித் தாக்குதல் ஒரு முடிவுக்கு வந்தபின் முதியவர்களும் அவ்விடத்தை அடைவர். பின்னர் அனைவரும் மணமகன் கிராமத்தைச் சென்றடைவர். என்னோடு கடிதத் தொடர்பு கொள்ளும் ஒருவர், அவர் ஒருமுறை கோண்ட் மணமகள் ஒருத்தி சிவப்புத் துப்பட்டியால் போர்த்தப்பட்டவளாக அவளுடைய மாமன் தோளில் தூக்கிச் செல்லப்பட்டதைத் தான் நேரில் கண்டதாக என்னிடம் கூறினார். அச்சமயம் அவளுடைய தோழிகள் கூட்டமும் உறவினர்களும் முரசங்களும் கொம்பும் முழங்கப் பின்தொடர்வர். மணமகளுடைய மாமன் மணமகளை வழி முழுதும் சுமந்து சென்றாக வேண்டும். மேலும் அவ்வாறு தூக்கிச் செல்லும் அவன் அவளைக் கீழே விழும்படி விட்டால் அதற்குத் தண்டமாக ஓர் எருமையினைத் தர வேண்டும். அவ்வாறு தரப் படும் எருமையினை அனைவரும் கொன்று விருந்துண்பர். ஐரோப்பியக் குற்றவியல் நடுவர் ஒருவர் ஒருக்கால் கோண்ட்களின் திருமண நிகழ்ச்சியினைக் கலவரம் எனத் தவறாகப் புரிந்து கொண்டதாகவும் பினனர் விசாரித்து உண்மையறிந்து தன் தவறினை உணர்ந்தார் எனவும் கூறப்படுகிறது.

திருமண ஊர்வலத்தில் உடன் எடுத்துச் செல்லப்படும் சில பித்தளை விளையாட்டுப் பொருள்கள் பற்றிய குறிப்புகள்

---

* ஜெ. இ. பிரண்ட் பெரைரா, ஆசியக் கழக இதழ், வங்காளம், LXXI 1902. (J. E. Friend - Pereira Jour. Asiat. Soc. Bengal LXXI, 1902).

உள்ளன. அத்தகைய உருவங்களுள் மயில், பச்சோந்தி, நாகம், நண்டு, குதிரைகள், மான், புலிகள், சேவல்கள், யானைகள், மனிதர், இசைவாணர் முதலியன இடம் பெற்றிருக்கும். இவை வார்ப்பட முறையில் தயாரிக்கப்படுகின்றன. உருவங்களின் கரு அமைப்பினைப் பரும்படியாக வழக்கம் போலக் களிமண்ணால் அமைத்துக்கொண்டு அதன்மீது ஒரே சீராக மெழுகினைப் பூசுவதற்குப் பதிலாக மெல்லிய மெழுகுக் கம்பிகளை முதலில் செய்து அந்த உருவத்தின் மீது குறுக்கும் நெடுக்குமாக உருவத்தின் அமைப்பிற்கோ, உருவாக்குபவரின் மனப்போக்கிற்கோ ஏற்றபடி அமைப்பர். பின்னர் தலை, கரங்கள், கால்கள் ஆகியன செய்து இணைக்கப்படும். மூங்கில் குழல்களைப் பயன்படுத்தி மெழுகுக் கம்பிகளைத் தயாரிப்பர். மெழுகினை இளகச் செய்து ஒரு புனல் வழியே மூங்கில் குழாயின் வழியே செலுத்தினால் அதன் மறுபக்கத்தில் அது நீண்ட கம்பிகளாக வெளிப்படும். அவை இறுகி உடையும் தன்மை அடையுமுன் பணியாளர்கள் அதனை எடுத்துப் பயன்படுத்த வேண்டும். இம்முறையில் இத்தகைய உருவங்கள் கஞ்சத்தில் உள்ள பெலுகுண்டா, ருசெல் கொண்டா ஆகிய ஊர்களில் சிறப்பாகத் தயாரிக்கப்படுகின்றன. திரு. ஜெ. எ. ஆர். ஸ்டீவன்சன் ஒரு குறிப்பில்* கும்சூர் பகுதியைச் சேர்ந்த கோண்ட்கள் தங்கள் தெய்வங்களான ஜர பெண்ணு, லிங்க தேவதா, பெட்ரி தேவதா ஆகியவற்றினைக் குறிக்கும் வகையில் பித்தளையாலான யானைகள், மயில்கள், பொம்மைகள், மீன்கள் முதலியவற்றின் உருவங்களைத் தங்கள் இல்லங்களில் வைத்துள்ளனர் எனக் கூறுகின்றார். வீட்டில் யாருக்கேனும் நோய் வந்தாலோ தோலில் வழக்கமாக எழும் கொப்புளங்கள் தோன்றினாலோ இவர்கள் அரிசியினைப் பாலிலிட்டு அதனோடு மஞ்சளையும் சேர்த்து அக்கலவையை வீட்டில் வைத்திருக்கும் அந்த உருவங்களின்மீது தெளிப்பதோடு கோழிகள், ஆடுகள் ஆகியனவற்றைப் பலியிட்டு ஜாணி பூசாரியைக் கொண்டு பூசை போடுவதோடு பாஜி முதலியனவும் செய்து உண்பர்.

---

* இலக்கிய அறிவியல் இதழ், சென்னை, VI, 1837. (Madras Journ, Lit & Science, VI, 1837.)

பலிகுடாவினைச் சேர்ந்த கோண்ட்கள் திருமணம் ஒன்றில் மணமக்களை அருகருகே நிற்க வைத்தபின் மணமகனின் இளையோன் ஒரு வில்லில் அம்பினைத் தொடுத்து அதனை வீட்டின் புல்லால் ஆன கூரையினை நோக்கிச் செலுத்தினான். சில பிரிவைச் சேர்ந்த கோண்ட்களின் மண உறுதிப்பாட்டுச் சடங்கின்போது எருமை, பன்றி ஆகியவற்றினை அடித்து அவற்றின் உள் உறுப்புக்களை உண்பர். வழக்கில் உள்ள நெறிமுறைப்படி கொல்லப்பட்ட விலங்குகளின் பல உறுப்புக்களையும் உறவினர்களுக்கு வழங்குவர். இதன்படி தலை மணமகன் மாமனுக்கும், உடலின் பக்கங்களின் இறைச்சி அவன் உடன்பிறந்த பெண்களுக்கும், முதுகுப் பக்க இறைச்சி மற்ற உறவினர்கள், நண்பர்கள் ஆகியோருக்கும் வழங்கப்படும். பத்துப் பன்னிரண்டே வயது நிரம்பிய கோண்ட் சிறுவர்கள் பதினைந்து பதினாறு வயதுடைய பெண்களுக்கு மணமுடிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகின்றது. கஞ்சம் மலையகங்களைச் சார்ந்த சுவர்ணகிரியில் ஒரு பலா மரமும் ஒரு மா மரமும் அருகருகே வளர்ந்துள்ளன. பாட்ரொ எனப்படும் சாதித் தலைவனுக்கு உரிய திருமணக் கட்டணத்தைச் செலுத்த இயலாத நிலையில் உள்ள கோண்ட் இந்த மரங்களின் அருகே அவளைத்தான் மனைவியாக ஏற்றுக் கொள்வதாகச் சத்தியம் செய்து கொடுத்தபின் அவளை அழைத்துக் கொண்டு காட்டினுள் சென்று மூன்று இரவுகளும் மூன்று பகல்களும் தங்கி வருவான். அதன்பின் அவர்களைக் கணவன் மனைவியராக ஏற்றுக் கொள்வர்.

கோண்ட்களின் மணம் பற்றிய முதற்கட்டப் பேச்சு வார்த்தைகளின்போது மணமகளைத் தேடும் 'சேரிதாப்ப காடாரு எனப்படும் முடிச்சுக்கள் இடப்பட்ட ஒவ்வொரு கயிறு மணமகன் வீட்டாரிடமும், பெண் வீட்டாரிடமும் ஒப்படைக்கப்படும் என்றும், அவர்கள் ஒவ்வொரு நாள் காலையிலும் ஒரு முடிச்சை அவிழ்த்தவர்களாக மண உறுதி நாளினை கணக்கிட்டு வருவர் எனவும் திரு பிரண்ட் பெரைரா* கூறியுள்ளார்.

---

* முந்து நூல். (Loc, cit.)

சில ஆண்டுகளுக்கு முன்பு ஒரு கோண்ட் இளைஞன் ஒருவனுக்கு, மற்றொரு கோண்ட்டின் மகளை மண உறுதி செய்யப்பட்டபின் மணநாளுக்கு முன் பானோ ஒருவன் அந்த மணமகள் தனக்குப் பிறந்த பெண் என்றும் (அவள் அவளுடைய பெற்றோர் மணந்து கொள்ளும் முன் பிறந்தவள்) மணமகளுக்கு உரிய விலையாகத் தரப்படும் பரிசப் பொருள்கள் தனக்குச்சேர வேண்டியவை எனவும் மணமகள் தந்தையிடம் சென்று முறையிட்டான். இந்த வழக்கினைக் கேட்ட பஞ்சாயத்தார் பானோவின் முறையீட்டினை ஏற்று அவனுக்குச் சாதகமாகத் தீர்ப்பு வழங்கினர்.

கோண்ட்களின் பிறப்புத் தொடர்பான சடங்குகள் பற்றித் திரு செயராம் முதலியார் தரும் விவரங்கள் வருமாறு:- பிள்ளை பெறுபவளுக்கு உதவியாக வயதான கோண்ட் மருத்துவச்சி ஒருத்தி அமர்த்தப்படுவாள். அவள் மகப்பெறுபவள் வயிற்றில் விளக்கெண்ணெயினைத் தடவி நீவுவாள். குழந்தையின் தொப்புள் கொடியினை குழந்தையின் தாயே அறுப்பாள். இதற்காகக் குழந்தையின் வலது தொடை வயிற்றை நோக்கி வளைக்கப்படும். கரித்துண்டு ஒன்றினை அவ்வாறு வளைக்கப்பட்ட குழந்தையின் முழங்கால் மீது வைத்து அதன்மீது தொப்புள் கொடியினைப் பொருத்தி ஓர் அம்பின் கூரிய முனையால் அறுப்பர். நச்சுக்கொடி வீட்டின் அருகே ஒரு சுவர் ஓரமாகப் புதைக்கப்படும். தொப்புள் கொடியினை அறுத்த பின் குழந்தையின் தாய் தொப்புள் பகுதியில் தன் எச்சிலைத் தடவி அதன் மீது விளக்கெண்ணெயினைத் தடவுவாள். அதன்பின் அவள் தன் கைகளை நெருப்பில் காட்டிச சூடாக்கி அக் கைகளால் குழந்தையில் உடலுக்கு வெப்பம் ஊட்டுவாள். (கஞ்சம் மாவட்டக் கையேட்டில் குழந்தையினைச் சூடான நெருப்பின் முன காட்டிப் பாதி வதக்குவர் எனக் கூறப்பட்டுள்ளது.) இவ்வாறு குழந்தையை ஒரு நாளைக்குப் பலமுறை நான்கைந்து நாள்கள் வரை வெப்பம் ஊட்டுவர். தொப்புள் கொடியினை அறுத்தபின் ஒரு சிலந்தியினை அனலில் சுட்டுச் சாம்பலாக்கி அதனைத தேங்காய் சிரட்டையில் இட்டு விளக்கெண்ணெய் விட்டுக் கலந்து ஒரு கோழி இறகினால் அதனைத் தொட்டுத்

தொப்புள் பகுதியில் பூசுவர். குழந்தையின் தலை முடியினை எலும்பு வளராத உச்சந்தலைப் பகுதியை மட்டும் விட்டுவிட்டு மழிப்பர். அப்பகுதி ஒரு மாதம் சென்றபின் மழிக்கப்படும். குழந்தைக்கு ஒரு மாதம் ஆகும் வரை நாளும் அதன் உடம்பில் விளக்கெண்ணெயும் மஞ்சள் அரைத்த கலவையும் பூசி வருவர். அதன்பின் குழந்தையின் தாய் தன் குழந்தையுடனும் கணவனுடனும் தன் உடன்பிறந்தவன் இல்லம் செல்வாள். அங்கே அந்தக் குழந்தைக்கு ஒரு கோழி அன்பளிப்பாக வழங்கப்படும். அதனை அவள் கணவன் தன் வீட்டிற்கு எடுத்துச் சென்று சமைத்து உண்பான். இவ்வாறு கோழி சமைத்து உண்ணும் சடங்கு இடத்திற்கு இடம் வேறுபடுகின்றது. சில இடங்களில் குழந்தையின் தாயினைத் தவிர மற்ற உறவினர்கள் அனைவரும் அதனை உண்பர். வேறு சில இடங்களில் தாய் தந்தையர் உட்பட வீட்டில் வாழும் அனைவரும் அதனை உண்பர். வேறு சில இடங்களில் குழந்தையின் தந்தை, தந்தை வழிப்பாட்டன், பாட்டி, சித்தப்பன், பெரியப்பன் ஆகியோர் அதனை உண்பர்.

கும்சூர் பகுதியினைச் சேர்ந்த கோண்ட்கள் குழந்தைகளுக்குப் பெயரிடும் சடங்கினைத் திரு ஜெ. எ. ஆர். ஸ்டீவன்சன் பின்வருமாறு விளக்குகின்றார். ''குழந்தை பிறந்து ஆறு மாதங்களுக்கு பின் ஒரு குறிப்பிட்ட நாளில் 'கடுத்துவ' எனப்படும் பெயரிடும் சடங்கினை நிகழ்த்துகின்றனர். அன்று ஒரு நாயினைக் கொல்வதோடு சாராயத்தையும் வரவழைத்துப் பாஜி செய்வர். குழந்தையின் பாதங்கள் கழுவப்படும். ஜாணி வந்து சேர்ந்த பின் அவன் ஓர் அரிவாளின் கைப்பிடியிலிருந்து அதன் முனையோடு கூட ஒரு கயிற்றினை இணைத்துக் கட்டுவான். அதன் உதவியோடு அவர்கள் வருவது உணர முயல்வர். பெட்ரிலுகளை ஒன்றாக எடுத்து வைத்தபின் (பெட்ரிலு மூதாதையரைக் குறிப்பதாயினும் இங்கு வீட்டிலுள்ள தெய்வங்களையே அது சுட்டுகின்றது. அந்த அரிவாளின்மீது அரிசியினை வைப்பர். குடும்பத்தைச் சேர்ந்த முதாதையர்களின் பெயர்களை வரிசையாக ஒவ்வொன்றாகச் சொல்லி வரும்போது ஒவ்வொரு முறையும் அரிவாளின் மீது அரிசியினை வைப்பர். யாருடைய பெயரைச்சொல்லும்போது அரிவாள் அசைகின்றதோ அந்தப்

பெயரைக் குழந்தைக்கு வைப்பர். அதன்பின் அவர்கள் சாராயம் பருகிப் பாஜியினை உண்பர். ஜாணிக்கு அரிசியும் இறைச்சியும் வழங்குவர்.''

கஞ்சம் மாவட்டக் கையேட்டில் கோண்ட்களின் சாவுச் சடங்குகள் பற்றிக் கூறப்பட்டுள்ள விவரங்கள் வருமாறு:- "ஒருவன் இறந்தவுடன் பிணத்தை ஒரு துணியால் போர்த்துவர். அதன் உடலிலிருந்து உடைகளையோ மதிப்பு வாய்ந்த பொருள்களையோ அகற்றும் வழக்கம் இல்லை. கொஞ்சம் நெல்லும், இறந்துபோனவன் சமையல் பாத்திரங்களும் ஊரி னைச் சேர்ந்த சித்ராவிற்கு வழங்கப்படும். (சித்ராக்கள் கோண்ட்கள் அணியும் பித்தளை மோதிரங்களையும் வளையல் களையும் தயாரிப்பவர்கள்.) இறந்தவரின் உடம்பைப் பின்னர் எரிப்பர். அதற்கு மறுநாள் கொஞ்சம் சோறு சமைத்து ஒரு தட்டில் இட்டு அதனைப் பிணத்தை எரித்த இடத்தில் வைப்பர். இறந்து போனவருடைய ஆவியிடம் அந்தச் சோற்றை உண்டு மகிழும்படியாகவும் பேயாகவோ புலியாகவோ வந்து ஊரில் உள்ளவர்களுக்குத் தொல்லை செய்ய வேண்டாம் எனவும் வணங்கி வாழ்த்தி வேண்டிக் கொள்வர். சாவுக்கு மூன் றாம் நாள் 'மத்தி' சடங்கு நிகழ்த்தப்படும். இறந்தவரின் மாதிரி உருவத்தினை வைக்கோலால் செய்து அதனை வீட்டின் முன்போ வீட்டுக் கூரை மீதோ வைப்பர். நண்பர்களும் உறவி னர்களும் அங்கு வந்து கூடி அழுது புலம்பியவர்களாகச் சாவு வீட்டாரின் செலவில் உண்பர். ஒவ்வொருவரும் வரும்போது ஏதேனும் ஓர் அன்பளிப்பினைக் கொண்டு வந்து கொடுத்து மறுநாள் திரும்பப் புறப்படும்போது கொண்டு வந்ததைவிடச் சற்றே மதிப்பு வாய்ந்ததனைப் பெற்றுச் செல்வர். ஊரில் ஒரு வன் இறந்தால் தீட்டு நீக்கப்பட வேண்டும். இதற்காகச் சாவின் ஏழாம் நாள் ஓர் எருமையினைப் பலியிடுவர். ஒருவன் புலியி னால் கொல்லப்படுவானாயின் அதற்கான தீட்டினைப் போக்க ஒரு பன்றியினைப் பலியிட்டு அதன் தலையினை ஒரு பாணோ தன் கோடரியால் வெட்டி அதனைக் காலைப் பரப்பி வைத்து வரிசையாக நிற்கும் ஊரினைச் சேர்ந்த ஆண்களின் கால்களி டையே நுழைத்துச் செலுத்துவான். அந்தப் பன்றியின் தலை

யாருடைய காலின் மீதாவது படுமானால் அது அவனுக்கு வர இருக்கும் தீங்குக்கு அறிகுறியாகக் கொள்ளப்படும். பாட்ரொ சாவுச் சடங்கில் பங்கு பெறுவனாகில் துப்பாக்கியினை வெடித்து இறந்தவனுடைய ஆவியின் பேயினை விரட்டுவான். அவன் ஓர் ஆட்டினை அதற்கு உரிய ஊதியமாகப் பெறுவான்.'' திரு செயராம் முதலியார் கருத்துப்படி ஒருவன் புலியினால் கொல்லப்பட்டால் பலியிடப்பட்ட பன்றியின் வெட்டப்பட்ட தலை ஓர் ஓடையில் விடப்படும். அது ஓடையில் மிதந்து செல்லும் போது ஊராரின் கால்களுக்கு நடுவே செல்ல வேண்டும். எவனுடைய கால்களில் அது படுகின்றதோ அவன் புலியால் கொல்லப்படுவான் என நம்புகின்றனர்.

கும்சூர் வட்டாரத்தில் நிகழும் சாவுச் சடங்குகள் தொடர்பான ஒரு குறிப்பில் திரு ஜெ.எ.ஆர். ஸ்டீவன்சன் பின்வருமாறு கூறுகின்றார். ''உயிர் பிரியும்போது இறந்தவன் பாதங்களோடு சேர்த்து ஒரு மறியாட்டினை இவர்கள் கட்டுகின்றனர். இறந்தவனின் துணிமணிகள், பித்தளை வட்டில், பித்தளைக் குவளை, அணிகள், வீட்டிலிருக்கும் தான்யங்கள், காலோடு பிணைக்கப்பட்ட மறி ஆகியவற்றினைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்வர். உடலை எரித்தபின், ஈம நெருப்பினைச் சுற்றியவர்களாக அப்பொருள்களை அங்கேயே விட்டுவிட்டுத் தப்பட்டை முழக்கியபடி இல்லம் திரும்புவர். அந்தத் துணிமணிகளைப் பாணோ எடுத்துக் கொள்வான். அவர்கள் அதன்பின் சாராயம் வரவழைத்துக் குடித்துவிட்டுத் தங்கள் தங்கள் இல்லம் சென்று உண்பர். மறுநாள் அவர்கள் ஓர் எருமை மாட்டினைக் கொல்வதோடு, பெரும் அளவில் சாராயமும் வரவழைத்துக் குடித்துக் களிப்பர். நெருங்கிய தூரத்து உறவினர்கள் உட்படச் சாதியினைச் சேர்ந்த அனைவரும் கூட பாஜி செய்து உண்பதோடு தப்பட்டையும் ஒலிப்பர். இறந்தவர் மதிப்புக்கு உரியவரானால் நடனம் ஆடுபவர்கள் வந்து தப்பட்டை இசைக்கேற்ப ஆடுவர். அதன்பின் பரிசளிக்கப்படும் சில விலங்குகளை நடனம் ஆடுபவர்கள் பெற்றுச் செல்வர். அடுத்துப் பன்னிரண்டாம் நாள் உடலை எரித்த இடத்திற்கு ஒரு பன்றியினைத் தூக்கிச் சென்று சிதை அமைக்கப்பட்ட

இடத்தினைச் சுற்றி வந்த பின், வீட்டிற்கு வந்து அந்தப் பன்றி யினை இல்லத்திற்குரிய தெய்வங்கள் உள்ள இடத்தில் கொன்று, சாராயமும் வரவழைத்துப் பாஜி செய்து சாதியினைச் சேர்ந்த அனைவரும் கூடி உண்பர். ஒருவனைப் புலி தூக்கிச் செல்லு மானால், அவன் சேர்த்து வைத்திருக்கும் உலர்ந்த இறைச்சி யினை வீட்டிற்கு வெளியே எறிந்துவிடுவதோடு, ஊரில் உள்ள அனைவரும் குழந்தைகள் உட்பட தாங்கள் வீட்டை விட்டு வெளியேறுவர். ஜாணி கருவேல மரங்களின் இரண்டு கிளை களைக் கொண்டு வந்து நட்டு அவற்றின் குறுக்கே தமர மரத் தின் (*Smilax macrophylla*) கிளை ஒன்றினை வைப்பான். ஜாணி சில மந்திரங்களைச் சொல்லி நடப்பட்ட அந்தக் கிளைகளின் மேல் நீர் தெளிப்பான். முதலில் குழந்தைகளும் அடுத்து மற்ற வர்களுமாக இவ்வாறு ஜாணி அமைத்த கிளைகளாலானவாசல் வழியே நுழைந்து இப்பால்வர அவன் அவர்கள்மேல் நீர் தெளிப் பான். அனைவரும் பின்னால் திரும்பிப் பாராமல் தங்கள் இல்லம் சென்று சேர்வர்.

கோண்ட்களிடையே சாவு நிகழுமாயின் அவர்கள் கடைப் பிடிக்கும் வழக்கங்கள் பற்றித் திரு செயராம முதலியார் எழுதி யுள்ளதாவது:- ‘‘ஒருத்தியின் கணவன் இறந்தால் அவள் தன் கழுத்தில் உள்ள பாசிமணி மாலைகளையும், விரலில் உள்ள உலோகமோதிரங்கள்,காற்சிலம்பு,கைவளையல் ஆகியவற்றோடு ஒரு காது மடலில் மட்டும் உள்ள அணிகளைக் களைவாள். மற்றொரு காது மடலில் உள்ள அணிகள் களையப்படுவதில்லை. இவற்றையெல்லாம் பிணத்தை எரிக்கும் முன் அதன் மார்பின் மீது இடுவர். கணவனை இழந்தவள் காதின் விளிம்பு மடல் களில் உள்ள அணிகளையோ மூக்கில் உள்ள அணிகளையோ களைவதில்லை. இறந்த கோண்ட்களின் உடல்கள் எரிக்கப்படும். சாவு நிகழ்ந்த வீட்டார் சாவு நிகழ்ந்த அன்றும், அதற்கு மறு நாளும் சமைக்க அனுமதிக்கப்படுவதில்லை. ஊரில் உள்ள உறவி னர்களும் நண்பர்களும் அவர்களை உண்பிப்பர். சாவு நிகழ்ந்த மறுநாள் சோறும் கோழியும் தனியே சமைத்து அவற்றை இலை யாலான கலங்களிலிட்டுப் பிணத்தை எரித்த இடத்தில் வைப்பர். இறந்தவரின் ஆவியினை அதனை உண்ண வரும்படி வேண்டுவ

தோடு அதனைத் தங்களுக்கு எத்தகைய தீங்கும் இழைக்க வேண்டாம் எனக் கேட்டுக் கொள்வர். மூன்றாம் நாள் உறவினர்கள் அனைவரும் குளித்தபின் தலையில் களி மண்ணைப் பூசிக் கொள்வர். இறந்தவரின் மாதிரி உருவம் ஒன்றினை அமைத்து அதனை வீட்டுக் கூரை மீது சொருகி வைப்பர். இவ்வாறு இறந்தவரின் உருவத்தினைச் செய்து வைக்கும் வழக்கம் கோம்சூரைச் சேர்ந்த கோண்ட்களிடையே காணப்படுகிறது. வேறு சில இடங்களில் இவ்வாறு இறந்தவரின் உருவத்தை செய்து வைத்தல் அமங்கலமாகக் கருதப்படுகிறது. ஏழாம் நாள் தீட்டு நீக்கும் சடங்கு நிகழ்த்தப்படுவதோடு ஓர் எருமையினையும் கொன்று சாராயத்தோடுகூட விருந்தினர்களை உபசரிப்பர். பலிகுடாவிலிருந்து இரண்டு மைல் தூரத்திலிருக்கும் ஒரு கிராமத்தில் சுமார் பதினாறு வயதுடைய ஒரு சிறுவன் இறந்தான். அவன் காதிலிருந்த தங்கக் கடுக்கன்களையும் கையிலிருந்த வெள்ளி வளையல்களையும் கழற்றாமல் அவனை அப்படியே எரித்தனர். அவன் உடைகளும் சிதையில் வீசி எரிக்கப்பட்டன. ராகி, நெல் முதலான தானியங்களை எரியும் சிதைக்கு அருகே வைத்தனர். அவற்றை நெருப்பில் இடவில்லை. முட்டாவின் ஊர்த் தலைவனான பாட்ரொவின் வேலைக்காரர்களான ஹட்டிகள் அந்த உணவுப் பொருள்களையும் எருமையினையும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர். பிணம் எரிந்த பின் சாம்பலிலிருந்து கிடைக்கும் அணிமணிகளையும் அவர்களே தேடி எடுத்துக் கொள்வர்.''

''ஒருவன் இறந்தபின் அவனுடைய ஆவியினைத் திருப்திப் படுத்த அவனுடைமையான விலங்குகளைப் பிதாரிபித்த எனப் படும் முன்னோர்களுக்குப் பலியிடுவர். இத்தகைய பலிக்குப்பின் அவனது ஆவி உரிய இடத்தினை அடையும் வாய்ப்பினைப் பெறக்கூடும். சாவுக்கு மறுநாள் வியப்புக்குரிய ஒரு சடங்கினை நடத்துகின்றனர். இதனை நான் எங்கும் நேரில் பார்த்ததாக நினைவில்லை. கொஞ்சம் சோற்றினையும் கோழியினையும் பிணத்தை எரித்த இடத்திற்கு எடுத்துச் செல்வர். கோழியின் மார்புப் பகுதியினைப் பிளந்து அந்த இடத்தில் அதனை வைப்பார் அதன் பின் அதனை உண்பர். இறந்தவரின்

ஆவியினைப் புதிதாகப் பிறக்க இருக்கும் குழந்தையின் உடலில் வந்து புகும்படி வேண்டுவர்'' எனத் திரு எப். பாவ்செட் பதிந்துள்ளார்.*

கஞ்சம் மலையகங்களில் கோண்ட்களின் சாவுச் சடங்கு நடனத்தை நேரில் பார்த்த ஒருவர் தரும் விவரங்கள் வருமாறு†: ''இறந்தவன் மலைப் பகுதியினைச் சார்ந்த பழைய குடும்பத்தைச் சேர்ந்த உரிய பாட்ரோ ஆவான். மூங்கில்களிடையே தன்னுடைய முட்டையினையிடும் காட்டுப் புறாவினை குலச் சின்னமாக உடைய நொல பொம்ச என்ற புகழ் பெற்ற குலம் அவனுடையது. மலையகங்களின் குலமரபுச் சின்னங்கள் புதுமையானவை. எண்ணிக்கையில் பலவாக உள்ளவை. மலையகங்களின் குலமரபுச் சின்னங்கள் பற்றிப் போகிற போக்கில் இன்னொரு செய்தியினையும் கூற விரும்புகின்றேன். இது மயிலினைக் குலமரபுச் சின்னமாகக் கொண்ட குலம் பற்றியது. ஒருவன் இரண்டு மயில் முட்டைகளைக் கொண்டுவந்து தன் மனைவியிடம் தந்தான். அவள் அவற்றை ஒரு மண்பானையில் வைத்தாள். அந்தப் பானையிலிருந்து ஓர் ஆண் குழந்தை தோன்றியது. அவனே புகழ்பெற்ற அந்தக் குலத்தைத் தோற்றுவித்தவன். இப்பொழுது மீண்டும் பாட்ரோவின் சாவுச் சடங்கிற்கு வருவோம். பொழுது விழும் முன் இளம் மூங்கிலின் நிறத்திலான கைக்குழந்தையை உடைய அவன் அன்பிற்குரிய இளையள் உட்பட அவனுடைய இரண்டு மனைவியரும் அவனுக்காகத் துக்கம் கொண்டாட அவன் உடலை மிகுதியான சடங்குகள் ஏதும் இன்றி ஒரு புல்வெளியில் எரித்து அவன் சாம்பலை நான்கு திசைகளிலும் தூவினர். பிணம் எரித்த இடத்தில் ஒரு மரக் கழியினை ஆழக்குழி தோண்டி நட்டனர். அச்சமயம் அவனுடைய சாவுக்குரிய பலிச்சடங்கள் ஏதும் நிகழவில்லை. அன்றிலிருந்து ஒரு திங்கள் சென்ற பின் பதினெட்டு வயது நிரம்பிய அவனுடைய மூத்த மகன்

---

* மனித இன இயல் கழக இதழ், பம்பாய், II, 249. (Journ, Anthrop. Soc. Bombay, II, 249.)

† சென்னை மெயில் இதழ், 1896. (Madras Mail, 1896.)

அடுத்த பாட்ரொவாகப் பதவி ஏற்கும் போதே அச் சடங்குகள் நிகழ்த்தப் பெறும். சடங்கிற்கான நாள் நெருங்க நெருங்கப் பரப்பான நிகழ்ச்சிகள் நிகழக் காணலாம். சமவெளியிலிருந்து குயவர்கள் பல அளவுகளிலும் வடிவங்களிலும் பல நூறு மண் பாண்டங்களைக் கொண்டு வந்து அந்த ஊரின் அருகே பெருங் குவியலாக அடுக்கி வைப்பர். தங்கள் விதியினை அறியாத பெரிய எருமைகள் அவ்வூர் அருகே கட்டிப் போடப்பட்டோ சேற்றுக் குட்டையிலோ கத்தியபடி மகிழ்ந்து புரண்டு கொண் டிருக்கும். எல்லா இடங்களையும் சேர்ந்த பாட்ரொக்கள், மொலிக்கொயர், பிஸ்ஸோயிகள் ஆகியவர்களுக்கு அழைப்பு அனுப்பப்படும். குட்டிய கோண்ட்கள்கூடப் புறக்கணிக்கப்படா மல் அழைக்கப்படுவர். சடங்குக்குரிய புனித நாளின் காலைப் பொழுது ஒரு வழியாகப் புலரும். அப்பொழுது சிறப்பு விருந்தினர்களின் கூட்டம் வரத் தொடங்கும். ஊர்த் தலை வர்களுள் பெரும்பாலானவர்கள் தங்கள் மனைவி மக்களுடன் சிறப்பான உடையணிந்து நடக்க இருக்கும் அனைத்திலும் ஈடுபாட்டுடன் பங்குபெறும் மனப்பான்மையுடன் வந்து சேர்வர் அவர்களுள் நான் அழகிய வலுவான உடல்வாகு பெற்ற உதயகிரியினைச் சேர்ந்தவர்களோடு நாகரிகத்தில் முன்னேறி யவர்களான பலிகுடாவினைச் சேர்ந்த கோண்ட்களையும் கண் டேன். 1886-ஆம் ஆண்டு தொடங்கிப் பின்னர் அதனோடு சேர்ந்து கொண்ட இன்னொரு கூட்டாளியுடனுமாக இரண்டு புலிகள் நானூற்றுக்கு மேற்பட்ட தன் இனத்தவர்களைக் கொன்று தின்றுவிட்ட துயரத்தினை மனத்தில் புதைத்தவர் களாக மகிழ்ந்த முகத்துடன் வந்திருந்த குளிரும் ஊதல் காற்றும் வீசும் தரிங்கபாடியைச் சேர்ந்த கோண்ட்களையும் நான் அங்குக் கண்டேன். அந்தப் பழங்குடிகளின் கூட்டத்தில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் மலைச்சிகரங்கள் சார்ந்த பகுதிகளில் வாழும் குட்டிய நாட்டுப் பகுதிக் கோண்ட்கள் ஆவர். இவர்கள் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் மற்றவர்கள் கண்களில்படுவது அரிது. இந்தப் பிரிவினைச் சேர்ந்த கோண்ட்கள் தங்கள் சுருட்டைத் தலைமுடியினை வலப் புருவத்தின்மீது தொங்கும்படியாகப் பெரிய கட்டாகக் கட்டித் தொங்கவிட்டுப் பனங்காடை, கிளி, மயில், குறுங்காடை,

குருட்டுக் கொக்கு ஆகியவற்றின் வண்ண இறகுகளால் அதனை அலங்கரித்திருப்பர். குளளர்களான பருத்த அவர்கள் உடலில் பாசிமணி மாலைகளும், மத்திய இந்தியாவைச் சேர்ந்த வரலாற்றுக்கு முற்பட்ட பழைய வட்டக்கல் புதைகுழிகளிலிருந்து தோண்டி எடுக்கப்பட்டுச் செதுக்கி மெருகேற்றப்பட்ட மணிகளும் தாறுமாறாகக் கிடக்கும். கோண்ட்களின் குடும்பத்தைச் சேர்ந்த மரபுரிமைச் செல்வங்களான இந்த அணிமணிகளை என்ன விலை கொடுத்தாலும் கோண்ட்கள் விற்றுவிட முன்வர மாட்டார்கள். சடங்கு நாளுக்கு வந்து சேரும் குழுவினர் வந்தவுடன் முதல் வேலையாக ஒரு குட்டையில் சென்று உடலைக் கழுவிய பின் மரபு வழிப்பட்ட தலை அலங்காரத்தை வழக்கமான இறகுகள், அழகிய காட்டு மலர்களான மாலைகள் ஆகியனவற்றை அணிந்து முடித்துக்கொண்டு இறந்த தலைவன் இல்லத்தினை அடைந்து வாசலில் நின்று, துக்கம் கேட்டு இழப்பினை மறந்தவர்களாக உள்ள அத்தலைவனின் கைம்பெண்களைப் பெருமூச்சு வாங்கியவர்களாக ஆற்றுவிப்பர். இச்சடங்கு முடிந்தபின் அவர்கள் இறந்துபோன பாட்ரோவின் மகனான அரசால் அப்பதவிக்கு உரியவன் என அங்கீகரிக்கப்பட்ட இளைஞனைக் கண்டு அவனுக்குத் தங்கள் கடப்பாட்டினைத் தெரிவிப்பர். ஒவ்வொருவரும் அவனிடமிருந்து ஒரு மண் பானையினைப் பெறுவதோடு கிராமக் குழுக்கள் ஒவ்வொன்றும் ஓர் எருமையினையும் பெறும். கோண்ட்கள் மாட்டின் இறைச்சியினை உண்பவர்கள். எனினும் அவர்களிடையே ஒரு விசித்திரமான பழக்கம் சில பகுதிகளில் நிலவுகின்றது. திருமணம் ஆன பெண்கள் மாட்டின் இறைச்சியினை ஒதுக்க வேண்டும் என்பதே அவ் வழக்கம். இச்சடங்குகள் முடிந்தவுடன் கூட்டத்தினர் கூச்சலிட்டபடியும் எருமைக் கொம்புகளாலான ஊது குழலை ஊதியபடியும் முரசினை முழக்கியபடியும், இறந்து போன பாட்ரோவின் உடல் எரிக்கப்பட்டதான கம்பங்கள் நட்டு அடையாளமிடப்பட்டுள்ள புல்வெளியினை நோக்கிச் செல்வர். அங்கு அண்மையில் கொல்லப்பட்ட எருமையொன்று உறைந்து போன குருதிச் சேற்றில் புரண்டபடி கிடக்கும். ஆண், பெண், குழந்தைகள் ஆகியோர் அடங்கிய கூட்டத்தினரின் நடுவே குகரி தானியத்திலிருந்து தயாரிக்கப்பட்ட மதுவினைப் பருகியவர்க

ளாகச் சற்றே போதை ஏறப் பெற்றிருப்பவர்களான மூன்று ஆண்கள் மரகதக் கற்கள் போலவும் பச்சை மணிகள் போல வும் வெயிலில் பளபளக்கும் மயில் இறகுகள் சொருகப்பட்ட நீண்ட கழிகளைத் தாங்கி நிற்பர். இதுவே சாவுச் சடங்கிற் கான நடனம் தொடங்குகின்றது என்பதற்கான அறிகுறியாகும். நடனம் மிக எளிமையானதே. ஆட்டத்திற்குரிய சரியான இடத் தினைச் சென்று சேர்ந்தவுடன் பெரியவர்களும் இளைஞர்களும் சுற்றிச் சுழன்று ஆடியபடி பெரிய வட்டமாக மகிழ்ந்து ஆடுவர். வயதான நரைத்த தாடிக்காரர்கள் அந்த வட்டத்தில் மெல்ல ஆடியவர்களாகத் தரையினைத் தங்கள் பாதங் களால் அடியிடுவது இளைஞர்களுக்கும் வேகமிக்க ஆட்டம் ஆடும் ஆட்டக்காரர்களின் போக்கிற்கும் முரண்பட்டதாக இருக்கும். இந்த இளைஞர்கள் அவ்வப்போது வட்டத்தை விட்டுத் தாங்கி எனப்படும் கோடரியை ஆட்டியவர்களாகச் சென்று தங்கள் கோடரியை வெட்டிப் போடப்பட்ட அந்த எரு மையின் குருதியில் தோய்த்துக்கொண்டு மறுபடியும் வட்டத்தில் சென்று சேர்ந்து கொண்டு மீண்டும் முன்னைவிட வேகமாக ஆடியபடி மேற்கிலிருந்து கிழக்கு நோக்கித் தங்கள் கண்கள் அந்த உயிருள்ள ஆட்டச் சக்கரத்தின் இயக்கத்தைக் கண்டு சோரும்வரை தொடர்ந்து ஆடுவர். இந்த வட்டத்தில் நடுவே மயில்றகு சொருகப்பட்ட கழிகள் தாங்கிய முன்பு கூறிய அந்த மூவரும் சுழன்று ஆடியபடி இருப்பர். அவர்கள் களைத்துப் போய் வட்டத்திலிருந்து ஓய்வு பெறத் தொடங்கியவுடன் அவர் களுடைய இடத்தைப் பிடித்துக்கொள்ளப் பலர் ஆர்வத்தோடு முன் வருவர். இவ்வாறு மாறி மாறிப் புதியவர்களாக வரும் நடனமாடுபவர்களுடன் கூட அந்த மனித வளையம் மூன்று நாள்கள் தொடர்ந்து ப்கல் நேரம் முழுக்க ஆடும். இரவு வந்த வுடன் பெரிய அடுப்புகளில் புதிதாகப் பட்டங்கட்டிக் கொண்ட பாட்ரொ பரிசாகக் கொடுத்த மண் பானைகளில் அவன் தந்த எருமைகளை ஒவ்வொரு குழுவினைச் சேர்ந்த கோண்ட்களும் சமைப்பர். முன்பெல்லாம் ஒவ்வொரு கிராமத்திற்கும் ஒவ் வொரு எருமை தரப்பட்டு வந்தது. ஆனால் இந்த நிகழச்சியில் சில கிராமங்களைக் கொண்ட வட்டாரத்திற்கு ஒரு எருமையே வழங்கப்பட்டது. இதனால் பழைய சென்றுபோன நாள்களை

எண்ணிச் சில முதியவர்கள் முணுமுணுத்தனர். அப்பொழுது எருமைகள் தாராளமாக வழங்கப்பட்டதுடன் மெரியாபலி ஆள்களும் தாராளமாகவே பலியிடப்பட்டனர். 'மலையகங்களின் பெருமையெல்லாம் கெட்டு ஒழிந்தது' என அவர்கள் கோண்ட் மொழியில் புலம்பினர். மூன்றாம் நாள் பிற்பகலில் மலை பாட்ரொக்கள், மொலிக்கர், பிஸ்ஸோயிகள் முதலிய பெரிய மனிதர்கள் நல்லபடியாக நாள்களைக் கழித்தபின் தங்கள் உறவினர்களுடன் காட்டினிடையே தூரத்தில் உள்ள தங்கள் இல்லங்களை நோக்கிப் புறப்படத்தொடங்கினர். முதலில் வெட்கப்பட்டவர்களாக நான் நெருங்கியவுடன் மருண்டோடிய பெண்கள் மூன்று நாள்கள் அவர்களிடையே கலந்து பழகியதன் காரணமாக நான் நட்புரிமையுடன் அவர்களை நெருங்கி அவர்களுடைய வண்ணம் ஏற்றிய புல்லால் ஆன கழுத்தணி, வெள்ளிக் காசுகள், வீசித்திர மான பாசிமணிகள், மணமாகாத கன்னியர் காது மடலின் விளிம்பில் துளைகளில் பிறை வடிவில் வரிசையாக அணிந்திருக்கும் குச்சிகள், முகத்தில் பல்வேறு வடிவங்களில் வளைவு நெளிவுடையனவாகக் குத்தப்பட்டிருக்கும் பச்சை ஆகியன வற்றைக் கண்டு ஆராய உடன்பட்டனர். நன்கு வளர்ந்த வர்களாகக் கூனலில்லாத முதுகும், வாகாக அமைந்த உறுப்புக் களும் இளமையின் பொலிவும் பெற்றுள்ள கோண்ட் கன்னியரின் அழகுக்கு மற்ற இனத்தவரில் ஒரு சிலரே ஈடாக முடியும். நான் அவர்களுள் சிலரை என் முன் நடனம் ஆடும் படி வற்புறுத்த முடிந்தது. வசதியான கோண்ட் குடும்பங் களைச் சேர்ந்த பெருமைக்குரிய கோண்ட்களின் பெண்களான ஆறு கன்னியர் மயில் நடனத்தை ஆட முன்வந்தனர். அவர் கள் வளைந்து நெளியும் பருத்த தங்கள் இடையில் கோண்ட் களுக்கே உரியதான நீலம், சிவப்பு, வெள்ளை வண்ணங்கள் கொண்ட ஆடையினைச் சுற்றிக் கொண்டிருந்தனர். இயற்கை யின் திறத்தால் பளபளக்கும் பழுப்புநிற உடம்பினை மறைக்கும் ரவிக்கைக்குப் பதிலாக நயமாகப் பின்னி அமைக் கப்பட்ட புல்லால் ஆன மாலைகளையும், வண்ணப் பாசி மணிகளாலான கழுத்தணிகளையும் அணிந்திருந்தனர். எண் ணெய் பூசப்பட்ட நல்ல கறுத்த கூந்தலைப் பின்னால் ஒழுங் காகச் சுருட்டிக் கொண்டையிட்டிருந்தனர். அதில் பூ வேலைப்

பாடுகளுடன் கூடிய சிப்புக்களையும், காட்டு மலர்களையும் சொருகி அலங்கரித்துக் கொண்டிருந்தது அவர்கள் அழகிற்கு மேலும் அழகு ஊட்டுவதாயிருந்தது. ஆட முன் வந்த ஒவ்வொருத்தியும் நீண்ட வெள்ளைத் துணி ஒன்றினை எடுத்து அதனை இடையில் சுற்றிய பின் அதன் ஒரு முனையினை லிபர்டி சிலையைப் போலப் பின்னால் தொங்கும்படி விட்டிருந் தாள். இது மயிலின் நீண்ட தோகையினைக் குறிப்பதாகும். அந்தப் பெண்களுள் மூவர் எஞ்சிய மூவரின் எதிரே அவர் களைப் பார்த்தபடி தங்கள் இடக் கையினை இடுப்பில் வைத்து முழங்கை இறக்கையினை ஒப்பப் புறத்தே நீண்டிருக்க நின்றனர். அவர்கள் விரிந்த விரல்களோடு கூடிய தங்கள் வலக் கையினை மயிலின் கழுத்தையும் அலகினையும் குறிக்கும் வகையில் முன்னோக்கி நீட்டியபடி இருந்தனர். இவ்வாறாக அவர்கள் காதினைத் துளைக்கும் எக்காளத்தின் கீச் ஒலிக்கும், மலையகங்களின் முரசின் சீரான ஒலிக்கும் ஏற்ப ஆடத் தொடங் கினர். முன்னும் பின்னும் அடியெடுத்து வைத்தும் அவ்வப் போது ஒருவரின் குறுக்கே மற்றவர் மாறி இடம் பெயர்ந்தும் (ஆனால் இது நான்கு இணைகள் ஆடும் நடன வகையில் முதலில் நிற்பவர் போய் வருவது போலில்லை) அவர்களுடைய சிறிய சலங்கை ஒலிக்கும் பாதங்கள் சுண்டெலிகள் வளை உள்ளேயும் வெளியேயும் போய் வருவதைப் போலக் குதிகால்கள் ஒன்றுடன் ஒன்று மோதியபடி இடம் பெயர, உதட்டினை இப்பக்கமும் அப்பக்கமும் அசைத்தபடி இசையொடு இசைய முன்னால் வந்தோ பின்னால் சென்றோ ஆடினர். அவர்கள் அசைவின் நளினம் முற்றும் இயைபுடையதாயிருந்தது. நீண்ட இமைகளின் உள்ளமைந்த பொருள் பொதிந்த பார்வையோடு கூடிய பெரிய விழிகள் ஒரு முறை கூட மேல்நோக்கிப் பார்க்க வில்லை. ஆடுகின்ற அவர்களுக்கு நாற்புறமும் சூழ்ந்து நின்ற ஆர்வ ரசிகர்கள் அவர்களின் இந்த ஆட்டத்தின் நுட்பம் முழுவதையும் புரிந்து ரசித்தவர்களாகவே இருந்தனர். சுற்றிலும் அமைந்ததான காட்டு வளமும், காதினைத் துளைப்பதான இசைக் கருவிகளின் ஒலியும், கோண்ட்களின் வேடிக்கையான உடைகளும் (பலர் வண்ணம் தீட்டப்பட்ட தங்கள் முகத்தின் மேலே தரையில் எருமைக் கொம்புகளைக் கட்டிக் கொண்டோ

கறுத்து நீண்ட பெரிய தலை முடியாலான சவுரிகளை வைத்துக் கொண்டையிட்டவர்களாகவோ இருந்தனர்.) அந்தச் சூழலும் இல்லாதிருக்குமாயின் ஆடும் அந்த அணங்குகளைத் தென்னியக் கும்மியாட்டத்தினைத் துறவு மனப்பான்மையும், கலை உள்ள மும் ஒருங்கே வாய்க்கப்பெற்ற பாதிரியாரின் முன் ஆடிக் காட்ட கிறித்தவ சங்கப் பள்ளியினால் தேர்ந்தெடுக்கப்பட்ட பெண்கள் என்றே நினைப்பர். நடுங்கிச் சோரும் அவர்களுடைய உடல் களைப்புக்கு ஆட்பட்டுவிட்டது எனத் தெரிந்தவுடன் எக்காளம் ஊதுபவனோ முரசினை முழக்குபவனோ அவர்கள் அருகே சென்று உரக்கக் கூவியோ, சைகை காட்டியோ தொடர்ந்து இருள் வந்து அந்த மலைகளைப் போர்த்தும் வரை ஆடும்படி ஊக்குவித்தான். அதன்பின் ஆட்டமும் அதற் கான காது செவிடுபடும்படியான இசையும் ஒரு முடிவிற்கு வந்தன. ஆடிய அந்த ஆறு அணங்குகளும் பின்னோக்கிச் சென்று கூட்டத்தில் கலந்து மறைந்தனர்.''

கோண்ட்களிடையே நிலவும் மூட நம்பிக்கைகளாகத் திரு செயராம் முதலியார் பதிந்துள்ள விவரங்கள் வருமாறு:-

கோண்ட் ஒருவன் வேட்டைக்குப் புறப்படுகையில் பெண் ஒருத்தியினை அவள் மணமானவளாயினும் கன்னியாயினும் எதிரே வரக் காண்பானாயின் அவன் வீட்டிற்குத் திரும்புவான் ஒரு குழந்தையிடம் அவளைத் தன் வழியில் குறுக்கிடாமல் விலகிப் போகும்படி செய்தி சொல்லி அனுப்புவான். மீண்டும் அவன் வீட்டிலிருந்து புறப்படுவான். அப்போதும் பெண் ஒருத்தி எதிரே வர நேர்ந்தால் கையசைத்துச் சைகை காட்டி அவளை விலகிப் போகும்படி கூறுவான். கூட்டமாக வேட்டைக்குப் புறப்படும் முன் அவர்கள் பெண்களை வழியில் குறுக்கே வர வேண்டாம் என முன் கூட்டியே எச்சரிப்பர். வழியில் ஒரு பெண்ணை எதிர்பட்டால் காட்டில் வேட்டை விலங்குகள் தங்கள் கண்ணில் படா எனக் கோண்ட்கள் நம்பு கின்றனர். ஒருத்தி வீட்டுக்கு விலக்காயிருக்கும்போது அவ ளோடு கூட ஒரே வீட்டில் வாழும் அவள் கணவன்; உடன் பிறந்தவர்கள், பிள்ளைகள் ஆகியோர் இதே காரணத்திற்காக வேட்டை மேல் செல்ல மாட்டார்கள்.

தன் கிராமத்தில் ஜாத்ரா (திருவிழா) நடக்கும்போது கோண்ட் ஊரைவிட்டு வெளியே சென்றால் பெண்ணு தெய் வத்தின் கோபத்திற்கு ஆளாக வேண்டிவரும் என அப்போது ஊரை விட்டுச் செல்ல மாட்டான்.

மனிதருக்குப் பயன்படும் கனி வகைகளைத் தரும் மா, பலா, நாவல், இலுப்பை (சாராயம் வடிக்கப் பயன்படுவது) போன்ற மரங்களை அவை பயிரிடும் விளை நிலங்களின் நடுவே வளர்ந் திருந்தாலும்கூடக் கோண்ட்கள் அவற்றை வெட்டி அப்புறப் படுத்துவதில்லை.

ஓர் ஆந்தை வீட்டுக் கூரை மீதிருந்தோ வீட்டருகே உள்ள மரத்தின் மீதிருந்தோ அலறுமானால் விரைவில் குடும்பத்தில் ஒரு சாவு நிகழப்போவதின் முன்னறிவிப்பாக அதனைக் கருது வர். கிராமத்துக்கு வெளியே, கிராமத்தின் அருகே ஓர் ஆந்தை அலறுமானால் அதனை ஊரில் ஒருவர் சாகப்போகிறார் என்பதன் அறிகுறியாகக் கொள்வர். இதனால் ஆந்தைகளைக் காண நேரிடின் கல்லெறிந்து விரட்டுவர்.

காக்கையினைக் கொல்வது நண்பனைக் கொல்வதற்குச் சமம் எனக் கருதி இவர்கள் காக்கைகளைக் கொல்வதில்லை. இவர்களிடையே வழங்கும் வழக்கு வரலாற்றுக் கதைப்படி உலகம் படைக்கப்பட்ட காலத்தினை அடுத்து வயதான ஆணும் பெண்ணும் அவர்களுடைய நான்கு குழந்தைகளும் ஒரு குடும்ப மாக வாழ்ந்துவந்தனர். அக் குழந்தைகள் அனைவரும் ஒருவரை அடுத்து ஒருவர் தொடர்ந்து இறக்க நேரிட்டது. அவர் களுக்கான இறுதிச் சடங்கினைச் செய்ய இயலாத அளவு மிகவும் வயது சென்றவர்களாக இருந்த அவர்களின் பெற்றோர் அவர்களின் உடலை வீட்டருகே தரையில் எறிந்துவிட்டனர். ஒரு நாள் இரவு தெய்வம் அவர்கள் கனவில் தோன்றி அந்தப் பிணங்களின் உடலைத் தின்னத்தான் காக்கையினைப் படைக்கப் போவதாக உறுதி கூறிச் சென்றதாம்.

தென்னிந்தியா முழுதும் மதித்துப் போற்றப்படும் கருட னைக் கொல்வதனை இவர்கள் பாவச் செயலாகக் கருதுவ

தில்லை. தான் வளர்க்கும் கோழிக் குஞ்சினை அது தூக்கிச் செல்லும் சிறு குற்றத்திற்காகக் கூட கோண்ட்கள் அதனைக் கொல்வர்.

அறுவடைக்கு இவர்கள் ஓரியர்கள் பயன்படுத்தும் இரம்பப் பல்லுடைய அரிவாளினைப் பயன்படுத்துவதில்லை. நேரான கத்தியினைக் கொண்டே இவர்கள் அறுவடை செய்வர். பயிரை அறுத்தபின் கிராமத்திற்கு எடுத்துச் சென்று கையால் அடித்துத் தானிய மணிகளை உதிர்ப்பார்களேயன்றிக் கால்நடைகளைப் பயன்படுத்திப் போரடிப்பதில்லை. இவ்வாறு தானியம் அடிக்கும்போது, மற்றவர்கள், தாங்கள் அறுவடை செய்து வந்த அந்தப் பயிரினைப் பார்ப்பதையோ, பயிரினை அடிக்கும்போது மற்றவர்களோடு பேசுவதையோ இவர்கள் விரும்புவதில்லை. இவ்வாறு பார்ப்பதும், பேசுவதும் செய்வதால் கண்ணேறுபடும் என நம்புகின்றனர். அயலான் ஒருவன தான்யம் அடிக்கும் களத்தினை நெருங்குவானாயின் கோண்ட்கள் வாய் திறவாமல் சைகையாலேயே அவனை விலகிப் போகும்படி அறிவுறுத்துவர். இரம்பப் பல் அரிவாளினைப் பயன்படுத்தினால் அது வயலில் கால்நடைகள் மேய்வதைப் போன்ற ஓசையினை உண்டாக்குவதால் அதனைத் தீய நிமித்தமாகக் கருதுகின்றனர். கதிரடிக்கக் களத்தில் கால்நடைகளை விட்டு மிதித்தால் அவை சாணம் இடுவதாலும் மூத்திரம் பெய்வதாலும் அச்செயல்கள் தன்னை அவமதிப்பதாக பூமித் தெய்வம் கருதும் என இவர்கள் நம்புகின்றனர்.

கோண்ட்கள் தங்கள் உடலில் ஒரு பாதி உயிரினை மட்டும் இறுத்திவிட்டு மறுபாதியின் துணையோடு புலிகளாகவும், பாம்புகளாகவும் மாற்றுருவெய்திப் பகைவர்களைக் கொல்லவோ காட்டில் சென்று விலங்குகளைத் தின்று பசியாற்றிக் கொள்ளவோ முடியும் என நம்புகின்றனர். இவ்வாறு ஒரு பாதி உயிர் மாற்றுருவெய்திச் சென்றுவிடும்போது தாங்கள் உடல் சோர்ந்தவர்களாக வேலை செய்ய மனம் இல்லாதவர்களாக இருக்க நேரிடும் என்றும் காட்டில் ஒரு புலி கொல்லப்படுமானால் அதே நேரத்தில் தாங்களும் இறக்க நேரிடும் என்றும் நம்புகின்றனர். தூங்கும்போது உயிர் வெளியேறி உலவி வருவதாகக்

72:3-34,

கோண்ட்கள் நம்புவதாகவும் திரு பாவ்செட் என்னிடம் தெரிவித்தார். புலியாகத் தன் உயிரினை உருமாற்றி அலையவிடும் கோண்ட் ஒருவன் புலியாக வந்து தன் ஆவியினைத் தின்று விட்டதால்தான் நோயுற்றதாக ஆகிவிட்ட உண்மையினைக் கண்டுபிடித்திருப்பதாக ஒரு கோண்ட் இன்னொரு கோண்ட் மீது குற்றம் சுமத்த, அவர்கள் தங்களுக்குள் சச்சரவிட்டுக் கொண்டனர்.

ஓர் ஊரில் காலரா நோய் பரவியபோது அந்த ஊரிலுள்ள ஆண், பெண் அனைவரும் பன்றியின் கொழுப்பினை உருக்கித் தலையிலிருந்து பாதம்வரை பூசிக் கொண்டனர். அச்ச மூட்டும் அந்தத் தொற்று நோய் அகன்ற பின்னும் இதுபோலச் சில நாள்கள் தொடர்ந்து பூசி வந்தனர். இச்சமயத்தில் குளித்தால் பன்றிக் கொழுப்பின் வாசனை போய்விடும் என இவர்கள் குளிப்பதில்லை.

கோண்ட்கள் பெரியம்மைக்குரிய தெய்வம் தங்கள் ஊரினை நெருங்குவதை வழியில் முள் வேலியிட்டும், குழிகள் வெட்டியும், வாணலியில் நாற்றம் பிடித்த எண்ணெயினைக் காய்ச்சித் தடுக்க முயல்வர்.* வடக்கு மலையகப் பகுதிகளில்சிறுத்தையினைக் கோண்ட்கள் சில வழிகளில் புனிதமான விலங்காகக் கருதுகின்றனர். இறந்த சிறுத்தையினைத் தங்கள் கிராமங்களின் வழியே தூக்கிச்செல்ல கோண்ட்கள் அனுமதிப்பதில்லை. சிறுத்தையின் தோலினைத் தொட்டுச் சத்தியம் செய்யும் பழக்கமும் இவர்களிடையே உள்ளது.

காட்டுத் தெய்வங்களின் கற்கள் அல்லது இறந்தவர்களின் கற்களுக்குஐரோப்பியநாடுகளில் ஊசிகள்,பொத்தான்கள்,பால், முட்டை முதலியன படைக்கப்படுதல் போன்றதொரு கோண்ட் சடங்கு பற்றித் திரு எஃப். பாவ்செட் விளக்கும்போது கூறுவதாவது:–† கோண்ட்களின் இத்தகைய சடங்கில் ஒரு மரத்தின் அடியில் சதுரமாக ஓர் இடத்தைச் சுத்தம் செய்து அதனுள் மஞ்சள், கரிபபொடி, அரிசி, கொஞ்சம் மஞ்சள்தூள் ஆகிய

---

* மாக்பேர்சன்:- இந்தியாவில் பணிக்கால நினைவுகள். (Macpherson: Memorials of Service in India.)

† Journ. Anth. Soc. Bombay, II, 1890.

வற்றால் வட்டங்கள் இட்டு அதனோடு முட்டையையோ கோழிக் குஞ்சையோ உடன் வைப்பர். கெட்ட ஆவியினால் நோயினுக்கு ஆளான ஒரு கோண்ட் இந்தச் சடங்கினை நிகழ்த்தி அந்த ஆவியினைத் தன் உடம்பிலிருந்தும் வெளிவரச் செய்து வேறு ஊருக்கு அனுப்பி வைத்தான்.

மாட்டுக் கொட்டகைப் பலிச் சடங்குப் பற்றித் திரு பாவ் செட் பின்வருமாறு கூறுகிறார்:-* “தான்யங்களிலிருந்து இச் சடங்கிற்காகச் சிறப்பான சாராயம் வடிப்பர். இந்தச் சடங்கின் முதல் நாளன்று பொதுவில் அனைவரும் விரதம் இருப்பர். எல்லோரும் தொகை செலுத்திக் கூட்டாக ஒரு பன்றியை வாங்குவர். அதன் வயிற்றில் கயிற்றினைக் கட்டி அதனைப் பலியிடும் இடத்திற்கு இழுத்துச் செல்வர். பின் அதனைக் கல்லால் அடித்துக் கொல்வர். அது இறக்கும் முன் அதன் உடம்பிலிருந்து கொஞ்சம் மயிரினையும், அதன் காதின் சிறு துண்டினையும் வெட்டி எடுத்து ஒவ்வொரு கோண்ட்டும் அவற்றைப் புனிதமானதாகப் பாதுகாப்பர். அதன் இறைச்சியினை அவர்கள் தங்களுக்குள் பங்கிட்டு அரிசியோடு கலந்து சமைப்பர். பூசாரி ஒவ்வொரு வீடாகச் சென்று மாட்டுக் கொட்டகைச் சடங்கை நடத்துவான். மாட்டுக் கொட்டகையின் நடுவே மேய்ச்சலுக்காக வெளியே ஓட்டி விடப்பட்டிருக்கும் கால்நடைகளின் (சிறப்பாக எருமைகளின்) கயிறுகள் ஒரு கட்டுத்தறியில் கட்டப்பட்டு அவற்றின் மற்றொரு முனை மாட்டுக் கொட்டகைக்கு வெளியே தரையில் கொண்டு வைக்கப்படும். இந்தத் தாம்புக் கயிறுகளே பலியினைப் பெறும் கண்ணுக்குப் புலனாகும் பொருள்கள். கட்டுத்தறியில் பிணைக்கப்பட்டுள்ள முனை அருகே ஒரு கோழிக் குஞ்சின் தலை புதைக்கப்படும். அதனருகே இலைகள் போட்டு அவற்றில் சோறு, பன்றி இறைச்சி, அதன் காதின் துண்டு ஆகியன படைக்கப்படும். இந்தப் படையல்களுக்கு முன்னால் அழுகிய முட்டை ஒன்று புதைக்கப்படும். புதைக்கப்பட்ட கோழிக் குஞ்சின் தலைக்கு

* மேற் சுட்டிய நூல். (*Ibid.*)

உரிய உடலை வேகவைத்துக் கோவணம் கூட அணியாத இளஞ் சிறார்கள் உண்பர். கோண்ட் அந்தப் படையலில் உள்ள சோறு, பன்றியின் காதின் துண்டு, அதன் மயிர் ஆகியன வற்றை மாட்டுக் கொட்டகைக் கூரையின் அடியில் வைப்பான். அன்று மாலை மேய்ச்சலிலிருந்து திரும்பிய கால்நடைகளைச் சடங்கு நிகழ்த்தப்பட்ட கயிறுகளால் கட்டுவர். அதன்பின் பெண்கள் தங்கள் விரதத்தைக் கைவிட்டு உணவு கொள்ள வேண்டும். அடுத்த இரண்டு நாள்கள் குடித்துக் களிப்பதும் ஆடிப்பாடுவதும் தொடரும். அந்த நாள்களில் மாட்டுக் கொட்டகையிலிருந்து சாணம் முதலிய எருக்களை அப்புறப் படுத்த மாட்டார்கள். மூன்றாம் நாள் கோண்ட்கள் ஆளுக்கு ஒரு பிடி எருவினை எடுத்து வந்து ஓரிடத்தில் குவியலாக இடுவர். அதன்மீது பூசாரி சாராயத்தையும் சோற்றையும் இடுவான்.''

கோண்ட்கள் சத்தியம் செய்து உண்மையை உரைப்பதற்கு எடுத்துக்காட்டாகத் திரு. ஜெ. எ. ஆர். ஸ்டீவன்சன் தந்துள்ள விவரம் வருமாறு:- ''சத்தியம் செய்பவன் முதலில் தான் சத்தியம் செய்ய வேண்டி நேர்ந்துவிட்ட சூழலினை விளக்குவான். அதன் பின் அவன் முன்னர் ஓணான், புலித்தோல் துண்டு ஒன்று, மயிலிறகு, கரையான் புற்றின் மண், கோழியின் குருதி கலந்த சோறு, ஏற்றப்பட்ட விளக்கு ஆகியன அடங்கிய கூடை நீட்டப் படும். சத்தியம் செய்யத் தொடங்கும் அவன் கூடையில் உள்ள எந்தப் பொருளின்மீது சத்தியம் செய்கின்றானோ அந்தப் பொருளினை அப்பொழுது கையால் தொட்டவனாக 'ஓ கடவுளே நான் பொய்யாகச் சத்தியம் செய்வேனாயின் நான் இந்த ஓணானைப் போல மெலிந்து தோல் சுருங்கி இறப்பே னாக. என்னை ஒரு புலி கொல்வதாக. கரையான் புற்றின் இந்த மண்ணைப் போல நான் புழுதியாகப் போகக் கடவேன். இந்த இறகினைப் போல நான் அலைகழிக்கப்படட்டும். இந்த விளக்குப் போல என் வாழ்வு முடிந்து போவதாகுக.' கடைசி யாக உள்ள வார்த்தைகளைக் கூறும்போது அவன் தன் வாயில் கொஞ்சம் அரிசியினைப் போட்டுக் கொண்டு அந்த விளக்கினை ஊதி அணைப்பான். அதன்பின் கூடையில் உள்ள பொருள்

களோடுகூடக் கூடையினை அவன் தலையின் உச்சியில் படும்படி செய்வர்.''

1904-இல் விசாகப்பட்டினம் மலை சார்ந்த பகுதிகளில் கோண்ட்களிடையே நிலவிய பில்லிசூன்யம் பற்றிய நம்பிக்கைக்குப் பின்வரும் வழக்கு எடுத்துக்காட்டாகும். மூன்று சகோதரர்களுள் இளையவன் காய்ச்சலால் நோயுற்றவனாக இறந்து போனான். அவன் உடலை எரியூட்டியபோது உடலின் மேற்பகுதியினை நெருப்பு எரிக்கத் தவறிவிட்டது. அவனுடைய இரு சகோதரர்களும் ஒரு குறிப்பிட்ட கோண்ட் பில்லிசூன்யம் வைத்ததாலேயே தங்கள் தம்பி இறந்துபோனான் என முடிவு செய்தவர்களாக அவனைத் தாக்கிக் கொன்றனர். அவ்வாறு கொல்லப்பட்டவன் உடம்பினை அந்த இருவரும் இரு கூறாக்கி அதன் மேற்பகுதியினை நெருப்பு எரிக்காது போன இடத்தில் வைத்துப் பொருத்த முயன்றனர். அப்போது அந்தக் குற்றவாளிகள் கொல்லப்பட்ட கோண்டின் உடற்பகுதியோடுங்கூடக் கைது செய்யப்பட்டனர். மரண தண்டனை விதிக்கப்பட்ட அவர்களுடைய தண்டனையினை உயர் நீதிமன்றமும் உறுதி செய்தது.*

1906-இல் கோண்ட் ஒருவன் பாணோ சாதிச் சிறுமி ஒருத்தி தன்னுடைய துணிகள் சிலவற்றையும் வெள்ளி நகைகளையும் திருடியதாகச் சந்தேகப்பட்டுச் சொல்லகொடொவில் திருமணம் ஆகாத கன்னியர் படுத்து உறங்கும் தேங்கட இல்லம் சென்று அந்தச் சிறுமியினைத் தன்னுடைய கிராமத்திற்கு அழைத்துச்சென்று தன் வீட்டில் அவளை அடைத்து வைத்தான். அதற்கு மறுநாள் அவன் அவளை ஒரு ஒரிய வணிகனிடம் அழைத்துச் சென்றான். அந்த வணிகன் அவளைத் திருட்டை ஒப்புக் கொள்ளச் செய்ய நன்கு அடித்தான். அதனை அடுத்துக் கொதிக்கும் நீரில் கையினை விடும் கொடுமைக்கு அச்சிறுமி ஆளாவதைக் காண்பதற்காக அந்த ஊரார் சிலர் வந்து

---

* சென்னை மாநிலக் காவல் துறை அறிக்கை, 1904. (Madras Police Report, 1904.)

கூடினர். தண்ணீர் நிறைந்த பானை ஒன்றில் உள்ள நீரினைக் கொதிக்க வைத்தனர். அந்த நீரில் கொஞ்சம் சாணி, புனித அரிசி, ஒரு ரூபாய் நாணயம் ஆகியன போடப்பட்டன. அந்தச் சிறுமி பானையில் உள்ள ரூபாயினை வெளியே எடுக்கும்படி கூறப்பட்டாள். அவள் அதனை மும்முறை வெளியே எடுத்தாள். நான்காம் முறை வெந்நீர் அவள் கையினையும் முன் கையினையும் கொப்பளிக்கச் செய்துவிட்டது. அதன்பின் ஒரு ரூபாய் மதிப்புடைய அவளுடைய காதணியினைத் தண்டத்தொகைக்கு ஈடாகக் கொடுக்கும்படி வற்புறுத்தப்பட்டாள். இந்தச் சடங்கில் தோல்வி அடைபவர்கள் இதுபோல ஒரு பொருளைக் கொடுக்க வேண்டும் என்ற வழக்கப்படி அவளும் தன் காதணிகளைக் கொடுத்தாள். சூட்டுக் கொப்பளங்களின் காரணமாக அவள் வலக்கை முழுவதுமாக பயனற்றதாகிவிட்டது. வயதான பாட்ரொ (ஊர்த் தலைவன்) ஒருவன் இத்தகைய வழக்குகளின்போது இரண்டு பானைகளில் ஒன்றில் வெந்நீரும், மற்றொன்றில் குளிர்ந்த நீரும் வைத்து வெந்நீர் உள்ள பானையில் ஒரு ரூபாயினையும் கொஞ்சம் அரிசியினையும் போட்டுக் குற்றம் செய்தவரைச் சந்தேகத்திற்கு உள்ளானவரை ஒரே ஒரு முறை மட்டும் ரூபாயினை எடுக்கச் சொல்லிப் பின் கையினைக் குளிர்ந்த நீரில் விடும்படி கூறுவான் எனவும், அப்போது கையில் கொப்பளங்கள் தோன்றுமானால் அவன் குற்றம் இழைத்தவனாகக் கருதப் பட்டுச் சாதிக்குத் தண்டம் செலுத்தும்படி வற்புறுத்தப் படுவான் எனவும் விளக்கிச் சொன்னார்.

இருவரிடையே உரிமை பற்றிய வழக்கு நிகழும்போது அவர்கள் இருவரையும் நீரில் மூழ்கும்படி கூறி யார் அதிக நேரம் மூழ்கியவர்களாக மூச்சை அடக்கியபடி உள்ளனரோ அவர்களே உரிமைக்கு உரியவர்கள் எனத் தீர்ப்பு வழங்கும் வழக்கமும் இருந்துள்ளது. சில ஆண்டுகளுக்கு முன் இரண்டு ஊரினைச் சேர்ந்தவர்களிடையே நில உரிமைத் தொடர்பாக வழக்கு நிகழ்ந்தபோது குற்றவியல் நடுவர் இரண்டு ஊர்களிலிருந்தும் குறிப்பிட்ட எண்ணிக்கையினரைக் கயிறு இழுக்கும் போட்டியில் ஈடுபடும்படி செய்து வென்ற கட்சிக்காரருக்கு அந்த நிலம்உரிமை

யாகும் என அனைவரும் திருப்தி கொள்ளும்படி வழக்கினைத் தீர்த்து வைத்துள்ளார்*.

மேலே கூறப்பட்ட புனித அரிசி தொடர்பாக மகாபிரசாத சங்கதோ பற்றி இங்கே குறிப்பிட வேண்டியதாகின்றது. "மகா பிரசாத சங்கதோ கஞ்சம் மலைப் பகுதிகளிலும் ஒரிசாவிலும் உள்ள கோண்ட்களிடையேயும் பிற ஒரியர்களிடையேயும் வழக்கில் உள்ளது. சங்கதோ என்றால் இணைதல் அல்லது நட்புக் கொள்ளுதல் எனப் பொருள்படும். மகா பிரசாத சங்கதோ என்றால் பூரி ஜகன்னாதர் ஆலயத்தில் கடவுளுக்குப் படைக்கப் பட்ட புனிதச் சோற்றின் மேல் சத்தியம் செய்து நட்பினை அல்லது கூட்டினை உறுதிப்படுத்தல் எனப் பொருள்படும். பூரி கோயில் பிரசாதத்தில் எஞ்சியதை உலர்த்திப் பாதுகாப்பர். பூரிக்குச் செல்லும் பக்தர்களில் பெரும்பாலோர் இந்த மகா பிரசாதத்தை வாங்கிவந்து அதனைக் கேட்கும் மற்றவர்களுக்கு வழங்குவர். அதனைத் தொட்ட அளவிலே மனிதர்கள் செய்த பாவங்களைப் போக்கி மன்னிப்பு வழங்கக்கூடிய ஆற்றல் வாய்ந்த புனிதப் பொருளாக அது கருதப்படுகிறது. புனிதமானதாக இருப்பதோடு அதன் முன்னிலையில செய்யப்படும் அனைத்துச் செயல்களையும் புனிதமுடையதாக ஆக்கும் வல்லமையும் பெற்றது அது. தன் கையில் அது இருக்கும்போது ஒருவன் ஒரு தவறான காரியத்தைச் செய்யவோ பொய் சொல்லவோ கெட்ட நினைப் புக்களை நினைக்கக்கூடவோ மாட்டான் என நம்புகின்றனர். இந்த நம்பிக்கையின் அடிப்படையில் வழக்கு மன்றங்களில் சாட்சிகள் (குறிப்பாக ஒரியர்கள்) சாட்சியம் சொல்லும்போது இதன்மீது சத்தியம் செய்து சாட்சியம் கூறும்படி வேண்டப் படுகின்றனர். ஆண்களோடு ஆண்களும் பெண்களோடு பெண்களும் தங்களுக்கிடையேயான நட்பினை மகாபிரசாத சங்கதோவின் மீது சத்தியம் செய்து உறுதி செய்து கொள்வர். இவ்வகையில் நகரினைச் சேர்ந்த நாகரிகமும் செல்வ வளமும் உள்ள ஒருவனும் கிராமத்தைச் சேர்ந்த ஏழை ஒரு வனும் தங்களுக்கிடையே நட்புக் கொண்டதற்கும் அல்லது ஓர் உயர் குடியினைச் சேர்ந்த பிராமணப் பெண்ணும் அவள் வீட்டு வேலைக்காரியான சூத்திர சாதிப் பெண்ணும் தங்க

* சென்னை மெயில் நாளிதழ், 1894. (Madras Mail, 1894.)

ளிடையே நட்பு கொண்டு அதனைச் சங்கதோ சடங்கு அடிப் படையில் உறுதி செய்து கொண்டுள்ளதற்குமான சான்றுகள் உள்ளன. இதற்காகக் குறிப்பிடப்பட்ட ஒரு நல்ல நாளில் சங்கதோ செய்துகொள்வ உள்ளவர்கள் தங்கள் உறவினர்கள், நண்பர்கள், நலம் வேண்டுபவர்கள் ஆகியோர் புடைசூழக் குழலிசை முழங்க ஒரு கோயிலுக்கு ஊர்வலமாகச் செல்வர். அந்தக் கோயிலில் நட்புச் செய்துகொள்ள உள்ள இருவரும் கடவுளின் முன்னிலையில் மகாபிரசாதத்தைக் கையிலேந்தியவர் களாகக் கூடியுள்ளவர்கள் சாட்சிகளாக விளங்க வாழ்நாள் முழுதும் தங்களுக்கும் தங்கள் குடுபத்தினருக்கும் எத்தகைய இடர் நேரினும் நண்பர்களாக இருக்கப் போவதாக உறுதி மொழி எடுத்துக் கொள்வர். இச்சடங்கின் இறுதியில் விருந்தும் பரிசளிப்பும் நடைபெறுவதோடு இரு பக்கத்தாரிடையேயும் மகிழ்ச்சியே குடிகொண்டிருக்கக் காணலாம். இவ்வாறு நண்பர் களாக உறுதி செய்யப்பட்ட பின் வாழ்நாள் முழுதும் நெருக் கமும் அன்பும் கொண்டவர்களாக அவர்கள் வாழ்ந்து வருவர், ஒருவரை ஒருவர் சந்திக்கக் கிடைக்கும் எல்லா வாய்ப்புக்களை யும் இவர்கள் பயன்படுத்திக் கொள்வர். ஒவ்வொரு விழாவின் போதும் துணிமணிகளையும் மதிப்பு வாய்ந்த பரிசுகளையும் ஒருவருக்கொருவர் தவறாது வழங்கிக் கொள்வர். ஒருவரை அழைக்காமல் இன்னொருவருடைய வீட்டில் எத்தகைய முக்கிய சடங்கும் நிகழாது. பழங்களும் காய்கறிகளும் விளையும் பருவங் களில் ஆண்டு முழுதும் இவர்கள் ஒருவருக்கொருவர் இவற்றை அனுப்பி வைத்துக் கொள்வர். இவர்களுள் ஒருவர் இறக்க நேரிட்ட பின்னும் அவர்கள் குடும்பத்தினர் அந்த நட்பின் தொடர்பு அறுந்துவிட்டதாகக் கருதாமல் அவர்கள் உயிர் வாழ்ந்த காலத்தில் தொடர்பு கொண்டிருந்ததைப்போலவே தொடர்பு கொண்டவர்களாக இருப்பர். உயிர்வாழ்கின்ற ஒருவன் தனக்கு உதவி தேவைப்படும்போது இறந்துபோன தன் நண்பன் குடும்பத்தாரிடமிருந்து அதனைப் பெறுவான். இந்தச் சமூக உறவு ஒரியக் கிராமங்களில் இவ்வகையில் தொடர்ந்து பேணப்பட்டு வருகின்றது. பழங்குடிகளிடையே இந்தச் சங்கதோ நட்பின் ஆர்வம் பழங்குடிகளின் காட்டு மிராண்டி இயல்புக்கேற்பத் தீவிரம் உடையதாகவே உள்ளது

கோண்ட்களும் பிற மலைவாழ் பழங்குடிகளும் சங்கதோ உறவின் தோற்றத்தினையும் எளிமையினையும் நாம் புரிந்து கொள்ள உதவக் கூடிய வகையில் இந்த உறவினைத் தங்களிடையே மேற்கொண்டு வருகின்றனர். இலட்சிய நண்பர்களான இவர்களிடையே ஒரு தமொனுக்கும் பைதியாசுக்கும் ஒத்தவர்களாகக் கூறக் கூடியவர்கள் இல்லாமல இல்லை. தன் நண்பனுக்காக வேண்டித் தன் வாழ்வினையே பாழாக்கிக் கொண்டான் ஒரு கோண்ட். அவன் தன் உடமைகளனைத்தையும் இறுதியில் தன் உயிரினையும் அந்த நண்பனின் நலங்களைக் காக்கத் தியாகம் செய்துள்ளான். அந்த நண்பர்களுக்கிடையே மிகுந்த அன்பு தவிர வேறெந்த உறவும் இல்லை.''*

விசாகப்பட்டினம் மாவட்டக் கையேட்டில், "கோண்ட்கள், கால்நடைகளைக் - குறிப்பாகப் பிரிஞ்சாரி குழுவினருக்குரிய கால்நடைகளை - அவற்றின் இறைச்சிக்காக வேண்டி அச்சம் ஏதுமின்றி வெளிப்படையாகக் கவர்ந்து செல்வதாகக் கூறப்பட்டுள்ளது. 1898-இல் கூதாரி அருகே உள்ள வெப்பிகுடியில் கோண்ட்கள் சிலர் கால்நடைத் திருட்டுக்களைக் கண்காணித்து வந்த நான்கு காவலர்களைத் தாக்கி உதைத்து அவர்கள் உடைமைகளையும் காவலர்களுக்கான உடைகளையும் கவர்ந்து சென்றுவிட்டனர். இக் குற்றவாளிகளைப் பிடிக்க முயற்சிகள் மேற்கொண்டபோது அந்த ஊரினைச் சேர்ந்த கோண்ட்கள் மலைப்பகுதிகளுக்கு ஓடத் தொடங்கினர். மற்ற ஊரினரும் அவர்களோடு சென்று சேர்ந்து கொண்டு கோண்ட்கள் அனைவருமாக வெளியேறும் நிலை ஏற்பட்டு விடும்போல் தோன்றியது. 1882-இல் காலகண்டி மாநிலத்தைச் சேர்ந்த கோண்ட்கள் உரியர்களுக்கு எதிராகக் கிளர்ந்து எழுந்து நூற்றுக் கணக்கான உரியர்களைக் கொன்றனர். தங்களோடு வந்து கிளர்ச்சியில் ஈடுபடும்படி முதலில் பலியான உரியர்களின் தலை, விரல்கள், மயிர் முதலியவற்றை அனுப்பி அந்தக் கோண்ட்கள் விடுத்த அழைப்பினை இந்த மாவட்டத்தைச் சேர்ந்த கோண்ட்கள் நல்ல காலமாக ஏற்றுக்கொள்ளவில்லை." கோண்ட்களின் இந்த எழுச்சி காவல்துறைத் துணைக் கண்காணிப்பாளரான திரு எச்.ஜி.

* சென்னை மெயில் நாளிதழ், 1908. (Madras Mail, 1908.)

பெரண்டர்காஸ்ட்டுக்குப் பகீர் போல வேடங்தாங்கி லங்கோடி உடுத்து ஒளிந்து மறைந்து வந்த ஒரு தொம்பொவினால் தெரிவிக்கப்பட்டது. இதற்காக அவனுக்கு வெள்ளியாலான ஒரு கடகம் பரிசளிக்கப்பட்டது. பல்வார்பூர் என்ற கிராமத்தில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் குல்டார்கள் அனைவரும் கொல்லப்பட வேண்டும் என்றும் நாட்டைவிட்டுத் துரத்தப்பட வேண்டும் எனவும் முடிவு செய்யப்பட்டது. இதற்கு அடையாளமாகக் கோண்ட்கள் விளக்குமாற்றினைத் தூக்கியபடி அலைந்தனர். அசுர்கார்க் என்ற இடத்தில் காவலர்கள் தலையற்ற நான்கு முண்டங்களைக் கண்டனர். அந்தப் பிணங்களுக்கு உரிய கைம்பெண்களிடமிருந்து அங்கு நடந்த கொடுமைகளுக்கெல்லாம் காரணம் அறிந்தனர். அந்தக் கொலைகள் மிகுந்த கொடூரமான முறையில் நிகழ்த்தப்பட்டிருந்தன. கொலையுண்டவர்கள் உயிரோடு இருக்கும்போதே அவர்களுடைய உச்சந்தலையின் தோல் கிழித்தெடுக்கப்பட்டிருந்தது. ஒருவன் தலையில் தோல் கிழிக்கப்படும் முன் அவனுடைய ஒரு கையும் ஒரு காலும் துண்டிக்கப்பட்டன. கொடுமைக்குப் பலியான ஒவ்வொருவனுடைய உயிர் போனவுடனும் அவனுடைய சாவினை ஒரு முரசினை மூன்று முறை மெல்லக் கொட்டி அறிவித்தபின் ஆடலும் பாடலும் நிகழ்த்தினர். இந்த நல்லூழ் விதியற்றவர்கள் அவர்களுடைய வீட்டிலிருந்து வெளியே இழுத்து வரப்பட்டு, அவர்களுடைய மனைவி, மக்கள் முன்பே கொல்லப்பட்டனர். இங்குப் போல் வேறெங்கும், புதைத்து வைத்திருக்கும் செல்வத்தைத் தராது போனால் கொல்லப்படுவீர்கள் எனக் கூறிப் பெண்கள் கேவலமாக இழிவுபடுத்தப்பட்டதில்லை. ஒருத்தி இத்தகைய அச்சுறுத்தலின் காரணமாகப் புதைத்து வைத்திருந்த ஓராயிரம் ரூபாயினைத் தோண்டி எடுத்துத் தரவேண்டியவளானாள். பில்ல்ட் கிராமத்தின் அருகே ஒரு புளிய மரத்தில் ஒரு குல்டாவின் தோல் உரிக்கப்பட்ட மண்டையோடு மிகக் கொடூரமான முறையில் கொல்லப்பட்டு வெற்றிச் சின்னமாகப் பொருத்தப்பட்டிருப்பதைக் காணலாம்.*

---

* பார்க்க: அரசு ஆணை, நீதித் துறை, 14.8.1882, எண் 952, கோண்ட்களின் கிளர்ச்சி. (See: G.O Judicial 14th August 1882, No. 952, Khond Rising.)

கோண்ட்களின் கணக்கிடும் இலக்க முறையானது பன்னி ரண்டினை அடிப்படையாகக் கொண்டது என்ற செய்தியினைத் திரு செயராம் முதலியார் குறித்துள்ளார். இவர்கள் பதின் மூன்றினைப் பன்னிரண்டு ஒன்று என்றும் நாற்பதை மூன்று பன்னிரண்டுகளும் நான்கும் என்றும் கணக்கிடுவர்.

## KONDH BIBLIOGRAPHY

1. Aborigines of the Eastern Ghats. Journ. Asiat. Soc. Bengal, XXV, 39–52, 1856.

2. Caldwell, R. Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages, 2nd edn., appendix, 516-17, 1875.

3. Campbell, G. Specimens of Languages of India, including those of the Aboriginal Tribes of Bengal, the Central Provinces and the Eastern Frontier, 95-107, 1904, Calcutta.

4. Campell, Major-General. Personal Narrative of Service amongst the Wild Tribes of Khondistan, 1864.

5. Dalton, E.T. Descriptive Ethnology of Bengal, 285-301, 1872.

6. Duff, Rev. A. The First Series of Government Measures for the Abolition of Human Sacrifices among the Khonds. Selections from the Calcutta Review, 194-257, 1845-6.

7. Fawcett, E. Miscellaneous Notes. Jounr., Anthrop. Soc., Bombay, II, 247-51.

8. Francis, W. Gazetteer of the Vizagapatam District, Vol. I, 1907.

9. Friend- Pereira, J.E. Marriage Customs of the Khonds. Journ., Asiat. Soc. Bengal, LXXI, Part III, 18-28, 1903.

10. Friend-Pereira, J.E. Totemism among the Khonds, Journ., Asiat. Soc., Bengal, LXXIII, Part III, 39-56, 1905.

11. Frye, Captain. Dialogues and Sentences in the Kondh Language, with an English translation, 1851, Cuttack.

12. Frye, Captain. Fables in the Kondn Language with an English translation, 1851 Cuttack.

13. Frye, Captain. Fables in the Kondh Language, with an Oriya translation, 1851, Cuttack.

14. Frye, Captain. The History of Joseph in the Kui or Kondh Lauguage, 1851, Cuttack.

15. Fry Captain. Primer and Progressive Reading Lessons in the Kondh Language, with an Oriya translation, 1851, Cuttack.

16. Frye, Lieut. J.P. On the Uriya and Kondh Population of Orissa. Journ., Roy. Asiat., Soc. of Great Britain and Ireland, XVII, 1-38, 1860.

17. Grierson, G.A. Linguistic Survey of India, IV, 457-71, 1906.

18. History of the Rise and Progress of the Operations for the Suppression of Human Sacrifice and Female Infanticide in the Hill tracts of Orissa. Selections from the Records of the Government of India (Home Department) No. V, 1854, Calcutta.

19. Hunter, W.W. Orissa II. 67-100, 1872.

20. Huttmann, G.H. Lieut. Macpherson's Report upon the Khonds of the Districts of Ganjam and Cuttack. Calcutta Review, VIII, 1-51, 1847.

21. Huttmann, G. H. Captain Macpherson's Renort upon the Khonds of the Districts of Ganjam and Cuttack. Calcutta Review, X. 273-341, 1848.

22. Lingum Letchmajee. Introduction to the Grammer of the Kul or Kondh Language, 2nd edn, 1902, Calcutta.

23. Macpherson, Captain S.C. An account of the Religious Opinions and observances of the Khonds of Goomsu and Boad. Journ., Roy. Asiat. Soc.of Great Britain and Ireland, VII, 172-99, 1843.

24. Macpherson, Captain S.C. An account of the Religion of the Khonds in Orissa. Journ., Roy. Assiat. Soc. of Great Britain and Ireland, XIII, 216-74, 1852.

25. Macpherson, Lieut Report upon the Khonds of the Districts of Ganjam and Cuttack, 1863, Madras.

26. Maltby, T.J. Ganjam District Manual, 65-87, 1881.

27. Rice, S.P. Occassional Essays on Native South Indian Life, 87-102, 1901.

28. Risley, H.H. The Tribes and Castes of Bengal II, 397, - 413, 1891.

29. Smith, Major J. McD. Practical Handbook of the Khond Language, 1876, Cuttack.

30. Taylor, Rev. W. On the Language, Manners, and Rites of the Khonds or Khoi Jati of the Goomsūr Mountains from documents furnished by J.A.R. Stevenson. Madras Jounr. Lit. and Science VI, 17-46. 1837.

31. Taylor, Rev. W. Some Additional Notes on the Hill Inhabitants of the Goomsūr Mountains. Madras Journ., Lit. and Science, VII, 89-104, 1838.

**கொந்தரர் – Kondra**

கொந்தரர் அல்லது கொந்தொரர் கஞ்சம் மாவட்டத்தைச் சேர்ந்த மீனவர்கள், இவர்கள் குளம், குட்டை, ஆறு, உப்பங் கழி ஆகியவற்றில் மீன் பிடிப்பார்களேயன்றிக் கடலில் மீன் பிடித்தலில் ஈடுபடுவதில்லை. இப்பெயர் கொண்கொத (நண்டு) என்ற பெயரிலிருந்து வந்ததாகலாம் என்றும் ஒரு கருத்து நிலவுகின்றது. இதற்குக் காரணமாக இவர்கள் சில்கா ஏரியில் நண்டுகளைப் பிடித்து விற்றலைக் காட்டுவர். சமூகப் படி நிலையில் மிகத் தாழ்ந்தவர்களான இவர்களுக்கு ஹட்டிகள் சடங்குகளின்போது பறையடிக்க உடன்படாததோடு இவர்கள் தொட்ட சோற்றினையும் ஏற்றுக் கொள்ள மறுப்பர். சில இடங்களில் இச் சாதியினைச் சேர்ந்தவர்கள் தங்களைத் தாச தீவரொ எனக் கூறிக்கொள்வதோடு தங்களைத் தசரதன் இறந்த செய்தியினை இராமனுக்குக் கூறச் சென்ற மன்னனான பரதனுக்குச் சித்ரகூடத்திற்குப் படகு வலித்துச் சென்றவர்களின் பரம்பரையில் வந்தவர்கள் எனக் கூறிக் கொள்வர். பரம்பரைத் தொழிலை மேற்கொண்டுள்ளவர்களான மச்சகொந்தரர், புதிதாக ஊர்க்காவல் பணியினை மேற்கொண்டுவிட்டவர் களான தண்டாசி கொந்தரர் என இவர்கள் இரு அகமணக் கட்டுப்பாடு உடைய பிரிவினராகப் பிரிவுபட்டுள்ளனர். இவர் களுடைய குலப் பிரிவுகள் அல்லது வம்சங்களுக்குப் பின்வருவன வற்றை எடுத்துக் காட்டுகளாகக் காட்டலாம். சாகோ (காகம்) பில்வ (நரி), கயா (பசு), குக்கிரிய (நாய்), காசிய (புல்) போலிய (செந்நாய்), சங்குணா (கழுத), தங்கள் வம்சத்திற்குப் பெயர்க ளாக அமைந்துள்ள உயிர்களிடத்து இவர்கள் மரியாதை காட்டு கின்றனர் எனச் சிலர் கூறுகின்றனர். மற்றவர்கள் இதனை மறுப்பர். சாதித் தலைவன் பேகர என அழைக்கப்படுகின்றான். அவனுக்குத் தொலொ பேகர, பொல்லொபய என்ற இரண்டு உதவியாளர்கள் உளர். சட்டிய என்ற சாதிச் செய்தி களைச் சென்றுரைக்கும் பணியாளனும் உளன். திருமணத்தின் போது ஒரு ரூபாயும் சாவுச் சடங்கின்போது ஓரணாவும் கட்டணமாகப் பேகரன பெறுகின்றான்.

பெண்கள் பூப்படைவதற்கு முன்னர் அல்லது பின்னர் மணம் செய்விக்கப்படுகின்றனர். நேர்ந்து கொண்டதற்கான

வேண்டுதலை நிறைவேற்றச் சில சமயங்களில் பெண்கள் பிரச மரத்திற்கு (*Streblus asper*) மணம் செய்விக்கப்படுகின்றனர். மரத்தைச் சுற்றியுள்ள தரையினைப் புல்பூண்டு முதலியன நீக்கித் தூய்மைப்படுத்தியபின் அடிமரத்தில் ஒரு புதிய துணியினைச் சுற்றிக் கட்டி அதனோடு ஒரு வில்லினையும் அம்பினையும் சேர்த்து வைப்பர். புரோகிதனாகப் பணியாற்றும் பேகரன் மணமகள் சார்பில் மரத்தின் அருகே பன்னிரண்டு கைப்பிடி அரிசியினையும் பன்னிரண்டு பிடி பருப்பினையும் வைப்பதோடு ஓர் இலையின் மீது பன்னிரண்டு துண்டு நூலினையும் மணமகனுக்கு உரிய பொருள்களாக வைப்பான். அந்தச் சிறுமி பூப்படையாதவளாயின் அவள் அந்த மரத்தின் அருகே ஏழு நாள்கள் தங்கி இருக்கக் கடமைப்பட்டவள். பூப்படைந்தவளாயின் நான்கு நாள்கள் மட்டும் இருந்தால் போதும். இறுதி நாளன்று பேகரன் மரத்தின் அருகே அமர்ந்தவனாகப் பின் வருமாறு கேட்பான். "நாங்கள் உனக்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குத் தேவையான பொருள்களைத் தந்துள்ளோம். எங்களுக்கு ஒரு விடுதலைப் பத்திரம் கொடுத்துவிடு" எனக் கூறுவாள். இதனை ஒரு பனையோலையில் எழுதி மரத்தின் அருகே போடுவர்.

கொந்தரர் இறந்தவர்களை எரிப்பர். ஆண், பெண் ஆகிய இருவருடைய பிணங்களும் சிதையில் குப்புறவே வைக்கப்படுகின்றன. வேறு பல சாதிகளில் பெண்களின் பிணம் மட்டுமே இவ்வாறு குப்புறக் கிடத்தப்படுகிறது. இவர்களின் சாவுச் சடங்குகள் ஒரியர்களின் சாவுச் சடங்குகளை ஒத்தவை. சுடு காட்டிலிருந்து ஒரு துண்டு எலும்பினைக் கொண்டு வந்து பத்தாம் நாள் வரை அதற்குச் சோறு படைப்பர். பத்தாம் நாள் இறந்தவனின் பங்காளிகள், மைத்துனர்கள், மருமகன்கள் ஆகிய அனைவரும் முகம் மழித்துக் கொள்வர். இறந்தவனுடைய சகோதரியின் மகன்களும் அவர்கள் தந்தையை இழந்தவர்களாக இருப்பின் முகம் மழித்துக் கொள்ளக் கடமைப்பட்டவர்கள். அவர்கள் தந்தை உயிருடனிருப்பின் அவர்கள் பதினொன்றாம் நாளன்றே முகம் மழித்துக்கொள்வர்.

கொந்தரர் கங்கா தேவியினைத் தங்கள் குலதெய்வமாகக் கொண்டாடுவதோடு சர்முண்ட, புத்தி, காளிக ஆகிய தெய்வங்களையும் வழிபடுகின்றனர்.

### கொங்க - Konga

கொங்க அல்லது கொங்கு என்பது கொங்கு நாட்டுப் பகுதியில் வாழ்பவர்களைக் குறிப்பது. அண்மைக் காலக் கணக்கெடுப்புகளில் இது அம்பட்டர், கைகோளர், கம்மாளர், குறுவர், குசவன், மலையான், ஒட்டே, பள்ளர், பறையர், சாணார், உப்பரர், வேளாளர் ஆகிய சாதிகளின் ஒரு பிரிவாகப் பதியப்பட்டுள்ளது. நீலகிரி மலையினைச் சேர்ந்த படகர் இதனை வசவு மொழியாகப் பயன்படுத்துகின்றனர். ஹோல்ம்ங்ரென் உடைய கம்பளி நூலினை இணைப்பதில் தவறு செய்யும் படகரைப் பார்வையாளர்களான படகர் கொங்க என்று இகழ்ந்துரைப்பர். தமிழ்நாட்டின் சில பகுதிகளிலும் இதே போல உயரமான, ஒல்லியான உடல் உடைய முட்டாள்களைக் கொங்கன் என இகழ்ந்துரைக்கின்றனர்.

### கொங்கு வேளாளர் - Konga Vellāla

திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த கொங்கு வேளாளர் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு எப். ஆர். ஹெமிங்வே அவர்களுக்குக் கடப்பாடுடையேன். மற்ற வேளாளர்களோடு பெயரளவிலேயே வைத்து எண்ணத்தக்கவர்களாக இவர்கள் உள்ளனர். ரெட்டிகள் இவர்களோடு உடன் உண்ணுவதில்லை. இவர்கள் தொட்டியன் முதலிய பிராமணர்கள் அல்லாத தாழ்ந்த சாதியினர் வீட்டில் உண்பர். கிராமங்களில் தனித்த சிறு குடியிருப்புகளில் பெரும்பாலும் ஒரே அறையினைக் கொண்ட கூரைவீட்டிலேயே இவர்கள் வாழ்கின்றனர். பயிர்த்தொழிலை மேற்கொண்டிருக்கும் இவர்கள் வளமான வாழ்க்கை வாய்ப்பு அற்றவர்கள். காது மடலில் பலவாக அணிந்திருக்கும் வளையங்களைக் கொண்டும், காதில் மேற்பகுதியினை அலங்கரிக்கும் முருகினை வைத்தும் இச்சாதியினைச் சேர்ந்த ஆண்களை அடையாளம் கண்டுகொள்ளலாம். முறுக்கப்படாத பருத்தி நூல்களில் கோக்கப்பட்ட அளவில் பெரியதான தாலியினை இச்சாதிப் பெண்கள் அணிகின்றனர். இவர்கள் தங்கள் இடக்கையில் தாயத்து எனப்படும் குழல் வடிவிலான மந்திரக் காப்பினை ஒத்த அணியினை பெரும்பாலும் அணிந்திருக்கக் காணலாம்.

கொங்கு வேளாளர் முறையான கொங்கு வேளாளர், தொண்டன் அல்லது இளகன்பன் கூட்டம் என்ற இரண்டு அகமணக்கட்டுப்பாடு உடைய பிரிவுகளாகப் பிரிவுபட்டுள்ள னர். பின்னவர் இச்சாதிப் பெண்களும் கைம்பெண்களும் வேறு சாதியாரோடு கொண்ட முறையற்ற உறவின் காரண மாகப் பிறந்தவர்கள். சாதி விதிகளின்படி இவர்கள் சாதியி லிருந்து விலக்கி வைக்கப்பட்டவர்கள்.

முறையான கொங்கர் பிரிவினரிடையே விரிவான சாதி அமைப்பு முறை வழக்கில் உள்ளது. இவர்கள் வாழும் பகுதி இருபத்தி நான்கு நாடுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நாட்டுப் பகுதியும் சில கிராமங்களைக் கொண்டவை. இந்த நாடுகள் நான்கு பிரிவுகளாக அமைக்கப்பட்டு அவற்றினுக் கென உரிய தலைமை இடங்களைப் பெற்றுள்ளன. பழைய கோட்டை, காங்கயம், புதூர், காடையூர் என்ற அத்தலைமை இடங்கள் நான்கும் கோயமுத்தூர் மாவட்டத்தில் உள்ளன. ஒவ்வொரு ஊருக்கும் கொட்டுக்காரன் என்ற தலைவனும், ஒவ் வொரு நாட்டுக்கும் நாட்டுக் கவுண்டன் அல்லது பெரிய தனக் காரன் என்ற தலைவனும், நான்கு பெரும் பிரிவுகள் ஒவ் வொன்றுக்கும் பட்டக்காரன் என்ற தலைவனும் உள்ளனர். இறுதியாகக் கூறப்பட்ட பட்டக்காரன் மிகுந்த மரியாதைக்கு உரியவன். கால் விரல்களில் தங்க மெட்டி அணியும் இவர்கள் பிணங்களைக் காண அனுமதிக்கப்படாததோடுகூட மற்ற வர்களால் கைகட்டியபடி வணங்கப்படுவர். சாதியினர் தொடர்பான வழக்குகளைத் தீர்த்துவைக்க இவனிடம் பெரும் பாலும் யாரும் அணுகுவதில்லை. சிறிய சச்சரவுகளைக் கொட்டுக்காரன்களும் மண உறவு தொடர்பான விவகாரங் களை நாட்டுக் கவுண்டன்களும் தீர்த்து வைப்பர். முறை யான கொங்கரிடையேயும் தொண்டன் பிரிவினரிடையேயும் பல புறமணக்கட்டுப்பாடுடைய குலப்பிரிவுகள் உள்ளன. ஒரு பொருளின் பெயரில் அமைந்த குலத்தைச் சேர்ந்தவர்கள் அப் பொருளினை ஒதுக்கிவிடுவர். காடை, பண்ணைக்கீரை ஆகியன சில குலப் பிரிவுப் பெயர்களுக்குரிய பெயர்களாம். ஒருவன் தன் தாய்மாமன் மகளை மணந்து கொள்வதே

இவர்களிடையே. பெரிதும் மேற்கொள்ளப்படுகின்ற வழக்கம். இந்த வழக்கினை விடாப்பிடியாக மேற்கொள்வதன் காரணமாகச் சிறுவர்கள் பலர் வயதில் மூத்த பெரிய பெண்களை மணக்கும் கட்டாயத்துக்கு உள்ளாகின்றனர். அதுபோன்ற சமயங்களில் அந்தச் சிறுவன் வளர்ந்து இளைஞனாகும் வரை அவனுடைய தந்தையே அந்தப் பெண்ணுக்குக் கணவன் ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்கின்றான். அவள் அவளுக்கு விருப்பமான சாதியினைச் சேர்ந்த வேறு ஒருவனோடு தொடர்பு வைத்துக் கொள்ள அனுமதிக்கப் படுவதும் உண்டு. எனினும் அவள் தன்னுடைய கணவன் வீட்டிலேயே இருந்து வாழ்ந்து வரவும் வேண்டும். மறுமணம் செய்து கொள்ள அனுமதிக்கப்படாதவர்களான கைம்பெண்களைப் பொறுத்த வரையிலான விதிகள் கண்டிப்பானவை. கைம்பெண்களோடு உறவு வைத்துக் கொள்ளும் ஆண்கள், அந்த விதவை அவன் அவளை விட்டுப் பிரிந்து செல்லவும் சாதியில் அவனைச் சேர்த்துக்கொள்ளவும் அனுமதி வழங்கும் வரையில், சாதியிலிருந்து விலக்கி வைக்கப்படுவதோடு அவள் தனியே வாழ்க்கை நடத்தி வரவும் வேண்டிய பொருள் உதவியும் செய்ய வேண்டியவனாகின்றான். அந்த விதவை, தன் உடன்பாட்டினைத் தரும் முறை பின்வருமாறு அமையும். 'நான் ஒரு மண் சட்டி, முழுதும் தீட்டுப்பட்டவளாக உடைந்த கலமானேன். அவனோ வெண்கலப் பானை. அவன் எப்படித் தீட்டுப்பட்டவனாக முடியும்?' எனக் கூறுவாள். அதன்பின் தவறு செய்தவன் ஊர்ச் சபையார் முன்னிலையில் எருக்கம் விளாரினால் அடிக்கப் பட்டுத் தன் உறவினர்களுக்கு ஒரு வெள்ளாட்டினை விருந்துக்கு வாங்கித் தந்தபின் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவான்.

திருமணங்களின்போதும், சாவுச் சடங்குகளின்போதும் கொங்கு வேளாளர் அருமைக்காரன்கள், அருமைக்காரிகள எனப்படும் தங்கள் சாதியினைச் சேர்ந்த சீர்க்காரன்களைக் கொண்டே சடங்குகளை நடத்திக் கொள்கின்றனர். இவர்கள் மணமானவர்களாகவும் பிள்ளைகளைப் பெற்றவர்களாகவும் உள்ள கணவன் மனைவியராவர். இவ்வாறு சீர்க்காரி எனத் தகுதிபெற ஒருவன் மனைவி முதலில் ஏழுதிங்கள்காரி என்ற

தகுதியினைப் பெற வேண்டும். இதனைப் பெற்ற பிறகே அவள் நெற்றியில் குங்குமம் இட்டுக் கொள்ளவும் தன் குழந்தைகளுக் குத் திருமணம் செய்விக்கவும் தகுதியுடையவள் ஆவாள். குறைந்தது ஒரு குழந்தையையாவது பெற்றெடுத்த பிறகுதான் ஒருத்தி ஏழு திங்கட்கிழமைகளில் இச்சடங்கினைச் செய்து கொள்ளத் தகுதியுடையவள் ஆகின்றாள். இந்தச் சடங்கு அவ ளுடைய பிறந்த வீட்டில் நிகழும். அதற்காக அங்குப் பச்சைத் தென்னோலைகளால் பந்தலிட்டு அவளுடைய தலையினைச் சுற்றிப் புங்கம், புளியம் ஆகியவற்றின் தளிர்க்கொத்துகளை வைத்து அலங்கரிப்பர். அவளுக்குப் புதிய சேலை ஒன்று வழங் கப்படும். பின்னர் அவள் தனியே உணவு சமைத்து உண்டபின் ஓர் ஆட்டுக் கல்லின் மீது நிற்பாள். தங்கள் குழந்தைகளில் ஒன்றுக்கு மணம் செய்வித்த பின்னரே பத்து அருமைக்காரர் களும் சில புலவன்களும் (கைகோளர் பிரிவைச் சேர்ந்த புகழ் பாடுவோர்) சேர்ந்து இவர்களுக்கு அருமைக்காரன் சடங்கினைச் செய்து வைப்பர். இச்சடங்கில் அவர்கள் அறுகம் புல்லினைச் சந்தனம், தண்ணீர், எண்ணெய் முதலியவற்றில் தொட்டு இந்தத் தம்பதியினர் மீது பூசுவர். இதன்பின் இச் சடங்கினைச் செய்து கொண்ட அவன் அருமைக்காரனாகவும், அவன் மனைவி அருமைக்காரியாகவும் கருதப்படுவர். அருமைக்காரன் தகுதி பெற்றவர்கள் சிறப்பாக மதிக்கப்படுவதோடு அவர்களுள் யாரேனும் இறந்தால் அதற்காகப் பறை கொட்டும் ஒருவன் இன்னொருவன் தோளின்மீது ஏறி நின்று பறை கொட்டுவான். இதற்காக அவன் ஏழு படி தானியத்தை அளந்து பெறுவதோடு, மேலும் அதே அளவுள்ள தானியத்தை அளக்காமலேயே பெறு வதற்கும் உரிமை உடையவன்.

மணமகளாதற்கு உரியவள் இல்லத்திலேயே மண உறுதிச் சடங்கு நடைபெறும். அது மணமக்களாதற்குரியவர்களின் தாய் மாமன்மார் முன்னிலையில் நடைபெறுவதோடு, அப்போது மணமகள் சேலையில் பழமும் வெற்றிலையும் வைத்து முடிவர். மணநாளன்று மணமகன் முகம் மழித்துக் கொண்ட பின் அவன் தலையில் ஓர் அருமைக்காரன் நீர் விடுவான். அவனுக்கு உடன்பிறந்தவள் இருப்பாளாயின் அவனுக்குப பிறக்க இருக் கும் பெண்ணை அவளுடைய மகனுக்கு மண உறுதி செய்வதான

சடங்கும் அப்போது நிகழும். அதன்பின் அவன் குதிரையில் ஏறிச் சில பழங்களையும் ஓர் உலக்கையினையும் எடுத்துக் கொண்டு நாட்டுக்கல் எனக் கூறப்படும் கல்லினைச் சென்று வழிபடுவான். அந்தக் கல் கொங்கு நாட்டு அரசனைக் குறிப்பதாகும். உலக்கை அவன் குடிகளைக் குறிப்ப தாகும். முன்பு கொங்கு நாட்டவர்கள் தங்கள் திருமணத் தினை நாட்டு அரசனின் உடன்பாடு பெற்ற பின்னரே நடத்த வேண்டும் என்ற பழைய வழக்கின் மரபினை ஒட்டியமைந்த சடங்காகும் இது. நாட்டுக்கல் வழிபாட்டினைச் செய்து திரும்பிய பின் கண்ணேறு பட்டதை நீக்க மணமகனைச் சுற்றிச் சோறும் மஞ்சள் கலந்த சோறும் ஆரத்தியாகச் சுற்றி வீசப்படும். இனி அவனுக்குச் சோறிட்டு வளர்க்கும் பொறுப்பு தன்னுடையது இல்லை என்பதனைக் குறிக்கும் வகையில் அவனுடைய அன்னை அவனுக்கு மூன்று வாய் சோறு ஊட்டிய பின் எஞ்சியதனைத் தான் உண்பாள். ஒரு நாவிதன் அவனை வாழ்த்தியபின், அவன் குதிரையில் ஏறி மணமகள் இல்லம் நோக்கிச் செல்வான். அங்கு அவனை மணமகள் வீட்டினைச் சேர்ந்த ஒருவன் அதே போன்று குதிரையில் ஏறியவனாகவந்து எதிர்கொள்வான். அவன் காதணிகள் மணமகள் காதில் அணி விக்கப்பட்டபின் மணமக்களின் தாய்மாமன்மார் அவர்களை நாட்டுக்கல் வழிபாட்டுக்காகத் தோளில் தூக்கிச் செல்வர். அங்கிருந்து திரும்பி வரும் மணமக்களை ஓர் அருமைக்காரன் அறுகம்புல்லினை எண்ணெய், பால், தண்ணீர் முதலியவற்றில் தோய்த்து அவன் மீது பூசுவான். தாலியினை அனைவரும் வாழ்த்திய பின் அருமைக்காரன் அதனை மணமகள் கழுத்தில் கட்டுவான். அதன்பின் நாவிதன் நீண்டதான பின்வருவது போல அமைந்துள்ள மங்கல வாழ்த்தினைக் கூறுவான். "சூரிய சந்திரரும் கரூரில் உள்ள பசுபதீசுவரரும் உள்ளவரை வாழ் வீராக! உங்கள் சந்ததி ஆல்போல் தழைத்து அறுகுபோல் வேரோடி, மூங்கில் போல் முளைவிட்டுப் பெருகுவதாகுக! பூவும் நாரும்போலவும் ஆற்றுநீரும் அதில் வளரும் நாணலும் போலவும் ஒட்டிஉறவு கொண்டுபிரியாது வாழ்வீர்களாக." திருமணத்திற் குப் புலவன் வருகை தந்திருப்பானாயின் அவனும் மணமக்களை வாழ்த்துவான். மணமக்களின் சுண்டு விரல் இணைக்கப்பட்ட

பின் அவற்றின் மீது பாலினைத் தடவிய பின் அவற்றைப் பிரிப்பர்.

இவர்களின் சாவுச் சடங்குகள் மற்றவர்களின் சடங்கினை ஒத்தனவே. ஈம விறகினுக்குத் தீயிடும் நெருப்பினை மற்றச் சாதியார்களில் கொள்ளியிடுபவன் எடுத்துச் செல்வதைப் போல இவர்கள் சாதியில் கொள்ளியிடுபவன் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்வதில்லை. அவனுக்குப் பதிலாகப் பறையனே அதனை எடுத்துச் செல்கின்றான். மூன்றாம் நாள் கருமாந்திரத் திற்குப் பிறகு வேறு சாவுச் சடங்குகள் ஏதும் இவர்கள் நிகழ்த் துவதில்லை. அப்போது எலும்புகளைப் பொறுக்கி எடுத்து நீரில் விடுவது இவர்கள் வழக்கம். அதன்பின், நாவிதன் பாலும் நெய்யும் கலந்த கலவையினைப் 'பொலி! பொலி!' எனக் கூறிய படி உயிருள்ள ஒரு செடியின்மீது விடுவான்.

இச் சாதியாருக்கு உரிய முடவாண்டிகள் (பார்க்க : தனிக் கட்டுரை.) என்ற இரவலர் பிரிவினர் உள்ளனர்.

**கொங்கரர் - Kongara (crane)**

பத்ம சாலே, கம்மர் ஆகிய சாதிகளின் புறமணக்கட்டுப் பாடு உடைய குலத்தின் பெயர். நாரை எனப்பொருள்படுவது இது.

**கொன்கொரோ – Konhoro**

பொலாசி சாதியாரின் பட்டப்பெயர்.

**கொங்கணி - Konkani**

கொங்கணியர் 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் ஒரு வட்டாரத்திற்குரியவராக கொங்கணத்தில் பேசும் மொழியின் அடிப்படையில் வாழ்பவரெனவும் மராத் தியின் ஒரு கிளைமொழியான கொங்கணி மொழியினைப் பேசுவரெனவும் விளக்கப்பட்டுள்ளனர். கடு கொங்கணியர் (கலப்புக் கொங்கணியர்) தூய கொங்கணியரிலிருந்து வேறு பட்டவர் என்பதனைக் குறிக்க அமைந்த பெயராகும்.

"தென் கன்னடத்தில் வணிகர்களாகவும் பெட்டிக் கடைக்காரர்களாகவும் தொழில் நடத்தும் கொங்கணத்துப் பிராமணர்களின் கிராமத்துக் கடைகளை மூலை முடுக்குகளில் கூடக் காணலாம்" எனத் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் கூறப்பட்டுள்ளது.

கொங்கணியரைப் பற்றிய பின்வரும் குறிப்பு 1901 திருவாங்கூர் மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையிலிருந்து திரட்டப் பட்டதாகும்:- "கௌட பிராமணர்களின் சாரஸ்வத பிரிவினைச் சேர்ந்த பிராமணர்கள், சத்திரியர்கள், வைசியர்கள் ஆகியோர் கொங்கணிகளுள் அடங்குவர். இந்தச் சமூகப் பிரிவினைச் சேர்ந்த பிராமணர்கள் திராவிடக் குழுவைச் சார்ந்த கொங்கணஸ்த மராட்டிய பிராமணர்களிலிருந்தும் வேறுபட்டவர்கள். கொங்கணத்துக் கடற்கரையில் வந்து குடியேறிய சூத்திரர்கள் குடுமிக்காரர் என்ற வேறு பெயரால் அழைக்கப்பட்டனர். பழமையான வடமொழி நூல்களில் சுட்டப்பட்டிருப்பதும், இராசபுதனத்தின் வடபால் பாலைவனத்தில் மறைந்து போய் விட்டதுமான சரசுவதி ஆற்றங்கரையே கொங்கணர்கள் முதலில் வாழ்ந்த இடமாகும். சகியாத்ரிகாண்டம் சாரஸ்வத பிராமணர்களின் ஒரு பிரிவினர் வங்காளத்தில் உள்ள திரிகுட்டில் வாழ்ந்ததாகவும், அவர்களுள் பத்துக் குடும்பத்தினரைப் பரசுராமர் இன்று கோவா என வழங்கும் கோதண்டகவுக்கும் பஞ்சக்ரோசிக்கும் குசஸ்தளிக்கும் அழைத்து வந்ததாகவும் தெரிவிக்கின்றது. இவர்கள் வந்து குடியேறிய புதிய பகுதியின் வளத்தினையும் அழகினையும் கண்டு மற்றவர்களும் தொடர்ந்து இங்கு வந்து கோவாவினைச் சுற்றியுள்ள அறுபது கிராமங்களிலும் தொண்ணூற்றாறு சிற்றூர்களிலும் குடியேறினர். அறுபது கிராமங்களில் குடியேறியவர்கள் சாகஸ்டியர் (அறுபது என்பதற்கான வடசொல்லின் அடியாகப் பிறந்தது) எனவும் தொண்ணூற்றாறு சிற்றூர்களில் குடியேறியவர்கள் சென்னவியர் (தொண்ணூற்றாறுக்கான வடசொல்லின் அடியாகப் பிறந்தது) எனவும் அழைக்கப்படுகினறனர். போர்த்துகீசியர் கோவாவில் வந்து தங்கி இருபது ஆண்டுகள் காலம் ஆகும் வரை இவர்கள் வளமான வணிக வாழ்க்கை வாழ்ந்தவர்களாகச் சிறப்புற்று வந்தனர். போர்ச்சுகலில் இமானுவல் அரசர்

உயிர்துறந்து இரண்டாம் ஜான் பட்டத்திற்கு வந்தவுடன் கோவா அரசு தனது சமயப்பொறைக் கொள்கையினை மாற்றிக் கொண்டு புறச் சமயத்தவர்களைக் கொடுமைப்படுத்தத் தொடங்கியது. இதனால் கொங்கணியர் பெரும் எண்ணிக்கை யில் கன்னடம், துளு ஆகியன வழங்கும் பகுதிக்குக் குடி பெயரலாயினர். அங்கிருந்து அவர்கள் திருவாங்கூருக்கும் கொச்சிக்கும் வந்து சேர்ந்து அந்தப் பகுதிகளை ஆண்ட இந்து மன்னர்களின் பாதுகாவலினைப் பெற்றனர். இவ்வாறு இறுதி யாக வந்து குடியமர்ந்த இடத்தில் கொங்கணிகள் தங்கள் வணிகத்தை வளம்பெற வளர்த்ததோடு பெரிய கோயில்களை யும் கட்டினர். இந்தப் பிரிவினருக்கு உரியதாகக் கொச்சியிலும் ஆழப்புழையிலும் உள்ள இந்து சமயக் கோயில்களே மலபார் பகுதியில் இன்றளவும் மிகுதியான வருவாய் பெற்று வருகின்ற கோயில்களாக உள்ளன.

"கிழக்கிந்தியக் கம்பெனியார் மலபாரில் வந்து நிலையாகத் தங்கிவிட்ட கன்னடியர்களோடு வணிகம் புரிவதாலும், இவர் களுள் ஒருவரைத் தங்கள் வணிகக் குழுவில் சேர்ததுக் கொண்டு அவருக்கு இரண்டு டச்சுப் படைவீரர்களையும் உதவியாளர் களாக அமர்த்தியுள்ளதால் மட்டும் இந்தக் கன்னடியர்கள் ஐரோப்பியர்களுக்கு நன்கு அறிமுகமானவர்களாக இருக்க வில்லை. இவர்கள் நடத்திவரும் கடைகளிலிருந்து அவர்கள் இறைச்சி தவிர மற்ற உணவுப் பொருள்கள் அனைத்தையும் பெற்று வருவதாலும் ஐரோப்பியர்களோடு நெருங்கிய தொடர்புடையவர்களாக உள்ளனர். இவர்களுள் சிலர் அரிசி விற்கின்றனர். சிலர் பழங்களையும் பலவகைத் துணிகளையும் விற்கின்றனர். சிலர் பணம் மாற்றும் வணிகர்களாக உள்ளனர். இவ்வகையில் இந்த இனத்தவர் அனைவருமே வணிகத்தில் ஈடுபட்டவர்களாக உள்ளனர்" என்று கண்டர் விஸ்செர் கூறியுள்ளார்.* போர்த்துக்கீசியர் இந்தியாவிற்கு வந்த நாள் தொடங்கி கொங்கணியர் வணிகர்களாகவே தொழில் செய்து

---

* மலபாரிலிருந்தான கடிதங்கள், மொழிபெயர்ப்பு, சென்னை. 1862. (Letters from Malabar. Translation, Madras, 1862.

வருகின்றனர். மலபாரில் உணவோடு சுவையூட்டுவதற்காகப் பலரும் பயன்படுத்தும் பப்படம் தயாரிப்பதில் இவர்களுள் சிலர் ஈடுபட்டுள்ளனர். அண்மைக் காலம் வரை திருவாங்கூரைச் சேர்ந்த கொங்கணிகள் வணிகத்தைத் தவிர வேறு எத்தொழிலும் அறியாதவர்களாகவே வாழ்ந்து வந்துள்ளனர். இப்பொழுது அவர்கள் பம்பாயையும் தென் கன்னடத்தையும் சேர்ந்த தங்கள் இனத்தவர்களைப் பின்பற்றி வேறு பல தொழில்களையும் மேற்கொண்டு வருகின்றனர்.

"கன்னட மாவட்டங்களில் வந்து குடியேறிய பின், கொங்கணிகளுள் பலரும் சென்னவியர் போலத் தொடர்ந்து ஸ்மார்த்தர்களாக இராமல் மத்வாச்சாரியரின் செல்வாக்குக் கீழ் வநதுள்ளனர். இவர்கள் திருப்பதியில் உள்ள தெய்வமான வெங்கட்டராமண்ணாவினை வழிபடுகின்றனர். கொங்கணிகளின் கோயில்களில் திருமலையில் உள்ளதெய்வமே வைக்கப் பட்டுள்ளதால் அவை அனைத்துமே திருமலை தேவஸ்தானம் என்று அழைக்கப்படுகின்றன."

**கொண்சாரி - Konsāri**

வெண்கலத்தாலான உண்கலமான கொணசா என்ற உண் கலத்தின் அடிப்படையில் இச்சாதியார் கொண்சாரி எனப் பெயர் பெற்றுள்ளனர். வெண்கலத்தில் தொழில் செய்யும் ஒரியர் களான இவர்கள் அந்த உலோகத்தைக் கொண்டு வட்டில், குவளை, தட்டு ஆகியனவற்றைச் செய்கின்றனர். இவர்கள் பிராமணர்களைப் புரோகிதர்களாகவும், குருமார்களாகவும் அமர்த்திக் கொள்கின்றனர். மீனும் ஆட்டின் இறைச்சியும் உண்ணும் இவர்கள் கோழிக்கறி, மாட்டிறைச்சி ஆகியனவற்றை விலக்குவதோடு மதுவகைகளையும் குடிக்கின்றனர். குழந்தை மணத்தைப் பின்பற்றும் இவர்கள் கைம்பெண்கள் மறுமணத் தினையும் மணமுறிவினையும் அனுமதிக்கின்றனர்.

**கோணப்பில்லி வாண்டுலு - Koonapilli vāndlu**

பத்ம சாலேக்கள் சாதியோடு தொடர்புடைய இரவலர் சாதி.

**கொப்பலர் – Koppala**

தங்கள் தலைமுடியினை உச்சந்தலையில் குடுமியாக (கொப்பு) முடியும் வெலமர்களின் பிரிவினர். முத்ராசாக்களின் புறமணக்கட்டுப்பாடு உடைய ஒரு குலத்திற்கு உரிய பெயரும் ஆகும். இக் குலத்தினைச் சேர்ந்த பெண்கள் பூப்படைந்த பின்னர் தங்கள் கூந்தலைக் கொண்டையாக முடிவதில்லை.

**கோர – Kōra (sun)**

கடபர், மூக தொரர், ரோணர் ஆகிய சாதிகளுக்குரிய குலத்தின் பெயர். இது சூரியன் எனப் பொருள்படும்.

**கொரச்ச – Koracha**

பார்க்க : குறவர். (See : Korava.)

**கொரகர் – Koraga**

தென் கன்னட மாவட்டத்தில் உள்ளஉப்பினங்கடிவட்டத்தில் முத்பித்ரி பகுதியில் கூடை முடைபவர்களாகவும் கூலிகளாகவும் வாழ்க்கை நடத்தும் காடுவாழ் பழங்குடிகளான கொரகர் பற்றி 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளதாவது:- "மெலிந்த உடலும், பெரும்பாலும் ஐந்தடி ஆறு அங்குலத்திற்கு மேற்படாத உயரமும், கறுத்த தோலும், பெரும்பாலான இந்தியப் பழங்குடிகளைப் போலவே தடித்த உதடும், அகன்ற உள்ளடங்கிய மூக்கும், அடர்ந்து வளர்ந்த முரட்டு முடியும் கொண்டவர்கள் கொரகர். அமைதியான வாழ்க்கையினை மேற்கொண்டவர்களாக உள்ள இவர்கள் யாருக்கும் தீங்கிழைக்காது வாழும் பண்பினர். கூடைமுடைதலைத் தொழிலாக மேற்கொண்டுள்ள இவர்கள் பண்ணைகளில் கூலிகளாகவும் பணிபுரிகின்றனர். ஊருக்குப் புறத்தே வாழும் இவர்கள் மண்ணாலான குடிசைகளை அமைத்துக்கொள்ளாமல் கொப்புகள் என அழைக்கப்படும் இலை தழைகளால் அமையும் குடிசைகளிலேயே வாழ்கின்றனர். பிற இந்தியப் பழங்குடிகளைப்போலவே இவர்களும் சொன்ன சொற்படி உண்மையாக நடந்து கொள்ளும் நற்பண்பிற்காகப் பாராட்டப்படு

கின்றனர். கொரகரின் வாக்குத் தவறாமை எங்கும் யாவரும் அறிந்த ஒன்று'' என இவர்களைப் பற்றித் திரு எம். டி. வால்ஹவுஸ் கூறுகின்றார்.*

சமூகப் படிநிலையில் கொரகர் ஹொலையருக்குத் தாழ்ந்த அடுத்த படிநிலையிலேயே வைக்கப்பட்டுள்ளனர். சில நகரங்களில் இவர்கள் துப்பரவுத் தொழிலாளர்களாக அமர்த்தப் பட்டுள்ளனர். ஊர்ப்புறங்களில் இறக்கும் கால்நடைகள், எருமைகள் ஆகியவற்றின் தோல், கொம்பு, எலும்பு ஆகியனவற்றைக் கொண்டு சென்று இவர்கள் மாப்பிள்ளா வணிகர்களுக்கு விற்கின்றனர்.பிற சாதியினரின் விருந்துகளின்போது மிச்சப்படும் எச்சில் உணவுகளை இவர்கள் ஏற்றுக்கொள்கின்றனர். இவர்களுள் சிலர் தொட்டில், கூடை, நெல் குதிர், முறம், விதைப்புக் கூடை, அளவு கோல்கள், பெட்டிகள், வடிகூடை, திரிகை, தேங்காய் நாரினாலான கயிறு, கால்நடைகளைக் கழுவுவதற்கான தேய்ப்பான் முதலியவற்றைச் செய்வதில் கைதேர்ந்தவர்கள்.

"இந்தியாவெங்கும் பல அடிமைச் சாதிகள் உள்ளன. 1843 ஆண்டில் இயற்றப்பட்ட அரசுச் சட்டப்படி இச் சாதியினர் விடுவிக்கப்பட்டுவிட்டனர் என்பது உண்மையே. அதனால் இவர்களுடைய வாழ்க்கை நிலை சற்றே மேம்பாடு அடையினும் இவர்கள் நடைமுறையில் அடிமைகளாகவே உள்ளனர். இவர்களின் தோற்றம் பற்றியும் நிலை பற்றியும் பின்வருமாறு விளக்கம் தரப்படுகின்றது. பிரமனிடமிருந்து தோன்றிய நான்கு வருணத்தாருக்குப்பின், ஆறு அனுலொம சாதியினர் தோன்றினர். இவர்கள் பிராமணர்களும் சத்திரியர்களும் தங்களை விடவும் தாழ்ந்த சாதிப் பெண்களோடு கொண்ட உறவு காரணமாகப் பிறந்தவர்கள். அனுலோம என்ற சொல் ஆரியர்களுக்குரியதான சுருட்டையில்லாத நீண்ட நெடுமயிரினைக் குறிக்கும். இவர்களை அடுத்து ஆறு பிரதிலோம சாதியினர் தோன்றினர். இவர்கள் முன்னவரிலும் முரண்பட்டவராகப் பிராமணர், சத்திரியர் சாதியினைச் சேர்ந்த பெண்களோடு அவர்களைக் காட்டிலும் தாழ்ந்த சாதியார் உடலுறவு கொண்டதன்

* இன இயல் கழக இதழ், IV, 1875 (Journ. Anthrop. Int. IV, 1875.)

காரணமாகப் பிறந்தவர்கள். இவ்வரிசையில் மூன்றாவதாக வைத்து எண்ணப்படுபவர்கள் சண்டாளர். இவர்கள் சூத்திரர்கள் பிராமணப் பெண்களோடு உடலுறவு கொண்ட காரணத்தால் பிறந்தவர்கள். சண்டாளர்கள் எனப்படும் அடிமைகள் பதினைந்து உட்பிரிவினராகப் பிரிக்கப்பட்டுள்ளனர். இவர்கள் ஒரு பிரிவினரோடு மற்றொரு பிரிவினர் மண உறவு கொள்வதில்லை. இந்த விதி இன்றளவும் தொடர்ந்து கண்டிபபுடன் பின்பற்றப்படுகிறது. இந்தப் பதினைந்து பிரிவினருள்ளும் கடைநிலையில் வைத்து எண்ணப்படுபவர்கள் கந்தலை உடுத்தும் கபடரும், இலை தழைகளை உடையாக அணியும் கொரகரும் ஆவர். இவையே பிராமணர்கள் எழுதி வைத்துள்ள பழைய நூல்களில் இவர்கள் நிலை பற்றிக் கூறப்பட்டுள்ள செய்திகளாம். எனினும் உண்மையில் தாழ்ந்தவர்களான இந்த அடிமைச் சாதியினர், ஆரியர்கள் தங்கள் படையெடுப்பின்போது வடபுலத்தில் மண்ணின் மைந்தர்களாக இருக்கக் கண்டவர்களாதல் வேண்டும். வந்த அவர்கள், இருந்த இவர்களோடு போராடிப் படிப்படியே சிலரை மலைகளுக்கும் காடுகளுக்கும் விரட்டியதோடு சிலரை அடிமைகளாகவும் ஆக்கிக் கொண்டவர்களாதல் வேண்டும். இந்தச் சாதியினர் அனைவரையும் இந்துக்களான இவர்களுடைய பண்ணைக்காரர்கள் வெறுப்போடு ஒதுக்குவதோடு இவர்கள் மிகவும் தூய்மையற்றவர்களாக உள்ளனர் என்றும் கூறுவர். இத்தகைய வெறுப்பு மனப்பான்மைக்கு இன்று ஒதுக்கப்பட்டவர்களாக உள்ள இந்தத் தாழ்ந்த இனத்தவர்கள் தலைமை உடையவர்களாக இருந்தபோது, இன்று தலைமை உடையவர்களாகக் கொடுமை புரியும் சாதியார் அவர்களிடம் அடங்கி ஒடுங்கி நடந்து கொண்டு அவர்களால் கேவலமாகவும் கீழாகவும் நடத்தப்பட்ட இழிநிலைக்கு எதிராகப் படிப்படியே கிளர்ந்து எழுந்து இறுதியில் இவர்கள் மீது வெற்றிகொண்டு அடிமைப்படுத்திய போராட்டத்தின் பழைய வடுக்களின் விளைவுகளாகலாம். இந்தத் தாழ்ந்த சாதியார் மீது வெறுப்பும் அருவருப்பும் கொண்டவர்களாக மற்றவர்கள் விளங்கக் காரணம், இவர்கள் மந்திரம், பில்லிசூன்யம் ஆகிய மாயவித்தைகளில் கைவந்தவர்களாகவும் இப்பகுதிகளுக்கே உரிய பழமையான தேவதைகளைத் தங்கள்

கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டு அவற்றின் துணையால் மற்றவர்களுக்கு நலந்தீங்குகளை விளைவிக்கும் ஆற்றல் பெற்ற வர்களாகவும் விளங்குகின்றார்கள் என நம்பும் மூடநம்பிக் கையும் இவர்களிடம் கொண்டுள்ள அச்சமுமேயாகும். தீண்டத் தகாத சாதியினைச் சேர்ந்தவளாகச் சாதாரணமாகக் கருதப்படும் கொரகர் சாதிப் பெண்ணினைத் தன் குழந்தை களை இளமையிலே தொடர்ந்து சாகக் கொடுத்த பிராமண சாதித் தாய் அழைத்து, அவளுக்குக் கொஞ்சம் எண்ணெய், அரிசி, சில காசுகள் ஆகியவற்றைத் தந்து, உயிரோடு இருக்கும் தன் குழந்தையினை அவள் கையில் தருவாள். அந்தக் கொரகர் சாதிப் பெண் அந்தக் குழந்தைக்குப் பாலூட்டுவதோடு தன் இரும்பு வளையலை அதற்கு அணிவித்தபின் அது ஆணாயின் கொரகர் எனவும் பெண்ணாயின் கொரப்புள்ளே எனவுமபெயர் சூட்டுவாள். இவ் வழக்கினை மேற்கூறியவாறு உயர்சாதியார் இந்தத் தாழ்ந்தசாதியாரிடம் கொண்டுள்ள அச்சஉணர்வினுக்குச் சான்றாகக் கூறலாம். இதனோடு ஒருவன் மிக மோசமாக நோயுறுவான் என்றாலோ வாழ்க்கையில் மிகவும் அதிர்ஷ்டங் கெட்டவனாக இருந்தாலோ அவன் ஒரு மண் பாண்டத்தில் எண்ணெயினை ஊற்றித், தன் குடும்பத் தெய்வத்தை வழிபடு வதைப் போல அதனை வழிபட்ட பின், அந்த எண்ணெயில் பிரதிபலிக்கும் தன் முகத்தினைப் பார்த்த பிறகு, தன் தலைமுடி ஒன்றினை அதிலிட்டு, அதனைக் கொரகருக்குத் தந்துவிட்டால் அது தீங்கு செய்யும் தேவதைகளையும் கேடு இழைத்துவரும் கோள்களையும் திருப்திபடுத்த வழிபாடு நிகழ்த்திவிட்டதாகக் கருதப்படுவதையும் இந்த அச்ச மனப்பான்மைக்குச் சான்றாகக் காட்டலாம்'' எனத் திரு வால்ஹவுஸ் மேலும் கூறியுள்ளார். திரு உள்ளல் ராகவேந்திர ராவ் கூற்றுப்படி பழைய மூட நம்பிக்கையில் ஊறிய இந்துக்கள் கொரகன் என்ற சொல்லினை இரவில் சொல்லமாட்டார்கள்.*

''வழக்கு வரலாறுகள் அனைத்தும் இன்றைய துளு பிரா மணர்களை அழைத்து வந்தவன் கடம்ப குலத்தைச் சேர்ந்த

* சென்னை கிறித்தவக் கல்லூரி இதழ். III, 1885-86.

மயூரவர்மனே எனக் கூறுகின்றன. ஆனால் அவர்கள் எவ்வாறு அப்பகுதியில் நிலைத்தனர் என்பதனைப் பற்றி வழக்கு வரலாறுகள் வெவ்வேறு வகையாகக் கூறுகின்றன. கொரகர்களின் தலைவனான ஹபாசிக மயூரவர்மனை விரட்டினான் எனவும் ஆனால் மயூரவர்மன் மகனோ மருமகனோ ஆன கோகர்ணத்தைச் சேர்ந்த லோகாதித்யன் அவனை மீண்டும் துரத்திவிட்டு அஹிக்ஷேத்திரத்திலிருந்து பிராமணர்களை அழைத்து வந்து முப்பத்திரண்டு ஊர்களில் குடியமர்த்தினான் எனவும் ஒரு வழக்கு வரலாறு கூறுகின்றது" எனத் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் குறிக்கப்பட்டுள்ளது. கொரகர்களின் ஆட்சியும் அதன் இறுதி வீழச்சியும் பற்றி வழங்கும் பின்வரும் வழக்கு வரலாற்றினைத் திரு வால்ஹவுஸ் எடுத்துக் காட்டியுள்ளார். "வில்கஸ் அவர்களால் கி. மு. 1450-ஆம் ஆண்டினைச் சேர்ந்தவன் எனக் கணித்து அறியப்பட்ட லொகரதிராய வட கன்னடத்தில் உள்ள பணவர்செ (தாலமியினால் குறிப்பிடப்பட்டுள்ள ஊர்) யினை ஆண்டு வந்தபோது ஹபாசிக என்பவன மலைகளுக்கு அப்பாலிருந்து இன்று சாண்டாளர்கள் எனக் கருதப்படுகின்ற சாதியினைச் சேர்ந்த படைவீரர்களோடு வந்து அந்த நாட்டுப் பகுதியினை வென்று அடிப்படுத்தியபின், இன்றைய தென் கன்னடத்தின் தலைநகரான மங்களூரினை நோக்கி முன்னேறினான். அவன் பெரியம்மைக்கு ஆளான தோடு எறும்புகளாலும் மிகுந்த தொல்லைகள பட்டதால் மங்களூருக்குத் தெற்கே பனிரண்டாவது மைலில் உள்ள பழமையான மஞ்சேஷ்வக் என்ற ஊருக்குச் சென்று அதனை ஆண்ட வீரவர்மன் மகனான அங்கரவர்மனை வென்று தன் மகனுடனும் அங்கிருந்து அரசாண்டான். பன்னிரண்டு ஆண்டுகளுக்குப்பின் அவர்கள இருவரும் இறந்துபட்டனர். இதற்கு அங்கரவர்மன் மேற்கொண்ட வசியங்களே காரணமாகுமென ஒரு வரலாறு கூறுகிறது. மற்றொரு வரலாறு பக்கத்து நாட்டு அரசன தன தங்கையினை ஹபாசிகனுக்கு மணம் முடித்துத் தருவதாகக் கூறி மணச் சடங்கிற்கு வந்த மணமகனையும் அவன் உறவினர்களையும் வஞ்சகமாகக் கொன்றான் என உரைக்கின்றது. அதன்பின் அங்கரவர்மன் திரும்பி வந்து முன்பு படையெடுத்து வந்த படைஞர்களைக் காட்டுக்கு விரட்டினான்.

காட்டில் சென்று சேர்ந்த அவர்கள் அடிமைகள் என்ற மிகத் தாழ்ந்த நிலையினை அடையவே பிராமணர்களாலும் அந்தப் பகுதிக்குரிய நிலக்கிழார்களாலும் அடிமைகளாக அமர்த்திக் கொள்ளப்பட்டனர். இவர்களுள் சிலர் கால்நடைகளையும் பயிர்களையும் பார்த்துக் கொள்ளும் பணியில் அமர்த்தப் பட்டனர். மற்றவர்கள் பல இழிந்த பணிகளை மேற்கொண்ட னர். அப்பணிகள் இன்றும் தாழ்ந்த இந்த அடிமைச் சாதி யாருக்கு உரியனவாக ஒதுக்கப்பட்டுள்ளன. ஹபாசிகனால் தன் அரசில் உயர்ந்த பதவி தரப்பட்டு மேன்மக்களாக்கப்பட்ட கொரகர்கள் ஆடைகள்பிடுங்கப்பட்டவர்களாகத்தூக்கிலிடப்படு வதற்காகக் கடற்பகுதிக்குத் துரத்தப்பட்டனர்.ஆடையிழந்தபின் பிறந்தமேனியரான தங்கள் நிலையினால் மிகுந்த வெட்கம் உற்ற அவர்கள் எங்கும் வளர்ந்துள்ள நொச்சி(*Vitex Negundo*)இலைக ளால் சிறு ஆடைகள் செய்து தங்கள் உடலின் முன்பகுதியினை மறைத்துக்கொண்டனர். இதனைக் கண்ட தூக்கிலிடும் பணியாளர்கள் இவர்கள் மீது இரக்கங்கொண்டு இவர்களைப் பிழைத்துப்போகும்படி விட்டதோடு இவர்களைத் தாழ்ந்தவர்கள் யாரினும் தாழ்ந்தவர்களாக இருக்கும்படியும் இலைகளாலான ஆடைகள் தவிர வேறு எதனையும் உடுத்தக்கூடாது எனவும் எச்சரித்தனர். இதன்படி இன்று கொரகர்கள் அடிமைகளுள் மிகத் தாழ்ந்த பிரிவினராக உள்ளனர். இவர்கள் மற்றவர் களால் மிகுந்த வெறுப்போடும், அருவருப்போடும் நடத்தப்படுவ தோடு அண்மைக் காலம்வரை இவர்களுள் ஒரு பிரிவினரான அண்டே கொரகர் அல்லது சட்டிக் கொரகர் எனப்படுவோர் எப்போதும் தங்கள் கழுத்தில் ஒரு சட்டியினை அணிந்தவராக அதனுள்ளேயே நெடுஞ்சாலையில் நடக்கும்போது எச்சிலையும் உமிழும் பழக்கத்தை மேற்கொண்டுள்ளனர்.இவர்கள் பிரிவினைச் சேர்ந்த பெண்கள் இன்றுவரை இலை ஆடையினை உடுத்திய வர்களாக ஒரு காலத்தில் தங்கள் இனம் முழுதும் அடைந்திருந்த வெறுக்கத்தக்க தாழ்ந்த நிலையினை எடுத்துக் காட்டியவர் களாக உள்ளனர்." ஆங்கிலேயர் வருகைக்கு முன் பகலில் நகருக்குள்ளோ ஊருக்குள்ளோ வர அண்டே கொரகர் அனுமதிச் சீட்டுப் பெற்றாக வேண்டும் என்ற விதியிருந்தது. இரவில் இவர்கள் அப்பகுதிகளில் நுழைந்தால் இவர்கள் நுழைந்த

காரணத்தால் அங்குக் கொடிய ஆபத்துக்கள் நிகழும் என நம்பினர். அந்நாளில் கொரகர் உடைந்த கலங்களிலேயே சோறு சமைக்கவேண்டும் என்ற விதியும் இருந்தது. வஸ்தர என்ற பெயரால் அழைக்கப்படும் பிரிவினரான கொரகர் பிணத்திற்குப் போர்த்தப்படும் துணிகளையே தர்மமாகப் பெற்று அணிய அனுமதிக்கப்படுகின்றனரேயன்றிப் புதிய ஆடைகளை அணிய அனுமதிக்கப்படுவதில்லை. மற்றொரு விவரப்படி கொரகரின் மூன்று பிரிவுகளாவன:-

1. கப்பட — ஆடை உடுத்துபவர்கள்
2. திப்பி — தேங்காய்ச் சிரட்டையாலான அணிகளை அணிபவர்கள்
3. வண்டி — பெரிய அளவிலான புது மாதிரியான கடுக்கன்களை அணிபவர்கள்

இந்த மூன்று பிரிவினரும் ஒன்றாக உண்கின்றனர் எனினும் தங்களுக்குள் மண உறவு கொள்வதில்லை. ஒவ்வொரு பிரிவும் பலிகள் எனப்படும் பல புறமணக்கட்டுப்பாடுடைய குலங்கள் ஆகப் பிரிக்கப்பட்டுள்ளன. கொரகர்களின் பலிகளுள் சில - ஹாலதென்னய, குமரெதென்னய போன்ற பலிகள் - மாரி மற்றும் முண்டல ஹொலையர்களிடையேயும் உள்ளன.

கொரகர்களின் உடையினைப் பற்றித் திரு உள்ளல் ராகவேந்திர ராவ் பின்வருமாறு கூறுகின்றார். ''ஆண்கள் தங்கள் இடுப்பில் ஒரு துண்டுத் துணியினை அணிந்து கொள்கின்றனர். பெண்கள் காடுகளில் கிடைக்கும் இலைகளைத் தைத்து ஆடையாகப் புனைகின்றனர். வெகு காலத்திற்கு முன் கொரகர் அரசாண்ட காலத்தில் கருங்காலர்களான (இரவில் கொரகர் என்ற சொல்லைச் சொல்லக் கூடாதாகையால் இவர்கள் இவ்வாறே அழைக்கப்படுகின்றனர்.) இவர்கள் உயர் சாதியினைச் சேர்ந்த ஒரு பெண்ணை மணம் செய்து கொடுக்கும்படி வேண்டினர். இதனால் சினமுற்ற உயர் சாதியினர் கொரகர் ஆட்சியிலிருந்து வீழ்ச்சி அடைந்தவுடன் கொரகர் பெண்களுக்கு எத்தகைய துணிகளையும் கொடுக்க - விற்க - மறுத்தனர்.

எனவே இவர்கள் அன்றிலிருந்து தங்களை இழிவினின்றும் காத்துக் கொள்ளக் காடுகளுக்குச் சென்று இலைகளை அணியத் தொடங்கியதோடு தெய்வம் தங்களுக்கு இத்தகைய ஆடைகளையே புனையும்படி விதித்துள்ளது என நம்பவும் தொடங்கினர்.'' "கொரகர்கள் இலை தழைகளான ஒருவகை ஆடையினைத் தங்கள் இடையில் அணிகின்றனர். ஒரு காலத்தில் இவர்களின் இழிந்த கடைநிலையினைச் சுட்டும் வகையில் இடையில் அணியும் இலைதழைகளான ஆடையினை மட்டுமே அணிய இவர்கள் அனுமதிக்கப்பட்டனர். இன்று அந்தக் கட்டாயத்தினின்றும் நீங்கிய பின்னும், அத்தகைய தழை ஆடை தேவையற்றதாகி விட்டநிலையிலும், கொரகர் சாதிப் பெண்கள் தாங்கள் அதனை அணியாது விட்டால் கேடு நிகழும் என்ற எண்ணத்தால் துணியாடைக்கு மேலே அதனையும் அணிந்து வருகின்றனர்'' எனத் திரு வால்ஹவுஸ் கூறுகின்றார்.* கொரகர்கள் இன்று தங்கள் உடம்பின் கீழ்ப்பகுதியினை ஒரு கறுப்புத் துணியால் மறைக்கின்றனர். மேற்பகுதியினை வெள்ளைத் துணிகொண்டு மூடுகின்றனர். தலையில் கமுகம் பாளையின் புற இதழாலான தொப்பியினை ஹொலையர்களைப் போலவே அணிகின்றனர். காதில் பித்தளைத் தோடுகள், கைகளில் இரும்பு வளையல்கள், இடையினைச் சுற்றி எலும்புப் பாசிமணிகளாலான சங்கிலி ஆகியனவே இவர்கள் அணியும் அணிமணிகள் எனத் திரு எச்.எ.ஸ்டுவர்ட் தென் கன்னட மாவட்டக் கையேட்டில் கூறியுள்ளார்.

"ஹபாசிகாவின் தலைமையில் படையெடுத்து வந்தவர்கள் முறியடிக்கப்பட்டு அடிமைப்படுத்தப்பட்டபோது அவர்கள் தங்கள் உரிமைகளுள் சில பிரிவுகள் என்றும் காக்கப்படும் என்ற விதிகளுக்கு உட்பட்டு அடிமை நிலையினை ஏற்றுக் கொண்டனர் என்றும் அவர்கள் தொண்டு செய்யும் அடிமைகளாகவே இருக்க வேண்டும் என விதிக்கப்பட்டதோடு, ஒரு நாளைக்கு ஒரு வேளை மட்டுமே உண்ண வேண்டும் எனவும் மறுநாள் உணவிற்கானவற்றைப்பெறுவதற்கான வழிவகைகளை

---

* இந்தியத் தொல்லியல், X. 1881. (Ind. Ant. X, 1881.)

நாடுதல் கூடாது எனவும் விதிக்கப்பட்டது. ஒவ்வொரு அடிமையும் தன் பண்ணையாருக்குக் கீழ்க்கண்ட முறைப்படி அடிமையாக்கப்பட்டு அந்த விதிமுறைகள் இன்றளவும் அடிமைகளை வாங்கவும் மாற்றிக் கொள்ளவும் வகை செய்கின்றன. ஓர் அடிமை குளித்து, எண்ணெய் பூசிக் கொண்டு ஒரு புதிய துணியினை உடுத்தி வந்தவுடன் அவனுடைய புதிய பண்ணையார் ஓர் உலோகத் தட்டினை எடுத்து அதனை நீரால் நிரப்பி அதில் ஒரு தங்கக் காசினை இட்டுத் தர அந்த அடிமை அந்தத் தண்ணீரைக் குடித்தபின் அந்தக் காசினை எடுத்துக் கொள்வான். அதன்பின் அந்த அடிமை தன் வருங்காலப் பண்ணையாரின் நிலத்திலிருந்து கொஞ்சம் மண்ணை எடுத்து, தான் குடிசை போட்டுக் கொள்ள விரும்பும் இடத்தில் போடுவான். அந்த இடம் அங்குள்ள மரம்மட்டைகளோடு அவனுக்கு உரிமையாக்கப் படும். அந்த நிலம் வேறு ஒருவருக்கு விற்கப்படும்போது அதில் குடியமர்ந்துள்ள அடிமைகளும் தனியே நிலத்தோடுகூட விற்கப் படுவர். சில சமயங்கள் அவர்கள் கோயில்களில் தெய்வத்திற்குப் பணிசெய்ய நியமிக்கப்பட்டுவிடுதலும் உண்டு. அவ்வாறு கோயிலுக்கு அடிமைகளை உரிமையாக்கும்பண்ணையார் ஊரார் முன்னிலையில் கோயிலின் வாசலிலிருந்து கொஞ்சம் மண்ணை எடுத்துத் தான் அந்த அடிமை மீதான உரிமையைக் கோயிலின் உள்ளே இருக்கும் தெய்வத்திற்கு மாற்றிக் கொடுப்பதாகக் கூறி அந்த மண்ணை அந்த அடிமையின் வாயில் இடுவார். இந்துக் களின் உணர்வுகளைப் புலப்படுத்தும் பாங்கில் அடிமைகளுக்குத் தரப்பட வேண்டிய பணிகள் எவை, அவர்களுக்கு எவ்வளவு உணவு வழங்கப்பட வேண்டும், விழாக்களின் போது அவர் களுக்குத் தரப்பட வேண்டிய அன்பளிப்புகள், அவர்கள் பண்ணையாருக்குத் தரும் காணிக்கை ஆகிய அன்றாட நடைமுறைகள் பற்றிக்கூட விதிகள் வகுக்கப்பட்டுள்ளன. அவர்கள் தங்களுக்குள் மணம் புரிந்து கொள்ளும்போது பண்ணையார் முன் விழுந்து வணங்கி அதற்கான பண்ணை யாரின் அனுமதியினைப் பெறுவர். அப்போது அவர் கொஞ்சம் தொகையும் அரிசியும் அன்பளிப்பாக வழங்குவார். மணம் முடிந்தபின் மறுபடியும் அவர்கள் பண்ணையாரை வந்து கண்டு கொள்வர். அப்போது அவர் அவர்களுக்கு வெற்றிலை பாக்குத்

தருவதோடு மணமகள் தலையில் கொஞ்சம் எண்ணெயையும் ஊற்றுவார். ஒரு பண்ணையார் இறப்பாராயின் அவரது அடிமைகளின் தலைவன் உடனே தனது தலையினையும் மீசையினை மழித்துக் கொள்வான். பண்ணையார் அடிமைகளை எந்தெந்தக் குற்றங்களுக்கு எவ்வாறு தண்டிக்காலம் என்ற பட்டியலும் உள்ளது. பில்லிசூனியம் செய்வது அல்லது மற்றவர்கள் மீது குட்டிச் சாத்தானை அதன் உருவில் ஏவி விடுவது ஆகியன குற்றங்களாகக் கருதப்படுகின்றன. ஒவ்வொரு குற்றத்திற்கும் உரிய தண்டனைகள் விதிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் சூடுபோடுவதும் கசையடி தருவதும் கடுமையான தண்டனைகளாம். அடிமைகளின் உயிரினைப் போக்கப் பண்ணையாருக்கு அதிகாரம் இல்லை. பண்ணையார் தரவேண்டிய கூலியினைத் தராமல் நிறுத்தி வைத்தாலோ விதிகளை மீறிக் கடுமையான தண்டனைகளை வழங்கினாலோ அடிமைகள் மேலிடத்தில் முறையிட்டுக் கொள்ளலாம். அடிமைகள் பற்றி இவையே வழக்கு வரலாற்றுப்படி தெரிய வருவன'' எனத் திரு வால்ஹவுஸ் குறிப்பிட்டுள்ளார்.

கொரகர்கள் அடிமை நிலை குறித்துத் திரு உள்ளல் ராகவேந்திர ராவ் எழுதியுள்ளதாவது:- ''இந்த அடிமைகள் மிகத் தாழ்ந்த நிலையில் வாழ்ந்தாலும் இவர்கள் வாழ்க்கை மீது வெறுப்புக்கொண்டவர்களாகவோ மகிழ்ச்சியற்றவர்களாகவோ இல்லை. ஓர் ஆண் அடிமை நாளொன்றுக்கு மூன்றுபடி நெல் அல்லது ஒன்றரைப்படி அரிசி, அத்துடன் கொஞ்சம் உப்பும் பெறுகின்றான். ஒரு பெண் இரண்டு படி நெல் பெறுகின்றாள். கணவன் மனைவியராக உள்ள இவர்கள் அந்த நெல்லில் ஒரு பகுதியினை விற்றுத் தேவையான மற்றப் பொருள்களைப் பெற்றுக் கொள்ளலாம். ஆண்டுக்கு ஒரு வேட்டி அல்லது ஒரு சேலையினைப் பெறும் இவர்கள் ஒரு பண்ணையாரிடமிருந்து மற்றொரு பண்ணையாரின் அடிமைகளாக மாற்றப்படும்போது ஒரு தென்னை மரத்தையும் ஒரு பலா மரத்தையும ஒரு துண்டு நிலத்தையும் தங்கள் உடமைகளாகப் பெறுகின்றனர். அந்த நிலத்தில் இவர்கள் பத்து முதல் இருபது சேர் வரை நெல் விதைக்கலாம். அடிமைகளுள் பெரும்பாலோர் அளிய சந்தானச்

சொத்துரிமை முறையினைப் (பெண்கள் வழி உரிமை செல்லும் வழக்கு) பேணுகின்றனர். இவர்களுள் ஓர் ஆண் அடிமை மூன்று பகொடாக்: (பதினான்கு ரூபாய்கள்)களுக்கும் ஒரு பெண் அடிமை ஐந்து பகொடாக்களுக்கும் விற்கப்படுகின்றனர். இதற்கு மாறாக மக்கள் வழி உரிமை பேணும் அடிமைகளுள் ஆணின் விலையாக ஐந்து பகொடொக்களாகவும், பெண்ணின் விலை மூன்று பகொடொக்களாகவும் உள்ளன. பின்னவர்களின் குழந்தைகள் கணவனின் பண்ணையாருக்கும், முன்னவரின் குழந் தைகள் மனைவியின் பண்ணையாருக்கும் உரிமை உடையவர் களாவர் என்ற விதிமுறை இருப்பதே இதற்குக் காரணம் ஆகும். அளிய சந்தான வழக்கினை மேற்கொள்ளும் அடிமைகளுள் பெண்ணின் கணவன் அவளுடைய பண்ணையாருக்குப் பிணை பட்டவனாவான். இதனால் அந்தப் பண்ணையார் ஒன்றரை பகோடா வரை அவர்களுடைய திருமணச் செலவுகளைச் செய்யக் கடமைப்பட்டவராகவும் ஆகின்றார். மக்கள் சந்தான நெறிப்பட்டவர்களை அடிமைகளாகக் கொள்ளும் பண்ணை யார் அவர்கள் திருமணச் செலவிற்காக இரண்டு பகொடா தருதல் வேண்டும். மணம் முடித்த பின் மணப்பெண்ணும் அவளுக்குப் பிறக்கும் குழந்தைகளும் அவரது அடிமைகளாவர். தனது அடிமைகளை வாடகைக்கு விடும் உரிமை பண்ணை யாருக்கு உண்டு. அவ்வாறு விடப்படும் அடிமைகளுக்காக அவர் நாற்பது சேர் நெல்லினைப் பெறுவார். அடிமை ஒருவனை ஈடாக வைத்து மூன்று நான்கு பகொடாக்களைக் கடனாகப் பண்ணையார் பெறுவதும் உண்டு.''

கொரகர்கள் திருமணம் பற்றித் திரு வாலஹவுஸ் தெரிவிக்கும் விவரங்கள் வருமாறு:- "மற்ற அடிமைச் சாதியினர் திங்கட்கிழமையினை மணத்திற்கான மங்கல நாளாகக் கொள்ளி னும் கொரகர்கள் ஞாயிற்றுக்கிழமையினையே மணத்திற்குரிய மங்கல நாளாகக் கருதுகின்றனர். மணமக்கள் தண்ணீரில் குளித்தபின், மணமகன் வீட்டிற்கு வந்து ஒரு பாயில் அமர்வர். அவர்கள் முன் ஒரு பிடி அரிசி வைக்கப்படும். மணச் சடங்கை நடத்தும் பெரியவர் அரிசியில் கொஞ்சத்தை எடுத்து மண மக்கள் தலையில் தூவுவார். அதைத் தொடர்ந்து முதலில்,

கூடியுள்ள ஆண்களும் பின்னர் பெண்களும் அரிசியினைத் தூவுவர். அடுத்து மணமகன் இரண்டு வெள்ளிக் காசுகளை மணமகளுக்கு அன்பளிப்பாகத் தருவான். அதன்பின் அவன் சாதியினைச் சேர்ந்தவர்களுக்கு ஆறுமுறை விருந்து தரவேண் டும்.'' இந்த விருந்துகளின்போது கொரகர் ஒருவரோடு ஒருவர் போட்டியிட்டவர்களாக மிகுதியாக உண்ணவும் குடிக்கவும் செய்வர் எனக் கூறப்படுகிறது. ''மற்ற அடிமைச் சாதியாரிடையே கணவன் மனைவியரிடையே சிறு கருத்து வேறுபாடு தோன்றி னாலும் சாதியாரின் உடன்பாடு பெற்று மணமுறிவு செய்து கொள்ளும் ஒருத்தி வேறொருவனை மணந்து கொள்ளலாம் எனினும் கொரகர்களிடையே மண உறவு அறுத்துக் கொள்ள இயலாத பிணைப்பாகவே பேணப்படுகிறது. எனினும் கண வனை இழந்த கைம்பெண்கள் மறுமணம் செய்துகொள்ள அனுமதிக்கப்படுகின்றனர். ஒருவன் இரண்டு மூன்று பெண்கள் வரை மணம் புரிந்துகொள்ள அனுமதிக்கப்படுகிறான்.''

மகப்பேற்றின்போது அது தொடர்பாகக் கொரகர் மேற் கொள்ளும் சடங்குகள் பற்றித் திரு உள்ளல் ராகவேந்திர ராவ் எழுதுவதாவது:- ''குழந்தையைப் பெற்ற ஒருத்தி இந்துக்களி டையே இருப்பதைப் போலவே தீட்டுக்கு உரியவளாவாள். அவளை மற்றவர்கள் தொடுவதோ நெருங்குவதோ இல்லை. அவளுடைய கொப்பில் (குடிசையில்) வாழ்பவர்கள் அங்கிருந்து வெளியேறி ஐந்து இரவுகள் நண்பர்களின் குடிசையில் சென்று தங்குவர். அச்சமயத்தில் மகப்பெற்றவளுக்கு மருத்துவச்சி மட் டுமே துணையாக இருப்பாள். ஆறாம் நாள் இரவு அந்தக் கொப்புவின் தலைவன் தன் கொப்பினைச் சூழ வாழும் அண்டை அயலார்களை அழைப்பான். அவர்களும் அவனது அழைப்பினை ஏற்று வருகை தருவர். அப்பொழுது குழந்தையினையும் அதன் தாயினையும் குளிக்கச் செய்து தீட்டு நீக்குவர். வருகை புரிந் துள்ள குடும்பத்தினர் அனைவரும் தங்களுடன் ஒரு சேர் அரிசி, அரைச் சேர் தேங்காய் எண்ணெய், ஒரு தேங்காய் ஆகியன வற்றைக் கொண்டு வருவர். மகப் பெற்றவளை ஒரு பாயில் அமரச் செய்து விருந்தினர் தாங்கள் கொண்டு வந்தனவற்றை அகன்றதொரு கூடையில் அவள் முன் வைப்பர். கூடியுள்ளவர்

களுள் வயதில் பெரியவன் தன் தோழர்களுடன் குழந்தைக்கு வைப்பதற்குரிய பெயரைப் பற்றிக் கலந்து பேசுவான். அதன் பின் குழந்தையின் இடுப்பில் ஒரு கறுப்புக் கயிறு கட்டப்படும். அண்டை அயலார் கொண்டு வந்து குவித்துள்ள அரிசியினைக் கொண்டு அன்றிரவு அனைவருக்கும் விருந்திடுவர். தேங்காய் களை உடைத்துக் கீழ் முடியினைப் பிள்ளைப் பெற்றவளுக்குக் கொடுத்துக் கண்களோடு கூடிய மேல் முடியினை அதனைக் கொண்டு வந்தவர்கள் எடுத்துச் செல்வர். பிறந்த குழந்தை ஆணாக இருந்தால் இம்முறை பின்பற்றப்படுவதற்குரியது. குழந்தை பெண்ணாக இருப்பின் கீழ் முடியினைக் கொண்டு வந்தவரும் மேல் முடியினைப் பிள்ளையைப் பெற்றவளும் பெறுவதற்குரியர். கொரகர் ஆதியில் சூரியனை வழிபட்டு வந்தனர். இன்றும் அவர்களின் பெயர்கள் வாரத்தின் நாள் களின் பெயர்களாலேயே வழங்கிவருகின்றன.

| | | | |
|---|---|---|---|
| அய்த | - ஆதித்தன் | என்ற | பெயரின் திரிந்த வடிவம். |
| தோம | – சோமன் | ,, | ,, |
| அங்கர | - மங்களன் | ,, | ,, |
| குர்வ | – குரு | ,, | ,, |
| தன்ய | – சனி | ,, | ,, |
| துக்ர | – சுக்கிரன் | ,, | ,, |

இவர்களின் தெய்வத்திற்கெனத் தனியே கோயில்கள் இல்லை. கட என இவர்கள் வழங்கும் இவர்களுக்கே உரியதான தெய் வத்திற்கு உரியதாக ஒரு எட்டி (*Strychnos Nux-Vomica*) மரத்தின் அடியிடத்தைத் தூய்மைப்படுத்தி அங்கு இத்தெய்வத் தினை வழிபடுவர். இத் தெய்வத்திற்கான வழிபாட்டு நிகழ்ச் சிகள் மே, சூலை மாதங்களிலோ அக்டோபர் மாதத்திலோ நடைபெறும். மரத்தடியில் தூய்மைப்படுத்தப்பட்ட இடத்தில் இரண்டு வாழையிலைகளை இடுவர். அதில் மஞ்சள் கலந்த பொங்கல் படைக்கப்படும். கொரகர் சாதி வழக்கப்படி இந்த வழிபாட்டிலும் கூடியுள்ளவர்களுள் வயதில் பெரியவனே சடங்கினை நிகழ்த்துவான். அவன் தெய்வத்தினை வாழ்த்தி வழிபட்டுத் தங்கள் படையலை ஏற்றுக் கொண்டு திருப்திப் படும்படி வேண்டுவான். தற்பொழுது அவர்கள் பண்டர்களையும்

சூத்திரர்களையும் பின்பற்றித் தங்கள் தெய்வங்களுக்குப் பதிலாகப் பூதங்களை (தீய ஆவிகளை) வழிபடத் தொடங்கி விட்டனர்.

கொரகர்கள் சமயநெறி பற்றித் திரு வால்ஹவுஸ் கூறுவதாவது:- "மற்ற அடிமைச் சாதியார்களைப் போலவும் தாழ்ந்த இனத்தவர்களைப் போலவும் கொரகர்களும் சிவனின் மனைவியான பார்வதியின் கொடிய அவதாரமான பெரியம்மைக்குரிய தெய்வமான மாரியம்மனை வழிபடுகின்றனர். கன்னட மாவட்டங்களில் கொடிய வடிவினை உடையவளாக உயிர்ப் பலி தந்து பலராலும் வழிபடப்படும் தெய்வம் அவள். ஆடு, எருமை, பன்றி, கோழி முதலியன அவள் முன், மலை மேலிருந்து வரும் அடிமைப் பழங்குடியினைச் சேர்ந்த ஆசாடியினால், ஒரே வெட்டில் வெட்டி அவளுக்குப் பலியாக்கப்படும். மற்ற அடிமைச் சாதியார்களைப் போலவே கொரகர்களும் தீண்டத்தகாதவர்களாகவும் பிராமணர்களின் கோயிலினையோ தெய்வத்தையோ நெருங்க அருகதையற்றவர்களாகவும் கருதப் படினும் இவர்கள் இந்துக்களின் புகழ்பெற்ற திருநாள்களான கோகுலாஷ்டமி, சௌதி ஆகியவற்றைக் கொண்டாடுகின்றனர். சௌதி திருவிழாக் கொண்டாட்டச் சடங்குகளையும் வழிபாட்டினையும் ஒரு கன்னியே நிகழ்த்துதல் வேண்டும்." இந்தத் திருவிழாக்கள் தொடர்பாகத் திரு உள்ளல் ராகவேந்திர ராவ் பின்வரும் விவரங்களைத் தருகின்றார்:- "கொரகர்களுக்கு எனத் தனியாகக் குறிப்பிட்ட விருந்துத் திருநாள்கள் எவையுமில்லை. நீண்ட நாள்களாக அவர்கள் இந்துக்களின் திருவிழாக்களையே கொண்டாடி வருகின்றனர். அவற்றுள் இரண்டு விழாக்கள் குறிப்பிடத் தக்கவை. அவற்றுள் ஒன்று கண்ணன் பிறந்த நாளான கோகுலாஷ்டமியாகும்; மற்றொன்று சௌதி எனப்படும் பொலியார் விருந்தாகும். இவற்றுள் பொலியார் விருந்தே முக்கியமானதாகக் கருதப்படுகின்றது. முன்னைய விழா ஆர்ப்பாட்டங்கள் ஏதும் இன்றிப் பக்தி நெறிப்பட்டதாகும்; பின்னது விருந்துக்கும் மகிழ்ச்சி ஆர்ப் பாட்டத்திற்கும் உரிய நிகழ்ச்சியாகும். அந்த நாளில் சமயச் சடங்குகளை விட விருந்து ஆர்ப்பாட்டங்களுக்கே சிறப்பிடம் தரப்படுகிறது. அஷ்டமி நாளன்று வழக்கமான படையல்களோடு

உளுந்தினால் பணியாரங்களும் செய்யப்படும். இந்த நிகழ்ச்சியினை நடத்திவைக்க உதவிக்குப் பச்சுக்களை அழைப்பதோடு கொப்புக்களின் தலைவன் தன் உறவினர்களையும் நண்பர்களையும் விழாவில் பங்குபெற வருமாறு அழைப்பான். கொப்பின் தலைவன் விருந்தினர் நடுவே அமர்ந்து உண்ணத் தொடங்கியவுடன் விருந்து நிகழ்ச்சிகள் தொடங்கும். விருந்தினர்கள் தரையில் ஒருவரையடுத்து ஒருவர் எதிரெதிர் திசையினைப் பார்த்தவர்களாகச் சற்றே இடைவெளிவிட்டு அமர்த்தப்படுவர். விருந்தினர்கள் தங்கள் தகுதிக்கேற்ப நடைமுறை ஒழுங்கினைக் கண்டிப்புடன் பின்பற்றவேண்டும். ஆண்களும் பெண்களும் வேறு வேறாக அமர்த்தப்படுவர். பெண்கள் ஆண்களுக்கு எதிர் வரிசையில் அமர்வர். விருந்தளிப்பவர் நெருங்கிய உறவினர்களையோ நண்பர்களையோ அனைவருக்கும் உணவு பரிமாறும்படி வேண்டுவார். முதலில் கறி வகைகளையும் பின்னர் சோறும் அடுத்துப் பணியாரங்கள் முதலிய தின்பண்டங்களும் பரிமாறப்படும். பரிமாறும் கொரகன் கூடியுள்ளவர்கள் வயிறார உண்ணும்வரை பரிமாறுவான். உண்பவர்களுள் யாரேனும் சோற்றினைப் பக்கத்தில் உண்பவன் தட்டில் விழும்படி சிந்தினால் அனைவரும் உண்பதனை நிறுத்திவிடுவர். தவறு செய்தவன் விருந்தினர் முன் நிறுத்தப்பட்டு விருந்தினைப் பாழ்படுத்திவிட்டதாகக் குற்றம் சுமத்தப்படுவான். அங்கேயே அவனை விசாரித்து அவனுக்கு மற்றுமொரு விருந்து ஏற்பாடு செய்வதற்காகத் தேவைப்படும் தொகை தண்டமாக விதிக்கப்படும். இந்தத் தீர்ப்புக்கு அவன் கட்டுப்பட மறுப்பானாகில் அவன் சாதிவிலக்கம் பெறுவதோடு மனைவி மக்களாலும் உறவினர்களாலும கைவிடப்படுவான். அதன்பின் யாரும் அவனோடு பேசவோ அவனைத் தொடவோ கூடாது. ஒருவன் தான் இயலாதவனாக வறுமையுற்றிருப்பதாக முறையிட்டுக் கொள்வானாகில் அதனைப் பரிவுடன் கேட்டு அவனை ஒரு சிறு தொகையினை மட்டும் தண்டமாகச் செலுத்தும்படி கூறுவர். அதனைக் கூட அவனுக்காக வசதி படைத்த மற்றொரு கொரகன் முன்வந்து செலுத்திவிடுவான். விருந்துக்குச் சிகரம் வைத்தாற்போல் விருந்தினரிடையே பெருமளவில் கள் வழங்கப்படும். கமுக மரத்தின் காய்ந்த மடல் ஒன்றினைத்

தைத்துக் கொரகர் அதனைத் தலையில் தொப்பி போல அணிந்து கொள்வர். இதனையே அவர்கள் கள் குடிக்கும் கல மாகவும் பயன்படுத்துவர். இதில் மிகுதியாகக் கள்ளினை நிரப்ப முடியும். அந்தக் கலத்தில் கள் வார்ப்பவன் அது கொள்ளும் அளவு மட்டுமே வார்க்க வேண்டும். அதன் அளவுக்கு அதிக மாகக் கள்ளினை வார்க்க நேர்ந்து அதில் ஒரு துளிகள் தரையில் சிந்தினால்கூட முன்பு கூறப்பட்டதைப்போலவே விருந்தில் கள் வழங்குபவன் கள்ளைச் சிந்திய குற்றத்திற்காகத் தண்டிக்கப்படுவான். விருந்திற்குப்பின் ஆண்களில் சிலர் கூடிக் குழலிசைக்கும் பறையொலிக்கும் இயைய ஆடுவர். மற்ற வர்கள் கள்ளின் மயக்கத்தினால் ஆர்ப்பாட்டத்துடன் அங்கும் இங்குமாகக் குதிப்பர். இனி, அடுத்த திருவிழாவினைப் பற்றிப் பார்ப்போம். இதற்காக முதல் நாள் இரவு குடும்பத்தைச் சேர்ந்த அனைவரும் விரதம் இருப்பர். விழாவின் முதல் நாள் ஊன் உணவும், மது வகைகளும் விலக்கப்படும். மறுநாள் அதிகாலை யில் பொழுது புலரும் முன் கன்னி ஒருத்தி குளித்து வீட்டின் ஒரு பகுதியினைப் பசுஞ்சாணம் கொண்டு மெழுகுவாள். இவ் வாறு ஓரிடத்தைத் தூய்மை செய்தபின் அங்கே திருவிழாவிற் கென்றே முடையப்பட்ட கூடை வைக்கப்படும். அதில் ஒரு கைப்பிடி அரிசிக் குறுநொய், இரண்டு வாழைப்பழங்கள், இரண்டு கரும்புத் துண்டுகள் ஆகியன வைக்கப்படும். இப்பொழுது அந்தக் கூடையில் அன்று வழிபாடு நடத்துவதற் குரிய தெய்வம் அமர்த்தப்பட்டதாகக் கருதப்படும். கரும்புத் துண்டுகளே தெய்வங்களாகக் கொள்ளப்படுகின்றன. அந்த இடம் மிகப் புனிதமானதாகையால் அதனருகே மற்ற ஆண்க ளும் பெண்களும் நெருங்கார். கன்னி ஒருத்தி ஆற்றும் வழி பாட்டில் அவளுடைய தூய்மை பேணி வரும் பண்பு காரண மாக அவள் வேண்டுதலுக்குத் தெய்வம் செவிசாய்க்கும் என்ற நம்பிக்கையின் காரணமாகக் கன்னியரைத் தவிர மற்றவர்கள் வழிபாடு நடத்த அனுமதிக்கப்படுவதில்லை. அவள் அந்தக் கூடையினைக் காட்டு மலர்களைக் கொண்டு அலங்கரிப்பாள். அதன்பின் குடும்பத்தைச் சேர்ந்த அனைவருக்கும் ஆண்டு முழுதும் நலமே நிகழவேண்டும் என வேண்டிக்கொள்வாள்.

கொரகர் சாதிப் பெண் கூடாஒழுக்கத்தில் ஈடுபடுவாளாயின்

அவள் கீழ்க்கண்டவாறு தனித்ததான நடைமுறைக்கு உட்படுத்தப்படுவாள். அவளோடு தகாத வகையில் உறவுகொண்டவன் அவளைப் போலவே தாழ்ந்த சாதியினைச் சேர்ந்தவனாயின் அவன் அவளைத் திருமணம் செய்து கொண்டாக வேண்டும். அவளை மணச் சடங்கிற்காகத் தூய்மைப்படுத்த அவளோடு உறவு கொண்டவன் ஒரு குடிசை அமைத்து அதில் அவளை இருத்துதல் வேண்டும். அதன்பின் அக் குடிசைக்குத் தீயிடப்படும். அதனுள் இருக்கும் அவள் தீயிடப்பட்ட அக் குடிசையிலிருந்து தப்பி இன்னொரு குடிசையில் சென்று அடைக்கலம் புகவேண்டும். அந்தக் குடிசைக்கும் அடுத்துத் தீயிடப்படும். இவ்வாறு அவளை ஏழு குடிசைகளிலிருத்தித் தீயிடும் வரை இச் சடங்கு தொடரும். அதன்பின் அவள் தூய்மை பெற்று மீண்டும் மணம் செய்துகொள்ளும் தகுதி வாய்க்கப் பெற்றவளாகக் கருதப்படுவாள். ''வரிசையாக ஏழு சிறிய குடிசைகள் ஆற்றங்கரை ஒன்றின் மீது அமைக்கப்பட்டு அவை தீயிடப்படும் எனவும் குற்றம் புரிந்தவன் எரியும் அந்தக் குடிசைகள் வழியே நுழைந்து எரியும் கழிகளிடையேயும் சாம்பலிடையேயும் புகுந்து ஓடி வந்து தன் பாவத்திற்குக் கழுவாய் தேடிக் கொள்ளவேண்டும்'' எனவும் திரு வால்ஹவுஸ் கூறுகின்றார். இதே போன்ற சோதனைக்குத் தென் கன்னடத்தைச் சேர்ந்த பாகுடர். ஆளாக்கப்படுகின்றனர் எனத் திரு ஸ்டுவர்ட் விவரித்துள்ளார். ''ஒருவன் சாதி விலக்கம் செய்யப்படுவானாயின் அவன் 'ஏழு ஹள்ளி சுடொதொ' என்ற சடங்கினை மேற்கொண்ட பின்னரே மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவதற்கு உரியவனாவான். இந்தச் சடங்கிற்காக ஏழு சிறிய கொட்டகைகள் அமைத்து அவற்றின் மேல் புல் கற்றைகள் வேயப்படும். சாதி விலக்கம் செய்யப்பட்டவன் அந்தக் கொட்டகைகளுள் ஒவ்வொன்றாக நுழைந்து வெளிப்படும்போது சாதித் தலைவன் அவற்றின் மேல் போடப்பட்டுள்ள புல் கற்றைகளுக்கு நெருப்பிடுவான்.'' (பார்க்க : கோயி.) ''குற்றம் புரிந்தவன் ஏழு பிறவிகளை எடுத்தபின் தன்னுடைய பழைய தகுதியினைப் பெறுவதனை விரைவு படுத்தும் ஒரு மாற்று ஏற்பாடாக இது அமைவதால் அவன் வேறுவேறு பிறவிகள் எடுத்து உழல வேண்டியதில்லை

யாகின்றது. இதனை ஒருவன் தன் குலத்திற்குள்ளாகவே மணம் செய்து கொள்வானாயின் அப்பாவத்தைப் போக்கிக் கொள்ள ஏழு பிறவிகள் எடுத்தாக வேண்டும் என்ற மனுவின் விதியினை ஒட்டி அமைந்த சடங்கு எனக் கூறலாம்'' எனத் திரு ஆர். இ. என்தொவென் கூறுகின்றார்.

கொரகர் சாவுச் சடங்குகள் பற்றித் திரு வால்ஹவுஸ் கூறுவதாவது:- "இறந்த அடிமைச் சாதியார்களின் உடல்கள் எரிக்கப்படுவதே வழக்கமாக இருந்தது. பெரியம்மை வந்து இறந்தவர்கள் மட்டும் புதைக்கப்பட்டு வந்தனர். இவ்வாறு அடிமைகள் எரிக்கப்பட்டதற்கான காரணம் பூமியில் ஆழப் புதைக்கபபடும் அவர்களின் உடலங்களால் பூமி தீட்டுப் படுவதைத் தடுப்பதற்காகவேயாம். தற்போது இறந்தவர்கள் அனைவரையும் புதைத்தலே வழக்கமாக எங்கும் மேறகொண் டுள்ளனர். அவ்வாறு இறந்தவரைப் புதைக்க இன்றும் பண்ணையாரின் அனுமதியினைப் பெறவேண்டும். உடலை அடக்கம் செய்தபின் புதைகுழியின் மீது நான்கு சோற்று உருண்டைகளை வைப்பர். இது இறந்தவரின் ஆவிக்காக உணவு படைத்தல் வேண்டும் என்ற பழைய கோட்பாட்டின் அடிப் படையில் தோன்றிய வழக்கம் ஆகலாம்.'' தென் கன்னட மாவட்டக் கையேட்டில், "பதினாறாம் நாளன்று புதைகுழியின் மேலிருந்து ஒரு பிடி மண்ணினை எடுத்து, அதனை ஒரு குழியி லிட்டு மூடி, அதன்மீது ஒரு கல்லினை நட்டு அதற்குச் சோறும் கள்ளும் படைத்து இறந்துபோனவரின் ஆவியினை மூதாதை யர்களோடு சென்று சேர்ந்து கொள்ளும்படி வேண்டிக் கொள்வர்'' என்று கூறப்பட்டுள்ளது.

"அடிமைச் சாதியார் பலருள்ளும் கொரகர்கள் மட்டுமே முதலையின் இறைச்சியினை உண்கின்றனர். வேறு ஓரிரு சாதி யாரைப் போலவே இவர்களும் நான்கு கால் உள்ள விலங்கு களை அவை உயிரோடிருப்பினும் சரி, இறந்தவையாயினும் சரி, தூக்கிச் செல்ல மனம் ஒப்புவதில்லை. நான்கு கால்கள் கொண்ட சடப் பொருள்களான மேசை, நாற்காலி, கட்டில் முதலியவற்றைத் தூக்கவும் இவர்கள் ஒப்புவதில்லை. இதன் காரணமாக அவற்றைத் தூக்கிச் செல்லும் கட்டாயத்

திற்கு உள்ளானால் அவற்றின் நான்கு கால்களில் ஒரு காலினை உடைத்த பின்பே இவர்கள் தூக்கிச் செல்வர். இவர்கள் கூலிகளாகவும் பணியாற்றுவதால் இந்த மனப் போக்கினால் சில தொல்லைகள் பிறக்கின்றன. மத்திய இந்தியா வினைச் சேர்ந்த பைகர்களும் இதுபோன்ற மனப்பான்மை உடையவர்களாக உள்ளனர். அவர்கள் தங்கள் வீட்டுப் பெண்களை நான்கு கால்கள் கொண்ட கட்டில்களில் படுக் கவோ நாற்காலிகளில் அமரவோ அனுமதிப்பதில்லை'' எனத் திரு வால்ஹவுஸ் கூறுகின்றார். "கொரகர்களைப் போலவே தென் கன்னடத்தைச் சேர்ந்த பாகுடர்களும் நான்கு கால் களோடு கூடிய கட்டில்களைத் தூக்க ஒப்புவதில்லை. அவற் றின் காலகளை அகற்றிய பின்னரே அவர்கள் அவற்றைத் தூக்கிச்செல்வர். நான்கு கால்கள் உள்ள கட்டில்களுக்கும் எருது களுக்கும் இடையே காணப்படும் தோற்ற ஒற்றுமையே இதற் குக் காரணம்'' எனத் தென் கன்னட மாவட்டக் கையேடு கூறுகின்றது.

கொரகர் பேசும் மொழியினைப் பற்றித் திரு உள்ளல் ராகவேந்திர ராவ் கூறுவதாவது:- "கொரகர்கள் தங்கள் கொப்புகளில் பேசத் தனித்ததொரு கிளை மொழியினைப் பெற் றுள்ளனர் என நம்பப்படுகிறது. அவனிடம் அவனுடைய விருந் துகள், தெய்வங்கள், குடும்பம் பற்றிக் கூறும்படி கேட்டுச் செய் திகளைத் திரட்ட முடியும். ஆனால் அவன் பேசும் மொழி பற்றி அவனிடம் கேட்டால் அவன் அஞ்சியவனாகக் குழம்பிப் போய் விழிப்பான். பொதுவாக அமைதியாகவும் அடக்கமாக வும் காணப்படும் அவன் பேசும் மொழியினைப் பற்றிக் கேட்ட வுடன் பொறுமையிழந்தவனாகப் பண்பற்ற முறையில் நடந்து கொள்வான்.'' இந்துக்கள் அனைவரும் கொரகர்கள் அவர் களுக்கு மட்டுமே புரியக்கூடிய ஒரு மொழியினைப் பேசுவதாக நம்புகின்றனர். எனினும் அப்பேச்சு, மரபு வழிப்பட்டதாகவோ கொச்சை வழக்காகவோதான் இருக்க வேண்டும் என எண்ண வேண்டியுள்ளது'' எனத் திரு வால்ஹவுஸ் கூறுகின்றார். 1895-இல் வெளியான தென் கன்னட மாவட்டக் கையேட்டில் கொர கர்களுடைய பேச்சுமொழியின் சொற்பட்டியல் ஒன்று இடம் பெற்றுள்ளது.

**கொரமர் – Korama**

பார்க்க : குறவர். (See : Korava.)

**குறவர் – Korava**

குறவர்கள் பல மொழிகளும் பல கிளைமொழிகளும் வழங்கும் இந்திய நாட்டுத் தீபகற்ப பகுதிகள் இடத்திற்கிடம் பல வேறு பெயர்களை உடையவர்களாகப் பரவியுள்ள நாடோடிப் பழங்குடி இனத்தவர்களாவர். தீபகற்பத்தின் தென்கோடிப் பகுதியிலிருந்து வட ஆர்க்காடு மாவட்டத்தின் வடக்குப் பகுதி வரை உள்ள பகுதிகளில் குறவர் என வழங்கப்படும் இவர்கள் அப்பகுதிகளில் குறெச்ச எனவும் குர்ச்ச எனவும் கூட அழைக்கப்படுகின்றனர். ஒப்படைக்கப்பட்ட மாவட்டங்களில் இவர்கள் யெருகலர் எனவும் யெரகலர் எனவும் அழைக்கப்படுகின்றனர். கல்கத்தாவில் இவர்கள் மராட்டியருக்கான பெயர்களை வைத்துக்கொண்டோ தங்களுடைய பெயரோடு தென்னிந்தியாவின் உயர்சாதிகளுக்குரிய பட்டப்பெயர்களை இணைத்துக் கொண்டோ போலி மருத்துவர்களாகத் தொழில் நடத்தி வருகின்றனர். வேளாளர் எனத் தங்களைக் கூறிக்கொண்டு ஏமாற்றும் சில குறவர்கள் பிள்ளை என்ற பட்டப் பெயரைத் தரித்துக் கொண்டு அகம்படியர் வேளாளர் எனத் தங்களைக் கூறிக்கொள்கின்றனர். மற்றவர்கள் பள்ளி, கவரை, இடையன், ரெட்டி முதலிய பட்டப்பெயர்களைத் தங்களுக்கு உரியனவாகத் தரித்துக் கொள்கின்றனர்.* புகைவண்டிப் பாதைகள் நாடெங்கும் பரவியபின், இவர்களும் அதனைப் பயன்படுத்திக் கொண்டு நாட்டின் பல பகுதிகளிலும் பரவலாயினர். இது இவர்களுக்கு அண்மையில் குற்றம் புரிந்த இடத்தை விட்டு விரைந்து வெளியேற உதவியாக அமைந்தது. அத்தோடு புகைவண்டியில் தூங்கும் பயணிகளிடம் திருடவும் நல்ல வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தது. 1899-இல் அரசு புகைவண்டிகள் அமைப்பின் கண்காணிப்பாளர் தனது அறிக்கையில் கூறியுள்ள

---

* எம். பாப்பா ராவ் நாயுடு-புகைவண்டித் திருடர்கள் பற்றிய வரலாறு. (M. Paupa Rau Naidu-History of Railway Thieves.)

தாவது:- "கேப்மாறிக் குறவர்கள் (இவர்கள் தங்களை ஒரு போதும் இவ்வாறு அழைத்துக் கொள்வதில்லை.) என அழைக்கப்படும் திருடர்களின் பெரிய குழு அமைப்பு, பயணம் செய்யப் புகைவண்டியினைப் பயன்படுத்துகின்றது. இவர்களுள் சிலர் தற்போது கட்டாக்கில் குடியேறியுள்ளனர். அங்கு இவர்கள் மூல நோயினைக் குணபபடுத்தும் மருத்துவர் களாகத் தொழில்புரிகின்றனர். சிலர் மித்னாபூரில் தங்கிய வர்களாகக் கல்கத்தா வரை சென்றபடி உள்ளனர். கொஞ்ச காலத்திற்கு முன்பு சிலர் பூரியில் தங்கியிருந்தனர். அண்மை யில் இவர்களின் குழு ஒன்று திருநெல்வேலிக்குச் சென்று தங்களைச் சேர்வைக்காரர் எனக் கூறிக் கொண்டு சேரமாதேவி அருகே தங்கியுள்ளது. ஒரு நாள் காலையில் திருநெல்வேலியில் ஒரு பாதிரியார் வீட்டில் பணியாற்றும் உணவுக்கூடப் பணி யாளன் தன் பணியில் ஈடுபட்டிருக்கும்போது அவனிடம் ஒருவன் கோழி ஒன்றினை விலைக்குத் தருவதாகக் கூறிக்கொண்டு வந்தான். அந்தக் கோழியின் விலையாக வழக்கமாக அதற்குத் தரப்பட வேண்டிய விலையில் பாதி விலையே கூறப்பட்ட தால் அப்பணியாளன் அதனை விலைக்கு வாங்கி அதனைத் தன் மனைவியிடம் கொண்டுபோய் விலைபேசும் தன் திறமை யினைப் பற்றிப் பெருமையோடு கூறியவனாகக் காட்டினான். அவன் மனைவி அது முந்தின நாள் இரவு காணாமற் போய் விட்ட தங்கள் கோழிதான் என்பதனைச் சுட்டிக் காட்டியவுடன் அவன் தன் முகத்தில் அசடு வழிய விழித்தான். அந்தக் கோழி யினை அவனிடம் விற்றவன் ஒரு குறவன்."

*1903*-இல் பூசாரிகள் எனத் தங்களைக் கூறிக்கொண்டு பயணம் செய்த குறவர் குழு ஒன்றினைக் கைது செய்தனர். அவர்களுள் ஒருவன் வட ஆர்க்காடு மாவட்டத்தில் நிகழ்ந்த கொள்ளை தொடர்பாகக் காவலர்களால் பற்றாணை வழங்கித் தேடப்பட்டு வந்தவன் என்பது கண்டுபிடிக்கப்பட்டது. இந்த வழக்குத் தொடர்பான அறிக்கையில் கூறப்பட்டுள்ளதாவது:- "கேப்மாறிகளோடு ஒத்த பிரிவினராக வைத்து எண்ணப்படு பவர்கள் குறவப் பூசாரிகள். (இவர்கள் தங்கள் கிராமத்தில் தங் களை இவ்வாறு அழைத்துக் கொள்கின்றனர்.) தஞ்சாவூர்

மாவட்டதில் உள்ள ஒரு சிற்றூரினைச்சேர்ந்த இவர்கள் இந்தியா முழுதும் பரவியுள்ளனர். சிறிது காலம் முன்பு வரை அல்லது இன்றுங்கூடக் கட்டாக், பலசொரெ, மித்னாப்பூர், ஆமதாபாத், பாட்னா, பம்பாய், செகந்தராபாத் முதலிய ஊர்களிலும் பிற இடங்களிலும் இவர்களில் சிலர் தங்கி வாழ்ந்து வருகின்றனர். இவர்களுள் ஒருவன் பம்பாயில் மிகஉயர்ந்தநிலையினை அடைந் துள்ளான். இவர்கள் வெளிக்கு மூலம், பவுத்திரம் ஆகிய நோய் களைக் குணமாக்கும் மருத்துவர்களாகச் செயற்படுவர். இவர் கள் ஓரிடத்தில் குடியமர்ந்தபின் உடனேயோ, சற்றுக் காலங் கடந்தோ கேப்மாறிகள் இவர்கள் வாழும் இடத்திற்கு அருகே வந்துசேரக் காணலாம். அவ்வாறு வந்து சேர்வது நிச்சயம் எனக் கூற இயலாதெனினும் அதற்கான வாய்ப்புகள் மிகுதி. அதன்பின் இவர்கள் கேப்மாறிகள் திருடிவரும் திருட்டு உடைமை களைப் பெற்றுக் கொள்ளும் வாய்ப்பான தொழிலில் ஈடுபடத் தொடங்குவர்.'' கேப்மாறி என்பது ஒருவனை வைவதற்கான இழிந்த சொல்லாகும். அது மிகக் கீழான திருடன் எனப் பொருள்படும். தென் மாவட்டங்களில் காசுக்காரச் செட்டிகளும் சாணார்களும் குறவர்களின் நம்பிக்கைக்கு உரியவர்களாக அவர்களிடமிருந்து திருட்டுப் பொருள்களைப் பெறுகின்றனர் எனக் கூறப்படுகின்றது.

குறவர் அல்லது யெருகலர் எனப்படுவோர் சென்னை மாநிலம் முழுதும் காணப்படும் நாடோடிகளான பழங்குடிகள் எனவும் இவர்கள் இந்தியாவின் வேறு பல பகுதிகளிலும் காணப்படுகின்றனர் எனவும் 1891 சென்னை மாநிலக் கணக் கெடுப்பு அறிக்கையில் திரு எச். எ. ஸ்டுவர்ட் குறிப்பிட் டுள்ளார். தெலுங்கு நாட்டில் இவர்கள் யெருகலவாண்டுலு என்றோ குறச்சவாண்டுலு என்றோ அழைக்கப்படுகின்றனர். இவர்கள் தங்களைக் குர்று என்றே கூறிக் கொள்கின்றனர். குறவர்களும் யெருகலரும் ஒருவரே என்பதில் ஐயுறவு கொள்ள சிறிதளவும் இடமேதுமில்லை. யெருகலஎன்ற சொல்லின் ஆக்கம் பற்றி வில்சனும் பிற அறிஞர்களும் பலவேறு விளக்கங்கள் தந்துள்ளனர். யெரு என்பது சிவப்பு எனப் பொருள்படும். யெர என்பதனோடு தொடர்பு படுத்தப்படுவது இதற்கு ஒரு

சான்றாகும். தெலுங்கில் யெருகலவாண்டுலு என்றால் குறி கூறுபவர்கள் என்று பொருள்படும் எனக் கூறி டாக்டர் ஒப் பெர்ட் யெருகல என்ற சொல்லின் தோற்றம் இதுவேயாகும் என்பார். "குறிகூறும் குறுவாண்டலு அல்லது குளுவாண்டு லுவின் பெயரும் தொழிலும் தெலுங்கு பேசுபவர்களால் இந்தப் பழங்குடிகளை யெருக்கல வாண்டுலு என அழைக்கத் தூண்டினவாகலாம். முனைவர் ஒப்பெர்ட் குறு என்பதனை மலை எனப் பொருள்படும் கு என்ற வேர்ச்சொல்லுடன் பொருத்திக் காட்டி ஒன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் நூல்* ஒன்றில் குறு அல்ல குற (குறமகள்) என்பது மலைவாழ் பழங் குடிகளுக்கு உரிய பெயராகக் கூறப்பட்டிருப்பதையும் எடுத்துக் காட்டுவார்."† இந்தச் சாதியின் பெயர் குறி கூறுவதோடு தொடர்பு கொண்டது என்பதனை வலியுறுத்தும் சான்றுகளுள் ஒன்று இச்சாதியினைச் சேர்நத பெண்கள் தெருவில் "யெருகு அம்மா! யெருகு!!" (அதாவது குறி பார்க்கலையோ அம்மா! குறி பார்க்கலையோ!!) எனக் கூவித் திரிவதாகும். "குறவர்கள் தமிழ் நாடு முழுதும் நாடோடிகளாகத் திரியக் காணப்படினும் கர்நூல், சேலம், கோயமுத்தூர், தென் ஆர்க்காடு மாவட்டங் களிலேயே இவர்கள் சிறப்பாகக் காணப்படுகின்றனர். குறவர் கள் யெருகலரினும் வேறானவர்கள் அல்லர் என்றே கருதப்படு கின்றது. இவ்விரு சாதியாரும் நாடோடிகளாக அலைந்து திரிவ தோடு, கூடை முடைதல், குறி கூறுதல் ஆகிய தொழில்களையும மேற்கொண்டுள்ளனர். இவ்விரு சாதியினரும் ஒரே மொழியி லிருந்து பிறந்தது எனக் கூறத் தக்க சிதைந்ததான தமிழினையே பேசுகின்றனர். யெருகலர் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் குறு என்றும் குற என்றும் அழைத்துக்கொள்வது இங்குக் குறிப் பிட்டுக் கூறப்பட வேண்டியதாகும். ஆனால் வேறு வேறு மாவட்டங்களில் வாழும் இவர்களின் பெயர்கள் ஒன்றுக்குப் பதிலாக மற்றொன்றினைப் பயன்படுத்தக்கூடியனவாக இல்லை. இந்த இரு பிரிவினரிடையேயும் உண்மையில் எத்தகைய வேறு பாடும் இல்லை.இவர்கள் தங்களுக்குள் மண உறவு கொள்வதோ

---

* திருமுருகாற்றுப்படை.

† சென்னை இலக்கிய அறிவியல் இதழ், *1888-89*. (Madras Journ. Lit. and Science, 1888-89.)

ஒன்றாக இருந்து உண்பதோ வழக்கில் இல்லை. திருமணத்தின் போது குறவர்கள் நூலினை மஞ்சள் நீரில் தோய்த்து அணிவிக்கின்றனர் எனவும், யெருகலர் கறுப்புப் பாசிமணி மாலையினைக் கழுத்தில் அணிவிக்கின்றனர் எனவும் கூறப்படுகிறது. யெருகலர்கள் வழக்கு வரலாறு ஒன்று முன்னொரு காலத்தில் தாலியும் குழலும் வாங்கி வரச் சென்றவர்கள் திரும்ப வராததால் அதற்குப் பதிலாகக் கறுப்புப் பாசிமணி மாலையினைப் பயன்படுத்த வேண்டியதாயிற்று என்றும் அன்று முதல் தாலிக்குப் பதிலாகக் கறுப்புப் பாசிமணி மாலையினையும் நாகசுரத்திற்குப் பதிலாகச் சேகண்டி மணியினையும் பயன்படுத்தி வருவதாகவும் கூறுகின்றது. குறவர்கள் சிவபெருமான் மகனான சுப்பிரமணியரைவழிபடுகின்றனர்.யெருகலர்களோவிட்டுணுவை வெங்கடேசுவரன் என வழிபடுவதோடு அவர் மனைவியான லட்சுமியையும் வழிபடுகின்றனர். பழமையான வடமொழி நாடகம் ஒன்றில்பிராமணர் சாதியைச் சேர்ந்த ஒருவன் சுப்பிரமணியரைத் திருடர்களின் குலதெய்வம் எனக் கேலி செய்வதாக ஒரு நிகழ்ச்சி அமைந்துள்ளது. பெண்களின் ஒழுக்கத்தைப் பற்றிக் குறவர்கள் அதிகம் கவலைப்படுவதில்லை. அவர்கள் தங்கள் மனைவியரைத் தயங்காது அடகு வைக்கவும் விற்கவுட் செய்வர். தங்கள் சாதிப் பெண்களின் ஒழுக்கம் பற்றி யெருகலர் மிகுந்த அக்கறை காட்டுவதுடன் அவர்கள் இருட்டிய பின் தக்க துணையின்றி இல்லம் திரும்புவார்களேயானால் அதனை மிகவும் பெரிதுபடுத்துவர். இந்த ஆண்டுக் கணக்கெடுப்பு அறிக்கையின் புள்ளி விவரங்களில் யெருகலரும் குறவர்களும் வேறு வேறானவர்களாகவே தரப்பட்டுள்ளனர். பல மாவட்டங்களிலும் திரட்டப்பட்ட விவரங்கள் இவ்விருசாதிகள் பற்றியும் ஒன்றுக்கொன்று முரணான தகவல்களைத் தருவதால் இது மேலும் விரிவாக ஆராயப்பட வேண்டியதொன்று என்பது தெளிவு" என 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் திரு பிரான்சிஸ் கூறியுள்ளார். சென்னை மாநிலத்திலோ வேறு பகுதிகளிலோ குறவர்களும், யெருகலர்களும் எங்கும் ஒருங்கே வாழ்வதாகத் தெரியவில்லை. மைசூரின் தென்கிழக்கு எல்லையைச் சார்ந்து அமைந்துள்ள கோயமுத்தூர் மாவட்டத்தின் வடமேற்கு மூலையில் அமைந்த சிறு பகுதி இதற்கு

விதிவிலக்காக உள்ளது. அங்குக் கொரச்ச என்ற பெயருடையோர் குறவர்களும் யெருகலர்களும் வாழும் பகுதிக்கு இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்து வருகின்றனர். வட ஆர்க்காடு மாவட்டத்திற்கு வட பகுதியினையும் கடப்பையின் தென் பகுதியினையும் உள்ளடக்கிய மாநிலத்தின் பரந்த நிலப்பரப்பில் வாழும் குறவர்களும் கொரச்சர் என்றே வழங்கப்படுகின்றனர். கணக்கெடுப்புக் கண்காணிப்பாளர் மற்ற துறை சார்ந்த அலுவலர்கள் மேற்கொள்ளும் வழக்கப்படி குறவர், யெருகலர், கொரச்சர் என்ற மூன்று பெயர்களும் ஒன்றுக்குப் பதிலாக ஒன்று வழங்குவதற்குரியன என்று ஒப்புக் கொண்டுள்ளார். கடப்பை மாவட்டத்தில் வட பகுதியிலேயே யெருகலரும், கொரச்சரும் ஒரே பகுதியில் அருகருகே வாழக் காண்கிறோம். கொரச்சர் குறவரின் வேறானவர் அல்லர் எனப் பல பகுதிகளிலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. குறவர் யெருகலர்களிடையேயான உறவுத் தொடர்பான நம் ஐயதித்னை நீக்கிக்கொள்ள நாம் முதலில் கொரச்சர்களும் யெருகலர்களும் ஒருவரே என்ற உண்மையினை நிலைநாட்ட வேண்டும். கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த யெருகலர் பற்றி மறைத்திரு ஜெ. கெயின் குறிப்பிடும்போது கூறுவதாவது:- "கோதாவரி மாவட்டத்தைச் சேர்ந்த யெருகலர் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் அழைத்துக் கொள்ளும்போது குளுவாரு என அழைத்துக் கொள்கின்றனர். ஆனால் தெலுங்கர்கள் அவர்களை யெரகவாரு அல்லது யெரகலவாரு என்றே அழைக்கின்றனர். இந்தச் சொல் அறிவு அல்லது அறிதல் எனப் பொருள்படும் எருக என்ற சொல்லிலிருந்து வந்ததாகும். குறிபார்த்து, வருவது உரைக்கும் ஆற்றல் உடையவர்களாக இவர்கள் இருப்பதால் இவ்வாறு அழைக்கப்பட்டனர்."*

பல்போஃர் அவர்கள்† குறவர்கள் அல்லது அவர்களுள் ஒரு பிரிவினரான குஞ்சிக் குறவர்கள் யெர்கல குறவர் என அழைக்கப்படுகின்றனர் எனக் கூறுகின்றார். இவர்கள்

---

* இந்திய தொல்லியல், IX, 1880. (Indian Antiquity, IX, 1880.)

† இந்தியா பற்றிய கலைக்களஞ்சியம். (Cyclopaedia of India.)

தாங்கள் பேசும் மொழியினையும் யெர்கல் என்றே அழைக்கின்றனர். யெருகல்வாடு பற்றி எழுதும்போது பல்போஃரே அவர்களைக் குர்சிவாண்டோடு ஒத்தவர்கள் எனக் கூறுவதோடு இவர்கள் தங்களை யெர்கல் எனச் சிறப்பித்துக் கொள்வதாகவும், தங்கள் மொழியினையும் யெர்கல் என்றே வழங்குவதாகவும் கூறுகின்றார். மேற்கண்ட கருத்துரையில் யெர்கல் என்பது யெருகலரையும், குர்சி என்பது கொரச்சரையும் குறிப்பனவாக ஐயத்திற்கு இடமின்றிக் கொள்ளலாம். இதனைக் கொண்டும் வில்சன், காம்பெல், பிரௌன், ஸோர்ட் போன்ற அறிஞர்கள் கூற்றுக்களின் சான்றுகளைக் கொண்டும் பார்க்கும்போது கணக்கெடுப்புக் கண்காணிப்பாளர் யெருகலர்களையும் குறவர்களையும் பற்றிக் கொண்டதான ஐயம் இந்தியா பற்றிய கலைக் களஞ்சியம் வெளியிடப்பட்ட காலத்தில் இல்லாததாக இருந்தது என்பதும், பின்னர் வந்த ஆய்வாளர்களின் அறிக்கைகளே அத்தகைய ஐயத்திற்கு இடம் தந்துள்ளன என்பதும் தெளிவாகும். பல்வேறு வகையினதாக இவர்களைப் பற்றித் தரப்பட்டுள்ள விளக்கங்கள் மேலும் தெளிவு காண்பதற்கு உரியனவே. இந்த வேறுபாடுகளுக்குக் காரணம் பரந்துபட்ட நிலப்பகுதியில் ஆங்காங்கே வழக்கில் உள்ளதான வட்டார வழக்குகள் ஆகலாம். யெருகலரும் குறவர்களும் தங்களுக்குள் மண உறவு கொள்வதோ ஒன்றாக இருந்து உண்பதோ இல்லை எனக் கூறப்படுகின்றது. தென் மாவட்டம் ஒன்றில் ஒரு கிராமத்தில் நிலையாகத் தங்கி வாழும் ஒரு குறவனிடம் யெருகலர் பிரிவினைச் சேர்ந்த பெண்ணை நீ மணந்து கொள்வாயா எனக் கேட்டால் அவன் மாட்டேன் எனப் பதிலிறுப்பான் என்பது உறுதி. மாவட்டங்களைச் சேர்ந்த காவல்துறை ஆய்வாளர்கள் பலருக்கு அனுப்பப்பட்ட ஒரு சுற்றறிக்கைக் கடிதம் கணக்கெடுப்புக் கண்காணிப்பாளர் கூறியதான முரண்பாடுடையதான அதே விளைவுகளையே ஏற்படுத்தியுள்ளது. எனினும் காவல்துறை ஆய்வாளர்களுள் ஒருவர் தனது குறிப்புகளிலிருந்து 1895 –இல் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த தெற்கத்திய குறவர் குழுவினருக்கும், கடப்பையைச் சேர்ந்த யெருகலருக்கும் இடையே மண உறவு நிகழ்ந்துள்ள விவரத்தை எடுத்துத் தந்துள்ளார். மேலும் அனந்தப்பூர் மாவட்டத்தில் வாழும் யெருகலர் சாதியைச்

சேர்ந்த குழுவினில் உள்ள ஒருவன் மகன் மைசூர் மாநிலத்தைச் சேர்ந்த கொரச்சா பிரிவுப் பெண்ணை மணந்து கொண்டுள்ளான் என்றும் தெரிய வருகின்றது. இந்த இரு பிரிவினரும் ஒன்றாக உண்பர் என்பதே பலரும் தெரிவிக்கும் கருத்தாகும். யெருகலர் கறுப்புப் பாசிமணி மாலையினைத் தாலியாக மணமகள் கழுத்தில் அணிவிக்கின்றனர் என்பதில் ஐயமேதுமில்லை. குறவர்களும் இதனைப் பயன்படுத்தத்தான் செய்கின்றனர். மஞ்சள் தோய்த்த நூலினைக் குறவர்கள் தாலியாகப் பயன்படுத்துகின்றனர் என்ற தகவல் சேலம் மாவட்டத்திலுள்ள ஓசூரிலிருந்து மட்டுமே கிடைக்கப் பெற்றுள்ளது. இங்கும் கூட மஞ்சள் நூல் தோய்த்த அந்தக் கயிற்றில் ஒரு வட்டப் பொட்டினைக் கோக்கும் வழக்கம் உள்ளதாகத் தெரிகின்றது. அது பாசிமணியாகக் கூட இருக்கலாம். வெறும் மஞ்சள் தோய்த்த நூலினைத் தாலியாக அணிவிப்பது விதிவிலக்காக நிகழலாமே அன்றி விதியாக இருக்க நியாயமில்லை. யெருகலரிடையே சைவர்களும் வைணவர்களும் உள்ளனர். ஒரு குழுவினர் வழிபடும் தெய்வம் அந்தக் குழுவினர் சேர்ந்துள்ள சாதியார் அனைவருக்கும் பொதுவானது எனக் கொள்ள இயலாது. யெருகலர்கள் தெற்கத்தியரான குறவர்களைவிடத் தங்கள் மனைவியரை மதிப்புக்குரியவர்களாக நடத்துகின்றனர் எனக் கூறப்பட்டாலும் இரு பிரிவினரும் ஒழுக்கநெறிகளில் நெகிழ்ச்சியுடையவர்களாக இருப்பதை வைத்துப் பார்க்கும்போது மதிப்பீட்டின் அளவுப்படிகளில் வேண்டுமானால் இந்த வேறுபாடு இருக்கலாம் என்றே கூற வேண்டியுள்ளது. தீபகற்பத்தின் நடுவினதான வறண்ட பீடபூமியில் வாழ்பவர்கள் யெருகலர்கள். அப்பகுதி குறவர்கள் வாழும் பகுதியினைவிட அடிக்கடி வறட்சிக்கு உள்ளாகின்றது. இதனால் யெருகலர் தங்கள் மனைவியரின் நலம் பேணுவதில் அதிகக் கருத்துச் செலுத்த வேண்டும் என்பதனை அனுபவத்தில் கற்று உணர்ந்திருக்க வேண்டும். இவர்கள் தங்கள் மனைவியினை மற்றொருவனோடு செல்ல அனுமதித்தால் வறட்சியால் அவன் பயிரும் காய்ந்துபோய்க் கால்நடைகளும் இறந்துவிட்டால் அவன் வேறொரு மனைவியினைப் பெற இயலாதவனாகத் தொல்லைக்கு உள்ளாவான். பஞ்ச காலத்தில் மற்றப் பொருள்களின் விலையேற்றத்தின

விகிதத்திற்கு ஏற்பவே மனைவியரின் விலையும் கூடி விடுகின்றது என்பதனை இங்கே நினைவில் கொள்ள வேண்டும்.

குறவர்கள் தரும் விவரங்களை வைத்துப் பார்க்கும் போது அவர்கள் புராணக் காலத்திலே தோன்றியவர்களாகத் தெரிகின்றது. இதுபற்றி இவர்கள் தரும் விவரங்கள் இடத்திற்கு இடம் சிறிதே வேறுபட்டனவாக உள்ளன. எனினும் அந்த விவரங்கள் அனைத்தும் பாகவதத்தில் கூறப்பட்டுள்ள கதையின் போக்கினைத் தழுவி அமைந்தனவாக உள்ளன. இந்த விவரங்கள் பற்றிக் கேட்டறிவதற்கு நம்பிக்கைக்கு உரியவர்களாக உள்ளவர்கள் புரோகிதர்களான பூசாரிகளே. சாஸ்திரங்களிலிருந்தும் இராமாயணத்திலிருந்தும் பின்வரும் கதையினைச் சலித்து எடுத்துத் தந்தவர் அவர்களுள் ஒருவரே. பிரமனிலிருந்து நேரே தோன்றியவரான அக்னேஷ்வதுவின் மகனான வேணுடு இந்த உலகத்தினை ஆண்டு வந்தபோது அவன் பட்டத்திற்குரிய வாரிசாக ஒரு மகனைப் பெற்றானில்லை. அவன் இறந்தபோது அதனை இந்த உலகினுக்கு உற்ற, தீர்க்க இயலாத, பெருங்கேடாக அனைவரும் கருதினர். அவனுடைய உடல் பாதுகாத்து வைக்கப்பட்டது. ஏழு கோள்களும் ஒன்றாகக் கூடி அடுத்துத் தாங்கள் செய்வதற்கு உரியது என்ன என்பது பற்றிச் சிந்தித்தன. இறுதியில் அவர்கள் இறந்து போன வேணுடுவின் வலத்தொடையிலிருந்து ஒருவனைப் படைப்பது என முடிவு செய்து அவ்வாறே படைத்து அவனுக்கு நிசுடு எனப் பெயரும் இட்டனர். எனினும் அவர்கள் படைப்பு வெற்றிகரமானதாக அமையவில்லை. நிசுடு உடற்குறை உடையவனாக இருந்ததோடு அருவருக்கத்தக்க அழகற்ற முகம் உடையவனாகவும் இருந்தான். கோள்களின் மற்றொரு கூட்டத்தில் அவன் அரியணையில் அமரும் தகுதியற்றவன் என முடிவு செய்யப்பட்டது. எனவே அவர்கள் மீண்டும் செயலில் இறங்கி வேணுடுவின் வலத்தோள்பட்டையிலிருந்து இரண்டாம் முறையாக வெற்றிகரமாக ஒருவனைப் படைத்தனர். தங்கள் இரண்டாம் படைப்பினை அவர்கள் ப்ரோது சக்ரவர்த்தி என்று அழைத்தனர். அவன் அனைவருக்கும் திருப்தி தரக் கூடியவனாக இருந்தமையால் அரியணையில் அமர்த்தப் பட்டான். இதனால் மனநிறைவு அற்றவனான முதலில் படைக்

கப்பட்ட நிசுடு தனித்த ஓரிடத்தினை அடைந்து தெய்வங்களோடு தொடர்புகொண்டு தான் ஆட்சி செய்யத் தகுதியற்றவன் எனின் தன்னை அவர்கள் படைத்தது ஏன் என்று கேட்டான். தெய்வங் கள் அவனிடம் சக்கரவர்த்தி ஏற்கனவே அரியணையில் அமர்த் தப்பட்டுவிட்டதால் இனி அதுபற்றி ஏதும் செய்வதற்கில்லை எனவும் அவன் காடுகளின் ஆட்சியினை மேற்கொள்ளலாம் எனவும் அறிவுறுத்தின. காடுகளின் அரசன் என்ற நிலையில் நிசுடு போயர், செஞ்சுகள், ஏனாதியர், குறவர் ஆகிய நான்கு சாதியினரையும் பெற்றெடுத்தான். போயர்களே அவனுக்கு முறையான உறவின் வழிப்பிறந்த பிள்ளைகள். மற்றவர்கள் தகாத உறவின் வழிப் பிறந்தவர்கள். நிசுடு தன்னைப் படைத்த தெய்வங்களைப் பக்தியில் நிலைத்த மௌனத்தோடு தவத்தி லிருந்து அறிந்து கொண்டதால் அவனுடைய வழித் தோன்றல் களில் ஒரு பிரிவினர் அறிகின்றவர் என்ற பொருளில் யெருகலர் என வழங்கப்பட்டனர். குறவர் என்ற பெயர்க் காரணத்தை விளக்கும் மற்றொரு கதையும் உள்ளது. இளவரசர்களான தரும னும் துரியோதனனும் தங்களுக்குள் மனவேற்றுமை கொண்ட போது மோதலைத் தவிர்க்க வேண்டித் தருமன் தானாகவே நாட்டைவிட்டு வெளியேறினான். அவனைக் காதலித்த பெண் ணொருத்தி அவ்வாறு சென்றுவிட்ட அவனைத் தேடிச் சென் றாள். ஆனால் மற்றவர்கள் தன்னை அடையாளம் கண்டு கொள்வர் என அஞ்சிய அவள் குறி சொல்பவள் போல மாறு வேடம் தாங்கிச் சென்றாள். இந்த உருவில் தருமனைக் கண்டு பிடித்த அவள் அவனோடு சேர்ந்து வாழ்ந்த காலத்தில் பிறந்த வர்களே குறவர் எனப்படும் குறி கூறுகின்றவர்கள்.

கொரச்ச அல்லது கொர்ச என்ற பட்டப்பெயர் குறவர் என்ற பெயரினும் காலத்தால் பிற்பட்டது என்று தெரிகின்றது. அது கரவு எனப் பொருள்படும் கொரி என்ற இந்துஸ்தானிச் சொல்லின் அடியாகப் பிறந்த கொரிநிக்க (திருட்டு முழி) என்ற சொல்லின் திரிந்த வடிவமாகும். இப் பெயருக்கு உரியவர்களாக அழைக்கப்படுபவர்கள் அதன் பொருளை முழுதும் உணர்ந்த வர்களாகவே உள்ளனர். எந்தத் திசையில் இந்தக் குடும்பத் தைச் சேர்ந்தவர்கள் சென்றாலும் அவர்கள் விலங்குகளையும் பறவைகளையும் தந்திரமாக அகப்படுத்துவதிலும் மற்றவர்

களின் உடைமையைக் கையகப்படுத்துவதிலும் கைதேர்ந்தவர் களாகவே இருந்து வந்துள்ளனர். இன்றுவரை சச்சரவு நிகழும் போது எதிராளியினைப் பழித்துக் கூற இவர்கள் சாதிப்பெயர் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. வாய்ச்சண்டையில் ஈடுபடும் ஒருவன் எதிராளியினைத் திருட்டு யெருகலன் என்று பழிப்பான் அல்லது நீ கொரச்சர் குழுவைச் சேர்ந்தவனா எனக் கேட்பான். தமிழ்நாட்டில் ஏன் 'குறக்கெஞ்சு' கெஞ்சுகின்றாய் என்ற வழக் குள்ளது. இவர்களின் ஏமாற்றினைக் குறிக்கும் மற்றொரு தமிழ் வழக்கு குறப்பாசங்கு என்பதாகும். 'குறவன் நியாயம் குடும் பத்தையே அழிக்கும்' என்ற தமிழ்ப் பழமொழி ஒரு முடிவுக்கு வராதவர்களாகச் சச்சரவில் தொடர்ந்து ஈடுபடும் இவர்கள் இயல்பை விளக்க எழுந்ததாகும். இதன் காரணமாகச் சாதித் தலைவர்கள் வாரக்கணக்கில் நியாயம்கேட்க வேண்டிய கட்டா யத்திற்கு உள்ளாகின்றனர்.

குறவர்களும், யெருகலரும் தங்களுக்குள் மூல வடிவினை அறியமுடியாதபடி சிதைந்த பலமொழிக் கலப்பாலான ஒரு கலப்பு மொழியினைப் பேசுகின்றனர். இம் மொழிச் சொற்கள் பெரும்பாலான தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளி லிருந்து எடுக்கப்பட்டவை. மறைத்திரு ஜெ. கெயின் யெருகலர் மொழியின் சிறிய சொற்பட்டியல் ஒன்றினைப் பதிப்பித்துள் ளார்.* தங்களுடைய இந்த மொழியினை யெருகல் ஓத்ர என் கின்றனர். இச் சொல் பொருளற்ற வெற்றொலி என்றோ திருடர்களின் குழூஉக் குறி வழக்கு என்றோ புரிந்து கொள்ள முடியாததொன்று என்றோ பொருள் கொள்ளத்தக்கதாகலாம். ஒரிய அல்லது ஓத்ர என்பது கஞ்சம், ஒரிசா மாவட்டங்களுக்கு உரிய மொழியாகும். ஒரிய என்ற சொல் வடக்கு எனப் பொருள் படும். யெருகலர் தங்கள் மொழியினை ஓத்ர என வழங்குவது இவர்கள் தாங்கள் வடக்கே இருந்து வந்த பழங்குடிகள் எனக் கூறிக் கொள்வதை உறுதிபடுத்துவதாயுள்ளது. நாடோடிக ளாகத் திரிபவர்கள் எப்போதும் பலமொழிகளின் பேச்சு வழக் கினை அறிந்தவர்களாக இருப்பர். தாங்கள் சொல்வதைப் பயணம் செய்யும் பகுதியில் வாழும் மக்களுக்குப் புரிய வைக்கும்

---

* முந்து நூல். (*Loc. cit.*)

திறமை பெற்றவர்கள் இவர்கள். கிராமங்களில் தங்கி வாழ்பவர்கள் அந்த வட்டாரத்தில் வழங்கும் மொழியினையே பெரிதும் பேசுகின்றனர். தங்களுக்குள்ளாக இவர்கள் பேசிக் கொள்ளும்போது பிராமணனை இவர்கள் தண்ணிக்கொ குறவன் (குளிக்கின்ற குறவன்) எனக் கூறுவர். இவர்கள் பிராமணர்களைத் தங்களைக் காட்டிலும் தந்திரம் மிக்கவர்கள் எனக் கருதுகின்றனர். பிராமணர்கள் தீட்டு நீங்கக் குளிப்பதில் ஆர்வம் உடையவர்களாதலால் அவர்களுக்கு இந்தக் கேலிப் பெயர் இவர்களால் சூட்டப்பட்டுள்ளது.

காவல்துறை உதவி ஆய்வாளர் தலைவராக இருந்தவரான திரு எப். பாவ்செட் குறவர்களின் கொச்சைமொழி சேரிமொழி பற்றி விளக்கமாக விவரித்துள்ளார்.* அந்தக் குறிப்பிலிருந்து எடுக்கப்பட்ட சில சொல் வழக்குகள் வருமாறு:-

| | | |
|---|---|---|
| காவலர் | — எர்த்தலகயடு | — சிவப்புத்தலைக்காரன் |
| தலைமைக்காவலர் | — கைதெராரிலு | — கழுதையில் வருபவன் |
| லஞ்சம் பெறுதல் | — களித்தின்னறது | — ராகி உணவு உண்ணுதல் |
| கோழி | — ரெண்டு கால் நாயுடு | — இரண்டு காலுள்ள நாயுடு |
| முகமதியர்கள் | — அறுத்துப் போட்டவங்க | — சுன்னத்துச் செய்து கொண்டவர்கள் |
| பறையர் | — ஊதராளு கீஞ்சாளு | — குழல் ஊதுபவன் |
| கசாப்புக் கடைக் காரன் கத்தி | — இலைமேயறதைப் போடறது | — இலைகளைத்தின்னுறதை வெட்டறது |
| ரூபாய்கள் | — பாலகண்ண ஒல்லகெல்லுக | — பால் கண்கள் வெள்ளைச்சோழிகள் |
| கள் | — உக்கு பெருமாளு ஒலைத் தண்ணி | — வெள்ளைத் தண்ணி நல்ல தண்ணி |

* குறவர்கள் பற்றிய குறிப்பு, 1908. (Note on Koravas, 1908.)

குறவர்கள் சமூகம் குடியாட்சி அமைப்புடையதாக ஒரு தலைவன் கட்டுப்பாட்டின் கீழ் இயங்குவது. குறவர்களின் எந்தப் பிரிவில் எந்தக் குலத்தில் ஒருவன் பிறந்தாலும் அவன் தன் மூத்தோருக்கும் தன் குழுவினைச் சேர்ந்த பெரியவர்களுக்கும் கட்டுப்பட்டு நடக்கக் கடமைப்பட்டவன் ஆவான். குழுவின் தலைவன் பெரிய மனுஷன் எனப்படுவான். குழுவினரிடையே ஒருவனுக்கு உள்ள செல்வாக்கு, அவன் வயது, அறிவுநுட்பம் ஆகியவற்றின் அடிப்படையில் பெரிய மனுஷன் தேர்ந்தெடுக்கப்படுகின்றான். இப்பொறுப்பினில் இருப்பவனுக்கு அதற்கான ஊதியம் ஏதும் வழங்கப்படுவதில்லை. எல்லா வழக்கு விவகாரங்களையும் தலைமை தாங்கி நடத்தும் உரிமை பெற்றவனான இவனுக்குச் சமூகத்தினரின் நல நிகழ்ச்சிகளின்போது சிறப்பிடம் தரப்படுகின்றது.

இச்சாதியின் சமூக நடைமுறை பற்றித் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்:- ‘‘குலம் என்று அழைக்கப்படும் குறவர்களின் சாதிக் கூட்டம் உடைமை உரிமை வழக்குகளில் முடிவு கூறுகின்றது. குற்றம் இழைத்தவர்களுக்குத் தண்டம் விதிக்கிறது, சாதிவிலக்கு செய்யவும் அவ்வாறு விலக்கப்பட்டவர்களை மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளவும் செய்கின்றது. வழக்கு கொண்டுவருபவர்களுள் ஒரு கட்சியினைச் சேர்ந்தவர்கள் செலவில் சாதியைச்சேர்ந்த கூட்ட உறுப்பினர்கள் கள் குடிக்கும் உரிமை பெற்றவர்கள். குற்றம் இழைக்கப்பட்டவனே சாதிக் குலக் கூட்டத்தைக் கூட்ட வேண்டும் எனக் கேட்டுக் கொள்வான். வழக்கின் இரு கட்சிக்காரர்களும் தங்கள் கரங்களை இணைத்தபடி குலத்தவர்களை நோக்கிக் கரம் நீட்டி தங்கள் வழக்கைத் தீர்த்து வைக்கும்படி வேண்டுவர். இதற்காக அவர்கள் ஆளுக்கு ஒரு ரூபாய் செலுத்த வேண்டும். குலத்தவர்கள் வழக்கை அப்போதே கேட்டுத் தீர்த்து வைக்கலாம். அல்லது அதனை மற்றொரு நாளைக்குத் தள்ளி வைக்கலாம். அடுத்த கூட்டத்தின் போதும் அவர்கள் இரண்டாம் முறையாகக் கைகளை இணைத்தபடி குலத்தவரிடம் முறையிடுவதோடு மறுபடியும் கள்ளுக்காக ஆளுக்கு ஒரு ரூபாய் செலுத்த வேண்டும். குலம் கூடும்போது அதில் வருநு கலந்து

கொள்ளத் தவறும் கட்சிக்காரனுக்கு எதிராகத் தீர்ப்பு வழங்கப் படும். வழக்கு மூன்றாவது கூட்டத்திற்குத் தள்ளி வைக்கப்படு மானால் அவர்கள் மூன்றாம் முறையாகக் கைகளை இணைத் துக்கொண்டு முறை வேண்டுவதோடு குலத்தவர்களை உற்சாகப் படுத்தக் கள்ளுக்காக இம்முறை ஆளுக்கு மூன்றரை ரூபாய் செலுத்த வேண்டும். மூன்று முறைக்கு மேல் வழக்குத் தள்ளி வைக்கப்படும் வழக்கம் இல்லையாதலால் இம்முறை வழக்காடு பவர்களைக் கடுமையான சோதனைக்கு உட்படுத்திச் சபையினர் ஒரு முடிவுக்கு வந்தே தீர்வர். சம அளவு எடையுள்ள அரிசி· யினை, இரண்டு சம அளவு எடையுள்ள பாத்திரங்களில் சமமான அளவு உள்ள தண்ணீரில் இட்டு வைப்பர். இரண்டு கட்சிகளைச் சேர்ந்தவர்களுக்கும் சம அளவில் விறகு தரப்படும். நடுவர்கள் இரண்டு பாத்திரங்களின் எடை, அதில் உள்ள அரிசியின் அளவு ஆகியனவற்றைப் பார்த்துத் திருப்தியடைந்த பின் அவற்றை அடுப்பில் வைத்து எரிக்கப் பணிப்பர். யாருடைய பானையில் உள்ள அரிசி முதலில் கொதிக்கின்றதோ அவரே வழக்கில் வென்றவராக அறிவிக்கப்படுவார். தோற்ற வன் வென்றவருக்கு வழக்குத் தொடர்பான செலவுகளை ஈடு செய்யக் கடமைப்பட்டவன். சிலபோது இரண்டு பானைகளில் உள்ள அரிசியும் ஒரே சமயத்தில் கொதிக்கத் தொடங்கும். அவ்வாறு நிகழுமாயின் கொதிக்கும் எண்ணெயில் போடப் பட்ட காசினை எடுக்கும் சோதனை நடத்தித் தீர்ப்பு வழங்கப் படும். பணம் தொடர்பான வழக்குகளைத் தீர்க்க இவர்கள் வேறொரு முறையினையும் கடைப்பிடிக்கின்றனர். தனக்குச் சேர வேண்டும் என ஒருவன் கூறும் தொகையினை ஒரு கட்சி யினைச் சேர்ந்தவன் கொண்டுவந்து ஒரு சிலை அருகே வைப் பான். தொகை சேர வேண்டும் எனக் கேட்பவனை அதனை எடுத்துக் கொள்ளும்படி கூறுவர். அதன்பின் அவனுக்கோ அவன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களுக்கோ தீங்கு ஏதும் நிகழ வில்லையாயின் அவன் அந்தத் தொகை தனக்குச் சேர வேண்டும் எனக் கேட்டதை நியாயமானது என ஒப்புக் கொள்வர். குற்றங்களுக்குத் தண்டனை விதிப்பதற்கான திட்டங்கள் ஏதும் குலத்தவர்களிடம் இல்லை. குறவர் கொள்ளையடித்து வந்த பொருள்களைப் பங்கு வைத்துக் கொடுப்பதற்கு உதவ

வரும்படி குலத்தவர்களை அழைப்பர். திருட்டுக் குழுவில் ஒருவன் திருடி வந்த பொருள்களில் ஒரு பகுதியினைத் தனக் கென ஒதுக்கி மறைத்துக் கொள்வானாயின் அதனை வெளிப் படுத்த குலத்தவர் உதவியினைப் பெரும்பாலும் நாடுவர். குற்றச் செயலுக்காக அரசு தரப்பில் யார் மீதேனும் வழக்கு தொடரப் படுமானால் அவர்கள் அந்தக் குற்றத்தில் தொடர்பு உடைய வர்களாக இருந்தாலும் தொடர்பு அற்றவராக இருந்தாலும் வழக்குரைஞர்களை அமர்த்தி சாதியைச் சேர்ந்த மற்றவர்கள் அவர்களுக்காக வழக்காடுவர்."

தலைமுறை தலைமுறையாக இவர்கள் வாழ்க்கை நடத்தப் பெயரளவில் மேற்கொண்டிருப்பதான (திருட்டே இவர்கள் குலத்தொழில்) தொழிலின் அடிப்படையில் இவர்கள் பல பெரிய பிரிவினராகப் பிரிக்கப்பட்டு உள்ளனர். இவர்கள் தங்களை எந்தப் பெயரால் அழைத்துக்கொண்டாலும் திரு மெயின்வாரிங் கூற்றுப்படி மூன்று பெரும் பிரிவினில் இவர்கள் அடங்குவர்.

1. சாகை, சம்பதி, சாதுபதி

2. கவடி அல்லது குஜ்ஜல

3. தேவர கொண்ட, மெந்தரகுட்டி அல்லது மெனபதி

மேற்கூறியவர்களுள் முதல் இரண்டு பிரிவினரும் குறவர் களின் நேர்வழியில் வந்த உண்மையான குறவர் சாதியினர். இவர்கள் தங்கள் சாதிக்குப் புறத்தே மணஉறவு செய்து கொள் வதில்லை. மூன்றாம் பிரிவினர், புறத்தவர்களோடு மண உறவு கொண்டு அதன்வழித் தோன்றிய வழித்தோன்றல்களையும் உள்ளடக்கியவர்கள். குறவர்கள் தங்கள் சாதியில் பறையர் (மாலர், மாதிகர் உட்பட) ஏனாதியர், மங்களர், தசாகலர் ஆகிய சாதிகளைச் சேர்ந்தவர்களைச் சேர்த்துக் கொள் கின்றனர். அவ்வாறு வேறு சாதியினரைக் குறவர் சாதியில் சேர்த்துக் கொள்ளும் சடங்கில் சேர உள்ளவர்களின் நாவினில் தங்கத் தகட்டால் சூடிடுவர். மேதரர் தொட்ட உணவினைக் குறவர்கள் ஒருபோதும் உண்ண உடன்படுவதில்லை. மேதரர்

தாங்கள் செய்கின்ற பிரம்பு வேலையின்போது மாதிகர் செருப்புத் தைக்கும்போது பயன்படுத்துகின்ற தமருசியினைப் போன்ற கருவியினைப் பயன்படுத்துவதே இத்தகையமறுப்புக்குக் காரணமாகும். போத்து (ஆண்), பேண்டி (பெண்) என்ற இரண்டு பெருங் குடும்பங்களாகவும் குறவர் பிரிவுபட்டுள்ளனர் எனக் கூறப்படுகின்றது. மேலே கூறப்பட்ட மூன்று பிரிவுகளுள் முதல் பிரிவினைச் சேர்ந்த அனைவரும் போத்துப் பிரிவினைச் சேர்ந்தவர்களாவர். இரண்டாம் பிரிவினைச் சேர்ந்தவர்கள் பேண்டி பிரிவினைச் சேர்ந்தவர்கள். மூன்றாம் பிரிவினில் உள்ள குடும்பத்தினர் கலப்பு மணங்களின் வழி வந்தவர் களாதலாலும் அவர்கள் குடும்பப் பெண்கள் தாழ்ந்த சாதியின ரானதாலும் இவர்களும் பேண்டிப் பிரிவிலேயே அடங்குவர். போத்து பிரிவினைச் சேர்ந்தவர்கள் தங்களுக்குத் தகுந்த மண மகளைத் தேடிச் செல்லும் ஆண்களின் சந்ததியிலர் எனவும், பேண்டிப் பிரிவினர் தங்கள் பெண்களுக்காக மாப்பிள்ளை தேடி யலையும் ஆண் சந்ததியினர் எனவும் கூறப்படுகின்றது. குறவர் சாதியினைச் சேர்ந்தவர்கள் மணம் செய்து கொள்ள விருமபி னால் அவர்கள் ஆணாயினும் பெண்ணாயினும் தங்கள் பிரிவி னைச் சேராத ஒருவரையே துணையாகத் தேடி மணந்து கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாக முதல் பிரிவினைச் சேர்ந்த குறவன் ஒருவன் இரண்டாம் அல்லது மூன்றாம் பிரிவி லிருந்தே தனக்கு உரிய துணைவியினைச் தேடிக்கொள்ள வேண்டும். அவ்வாறு அவன் மணந்து கொள்ளும் மணமகள் அதன்பின் முதல் பிரிவினைச் சேர்ந்தவளாகக் கருதப் படுவாள். இம்முறை முதல் பிரிவினைச் சேர்ந்துள்ள பெண்களுக்குப் பாதகமான விளைவினைத் தருவதாகும். அவர் கள் இரண்டாம் அல்லது மூன்றாம் பிரிவினைச் சேர்ந்த ஆட வனை மணநதபின் சமுகப் படிநிலையில் தாழ்ச்சியுறுகின்றனர். எனினும் அவர்களுக்குப் பிறக்கும் பெண்கள் முதல் பிரிவினைச் சேர்ந்தவர்களை மணந்து மீண்டும் சமுகப் படிநிலையில் உயர்வு அடையலாம். சமயத் தொடர்பான சடங்குகளில் ஒவ்வொரு பிரிவினருக்குமெனக் குறிப்பிட்ட சில கடமைகள் உள்ளன. முதல் பிரிவினைச் சேர்ந்தவர்கள் தெய்வ உருவினை அலங் கரித்து ஆடை அணிவிக்கும் உரிமை பெற்றவர்கள். இரண்டாம்

பிரிவினர் தெய்வ உருவங்களையும் அவற்றோடு தொடர்புடைய மற்றவற்றையும் ஊர்வலமாக எடுத்துச் செல்லவும் தீப தூபங்கள் காட்டவும் உரிமை பெற்றவர்கள். மூன்றாம் பிரிவினர் தேர் இழுக்கவும் ஊர்வலத்தின்போது கூச்சலிட்டவர்களாக ஆடிப்பாடவும் உரிமை பெற்றவர்கள். இதன் காரணமாக இவர்களைச் சில சமயங்களில் வண்டி என அழைக்கவும் செய்வர்.

"குறவர்களிடையே காணப்படும் பெரும் பிரிவுகள் நான்காகும். அவற்றின் தகுதிப்படி சாதெபாரி, காவடி, மானபாடி, மெந்தரகுட்டி என அவற்றை வரிசைப்படுத்தலாம். இப்பெயர்கள் அனைத்தும் சிதைந்த தமிழ்ச் சொற்களின் வடிவங்களாம்.

"1. சாதெபாரி என்பது சாற்றுபடி (சாத்துபடி) என்பதன் சிதைந்த வடிவமாகும். இந்துக்களின் தெய்வ உருவங்களை மலர்கள், அணிகள், ஆடைகள், ஆகியவற்றால் அலங்கரித்தல் என்பது இதன் பொருள்.

"2. காவடி என்பது தோளில் தூக்கிச் செல்லும் இருமருங்கும் கூடைகள் கொண்ட கழியினைக் குறிக்கும். இதில் தெய்வங்களுக்கும், கோயில்களுக்கும் உரிய பொருள்களை இடுவர்.

"3. மானபாடி என்பது மான்படி என்பதன் சிதைந்த வடிவமாகும். கோயிலில் இறைவழிபாட்டின்போது அவன் புகழினைப் பாடுதல் என்பது இதன் பொருள்.

"4. மெந்தரகுட்டி என்பது மென்றிகுத்தி என்பதன் சிதைந்த வடிவாகும். ஓர் இணை செருப்புக்களைத் தைத்துக் கோயிலுக்கு வழங்குதல் என்பது இதன் பொருள். இந்த வழக்கம் இன்றும் திருப்பதி முதலிய கோயில்களில் இருந்து வருகின்றது.

"இந்த நான்கு பிரிவுகளுள்ளும் முதல் இரண்டு பிரிவுகளும் மற்ற இரண்டு பிரிவுகளைவிடத் தகுதியில் உயர்ந்தனவாகக் கருதப்படுகின்றன - அல்லது அவ்வாறு கருதப்பட்டுவந்தனவாதல் வேண்டும். காவடிப் பிரிவினைச் சேர்ந்தவன் போத்துவாடு எனவும் சாதெபாரிப் பிரிவைச்சேர்ந்தவன் பெண்டிஎனவும்

கூறிக் கொள்வான்'' எனக் குறவர்களிடையே காணப்படும் பிரிவுகளைப்பற்றித் திரு பாப்பா ராவ் நாயுடு எழுதியுள்ளார்.

திரு எப். எஸ். முல்லலெ குறவர்களிடையே காணப்படும் மேலும் பல பிரிவுகளையும் உட்பிரிவுகளையும் பற்றிக் கூறியுள் ளார்.* திரு சி. ஹயவதன ராவ் விசாகப்பட்டினம் மாவட் டத்தில் யெருகலர், பட்டபு அல்லது ஒட்டே எனவும், துர்பு எனவும் பிரிக்கப்பட்டுள்ளதாக எனக்குத் தகவல் தந்துள்வார். இவர்களுள் முன்னவர்கள் வளமாக வாழ்ந்த காலத்தில் ஓடு வேய்ந்த வீடுகளிலும் பின்னவர்கள் குடிசைகளிலும் வாழ்ந்து வந்தனர். பட்டபு பிரிவுப் பெண்கன் இரண்டு கைகளிலும் பித்தளை வளையங்களை அணிகின்றனர். துர்பு பிரிவுப்பெண்கள் வலக்கையில் பித்தளை வளையல்களையும் இடக்கையில் கண்ணாடி வளையல்களையும் அணிகின்றனர். முன்னவர் தங்கள் சேலைத் தலைப்பினை இடத்தோளில் இடுகின்றனர். பின்னவர் வலத்தோளில் இடுவர்.

திருச்சிராப்பள்ளி மாவட்ட விவரக் குறிப்பில் குறவர்களைப் பற்றிப் பதியப்பட்டுள்ள தகவல்கள் வருமாறு:- ''குறவர்கள் பல அகமணக்கட்டுப்பாடு உடைய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள் ளனர். இவர்களுள் ஈனா குறவர்களும் காவல்காரக் குறவர் களுமே குற்றச் செயல்களில் மிகுதியும் ஈடுபடுபவர்கள். காவல் காரக் குறவர்கள் மரச, மொண்டு, காடுகுட்டி குறவன் எனவும் அழைக்கப்படுவர். உடையிலும், தோற்றத்திலும் நாமக்கல் குறவர்கள் கரூர் குறவர்களைவிட சிறந்தவர்களாக விளங்குவர் எனக் கூறப்படுகிறது. இவர்கள் நன்கு உடையணிந்தவர்களாக வேளாளர் அல்லது பள்ளியரைப் போலத் தோற்றம் தருவர். காதில் நீண்டு தொங்கும் கடுக்கன்களை அணிந்து கொள்வது இவர்களுக்கே உரிய தனிச் சிறப்பு ஆகும். இவர்கள் மற்ற பிரிவினரைக் காட்டிலும் திருடுவதில் திறமைசாலிகள் என்றும் கூறப்படுகின்றது. திருடுவதற்காக வீடுகளின் கதவுகளை உடைத்து உள்புகும்போது கரூர் குறவர்கள் ஏடாகூடமாக

---

* சென்னை மாநிலக் குற்ற வகுப்பார் பற்றிய குறிப்புகள். (Notes on Criminal Classes of the Madras Presidency.)

ஏதேனும் செய்து வீட்டுக்குரியவர்களைத் தூக்கத்திலிருந்து எழுப்பி விடுவர் என்ற காரணத்தால் இவர்கள் அவர்களைக் கூட்டுச் சேர்த்துக்கொள்ள விரும்புவதில்லை.''

இவர்களுடைய இல்லப் பெயர் அல்லது புறமணக்கட்டுப் பாடு உடைய குலப்பெயர்களுக்கு எடுத்துக்காட்டாக உப்பு யெருகலர் தந்த விவரங்களை எடுத்துக்காட்டுகின்றேன்.

| | |
|---|---|
| தாசரி (வைணவ இரவலர்) | மொகிலி (தாழை) |
| சுக்கா (விண்மீன்) | உய்யால (ஊஞ்சல்) |
| கம்ப (முட்புதர்) | ராகல (ராகி) |
| அவுல (பசு) | பூல (மலர்) |
| தோக (வால்) | கட்டாரி (கட்டாரி) |
| காகை (புங்கம்) | அம்போசல (தாமரை) |
| பண்டி (வண்டி) | சமுத்ரால (கடல்) |
| கஜ்ஜல (சலங்கை) | வெங்கடகிரி (ஒரு நகரம்) |

''இவர்களின் இந்த இல்லப் பெயர்கள் அல்லது குலப் பெயர் களை அறிந்திருப்பது இவர்களை அடையாளங் கண்டுகொள்ள மிகவும் பயன்படுகின்றது. குறவர்கள் பொதுவாகத் தங்கள் பெயரை மாற்றியே சொல்வர். ஆனால் தங்கள் குலப் பெய ரையோ தந்தையின் பெயரையோ இவர்கள் ஒருபோதும் மாற் றிச் சொல்வதில்லை. ஒருவனுக்கு மகனாகப் பிறந்து இன்னொரு வனுடைய மகன் எனக் கூறிக் கொள்வதை இவர்கள் அவமா னமான செயலாகக் கருதுகின்றனர். இவர்கள் குலமரபுச் சின்னங்களைப் பேணுகின்றனர் என்பதற்கான சான்றுகளும் உள்ளன. ஆனால் அவற்றுக்கும் அவற்றை மேற்கொண்டுள்ளவர் களின் குலம் அல்லது இல்லப் பெயர்களுக்கும் எத்தகைய தொடர்பும் இல்லாமல் இருப்பது வியப்புக்கு உரியதாக உள்ளது. கொணேடி குலத்தைச் சேர்ந்தவர்கள் கொள்ளினைத் தங்கள் குலமரபுச் சின்னமாகக் கொண்டுள்ளனர். இவர்கள் கொள்ளினைத் தொடவோ உண்ணவோ வேறு எதற்கும் பயன் படுத்தவோ மாட்டார்கள். சமுத்திர குலத்தவர்களின் குலமரபுச் சின்னம் சங்காகும். இந்தக் குலத்தவர்களும் இதனை எவ்வகையிலும் பயன்படுத்துவதில்லை. ரமேஷ்வரி குலத்தவர்கள்

ஆமையினை உண்பதில்லை. கொணேடி குலத்தவர்களும் இதே போன்று சில சமயங்களில் ஆமைகளை உண்ணாது விலக்குகின்றனர்'' எனத் திரு பாவ்செட் கூறியுள்ளார்.

குறவர்கள் மேற்கொண்டுள்ள குறிப்பிட்ட தொழில்களுக்கும் அவர்கள் பிரிவுகளுக்கும் உள்ள உறவு பற்றிப் பார்ப்போம். பீடர் அல்லது நாடோடிக் குறவர்கள் தொடக்கத்தில் உப்பு, புளி, வெல்லம், கருவேப்பிலை ஆகியவற்றைப் பொதி எருதுகள் மீதும் கழுதைகள் மீதும் வைத்து ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்லும பணியில் ஈடுபட்டிருந்தவர்கள். கருவேப்பிலை எல்லோராலும் விரும்பி வாங்கப்படுவது. அதனை விற்பனைக்குக் கொண்டுவருபவர்களைத் தமிழில் 'கருவேப்பிலை' என்றும், தெலுங்கில் 'கரெபாகு' என்றும் அவர்கள் கொண்டு வரும் பொருளின் பெயரைச் சொல்லியே அழைப்பர். இந்தியாவில் இவ்வாறு சுமந்து செல்லும் பொருளின் பெயரைச் சொல்லி அதனைச் சுமந்து செல்பவர்களை அழைப்பது பொதுவாக வழக்கில் உள்ளது. எடுத்துக்காட்டாகக் கடைதெருவில் விறகுக்கட்டைத் தலையில் தூக்கிச் செல்லும் வயதான ஒருத்தியை 'ஏ! விறகுக் கட்டு' என்றே அழைப்பர். தோளில் காவடியில் கூடைகளைச் சுமந்தபடி குறுக்கே வரும் ஒருவனை எச்சரிக்கக் 'காவடி!' என்றே குரல் கொடுப்பர். கடற்கரைப் பகுதியிலிருந்து உள்நாட்டிற்கு உப்பினைக் கொண்டு செல்லும் குறவர்கள் உப்புக் குறவர் எனப்படுவர். துப்ப, துப்பை, தப்பை என்பது மலையடிவாரங்களில் மூங்கில்கள் கிடைக்கும் பகுதிகளில் திரியும் குறவர்களுக்கு உரிய பெயராகும். இந்த மூங்கில் தப்பைகளைக் கொண்டு இவர்கள் குதிர், கூடை மற்றும் பல வகை அரிய பொருள்களைத் தயாரிக்கின்றனர். கர்நூல் மாவட்டத்தில் யெருகலர் அமாவாசை நாளன்று மட்டுமே மூங்கிலினை வெட்டுவர். அவ்வாறு வெட்டப்படும் மூங்கில்களை அந்துப் பூச்சி துளைக்காது என்பது இவர்கள் நம்பிக்கை. அவ்வாறு மூங்கில்களை வெட்டும் முன் மூங்கிலுக்குரிய தேவதையான மல்லம்மாவிற்குப் பூசை போடுவர். நல்லாமலைக் காடுகளில் யெருகலர் மூங்கில்களைப் பிளந்து அவற்றை முழுவதுமாகக் காட்டைவிட்டு அப்புறப்படுத்துவதில்லை. மூங்கிலின் புறத்தே

அமைந்துள்ள மெல்லியதான பட்டையை மட்டும் உரித்து அவற்றை நீண்டகட்டுக்களாகக் கட்டிக் கழுதைகளின் மீதேற்றிக் கொண்டு செல்வர். மூங்கிலின் உட்பகுதியினைக் காட்டிலேயே ஆங்காங்கே இவர்கள் விட்டு வருவதால் காட்டுத் தீ மூளும் ஆபத்து உள்ளது. முன்புபோல மூங்கிலைக் காட்டி லேயே பிளந்து அங்கே தீப்பிடித்து எரியக் கூடிய பகுதிகளை விட்டு வருவதற்குப் பதிலாகத் தற்போது யெருகலர் மூங்கிலை முழுவதுமாக விலைக்கு வாங்கிக் காட்டுக்கு வெளியே கொண்டு சென்று பிளந்து கொள்ளும்படி கூறப்படுகின்றனர். நந்தியாவில் இந்த யெருகலர் குழுவைச் சேர்ந்த சிலரை நான் சந்தித்தேன். அவர்கள் தங்கள் தொழிலினைக் குறிக்கும் அடையாளமாகப் பிளந்த மூங்கில் குச்சிகளைக் கையில் வைத்திருந்தனர். மற்றொரு முக்கியமான குறவர் பிரிவினர் காடுகளில் வேர்களைச் சேகரித்து அவற்றைக் கொண்டு துடைப்பான்கள் தயாரிக்கும் குஞ்சுக் குறவர்களாவர். குஞ்சுக் குறவர்கள் வேட்டையாடுவதில் திறன் மிகுந்தவர்கள். இவர்கள் மறிமான், கௌதாரி, வாத்து, காடை முதலியவற்றை அகப்படுத்துவதில் வல்லவர்கள். மறிமான் களைச் சுட்டு வீழ்த்த அல்லது அவற்றின் குட்டிகளைப் பாய்ந்து பிடிக்க இவர்கள் இலைதழைகள் கந்தல்கள் ஆகியவற்றால் ஆன ஒருவகைக் கேடயத்தைப் பயன்படுத்துகின்றனர். அந்தக் கேடயங்கள் காற்றில் உருண்டு திரண்டு வரும் புல் கட்டுக்கள் போலக் காட்சி தரும். மான் கூட்டத்தை கண்டவுடன் இவர்கள் இந்தக் கேடயத்தின் ஒரு முனையினை தரையில் ஊன்றி அவற் றின் பின் முழங்காலை மடக்கிக் குத்துக் காலிட்டு அமர்ந்து கொண்டு மெல்ல மெல்ல அந்த மான் கூட்டத்தை நோக்கி அவற்றை நெருங்கும்வரை முன்னேறுவர். அதன்பின் அவற்றைச் சுட்டு வீழ்த்துவர். அல்லது குட்டிகளைப் பாய்ந்து பற்றுவர். மறிமான்கள் இவர்களின் கேடயத்தைப் புதர் எனக் கருது கின்றன. படிப்படியே அந்தக் கேடயங்கள் நெருங்கி வருவதை அவை தெரிந்து கொள்வதில்லை. இரவில் இவர்கள் வாத்து, தாரா ஆகியவற்றைச் சுருக்கு வைத்துப் பிடிப்பர். ஏரிகளைச் சார்ந்துள்ள வயலில் நெற்பயிர் இளம் பயிராக இருக்கும் பருவத்தில் தரை ஓரளவு கண்ணுக்குப் புலப்படும் நெல்வயல் களில் இவர்கள் அந்த வேட்டைகளை நிகழ்த்துவர். இத்

தகைய வயல்களே வாத்து, தாரா ஆகியன இரவில் மேய்ச்சலுக்கு வந்து விழும் இடங்களாகும். அல்லது வயல்களில் முதல் நாள் வாத்துக்கள் மேய்ந்த அடையாளத்தை வைத்து அந்த வயல் களில் வேட்டைக்கு ஆவன செய்வர். வயல் வரப்பில் வயலின் குறுக்கே ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரை கொடிகளைப் பிணைப்பர். இவை ஏரிக்கரையோடு இணைந்து அமைந்ததாக வயலில் உள்ள தண்ணீரிலிருந்து நான்கு அங்குல உயரத்தில் கட்டப்பட்டிருக்கும். இதிலிருந்து அவர்கள் செம்மறி ஆடு, வெள்ளாடு, முயல் ஆகியவற்றின் கால்களின் தோலினாலான சுருக்குகளைக் கீழ்முனையில் உள்ள சுருக்கானது நீருக்கடியில் சேற்றில் புதைந்திருக்கும்படி பொருத்துவர். மேய வரும் வாத்துக் களோ தாராக்களோ இந்தச் சுருக்கில் அகப்பட்டு வேட்டையில் பலியாவது உறுதி. "குண்ட்சு அல்லது குஞ்சுக் குறவர் எனப் படுவோர் மரக்கிளைகளில் பட்டைப் பிசினைத் தடவி வைத்தும், மூங்கிலைப் பிளந்து அதன் நடுவே புழுப்பூச்சிகளைத் தொங்க விட்டும், குதிரை வால் மயிரைக் கொண்டு கூடுகளைச் சுற்றி சுருக்கிட்டு வைத்தும் சிறு பறவைகளைப் பிடிக்கின்றனர். தரை யில் ஓரிடத்தில் நிறையக் கண்ணிகளை அமைத்து, அதன் நடுவே கூண்டில் அடைக்கப்பட்ட ஒரு காடையினை வைத்துப் பிற காடைகளை அழைக்கும்படி அதனைக் குரல் கொடுக்கச் செய்து காடைகளைக் கண்ணியில் வீழ்த்துவர். விரிக்கப்பட்ட வலை யினை நோக்கிக் கூட்டமாகக் கௌதாரிகளையும் காடைகளை யும் விரட்டி வலையில் வீழச் செய்வர். இவ்வாறு விரட்டும்போது அவர்கள் கறுப்புக் கம்பளியைப் போர்த்தியவர்களாகத் தலையை யும் தலைமுடியையும் சிறகுகள், புல் ஆகியவற்றாலான தொப்பி யால் மறைத்துக்கொண்டு இதற்கென்றே பழக்கப்பட்ட காளை யில் ஏறியவர்களாகப் பறவைகளை மெல்ல மெல்ல வலையினை நோக்கி விரட்டுவர். பழக்கிய மறிமானின் கொம்புகளில் சுருக்கி டப்பட்ட கயிறுகளைக் கட்டி அதனைக் காட்டில் திரியும் மறி மானோடு சண்டையிடும்படியாக அனுப்பி வைத்து அவற்றின் கொம்புகளைச் சுருக்கில் அகப்படுமாறு செய்து அவற்றைக் கையகப்படுத்துவதனையும் இவர்கள் அவ்வப்போது மேற்கொள் கின்றனர்" எனப் பெல்லாரி மாவட்ட விவரக் குறிப்பில் திரு பிரான்சிஸ் கூறியுள்ளார். சில சமயங்களில் குஞ்சுக் குறவர்கள்

குரங்கு ஒன்றினை தங்களுடன் இழுத்துக்கொண்டு பிச்சை கேட்டு வரக் காணலாம். இவர்கள் சாதியினைச் சேர்ந்த பெண்கள் பச்சை குத்துவதை மேற்கொண்டு வருமானம் தேடுவர். இந்தத் தொழில் காரணமாக இவர்கள் பச்சைகுத்தி எனவும் அழைக்கப்படுகின்றனர். நான் நேரில் பேட்டி கண்ட குறத்தி ஒருத்தி தான் பச்சைகுத்துவதற்கு உதவும் முன் வரைவுகளை ஒரு சுவடியில் எழுதி வைத்துக் கொண்டிருந்தாள். அதில் மீன், தேள், கோட்டை, ஐந்து மாடி வீடு, மற்றும் வழக்கமான உருவமைப்புக்கள் முதலியன இடம்பெற்றிருந்தன. இந்த வரைவுகளை அவள் தோலில் கையாலேயே மிகுந்த கைப்பழக்கத்தின் காரணமாக நுட்பமாக மழுங்கிய ஊசிகளை விளக்குக் கரி, விளக்கெண்ணெய், மஞ்சள் ஆகியன கலந்த கலவையில் தொட்டுக் குத்தி அமைப்பாள். நான்கைந்து ஊசிகளை ஒன்றாகப் பிணைத்து இந்த வரைவுகள் குத்தப்படும். இதற்குப் பயன்படுத்தும் ஊசிகளையும் குச்சிகளையும் இவர்கள் ஒரு மூங்கில் குழலில் வைத்திருப்பர். பச்சைகுத்துவதற்கான கலவையைக் கூவிளம் (*Aegle Marmelos*), பனம்பழம் (*Borassus flabellifer*) ஆகியவற்றின் சாற்றினைப் பிழிந்து கலந்து அமைத்துக் கொள்வர். உடம்பின் மேற்பகுதி முழுவதிலும் நான்கைந்து அமர்வுகளில் பச்சைகுத்தி முடிக்க ஒரு குறத்திக்கு எட்டு முதல் பன்னிரண்டு அணா வரையோ, அதற்கு ஈடான தானியங்களையோ தருவர். பச்சைகுத்த குளிர்காலத்தை விடக் கோடை காலமே ஏற்ற பருவமாகக் கருதப்படுகிறது. பச்சைகுத்துவதால் ஏற்படும் வீக்கம் கோடையில் குறைவாகவே இருக்கும். இந்த வீக்கத்தைக் குறைக்க விளக்கெண்ணெய், மஞ்சள், ஆவாரம் தழை ஆகியனவற்றைக் கொண்ட கலவையினைப் பூசுவர்.

பச்சைகுத்துகின்றவர்களான இவர்களைப் பற்றியும் அல்லது குறி கூறுகின்றவர்கள் என்ற பொருளிலே கத்தே என அழைக்கப்படும் இவர்களைப் பற்றியும் திரு பாப்பா ராவ் நாயுடு கூறுவதாவது:– "இந்தப் பெண்கள் ஒரு கூடையையும் முறத்தையும் எடுத்துக் கொண்டு 'பச்சை குத்தலையோ குறிகேட்கலையோ' என உரக்கக் கூறியபடி செல்வர். இதற்காக அவர்கள் தானியம் அல்லது காசினைப் பெற்றுக் கொள்வர். அடிக்கடி

குழந்தையினைச் சாகக் கொடுக்கும் அதிர்ஷ்டங்கெட்ட கிராமத்துப் பெண்ணோ அடிக்கடி நோய் வாய்ப்படுபவளோ இந்தக் குறத்திகளைப் பார்த்தவுடன் அவர்களைத் தங்கள் வீட்டினுள் அழைத்து உட்கார வைத்து அவர்களுடைய கூடையில் கொஞ்சம் தானியத்தை இட்டபின், தங்கள் சென்ற காலத்திய துன்பங்கள் பற்றியும் வருங்காலத்தில் நடக்கவுள்ளன பற்றியும் கேட்பர். இந்தக் குறத்திகள் பொருத்தமுறக் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லப் பயிற்சி பெற்றவர்களாதலால், தங்கள் கற்பனை வளத்தாலும் அறிவுத் திறனாலும் அப்படியும் கொள்ளலாம் இப்படியும் கொள்ளலாம் என்னும்படியாகச் சற்றே கோடி காட்ட, ஆர்வத்தோடு வருங்கால நலத்தில் நாட்டமுடைய கேள்வி கேட்ட பெண்கள் அவர்களுடைய விருப்பத்தை நிறைவு செய்து கொளளும் வகையில் அவற்றைப் புரிந்து கொள்வர். அதன் பின் குறத்திகளுக்கு நல்ல பலன் இரண்டு வகையில் கிடைக்கும். இந்தக் குறி கூறும் நிகழ்ச்சி நடக்கும் அதே சமயத்தில், தங்கள் கணவன்மார் கொள்ளையிட வாய்ப்பான வளமுடைய வீடா அது என்பதையும் கணித்து அறியத் தவற மாட்டார்கள்.''

"கணவனோடு உடன்கட்டை ஏறிய ஒருத்தியினையே விசாகப்பட்டினம் மாவட்டத்தில் சுருங்கவரபுக் கோட்டை என்ற ஊரில் ஊர்த் தேவதையான யெரகம்மா என வழிபடுகின்றனர். அவளைப் பற்றிப் பாடப்படும் இசைப் பாடல்கள் அவள் தாசரி பிரிவினைச் சேர்ந்த பெற்றோருக்குப் பிறந்தவள் எனவும் அவள் பிறப்பைப் பற்றி ஒரு யெருகலர் சாதிப் பெண் முன் கூட்டியே உரைத்ததால் அவள் அப்பெயர் பெற்றாள் எனவும் கூறுகின்றது. மணமுடிக்கப்பட்டபின் ஒருநாள் அவள் தன் கணவனை வெளியே சென்றால் புலியினால் கொல்லப்படுவான் எனக் கூறித் தடுக்க முயற்சி செய்தும், அவன் அதனைக் கேளாது வெளியே சென்று அவள் முன்னுணர்வு அறிவித்த படியே புலியினால் கொல்லப்பட்டான். இன்று அவள் கோயில் உள்ள இடத்திலேயே அவள் தன் கணவனோடு உடன்கட்டை ஏறினாள் என்பர்."*

---

* விசாகப்பட்டின மாவட்ட விவரக் குறிப்பு. (Gazetteer of the Vizagapatam district.)

ஊர்க் குறவர்கள் எனப்படுவோர் நாடோடிகளாக அலையும் தங்கள் பழக்கத்தைக் கைவிட்டவர்களாகத் தங்களுக்கென அமைந்துள்ள ஊர்களிலோ பிற சாதியார் வாழும் ஊர்களைச் சார்ந்தோ நிலைத்திருக்கின்றனர். இவர்களுள் பலர் திண்ணைப் பள்ளிகளுக்குச் சென்று ஓரளவு எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டுள்ளனர். காவல் துறை, உப்பளத்துறை, சிறைக்காவலர் பணி முதலியவற்றில் இவர்களுள் சிலர் பணிபுரிகின்றனர். தங்கள் தனித்தன்மையை நாளுக்குநாள் விரைந்து இழந்து கொண்டுள்ள ஊர்க் குறவர்கள் தாங்கள் வாழும் பகுதியினைச் சேர்ந்த உழவர்களைப் போல நடை, உடை, பாவனைகளை மாற்றிக் கொண்டுள்ளனர். சேலம் மாவட்டத்தில் குறவர்கள் மட்டுமே வாழும் குறவூர் என்ற ஊர் உள்ளது. இவர்கள் தாங்கள் முதலில் உப்புக் குறவர்களாக இருந்ததாகவும், தற்பொழுது தங்கள் நிலத்தினைத் தாங்களே பயிரிடும் பணியினையும் பயிர்த்தொழில் கூலிகளாகப் பண்ணைகளில் பணிபுரிவதையும் மேற்கொண்டுள்ளதாகவும் கூறுகின்றனர். அந்த வட்டாரச் சந்தைகளில் இவர்கள் விற்கும் பவழம், பாசிமணி ஆகியன தீர்ந்துவிட்டால் அதனை ஒட்டு மொத்தமாகக் கொள்முதல் செய்ய எப்போதாவது சென்னை நகருக்குச் செல்வதுண்டு எனவும் கூறுகின்றனர். சில குறவர்கள் மதுரையில் தங்க முலாம் பூசப்பட்ட பாசிமணிகளை வாங்கிவந்து அவற்றைத் தங்கம் எனக் கூறி ஏதும் அறியாக் கிராம மக்களை ஏமாற்றுகின்றனர் என்றும் கூறப்படுகிறது. ஊர்க் குறவர் நாகரிகம் பெற்றவர்களாக மாறிவரினும், மற்றவர்கள் உடமைகளைக் கவர்வதில் உள்ள ஆசை இன்னமும் இவர்களை விட்டு நீங்கியபாடில்லை. அனந்தப்பூர், கடப்பை, பெல்லாரி மாவட்டங்களில் இவர்கள் வழிப்பறி, கன்னம் வைத்தல், ஆடு மாடுகளைத் திருடுதல் போன்ற குற்றச் செயல்களில் ஈடுபடும் சாபக் கேட்டிற்கு உள்ளானவர்களாக உள்ளனர். சில ஆண்டுகளுக்கு முன் இவர்கள் அச்சமின்றி ஆடு திருடுவதில் ஈடுபட்ட ஒரு நிகழ்ச்சியை இங்கே குறிப்பிடவேண்டும். அனந்தப்பூர் மாவட்டத்திலுள்ள சிங்கனமல்ல என்ற கிராமம் புகைவண்டிப்பாதையிலிருந்து சில மைல்கள் தள்ளி அமைந்துள்ளது. புகைவண்டித் தடத்தின் இரு பக்கமும் அரசின் பாதுகாப்புக்குரிய காடுகள்

அமைந்துள்ளன. அந்தக் காடுகளுக்கு ஊரார் தங்கள் மறி ஆடுகளையும் வெள்ளாடுகளையும் மேய்ச்சலுக்குச் சிறுவர் பொறுப்பில் வனக் காவலர் இல்லாத நேரங்களிலோ அவருடைய நல்லெண்ணத்தைப் பெற்றோ ஓட்டி விடுவர். பெங்களூரில் இறைச்சியினைத் திரட்டி வழங்கும் வணிகன் ஒருவனுக்கும்குறவர்களுக்குமிடையே ஓர் உடன்பாடு ஏற்பட்டது. அந்த வணிகன் சார்பில் மிகுந்த எண்ணிக்கையில் ஆடுகளைத் தர்மாவரத்திற்கு அருகிலேயுள்ள ஒரு ரயில்நிலையத்தில் ஒப்படைப்பதாகவும், அந்த ஆடுகளைப் பெற்றுக்கொள்ள வண்டிகள் தயாராக இருக்க வேண்டும் எனவும் ஆடுகளுக்கு உரிய விலை பணமாக உடனடியாக அங்கேயே தரப்பட வேண்டும் எனவும் ஏற்பாடு செய்யப்பட்டது. ஒரு நாள் காலை யில் சிறுவர்கள் நூற்றுக்குமேற்பட்ட ஆடுகளை மேய்ச்சலுக்குப் பாதுகாக்கப்பட்ட காட்டுக்கு ஓட்டிச் சென்றனர். அவர்கள் ஒருவருக்குத் துணையாக ஒருவர் ஒரே குழுவாக ஓரிடத்தில் கூடியிருந்தனர். அப்பொழுது குறவர்கள் பலர் அங்குத் தங்களை வனக் காவலர்கள் எனக் கூறிக் கொண்டு வந்து அந்தச் சிறு வர்களைப் பிடித்து மிரட்டி மரங்களில் கட்டிப் போட்டுவிட்டு, அங்கு மேய்ந்த ஆடுகளையெல்லாம் ஓட்டிச் சென்றுவிட்டனர். அன்று இரவுவரை அந்தச் சிறுவர்களைத் தேடிக் கண்டுபிடிக்க இயலவில்லை. மறுநாள் காலையிலேயே காவலர்கள் இது பற்றிச் செயல்படத் தொடங்கினர். அதற்குள்ளாக ஆடுகள் ரயிலில் ஏற்றிப் பெங்களூருக்கு அனுப்பப்பட்டுவிட்டன.

1905-1906–ஆம் ஆண்டுக்கான சென்னை மாநிலக் காவல் துறை அறிக்கையில், "மாட்சிமை தங்கிய நிசாம் அரசரின் சிறையிலிருந்து ருத்ரபாத் கொரச்சர் எனப் பெயர்போன குழுவினர் விடுதலை செய்யப்பட்டிருப்பதாகவும் அவர்கள் சிறை யிலிருந்து வெளிவருவதால் பெல்லாரி மாவட்டக் காவலர் களுக்குப் பெருமளவில் தொல்லைகள் நிகழலாம்" எனக் கூறப் பட்டிருந்தது.

பாம்பாட்டும் குறவர் பாமுல குறவர் என்ற பெயரில் சிறு தொகையினராகக் காணப்படுகின்றனர். 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் பூசலவாடு (கண்ணாடிப் பாசிமணிகள் விற்போர்),

உட்லவாடு (உறி செய்பவர்கள்) என இரண்டு உட்பிரிவினர் யெருகலருள் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. உட்லம் என்பது பானைகள் வைக்கப் பனை நாரினால் செய்யப்படும் உறியாகும். அதே அறிக்கையில் காது குத்துகின்றவர்கள், வள்ளியம்மை கூட்டத்தார் (வள்ளியம்மை தெய்வத்தை வழிபடுகிறவர்கள்) என்ற பெயர்கள் குறவருக்குரிய வேறு பெயர்களாகப் பதியப்பட்டுள்ளன. இவர்கள் சுப்பிரமணியரின் மனைவியான வள்ளியம்மை தங்கள் சாதியைச் சேர்ந்த குறத்தி எனக் கூறுவர். பழைய தமிழ் நூல்களில் குறவர்கள் அரச குடும்பத்தினருக்குக் குறி சொல்பவர்களாகவும் சுப்பிரமணியர் கோயில் பூசாரிகளாகவும் கூறப்பட்டுள்ளனர். கணக்கெடுப்பின்போது சில குறவர்கள் தங்களைக் கூடைகட்டி வன்னியர் எனப் பதிந்துள்ளனர். பல்போஃர் வாலாசா குறவர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதோடு அவர்களை இசைவாணர்கள் எனவும் குறித்துள்ளார். இவர்கள் சமயச் சடங்குகளின்போது தெய்வத்தின் முன் சாம்பிராணி தூபம் புகைப்பதையும் பாடுவதையும் கடமையாகக் கொண்டுள்ள வோயாறு குறவர்களை ஒத்தவர்களாதல் வேண்டும். இதே ஆசிரியர் பண்டிரி அல்லது சோனைக் கொலவாரு, கொல்ல மற்றும் சொலிகுறவர் பற்றியும் கூறியுள்ளார்.இவர்கள் மராட்டிய நாட்டின் தென் பகுதியினைச் சேர்ந்தவர்களாவர். குறவர்களுக்கு அமைந்துள்ளதான தோகைமலை என்பது போன்ற பெயர்கள் அவர்கள் வாழும் ஊரின் அடிப்படையில் அமைந்த உள்ளூர் வழக்காகலாம். தோகைமலை திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உள்ள ஊர். "குறவர்களுள் கள்ள பண்ட்ரு (திருடர்) என மூன்றாவதான ஒரு வகையினரும் காணப்படுகின்றனர். மைசூரினை இறுதியாக ஆண்ட முகமதிய மன்னன் போர் நடைபெறும் காலத்தில் இவர்கள் குழுவினைப் பணியில் அமர்த்தியிருந்ததாகக் கூறப்படுகிறது. இவர்களை அவன் போரிடுவதற்காகப் போராளிகளாகப் பயன்படுத்தவில்லை. இரவு வேளையில் பகைவர் தண்டுள் புகுந்து குதிரைகளையும் படைத்தலைவர்களுக்கு இன்றியமையாத பிற சாதனங்களையும் திருடவும், ஒற்று அறிந்து வரவுமே இவர்கள் பயன்படுத்தப்பட்டனர். இச்செயல்களில் இவர்கள் பெறும் வெற்றியின் சாதனைக்கு ஏற்ப இவர்களுக்குத் தொகை

வழங்கப்படும். போர் நடைபெறாத காலங்களில் தங்கள் அரசனுக்காகப் பக்கத்து நாடுகளுக்குக் கொள்ளையடித்துவர இவர்கள் அனுப்பப்படுவர்'' என அப்பெ துபைஸ் மேலும் இவர்களைப்பற்றிக் கூறியுள்ளார். மத்திய மாகாணங்களைச் சேர்ந்தவர்களான கைகொடியர் குறவர்களோடு ஒத்தவர் களாக இருத்தலை நோக்க அவர்கள் அங்கே சென்று குடி யேறிய குறவர்களாதல் வேண்டும்.

குறவர்களில் ஒரு பிரிவினரான கூத்து (நாட்டியமாடும்) அல்லது கோத்தே (குரங்கு) கைகரியர் பற்றித் திரு பாப்பா ராவ் நாயுடு குறிப்பிடுகின்றார். ''இவர்கள் பரத்தமையில் ஈடுபட்ட வர்களாக வாழ்க்கை நடத்துவதோடு அத்தொழிலுக்காகக் குழந்தைகளைக் கடத்திச் சென்று விற்கவும் செய்கின்றனர். இப்பிரிவினைச் சேர்ந்த பெண்களில் சிலர் சென்னை மாநிலத் தில் நாட்டியத்தில் சிறந்தவர்களாக நல்ல வருவாய் ஈட்டி வரு கின்றனர். இவர்களை வசதியுள்ள செல்வர்கள் வைப்புக்களாக வைத்துள்ளனர். தெலுங்குப் பகுதிகளில் இவர்கள் யெருகல போகம்வாரு எனவும் தமிழ்நாட்டில் குறவத் தேவடியாள் எனவும் அழைக்கப்படுகின்றனர். குரங்குகளைப் பழக்கிப் பொது மக்களிடையே வேடிக்கை காட்டும் தொழிலையும் இவர்கள் மேற்கொள்கின்றனர்'' எனத் திரு பாப்பா ராவ் நாயுடு கூறுகின் றார்.

குறவர்கள் வீட்டில் வைத்து வழிபடும் தெய்வம் பெரும் பாலும் திருத்தம் அற்றதாகச் செதுக்கப்பட்டிருக்கும் விட்ணுவா கவோ சிவனாகவோ இருப்பர். முன்பே கூறியுள்ளதுபோல 1901 கணக்கெடுப்பு அறிக்கையில் குறவர்கள் சிவனின் மகனான சுப்பிரமணியரை வழிபடுவதாகக் கூறப்பட்டுள்ளது. யெருகலர் விட்டுணுவை வெங்கடேசுவரராக அவருடைய மனைவி இலக்கு மியோடும் வழிபடுகின்றனர். இத் தெய்வங்களோடுகூட இவர் கள் கொலாபுரியம்மா. பெருமாள்சாமி ஆகிய தெய்வங்களையும் மற்றும் உரிய வேறு தெய்வங்களையும் திருட்டுத் தொழில் மேல் செல்லும்போது வழிபடுகின்றனர். கொலபுரியம்மா பம்பாய் மாநிலத்தில் உள்ள கோல்காப்பூர் நகருக்குரிய தேவதையாவாள். இத்தெய்வம் தென்னிந்தியாவில் மிகப் புகழ்பெற்றுள்ளது.

பெருமாள் சாமி வட ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள திருப்பதி மலையில் உறையும் வெங்கடேசுவரர் ஆவார். குறவர்கள் அண்மையில் ஓரிடத்தில் வழிபாடு நடத்தியுள்ளனர் என்பது காவல் துறையினருக்கு அவர்கள் அண்மையில் ஒரு கொள்ளையில் ஈடுபட்டுள்ளனர் என்பதனைக் குறிப்பாக அறிவிக்கும் தடயமாகும். அது கொள்ளைகளைத் துப்புத் துலக்கத் தடயமாக உதவுகின்றது. இவர்கள் ஆண்டுக்கு ஒருமுறை ஞாயிற்றுக்கிழமை அல்லது செவ்வாய்க்கிழமைகளில் தங்கள் வழிபடு தெய்வத்திற்கு மறி அல்லது ஆட்டினைப் பலியிடுவர். வெங்கடேசுவரை வழிபடுபவர்கள் சனிக்கிழமைகளில் அத்தெய்வத்திற்குத் தேங்காய் முதலியன படைத்து வழிபடுவர். வழிபாட்டுச் சடங்குகள் முடிந்தபின் தெய்வத்திற்குப் படைக்கப் பட்டவைகளைக் கூடியுள்ள அனைவரும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொள்வர். சில சமயங்களில் இவர்கள் ஒரு பித்தளைப் பாத்திரத்தை மலர்களால் அலங்கரித்து நாமம் இட்டு அதனையே வெங்கடேசுவரராகப் பாவித்து வழிபடுவர். அந்தக் கலசத்தின் வாயினைத் தேங்காய் ஒன்றினை மாவிலை அல்லது வெற்றிலையின் மீது வைத்து மூடுவர். வழிபாட்டுக்கான நாளன்று குடிசையில் உள்ள அனைத்துப் பொருள்களையும் அப்புறப்படுத்தியபின் குடிசையினைப் பசுஞ்சாணத்தால் மெழுகிக் கோலமிடுவர். அதன்பின் கலசம் அமைத்து அதற்கு நிறைய பொங்கலினைப் படைத்து வழிபடுவர். அவ்வாறு படைக்கப் படும் பொங்கல் பிரசாதமாகக் குடியிருப்பில் உள்ள அனைவருக்கும் வழங்கப்பட வேண்டும். போலேரம்மாவினை வழிபட களிமண்ணினைக் கூருருளை வடிவில் பிடித்து அதன் உச்சியில் வேப்பிலைக் கொத்தினைச் சொருகி வைப்பர். அதன்முன் மூன்று கற்களும் வைக்கப்படும். போலேரம்மாவினைக் குடிசையருகில் வைத்து வழிபடுவார்களேயன்றிக் குடிசையினுள் வைத்து வழிபடுவதில்லை. விரதமிருக்கும் பெண்கள் அத் தெய்வத்திற்குப் பொங்கலிட்டுப் படைப்பர். அவ்வாறு பொங்கலிடும்போது பொங்கல் கொதித்து எவ்வாறு எப்பக்கம் விழுகின்றது என்பதனைக் கருத்தோடு பார்த்து அதனைப் பின்னர் நிகழ உள்ள நலந்தீங்குக்கு உரிய நிமித்தமாகக் கருதுவர்.



குறத்தி குறி கூறுதல்

கொர்ரோ (குறவர்) பற்றிய ஒரு குறிப்பில் பல்போஃர் அவர்கள்* 'வழிபாட்டின்போது இவர்கள் களிமண்ணால் கூர்ங்கோபுரம் ஒன்றினை அமைத்து அதனை மாரியம்மா எனக் கூறி வழிபடுகின்றனர் பெண்கள் தங்கத்தாலும் வெள்ளியாலும் ஆன அணிகளைக் கயிற்றில் கட்டித் தங்கள் கழுத்தி லிருந்து தொங்கவிட்டிருப்பர். இந்த அணிகளை இவர்கள் மாரியம்மாவின் உருவத்தினைத் தங்களுக்குச் செய்து கொடுத்த பொற்கொல்லனிடமிருந்து பெறுவர். அந்த உருவம் காளியின் வடிவினதாக இருக்கும். இவர்கள், தங்கள் முன்னோர் தங்களுக்கு, நல்லவன் ஒருவன் இறந்தவுடன் அவனது ஆவி குதிரை அல்லது பசு போன்ற உயர்ந்த விலங்கின் உடம் பினுள்ளும், கெட்டவன் ஒருவன் இறந்தவுடன் அவனது ஆவி நாய் அல்லது நரி போன்ற இழிந்த விலங்கின் உடம்பினுள் ளும், சென்று புகும் எனக் கூறியுள்ளனர் எனக் குறிப் பிட்டனர். இதனை இவர்கள் நம்புவதாகத் தெரிய வில்லை. எனினும் தீய ஆவிகள் தொடர்ந்து எப்பொழுதும் எங்கும் இருந்து வருகின்றன என்பதனையும் இவர்கள் நம்பு கின்றனர். மாலை மயங்கும் அந்தி நேரத்தில் அத்தகைய ஆவிகள் பல உருவங்களை எடுப்பதையும், ஒரு கணம் பூனை போலத் தோற்றம் கொள்ளும் அதுவே, மறுகணத்தில் ஆடாகவும், அடுத்து நாயாகவும் பல வடிவங்களை எடுத்துத் தனக்கே தீங்கு செய்ய வந்துள்ளதைத் தான் அடிக்கடி நேரில் பார்த்துள்ளதாகவும் எனக்குத் தகவல் தந்த குறவனே என்னிடம் கூறினான்" எனக் குறிப்பிட்டுள்ளார்.

தென் மாவட்டங்களைச் சேர்ந்த குறவர்களின் குடும்ப வழிபடு தெய்வம் சதவு. மூன்று நான்கு ஆண்டுகளுக்கு ஒரு முறை ஒரு நாளினை இத்தெய்வ வழிபாட்டுக்காக இவர்கள் ஒதுக்குகின்றனர். அப்போது குறவர்கள் அனைவரும் கூடி ஊருக்கு மேற்குப் பக்கத்தில் சேற்று மண்ணைக் கொண்டு ஒரு மேடையிடுவர். அதன்மீது செங்கற்கள் பாவப்படும். அந்த மேடையின் முன் ஓர் அரிவாள், கம்புகள், சாராயம்

* சென்னை இலக்கிய அறிவியல் இதழ், XVII, 1853. (Madras Journ. Lit. Science, XVII, 1853.)

ஆகியன வைக்கப்படும். தேங்காய், பழம், பொங்கல், ஆகியன படைத்து ஒரு மறியாட்டினையும் பலியிடுவர். மஞ்சளும் சந்தனமும் அச் செங்கற்கள் மீது பூசப்படும். பின்னர் கர்ப்பூர ஆரத்தி காட்டுவர், வழிபாடு விருந்துடன் முடிவுக்கு வரும்.

குற்றத் தொழிலில் ஈடுபட்டுள்ள குறவர்கள் குல தெய்வ மாகக் கொண்டாடுவது துக்கத்திற்குரியவளான மூதேவி ஆவாள் எனத் திரு பாப்பா ராவ் நாயுடு குறிப்பிடுகின்றார்.* இந்து சமயத்தைச் சேர்ந்த வேறு எந்தத் தெய்வங்களை விடவும் இத் தெய்வத்திடம் இவர்கள் மிகுந்த பயபக்தி உடைய வர்களாக உள்ளனர். இத் தெய்வத்தை இவர்கள் வழிபட இரு நோக்கங்கள் உள்ளன, அவற்றுள் ஒன்று இரவில் திருடச் செல்லும் இவர்கள் தூக்கக் கலக்கத்தில் சோர்வுக்கு உட்பட்டுவிடக் கூடாது என்பது; மற்றொன்று இவர்கள் திருட்டு நடத்தும் வீட்டினைச் சேர்ந்தவர்கள் நல்ல தூக்கத்தில் ஆழவேண்டும் என்பது. மூதேவியினை இவர்கள் தங்களை இரவில் திருட்டுக்களில் ஈடுபடும் சமயத்தில் தூக்கம் நெருங்காமல் காக்கவும் தாங்கள் திருடச் செல்லும் வீட் டின் உடமையாளர்கள் ஆழ்ந்த தூக்கத்தில் மூழ்கவும் உதவும் படி வேண்டுவர். இந்தத் தெய்வத்தின் வழிபாட்டில் பெண் களே ஈடுபடுகின்றனர். இத் தெய்வத்தினைத் திருப்திப்படுத்த அவர்கள் அவ்வப்போது வழக்கத்திற்குப் புறம்பான களியாட்டச் சடங்குகளில் ஈடுபடுவர். இந்தக் களியாட்டச் சடங்குகளை நிகழ்த்தத் தனித்த ஓரிடம் தேர்ந்தெடுக்கப்படும். அங்கு உயிர்ப்பலி தருவதோடு தேவியினைச் சிறப்பிக்க அனைவருக்கும் சாராயமும் வழங்கப்படும். இடையப்பட்டிக் குறவர் கூட்டம் இத் தெய்வத்தோடுகூட அய்யர்மலையில் உள்ள ரத்னசபாபதியினையும் வழிபடுகின்றனர். குறவன் ஒருவ்ன் ஒரு குற்றத்திற்கான வழக்குக்கு உள்ளாகும்போது கசையடியோடு தனக்கு விடுதலை கிடைக்க வேண்டுமெனத் தன் வழிபடு

---

* புகைவண்டியில் திருடுபவர்கள் பற்றிய வரலாறு, 1904. (History of Railway Thieves, 1904.)

தெய்வத்திடம், 'எனக்குக் கசையடியோடு மட்டும் விடுதலை கிடைக்குமானால் எனது தேவியே நான் உனக்கு வழிபாடு நிகழ்த்துவேன்' என வேண்டிக் கொள்வான்.

முன்பு குறவர்கள் மனிதர்களை உயிர்ப்பலி தந்து வந்தது பற்றியதான பின்வரும் விவரத்தினைத் திரு சி. ஹயவதன ராவிடம் செங்கல்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த வாலாசா பாத்திற்கு அருகே உள்ள ஆசூரைச் சேர்ந்த ஒரு வயதான குறவன் தெரிவித்துள்ளான். ஆசூர், மேல்புத்தூர், அவலூர் ஆகிய மூன்று ஊர்களுக்கும் நடுவே அமைந்துள்ள மேட்டுப் பாங்கான பகுதியில் சுற்றுப் புறத்தை நோட்டம் விடக்கூடிய வகையில் குறவர்களின் பெரிய கூட்டம் குடியமர்ந்திருந்தது. அவர்களிடம் பொதி எருதுகள் இருந்தன. ஒவ்வொரு குழுவின் தலைவனிடமும் சுமார் இருநூறு பொதி எருதுகள் இருந்தன. இவை போடும் சாணத்தை எருவாகப் பெறுவதில் சுற்றுப்புறத்தில் உள்ள கிராமத்தவர்கள் ஆர்வம் காட்டினர். அவ்வாறு வருபவர்களில் ஒருவனை இவர்கள் தங்கள் பலிக்கு உரியவனாக முடிவு செய்து, அவனோடு நெருக்கமாகப் பழகி அவனுக்குக் குடிக்க மதுவும் போடப் புகையிலையும் தந்து வந்த தோடு, சாணியின் முழு உரிமையையும் அவனுக்கே வழங்கினர். இவ்வாறு சில நாள்கள் சென்றபின் குறவர்கள் பலிக்குரிய நாளினை முடிவு செய்தனர். அவர்கள் அவனை அன்று மாலை தங்கள் குடியிருப்புக்கு வந்து தங்கள் தெய்வத்திற்குத் தாங்கள் நடத்தும் விழாவினைக் கண்டு களிக்கும்படி வேண்டினர். குறிப்பிடப்பட்ட நேரத்தில் அவனும் அவர்களுடைய குடி யிருப்புக்கு வந்து சேர்ந்தான். அவனைத் தாராளமாக மது பருகும்படி வேண்டினர். இதற்கிடையே ஓர் ஆள் நேரே நிமிர்ந்து நிற்கக் கூடிய அளவு ஆழமுள்ள குழி தோண்டப் பட்டது. நள்ளிரவானதும் அவனைப் பிடித்து அந்தக் குழியில் நிற்கச் செய்து கழுத்தளவு மண்ணை நிரப்பினர். அதன்பின் அங்குக் குழுமியிருந்த பெண்களும் குழந்தைகளும் தங்கள் பொருள்களுடன் அவ்விடத்தை விட்டு விரட்டப்பட்டனர். அவர்கள் அனைவரும் சென்றபின் குறவர்களின் சாதித் தலைவன் அவன் தலை மீது ஏற்றி வைக்கப்படும் விளக்கினைத்

தாங்கும்படியாக ஒரு சாணி உருண்டையினை வைத்தான். அதன்பின் அவன் தலைமீது அந்த விளக்கு ஏற்றப்பட்டது. இதற்குள்ளாக அங்குப் புதையுண்டவன் உயிரிழந்திருப்பான். அதன்பின் அவர்களுடைய பொதிஎருதுகள் அவன் தலையினைத் தாண்டிச் செல்லும்படியாக விரட்டப்பட்டன. விடிவதற்குள் குறவர்களின் சாதித் தலைவனும் குறவர்கள் கூட்டமும் அனைவருமாக அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டுப் போய் விட்டனர். பலிக்கு ஆளாகிக் கொலையுண்டவனை அந்த ஊர்களைச் சேர்ந்தவர்கள் மறுநாள் அங்கே கண்டனர். அப்பொழுதிலிருந்து அவர்கள் யாரும் குறவர்களோடு தொடர்பு வைத்துக் கொள்வதில்லை. பலியுண்டவன் முனீஸ்வரனாக மாறி நடுப்பகல் நேரத்திலோ நள்ளிரவு வேளையிலோ பலி தரப்பட்ட இடத்தினை நெருங்குபவர்களைத் தொடர்ந்து நெடுங்காலம் துன்புறுத்தி வந்தான். குறவர்கள் இந்தப் பலியினைத் தங்கள் கால்நடைகளுக்கு நோய்கள் வராமல் காக்கத் தருவதாகக் கூறப்படுகிறது. அவர்கள் பலிதரும்போது தங்கியிருந்த இடம் அதற்கு முன்பும் அந்நாள் வரையும் வளமற்ற பொட்டலாக இருந்ததாகவும் அதன்பின் நல்ல வளமான பூமியாக மாறியதாகவும் கூறப்படுகிறது.

குறி கூறும்போது குறத்திகள் கிராம தேவதைகளின் அருளை வேண்டி வழிபடுவர் எனக் கூறப்படுகிறது. குறி கூற இவர்கள் ஒரு முறத்தினையும் சில அரிசி மணிகளையும் பயன்படுத்துகின்றனர். முறத்தில் இருக்கும் அரிசிகளை எண்ணி, அந்த எண்ணிக்கைக்கு ஏற்ப நலந்தீங்குகளை அறிவிப்பர்.* இவர்கள் தங்களுடன் ஒரு கூடை, முறம், பிரம்பு, மஞ்சளும் பசுஞ்சாணமும் கலந்த கலவையில் சோழிகள் பதிக்கப்பட்ட மூங்கில் பிளாச்சாலான தட்டு ஆகியவற்றை எடுத்துச் செல்வர். கூடை கொலாபுரியம்மனையும் சோழிகள் போலேரம்மனையும் குறிப்பனவாகும். குறி சொல்லும்போது குறத்தி கூடையின் மீது முறத்தை வைத்து அதில் அரிசி, வெற்றிலை, பாக்கு, சோழித்தட்டு ஆகியனவற்றை வைப்பாள். குறி

---

* சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை, 1901. (Madras Census Report, 1901.)

கேட்பவளின் கையினை முறத்தின் மீது நீட்டும்படி சொல்லிப் பிடித்தவளாக எல்லாத் தேவதைகளின் பெயரையும் உரக்க உச்சரிப்பாள். அவ்வப்போது தன் பிரம்பால் குறி கேட்பவளின் கையினைத் தடவுவாள். குறி கேட்பவளிடமிருந்து அவளது பிரச்சினைகளைப் பேச்சுக் கொடுத்துக் கேட்டு அறிந்து கொள்வதில் குறத்திகள் வல்லவர்கள்.

குறவர்களின் திருமணங்களுக்கான நல்ல நாளினைப் பிராமணர்களே குறித்துத் தருகின்றனர். பறையர்களோடும் முகமதியர்களோடும் கூடாவொழுக்கத்தில் ஈடுபட்ட ஆண்களையும் பெண்களையும் தீட்டு நீக்கி மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளும் சடங்கினைச் செட்டிகளை அழைத்து இவர்கள் நடத்துகின்றனர். செருப்பால் அடிபட்டவனை மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளவும் இது போன்ற சடங்கு நடத்தப் படும். இச் சடங்கின்போது குற்றம் புரிந்தவன் நடத்தை பற்றி விசாரித்து அறிந்தபின் இரண்டு ரூபாய் தண்டம் விதிப்பர். இத் தொகையில் எட்டணா செட்டிக்கு உரியதாகும். எஞ்சிய தனைக் கூடியுள்ளவர் சாராயத்திற்காகச் செலவழிப்பர். தனக்குரிய தொகையினைப் பெற்றபின் செட்டி குற்றம் புரிந்தவன் நெற்றியில் விபூதி பூசுவதோடு கூடியுள்ளவர்களுக்கும் விபூதி வழங்குவான். அதன் பின் தீட்டுக்கு உட்பட்டவன் ஆற்றுக்கோ குளத்திற்கோ சென்று குளித்துவிட்டுப் பஞ்சாயத்து அவையினர் முன்வந்து சேர்வான். மீண்டும் அவன் நெற்றியில் செட்டி விபூதி பூசுவான். இறுதியில் விருந்தோடு சடங்கு முடிவுறும். முன்பெல்லாம் பஞ்சாயத்து அவையின் முன் வழக்கு நடக்கும்போது குற்றம் சுமத்துகின்றவன், குற்றம் சுமத்தப்பட்டவன் ஆகிய இருவருடைய கால்களும் பிணைத்துக் கட்டப்பட்டு நிறுத்தப்படுவர். 1907-இல் கொரச்சன் ஒருவன் விதவை ஒருத்தியோடு கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்டதற்காகச் சாதி விலக்கம் பெற்றுள்ளான். சாதி விலக்கச் சடங்கில் குற்றம் புரிந்தவன் தலையினை மொட்டையடித்து, முகம் மழித்து அவன் கழுத்தில் எலும்பு மாலை அணிவித்துக் கழுதைமேல் அமர்த்துவர். மேற்கூறிய வழக்கில் கழுதை கிடைக்கவில்லையாகையால் தினைத்தாளினால் வேயப்பட்ட ஒரு தற்காலிகக் கொட்டகை அமைத்து குற்றவாளியினை அதில்

நுழைந்து செல்லும்படி செய்தபின் அதற்கு நெருப்பிட்டனர். குறவர்களின் ஐந்து குழுக்களைச் சேர்ந்த உறுப்பினர்கள் அனை வருககும் விருந்து அளித்த பின்னரே அவன் மீண்டும் சாதியில் சேர்த்துக் கொள்ளப்படுவான்.

குறவர்களிடையே நிலவும் அரிதான ஒரு வழக்கு அவர் களை அமாவாசை நாளிலும் முழுமதி நாளிலும் குற்றச் செயல் களில் ஈடுபட அனுமதிப்பதில்லை. கொள்ளையடிக்கப் புறப்பட்டுவிட்டபின் அவர்கள் முழு உறுதியுடனும் தீவிரமாக வும் அதில் ஈடுபடுவர். ஒரு குழு இது போலப் பயணம் புறப் பட்டபின் அவர்களுள் ஒருவன் காவேரியாற்றினைக் கடக்கும் போது மூழ்கிவிட்டான். இந்த இழப்பினையோ கெட்ட நிமித் தத்தைப் பற்றியோ கவலைப்படாது தொடர்ந்து சென்று வீடு புகும் முயற்சியில் ஈடுபட்ட அவர்கள் தோல்வியடைய நேர்ந்தது. அவர்கள் மீண்டும் வேறொரு வீட்டினுள் நுழைய முயற்சி மேற்கொண்டனர். அதிலும் தோல்வியே கண்டனர். இவ்வாறு மூன்று இடர்களுக்கு உள்ளான பின்பே அவர்கள் உறுதி குலைந்தவர்களாக இல்லம் திரும்பினர்'' எனத் திருச்சிராப் பள்ளி மாவட்ட விவரக் குறிப்பில் கூறப்பட்டுள்ளது.

குறவர்கள் குற்றச் செயல்களுக்கான பயணத்தை மேற் கொள்ளும் முன் ஏற்படும் நிமித்தங்களின் நன்மை தீமைகளில் மிகுந்த கருத்துச் செலுத்தும் மூடநம்பிக்கை மிகுந்தவர்கள். ஒரு விருந்தினை ஏற்பாடு செய்து நிமித்தம் அறியக் கொலாபுரியம்மன் அல்லது பெருமாளினுடைய உதவியினை நாடுவர். கொம் புகளில் வண்ண நூல்களும் கழுத்தில் வேப்பிலை மாலையும் மஞ்சள் துண்டு ஒன்றும் அணிவிக்கப்பட்ட ஆட்டுக்குட்டியொன் றினை ஊருக்கு ஒதுக்குப்புறமாக உள்ள கோயில் ஒன்றுக்குப் பிடித்துப் போய் அதனைத் தெய்வத்தின்முன் நிறுத்தித் தேங் காய் உடைத்து வழிபட்டபின் தெய்வத்திடம் பயணம் வெற்றி தருமா என நிமித்தம் கேட்பர். அப்போது ஆடு உடல் சிலிர்க்கு மானால் அது உடன்பாட்டின் அடையாளமாகக் கொள்ளப் படும். இல்லையேல் பயணத் திட்டம் கைவிடபபடும். உடல் சிலிர்ப்பதோடு ஆடு மூத்திரமும் பெய்யுமானால் அதனை மிகச்

சிறந்த நன்னிமித்தமாகக் கொள்வர். இச் சமயச் சடங்கிற்குப் பயன்படுத்தப்படும் ஆட்டினுக்கு நல்ல தொகை தருவதனைக் குறவர்கள் நல்ல மரபாகக் கொண்டுள்ளனர். இது போன்ற சடங்கு ஒன்று நிகழ்த்தப்பட்டதான துப்பினை அடிப்படையாகக் கொண்டே 1896-இல் கடப்பை மாவட்டத்தில் நிகழ்ந்த தீவட்டிக் கொள்ளையினை நிகழ்த்தியவர்களைக் கண்டு பிடித்தனர். இவர்களின் இந்தக் கொள்ளை முயற்சி முதலில் வெற்றிகரமாகவே நிகழ்ந்தது. குறவர்கள் கிராமத்தின் நடுவிலிருந்த ஒரு கோமட்டியின் வீட்டினை இடித்து உள்ளே நுழைந்து குறிப்பிடத்தக்க அளவில் நகைகளைக் கவர்ந்து சென்றனர். அந்தக் கோமட்டியின் கை முறிக்கப்பட்டது. அவனும் அவன் குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் தீவட்டிகளால் தாக்கப்பட்டதால் முகத்திலும் உடம்பிலும் தீக்காயத்திற்கு உள்ளாயினர். நிமித்தம் கேட்பதற்கான மற்றொரு முறை, ஒரு கோயிலுக்குச் சென்று கோழி ஒன்றினைப் பலி கொடுத்தபின், பல்லி சொல்லும் திசையினை அறிந்துகொள்வதற்காகக் கோயிலின் முன் அமைதியாக அமர்ந்திருப்பதாகும். நன்னிமித்தம் கிடைக்குமாயின் கொள்ளை மேற்கொள்ள உள்ள உறுப்பினர்கள் தடியோடும் கோடரிகளோடும் செயல் மேற்கொண்டு புறப்படுவர். வண்டிகளைச் சாலையில் தாக்கும் முன் வண்டியில் பயணம் செய்பவர்களிடம் துப்பாக்கிகள் இருக்கின்றதா என்பதனை அறிந்துகொள்ள முதலில் வண்டிகளின் மீது கற்களை வீசுவர். வீடுகளுள் நுழையக் கதவின் தாழ்ப்பாள் அருகே சுவரில் துளையிட்டு உள்நுழைவர். ஒப்பளிக்கப்பட்ட மாவட்டங்களில் வீடுகள் கருங்கற்களால் கட்டப்பட்டிருக்கும். அந்த வீடுகளில் உப்பு மண் கொண்டு மேற்கூரை இடப்பட்டிருக்கும். எனவே பெரும்பாலும் கூரையில் துளையிட்டே இந்த வீடுகளில் நுழைவர். குறவர்கள் வீடுகளின் உரிமையாளர்களிடம் அவர்கள் பொருள்களைப் பதுக்கி வைத்துள்ள இடங்களைப் பற்றிய விவரங்களை அறிய மிகக் கொடுமையான முறைகளையே பெரும்பாலும் கையாள்வர். இந்துக்களின் வழக்கத்தினை பின்பற்றியவர்களாக இவர்களும் தான்றி (*Terminalia belerica*) மரத்தில் சனிபகவானின் ஆவி இருப்பதாக நம்பி அதன் நிழலில் தங்குவதில்லை. இது தொடர்பாக வழங்கப்படும் கதை

வருமாறு. பீமனபுரத்தில் வீமராசன் என்ற அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அவனுடைய மகளான தமயந்தி அழகு மிக்கவளாகை யினால் எல்லாத் தேவர்களும் அவளை விரும்பினர். நளமகா ராசனும் அவளைக் காதலித்தான். தமயந்தி நளனை நேரில் காண வில்லையெனினும், அவன் ஆட்சிச் சிறப்பையும் ஒழுக்க நெறி யினையும் கேள்விப்பட்டே அவன் மீது காதல் கொண்டிருந்தாள். தன் மகளை மணமுடித்துக் கொடுப்பதில் தான் ஒருசார்பு உடை யவனாக நடந்து கொண்டதாக மற்றவர்கள் பழி கூறாமலி ருக்க வேண்டி வீமராசன் எல்லாத் தேவர்களையும் அழைத்துத் தமயந்தி அவர்களுள் யாருக்கு மாலையிடுகின்றாளோ அவனே அவளை மணக்லாம் என அறிவித்தான். குறிப்பிட்ட நாளில் சனி பகவானைத் தவிர மற்றத் தேவர்கள் அனைவரும் வந்து கூடினர். அவனுக்குத் தவிர்க்க இயலாத வகையில் காலதாமதம் ஏற்பட்டுவிட்டது. தேவர்கள் அனைவரும் வட்டமாக அமர்ந் திருந்தனர். ஒரு வண்டு நளமகாராசனைத் தமயந்திக்கு அடை யாளம் காட்டித் தரவே அவள் அவன் கழுத்தில் மாலையினை அணிவித்தாள். அதனை அடுத்து நளன் அவளை மணந்து தன் நாட்டுக்கு அழைத்துக்கொண்டு புறப்பட்டான். வழியில் அவர்கள் சனி பகவானை எதிர்ப்பட்டனர். அவன் அவர்கள் இணைந்து செல்ல நேரிட்ட காரணம் பற்றி விளக்கம் கேட்ட போது அவனுக்கு உண்மை உணர்த்தப்பட்டது. தான் இல்லாமலேயே அந்த மணத்திற்கான சுயவரம் நிகழ்ந்து விட்டதை அறிந்த சனி, கோபம் கொண்டு, அவர்களைப் பிரித்து வைக்கப் போவதாகச் சபதம் செய்தான். அந்தச் சபதத்தை நிறைவேற்ற அவன் அவர்கள் வாழ்வில் பல இன்னல்களை விளைவித்தான். சனியினால் பிடிக்கப்பட்ட நளன் சூதாட் டத்தில் ஈடுபட்டுத் தன் உடமைகள் அனைத்தையும் இழந்தான். தமயந்தியிடமிருந்து பிரிந்த அவன் பல்லாண்டுகள் வறுமையில் வாடினான். சனியின் பீடை ஒரு குறிப்பிட்ட ஆண்டுகளுக்கே ஒருவனுக்குத் தீங்கு உண்டாக்கும். அந்தக் காலம் முடிந்ததும் நளன் பீமனபுரம் சென்று, தன் பிறந்த வீடு சென்றிருந்த தமயந்தியினை மீண்டும் கூடினான். அவளோடு திரும்பும் வழியில் ஒரு தான்றி மரத்தின் அடியில் சனிபகவான் இருப்பதை அவன் கண்டான். நளனிடம் சனிபகவான் அவனுக்கு

ஏற்பட்ட இடர்களுக்கெல்லாம் தானே காரணம் என்ற உண்மையினைக் கூறித் தன் தவறினைப் பொறுத்துக்கொள்ளும்படி வேண்டினான். நள மகாராசன் அவன் குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளாது இனி அவன் தான்றி மரத்திலேயே வாழக்கடவது எனச் சாபமிட்டான். இதனால் சனியின் குறும்புகளின் எல்லை மிகக் குறுகிய வட்டாரத்திற்குட்பட்டதாக அமைந்துவிட்டது. இதனாலேயே நாடோடிகளான பழங்குடிகள் அனைவரும் தான்றி மரத்தின் நிழல் விழும் எல்லைக்கு அப்பாலேயே தங்கள் தங்கும் இடத்தை அமைத்துக் கொள்ளும் வழக்கத்தை மேற்கொண்டு வருகின்றனர். இதே இனத்தைச் சேர்ந்த தான சாரப் பருப்பு (*Terminalia Catappa*) மரம் அதன் அடியில் தங்குபவர்களுக்கு நன்மை செய்யும் என நம்புகின்றனர். அரசு துறந்து, சீதையுடனும் இலக்குவனுடனும் தண்டகாரண்யத்தில் வந்து குடில் அமைத்துத் தங்கிய இராமன் அந்த மரத்தடியிலேயே தனது குடிலை அமைத்துக்கொண்டு தங்கினான்.

குறவர்கள் பார்க்கும் நிமித்தங்கள் பற்றியும் அவர்கள் மேற்கொள்ளும் மூட நம்பிக்கைகள் பற்றியும் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்:-"மூட நம்பிக்கையில் ஊறியவர்களான குறவர்கள் எப்பொழுதும் நிமித்தங்களில் கருத்துடையவர்களாக இருப்பர். கொள்ளையடிப்பதற்காகவோ வீடு புகுந்து திருடவோ புறப்படும் சமயங்களில் நிமித்தங்களில் மிகுந்த கவனம் செலுத்துவர். குல தெய்வத்தைக் குறிப்பிடும் வகையில் ஒரு செங்கல்லினை எடுத்துத் தெய்வமாக நிறுத்தி அதற்கு ஒரு கோழியினையோ ஆட்டினையோ பலியிடுவர், அவ்வாறு பலியிடும் முன் அவற்றின் மீது நீரினைத் தெளிப்பர். அப்பொழுது அவை உடலினைச் சிலிர்க்குமாயின் அதனை நன்னிமித்தமாகக் கருதுவர். அவை உடலை அசைக்காது நிற்குமாயின் அதனைத் தீய நிமித்தமாகக் கொள்வர். பயணம் புறப்படும்போது கைம்பெண்கள், பாற்குடம் ஆகியன எதிரே வருதல், நாய் மூத்திரம் பெய்தல், ஒருவன் எருதினை ஓட்டி வருதல், எருது உக்காரம் இடுதல் ஆகியன நிசழுமேல் அவை தீய நிமித்தங்களாகக் கொள்ளப்படும். இதற்கு மாறாகத் திருட்டில் ஈடுபட்டிருக்கும்போது எருது உக்காரம் இடுதல் மிகுந்த நன்மை விளைவிக்கக் கூடிய

தாகக் கருதப்படும். புறப்படும்போது ஒருவன் எருத்தினை அதட்டித் தாற்றுக் கோலால் விரட்டுதல் நன்னிமித்தமாகவும் திருட்டில் ஈடுபட்டிருக்கும் இடத்தில் இது நிகழுமேல் அது தீய நிமித்தமாகவும் கருதப்படும். வீட்டின் கதவுகளின் மீதும் சுவர்களின் மீதும் மூத்திரத்தைத் தெளித்தல் அந்த வீட்டினை உடைத்து உட்புகுதலை எளிதாக்கும் என நம்புகின்றனர். ஒரு கொள்ளை முயற்சி தோல்வியில் முடியுமாயின் அதற்குக் கண்ணேறு பட்டதும் கருநாக்கின் வாக்குமே காரணம் என்றும், இவற்றின் தீமைகளைக் கண்ணேறும் கருநாக்கும் பலவகைகளில் வெளிப்படுத்திக் காட்டுமெனவும் இவர்கள் நம்புகின்றனர். பயணம் மேற்கொள்வது வீட்டிற் புகுந்து கொள்ளையடிப்பதற்காயிருப்பின் வீட்டினைத் துளைக்கும் கருவியின் முனையில் பஞ்சலோகத்தைப் பொருத்தி எடுத்துச் செல்வதால் கண்ணேறு படுவதால் உண்டாகும் தீங்கினைத் தவிர்க்கலாம் என இவர்கள் நம்புகின்றனர். கருநாக்கின் ஆற்றல் அடிக்கடி தோல்விகள் நிகழக் காரணமாகின்றது. இது மற்றவர்களைப் பற்றித் தீங்காகப் பேசுவதாலும் அல்லது வரப்போகும் துன்பத்தைப் பற்றியே ஓயாது அரற்றிக் கொண்டிருப்பதாலும் நேர்கின்றது. இதனால் விளையும் தீங்கினை விலக்கப் பல வழிமுறைகள் உள்ளன. தரையில் ஒரு மனிதனின் உருவத்தினை மண்ணால் அமைத்து அதன் வாய் மீது முட்களை இடுவர். இந்த மனித உருவமே கருநாக்கு படைத்தவன். அதன் தீங்கிற்கு உள்ளானவர்கள் அந்த உருவத்தைச் சுற்றி வந்து கூச்சலிட்டபடி வாயிலடித்துக் கொண்டு செல்வர். அப்போது இடப்படும் கூச்சல் எவ்வளவுக்கு எவ்வளவு உரக்க வெளிப்படுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு அதிக நன்மையினை அது உண்டாக்கும். ஒரு கோழியின் கழுத்தைப் பாதி அறுத்து அதனை அங்கும் இங்கும் தத்தளித்து ஓடும்படி விடுவதோ அதன் ஆசனவாயில் ஒரு தீக்கொள்ளியினைச் சொருகி வலியால் அதனைத் துன்புற்று அலறும்படி செய்வதோ கருநாக்கின் தீய விளைவுகளுக்கு எதிரான நல்ல பரிகாரம் எனக் கருதப்படுகிறது. கழுத்தின் ஒரு பாதியினை அறுத்தபின் அச்சேவல் கூவுமாயின் அது வர இருக்கும் தீமையினை நீக்கும் நன்னிமித்தமாகக் கொள்ளப்படுகிறது. குறவர்களுடைய வாழ்வோடு பின்னிப் பிணைந்ததாகக் கோழி

அமைந்து விடுகின்றது. சிறுவனாக இருக்கும்போது அவன் தன் தொழிலினைக் கோழிகளைத் திருடுவதிலே தொடங்கிக் கற்றுக் கொள்கின்றான். இளைஞனாக வளமான வாழ்க்கை வாழும்போது அது அவனுக்கு விருந்தாக அமைகின்றது. அத்தோடு அவன் அதனை மேற்கூறியபடி நிமித்தம் முதலியனவற்றைக் கண்டறிய உதவும் கருவியாகவும் பயன்படுத்திக் கொள்கின்றான். ஏழு என்ற எண் தீங்கினைத் தருவதாக இவர்கள் நம்புவதால் கொள்ளைக் குழுவில் எப்பொழுதும் எழுவர் இடம் பெறுவதில்லை. தெலுங்கில் ஏழினைக் குறிக்கும் சொல் அழுவதைக் குறிக்கும் சொல்லினை ஒத்திருப்பதால் இந்த எண் **அதிர்ஷ்டம்** அற்றதாகக் கருதப்படுகிறது. கொள்ளைக்கான பயணத்தில் சிறையிலிருந்து விடுதலையாகி வந்தவனையும் அண்மையில் மணம் புரிந்து கொண்டிருப்பவனையும் இவர்கள் சேர்த்துக் கொள்வதில்லை. சிறையிலிருந்து திரும்பி வந்தவன் பக்கத்தில் உள்ள ஒரு மந்தையிலிருந்து ஓர் ஆட்டுக் குட்டியினைக் கொண்டு வருவானாயின் அவனுக்கு விதிவிலக்குத் தந்து சேர்த்துக் கொள்வர். தனது குறுந்தடியினைக் கொண்டுவர மறந்து போனவனையும் அரிவாள், கோடரி போன்ற கருவிகளை எடுத்து வராதவனையும் குழுவில் சேர்த்துக் கொள்ளாது விட்டுச் செல்வர். கொள்ளையடிக்க எழுவர் செல்வது எப்படி **அதிர்ஷ்டம்** இல்லாதது எனக் கருதப்படுகிறதோ அது போல வீடு புகுந்து திருடவும் எழுவராகச் செல்வதை இவர்கள் **அதிர்ஷ்டம்** இல்லாதது என்றே கருதுகின்றனர். வேறுவழி இல்லாதபோது கன்னக் கோலினை இவர்கள் எட்டாவது ஆளாகப் பாவித்துக் கொள்வர். ஒரு வீட்டினைக் காக்க நாய் இருக்குமானால் அதற்குத் தூளாக்கப்பட்ட கஞ்சா இலை கலந்த சோற்றினை இடுவர். அது அதனை ஆவலோடு தின்று அமைதி அடையும். காடுகளில் தனித்துப் பிரிந்து செல்லும் குழுவினர் மீண்டும் ஒன்று சேர நரிகள் போல ஊளையிடவோ ஆந்தைகள் போல அலறவோ செய்வர். சாலைகளிலும் காடுகளிலும் முன்னே செல்வோர் தாங்கள் செல்லும் வழியினைப் பின்னே வருபவர்களுக்கு உணர்த்த அடையாளமாக ஆவாரை (*Cassia auriculata*) இலைகளை இட்டுச் செல்வர். சாலை பிரியும் இடங்களில் தாங்கள் மேற்கொண்ட

பாதையினை உணர்த்த ஆவாரங் குச்சியின் பெருமுனை அப் பாதை நோக்கி இருக்கும்படியாக ஒரு கல்லின் அடியில் வைத்துச் செல்வர். மலைகளைக் கடந்து செல்கையில் வரிசையாகக் கற்களை ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கி மேற்கொண்ட மலைப் பாதையினைப் புலப்படுத்துவர். இதுபோலக் கொள்ளை மீது சென்ற தங்கள் கணவன்மார் நெடுநாள்கள் திரும்ப வராது போயின் அவர்கள் மனைவிமார் எந்த உயிருக்கும் துன்பம் ஏற்படாத வகையில் குறிபார்ப்பர். ஒரு விளக்கு மாற்றிலிருந்து நீண்ட ஒரு குச்சியினை எடுத்து அதன் ஒரு முனையில் எண்ணெயில் தோய்க்கப்பட்ட பல குச்சிகளை இணைத்து அதனை நீரில் போடுவர். அந்தக் குச்சி மிதக்கு மானால் சென்றவர்களுக்குத் தீங்கேதும் இல்லையென நம்புவர். அது தண்ணீரில் மூழ்குமானால் இருவர் உடனடியாக சென்ற வர்களைத் தேடிப் புறப்படுவர். அவர்கள் எந்தத் திசையில் சென்றுள்ளனர் என்பதனை இவர்கள் முன்பே தெரிந்து வைத் திருப்பதால் அந்தப் பக்கமாகக் கருவேப்பிலை விற்பவர்களைப் போலப் போக்குக் காட்டிச் சென்று தேடுவர். ஆவணி மாதம் பதினெட்டாம் நாள் குற்றங்கள் புரிய மிக அதிர்ஷ்டமான நாள் என்று இவர்கள் நம்புகின்றனர். அன்று வெற்றிகர மாகத் திருட்டை நடத்தி முடித்தால் அது ஆண்டு முழுவதும் நல்ல வெற்றியினை ஈட்டித்தரும் எனவும் நம்புகின்றனர். திருமணங்கள் நடத்த நல்ல நாளாகக் கருதப்படும் ஞாயிற்றுக் கிழமை குற்றச் செயல்களுக்கு நல்ல நாளாகக் கருதப்படுவ தில்லை. திங்கள், புதன், சனி ஆகிய நாள்களை நண்பகல் கழியும் வரை நல்லன அல்ல எனக் கருதுகின்றனர். அமாவா சையினை அடுத்து வரும் பாட்டிமை திதியினையும் நல்ல நாளா கக் கொள்வதில்லை. பிராமணர்கள், கோமட்டிகள் ஆகியோர் வீடுகளில் புகுந்து திருடுவதற்கு வெள்ளிக்கிழமையினை இவர்கள் தேர்ந்தெடுப்பதில்லை. அன்று அந்தச் சாதியினர் அந்த நாளுக் குரிய அங்காளம்மனை வழிபட்டபடி இருப்பர் என்பதே இதற் கான காரணமாகும்.

திரு மெயின்வாரிங் அவர்களால் பரிசோதிக்கப்பட்ட குற வர்களுள் பலரும் ஏதேனும் ஓர் உடல் ஊனம் உடையவர்க

ளாகவே காணப்பட்டனர். ஒருவனுடைய இடது பக்க மூக்குக் கிழிபட்டிருந்தது. அது கள்ளுக்கடையில் நிகழ்ந்த சச்சரவில் இன்னொரு குறவன் கடித்ததால் ஏற்பட்ட குறையென அவன் விளக்கம் தந்தான். அதே போன்ற சச்சரவில் மற்றொருவன் சில பற்களை இழந்திருந்தான். இன்னொருவன் காதுமடல் காணாது போய்விட்டிருந்தது.

குறவர்கள் தலையில் மிகுதியாக நீண்ட முடி உடையவர்களாகக் காணப்படினும் அவர்கள் உடம்பு மயிரற்றதாக வழவழப்பாகவே இருப்பது இவர்கள் உடலமைப்பின் தனிக் கூறாகும். பால் உறுப்புகளிலும் குறைந்த அளவே முடியினைப் பெற்றுள்ள இவர்களுள் ஒரு சிலரே வயிற்றிடத்தில் மிகுதியும் மயிருடையவர்களாக உள்ளனர். நாம் கற்பனை செய்து வைத்திருப்பதுபோலப் பில் சைய்க் (Bill Sykes)கின் குற்றவாளிகளுக்குரியதென வகுக்கப்பட்டிருக்கும் உடல் அமைப்பினைக் கொண்டவர்களாக இவர்கள் இரார். பார்க்க அப்பாவிகள் போலத் தோன்றும் குறவர்கள் கூடக் குற்றவாளிகளாகவே இருப்பர் என்பதனைப் பின்வரும் புள்ளி விவரங்கள் தெளிவுபடுத்தக் காணலாம். 1902-இல் அனந்தபூர் மாவட்டத்தில் 739 குறவர் அல்லது கொரச்சர் நாடோடிகளாகத் திரிவதாகக் காவல்துறை பதிவுகளில் குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களுள் 215 பேர் அதாவது 29 சதவீதத்தினர் ஒரு முறையேனும் குற்றத்திற்காகத் தண்டனை பெற்றுள்ளனர். 1903-இல் நெல்லூர் மாவட்டத்தில் வயது வந்த 54 ஆண்கள் காவல்துறைப் பதிவில் இடம் பெற்றுள்ளனர். இவர்களுள் 24 பேர் அதாவது 44 சதவீதத்தினர் குற்றத்திற்கான தண்டனை பெற்றுள்ளனர். அதே ஆண்டில் சேலம் மாவட்டத்தில் பதிவு பெற்றுள்ள 118 வயது வந்த ஆண்களுள் 38 பேர் அதாவது 32. 2 சதவீதத்தினர் குற்றத் தண்டனைக்குள்ளானவர்களாகப் பதியப்பட்டுள்ளனர். மேலுக்கு வேறு தொழிலில் ஈடுபட்டவர்களாகக் காவலர் கண்காணிப்பில் இடம்பெறாது இவர்களுள் பலர் தப்பியிருக்கலாம். தாங்கள் புரிந்த குற்றத்திற்குத் தண்டனை பெறாது தப்பியவர்களும் இருப்பர் என நாம் கணக்கில் சற்றே கழிவு செய்ய வேண்டும். ஆண்களைப் போலவே பெண்களும் குற்றச் செயல்களில் ஈடுபடுகின்றனர். எனினும் பெண்கள் மிக

அரிதாகவே பிடிபடுகின்றனர். தாங்கள் திருடும் சிறு பொருள்களை அவர்கள் கொஞ்சமும் தயங்காது பெண் குறிகளுள் மறைத்து வைக்கின்றனர். அவ்வாறு இவர்கள் மறைத்துள்ளனரா என அறியச் சிறந்த வழி இவர்களைக் குதிக்கச் செய்தலேயாகும். இம்முறையில் ஒரு விருந்தில் ஒருத்தியின் மறைவிடத்திலிருந்து பொன் நகை ஒன்று வெளிவந்து அவள் தண்டிக்கப்பட்டும் உள்ளாள்.* இம்முறை எப்பொழுதும் வெற்றியுடையதாக அமைந்துவிடுவதில்லை. கோலார் தங்க வயலில் 1901-இல் நடந்ததான ஒரு வழக்குத் தொடர்பாகத் தெரிய வரும் விவரம் வருமாறு:- தங்கக் கலவைக் கட்டி ஒன்றினைத் திருடியவன் என்ற சந்தேகத்திற்கு உள்ளான ஒருவன் வீட்டில் சென்று சோதனை நடத்தியபோது, அவன் அதனைத் தன் மனைவியிடம் தர அவள் அதனை மறைத்துக் கொண்டாள். அவள் சிறுநீர் கழிக்க வீட்டினை விட்டு வெளியே செல்ல வேண்டுமென அனுமதி கேட்கவே அவ்வாறு செல்ல ஒரு காவலரின் துணையொடு அனுப்பி வைக்கப்பட்டாள். அவளோடு சென்ற காவலர் அவள் நடத்தை சந்தேகத்திற்கு இடம் அளிப்பதாக இருப்பதாகக் கூறவே ஒரு பெண்ணைக் கொண்டு அவள் உடலைச் சோதனையிட்டபோது அந்தத் தங்கக் கலவைக்கட்டி அவளுடைய பெண் குறியுள் குறுக்காகச் சொருகி வைக்கப் பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டதோடு, அதனை வெளிப் படுத்த மிகுந்த முய்ற்சியும் மேற்கொள்ள வேண்டியதாயிற்று. குறவர்கள் திருடும் சிறுநகைகளை உடனே வாயிலிட்டு மறைத்துக் கொள்வர். சிலபோது அவற்றை விழுங்கவும் செய்வர். அவ்வாறு விழுங்கினால் பேதி மருந்து குடித்து அதனை வெளிப் படுத்தி மீட்டுக் கொள்வர். வீழுங்கப்பட்ட அரைப்பவுன் தங்கக் காசு ஒன்று சில ஆண்டுகளுக்கு முன் மீட்கப்பட்டது.† ஆண்கள் சிலபோது திருடப்பட்டவற்றை ஆசன வாயில் நுழைத்து ஒளித்து வைப்பர். தஞ்சாவூர் மாவட்டத்தில் இந்த முறையினில் தான திருடியதை மறைத்துக்கொண்டதாகச் சந்தேகிக்கப்

---

* எம். பாப்பா ராவ் நாயுடு - முந்து நூல். (M. Paupa Rao Naidu. *Op. Cit.*)

† முந்து நூல். (*Ibid.*)

பட்ட குறவ கேப்மாறியிடமிருந்து மருத்துவரைக் கொண்டு பரிசோதிக்கச் செய்து 14 அங்குல நீளமுள்ள இரண்டு மெல்லிய தங்கச் சங்கலிகள் வெளிப்படுத்தப்பட்டன. ஆண்களைக் காவலர் கைது செய்வதைத் தடுப்பதில் பெண்கள் பெரும்பங்கு ஆற்றுகின்றனர். "ஒரு குடியிருப்பிற்குக் காவலர்கள் சோதனைக்காகச் செல்லும்போது ஆண்கள் அங்கிருந்து தப்பி ஓடுவர். பெண்கள் அரைகுறை ஆடையோடு காவலர்கள் முன் நாட்டியமாடி அவர்கள் கவனத்தைத் திருப்பப் பார்ப்பர். அதற்குள்ளாக ஆண்கள் அகப்படாதவர்களாகச் சென்று மறைவர். இம்முயற்சியில் பெண்கள் வெற்றி பெறவில்லையாயின் இவர்கள் தங்கள் பெண் குறிகளைக் குருதி வழியும்படியாகக் கீறிவிட்டுக் கொண்டு இறந்தவர்களைப் போலக் காவலர்களுக்குக் குறுக்கே படுத்துக்கொள்வர். இந்த அவலத்தைக் காண நேரிடும் காவலர்கள் குறத்திகளின் முந்தைய தீய நோக்கத்தைப் பற்றிச் சான்றுகள் இருப்பினும் அவர்களுக்கு இந்தத் துன்ப நிலையில் உதவ வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகின்றனர். குறவர்களின் குடிசையினைத் தேட வேண்டிய கட்டாயம் நேரிடும்போது அவ்வாறு தேடி உள்ளே நுழைபவர்களை முதலில் குறத்திகளே எதிர்த்துத் தாக்குவர். கற்கள் கொண்டு அடிக்கத் தயங்காத அவர்கள் சட்டியினையும் அவர்கள் தலையில் போட்டு உடைப்பதுண்டு" என எனக்குத் தெரிவிக்கப்பட்டது.

கடப்பை மாவட்டக் கையேட்டில் பதியப்பட்டுள்ள குறவர்கள் திருட்டு முறை பற்றிய விவரம் வருமாறு:- "யெருகலன் ஒருவன் ஒரு கிராமத்திற்குப் பகலில் பிச்சையெடுக்க வருபவன் போல வந்து அந்த ஊர்ப் பெண்களுள் யார் யார் நகை அணிந்திருக்கின்றரென்பதையும் யார் யாருடைய கணவன்மார் இரவுக் காவலுக்கு வயலுக்குச் செல்கின்றனர் என்பதையும் கணித்தறிந்து கொள்வான். அன்றிரவு அவன் அதே ஊருக்குள் நுழைந்து தூங்கிக் கொண்டிருக்கும் பெண்ணின் மீது எதிர்பாராது பாய்ந்து அவள் காதில் அணிந்து கொண்டிருந்த பெரிய கம்மலைப் பற்றிப் பறித்துச் செல்வான் சில சமயம் இந்த வன்செயல் காரணமாகப் படுத்துத்

தூங்கியபடி இருக்கும் பெண் உயர எழும்படியாகக் இழு படுவதால் காது மடலின் துளையோடு காது அறுந்துவிடும்படியும் ஆகிவிடுவதுண்டு. இந்தக் கொள்ளை முறையினைக் கையாண்டு ஒரே இரவில் அவன் ஒரே ஊரைச் சேர்ந்த மூன்று சிற்றூர்களிலே திருட்டு நிகழ்த்தியுள்ளான். அதில் ஒரே வீட்டினைச் சேர்ந்த இரண்டு பெண்கள் இந்த வகையிலான கம்மல் பறிப்புக்கு ஆளாகியுள்ளனர். ஒரு கம்மல் பறிப்பின் போது காதினைப் பிடித்து மேலே இழுக்கப்பட்ட பெண் மிக உயரமாக மேலே தூக்கப்பட்டுப் பின் காது அறுபட்டவுடன் தரையில் மோதி மண்டையில் பலத்த அடிபட நேர்ந்துள்ளது.'' அண்மைக் காலமாகக் குறவர்கள், வீடுகளில் கொள்ளை அடிப்பதில் புதியதொரு உத்தியினைக் கையாளத் தொடங்கியுள்ளனர். பறிப்பதற்குத் தக்கதான மதிப்புடைய நகைகளை அணிந்திருக்கும் பெண்கள் வாழும் வீட்டினை முதலில் கணித்துக் குறித்துக் கொள்வர். பின்னர் அந்த வீட்டிற்கு வெளியே அதிகாலை நேரத்தில் பதுங்கியிருப்பர். அதிகாலையில் ஆண்கள் வீடுகளை விட்டு வெளிவரும் முன்பு காலைக் கடன்களைக் கழிக்க வீட்டைவிட்டு வெளியே வரும் பெண்களின் காதணிகளையும் பிற நகைகளையும் பறித்துக் கொண்டு அவர்கள் கூச்சலிட்டு ஊராரைக் கூட்டுமுன் ஓடி மறைவர்.* குறவர்கள் அடிக்கடி கையாளும் மற்றொரு உத்தி, ''இராப்பிச்சை போடுங்க தாயே! இராப்பிச்சை போடுங்க தாயே!'' எனக் கேட்டபடி வெளிச்சம் இல்லாத இரவுகளில் வருவதாகும். தான் நகையினைப் பறிக்க முன்பே திட்டமிட்டு வைத்திருக்கும் இல்லத்திற்கு முன் வந்து குரல் கொடுத்து நிற்பான். அந்த வீட்டைச் சேர்ந்த பெண்மனி ஒரு கைப்பிடி அரிசியினைக் கொண்டு வந்து போடும்போது அவன் அவள் தாலி அல்லது கழுத்துச் சங்கிலியை இழுத்துப் பறித்துக் கொண்டவனாக ஓடி மறைவான்.

''திருடப்பட்ட பொருள்களை உரிய விலை கிடைக்குமேல் உடனுக்குடன் விற்று விடுவது குறவர்கள் பழக்கம். ஒரு

---

* காவல் துறை அறிக்கை, 1902. (Police Report, 1902.)

ரூபாய் எடையுள்ள தங்கத்திற்கு இவர்கள் ஒரு ரூபாயினை எதிர்பார்ப்பர். இந்த விற்பனையில் அவர்களுக்கு அதிக இழப்பு ஏதும் ஏற்படுவதில்லை. இவர்கள் தங்கள் வருமானததில் எஞ்சுவதைச் சவரனாக மாற்றிக் கொள்வர். ஒரு முறை குறவர்கள் குடியிருப்பு ஒன்றினைச் சோதனையிட்ட போது, பொதி எருதுகளின் முதுகின்மேல் போடும் சேணத்தின் மடிப்பின் விளிம்பில் அவர்கள் பல சவரன்களை மறைவாகப் பதுக்கி வைத்துத் தைத்திருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. விற்கப்படாத திருட்டுப் பொருள்களைப் பகல் நேரத்தில் புதைத்து வைக்கும் இவர்கள் இரவில் அவற்றை மீண்டும் தங்கள் குடிசைக்கே கொண்டுவந்து வைத்திருந்து, மறுநாள் காலையில் மீண்டும் கொண்டு சென்று புதைப்பர். தங்கள் கழுதைகளைக் கட்டிப்போடும் முளைகளைச் சுற்றியுள்ள தரை, சாம்பல் குவியல், குப்பைக் குழி ஆகியனவும் இவர்கள் பொருள்களைப் புதைக்கும் இடங்களுள் குறிப்பிடத்தக்கவை'' எனத் திரு முல்லலெ கூறுகின்றார்.*

குறவர் கேப்மாறிகள், தங்களை அழகிரிகள், பூசாரிகள் எனக் கூறிக்கொண்டு கரந்து உறைக்கின்றனர். கேப்மாறி, அழகிரி, கத்திரிவாண்டுலு முதலிய பெயர்கள் குற்றம் புரியக் குறவர் மேற்கொள்ளும் வழிமுறைகளின் அடிப்படையில் அமைந்தவை. இந்த முறைகள் அனைத்தையுமே குறவர்கள் மேற்கொள்வர். கேப்மாறி என்பதனைத் தமிழில் தலைப்பாகை மாற்றி என்பர். அழகிரிகள் மதுரைக்கு அருகே உள்ள அழகர்கோயிலில் வழிபாடு நிகழ்த்துவதோடு தப்பான வழிகளில் தங்களுக்குக் கிடைக்கும் பொருளில் குறிப்பிட்ட ஒரு சதவீதத்தினை அக்கோயிலில் காணிக்கையாகச் செலுத்துவதாகவும் வேண்டிக்கொள்பவர்கள். கத்திரிவாண்டுலு கத்தி, கத்தரிக்கோல் முதலியவற்றைப் பயன்படுத்திச் சங்கிலிகளை அறுப்பதோடு பைகளின் கைப்பிடிகள், சட்டைப் பைகள், கைப்பைகள் ஆகியனவற்றை அறுத்துப் பொருள்களைக் கைப்பற்றுபவர்கள்.

குறவர்கள் தாங்கள் உண்ணும் உணவினை நயமுடைய

* முந்து நூல். (*Op. Cit.*)

தாகத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர் எனக் கூறுவதற்கில்லை. பூனை, கோழி, மீன், பன்றி, கருமுகக் குரங்கு (இது தெலுங்கில் கொண்ட முச்சா என வழங்கப்படும்), நரி, வயல் எலி, மான், மறிமான், ஆடு, மறி ஆகிய அனைத்தும் இவர்களுக்கு உணவுப் பொருள்களாகின்றன. "புலவனுக்கு யானையைக் கொடு; குறவனுக்குப் பூனையைக் கொடு" என்ற தமிழ்ப் பழமொழி ஒன்று உள்ளது. கால்நடைகளையோ எருமைகளையோ இவர்கள் இறைச்சியாகப் பயன்படுத்துவதில்லை. இவர்கள் முகமதியர், நாவிதர், வண்ணார், தச்சர், பொற்கொல்லர், கொல்லர், பறையர், சக்கிலியர் ஆகியோரோடு உடனிருந்து உண்பதில்லை. இவர்கள் உடன் உண்ணும் சாதியாருள் தாழ்ந்த படிநிலையில் இருப்பவர்கள் போயர்களே. வசதியிருக்கும்போதும், சமூக நிகழ்ச்சிகளில் சாராயம் வழங்கப்படும்போதும் இவர்கள் தாராளமாகவே குடிப்பர். ஊரவை கூடும்போது வழக்காடுபவர்கள் தங்கள் செலவில் அவையினருக்குச் சாராயம் வழங்கக் கடமைப் பட்டவர்கள். "வறண்டு போன வாயாலே வார்த்தையேதும் பேச வராது" என்ற பழமொழியும் இது தொடர்பாக இவர்களிடையே வழங்குகின்றது. பெரும்பாலான குறவர்கள் கத்தியும் கொடுவாளும் கைக்கொண்டவர்களாக இருப்பர். கொடுவாள் அரிவாளுக்கும் வாளுக்கும் இடைப்பட்டதான அமைப்பு உடையது. இதன் பின்பக்க விளிம்பு கனமானதாக அமைந்திருக்கும். அந்தப் பக்கத்தால் பலமாகத் தாக்கிப் புடைக்கலாம். இதனைக் கொண்டு விலங்குகளை வெட்டுவதோடு, கொலைகளையும் செய்கின்றனர். மூங்கில் பிளப்பதற்கும் இது பயன் படுத்தப்படுகிறது.

வீடுகளின் கதவுகளை உடைத்து உள்ளே நுழைந்து திருடக் குறவர்கள் இரு முனைகளும் கூராக உள்ள காடிக்கோல் அல்லது சில்லுக் கோலு எனப்படும் இரும்பாலான கருவியினைப் பயன் படுத்துவதாகத் திரு முல்லலெ கூறுகின்றார். இவர்கள் குழுவாகக் கொள்ளையிடப் புறப்படுமுன் இக் கருவியினைப் பெருமாளின் முன் வைத்து வணங்கி அவர்கள் மேற்கொள்ளப்போகும் செயலில் வெற்றிகிட்ட அருள்புரியும்படி வேண்டுவர்.

குறவர்கள் எப்பொழுதும் சுறுசுறுப்பாகப் பொதுவாக ஏதேனும் செய்தபடி இருப்பர். நடக்கும்பொழுது இவர்கள் நூல்

முறுக்கியபடி நடப்பதை நாம் பார்க்கலாம். சிலர் மீன் பிடிக்க வலைகளைப் பின்னியவர்களாக இருப்பர். மற்றும் சிலர் வீட்டில் பானைகளைத் தொங்கவிடுவதற்கான உறிகளைப் பின்னியவர் களாக இருப்பர். சிலர் சட்டிபானை வைக்கும் திரிகையினைச் சுற்றிக் கட்டியபடி இருப்பர். சிலர் சோழிகளையும் சிவப்பு நூல்களையும் இணைத்து எருதுகளின் நெற்றி அலங்காரத்திற் கான பட்டிகைகளையும் பணப்பைகளையும் தயாரித்தபடி இருப்பர். இவ்வாறு இவர்கள் தயாரிக்கும் பொருள்களைத் தெருத்தெருவாகச் சென்று கூவி விற்கும் சமயத்தில்தான் தாங்கள் எங்கே எதனைக் கொள்ளையிடலாம் எனக் கணித் தறிவர். பெல்லாரியினைச் சேர்ந்த புகழ்பெற்ற அமெச்சூர் நாடக நடிகரான திரு டி. கிருட்டிணமாச்சாரி அவர்கள் கொரச்சர்களைப் பற்றித் தன் நாடகத்தில் அமைத்துள்ள ஒரு பாட்டு வருமாறு:-

குறவர் சாதி நல்ல சாதி,
எல்லாச் சாதியிலும் நல்ல சாதி.

கோயில் விழாக் கூட்டத்தில் பிச்சை கேட்டு வருவோம்,
அசந்தவர்கள் பொருளை அமுக்கிகிட்டுப் போவோம்.
எதுக்கும் நாங்கள் அஞ்சோம்,
எல்லோருக்கும் டிமிக்கி கொடுப்போம்
(குறவர் சாதி)

அம்மா இடுப்பில் உள்ள குழந்தை கழுத்து நகையை
அறுத்து எடுத்துச் செல்வோம்.
எங்க மேலே எவனும் எப்படிச் சந்தேகப்படுவான்?
எல்லோரையும் ஏமாற்றி ஏப்பம் விட்டுவிடுவோம்
(குறவர் சாதி)

ஒருநாள் அந்தப் பெரிய காவல்காரன்,
ஊரை எல்லாம் சலிச்சு எங்க உசிரை எடுப்பான்.
உளறிக் குளறிக் கொட்டோம். ஊமைபோல இருப்போம்.
தப்பு என்ன செஞ்சோம்; சாமி சொல்லிப்போடு என்போம்.
(குறவர் சாதி)

ஒரு திருடனைப் பிடிக்க மற்றொரு திருடனை ஏற்பாடு செய்வதே சிறந்தது என்ற விதிப்படி தென் மாவட்டங்களில்

பெரும்பாலும் குறவர்களே காவல்காரர்களாகக் கிராமப் புறங்களில் அமர்த்தப்படுகின்றனர். இதற்காக இவர்கள் ஆண்டுக்கு இவ்வளவு எனத் தானியம் பெறுவர். இவர்களிடம் கிராம மக்கள் கொண்டுள்ள அச்சமே அவர்கள் இவர்களை இது போலப் பணியில் அமர்த்தக் காரணமாகின்றது. முன்பே பேசி முடிவு செய்யப்பட்டபடி காவல்காரர்களுக்கு உரிய காலத்தில் ஊதியம் தரப்படவில்லையானால் அந்த ஊரில் ஒரு வீட்டில் உடனே களவு போகும். குறவன் காவல்காரனாக நியமிக்கப் பட்டுள்ள ஓர் ஊரில் ஒரு திருட்டு நடக்குமேல் அவன் எப்படி யேனும் களவுபோன பொருளை மீட்டுக் கொண்டு வந்து சேர்ப்பான். அவ்வாறு கொண்டு வருவதற்கு முன் எக்காரணம் கொண்டும் அக்களவு பற்றிக் காவல் துறையில் புகார் செய்யக் கூடாது என்று ஏற்பாடு செய்து கொள்ளப்படும்.

குறவர்கள் தாழ்வான மண் சுவராலான கூரை வேயப் பட்ட குடிசைகளில் வாழ்கின்றனர். நாடோடிகளாகத் திரியும் குறவர்கள் 'குடிசெ' எனப்படும் தற்காலிகக் குடிசையினைப் பாய்கள், தென்னோலை ஆகியன கொண்டு நான்கு அடி உயரத் திற்கு மேற்படாத வகையில் அமைத்துக் கொள்வர். மூங்கில் களைக் குறுக்கும் நெடுக்குமாக வைத்துக் கட்டி மற்றொரு மூங்கிலை வெளி விளிம்பாக வைத்து அதில் பாய்களைத் தொங்க விடுவர்.

பெற்றோரே குறவர்களிடையே திருமண ஏற்பாட்டைச் செய்து வைக்கின்றனர். மண வயதினை எட்டிய ஓர் இளை ஞனின் தந்தை அந்த வட்டாரத்தைச் சேர்ந்த பெரியவர்கள் சிலரை உடன் அழைத்துக் கொண்டு பெண் தேடிச் செல்வான். அவர்கள் பெண் கேட்டுச் செல்லும் குடும்பத்தார் பெண் தர ஒப்புக் கொள்வார்களானால் சாதித் தலைவனுக்கு ஆள் அனுப்பி வரவழைத்து எல்லோருமாகக் கள்ளுக்கடைக்குச் செல்வர். அங்கு மணமகனின் தந்தை ஒரு மொந்தையில் கள்ளினை நிரப்பி அதனை மணமகளின் தந்தையிடம்கொடுத்து, 'நான் இதனை உனக்கு எதற்காகக் கொடுக்கின்றேன் தெரி யுமா?' எனக் கேட்பான். அதற்கு அவன், 'நான் உனக்கு என்

மகளைத் தருவதாக வாக்குத் தந்துள்ளேன். அவள் நல்லபடியாக வாழட்டும்' எனக் கூறி அதனைக் குடிப்பான். பிறகு மொந்தை மறுபடியும் நிரப்பப்பட்டுச் சாதித் தலைவனிடம் தரப்படும். அவன் அதனை வாங்கிக் கொண்டு, 'நான் எதற்காக இதனைக் குடிக்க வேண்டும்?' எனக் கேட்பான். அதற்கு அவன், 'நான் என் மகளை ...... மகனுக்கு தரப் போகின்றேன். அவள் நல்லபடியாக வாழட்டும் என்று குடி' எனக் கூறுவான். அங்குக் கூடியுள்ள அனைவரும் தகுதி வரிசைப்படி குடித்து முடிக்கும்வரை இதுபோலக் கேள்விகளும் பதில்களும் நிகழ்ந்தபடி இருக்கும். இவ்வாறு திருமண உறுதிச் சடங்கில் குடிக்கும் அனைவரும் இந்தத் திருமண ஒப்பந்தத்திற்குச் சாட்சிகள் ஆவர். இதுபோலக் குடிக்கும் சடங்கு முடிந்தவுடன் அனைவரும் மணமகள் இல்லம் செல்வர். அங்கு விருந்து நடைபெறும். அந்த விருந்து முடிந்தவுடன் மணமகன் வீட்டார் மணமகளுக்குத் தாய்மாமன் இருக்கின்றானா எனக் கேட்டறிவர். அவளுக்குத் தாய்மாமன் இருப்பானாகில் பெண்ணின் விலையான 101 மதா (202 ரூபாய்) வினை அவன் மணமகன் வீட்டாரிடமிருந்து பெறுவதற்கு உரியவன். மணமகன் வீட்டார் ஏழைகளாயினும பணக்கார்ரராயினும் இந்தத் தொகையின் அளவு மாறுபடுதலில்லை. எனினும் இந்தத் தொகை முழுவதுமாக ஒருபோதும் செலுத்தப்படுவதில்லை. பகுதி பகுதியாக ஒரு சில தவணைகள் மட்டும் செலுத்தப்படும். குறவர்களிடையே இது பற்றிய சச்சரவு தீராததொன்றாக இருந்து கொண்டே இருக்கும். மண உறவு கொள்ளும் குடுமபத்தினர் தங்களுக்குள் நல்ல உறவு கொண்டவர்களாகப் பழகி வருபவர்களாக இருந்தால் மணமகனாகதற்குரியவன் பெண்ணின் தாய்மாமனால் நன்கு உபசரிக்கப்பட்டபின்னும் மணமகனைப் பெண்ணின் தாய்மாமன் நன்கு உபசரித்த பின்னும் ஒரு சுற்றுக் குடித்து முடிந்தவுடன் மணமகன் 'மச்சான்! இன்று நான் உனக்கு இரண்டு மதா கொடுத்துவிட்டேன். இதனை 'வோளி' தொகையிலிருந்து கழித்துக் கொள்' எனக் கூறுவான். மணம் உறுதி செய்யப்பட்டபின் மணமகள் தாய்மாமனுக்கு நான்கணா அச்சாரமாகத் தந்துவிட்டு அனைவருட் கலைந்து செல்வர். இரு வீட்டாரும் மணம் நடத்துவதற்குரிய நாளினைத்

தங்கள் வசதிக்கு ஏற்ப இது என முடிவு செய்யும் வரை மீண்டும் இவர்கள் கூட வாய்ப்பு இல்லை. சிலபோது மணமக்கள் குழந்தைகளாக இருப்பர் அல்லது பெண் பருவம் அடையாதவளாக இருப்பாள் அல்லது மணமகன் ஆவதற்குரியவன் அயலூர் சென்றிருப்பான். இந்தத் தடைகள் நீக்கப்பட்ட பின்னரே மணநாள் உறுதி செய்யப்படும். மணம் உறுதி செய்யப்பட்ட பின் பெண்ணின் பெற்றோர் எக்காரணம் கொண்டும் அந்த மண உறவினைத் தவிர்க்க அனுமதிக்கப்பட மாட்டார்கள். அவ்வாறு செய்ய அவர்கள் முற்பட்டால் மணமகன் வீட்டார் மண உறுதிச் சடங்கின்போது வந்திருந்தவர்களை மீண்டும் கூட்டுவர். அவர்களுள் இரண்டாவதாக மொந்தையில் கள் குடித்தவன் (சாதித் தலைவன்) பெண்ணின் தந்தையினைப் பார்த்து அவன் மண உடன்பாட்டிலிருந்து விலகிச் செல்வதற்கான காரணம் என்ன என்று விளக்கம் கேட்பான். எந்தப் பதிலும் தக்க விளக்கமாக ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இந்தக் குற்றத்திற்காகப் பெண்ணின் தந்தைக்கு முந்நூறு வராகன் (ஒரு வராகனின் மதிப்பு மூன்று ரூபாய் எட்டணாவாகும்) தண்டம் விதிக்கப்படும். இந்தத் தொகையும் பெண்ணின் விலையான 101 மதாக்களைப் போல எப்பொழுதும் முழுவதுமாகச் செலுத்தப்படுவதில்லை. எனினும் இவ்வாறு தண்டம் விதிக்கப்படுபவன் தண்டம் செலுத்தப்பட வேண்டியவனுக்கு தொடர்ந்து தாழ்ந்த நிலையில் உள்ளனவாகவே கருதப்படுவான். இதன்பின் இவர்கள் கடன் கொடுத்தவனும் கடன் பட்டவனும் போல நடந்துகொள்வர். இவர்களிடையே சச்சரவுகள் நிகழும் போதெல்லாம் முன்னவன் பின்னவனை அவன் தனக்குப் பட்டுள்ள கடனைச் சுட்டிக்காட்டிக் குத்தலாகப் பேசுவான். இந்த நிலை பல தலைமுறைகள் வரை கூடத் தொடர்ந்து நீடிக்கும். குறவர்கள் சண்டையும் இடையர்கள் சண்டையும் என்றும் முடிவுறுவதில்லை என்ற பொருள்படும்படியான தமிழ்ப் பழமொழி ஒன்றும் உள்ளது. மண உறுதி செய்து முடித்தபின் இரு வீட்டாரும் மணம் நிகழ்த்த முன்வரும்போது மணமகளின் தாய்மாமனுக்கு பெண்ணின் விலைக்கான தொகையில் முதல் தவணையாக ஐந்து வராகன் செலுத்தப்படும். ஒரு பிராமணப் புரோகிதரைக் கொண்டு

மணத்திற்கான நல்லநேரத்தினை முடிவுசெய்வர். முடிவு செய்யப் பட்ட நேரத்தில் இருவீட்டாரும் மணமகள் வீட்டில் கூடுவர். முதல் நாள், விருந்திலும் குடியிலும் கழியும். அதற்கு அடுத்த நாள் மீண்டும் விருந்து நடக்கும். அதன்பின் மணமக்களைக் கொஞ்சம் அரிசி பரப்பப்பட்டுள்ள கம்பளியின் மீது அமரச் செய்வர். விருந்தினர்கள் அவர்களைச் சுற்றிலும் வட்டமாகக் கூடி நிற்பர். நல்ல நேரம் நெருங்கியவுடன் மணமகன் கறுப்புப் பாசிமணி மாலையொன்றினை மணமகள் கழுத்தில் அணிவிப்பான். அதனை அவன் கட்டும்போது கூடியுள்ள பெண்கள் தங்கள் கைகளைக் குறுக்காக நீட்டியபடி அவர்கள் தலைமீது அரிசியினைத் தூவுவர். இவ்வாறு தூவு வதற்குரிய அரிசி முன்பே தயாரித்து வைக்கப்பட்டிருக்கும். ஐந்து சேர் அரிசி, ஐந்து மஞ்சள் துண்டுகள், கொப்பரைத் தேங்காய், உலர்ந்த பேரிச்சம்பழம், வெல்லம், ஐந்து வெள்ளி அல்லது செப்புக் காசுகள் ஆகியன கொண்ட கலவையாக இதனைத் தயாரிப்பர். இந்த அரிசியினைத் தூவும்போது கரகரப்பான குரலில் பின்வருமாறு பாடுவர்:-

ஐந்து பொதி எருதுகளை வாங்கு.
ஐந்து வெள்ளாடுகளைக் கட்டிக் காப்பாற்று.
ஒரு சேர் வெள்ளி, ஒரு சேர் தங்கம் சம்பாதிப்பாயாக!
உன் தந்தை மீது அன்பு செலுத்துவாயாக!
என்றென்றும் மகிழ்ச்சியில் திளைத்து வாழ்வாயாக!
உன் அம்மாவையும் அப்பாவையும்
மாமியாரையும் நன்றாகக் கவனித்துக் கொள்.
மற்றவர்கள் சொல்வதைப் பற்றிக் கவலைப்படாதே.
உறவினர்களை நன்கு உபசரிப்பாயாக!
மேலேயுள்ள தெய்வம்
உனக்குக் குடும்ப வாழ்வில் மகிழ்ச்சியைத் தரும்.
ஐந்து ஆண்களையும் நான்கு பெண்களையும்
கொண்டதாக உன் குடும்பம் இருக்கட்டும்.

குடும்பத்தில் பெண்களைவிட ஆண்கள் எண்ணிக்கையில் மிகுதியாக இருக்கவேண்டும் என்றே இவர்கள் எப்போதும்

விரும்புகின்றனர். ஐந்து ஆண்களும் நான்கு பெண்களுமாக ஒன்பது உறுப்பினர்கள் ஒன்பது என்ற மந்திர ஆற்றலுடைய எண்ணுக்கு உரிய கூட்டுத் தொகையினைத் தருவதால் இவ்வாறு ஐந்த ஆணும் நான்கு பெண்ணும் எனக் கொள்கின்றனர்.

கைம்பெண்கள், மறுமணம் புரிந்துகொண்டவர்கள், பரத்தையராக நேர்ந்து விடப்பட்ட பெண்கள் ஆகியோர் மணமக்களுக்குத் தீங்கினைத் தருவர் என்ற காரணத்தால் மணமக்களைச் சுற்றி நிற்கும் பெண்கள் கூட்டத்தில் சேர்ந்து கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. கைம்பெண்களும் மறுமணம் செய்துகொண்டவர்களும் ஒரு கணவனை இழந்தவர்களாதலாலும், பரத்தையர் அவளை நேர்ந்து பணி செய்ய விடப்பட்ட கடவுளை அறியாதவர்களாதலாலும் இவர்கள் மணமகளின் முன்வர அனுமதிக்கப்படுவதில்லை. மூன்றாம் நாள் அரிசி தூவும் சடங்கு மீண்டும் நடத்தப்படும். இம்முறை, பெண்கள் தங்கள் மேல் அரிசி தூவத் தொடங்குமுன், மணமக்கள் ஒருவர் மீது ஒருவர் அரிசி தூவிக் கொள்வர். இத்தோடு மணச் சடங்குகள் முடிவுறும். பிற வகுப்பார் சிலரிடையே இருக்கும் வழக்கத்தைப் போலவே குறவர் சாதி மணமக்களும் குறைந்தது மூன்று மாதங்கள் உடல்உறவு கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. ஓராண்டுக்குள் ஒரு வீட்டு வாசற்படி வழியே புதிதாக மூன்று தலைகள் நுழையக் கூடாது என்ற மூட நம்பிக்கையில் இவர்கள் உறுதியாக இருப்பதால் இவ்வாறு மணமக்கள் உடல்உறவு கொள்ள அனுமதிக்கப்படுவதில்லை. மணமகளும் மணமகனும் புதிய வீட்டில் முதன்முதலாக நுழைபவர்களாக இருப்பர். ஓராண்டிற்குள் குழந்தை பிறக்குமானால் அவர்கள் வீட்டில் அது மூன்றாவது உறுப்பினராக இருக்க வேண்டியதாகிவிடும். இத்தகைய விரும்பத்தகாத நிகழ்ச்சியினை மணமக்கள் தங்களிடையே உறவு கொள்வதைத் தள்ளி வைப்பதால் தவிர்த்து விடலாம். உரிய கால இடைவெளி கழிந்த பின் போலியாக மணமகன் குடிசைக்கு வர வெட்கப்பட்டவளாகப் பிடிவாதம் செய்யும் மணமகளை அவளுடைய பெண் உறவினர்கள் அங்குக் கொண்டு சேர்ப்பர். வழியில் அவர்கள் மகிழ்ச்சியினைத் தரும் விரசமான பாடல்களையும் கதைகளையும் பேசுவதில் ..டுபடுவர்.

மிகவும் பிடிவாதத்துடன் மணமகன் குடிசையில் நுழைய மறுக்கும் மணமகளை, அவ்வப்போது பிடித்துத் தள்ளியபடி கொண்டுபோய், இறுதியில் மணமகன் குடிசையுள் அவளைத் தள்ளிவிட்டு அவளுடன் சென்ற பெண்கள் திரும்புவர்.

இவர்களுடைய மற்றொரு விதமான மணச் சடங்குகள் தொடர்பான பின்வரும் விவரங்களும் குறிப்பிடத்தக்கவை:- மணமகன் ஒரு சனிக்கிழமையில் மணமகள் குடியிருப்புக்குச் செல்வான். அங்கு மணமகள் குடிசை அருகே அவனுக்காகத் தனியே ஒரு குடிசை ஒதுக்கித் தரப்படும். இந்த இரண்டு குடிசைகளும் கிழக்குப் பார்த்தனவாக இருத்தல் வேண்டும். அதற்கு மறுநாள் சாதித் தலைவனோ வயதான ஒரு பெரியவரோ வெற்றிலை, பூ, கங்கணம் ஆகியன உள்ள ஒரு கூடையினைக் கொண்டு வருவர். அவர் மணமக்கள் கரத்தில் கங்கணத்தை அணிவிப்பார். ஓர் உலக்கை, ஒரு குழவி, ஒரு கடப்பாரை ஆகியனவற்றுக்கும் கங்கணம் அணிவிக்கப்படும். அடுத்துக் குழந்தைகள் உட்படக் கூடியுள்ள அனைவருக்கும் அரிசி வழங்கப்படும். பன்றி இறைச்சி, ஆட்டு இறைச்சி ஆகியனவும் கூடியுள்ளவர்களிடையே வழங்கப்படும். மாலைநேரம் நெருங்கும் போது திருமணமான பெண்கள் பித்தளைத் தட்டு ஒன்றினைத் தட்டியவர்களாக மேற்கட்டியொன்றின் கீழ் மூன்று பானைகளை எடுத்துக் கொண்டு ஒரு கிணற்றுக்கோ குளத்துக்கோ சென்று, தண்ணீர் கொண்டு வந்து அந்த பானைகளைப் பால்கம்பத்தின் அருகே வைப்பர். மணமகள் ஒரு மணைப்பலகையில் அமர்வாள். மணமகனை அவனுடைய மைத்துனன் தோளில் சுமந்து வந்து மற்றொரு மணைப்பலகையில் அமர்த்துவான். மணமான பெண்கள் மூவரும் சில வயதான ஆண்களும் அதன்பின் அவர்கள் தலைமீது அரிசியினைத் தூவுவர். அப்போது பின்வரும் அமைப்புடைய வாழ்த்துத் திரும்பத் திரும்பக் கூறப்படும். "நான்கு இணைக் கழுதைகளைப் பெற முயலுங்கள். கூடச் சில பன்றிகளையும் கால்நடைகளையும் பெறுவீர்களாக. அன்போடும் நலத்தோடும் வாழுங்கள். உங்கள் விருந்தினர்களுக்கு வயிறார உணவிடுங்கள். அறிவு கூடிவரப் பெற்ற வாழ்க்கையை வாழுங்கள்." அதன்பின் மணமக்கள் மணமகள் குடிசைக்கு அழைத்துச்

செல்லப்படுவர். அந்தக் குடிசையின் வாசலை மணமான பெண்கள் பலர் வழிமறித்து நிற்பர். மணமகன் மணமகளின் பெயரினைச் சரியாகக் கூறிய பின்னரே வழிவிட்டு விலகுவர். குடிசையினுள் சென்றபின் மணமக்கள் ஒருவருக்கொருவர் மும்முறை சோறூட்டிக் கொள்வர். அவர்கள் உண்டபின் எஞ்சியிருப்பதை மணமான சில ஆண்களும் பெண்களும் உண்பர். அன்றிரவு மணமக்களும் மணமகளின் தோழியும் மாப்பிள்ளைத் தோழனும் மணமகள் குடிசையிலேயே உறங்குவர். அதற்கு மறுநாள் ஒரு விருந்து நடத்துவர். அதில் ஒவ்வொரு வீட்டிலிருந்தும் குறைந்தது மணமான ஒருத்தியாவது வந்து பங்குகொள்ள வேண்டும். அன்று மாலை மணமகன் மணமகளைத் தன் குடிசைக்கு அழைத்துச் செல்வான். அவர்கள் புறப்படும்போது மணமகள் சேலையில் அவள் தாயார் கொஞ்சம் அரிசியினை முடிச்சிட்டு விடுவாள். மணமகன் குடிசை வாசலில் கொலாபுரியம்மா கூடை எனப்படும் ஒரு கூடை வைக்கப்பட்டிருக்கும். அதன்மீது ஒரு முறத்தினை வைத்து, மணமகள் தனக்குக் கொடுக்கப்பட்ட அரிசியினை அதில் கொட்டுவாள். அந்த அரிசியினை அதன்பின் மணமகன் உரலில் இடுவான். அவனும் மணமகளும் குழவியாலும் கடப்பாரையாலும் அதனை இடித்து மாவாக்குவர். மணமகன் அதன்பின் மணமகள் கழுத்தில் தாலியினைக் கட்டுவான்.

குறவர்கள் திருமணம் பற்றித் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்:- ஒரு பெண்ணின் தாய்மாமன் மகன் அவளை மணந்துகொள்ள உரிமை கொண்டாடலாம். அவளை வேறொருவனுக்கு மணம் முடித்து வைத்து அவன் உரிமை பறிக்கப்படுமானால் அவனோ அவனுடைய தந்தையோ அவளை மணந்து கொண்டவனிடமிருந்து தண்டத்தொகை பெறும் உரிமை உடையவர்களாவர். பெண்ணின் தாய்மாமனே அவளை யாருக்கு மணம் முடித்துத் தருவது என்பதனை முடிவு செய்பவன். கோயமுத்தூர் மாவட்டத்தில் பெண்ணின் தந்தையே அத்தகைய முடிவினை மேற்கொள்ளும் உரிமை உடையவன். மணம் செய்து கொடுத்த தன் மகளை அவளுடைய கணவனிடமிருந்து பிரித்து அதிகமாகப் பரிசப் பணம் தரும்

வேறொருவனுக்கு அவளைக் கட்டித் தரும் உரிமைகூட அவள் தந்தைக்கு உண்டு எனக் கூறப்படுகின்றது. மண நிகழ்ச்சிக்கு முன் மண உறுதிச் சடங்கு வெற்றிலை, கள் ஆகியன வழங்குவ தோடு நிகழும். அவளுடைய தாய்மாமனோ தந்தையோ கூறும் ஓர் உறுதி மொழியினை அப்படியே சொல்லுக்கு சொல் பெண் வீட்டினைச் சேர்ந்தவர்கள் திரும்பக் கூறுவர். அப்போது அவன் பெண்ணைக் குறிப்பிட்ட ஒரு தொகைக்குத் தர விரும்புவ தாகவும்அவள் உடலில் எத்தகைய காயங்களுக்கு ஆட்படவோ கூந்தல் கத்தரிப்புக்கு உட்படவோ கூடாது எனவும் கூறுவான். அவ்வாறு அவள் உடற்குறை உடையவளாகத் திரும்ப அனுப்பப் பட்டால் அதற்கேற்பவே முடிவு செய்யப்பட்ட தொகை திரும்ப வழங்கப்படும் என்பான். குறவர்கள் பெரும்பாலும் அடிக்கடி கூடிக் களிக்கின்ற கள்ளுக்கடையிலேயே சிலபோது மண உறுதிச் சடங்குகள் நடத்தப்படுகின்றது எனவும் கூறப்படுகின்றது. அங்கு மணமகன் வீட்டினைச் சேர்ந்தவர்கள் ஒரு மொந்தையில் கள்ளினைப் பெண் வீட்டாருக்கு வாங்கி வழங்குவர். அவர்கள் அதனைக் குடித்து முடிப்பது மண ஒப்பந்தத்தை உறுதி செய் கின்றது. இதன்பின் பெண்ணின் தந்தை மணமகளுக்கு உரிய விலையோடு கூட அவளுக்குப் பிறக்கப்போகும் ஒவ்வொரு ஆண் குழந்தைக்கும் இரண்டு ரூபாய்களும் ஒவ்வொரு பெண் குழந்தைக்கும் நான்கு ரூபாய்களும் வழங்கக் கடமைப்பட்டவன். ரங்கு எனக் கூறப்படும் இந்தத் தண்டத்தொகை உடனே தரப் பட வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஒரு சில குழந்தைகள் பிறந்த பின்னரே இதனைச் செலுத்த வேண்டியவனாவான். மணநாள் - பெரும்பாலும் இது ஞாயிற்றுக்கிழமையாகவே இருக்கும் - ஒரு பிராமணனால் முடிவு செய்யப்படும். அதற்காக அவனுக்கு வெற்றில் பாக்கு, தேங்காய், ஒரு ரூபாய் அல்லது அதற்குக் குறைவான தொகை தரப்படும். மணத்திற்கான நல்ல நாளினையும், நல்ல நேரத்தினையும் அவன் குறித்துத் தருவான். மணமக்கள் அன்றிரவே உறவு கொள்ள உதவியாக இருக்கும்படி மணத்திற்கு உரிய நேரத்தினைப் பெரும்பாலும் முன் மாலைப் பொழுதாக அமைத்துக் கொள்வர். மணநாளுக்குச் சில நாள் கள் முன்பு இரண்டு மணமாகாத இளைஞர்கள் நாவல் மரததின் கிளை ஒன்றினை வெட்டி அதனை ஒரு குளத்திலோ ஆற்றிலோ

இடுவர். அங்கு அது மணநாள் வரை கிடக்கும். மணநாளன்று அந்த இரண்டு இளைஞர்களும் அதனைக் கொண்டுவந்து மணமகள் வீட்டருகே நட்டுவைப்பர். அதன் இரண்டு பக்கங்களிலும் அக்கிளை போடப்பட்டிருந்த குளத்திலோ ஆற்றிலோ இருந்து மணமான பெண்கள் மேற்கட்டியின் கீழ் இரண்டு பானைகளில் தண்ணீர் கொண்டுவந்து வைப்பர். அந்த இரண்டு பானைகளின் வாயினையும் மண்பானை கொண்டு மூடி அவற்றின் மேல் விளக்கு ஏற்றி வைப்பர். மணமகளும் மணமகனும் தரையில் விரிக்கப்பட்டிருக்கும் கழுதைச் சேணத்தின் மீது அமர்வர். அவர்களுக்கு நலங்குச் சடங்கு நிகழ்த்தப்படும். அப்போது அவர்கள் கைகளிலும் கால் களிலும் மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த சிவப்புச் சாந்து பூசப் படும். கூடியுள்ள பெரியவர்கள் மணமக்களை வாழ்த்தி அவர் கள் மீது கைகளைக் குறுக்காக வைத்தபடி அரிசியைத் தூவுவர். அப்போது தொடர்ந்து பெண்கள் பின்வரும் கருத்துடைய பாடலை ஒரே சீரான குரலில் கூறியபடி இருப்பர்.

கலியாணமே, வைபோகமே, சோபனமே!
ஓ! மகிழ்ச்சியும் வளமும் தரும் கல்யாணமே;
மதனப்பள்ளி நல்லெண்ணெயில் நலங்கிடுவோம்;
சிறந்த சிலகாட்டுச் சீவக்காயால் நலங்கிடுவோம்;
பெண்களே நல்ல பல வண்ணங்களைப் பூசிடுங்கள்;
ஆண்களே ஆடைகளைச் சாயத்தில் தோய்த்திடுங்கள்.
அடே, தம்பி! அந்தப் பச்சைப் பசேலென்றிருக்கும்
பாம்பைக் கொண்டு வா!
அதை நம் பசவய்யாவின் கழுத்திலிடுவோம்.
அட தம்பிகளே!
இலைகளின்றி பூக்களைமட்டும் கொணருங்கள்
அந்த மலர்களால் மணமகளின் கூந்தலை அலங்கரியுங்கள்.

அதன்பின் மணமகன் மணமகள் கழுத்தில் மஞ்சள் பூசப் பட்ட நூல் கயிற்றினையோ கறுப்புப் பாசிமணி மாலையி னையோ தாலியாக அணிவிப்பான். திருமணமான பெண்கள் எல்லோரும் கறுப்புப் பாசிமணி மாலையும் கண்ணாடி

வளையல்களும் அணிந்தவர்களாக இருக்க வேண்டும். அவர்கள் கைம்பெண்கள் ஆகும்போது இவற்றைக் களைந்தாக வேண்டும். திருமணத்தில் தவிர்க்க இயலாத ஒரு நிகழ்ச்சி 'பெண்டிலுகூடு' எனப்படும் கல்யாண விருந்தாகும். நலங்கு நிகழ்த்தியபின் மண மகன் ஒரு கடப்பாரையினைக் கொண்டு இந்த விருந்துக்காகச் சோறு, பால், பாசிப் பயறு, வெல்லம் ஆகியன கொண்டு தயா ரிக்கப்படும் உணவுக்காக அடுப்பிட்டுச் சமைக்கும் பூபவகுண்ட என்ற இடத்தினை வரையறை செய்வான். அந்த இடத்தில் ஒரு குழி தோண்டி அதன்மீது சமையல் பாத்திரங்கள் வைத்துச் சமைப்பர். சமைத்து முடித்ததும் மணமகளும் மணமகனும் அந்த உணவிலிருந்து ஒவ்வொருவரும் மூன்றுபிடி சோறு எடுத் துக் கொண்டபின், கூடியுள்ள சிறுவர்களும் சிறுமிகளும் அந்தச் சோறுள்ள பாத்திரத்தினை அவர்களிடமிருந்து பறித்துச் செல்வர். அதன்பின் மணமக்கள் மணமகன் குடிசைக்குச் சென்று சேர்வர். அங்கு அவர்கள் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருக்கக் காண்பர். அவர்கள் குடிசையில் நுழையும்போது பெரியவர்கள் மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த நீரால் ஆரத்தி எடுப்பர்.

விசாகப்பட்டினம் மாவட்டத்தைச் சேர்ந்த யெருகலர் திரு மணம் பற்றிய பின்வரும் குறிப்புகளுக்கு நான் திரு ஹயவதன ராவிற்குக் கடப்பாடுடையேன். ஒருவன் தன் மாமன்மகளையோ அத்தைமகளையோ மணந்து கொள்ளலாம். மணமகனா வதற்குரியவன் தந்தை 'சுல்லபொன்' எனப்படும் பத்து ரூபா யினைக் கையோடு கொண்டுபோய் அதனை அங்குக் கூடியிருக் கும் பெரியவர்களுள் ஒருவரிடம் தருவான். அன்று மாலை நெருங்கும்போது மணப்பெண்ணின் குடிசை முன் உள்ள தரை கூட்டிச் சுத்தம் செய்யப்பட்டபின் ஒரு மரப் பலகையும் ஒரு கல்லும் அருகருகே இடப்படும். மணமகன் மரப்பலகையில் அமர மணமகள் கல்லின மீது அமர்வாள். அவர்கள் முன் இரண்டு பானைகளில் தண்ணீர் வைக்கப்படும். அவற்றின் கழுத்தைச் சுற்றி ஒரு நூலினைக் கட்டி அப்பானைகளை இணைப்பர். பின்னர் அந்தப் பானைகளைத் தூக்கி அதிலுள்ள தண்ணீரை மணமக்கள் மீது ஊற்றுவர். மற்றச் சாதிகளில் இதுபோல மணமக்கள் குளித்து முடித்தவுடன்அவர்

களுக்குப் புத்தர்டை புனைவிப்பதைப் போல இவர்கள் புனைவிப்பதில்லை. மீண்டும் தங்கள் இருக்கையில் அமர்ந்தபடி மணமக்கள் ஒருவர் மீது ஒருவர் அரிசியினைத் தூவிக்கொள்வர். இவர்கள்சாதியினைச் சேர்ந்த புத்திசாலியான ஒருவன் தன்னைப் பிராமணப் புரோகிதர்போலப் பாவித்துக்கொண்டவனாகச் சில மந்திரங்களை முணுமுணுத்த பின் கருகமணிப் பாசிகளும் மஞ்சளும் கோத்துக் கட்டப்பட்ட கயிறு ஒன்றினைக் கூடியுள்ளவர்களிடம் காட்டுவான். அதனை அவர்கள் தொட்டு வாழ்த்திய பின் மணமகன் மணமகள் கழுத்தில் அதனை அணிவிப்பான். முன்பே கொடுக்கப்பட்டுள்ள பத்து ரூபாயினைச் செலவழித்துச் சாராயத்தோடு கூட அனைவருக்கும் விருந்து அளிக்கப்படும். கைம்பெண்ணாகிவிட்ட அண்ணன் மனைவியினைத் தம்பி மணந்துகொள்ளலாம். அதேபோலக் கைம்பெண்ணாகிவிட்ட தம்பி மனைவியினையும் அண்ணன் மணந்து கொள்ளலாம். கைம்பெண் ஒருத்தியின் திருமணம் அவளுடைய தாயாரின் குடிசையின் முன் நடத்தப்படும். அவள் கழுத்தில் தாலி அணிவிக்கப்படும் என்றாலும் கன்னியர் மணத்தின்போது நிகழ்த்தப்படும் சடங்குகள் ஏதும் கைம்பெண்கள் மணத்தின் போது நிகழ்த்தப்படுதல் இல்லை. கணவன் தன் மனைவியை மணமுறிவு செய்து கொள்ள விரும்பினால் அவன் தன் மனைவியைச் சாதிச் சபையினர் முன் ஒரு குச்சியினை இரண்டாக ஒடிக்கும்படி கூறுவான். ஒருத்தி தன் கணவனை மணமுறிவு செய்துகொள்ள விரும்பினால் அவள் மற்றொருவனோடு அவள் கணவனைக் கைவிட்டு ஓடிவிடுவாள். அவளோடு ஓடுபவன் 'பொன்னு' எனப்படும் சிறு தொகையினை அவள் கணவனுக்கு அபராதமாகச் செலுத்தியபின் அவனை ஒரு குச்சியினை இரண்டாக ஒடிக்கும்படி கூறுவான்.

கொரமரிடையே தாலிக்குப் பதிலாகக் கறுப்புப் பாசிமணி மாலை கட்டும் வழக்கத்திற்குக் காரணமாகப் பின்வரும் கதை வழங்கி வருகின்றது:- முன்னொரு காலத்தில் மணமகன் ஒருவன் தாலியினைக் கொண்டுவர மறந்துவிட்டான். அவனிடம் அதற்கான பொன்னினை ஒரு பொற்கொல்லனிடமிருந்து பெற்று வரும்படி கூறினார்கள். அதனைக் கொண்டுவரச் சென்ற அந்த

இளைஞனுக்காக அவர்கள் நெடுநேரம் காத்திருந்தும் அவன் திரும்பி வந்தானில்லை. அப்போதிருந்து பாசிமணி மாலையே தாலிக்குப் பதிலாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. மற்றொரு கதை வழக்குப்படி தாலியினைத் தயாரித்து ஆற்றங்கரையில் வைத்து விட்டுப் பின்னர்ச் சென்று பார்த்தபோது அது காணப் படவில்லை என்றும் வேறொரு தாலி கொண்டு வரச் சென்ற வன் திரும்ப வரவில்லை என்றும் கூறப்படுகிறது.

கிருட்டிணா மாவட்டத்தைச் சேர்ந்த யெருகலர்கள் மறியாடு, வெள்ளாடு என இரு பிரிவினராகப் பிரிக்கப்பட்டுள்ளனர் என எனக்குத் தெரிவிக்கப்பட்டது. இவர்களுள் பின்னவர் முன்னவர்களின் முறையில்லாத உறவின்வழிப் பிறந்தவர்கள். முறையற்ற உறவின்வழிப் பிறந்தவர்கள் முறையற்ற உறவின் வழிப் பிறந்தவர்களையே மணந்து கொள்ளவேண்டும் என்பது விதி. இவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் அது காரணமாக அந்தப் பழியின்றும் நீக்கபபட்டவர்களாக முறையாகப் பிறந்த வர்களாகக் கருதப்பட்டுப் பின்னர் பொதுவாக மணக்கும் உரிமையினைப் பெறுகின்றனர்.

யெருகலர்களிடையே ஒருவனுக்குப் பிறக்கும் முதல் இரண்டு பெண்களையும் அவர்களுடைய தாய்மாமன் தன் மகன்களுக்கே மணம் செய்து வைக்க வேண்டும் என்று உரிமை கொண்டாடும் வழக்கம் இருப்பதாகந் திரு ஸோர்ட் கூறியுள்ளார்.* "மனைவி யினைப் பொதுவாக இருபது பகொடா மதிப்புடையவளாகக் கருதுகின்றனர். ஒருவனுடைய முதல் இரண்டு பெண்கள் மீது அவர்கள் தாய்மாமன் கொண்டாடும் உரிமை எட்டுப் பகொடா மதிப்புடையதாகக் கருதப்படுகிறது. தன்னுடைய உரிமையினை வற்புறுத்தியவனாக அவன் தன் பிள்ளைகளுக்குத் தன் உடன் பிறந்தவளின் முதல் இரு பெண்களைக் கட்டி வைப்பானாயின் அவன் அவர்கள்ஒவ்வொருத்திக்கும்பன்னிரண்டுபகொடாக்களே விலையாகத் தரக் கடமைப்பட்டவன். தனக்குப் பிள்ளைகள் இல்லாத காரணத்தாலோ வேறு பிற காரணங்களாலோ அவன் தன்னுடைய உரிமையினை விட்டுக்கொடுப்பானாயின்

* Trans. Eth. Sec. N.S., VII.

அப் பெண்களை மணந்து கொள்பவர்கள் அவர்களுக்கு விலையாகத் தரும் இருபது பகோடாக்களில் எட்டுப் பகோடாக்களைத் தன் பங்காகப் பெற்றுக் கொள்ளும் உரிமை பெறுகின்றான்.'' மனைவியின் விலை மதிப்பு இடத்திற்கு இடம் வேறுபடுகின்றது. எடுத்துக்காட்டாக 1901 கணக்கெடுப்பு அறிக்கையில், குறவர்களின் கொங்கு நாட்டு உட்பிரிவினரிடையே ஒருவன் தன் உடன் பிறந்தவள் மகளை மணந்து கொள்ளலாம் எனக் கூறப்பட்டுள்ளது. அவன் தன் உடன்பிறந்தவளை மணம்செய்து கொடுக்கும்போதே அவள் தனக்கு மனைவியாக ஒரு பெண்ணைப் பெற்றுத்தருவாள் என நம்புகின்றான். எனவே அவளை மணந்து கொள்பவன் மணமகளின் விலையான ரூ. 60 இல் ரூ. 7–8–0 மட்டுமே செலுத்துகின்றான். அதன்பின் அவன் தன் மனைவி ஒரு பெண்ணைப் பெற்றெடுக்கும்வரை, ஆண்டு தோறும் ரூ. 2–8–0 செலுத்தி வர வேண்டும். சில குறவர்கள், தந்தையராகும் முன்பே தங்கள் குழந்தைகளைப் பொதுப் பள்ளியில் சேர்க்க பெற்றோர் சிலர் முன் ஏற்பாடுகள் செய்வதைப்போலத் தங்களுக்குக் குழந்தைகள் பிறக்கும் முன்னரே அவர்கள் திருமணம் தொடர்பான உடன்படிக்கைகளை மேற்கொள்கின்றனர். தங்கள் குழந்தைகளை மணம்செய்விக்க விரும்பும் இரண்டு குறவர்களுள் ஒருவன் மற்றொருவனிடம், ''உன் மனைவி ஒரு பெண்ணைப் பெற்று, என் மனைவி ஒரு மகனைப் பெறுவாளாயின் (அல்லது உன் மனைவி ஒரு மகனைப் பெற்று, என் மனைவி ஒரு பெண்ணைப் பெறுவாளாயின்) அவர்கள் மணம்புரிந்து கொள்ள வேண்டும்'' எனக் கூறுவான். இதனை உறுதிசெய்து கொள்ள அவர்கள் புகையிலையினை ஒருவருக்கொருவர் கொடுத்துப் பெற்றுக்கொள்வர். அப்போது மகனைப் பெற வாய்ப்புள்ளவன் மற்றவனுக்கு குடிக்கச் சாராயமும் வாங்கித் தருவான். அதுபோலக் குழந்தைகள் பிறந்து அவர்கள் வளர்ந்தபின் ஒரு பிராமணன் அவர்களிடையே மணப்பொருத்தம் இல்லையெனக் கூறுவானாயின் அந்தத் திருமணம் நிகழாது. அப்பொழுது மணமகளின் தந்தை முன்பு மண உறுதி செய்து கொண்டபோது குடித்த சாராயத்திற்கான விலையைத் திரும்பச் செலுத்திவிடுவான். அவ்வாறின்றி அவர்களிடையே மணம் நிகழுமாயின் மணமக்கள் முன் ஒரு பானையில் தண்ணீரை வைத்து அதனுள்

அறுகம்புல்லினை இடுவர். இது அவர்களிடையேயான உற வினை உறுதிப்படுத்துவதாகும்.* பானையில் போடப்படும் அறுகு பற்றி அதர்வண வேதத்தில் "வாழ்க்கையில் உயிராக விளங்கும் நீரிலிருந்து எழும் நூறு வேர்களையும் நூறு தண்டு களையும் உடைய இப்புல் என்னுடைய நூறு பாவங்களையும் போக்கி இந்த உலகில் என் வாழ்க்கை நூறாண்டுகள் நீடிக்க உதவட்டும்" எனக் கூறப்படுகிறது. "ஒரு பெண் குழந்தை பிறந்தவுடன் திருமணமாகாத பிள்ளைகளை உடையவர்களான தந்தையர், ஒரு ரூபாயினைக் கொண்டு வந்து அதனை அந்தப் பெண் குழந்தையின் தந்தையின் ஆடையில் முடிந்துவிட்டுச் செல்வர். அந்தப் பெண் குழந்தை பெரியவளாக வளர்ந்தவுடன் அவ்வாறு முடிந்து செல்பவன் அவளைத் தன் மகனுக்கு உறுதி செய்து கொள்வான்" என மறைத்திரு ஜெ. கெயின் கூறுகின்றார்.†

"குறவர்கள் மணமாகாத தங்கள் பெண்களை அடகு வைப்பதாகவும் அவ்வாறு அடகு வைக்கப்படுபவர்கள், அடகு வைத்தவர் கடனைத் தீர்க்கும்வரை, அடகாகக் கொண்டவரின் முழு உரிமையுடைய உடமையாவர் எனவும் கூறப்படுகிறது. இத்தகைய வழக்கம் செங்கல்பட்டு, தஞ்சாவூர் ஆகிய மாவட்டங் களிலும் இருந்து வருவதாகத் தெரிகின்றது. சென்னை நகரில் குறவர்கள் தங்களுக்குப் பணம் தேவைப்படும்போது தங்கள் மனைவியரை ஐம்பது ரூபாய் அளவினதான தொகைக்கு விற்று விடுகின்றனர். நெல்லூரிலும் பிற மாவட்டங்களிலும் குறவர்கள் தங்கள் மனைவியரை முப்பது முதல் எழுபத்தைந்து ரூபாய் வரையான தொகையினை விலையாகக் கொடுத்தே விலைக்கு வாங்குகின்றனர். இத்தகைய சமயங்களில் விலையினைப் பண மாகச் செலுத்தாமல் அதற்கு ஈடான கழுதைகளாகவோ கால் நடைகளாகவோ செலுத்துவர்" என 1871-ஆம் ஆண்டு சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட் டுள்ளது. அண்மையில் சென்னை உயர் நீதிமன்றத்தின் முன்

---

* ஜெ. எப். கியர்ன்ஸ், *கல்யாணச் சடங்கு, 1868*. (J. F. Kearns, Kalyāna Shatanku, 1868.)

† *இந்தியத் தொல்லியல்*, III, *1874*. (Ind. Ant. III., 1874.)

வந்த வழக்கொன்றில் ஒரு குறவன் தன் மனைவியருள் ஒருத்தியை இருபத்தொரு ரூபாய்க்கு விற்றதாகக் கூறியுள்ளான்.* ''குறவர்கள் தங்கள் மனைவியரை அடகு வைக்கக் கொஞ்சமும் தயக்கம் காட்டுவதில்லை. அடகு வைக்கப்பட்ட ஒருத்திக்கு இயற்கையான சாவு நேருமானால் கடன்தொகை தள்ளுபடி செய்யப்படுகின்றது. கொடுமைக்கு ஆட்பட்டு அவள் இறக்க நேர்ந்தால் அடகுக்காரன் கடனைத் தள்ளுபடி செய்வதோடு கூட அடகு வைத்தவன் இரண்டாம் தாரத்தினை மணக்க ஆகும் செலவுகளையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். கடன் தீர்க்கப்படும் வரை அவள் உயிரோடிருந்து கடன் கொடுத்தவன் வாயிலாக அவள் குழந்தைகளையும் பெற்றுக்கொண்டிருப்பாளானால் அக்குழந்தைகள் ஆணாயிருப்பின் கடன் கொடுத்தவனுடனேயே தங்க வைத்துக் கொள்ளப்படுவர். பெண்ணாயிருப்பின் அவளுடைய தாயாரோடு அடகு வைத்தவனுக்குரிய குழந்தையாகத் திரும்ப அனுப்பப்பட்டு விடுவர்'' என முனைவர் போப் அவர்கள் கூறியுள்ளார். மனைவியரை அடகு வைப்பதற்கு ஒரு பகுதியின் வளப்பமற்ற வறட்சி நிலையே காரணமாக அமைகின்றது. வறுமையும் பஞ்சமுமான பருவத்தில் அடகு வைக்கப்படும் ஒருத்தி மீண்டும் அப்பகுதி செழிப்புறும்போது மீட்கப்படுவாள். ஒருத்தியை அடகாகப் பெற்றுக் கொள்பவன் அச்சமயம் தான் வாழும் பகுதியில் செழிப்பான பருவநிலை வாய்க்கப் பெற்றவனாக இருப்பதோடு, பயிர்த்தொழிலுக்கு உதவ ஆள்களின் தேவையும் உடையவனாக இருப்பான். அதனாலேயே அவன் தனக்குப் பணியில் உதவக் கூடியவனான ஆண்குழந்தையைத் தன்னோடேயே வைத்துக் கொள்கின்றான். சில ஆண்டுகளுக்கு முன்பு குறவர் சிலர் மாவட்ட ஆட்சியருடைய ஆணைகள் அடங்கிய பெட்டியினைத் திருடியதற்காகத் தண்டிக்கப்பட்டனர். இது தொடர்பான வழக்கு நடைபெறும் போது, இந்தக் குறவர் குழுவினர் தலைவன் அந்தப் பெட்டியிலிருந்த தொகையில் அவனுக்குரிய பங்கினைப் பெற்று, அதனைப் பெண்ணின் விலையாகக் கொடுத்து, ஒருத்தியை மணந்து கொண்டதாகத் தெரியவந்தது. அந்த மாவட்ட ஆட்சியர்

* 1901 சென்னை மாநிலக் கணக்கெடுப்பு அறிக்கை. (Madras Census Report, 1901.)

இதுபற்றிநகைச்சுவைபடத் தனது பெட்டியிலிருந்து பணத்தைத் திருடிக் கொடுத்து அந்தக் குறவன் மணந்து கொண்டவள் குற்றவியல் சட்ட விதிகளின்படி தனக்கு உரிமையுடையவள் எனக் குறிப்பிட்டார்.

ஒருவரை அடுத்து ஒருவராக ஏழு ஆண்களை அவர்கள் இறந்த பிறகோ மணமுறிவு செய்து கொண்ட பின்னரோ மணந்து கொள்பவள் பெத்த போயி சாணி எனக் குறவர் சமுதாயத்தில் மிகவும் மதிக்கப்படுவதோடு திருமணச்சடங்குகள், சமயச்சடங்குகள் ஆகியவற்றினை முன்னின்று நடத்தும்பெருமை யினையும் அவள் பெறுவதாகத் திரு பாப்பா ராவ் நாயுடு குறிப்பிட்டுள்ளார்.

"ஒரு குறவன் தண்டனை பெற்றுச் சிறை புகுவானாயின் அவன் மனைவி தன் கணவன் குழுவினைச் சேர்ந்தவர்களுள் யாரேனும் ஒருவனோடு உறவு வைத்துக் கொள்வாள். அவளுடைய கணவன் சிறையிலிருந்து திரும்பியவுடன் தான் உறவு கொண்டிருந்தவனோடு வாழ்ந்த காலத்தில் தனக்குப் பிறந்த குழந்தைகளுடனும் மீண்டும் தன் கணவனோடு சென்று வாழத் தொடங்குவாள். குறவர் சாதிப் பெண்கள் தங்கள் முதலாளி களையும் கணவன்மார்களையும் சேவற்கோழி என மரியாதை தந்து அழைப்பர்" என 1891 கணக்கெடுப்பு அறிக்கையில் குறிக்கப்பட்டுள்ளது. ஒரு சமயம், குறவன் ஒருவன், தன் நண்பனுடன் சேர்ந்து வழக்கில் அகப்பட்டுக் கொண்டு, மூன்றாண்டுகள் சிறைத் தண்டனை பெற்றான். அவன் நண்பன் இரண்டு ஆண்டுகள் மட்டுமே சிறைத்தண்டனை பெற்றான். பின்னவன் சிறையிலிருந்து விடுதலை பெற்றதும் முன்னவன் மனைவியோடு தன் நண்பனுடைய் குடிசையிலேயே தங்கி வாழ்ந்து வந்தான். அவன் நண்பன் சிறையிலிருந்து தப்பி வீட்டுக்கு வந்து தன் மனைவியினை விட்டுவிடும்படி கேட்டான். அவன் நண்பனோ நேரே சிறைச்சாலைக்குச் சென்று, தான் சிறையிலிருந்து தப்பி வந்த கைதியைக் கண்டு பிடித்துவிட்டதாக அதிகாரிகளிடம் தெரிவித்தான். தப்பி ஓடியவன் மீண்டும் பிடிக்கப்பட்டுச் சிறையில் அடைக்கப்பட்டான். அவன் நண்பன்

மீண்டும் அவனுடைய மனைவியினை அடைந்ததோடு, சிறை அதிகாரிகளிடமிருந்து தப்பியோடிய கைதியினை மீண்டும் பிடிக்கத் தகவல் தந்ததற்காக இருபத்தைந்து ரூபாய்களையும் அன்பளிப்பாகப் பெற்றான்,

குறவர்கள் கைம்பெண்கள் மறுமணத்தை அனுமதிக்கின்றனர். ஒரு கைம்பெண்ணை மணந்து கொள்ள விரும்புபவன் தனக்கும் அவளுக்குமாகப் புதிய உடைகள் வாங்குவான். நண்பர்களை அழைத்து அவர்கள் முன்னிலையில் தான மணக்க உள்ளவளுக்குரிய புதிய உடைகளை வழங்குவான். இந்த எளிய சடங்கு 'சீரகட்டு கோரடம்' என வழங்கப்படுகிறது. சேலை அணிவிக்க விரும்புதல் என்பது இதன் பொருள்.

குறவர்களின் மனைவியர் பொதுவாகத் தங்கள் கணவன் மாருக்கு உண்மை உள்ளவர்களாகவே நடந்து கொள்கின்றனர். அவர்களிடையே கருத்து வேறுபாடு தோன்றுமானால் அவர்கள் தாங்கள் பிரிந்து செல்ல விரும்புவதாகக் குழுவைச் சேர்ந்த குறவர்களிடம் தெரிவிப்பர். இவ்வாறு பிரிந்து செல்வது மண முறிவினை ஒத்ததே. இது போன்ற சமயத்தில், கணவன் தன் மனைவியின் தாய்மாமனுக்கு நல்லெண்ணத்தின் அடையாளமாகச் செலுத்தப்பட்ட நான்கணாவினைத் திரும்பக் கேட்கலாம். இவ்வாறு அவர்கள் பிரிந்து செல்லக் காரணமாக இருப்பவர் கணவனாயினும் மனைவியாயினும் அதனைப் பற்றிக் கருத்தில் கொள்ளாது அத்தொகை திரும்பச் செலுத்தப்படும். மற்றச் சாதிகளுள் மனைவியின் மேல் குற்றம் சுமத்தப்பட்டு அதன் காரணமாகக் கணவன் மனைவியர் பிரிய நேர்ந்தால் மட்டுமே மனைவி இந்தத் தொகையைத் திரும்பச் செலுத்தக் கடமைப்பட்டவள். இவர்களிடையே மணமுறிவு அரிதாகவே நிகழ்கின்றது. மணமுறிவு நிகழ்ந்த பின்னரும் கூடக் கணவன் மனைவியர் தங்கள் கருத்து வேறுபாட்டைப் பொருட்படுத்தாதவர்களாக ஒன்றாகவே குடும்பம் நடத்துவதும் உண்டு. ஒருவன் ஒரு பெண்ணைக் கடத்திக்கொண்டு செல்வானாயின் அந்தப் பெண்ணின் தந்தை சாதிச்சபையைக் கூட்டி முறையிடுவான். சாதிச் சபையார் அவ்வாறு பெண்ணைக் கடத்திச் சென்றவனுக்குத் தண்டம் விதிப்பர். ஒருவனோடு ஓடிச் சென்ற

ஒருத்தி அவனோடு உடல் உறவு கொள்வதற்கு முன்பே மீட்கப் படுவாளாயினும் அவளைக் கன்னியாகக் கருதிக் கன்னியரைப் போல மணம் செய்வித்தல் இல்லை. அவளைக் கடத்திச் சென்றவன் அவளை மணந்துகொள்ள வேண்டியது கட்டாய மெனினும் அவள் திருமணம் ஒரு விதவையின் மறுமணம் போன்ற தாகவே நடைபெறும். அவன் அவ்வாறு அவளை மணந்து கொள்ள மறுப்பானாகின் தன் மகளை மணம் செய்து தருவ தாகக் கூறி மண உறுதி செய்தபின் அந்த உடன்படிக்கையிலி ருந்து பின்வாங்கும் ஒரு தந்தைக்கு விதிக்கப்படுவதற்கொப்பான தொகை அபராதமாக விதிக்கப்படுவான். திருமணமான ஒருவன் ஒருத்தியோடு ஓடி விடுவானாகில் அவன் அவளையும் மணந்து கொண்டே ஆக வேண்டும். பல மனைவியரை மணக்கும் வழக்கம் இவர்களிடையே இருப்பதால் இதற்குத் தடையேது மில்லை. முன்பெல்லாம் மற்றொருவன் மனைவியோடு கூடா ஒழுக்கத்தில் ஈடுபடுபவன் அவனுக்கு விதிக்கப்பட்ட தண்டத் தொகையினைச் செலுத்த இயலாதவனாக இருப்பின் அவனை ஒரு மரத்தோடு கட்டிப்போட்டு அவன் கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்டவளுடைய சிறுநீரைத் தண்ணீருக்குப் பதிலாகப் பயன் படுத்தி நாவிதன் அவனுக்கு முகம் மழிப்பான்.

குறவர்களிடையேயான பிறப்புத் தொடர்பான சடங்குகள் பற்றித் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகிறார்:– "பிள்ளைப் பேற்றின்போது தொல்லைகள் ஏற்படுவதற்கு ஒருத்தி கருவுற் றிருந்த காலத்தில் அவளுடைய விருப்பங்கள் முழுவதுமாக நிறைவேற்றப்படாதுபோதலே காரணம் என இவர்கள் நம்பு கின்றனர். பொதுவாக இந்த விருப்பம் உண்ணும் உணவு தொடர்புடையதாகக் கருதப்படினும், தீர்க்கப்படாத உடலிச் சையும் இதற்குக் காரணமாகக் கருதப்படுகிறது. பிள்ளைப் பேற்றில் சிக்கல் ஏற்படுவதற்குப் பின்னர் கூறிய உடலிச்சை தீர்க்கப்படாததே காரணம் எனக் கருதப்படும்போது, மகப்பேறு பார்க்கும் மருத்துவச்சி அவ்வாறு பேறுகாலத் தொல்லை அனுபவிப்பவளிடம் அவளுடைய கள்ளக் காதலன் பெயரைக் கூறும்படி கேட்பாள். அவள் அதற்குப் பதிலிறுக்க வாய் திறக்கும்போது அவள் வாயில் கொஞ்சம் மண்ணினைப் போடுவாள். இதனால் மகப்பேறு விரைவு படுத்தப்படும்

எனக் கருதுகின்றனர். பிள்ளைப் பெற உள்ளவள் தீட்டுக்குரிய வளாகப் பத்து நாள்கள் வரை தனியே ஒரு குடிசையில் மருத்து வச்சியின் துணையோடு மட்டும் தங்கியிருக்க வேண்டும். குழந்தை பிறந்தவுடன் அந்தக் குடிசையின் முன் சாம்பிராணி புகைக்கப்படும். இறந்துபோன முன்னோர்களின் ஆவியினைத் திருப்திபடுத்த வெல்லத்தினைப் படைத்து, 'எங்கள் மூதாதை யர்களே! எங்கள் மீது அருள்கொண்டு எங்களுக்கு உதவுங்கள். எங்கள் கால்நடைகளும் செல்வமும் பெருகச் செய்யுங்கள்! சர்க்காரிடமிருந்து (அரசினர்) எங்களைக் காப்பதோடு காவலர் கையில் நாங்கள் அகப்படாதிருக்க உதவுங்கள்! எப்பொழுதும் நாங்கள் உங்களை வழிபட்டபடி இருப்போம்' என வேண்டிக் கொள்வர். அதன்பின் அந்த வெல்லம் கூடியுள்ளவர்களிடையே வழங்கப்படும். புதிதாகப் பிறந்த குழந்தையினை மாட்டுச் சாணத்தால் தூய்மைப்படுத்திக் குளிப்பாட்டுவர். பெயர் வைக்கும்போது சிலபோது பிராமணர்களிடம் சென்று கருத்துக் கேட்பது உண்டு என்றாலும் அந்தப் பொறுப்பு குழந்தையின் தாய்மாமனுடையதாகவே கருதப்படுகிறது. மகப் பேற்றின் ஒன்பதாம் நாள் தாயும் குழந்தையும் குளித்தபின் பெயரிடும் சடங்கு நிகழும். குழந்தைக்குப் பெயரிடும் தாய் மாமன் அதன் இடுப்பைச் சுற்றி ஒரு நூல் கயிற்றினைக் கட்டு வான். இந்தக் கயிறு அந்தக் குழந்தை குறவர் சமூகத்தில் சேர்ந்துவிட்டது என்பதற்கு உரிய அடையாளமாகும். மண வாழ்க்கை முடிவுக்கு வரும் நாள்வரை இந்தக் கயிற்றினையோ இதற்குப் பதிலாக வேறொரு கயிற்றினையோ அந்த குழந்தை அணிந்து வரவேண்டும். பெயர் சூட்டும் நாளில் குழந்தைக்கு இடப்படும் பெயரால் அதனைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் அதனை அழைப்பதில்லை. ஒருவனுடைய உடல்வாகினையோ பழக்கத்தையோ அடிப்படையாகக் கொண்டு பின்வருவது போன்ற பெயர்களால் அவர்கள் அழைக்கப்படுவார்கள்:- நல்ல வாடு (கறுப்பன்), பொட்டிகாடு (குள்ளன்), நெட்டைக் காலாள் (நெட்டைக் காலன்), குண்டாடு (மொண்டி), பொக்கக் காடு (குண்டன்), சுட்டுவாடு (பெரிய குடுமிக்காரன்), கூனாடு (கூனன்), முகடு (செவிடன்) என்பன போல அப்பெயர்கள் அமையும். சில சமயங்களில் குழந்தைகளுக்குக் குலதெய்வங்களின்

பெயரையும் வைப்பர். ராமுடு, லட்சிகாடு, வெங்கடிகாடு, கெங்கடு, செங்கடு, சுப்படு, அங்கலிகாடு என்பன அவ்வாறு இடப்படும் குல தெய்வங்களின் பெயர்களுள் சிலவாம். சூட்டுக் கோல் கொண்டு குழந்தையின் தோளில் சூடிடும் பழமையான பழக்கம் கால்நடைக் குறி எனப்படுகிறது. குழந்தைகள் கால் நடைகளை மேய்க்க ஓட்டிச்செல்லும் புனிதப் பணியினை மேற்கொள்ளும் முன் அவர்கள் தோளில் இது போலச் சூடிட வேண்டும் எனக் கருதுகின்றனர். இடையர்கள் சாதித் தெய்வ மான கண்ணன் இடையர் சாதியைச் சேர்ந்த இதுபோன்ற சூடிடப்பட்ட சிறுவர்களைத் தவிர வேறு யாரையும் இப்புனிதப் பணிக்கு அனுமதிப்பதில்லையாதலால் சிறுவர்கள் இது போலச் சூடிடப்படுகின்றனர் எனக் கூறுகின்றனர். இந்தச் சூட்டு அடையாளம் குற்றத்தில் ஈடுபடுபவர்களை அடையாளம் காட்டிக் கொடுத்துவிடுவதால் இவர்கள் இப்பொழுது இதனை நடைமுறையில் மேற்கொள்வதில்லை. புயல் வீசும் இரவில், அமாவாசை நாளன்று பிறக்கும் குழந்தை பெயர்போன திரு டனாவான் என நம்பி, அத்தகைய குழந்தைகளுக்குத் திருப்பதித் தெய்வத்தின் பெயரான வெங்கடகாடு என்ற பெயரை இடுவர் கழுத்தில் கொப்பூழ்க்கொடி சுற்றிப் பிறக்கும் குழந்தையின் தந்தையோ தாய்மாமனோ சாவுக்குள்ளாவர் என்பதனை அது முன் அறிவிப்பதாகும் என நம்புகின்றனர். இத் தீமையினின்றும் காத்துக் கொள்ள அதன் தாய்மாமனோ தந்தையோ ஒரு கோழியினை அறுத்து, அதன் குடலைத் தன் கழுத்தில் அணிந்து கொண்டபின் அதனையும் குழந்தையின் கொப்பூழ்க் கொடியோடு சேர்த்துப் புதைக்கும் சடங்கினை மேற்கொள்வர்.

மனைவி பிள்ளைப் பெறுங்காலத்தில் கணவன் நோய் உற்ற வனாக மருந்துண்ணும் வழக்கம் இருந்தது என்பது கி. பி. 1030 இலேயே அல்பெருணியாலேயே குறிக்கப்பட்டுள்ளது.* ஒரு குழந்தை பிறக்கும்போது மற்றவர்கள் பிள்ளைப் பெறுபவளுக்கு உதவிகள் ஏதும் செய்யாமல் அவளுடைய கணவனையே கருத்து டன் கவனிப்பர் என அவர் குறித்துள்ளார். குறத்தி பேறுபார்த்துக்

* India, Trubner. Oriental Series.

கொள்ளும் போது குறவன் பிள்ளைப் பெற மருந்து தின் பான் என்ற தமிழ்ப் பழமொழியும் வழக்கில் உள்ளது. யெருகலர் பற்றி எழுதும் மறைத்திரு ஜெ. கெயின் பின்வருமாறு எழுது கின்றார்:-* "ஒருத்தி மகப்பேற்றினுக்கான வலி தோன்றியவுடன் அதனைத் தன் கணவனுக்கு நேரிடையாகத் தெரிவிப்பாள். அவன் உடனே அவளுடைய உடைகளிலே ஒரு சிலவற்றை எடுத்து உடுத்துக் கொண்டு, பெண்கள் வழக்கமாக நெற்றியில் வைத்துக் கொள்ளும் குங்குமப் பொட்டினை இட்டுக் கொண்டு, மங்கலாக விளக்கு எரிந்துகொண்டிருக்கும் ஒரு இருண்ட அறையில் நுழைந்து படுக்கையில் விழுந்து, ஒரு சேலையால் தன்னைப் போர்த்துக் கொள்வான். குழந்தை பிறந்தவுடன் அதனைக் குளிப்பாட்டிக் கட்டிலின் மீது அதன் தந்தை அருகே படுக்க வைப்பர். பெருங்காயம், வெல்லம் ஆகியவற்றோடு மற்றவற்றையும் சேர்த்துக் குழந்தைப் பெற்றவளுக்குத் தராமல் அவளுடைய கணவனுக்கே தரப்படுகிறது. அவன் அந்தப் படுக்கையிலிருந்து எழுந்து செல்ல அனுமதிக்கப்படுவதில்லை. அவனுக்குத் தேவையான அனைத்தையும் அங்கேயே கொண்டு வந்து தருவார்கள்" மலபாரைச் சேர்ந்த கூடைமுடையும் குறவர்களிடையே உள்ள இந்த வழக்கம்பற்றித் தெரிய வருவன வருமாறு:- "கருவுற்ற ஒருத்திக்குப் பேறுகால வலி வரப்பெற்ற வுடன் அவளைக் குடியிருப்புக்குப் புறத்தே ஒரு கொட்டகைக்கு அழைத்துச்சென்று தன்னந்தனியே விட்டுவிடுவர். அவள் அவ ளுடைய தலை விதிப்படி பெற்றுப் பிழைக்கலாம்; அல்லது செத்தும் போகலாம். இருபத்தியெட்டு நாள்களுக்கு அவளுக்கு யாரும் எந்த உதவியும் செய்வதில்லை. அவளுக்குத் தேவை யான மருந்துகளைக் கூடத் தூரத்திலிருந்தே வீசி எறிவர். அவளுக்காக பிறர் ஆற்றும் ஒரே உதவி குழந்தை பிறப்பதற்குச் சற்று முன்பு அந்தக் கொட்டகை அருகே ஒரு பானை வெந் நீரைக் கொண்டு வைத்துவிட்டு வருவதுதான். சாவுத் தீட்டினை விடப் பிறப்புத் தீட்டினை இவர்கள் இழிந்ததாகக் கருதுகின் றனர். இருபத்தெட்டு நாள்களுக்குப் பின் அவள் தங்கியிருந்த குடிசைக்கு நெருப்பிட்டு எரிப்பர். குழந்தையின் தநதையும்

* இந்தியத் தொல்லியல், III. 1874. (Ind. Ant. III, 1874.)

பதினான்கு நாள்களுக்குத் தீட்டுக்கு உரியவனாகக் கருதப் படுவான். அதன்பின் அவனை மற்றச் சாதியார்களைப் போல நாவிதனை அழைத்துத் தீட்டு நீக்கும் சடங்கினைச் செய்யாமல் ஒரு பிராமணனிடமிருந்து பெற்றுவந்த புனித நீரைத் தெளித்துத் தீட்டு நீக்குவர்.'' கொரமர்களிடையே பிள்ளைப் பேறு காலத்தில் கணவன் நோய்வாய்ப்பட்டவனாக மருந்து உண்ணும் புழக்கம் பற்றிய பின்வரும் குறிப்புக்கு நான் மைசூர் மாநிலத்தில் உள்ள சிமோகா மாவட்டத்துக் காவல்துறைக் கண்காணிப்பாளரான திரு ஜி. கிருஷ்ண ராவுக்குக் கடப் பாடுடையேன்:- ''மைசூர் மாநில விவரக் குறிப்பில் திரு ரைஸ் அவர்கள் ஒருகுறத்தி பிள்ளைப் பேற்றுக்கான வலி கண்டவுடன் அவள் கணவன் மருந்து உண்பான் எனக் குறிப்பிட்டுள்ளார். மைசூரிலுள்ள பிரிட்டனின் ரெஸிடெண்ட் அவர்கள் கேட்டுக் கொண்டதனால் நான் இது பற்றிய தகவல்களைக் கேட்டறிந்தேன். சிமோகாவிற்கு அருகேயுள்ள கோபால என்ற கிராமத்தில் வாழும் கூடை முடையும் கூகே கொரமரி டையே இப்பழக்கம் இருப்பதாகத் தெரிகிறது. ஒருவன் தன் மனைவியிடமிருந்து அவள் பேறு காலம் பற்றி அறிந்து கொண்டு பிள்ளைப்பேற்றினை எதிர்பார்த்தவனாக வெளி யூர்களுக்குச் செல்லாமல் வீட்டோடு இருப்பான். அவளுக்குப் பேற்று வலி எடுத்தவுடன் அவன் மூன்று நாள்கள் படுக்கையில் இருப்பான். அப்போது கோழி, ஆட்டுக்கறி ஆகியவற்றின் சாற்றில் இஞ்சி, மிளகு, வெங்காயம், பூண்டு ஆகியன சேர்த்து மருந்தாக உட்கொள்வான். அக்காலத்தில் சாராயம் குடிக்கும் அவன் இயன்ற அளவு சிறந்த உணவாகவே உட்கொள்வான். அவன் மனைவிக்கு அச்சமயத்தில் அதிகநீர்வேட்கை ஏற்படாது காக்கும் பொருட்டுச் சிறிதே. உப்புச் சேர்த்த அரிசிக் கஞ்சி மட்டுமே தருவர். கொரமர் சாதியினைச் சேர்ந்த ஒரு மருத்துவச்சி அவளுக்குப் பேறு பார்ப்பாள். அவன் அந்த நாள்களில் உண்பதும் குடிப்பதும் உறங்குவதுமாகவே பொழுதைக் கழிப்பான். கணவன், ம்னைவி, மருத்துவச்சி ஆகிய மூவருடைய உடைகளையும் நான்காம் நாள் வண்ணாத்தி துவைத்து வருவாள். இம்மூவரும் அன்று குளிப்பர். இந்தத் தூய்மைப் படுத்தும் சடங்கிற்குப் பின் அக்குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்

சாதியைச் சேர்ந்தவர்களுக்கு விருந்தளிப்பர். நான் நேரில் இதுபற்றி ஒருவனிடம் கேட்டபோது அவன் ஆண்கள் உயிர் பெண்கள் உயிரைவிட மிகவும் மதிப்புவாய்ந்தது எனவும் அதனாலேயே குழந்தை பிறக்கும்போது மனைவியினை விடக் கணவன் அதிகம் பேணப்படுகின்றான் எனவும் கூறினான்.'' மனைவி பிள்ளையைப் பெறும்போது கணவன் நோயுற்றவன்போல மருந்துண்பதற்குக் காரணமாகக் கொரமரிடையே பின்வரும் வழக்கு வரலாறு வழங்கி வருகின்றது:- ஒரு நாள் கொரமர் குடியிருப்பைச் சேர்ந்த குடியிருப்புக்கு வெளியே கட்டிப் போடப்பட்டிருந்த கழுதை ஒன்று அறுத்துக்கொண்டு பிராமணன் ஒருவன் வயலில் புகுந்து பயிருக்குப் பெரும் சேதத்தை உண்டாக்கியது. இதனால் மிகுந்த சினமுற்ற பிராமணன் அந்தக் கழுதைக்கு உரியவனுடைய குடிசையினைப் பிடுங்கி எறியும்படி தன் கூலியாள்களிடம் கூறினான். அந்தக் கொரமன் பிராமணன் காலில் சென்று விழுந்து தன் கழுதையின் செயலுக்கு வேறு தக்க காரணம்கூற அறியாதவனாகத் தான் தன் மனைவி பேறுகாலமாக இருந்ததால் அப்போது அவளுக்காக மருந்துதின்று கொண்டிருந்ததால் தன் கழுதை என்ன செய்தபடி இருக்கின்றது என்பதனைக் கவனித்துக்கொள்ளமுடியாது போய் விட்டது என விளக்கம் கூறினான். இதே கதையின் மற்றொரு வடிவப்படி அந்த கொரமனின் குடிசையினைத் தன் வயலிலிருந்து அப்புறப்படுத்தும்படியாகவோ அந்தக்கொரமனை அடித்து உதைக்கும்படியாகவோ அந்தப் பிராமணன் கூறியதாகவும் அப்போதிருந்து கொரமர்கள் அடி உதையிலிருந்து தப்ப வேண்டித் தங்கள் மனைவியரின் பேறு காலத்தில் நோயுள்ளவர்களாகப் படுக்கையில் கிடந்து வருகின்றனர் எனவும் கூறப்படுகிறது.

மனைவியின் பேறுகாலத்தில் கணவன் நோயுற்றவனாக மருந்துண்ணுதல் பற்றித் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்:- ''இந்தப் பழக்கம் பறவைகளைப் பிடிக்கும் குறவர் களிடையே இருப்பது கண்டறியப்பட்டுள்ளது. இவ்வாறான பழக்கம் இவர்களிடையே இருப்பதை மற்றவர்களும் உடன் படுகின்றனர். பேற்றுக்கான வலி வந்தவுடன் அந்தப் பெண்ணை

படுக்கையில் கிடத்திப் பெருங்காயத்தை வெற்றிலையில் சுற்றி அவளுக்குத் தருவர். அதன்பின் பெருங்சாயமும் பிற மருந்துப் பொருள்களும் கலந்த கலவையை அவளுக்குத் தருவர். அவளுடைய கணவன் அவளுக்குத் தரப்படும் மருந்தில் ஒரு பகுதியைத் தின்பான். குறவர் பேறு காலத்தில் தங்களுக்கு வலி ஏதும் ஏற்படுவதில்லை என்பதனை அடியோடு மறைக்கவே இது போன்ற பழக்கத்தை மேற்கொள்கின்றனர் எனக் கூறப்படுகிறது. 'குறத்திக்குப் பேறுகாலம் வந்தால் குறவன் பெருங்காயம் தின்பான்' என்ற பழமொழியும் அனைவரும் அறிந்த ஒன்றே. ஒருத்திக்குப் பேறுகாலம் நெருங்கியவுடன் அவளுடைய கணவன் சிறப்பாகப் பேணப்படுவான். அவன் தன் மனைவியின் சேலையினை எடுத்து உடம்பில் சுற்றிக் கொண்டவனாகப் பிறந்த குழந்தையின் அருகே தன் மனைவிக்குப் பதிலாகப் படுத்துக் கொள்வான். சில மணித்துளி நேரமாவது அவ்வாறு படுத்திருந்த பின்னரே அவன் தன் மனைவியினைக் குழந்தை அருகிலே படுக்க அனுமதிப்பான். இந்தக் குறிப்பை எழுதும் என்னிடம் குறவர்கள் இந்தச் சடங்கினை மேற்கொள்ள விரும்பாத குறவன் கடுமையான தண்டனைக்கு உள்ளாவான் எனவும் அவன் சாதி விலக்கம் செய்யவும் பெறுவான் எனவும் நேரில் கூறினர். குறவர்களிடம் 'என்னடா பெருங்காயம்' என்று கூறினால் அதனை அவன் பேறுகால நோயின்போது மருந்துண்ணும் கேலிக்கு உள்ளாக்குவதாகக் கருதிச் சினம் கொள்வான். ஒரு குறத்திக்கு மிகத் தாழ்வானதான இழிவினைத் தருவது, 'நீ எனக்குப் பெருங்காயம் தருவாயா?' என அவளிடம் கேட்பதாகும். இவ்வாறு கேட்பதனைத் தன்னைத் தகாத உறவுக்கு அழைப்பதாக அவள் புரிந்துகொள்வாள்."

குறவர்களுள் ஒரு பிரிவினர் பேறு கால வலியினை ஆண் கழுதையின் லத்தியை நீரில் கரைத்துச் சிறிது சிறிதாகக் குடிப்பதால் குறைக்கலாம் என நம்புகின்றனர். சில ஆண்டுகளுக்கு முன்பு சேலம் மாவட்டத்தில் உள்ள குறவர் குடியிருப்பு ஒன்றனுக்குக் காவல்துறைக் கண்காணிப்பாளர் சென்றபோது இரண்டு குறவர்கள் அவரிடம் தங்கள் குழுவினை அழைத்துச் செல்லும் காவலர்கள் பேறுகால வலியால் அவதிப்படும் ஒருத்தியைத் தோளைப் பிடித்து இழுத்துச் செல்கின்றனர் எனக் குறை

கூறி அக்காவலர்களை அப்புறப்படுத்தும்படி வேண்டிக் கொண்டனர். இவ்வாறு இவர்கள் கூறியது அத்தகைய பேறு காலப் பெண்ணைத் தங்கள் குழுவில் கொண்டுள்ளபோது குடியிருப்பை அப்புறப்படுத்திக் கொண்டு தாங்கள் காவலர்களிடமிருந்து தப்ப வாய்ப்பில்லை என்பதன் அடிப்படையில்தான். எனினும் மறுநாள் பொழுது புலரும் முன்பே அவர்கள் தங்கள் குடியிருப்பை அப்புறப்படுத்தியவர்களாகப் பதினைந்து மைல் பயணம் மேற்கொண்டிருந்தனர். பேறு கால வலியில் இருந்த அந்தப் பெண்ணைப் பற்றி அவர்களிடம் கேட்டபோது அவர்கள் மற்ற குடிசைகளிலிருந்தும் தனித்திருந்த ஒரு குடிசையினைச் சுட்டிக் காட்டினர். அதன் முன் அவள் அன்றிரவு பிறந்த தன் குழந்தைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருந்தாள். குழந்தையைப் பெற்றெடுத்த உடனே நடந்தும், கழுதையில் பயணம் செய்தும் அன்று ஒரே இரவில் அவள் அவ்வளவு தூரத்தைக் கடந்துள்ளாள்.

குறவர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் குழந்தைப் பருவத்திலேயே திருட்டுக் கலையின் நுட்பங்களைக் கற்றுத் தருவதோடு, குழந்தைப் பருவத்திலிருந்தே அவர்களிடம் கேட்கப்படும் கேள்விகளுக்கு ‘எனக்குத் தெரியாது’ எனக் கூறக் கற்றுத் தருகின்றனர். திருடுவதின் பலமுறைகளும் அவர்களுக்குக் கற்றுத் தரப்படுவதோடு, வீடுகளில் நுழைவதற்கான பல வழிகளும் கற்றுத் தரப்படுகின்றன. சில வீடுகளில் கூரை வழியே உள்ளே இறங்க வேண்டும். வேறு சில வீடுகளில் சுவரில் கன்னம் வைத்து நுழைய வேண்டும். கதவின் தாழ்ப்பாள் அருகே துளையிட்டு உள்ளே புக வேண்டிய வீடுகளும் உள்ளன. கூரையிலிருந்து வீட்டினுள் குதிக்கும் முன் குறவன் பித்தளைப் பாத்திரங்கள் மீதும், தட்டுமுட்டுச் சாமான்கள் மீதும் குதித்து விடக் கூடாது. இதற்காக அவன் நுண்ணிதான மணலைச் சிறு அளவில் கீழே தூவிச் சோதித்துப் பார்ப்பான். அது அவனுக்கு தான் குதிக்க உள்ள இடத்தின் தன்மையினை உணர்த்தும். பகலில் தெருவில் கூவி விற்கும்போது கடைப் பிடிக்க வேண்டிய நெறிமுறைகளும் அவர்களுக்குக் கற்றுத் தரப்படும். ஒரு குழந்தையினைக் கையுங்களவுமாகக் குற்றம் இழைக்கையில் பிடித்துவிட்டாலும் கூட அது தன்னைப் பற்றியோ தன் பெற்

றோரைப் பற்றியோ தகவல்கள் எதனையும் கூறாது. அது சேர்ந்துள்ள குழுவைப் பற்றியும் அதனிடமிருந்து தெரிந்து கொள்ள இயலாது. மைசூரிலுள்ள ஒரெகம் வாரச் சந்தையில் சில ஆண்டுகளுக்கு முன் பன்னிரண்டு அல்லது பதின்மூன்று வயதுடைய சிறுமி ஒருத்தி பிடிக்கப்பட்டாள். அவளைச் சோதனையிட்டதில் அவள் தன் வாயில் கன்னத்தில் சிறிய கத்தி ஒன்றினை மறைத்து வைத்திருப்பது தெரியவந்தது. அவள் தான் தாய்தந்தையோ உறவினர்களோ அற்ற அனாதை எனத் தன்னைப் பறறிக் கூறிக் கொண்டாள். எனினும் அவளைப் பற்றிய உண்மையான விவரங்களைக் காவலர்கள் கண்டுபிடித் தனர். குறவர்கள் பொய்ப்பெயர்களைச் சொல்லி ஏமாற்றுவதில் வல்லவர்கள். கைரேகைப் பதிவு முறை சில ஆண்டுகளுக்கு முன்பு புகுத்தப்பட்டிருப்பதால் இப்பொழுது அவர்களால் முன்பு போலத் தங்கள் உண்மை அடையாளத்தை மறைத்துக் கொள்ள இயலுவதில்லை. "ஆண்களும் பெண்களும் தங்கள் நெற்றி யிலும் முன்கைகளிலும் பச்சை குத்திக் கொண்டுள்ளனர். ஒரு முறை இவர்கள் தண்டனை பெறுவார்களானால் தங்கள் முன் கைகளில் உள்ள பச்சையினைப் பெரிதுபடுத்தியோ மாற்றி அமைத்துக்கொண்டோ விடுவர். இது காவல்துறைப் பதிவுகளில் அவர்களைப் பற்றிப் பதியப்பட்டுள்ள அங்க அடையாளங்க ளோடு மாறுபட்டு அதனைப் பொய்ப்படுத்தத் துணை செய் கின்றது. திருவிழாக்களின்போது இவர்கள் தங்கள் நெற்றியில் உள்ள பச்சை குத்திய அடையாளங்களைச் சிவப்புக் குங்குமப் பொட்டிட்டு மறைத்துக் கொள்வர்" எனத் திரு பாப்பா ராவ் அவர்கள் எழுதியுள்ளார்.

இவர்களுடைய நடைமுறை சில தெளிவான கட்டுத் திட்டங் களால் ஒழுங்குபடுத்தப்படுகின்றது. இவர்கள் எப்பொழுதும் வீட்டின் முன் வாசல் வழியாக நுழைவதில்லை. அவ்வாறு நுழையும் கட்டாயத்திற்கு உள்ளானால் வெளியேறும்போது அந்த முன் வாயில் வழியே செல்ல மாட்டார்கள். பின் வாசல் வழியாக நுழைபவர்கள் எப்பொழுதும் முன் வாசல் வழியா கவே வெளியேறுவர். அவ்வாறு வெளியேறும்போது முன் வாசல் கதவினை முழுக்கத் திறந்து போட்டே செல்வர். தயிரும்

சோறும் உண்ண நேரிட்ட வீட்டில் இவர்கள் திருடுவதில்லை. தயிரோடு உப்புப் போட்டு உண்ண வேண்டியதாகின்றதாகையால் உப்பிட்டவர்களுக்கு நன்றிக்கடன்பட்டவர்களாக ஆகிவிடுகின்றனர். நன்றிக்கடன் பட்டவர்களுக்குத் துரோகம் செய்வது இவர்கள் ஒழுக்க நடைமுறைக்கு புறம்பானதாக அமைந்துவிடுகின்றது. திருட்டு நடத்திய வீட்டிலேயே இவர்கள் தங்கி ஓய்வெடுத்துக் களைப்பினைப் போக்கிக்கொள்வர். இது திருடர்களைத் தேடிச் செல்பவர்கள் கையில் அகப்படாமல் இருக்க இவர்கள் மேற்கொள்ளும் ஒரு வழிமுறையாகும்.

விசாகப்பட்டினத்தில் யெருகலர் தங்கள் சாதிச் சிறுமியரைக் குறி சொல்லும் குறத்திகளாக ஆக்குவதற்கான சடங்கினைப் பற்றித் திரு ஹயவதன ராவ் எழுதுவதாவது:- இச் சிறுமியர் பூப்படைந்ததற்கான சடங்கினைச் செய்து முடித்தபின் அடுத்து வரும் ஒரு ஞாயிற்றுக்கிழமையில் இந்தக் குறி கூறுதலில் அறிமுகப்படுத்தும் சடங்கு நிகழ்த்துவர். போதையூட்டும் சாராயத்தோடு கூட அன்று சாதியைச் சேர்ந்த அனைவருக்கும் விருந்து அளிக்கப்படும். எனினும் சடங்கிற்கு உள்ளாகும் சிறுமி விரதம் இருப்பாள். விருந்துக்குப் பின் அச் சிறுமியினை யெருகொண்ட என்ற தங்கள் குடியிருப்புக்குச் சற்றுத் தொலைவில் உள்ள இடத்திற்கு அழைத்துச்செல்வர். முன்பெல்லாம் விசாகப்பட்டினத்திற்கும்·சிக்ககோலிற்கும் இடையே நெடுஞ்சாலையில் அமைந்துள்ள ஓர் இடத்திலேயே இச் சடங்கு நடத்தப்பட்டு வந்தது. அங்கு அச்சிறுமியின் கண்களைக் கட்டியபின் கறுப்புக் கோழி, கறுப்புப் பன்றி, வெள்ளாடு ஆகியவற்றைக் கொன்று அவற்றின் குருதியோடு சோறும் பாசிப்பயறும் கலந்த கலவையினை அச்சிறுமிக்குத் தருவர். அவள் இதில் மூன்று கவளம் விழுங்க வேண்டும். விழுங்கிய இந்தக் கவளங்களை அவள் வாந்தி எடுக்கவில்லையாயின் அவள் குறி கூறும் குறத்தியாகச் சிறந்து விளங்குவாள் என நம்புவர். அந்த கவளங்களை வாந்தியெடுப்பின் அவள் கூறும் குறிகள் பொய்த்துவிடும் எனக் கொள்ளப்படும்.

நாடோடிகளாகத் திரியும் குறவரில் ஒருவன் இறக்க நேர்ந்தால் அவன் பிணம் உடனுக்குடன் தலை வடக்கு நோக்கி



யெருக்கலர் குடியிருப்பு

இருக்கவும், கால்கள் தெற்கு நோக்கி இருக்கவும் புதைக்கப்பட்டு விடும். முடிந்தால் பிணத்துக்கு ஒரு புதிய துணியினைப் பெற்றுப் போர்த்துவர். புதைகுழியினை இறந்தவன் இறுதிக் காலத்தில் வாழ்ந்த குடிசையைக் கொண்டு மூடுவர். ஒரு சாவு நிகழ்ந்தவுடன் குறவர்கள் தங்கள் குடியிருப்பை உடனே வேறு ஓர் இடத்திற்கு மாற்றிக்கொள்வர். நாடோடிகளான குறவர்கள் இறந்தவர்களை இரவில் யாரும் அறியாதபடி புதைப்பர் என முனைவர் போப் கூறுகின்றார். காணாதுபோன ஒன்றைப் பற்றி நாடோடி நடிகர்களின் நாட்டியமாடும் அறைக்குச் சென்று சேர்ந்துவிட்டது எனக் கூறும் வழக்கம் இது பற்றியே தோன்றியதாதல் வேண்டும். செத்த குரங்கையும் குறவன் சுடு காட்டையும் ஒருவரும் பார்த்ததில்லை என்ற பழமொழியும் இதனால் பிறந்ததாதல் வேண்டும்.

விசாகப்பட்டினம் பகுதியில் யெருகலர் இறந்தவர்களைப் பிறந்த மேனியாக வைத்து எரித்துவிடுகின்றனர் எனத் திரு ஹயவதன ராவ் கூறுகின்றார். பிணம் எரிக்கப்பட்ட இடத்தில் ஒரு துளசிச் செடியினை நடுவது வழக்கம். இறந்தவனின் உறவினர்கள் சாதியாருக்கு விருந்து கொடுக்கும்வரை அவர்கள் வழக்கமான தொழிலை மேற்கொள்ள அனுமதிக்கப்படுவ தில்லை. பிணத்தை எரித்த இடத்தில் அந்த விருந்தின்போது கொஞ்சம் சோறு படைப்பர்.

தென் மாவட்டங்களைச் சேர்ந்த குறவர்கள் சாவுச் சடங்கு களைப் பற்றித் திரு எப். எ. ஹாமில்டன் பின்வருமாறு எழுது கின்றார். குறவர்களில் ஒருவன் இறந்தால் அச்செய்தியினைப் பறையர் அல்லது சக்கிலியர் மற்றவர்களிடம் சென்று தெரி விப்பர். இன்னிசையோடு பிணத்தைச் சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்று அடுக்கப்பட்டுள்ள காய்ந்த வறட்டியினைத் தரையில் பரப்பி அதன்மீது பிணத்தைக் கிடத்துவர். இறந்தவனின் மகன் தோளில் ஒரு புதுப்பானையில் தண்ணீரைச் சுமந்தபடி மும் முறை பிணத்தைச் சுற்றிவருவான். ஈமத்தீயினை மூட்ட சந்தனக் கட்டையில் எரிந்தபடி இருக்கும் நெருப்பினைத் தந்த பின், அவன் பிணத்தை திரும்பிப் பாராது வீடு நோக்கிச் செல்வான். மூன்றாம் நாள் இறந்தவனின் மகனும் மற்ற உறவினர்களும்

சுடுகாட்டிற்குச் சென்று சாம்பலைக் குவித்து அவ்வீடத்தில் ஒரு துளசிச் செடி அல்லது பிரண்டை (*Vitas quadrangularis*) அல்லது கற்றாழை (*Agave Americana*) யினை நடுவர். பதினாறாம் நாள் அல்லது அதற்குப் பிறகு ஒரு நாள் கருமாதிச் சடங்கினை நடத்துவர். அப்போது உறவினர்கள் சுடுகாட்டில் கூடுவர். ஒரு கல்லினை நட்டுத் தண்ணீர், தேன், பால் முதலியன கொண்டு அதனைக் குளிப்பாட்டுவர். அதற்கும் மறுநாள் உறவினர்கள் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதோடு இறந்தவரின் மகனுக்குப் புதிய வேட்டிகள் முதலியன வழங்குவர். மறி அறுத்துத் தாராளமாகச் சாராயமும் தந்து அனைவருக்கும் விருந்திடுவர். இந்தச் சடங்கு முடியும்வரை இறந்தவனின் மகன் துக்கம் கொண்டாடியவனாக இருப்பான்.

குறவர்கள் சாவுச் சடங்கு பற்றித் திரு பாவ்செட் பின்வருமாறு எழுதுகின்றார்:– ''ஒரு தமிழ்ப் பழமொழி, குரங்குகளின் சாவையும் குறவர் சாவையும் இணைத்து வழங்குகின்றது. இறந்த குரங்கின் பிணத்தையோ குறவன் பிணத்தையோ ஒருவரும் தங்கள் கண்ணால் பார்த்ததில்லையாகையாலேயே இப் பழமொழி வழக்குத் தோன்றியது. ஒரு குரங்கு இறந்தவுடன் மற்ற குரங்குகள் அதன் பிணத்தை உடனே அப்புறப்படுத்தி விடுவதால் குரங்குகள் சாகாவரம் பெற்றவை எனக் கருதப்படுகின்றது. அதுபோலவே இறந்த ஒரு குறவன் பிணமும் உடனுக்குடன் அப்புறப்படுத்தப்படுகிறது. அழுது ஆர்ப்பாட்டம் ஏதும் செய்யாமல் பிணத்தை அடக்கம் செய்வதற்கான ஏற்பாடுகளை விரைந்து மேற்கொள்வர். இறந்தவன் திருமணம் ஆனவனாயின் ஓர் ஏணியில் அவன் பிணத்தை வைத்துத் தூக்கிச் செல்வர். அவன் மணம் ஆகாதவனாயின் ஓர் ஒற்றை மூங்கிலில் குறுக்காகக் கட்டைகளை இணைத்து அதில் பிணத்தை வைத்துத் தூக்கிச் செல்வர். பிணத்திற்குரிய ஒரு புதிய துணியைப் போர்த்து அதன் முனையில் அரையணாக் காசினை முடிந்திருப்பர். (அதனைப் பின்னர் பிணத்தை தூக்கிச் செல்பவர்களுள் ஒருவன் எடுத்துக் கொள்வான்.) பிணத்தைத் தூக்குபவர்களுள் இருவர் மட்டுமே தீட்டுக்கு உள்ளானவர்களாகக் கருதப்படுவர். அவர்கள் அன்று முழுதும் தங்கள் குடிசைக்

குள்ளேயே தங்கியிருத்தல் வேண்டும். மறுநாள் குளித்தபின் அவர்கள் காக்கைக்குச் சோறும் பாலும் வைப்பர். அவர்கள் உடலில், தலையிலிருந்து பாதம்வரை ஒரு புல்லின் தண்டினால் பாலால் கோடு ஒன்று இழுக்கப்படும். அதன்பின் அவர்கள் குளிப்பர். இறந்தவனுக்காகத் துக்கம் கொண்டாடுபவன் ஐந்து நாள்கள் தீட்டிற்கு உள்ளானவனாக இருப்பான். இறந்தவர் களின் நினைவாக அரையாண்டு, முழு ஆண்டுச் சடங்குகள் நடத்தப்பட வேண்டியது கட்டாயமானதாகும். இறந்தவரின் உருவத்தை ஒரு கரிக்கட்டை கொண்டு புதுத் துணியொன்றில் வரைந்து குடிசையில் தரையில் விரித்து வைப்பர். அதன் இரு புறமும் ஆமணக்கு இலைகளில் சோறும் கறியும் படைப்பர். கொஞ்ச நேரம் சென்ற பிறகு அந்தச் சோற்றினை ஒரு புது முறத்தில் வைத்து குடிசையின் கூரையில் இரவு முழுதும் தொங்க விடுவர். மறுநாள் காலையில் உறவினர்கள் கூடி அந்தச் சோற் றினை உண்பர்.

நெல்லூர் மாவட்டத்தைச் சேர்ந்த யெருகலர் பற்றிய ஒரு குறிப்பிலிருந்து பொதுவாக இறந்தவர்களைப் புதைப்பதே வழக்கம் என்பதையும் சமூகத்தைச் சேர்ந்த பெரிய மனிதர்கள் இறந்தால் மட்டும் எரிக்கப்படுகின்றனர் என்பதையும் நான் அறிந்தேன். திருமணம் ஆனவர்களைப் பாடையில் வைத்துப் புதைகுழிக்கு எடுத்துச் செல்வர். திருமணம் ஆகாதவர்களை ஒரு பாயில் வைத்துச் சுருட்டி எடுத்துக்கொண்டு செல்வர். இரண்டாம் நாளன்று சோறு, கோழி ஆகியனவற்றைப் புதை குழி அருகே காக்கைகள் உண்ணும்படியாக வைப்பர். ஒரு பானையில் தண்ணீரைப் புதைகுழியினைச் சுற்றி மும்முறை எடுத்துச்சென்று அந்த பானையினைக் கீழேபோட்டு உடைப்பர். ஒன்பதாம் நாளன்று மீண்டும் காகங்களுக்குச் சோறிடுவர். இறுதிச் சாவுச் சடங்கு இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு பிறகே நிகழ்த்தப்படும். சோறு, வெங்காயம், கத்திரி, பயறு வகைகள், பூசணி, பன்றி இறைச்சி, ஆட்டிறைச்சி ஆகியன வற்றை ஆமணக்கு இலைகளில்இறந்தவரின்ஆவிக்குப்படைப்பர். இறந்தவரின் உருவம் ஒரு புதிய துணியில் எழுதப்படும். வழிபாடு முடிந்தபின் அந்தப் படையல்களை அதற்கெனவே

உள்ள புதிய முறங்களில் வைத்து உறவினர்களிடம் தருவர். அவர்கள் அதனை மறுநாள் காலைவரை வீட்டுக் கூரை மீது வைத்திருந்து பின்னர் உண்பர்.

நவம்பர் மாதத்தில் வரும் அமாவாசையின்போது குறவர் இறந்துபோன முன்னோர்களுக்காகச் சடங்கு நிகழ்த்து கின்றனர். நன்றாக விளக்கிய பித்தளைப் பாத்திரத்தில் சிவப்பும் வெள்ளையுமாகப் புள்ளிகளிட்டு ஓர் அறையின் மூலையில் அதனை வைப்பர். அந்த அறை முன்பே கூட்டித் தூய்மை செய்யப்பட்டுப் பசுஞ்சாணத்தால் மெழுகப்பட்டிருக்கும். அந்தப் பானையின் முன் இலையிட்டு அதில் சோற்றுடன் உண்பதற் கான பலகாரங்களையும் படைப்பர். சாம்பிராணி தூபம் காட்டியபின் தனது பிள்ளைகள் பின்னர் தனக்கும் இதுபோலத் தான் இறந்த பிறகு படைப்பர் என்ற நம்பிக்கையுடையவனாக குடும்பத்தில் மூத்தவன் அப்படையலை உண்பான்.

மைசூரைச்சேர்ந்தகொரமர் இறந்தவர்களைச்சுடுகாட்டுக்குத் தூக்கிச்செல்ல ஆள்கள் கிடைக்காமல் தொல்லைக்கு உள்ளா கின்றனர். இறந்துபோன கொரமன் மனைவி வயதாகாத கைம்பெண்ணாக இருப்பாளானால் அன்றே ஒருவன் அவளை மீண்டும் மணந்து கொள்ளத் தன் விருப்பத்தை வெளியிடுவான். அதற்கு அவள் தன் உடன்பாட்டினைத் தெரிவிப்பாளாகில் அவனே இறந்துபோன அவளுடைய கணவனின் பிணத்தை அடக்கம் செய்ய வேண்டியனவற்றைச் செய்வான். சுமார் இரண்ட டிக்கும் குறைந்ததாகவே ஆழம் கொண்டதான புதைகுழியில் இறந்தவனுடைய பிணத்தினைப் புதைப்பர். அதன்மீது இறுக்கம் இல்லாத வகையில் மண்ணினை நிரப்புவர். அதன்மீது பிளக்கப் பட்ட மூங்கிலின்மீது வைத்துத் துக்கம் கொண்டாடுபவன் எடுத்து வரும் தீச்சட்டி உடைத்துப் போடப்படும். புதைகுழியின் மீது ஒரு பானையில் தண்ணீர் வைப்பர். அன்று இரவு நரிக் கூட்டம் வந்து புதைகுழியில் புதைக்கப்பட்ட கொரமன் பிணத் தினைத் தின்று, பின் பானையில் வைக்கப்பட்ட தண்ணீரைக் குடித்துச் செல்லுமானால் இறந்தவனின் ஆவி விடுதலை பெற்று மூதாதையர் ஆவிகளோடு சென்று சேர்ந்துவிட்டதாகவும், அதன்

பின் அது ஆண், பெண், குழந்தை, கால்நடை ஆகிய யாருக்கும் தீங்கிழைக்காது எனவும் நம்புகின்றனர். ஆறாம் நாள் துக்கம் கொண்டாடுபவன் ஒரு கோழியினைக் கொன்று அதன் குருதி யினை அரிசியோடு கலந்து வெற்றிலை பாக்கு முதலியவற் றுடன் புதைகுழி அருகே படைப்பான். அந்தப் படையலைக் காகங்கள் தின்னுமானால் எல்லாம் நல்லபடியாக நடந்துமுடிந்து விட்டதாகக் கொள்வர்.

குறவர்களின் ஆடை அணிகளைப் பற்றித் திரு முல்லலெ பின்வருமாறு எழுதுகின்றார்:- "பெண்கள் கிளிஞ்சல், சோழி ஆகியவற்றோடு பல வண்ணப் பாசிகளை இடையிடையே கோத்து மார்பில் கீழே தொங்கும்படியாகக் கழுத்தில் சங்கிலி யாக அணிகின்றனர். பித்தளை வளையல்களை முழங்கை வரை அடுக்கிக் கொள்வதோடு, பித்தளை, ஈயம், வெள்ளி ஆகியவற் றால் பரும்படியாகச் செய்யப்பட்ட மோதிரங்களை நடுவிரல் தவிர மற்ற விரல்களில் அடுக்கிக் கொள்கின்றனர். முரட்டுக் கறுப்புத் துணியினையே குறத்திகள் பெரிதும் அணிகின்றனர். இதனை மட்டுமே அவர்கள் அணிகின்றனர் எனக் கூறுவதற் கில்லை. திருடிக்கொண்டு வந்த துணிகளை அடையாளமிடப் பட்டுள்ள பகுதிகள் ஓரங்கள் ஆகியனவற்றை வெட்டி விட்டும் இவர்கள் அணிவர். சோளி அணியும் இவர்கள் அதனை முன் பக்கமாகச் சேர்ந்து முடிச்சிடுகின்றனரேயன்றி லம்பாடிகளைப் போலப் பின்பக்கமாக சேர்த்துக் கட்டிக் கொள்வதில்லை ஆண்கள் தூய்மையற்றவர்களாக அழுக்கு மேனியராகக் காட்சி தருவர். தலைமுடியினை நீளமாக வளர்க்கும் ஆண்கள் அதனை உச்சந்தலையில் குடுமியாக முடிந்து கொள்வர். சிறு அணிமணி களை அணியும் பழக்க வழக்கங்களும் இவர்களிடம் உண்டு. ஜொச்சி (கொச்சி) எனப்படும் இடையாடையும் நீண்ட ஓட்டுத் துணிகளாலான வடி சஞ்சி என்ற பையும் இவர்களின் தனி முத்திரையாகும்."

"1894- இல் வட ஆர்க்காடு மாவட்ட காவல்துறைக் கண் காணிப்பாளராக இருந்த திரு ஸ்டீவன்சன் அந்த மாவட்டத் தைச் சேர்ந்த குறவர்களின் மறுவாழ்வுக்காக ஒரு திட்டத்தை உருவாக்கினார். இந்தப் பழங்குடிகளுக்காக அவர் குடியாத்தத்

திற்கு அருகிலே உள்ள அரசுக்குச் சொந்தமான புறம்போக்கு நிலத்தினைப் பத்து ஆண்டுகளுக்கு வரியின்றிப் பெற்றதோடு கிணறு தோண்டுவதற்காக ரூ. 200 கொடையாகவும் பெற்றார். காட்டில் குறைந்த கட்டணத் தொகை செலுத்தி விறகு வெட்டிக் கொள்ள அந்த நிலத்தில் குடியமர்ந்தவர்களுக்கு உரிமமும் பெற்றுத் தந்தார். கர்வெட்னீகர், சமீன்தாரிடம் குறவர்களுக் காகத் திருத்தணி அருகே இருபத்தைந்து காணி நிலத்தையும் பெற்றார். மற்றொரு குடியிருப்பாகக் குறவர்கள் அங்குக் கட்டிடம் கட்டிக் கொள்ளவேண்டிய பொருள்களையும்பெற்றுத் தந்தார். சாமீன்தாருக்கு ஏற்பட்ட பணமுடை காரணமாகத் திருத்தணி குடியிருப்பில் குறவர்கள் காலனி வளர்ச்சி பெற இயலாமல் போனது துரதிட்டவசமானது. எனவே அதன் ஆயுட்காலம் தொடக்கத்திலேயே முடிந்துவிட்டது. குடியாத்தம் குடியிருப்புக் கொஞ்சம் வசதியுடையதாக இரண்டு மூன்றாண் டுகள் இயங்கிய பின் 1887-இல் அதற்கும் திருத்தணி குடியிருப் புக்கு ஏற்பட்ட கதியே ஏற்பட்டது."* 1906-ஆம் ஆண்டு காவல்துறை நிர்வாக அறிக்கையிலிருந்து நாடோடிகளான குற்றவியல் கூட்டத்தினருக்குப் பயிர்த்தொழில் செய்வதற்கேற்ற நிலத்தைத் தந்து அவர்கள் நேர்மையான முறையில் வாழ்க்கை நடத்த உதவ ஒரு திட்டம் தீட்டப்பட்டதாகத் தெரியவரு கின்றது.

1891 கணக்கெடுப்பில் குறவர் பறையர் சாதியின் ஓர் உட் பிரிவினர் எனப் பதியப்பட்டுள்ளது. குறவர் என்ற இந்தப் பெயர் தோட்டியராகப் பணிபுரியும் ஜோகியருக்கு உரியதாகவும் பயன்படுத்தப்படுகின்றது.†

சில ஐரோப்பிய நாடுகளில் பெரும் பரபரப்பினை ஏற் படுத்தி வருகின்ற பலரும் மேற்கொண்டுள்ள விளையாட்டான இருதலைப் பம்பர விளையாட்டுத் தோன்றியதாகக் கருதப்

---

* சென்னை மெயில் நாளிதழ், 1907. (Madras Mail, 1907.)

† குறவர்களைப் பற்றிய இந்த விவரங்களுக்குக் காவல்துறைக் கண்காணிப் பாளரான என். இ. க்யூ. மெயின்வாரிங் அவர்களுக்கு மிகவும் கடப்பாடுடையேன்.

படும் நாடுகளில் ஒன்றான இந்தியாவின் மேற்குக் கடற்கரை சார்ந்த மலபார் குறவர்களைப் பற்றிய குறிப்பு வருமாறு:– "மலபாரில் குறவர் என்ற ஒரு பிரிவு மக்கள் வாழ்கின்றனர். நினைவுக்கெட்டாத காலந் தொடங்கி இவர்கள் இந்த விளையாட்டினை இன்று மேலை நாட்டினர் விளையாடி வருவதைப் போல விளையாடி வருகின்றனர். இந்தக் குறவர்களை மலபார், கொச்சின், திருவாங்கூர் ஆகியவற்றின் தென் பகுதிகளிலேயே மிகுதியும் காணலாம். மலையாள மொழியினை இவர்கள் ஓர் இசையோடு பேசுகின்றனர். இதனைக் கொண்டே இவர்களை மற்றவர்களிலிருந்து வேறுபடுத்தி அறியலாம். நாடோடிகளான இந்தக் குறவர் சாதியின ஆண்கள் கழைக் கூத்தாடிகளாகவும் கயிற்றில் நடப்பவர்களாகவும் உள்ளனர். இவர்களுள் நிலையாகத் தங்கும் பழக்கம் உள்ளவர்கள் பயிர்த் தொழிலிலும் பிற கைத்தொழில்களிலும் ஈடுபட்டவராக உள்ளனர். பாலக்காட்டுப் பாய் என வழங்கப்படும் அழகிய கோரைப் பாயினைத் தயாரிப்பவர்கள் இவர்களே. இவர்கள் சாதிப் பெண்கள் குறி கூறுபவர்களாகவும் இசைப் பாடல்கள் பாடுபவர்களாகவும் தொழில் புரிகின்றனர். சிறுமிகளின் காது குத்தும் சடங்கின்போது இவர்கள் பணி வேண்டப் படுகின்றது. கயிற்றில் ஆடுபவர்கள் அவ்வாறு கயிற்றின்மீது முன்னும் பின்னும் நடந்து ஆடியபடி பல அரிய விளையாட்டுக்களை நிகழ்த்துகின்றனர். அவற்றுள் இருதலைப் பம்பரத்தினைச் சுழற்றி ஆட்டுவிப்பதும் ஒன்றாகும். வித்தைக் காரக் குறவன் இரண்டு மூங்கில்களின் முனைகளோடு இணைக் கப்பட்ட கயிற்றில் சுழன்றாடும் பம்பரத்தை ஒரு தென்னை மரத்தின் உயரத்திற்கு மேலே உயர வீசிப் பின் அது கிழே வருகையில் அதனை அந்தக் கயிற்றாலேயே பிடித்து மறுபடியும் மேல் நோக்கி வீசுவான். இவர்களிடையே இவ்வாறு மேலே வீசப்பட்ட இருதலைப் பம்பரத்தை நிமிர்ந்து பார்க்காமலேயே கூடக் கயிற்றால் பிடிக்கும் திறமைசாலிகள் சிலர் உள்ளனர். இந்தக் குறவர்கள் பயன்படுத்தும் இருதலைப் பம்பரத்திற்கும், ஐரோப்பாவில் வழக்கில் உள்ள இருதலை பம்பரத்திற்கும் வடிவமைப்பில் அதிக வேற்றுமை ஏதும் இல்லை. மலபாரில்

குறவர்கள் பயன்படுத்தும் இருதலைப் பம்பரம் மேற்கு நாடுகளில் பயன்படுத்தப்படுவதைவிடச் சற்றே பருத்த சற்றே அதிக கனமுடைய ஒரே மரத்தில் கடையப்பட்ட பம்பரமாகும். அது கிராமத்துத் தச்சனால் பரும்படியாக வடிவமைக்கப்படுகின்றது. அதன் வடிவமைப்பில் காலப்போக்கில் எந்த முன்னேற்றமும் ஏற்படவில்லை. மேல்நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும் பம்பரத்தைப்போல ரப்பர் வளையல்கள் முதலிய அழகுபடுத்தும் ஒப்பனைகள் ஏதும் இதற்குப் பூட்டப்படுவதில்லை. எனினும் மேலேயிருந்து விழும்போது அதனை ஆட்டுவிப்பவன் மீது அது விழ நேர்ந்தால் அது அவனுக்குப் படுகாயம் ஏற்படுத்தும் அளவிற்குக் கனம் மிகுந்தது. குறவர்கள் தொன்மையானபழங்குடி இனத்தவராயினும் காலங்காலமாக இந்த விளையாட்டையும் கயிற்றின் மீது நடந்து வித்தை காட்டுதலையும் நிகழ்த்தி வந்தபடி உள்ளனர். இவர்கள் பல ஆண்டுகளாகச் சிறந்த இருதலைப் பம்பரம் ஆட்டுவிக்கும் வித்தைக்காரர்களாக விளங்கி வருகின்றனர்.* அணுக்க முதன்மையர் கமெரொன் (Lieutenant cameron) ஜான்ஜிபாரிலிருந்து பென்குயிலவிற்கு பயணம் மேற்கொண்டபோது ஒரு பழங்குடி இனத்தவரின் விருந்தினராக டாங்கனிகா ஏரிப்பகுதியில் தங்க நேர்ந்தபோது பார்த்த விளையாட்டினைப் பற்றி, "டெஜ்ஜோன்மா பழங்குடியினைச் சேர்ந்த அடிமை ஒருவன் சில சமயம் வித்தைகள் காட்டி எங்கள்ள மகிழ்விப்பான். சுமார் ஓரடி நீளமுள்ள இரண்டு குச்சிகளில் குறிப்பிட்ட நீளமுள்ள ஒரு கயிற்றினைக் கட்டிக் காலங்காட்டும் குவளை வடிவில் அமைந்த ஒரு மரத்துண்டினை அதன்மீது சுழற்றியபடி தனக்கு முன்னும் பின்னுமாக அதனைஉயர ஒரு கிரிக்கெட் பந்தினைப் போல வீசிப் பின் அது சுழன்றபடி வீழும்போதே கயிற்றால் தாங்கிப் பிடிப்பான்" எனக் குறிப்பிட்டுள்ளார்.

தென்னிந்தியக் குலங்களும் குடிகளும்
மூன்றாம் தொகுதி
முடிந்தது.

---

* சென்னை மெயில் நாளிதழ், *1908*. (Madras Mail, 1908.)

# தலைப்புப் பெயர்களின் சொல்லடைவு

## தமிழ் — ஆங்கிலம்

---

## தலைப்புப் பெயர்களின்

## சொல்லடைவு

### ஆங்கிலம் — தமிழ்

---

